VOL V 1927—1928

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

## ஐந்தாஞ் சிலம்பு

இதழாசிரிய கூட்டத் தலைவர்:
கா. சுப்பிரமணியபிள்ளை,
எம்.ஏ., எம்.எல்., அட்வகேட்.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட்

அட்சய - பிரபவ

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly Ltd
Tinnevelly & Madras.

 [Price Rs 4 8

---

சிறுமணவூர் முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை.

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்டவைகள் முடிவுபெறாது தொடர்பு பெறுவன.]

* அத்துவிதம்:—மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A. ௧௬௬, ௨௨௯, ௩௩௬, ௯௪௮

அளவைகள்:—பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் ௫௮௯

அறிவுரைகள்:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் ௪௪௨

ஆத்திசூடி ஆங்கில மொழிபெயர்ப்பு:—T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள், M. A. B. L. ௩௦௧

அப்பூதியடிகள்:—C. M. இராமச்சந்திர செட்டியாரவர்கள், B. A. B. L. ௪௩௨

ஆராய்ச்சிமுறை:—கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L. ௨௫௯, ௩௮௭

ஆளுடைய பிள்ளையார் அற்புதத் திருநாட்கள்:—ப. அ. முத்துத் தாண்டவராயபிள்ளை அவர்கள், ௧௩௪

* இதழிற் பிறக்கும் தமிழ் எழுத்துக்களைப்பற்றிய குறிப்பு:—க. ப. சந்தோஷம் அவர்கள், B. A. L. T. ௪௩௭, ௪௯௩.

இந்துமத அறநிலையப் பாதுகாப்பு:— ௬௨

இராமகிருஷ்ண பரம ஹம்சரின் அருண்மொழிகள்:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள், ௩௨௰

இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய வகுப்பு வரலாறும்:—ராவ்சாஹிப் வே. பா. சுப்பிரமணிய முதலியாரவர்கள், ௧௪௭, ௨௨௰, ௨௮௮, ௩௬௨, ௫௯௨, ௯௯௨

* இரு பெண்மணிகளின் உரையாடல்:—மூ குமாரநாயகம் பிள்ளையவர்கள், ௫௧௩, ௬௯௫

இலங்கை இந்திய வாலிபர் சங்க ஆறுவது ஆண்டுவிழா முன்னுரைச் சொற்பொழிவு:— கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A, M. L. ௪௰௧, ௫௧௫

இல்லறமாண்பு:— ௧௧௬

இளைஞரியக்கம்:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் ௧௨௩

இளையான்குடிமாறர் வரலாறு:—C. M. இராமச்சந்திர செட்டியாரவர்கள் B. A. B. L. ௫௪௰

உலகநீதி ஆங்கில மொழிபெயர்ப்பு:—T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M. A. M. L. ௯௫௭, ௭௨௯

உவகைச் சிறுமொழி:—த. செங்கல்வராய பிள்ளையவர்கள் B. A. ௬௨, ௧௨௭, ௧௯௧

எல்லாம் ஐந்தே:—பா. வே. மாணிக்க நாயகரவர்கள் சகூ
ஐயவினாக்கள்:— ககஎ
ஐயவினாவிடை:— சுரு
* ஓங்காரமுந் தமிழும்:—S. D. சுப்பிரமணியமவர்கள் சுாக
* கடவுள்நிலைக்கு மாறான கோள்கைகள் சைவமாகா:—சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை யடிகள் ருஎசு, சுசரு, எஙரு
கரந்தைத் தமிழ்ச் சங்கம்:— சஎச
* கருவூர்த்தேவர்:—C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் உகக, உகூக
கழுகின் காவலன்:—R. P. சேதுப்பிள்ளையவர்கள் B. A., B. L. கசரு, உஎரு, ஙஙஉ
களவுங் கற்று மற:—அ. சிதம்பரநாதனவர்கள் எஉச
கற்பொழுக்கம்:—இளவழகனார் எசுஅ
* காஞ்சிப்புராண இன்கவித்திரட்டு:—ராவ்சாஹிப் வே. பா. சுப்பிரமணிய முதலியாரவர்கள் கூ௰, உஅ௰
காதற் சிறப்பு:—வ. சுப்பையா பிள்ளையவர்கள் ஙகச
காலமறிதல்:—வ. சுப்பையா பிள்ளையவர்கள் ருஎ௰
* காழிக் கண்ணுடைய வள்ளலார்:—ப. அ. முத்துத்தாண்டவ ராய பிள்ளையவர்கள் ஙஎச, சகக, சசுஅ, ருசுரு, சுஎஉ.
கிராமங்களில் படித்தவர்கள் செய்யவேண்டிய வேலை:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் ருசு
குருடும் செவிடும்:—S. வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் B.A. சு0ச
குழந்தைகளின் நல்வளர்ப்பு:—பு. க. முத்துசாமிப் பிள்ளையவர்கள், கஎஉ
குறிஞ்சிப்பாட்டின் உள்ளுறை:—பண்டிதர் ந.மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள், எ0எ
குறிப்புக்கள்:— ருஎஅ
கொங்குநாட்டுத் திருத்தலங்கள்:—கு. குமாரசாமி பிள்ளையவர்கள், உஉ
கொங்குநாட்டுத் தேவார வைப்புத் தலங்கள்:— ,, உஙசு
கொன்றைவேந்தன் ஆங்கில மொழிபெயர்ப்பு:—T. B. கிருஷ்ண சாமி முதலியாரவர்கள் M. A., M. L. சஉச
கோநகர்:— ஙஉக
கோயிலும் குறிகளும்:—S. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் B. A. L. T. கஙஅ

சடங்குகள்:—வ. சுப்பையா பிள்ளையவர்கள் ௧௭௯
சமய உணர்ச்சி:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் ௧௯௪
சமய உணர்ச்சி:—கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A. M.L. ௧௯௫
சம்பந்தர்தேவாரம் ,, ௬௯
சரசுவதி தோத்திரம்:—ஆ. தி. இராமலிங்கம் பிள்ளையவர்கள் ௩௮௪
சித்தாந்தப் படவிளக்கம்:—வாலையானந்தசுவாமிகள் ௨௬௬, ௩௪௪, ௩௯௭, ௫௫௭
சிறுமணம்:—சிறுமணம் பெற்ற கூத்தன் ௯௰, ௧௨௫
சுந்தரமூர்த்திநாயனார் சரித்திரம்:—கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M. A., M. L. ௧௩௧
சுற்றந்தழால்:—இளவழகனார் ௬௩௭
செய்யுளியற்றல்:—சாமிகாந்தனவர்கள் ௩௮௩
சைவப்பெரியார் பிரிவாற்றாமை:— ௩௮௬
* சொற்பொருள் வேறுபாடு:—அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் M. A. L. T. ௧௫௬, ௨௦௮, ௩௫௧, ௪௧௪, ௪௭௨, ௫௪௪
சோமசுந்தர நாயகர்:—வ. திருவரங்கம் பிள்ளையவர்கள் ௩௭௭
தத்துவரத்திநாகரம்:—S. அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் M. A. L. T. ௩௮௧
தமிழர் தனிமாண்பு:—கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A. M. L. ௬௨௭
தமிழர் முன்னேற்றம்:— ௬௭௫
*தமிழாசிரியர் தழுவியஆரியவேதங்கள்:—மறைமலையடிகள் ௪௬௬
தமிழிற் பிறமொழி கலத்தலாகாது:—மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A. ௭௯௰
தமிழின் சிறப்பியல்பு:—பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் ௨௭௨
தமிழின் முற்காலச் சிறப்பும் தற்காலக் குறைவும்:—கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M. A. M. L. ௦௨
தமிழ் அறிவியற்சொற்கள்:—பா. வே. மாணிக்க நாயகரவர்கள் ௨௦௧
தமிழ்நாட்டுச் சைவ இளைஞர் கடமை:—S. சின்னத்தம்பியவர்கள் ௬௦௭, ௬௫௧
தமிழ்நூல் பேணல்:—வ. சுப்பையா பிள்ளையவர்கள் ௧௧௯
தமிழ்ப் பல்கலைக் கழகம்:— ௧௨௯

தமிழ்ப்பல்கலைக்கழகம் வருவதை நினைந்து நகையாடல்;—உருள
*தமிழ்ப்போதனு முறை;— V. கோவிந்த ராஜலு நாயுடு அவர்கள் B. A. கஎச, உசஎ
தமிழ் மக்களும் வெளியீடும்:— சிறு. முனி. நடேச முதலியாரவர்கள், சூரு
*தமிழ் மாதரும் சிறு தேவதைகளும்:— நீலாம்பிகையம்மையாரவர்கள் சசூசு
தமிழ் வேத வோத்தின் முன்னர் திருவெண்ணீற்றுப் பேற்று மறுப்பு:— செப்பறைச் சிதம்பர சுவாமிகள் ருகஎ
தலைவி தலைவன் பெயரைக் கிளிவாயாற் சொல்லக் கேட்டின்புறுதல்:— வ. சுப்பையா பிள்ளையவர்கள், ருாய
தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல்:— இளவழகனர் எா
தாரை:— R. P. சேதுப்பிள்ளையவர்கள். B. A; B. L; சஅஉ
திணைமயக்கம்:— பண்டிதர். ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் சருஎ
திரிபதார்த்த சிந்தனை ” சச
திருஇடைவாய்:— மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A. ருகக
*திருக்குறள் முதற்குறிப்பு:— ,, ககஅ
திருக்கோயில்களில் அரிவையர் ஆடல்:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் கஅரு
திருஞான சம்பந்த சுவாமிகள்:— கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A., M. L. சு
திரு நீலாம்பிகை அம்மையார் திருமணநிகழ்ச்சி:—இளவழகனர் ருசஎ
திருப்பூந்துருத்தியும் திருநாவுக்கரசர் திருமடமும்:— உாய
திருமணவினைக் குறிப்பு:— ருாரு
திருவருட்பா ஆராய்ச்சி:— இளவழகனர். ருஎ, ருருரு, சகஅ, சசுக, ருஉச, சுகசு. சுஅரு
திருவள்ளுவர் (ஒரு மரநூல் பேராசிரியர்):— அ. மா. முத்தையநாட்டாரவர்கள், ருசூஅ
*திருவாசக வாக்கியங்கள்:— வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள், M. A. உருரு, சசச
திருவிசைப்பாச் செய்யுள்:— J. M. நல்லசாமிப் பிள்ளையவர்கள் B. A. B. L. ருஉரு
தூய வாழ்வு:—M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் உருய
தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்:— ககூய

தென்னிந்திய தமிழ்ச்சங்கம்:— பு. சி. புன்னைவன நாத முதலி யாரவர்கள் உருஅ, சுங்சு
தேடு உனக்குக் கிடைக்கும்:—M. P. S. வேலாயுதம் பிள்ளை யவர்கள் ௩எரு
தேவார உரை:— செப்பறைச் சிதம்பரசுவாமிகள் ககங
தேவாரக் குழந்தை:— இளவழகனார் கருஅ
தொல்காப்பிய காலம்:— மறைமலையடிகள் கஅ, எரு
தோலாமொழித்தேவர்:— S, அக்கினீச்சுவரப் பிள்ளையவர் கள் B. A; ஙங, சுஎ, ஙசசு, சசுசு,
நமது செல்வி:— சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தார் க
நம்பியாரூரரும் பரவையாரும்:— கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள். M. A. M. L. எருங
நிலங்களின் தட்பவெப்பங்கள்:—க. ப. சந்தோஷம் அவர்கள் B. A. L. T. ருங
படிக்காசுப்புலவர்:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் கஎசு
பண்டைவீரப் பெண்மணிகள்:— ,, உருஉ
பரஞ்சோதியும் திருவிளையாடலும்:— பண்டிதர். ந. மு. வேங்கட சாமி நாட்டாரவர்கள் கரு
பரதர்:—மு. சி. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B. A. L. T. ஙய
பரதர்:— மு. நல்லதம்பி அவர்கள் ஙசுச
பழந்தமிழ்:— மாகறல். கார்த்திகேய முதலியாரவர்கள் சசுய
பாரிவள்ளல்:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் ஙஎஅ
பிர்வாற்றுமை சருய
புறநானூற்றின் ஆராய்ச்சி:— பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் சுருசு
பூவும் மணமும்:— ஙசுஎ
பெண்களுக்குக்கல்வி அவ்சியம்:—P. V. சரோசனிதேவி ருஎங
பெரியபுராணத்தலைவியர்கள்:— T. S. கந்தசாமி முதலியார வர்கள் B. A. உஎ
போது நெறி:— இளவழகனார் எஙசு
பொருளதிகாரம்:—M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B. A., L. T., ருஙங
மக்கட்பேறு:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் கசுய
மதிப்புரை:— சுச, ஙஉஉ, சுச0, எரசு
மணம்:— க. ப. சந்தோஷம் அவர்கள் B. A. L, T. கசுசு, உசங, உஅச, ஙஎக
மயிர் என்னும் சொற்போர்:— சிற்றம்பலவன் கசுஉ

மருத்துவம்:— மா. வடிவேலு முதலியாரவர்கள் ருகூ
மறைஞான தேசிகர்:— அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் B. A. L. T. எகசு
மாணவர்களுக்கு ஓர் அறிவுரை:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் கஅரு
மார்கழித்திருவாதிரை விளக்கம்:—வீ. குமாரவேலுப் பிள்ளையவர்கள் சுசுசு
மெய்யறிவு:— M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் சுசுகூ
யாக்கை நிலையாமை:— வேலாயுத தேசிகரவர்கள் சசசு
யாண்டு பல வாயினும் நரையின்மை:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் ருஅ
*வடசொற்றமிழகாராதி:— நாகை நீலாம்பிகை யம்மையாரவர்கள் சுஙக, சுஅகூ, எகரு
வள்ளல்கள் சரித்திரம்:— M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B. A. L. T. சாக
வள்ளுவர் மனை மாட்சி:— வ. சுப்பையா பிள்ளையவர்கள் சசய
வள்ளுவர் வாய்மொழி:— பண்டிதர் ந. மு. வெங்கடசாமி நாட்டாரவர்கள் அஉ
* வாக்கியபஞ்சாங்கவழு:—பிறைசூடும் பெருமாள் பிள்ளையவர்கள் ஙாஅ
வாணிவழிபாட்டுண்மை:— மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A. ருகூரு
விபூதிப்பிரசாதம்:— ,, கஉஎ
வீரச்சிறப்பு:—வ. சுப்பையா பிள்ளையவர்கள் ஙகரு
வெளியீடுகளும் பயனும்:—சிறு. முனி. நடேச முதலியாரவர்கள் ங

---

## திருவுருவப்படங்கள்

க. அப்பர் கடலில் கன்மேல் மிதப்பது
உ. உலகவாக்கிழிபெற்றது
ங. கான்மாறியாடியது
ச. குமரகுருபரசுவாமிகள் ஊமைநீங்கிக் கந்தர்கலி வெண்பாப் பாடியது
ரு. கூத்தப்பெம்மான்
சு. சிவபெருமான்
எ. R. P. சேதுப்பிள்ளையவர்கள் B. A. B. L.
அ. கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் M. A. M. L.
கூ. தடாதகைப்பிராட்டியார் திருவவதாரம்
ய. திருஞானசம்பந்தசுவாமிகள்
கக. பிள்ளையார்
கஉ. மறைமலையடிகள்
கங. பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்

---



தடாதகைப் பிராட்டியார் திருவவதாரம்

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எ௱௪ தைத் திங்கள் 1927ஆ ஜனவரிமீ—பிப்ரவரிமீ | பரல் க |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## நமது செல்வி

எல்லாம் வல்ல உமாசிவனருளால் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் நமது மாதப் பத்திரிகை சென்ற நான்கு ஆண்டுகளாகக் காலந்தவறாது வெளிவந்து கொண்டிருக்கின்ற தென்பதும், பல அரிய கட்டுரைகளாற் றமிழுலகிற்குப் புத்துயிர் அளித்து வருகின்ற தென்பதுந் தமிழ் மக்கள் நன்கு அறிந்ததே. இவ்வாண்டு முதல் மிகுதியான கட்டுரைக ளுடனும் மிகுதியான பக்கங்களுடனும் நமது பத்திரிகை விளங்கித் தமிழ்மக்களுக்கு

நல் விருந்தளிக்குமென்பது இவ்விதழைப் பார்ப்பவர்க்கு வெள்ளிடை மலைபோற் றெள்ளிதாகும்.

இதுபோழ்து நமது தண்டமிழ்மொழியின் மிளர்ந்து விளங்கும் ஒவ்வோர் அரிய நூலுக்கும் இதன்கண் கட்டுரை வருமாறு எழுதி உதவ அறிஞர் பலர் ஒப்புக் கொண்டமைக்குப் பெரிதும் மகிழ்வடைகின்றோம். ஆகலான் தமிழ் இலக்கியம், தமிழ்மொழி ஆராய்ச்சி, சைவசமயம், புராணம், இதிகாசம், திருமுறை, நுண்ணூல்க (Sciences) ளின் சாரம், வைத்தியம், சோதிடம், இசைநூல் தமிழ்நூல்களின் வரலாறு, தமிழ்ப்புலவர் வரலாறு, பிறபத்திரிகைகளிலுள்ள அரிய கட்டுரைகளின் சாரம், தமிழ் நூல்களில் அறிஞர்கட்கு நிகழும் ஐயவினாக்கள், அவற்றிற்கு விடைகள், புதுக்கதைகள் (Novels), அதிசயம் விளைக்கத்தக்க பொருள்கள், தமிழ், சமய சம்பந்தமான சீர்திருத்தங்களைக் குறித்த அறிவுரைகள் முதலியன இதன்கண் வெளிவரும். சிறிது தமிழ் கற்றாரும் எளிதில் படித்துணருமாறு கட்டுரைகள் எளிய இனிய உரைநடையில் எழுதப்படும். சில கட்டுரைகளுக்கு விளக்கப்படங்கள் எழுதியச்சிட்டுச் சேர்க்கப்படும். கடவுட் படங்கள், அடியார் படங்கள், புலவர் படங்கள் திருக்கோயிற் படங்கள் முதலியன முறையே வெளியிடப்படும்.

நமது செல்வியை ஆரம்ப முதற் றொகுதியாய் வாங்கி வைக்கிறவர்கட்கு அவை பிற்காலத்தில் அபிதான விளக்கம் (Tamil Encyclopaedia) போலப் பயன் படுமாறு அவற்றையமைக்கக் கருதி அதற்கேற்பப் பல தலைப்புக்களிற் கட்டுரைகள் வெளிவரும். 'எப்பொருளு மிதன்பாலுள, இதன் பாலில்லாத எப்பொருளுமில்லை' என்றபடி நமது பத்திரிகை விளங்கலுறும். இன்னோரன்ன சிறப்புக்களான் வெளிவரும் பத்திரிகையைப் போற்றுவது தமிழ் மக்கட்குத் தலையாயதொரு கடமையாம்.

இதுவரை நமது செல்விக்குக் கட்டுரை வழங்கிவந்த கல்வி வாணர்க்கும், பொருள் கொடுத்துப் போற்றிவந்த கையொப்ப நண்பர்கட்கும் எங்கள் நன்றியைச் செலுத்துகின்றோம். இன்னும் அவ்வாறே உதவிபுரிய இசைந்துளார் அனைவரும் நீடு வாழ்ந்து நலம் பல பெற இறைவன்திருவுளங் கனிவாராக.

'யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று பெரியார் கூறியபடி, நமது கையொப்ப நண்பர் ஒவ்வொருவரும் ஒரு புதிய கையொப்பமாவது சேர்த்தனுப்ப உறுதிசெய்து உதவுவார்களாயின் நமது பத்திரிகை இவ்வாண்டின் இடைப்பகுதியிலேயே இன்னும் செழுமை யுடைய தாகுமென்பதைப் பற்றிக் கூறுவது மிகையாகாது. அதுவே சிறந்ததமிழ்த்தொண்டாகும்.

பத்திரிகை நலத்தைப் பரப்புங்கள்; படிப்புணர்ச்சியை எழுப்புங்கள்; இதுவே தொண்டெனக் கருதுங்கள்; இன்று நாளையென்னுதீர்கள்; இன்னே செய்ய முந்துங்கள்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

---

# வெளியீடுகளும் பயனும்

[சிறு. முனி. நடேச முதலியாரவர்கள்]

'மக்கள் தாமே ஆறறி வுயிரே' என்றார் தோல்காப்பியனார். ஐம்புலன்களின் ஐந்து பேரறிவையும் அடக்கி நிற்பதோர் அறிவே ஆறுவதாகும். அது மற்றையவற்றினும் பயன் அறியும் பெற்றித்தாகலின் பகுத்தறிவு எனப்படும். பகுத்தறிவுடையவரையே மக்கள் என்று குறிப்பர். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்ற விடத்தும் இதுவே பொருளாம். பகுத்தறிவில்லாத மக்கள் மாக்களாகவே வைத்தெண்ணப்படுவர். பகுத்தறிவு கல்வி கேள்விகளினாலே எய்தற்பால தொன்றாம். கல்வி ஒன்றினான் மட்டு மெய்துவ தரிது. கேள்வியும் வாய்த்தல் வேண்டும். திருக்குறளில் 'கல்வி'க்குப் பின் றொடர்பாகக் 'கேள்வி' யும் வைக்கப்பட்டுள்ள முறையே நன்கு விளக்கும். கல்வி கேள்வி இரண்டும் ஒன்றினொன்று தொடர்பாகப் பற்றியிருத்தலைக் 'கேள்வி' யின் அதிகாரத் தலைப்பிலே பரிமேலழகர் விளக்கி யிருத்தலுங் காண்க. கேள்வி வாய்த்தழியன்றிக் கல்வியான் மட்டும் அத்துணையும் பயன் அடைதல் அரிதென்பதைத் திருக்குறள் நன்கு வலியுறுத்தும். 'கற்றிலனாயினுங் கேட்க' என்ற குறளிலே நாயனார் கல்லாதவர்க்குந் துணைபோவது கேள்வி என்று கூறியிருத்தலும், 'நுணங்கிய கேள்வியர்' என்ற குறளிலே கேள்வி அறிவு மட்டுமன்றி ஒழுக்கத்தையும் அளிப்

பது என்று கூறிப்போந்ததும் உணரத் தக்கன. செல்வத்து ளெல்லாந் தலையாய செவிச் செல்வத்தை வாய்க்கப் பெருதார் இருந்தும் இறந்தும் ஒன்றென்று நாயனர் அறுதியிட்டு அறைதலும் அறிக. 'கற்ரு ருரைக்குங் கசடறு நுண் கேள்வி பற்ரு து' என்ற நாலடி நன்மொழியும் இதனை நன்கு வலியுறுத்தும். 'கற்றதுங் கேட்டதுந் தானே' என்ற தாயுமானுர் அருண்மொழியும், 'நுண்ணூ லறவுரை கேட்டுணர்ந்து' என்ற அறநெறிச்சார அறிவுரையும் உய்த்துணரற்பாலன. கல்வி யென்னும் பல் கடற் பிழைத்தற்கும் அரும்புணையாய் அமைவது கேள்வியே யென்ப. கற்றல் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் ஆகியவற்றுள்ளும் 'கேட்டல்' அமைந்திருக்கிற தன்றே ? எனவே மக்களுக்குக் கல்வி எத்துணை வேண்டற்பாலதோ அத்துணையும் அதனினும் கேள்வி நனி மிக இன்றியமையாது வேண்டப்படுவ தொன்றும்.

இத்துணைச் சிறந்ததோர் கேள்விப் பெருஞ் செல்வத்தை அறிஞர் வாய்க்கேட்டுப் பெறுதல் முறையாம். ஒரு சிலர்பாற் கேட்டலினும் பல்லார்வாய்க் கேட்டலே சிறந்ததாம். பழந் தமிழ் நாட்டிலே பல்லறிஞர் குழுமிப் பயனுரை வழங்கல் பெரு வழக்கென்பதும், இங்ஙனம் வல்லுநர்கூடி நல்லுரை நிகழ்த்தற் குரிய பேரற நிலையங்கள் ஆங்காங்கு அமைக்கப் பெற்றிருந்தன வென்பதும் சிலப்பதிகாரம் முதலிய பண்டைத் தமிழ் நூல்களாலே அறிகின்றேம். இத்தகைய பேருரைக் கூட்டங்களுக்குப் 'பெரியநாடு' என்று பெயர் வழங்கியிருத்தலை 'இந்திர ஞேலக்கம் போல் இருந்தது பெரியநாடு' என்ற கம்பர் கவின் மொழியும் சான்றுகும்.

இத்தகைய அரும்பெரும் பேற்றைத் தமிழ்மக்கள் இடைக் காலத்தே பல இடையூறுகளால் இழக்க நேர்ந்தது. பன்னெடுங் காலம் கழிந்தபின், இப்போது சில பல ஆண்டுகளாக ஆங்காங்குக் கழகங்கள் நிறுவியும், அவற்றின் வாயிலாய்ப் பல பெருமக்கள் ஒருங்கு சேர்ந்து அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் வருகின்றனர். இத்தகைய கழகங்களும், கூட்டங்களும் எண்ணிறந்து பல்கிப் பெருகவேண்டும். இவற்ருல் மக்கள் எய்த

விருக்கும் பயன்கள் அளப்பரியவாம். இவற்றது பெருவளத்தாற் கூடுதற்குக் கூடாத கூட்டத்துட் படுநட்பு கூடுதற்கும், அறனறிந்து மூத்த அறிவுடை அந்தணரைக் கண்டு களிக்கும் பெரும் பேறுறுதற்கும், அத்தகு பெரியாரைப் பேணித் தமராக் கொளும் அரிய வற்றுளெல்லாம் அரியநலம் தலைக்கூடவும், விழுப்பொருள் விளங்க வழுப்படா துரைக்கும் அவர் வாய் மொழிகேட் டின்புறுதற்கும், மதிநுட்பம் செறிந்த நல்லுரைகளாற் பேரறிவும் பேராற்றலும் பெறுதற்கும் கூடுமாகலின் இவை மிக இன்றியமையாதன வென்க.

முன்னை நாளைவிட இந்நாள் எல்லா இடங்களுக்கும் இருப்புப்பாதை அமைந்திருத்தலின் எத்துணைத் தொலையில் ஒரு கூட்டம் நிகழினும் மிகச்சுருங்கிய காலவளவிலும் குறைந்த செலவிலும் குறித்த விடஞ்சென்று வாய்ப்பறையாகவும் நாக்கடிப்பாகவும் சாற்றுவதொன்றைப் போற்றிக்கேட்டல் எவர்க்கும் எளிதினெளிதாம். ஆயின் இஞ்ஞான்று காணும் கழகங்களுள்ளே மிகச் சில நீங்க எஞ்சியவைகளால் ஒரு சிறிதும் பயனுண்டாமாறில்லை. எஞ்சிய மிகச்சிலவும் வன்மையும் வண்மையும் வகையின் வாய்ந்து பயன்றரு பான்மையின் இல்லை. இது தமிழ் மக்களின் நல்குரவாலோ எனின்? அற்றன்று. கல்வி அறிவு ஆற்றல்களிற் சிறந்து கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்ப் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும் செவிய முதாப் பொழியும் பெருமக்கள் இதுபொழுது இல்லாமலில்லை. உச்சிமேற் புலவர்கொள் உரையாசிரியரே உவக்கும் பேருரையாசிரியரும், பரிமேலழகரும் பரிவுகொள் அரும்பொருள் தெரிதரும் அறிவுடையோரும், மெய்கண்ட தேவரும் மேற்கொளுமாறு மெய்ந்நூல் காணும் மேதகையோரும், எண்ணும் எழுத்தும் எண்ணிக காணும் நுண்ணியோரும், காய்தலுவத்த லகற்றி ஆய்வுரைகாணும் பெரியாரும் இல்லாமலில்லை. இருந்தும் பயன் உண்டாமாறில்லையே யெனின் இஞ்ஞான்று கழகங்களும் கூட்டங்களும் காணும் பொறுப்பினர் ஒற்றுமையும் ஊக்கமும் உண்மையும் உளங்கொண்டு வாய்ந்திராமையினென்க.

மக்கள் செவிச் செல்வத்தைப் பெறுதற்கு இன்றியமை யாத கழகங்களும் கூட்டங்களும் வல்பயன் குன்றிய இந்நிலைய வாயின் மற்றெங்ஙனம் உய்தி கூடுவது? இந் நறும்பயன் காணுதே மக்கள் வாழ்க்கை வெற்றென விழிந்து வாளா கழி வதோ? இல்லை. இறைவன் சகலராகிய மக்களுக்குத் தாமே எளி வந்து அருள் செய்தல் இயற்கை யாகலின் அவனருளாலே இதற்குமோர் அருந்துணை கண்டோம். இக்காலத்தே மேனுட் டினர் வாயிலாய் நாம் பெற்ற நலங்களிலே பெருநலம் பயக் கும் அச்சுப் பொறியும் ஒன்று. இவ்வச்சுப் பொறி நமக்குக் கிடைத்த பின்னர், மிக அரிதின் முயன்று ஏட்டில் எழுதிப் படித்துவந்த கல்வியை மிக எளிதிற் பெறும் பயன் பெற்ரோம். எண்ணிறந்த நூல்கள் இறந் தொழியாமை பேணினேம். இது போன்றே அவர்கள் கண்ட வெளியீடு (Journal) முறையினை யும் காலவளவில் மேற் கொண்டோம். கல்விச் செல்வத்தைப் பெறுதற்கு நூல்கள் நமக்கு எத்துணைத் துணையாமோ அத்து ணையும் செவிச் செல்வத்தைப் பெறுதற்கு வெளியீடுகளே மிக இன்றியமையாத துணை போதரும். ஒரு கூட்டத்தில் பேசப் படுதல் போன்ற பொருள்களையே வெளியீடுகள் தருவனவாம். ஒரு கூட்டத்தில் பல்லறிஞர் இருந்து பேசுவது போன்ற பல பெருமக்களின் அறிவுரைகளையே தாங்கித் திகழ்வனவாகும். அவ் வப்போது எழும் தடை விடைகளையும், கால நிலைகளையும், பேரறிஞர் அரிதிற் காணும் நுண்ணிய ஆராய்ச்சிகளையும் அடக்கி மிளிர்வன. மக்கள் இருந்துழி யிருந்தே உலகின் எல் லாத் துறைகளின் செய்திகளையும் உணருந் தகுதியினைத் தருகின் றன. வெளியீடுகளால் பெறத்தக்க பயன்கள் இவைபோன்று அளப்பரியவாம். இத்துணைச் சிறப்பினையும் மக்கள் கண்டு வைத்தும் இதுகாறும் எட்டுணையும் பயன் பெறுமுறையில் இவ் வெளியீட்டு முறையினைப் பெருக்கிக் கொள்ளவே யில்லை. மேனுட்டின ரிடமிருந்து மேற்கொண்ட பிறவற்றி லெல்லாம் ஆர்வங்கொண் டொழுகியதே போல் இவ்வெளியீட்டின் மட்டும் முன்னேற்றம் பெறுதது யாது பற்றியோ? நமது நாட்டுக்குப்

பொருந்தாததும் வேண்டாததுமான பலபல ஒழுக்கங்களையும் மிகமிகப் போற்றி வருவதுண்டேனும் இவ்வரும் பெரும் வெளியீட்டுச் செயலைமட்டும் போற்றுவாரில்லை. ஒரு நாடும் மக்களும் அரசும் ஏற்றமுறுதற்கு இன்றியமையாதனவும் குடியியலையும் அரசியலையும் ஒன்றினொன்று நெருங்கிய தொடர்புறச் செய்வனவும் வெளியீடுகளே யன்றி வேறில்லை என்பதை உணருவாரில்லை.

இவ் வெளியீடுகளின் எண்ணரிய பெருமையினையும் பெறற்கரும் பயனையும் நன்குணர்ந்து அதனைச் சீரிய முறையாற் பேணிப் பெருநலந் துய்ப்பவர் மேனாட்டினரே யாவர். மேனாட்டிலே கல்வி, அறிவு, ஒழுக்கம், சமயம், கைத்தொழில், பயிர்த் தொழில், சரித்திர வரலாறு, ஆயுள் நூல், ஓவியம், சிற்பம் நுண்பொருள் (Science) ஆய்வு, முதலிய ஒவ்வொரு பொருள் பற்றியும் தனித்தனி பலப்பல வெளியீடுகள் உள்ளன. பொருள் பற்றி மட்டுமன்றி, சிறுவர்க்கென்றும் சிறுமியர்க்கென்றும் ஆடவர்க்கென்றும் பெண்டிருக்கென்றும் தொழிலாளிகளுக் கென்றும் முதலாளிகளுக் கென்றும் காணும் வெளியீடுகள் எண்ணிறந்தனவாம். ஆண்டுதோறும் திங்கள்தோறும் வெளியாவனவேயன்றி, வாரந்தோறும் வாரம் இருமுறை மும்முறை தோறும் நாள்தோறும் வெளியாகும் பதிப்புக்களும் எண்ணிலவாம். ஒவ்வொரு வெளியீடும் பல்லாயிரக்கணக்காகவும் இலட்சக் கணக்காகவும் வெளிப்போந்து ஒவ்வொரு துறையினும் எல்லா மக்களாலும் படிக்கப் பெறுகின்றது. மேனாட்டிலே வெளியீடுகளை மக்கள் மதித்தலும், அரசினர் மதித்தலும் மிகப் போற்றத் தக்கன. சில பல வெளியீட்டுக் கருத்துக்களின்படி மக்களும் அரசியற் பொறுப்பினரும் பின்பற்றி யொழுகும் கடமையுமுண்டு.

வெளியீடுகள் படித்தலிலே தோட்டியென்றும் தொண்டைமான் என்றும் வேறுபாடு இல்லை. ஒவ்வொரு தொழிலாளரும் ஒவ்வொரு சிறுவர் சிறுமியருங்கூட நாள்தோறும் வெளியீடுகளின்றிக் காணமாட்டார்கள். வெளியீடு படித்தலை உணவு போலும் மதிப்பர்.

மேனாட்டிலே வெளியீடுகளின் நிலைமையும் தகுதியும் இங்ஙனமாக,நமது தமிழ்நாட்டிலே இந்நிலை எத்துணைப் பிற்போக்குற்றிருக்கின்றது என்பது எடுத்துக் கூறுதற்கியலாது.ஏறக்குறைய இரண்டுகோடி தமிழ்மக்களடங்கிய நமது நாட்டிலே எத்துணை வெளியீடுகள் உள்ளனவெனின் சில விரலெண்ணிக்கையிலேயே அடங்கக் கூடுவனவாம். வெளியீடுகளின் தொகையே இவ்வளவாயின் இவற்றின் பதிப்புத் தொகையும் கூறவேண்டா. இது மிக வருந்தத்தக்கதும் எள்ளத்தக்கதுமான செயலாம்! தெலுங்கர் முதலிய பிறமொழியினரிலே இத்துணை இழிதகைமை காணுதற்கில்லை. தமிழரினும் சற்றுச் சீர்தூக்கிய நிலையிலேயே இருக்கக் காண்போம்.

தமிழரர்ப் பிறந்தும், தமிழராயிருந்தும், தமிழ் பேசியே இன்ப நுகர்ந்தும் வரும் தமிழரோ தாங்கற்ற ஆங்கிலப் பயிற்சியின் மயக்கத்தாலே ஆங்கில முதலிய பிறமொழி வெளியீட்டுக்களிலேயே ஆர்வமுடையராய்க் கழிவர். தமிழ் மட்டுமே கற்றறிந்தோராய தமிழ்ப் புலவரோ வெனின் தாம் பல நூற்களைக் கற்றவளவே போதியதென்று அமைவர்; அந்தோ! அவர்கள், நூற் கல்விக்கும் வெளியீட்டின் துணைக்கும் உள்ள வேறுபாடும் பயனும் அறிந்துகொண்டிலர்! இவர்கள்பாடே இத்துணையவா யொழிய, எஞ்சிய தமிழ் மக்கள் வெளியீட்டு நலம் ஒருசிறிதும் உணராராய் வறிதேவாணுள் கழிக்கின்றனர். இஞ்ஞான்று பிற நலங்களைப் போற்றிக் கிளர்ச்சி செய்யும் தலைவர்கள் இதனையுந் தங்கள் அருங் கடமையாகத் தலைமேற்கொண்டு பணியாற்றல் வேண்டும். அல்லது வெளியீட்டிற்கென்றே பல தலைவர்கள் தோன்றி இவ்வருங் கடனாற்றல் வேண்டும். மொழிப்பற்றின்றித் தாயகப் பற்றும் பிறவும் மக்கள் உள்ளத்தில் உறுதிபெறு தென்பதை நன்கு உணர்வாராக. நலமிக்க இவ்வெளியீட்டு முறையிலே போதிய முன்னேற்றம் பெறுதவரையில் நமது மக்கள் பிற நாட்டினரின்முன் பெருமிதங் கொள்ளுதற்கிடனில்லை. ஒவ்வொரு ஆடவர் பெண்டிரிடத்தும் இவ்வெளியீட்டு அறிவுச்சுடர் எழவேண்டும். அன்றே நமது வாழ்க்கையை வாழ்வுடையதென்று கூறலாம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

[கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M. A., M. L.,]

## க. தோற்றுவாய்

தன்னுயிர் போல மன்னுயிர் பிறவற்றையுங் கருதி அவற்றிற்கு நன்மை செய்வதே பேரறமென்று பெரியோரால் விதந்தோதப்பெறும். அத்தகைய பேரறம் இயற்றவல்லார் எவ்வுயிர்க்கும் இரங்கும் அருட்குண முடையவர்களே யாவர். அவர்களே அந்தணராகிய அறவோரென்று ஆசிரியர் திருவள்ளுவர் நீத்தார் பெருமையுட் குறித்தனர்.

அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். (குறள் - ௩௰)

தனக்கு நன்மை நாடுவதினும் பிறர்க்கு நன்மை செய்வதே அறமென்று சிறப்பாக அழைக்கப்படும். பிறர்க்குச் செய்யும் நன்மை காரணமாகவே உயர்வும் மதிப்பும் மக்கட்கு ஏற்படுகின்றன. குழந்தைகளைப் பாதுகாத்து வளர்த்தலினாலே தாய்க்குச் சிறப்புக் கூறப்படுகின்றது. அவர்கட்கு அறிவூட்டுவதனாலே தந்தைக்குப் புகழும் புண்ணியமும் விளைகின்றன. இளைஞர்க்கு உற்றுழி உதவுதலானும் வறிஞர்க்கு வேண்டுவன ஈதலானுஞ் செல்வர்க்குச் சிறப்பு ஏற்படுகின்றது. கல்வி கற்பித்தலினாற் கற்றவர்க்கு மேன்மை யுண்டாகின்றது. நாட்டில் வாழுங் குடிகளை உட்பகை புறப்பகை முதலியவற்றால் நலிவடையாமற் காத்து ஓம்புதலினாலே வேந்தர்க்குப் பெரும் பெற்றி நிலைக்கின்றது. சமய அறிவினையும் சமய ஒழுக்கத்தினையும் நிலைபெறச் செய்வதினாலே சமய ஆசிரியர்கட்குப் பெருஞ் சிறப்பு அமைந்துளது. இதனால் பிறர்க்கு உதவியாகிய அறமே சால்பு அனைத்திற்கும் அடிப்படையாக உள்ளது.

செய்யும் நல்லறத்தின் உயர்விற்கேற்ப அறவோரது பெருமை மிகுந்து விளங்கும். உயிர்கட்குப் பசிதீர்ப்பது பேரறமென்பர். உடம்பிற்குரிய உணவு அளிப்பதினும் உள்ளத்தைச் செம்மைப்படுத்துங் கல்வி யறிவினை ஈதல் சிறந்தது. இவ்வுலக

வாழ்க்கைக்குப் பயன்படுங் கல்வியறிவைக் கொடுப்பதைக் காட்டிலும் மறுமைக்கு நன்மை பயக்கும் நல்லொழுக்க வுணர்ச்சி யெழுப்புதல் பெரிதும் போற்றப் படுவதாகும். இம்மைக்கும் மறுமைக்கும் வீட்டிற்கும் நலம் பயக்குஞ் சமய அறிவினை ஈதல் அதனினும் விழுமியதாகும். சமயங்கள் யாவற்றுள்ளுந் தலையாய ஒரு சமயத்தின் உண்மை யறிவினைப் புகட்டுதல் பிற சமயக் கல்வி பயிற்றுதலினுஞ் சீரியதாகும்.

சமய போதனை, போதிப்பவரின் தகுதிக் கேற்றவாறு பயன் விளைக்கும் இயல்புடையது. கல்வி யறிவொழுக்கங்களான் மேம்பட்டுக் கடவுள்பாற் கழிபேரன்புடையார் செய்யுஞ் சமய போதனையே ஏனையோர் தருஞ் சமயக்கல்வியினுஞ் சிறந்ததாகும். அப்பேரன்பருள்ளும் முழுமுதற் கடவுளது திருவருளை எளிதிற் கைவரப்பெற்ற பெரியோரது அருண்மொழிகளே அளவற்ற நன்மை விளைக்க வல்லன. அவற்றுள்ளுங் கரவொன்று மறியாத பச்சிளங் குழந்தைப் பருவத்திலேயே பரம்பொருளது பெறலருங்கருணைக் குரியவராய்ப் பேரின்பம் நுகர்ந்த அருள் ஞான வள்ளலது பெருஞ்சொல்லே எல்லையில்லாத பெருநல வாழ்வினைக் கைவரச்செய்ய வல்லதாகும்.

இனி, சமய நலத்தினை ஒருவருக்குச் செய்வதினும் பலர்க்குச் செய்தல் சிறந்தது. பலர்க்குச் செய்வதினும் நாடு முழுவதிற்குஞ் செய்தல் சிறந்தது. நாடுமுழுவதிற்குஞ் செய்வதினும் ஞாலமனைத்திற்குஞ் செய்தல் சிறந்தது. சமயம் விளக்கமுற்றிருக்குங் காலத்திலே சமய போதனை செய்வதினும் பல்வகை இடையூறுகளால், அது நிலைகுலைந்து அழியுங்காலை அதனை நிலைநாட்டி உலகத்தோரை உய்வித்தல் அருள் அறங்கள் எல்லாவற்றினுந் தலைமையானது. அப்பெற்றித்தாய பேரறம் புரிவோரே சமய வேந்தரெனப்படுவர். அனையவேந்தருள் ஒப்பற்ற பெருவேந்தராய்த் திகழ்ந்தவர் நமது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரென்பது, அவர் மூவாட்டைப் பிராயத்திலேயே முழுமுதற் கடவுளின் பேரருள் பெற்றுச் சைவப் பெருநெறிக்கு விளைந்த பேரிடர் தீர்த்து உலகெங்கும் சிவனருட் பேரொளி திகழ்ந்

தோங்குமாறு திருவருட் பாடலாகிய தெள்ளமுதக் கடலளித்து வியப்புறும் அருட்பெருஞ் செயல்களாற்றி ஞாலத்துத் தாம் வதிந்த நாண் முழுவதும் மன்னுயிர்களை உய்யக்கொள்வதிலேயே பயன் படுத்தித் தமது திருமணத்தில் வந்த யாவருக்குங் கொள்ளைகொள்ள வீடு :உதவி யருளினமையாற் றெள்ளிதிற் பெறப்படும். ஆதல்பற்றியே தாயுமானவர்,

வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான
சம்பந்த னையருளாற் சாருநா ளெந்நாளோ?

என்றனர். சங்காச்சாரியரும்,

தருணமங்கலை யுனதுசிந்தை தழைந்தபாலமு தூறினல்
அருணகொங்கையி லதுபெருங்கவி யலைநெடுங்கட லாகுமே
வருணனன்குறு கவுணியன்சிறு மதலையம்புயல் பருகியே
பொருணயம்பெறு கவிதையென்றொரு புனிதமாரி பொழிந்ததே.

என்று நமது பெருமானைப் புகழ்ந்து துதித்தனர். அத்தகைய சமயப் பெரு வேந்தரின் பெருஞ் சரிதையினை ஆராய்தல் பெருநலம் பயக்கு மாதலின் அதனைச் செய்ய முற்படுகின்றாம்.

---

## உ. குழந்தைப் பருவம்.

உலகப் பயன் கருதிக் கடவுளை வழிபடுதற்குரிய வேத நெறியும், அப்பயன் கருதாது வீட்டுநலங்கருதி விமலனை வணங்கும் வீறுற்ற சிவநெறியும், சைவாசிரிய பரம்பரையும் இஞ் ஞாலத்திலே நிலைபெறும் வண்ணம், நமது பரமாசிரியர் தோன்றித் திருவருள் பெற்ற இடம் சோழவள நாட்டிலேயுள்ள சீர்காழிப் பதியாகும்.

அப் பதியானது சிவநெறி பேணுதலே தமது குலத்தின் பெருங் கடமையாகக் கருதிய சோழ மன்னரது காவிரியாற்றின் வளஞ் சிறந்ததாய்ச் செழிப்பு மிக்க செந்நெல் வயல்கள் சூழ்ந்ததாய், வானளாவிய மதில்களினாற் புடைசூழப் பெற்றிருந்தது. தோணிபுரமென்ற அதன் பெயர்க்கேற்ப அந்தணர்களது மந்திரவொலி முழக்கம் கடலொலிபோல ஓங்கியெழுதலால் எப்

பொழுதுங் கடன்மேலே மிதப்ப தொப்ப விளங்கியது. ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அத்திருப்பதியின் வனப்பைப் பல படப் பாராட்டி யுள்ளார். அவற்றுட் சிலவற்றை ஈண்டுக் கூறுதும்.

எக் காலத்தும் அழியாது நிலவுதலால் அதன் மதில்களின் மேல் ஊழிப்பெரு வெள்ளங்களின் அலைகள் மோதி விடுத்த வரைகள், பாற்கடல் கடைந்த காலை மந்தரமலையைச் சூழ்ந்து கிடந்த அரவினது அடையாளத்தை யொத்திருந்தன. அந்நக ரிற் றிகழும் தாமரைத் தடாகங்களிலே பச்சைநிறமுடைய இலைகள் நீரைமூடிப் படர்ந்திருப்பனவும் செந்தாமரைகள் அழகாக மலர்ந்திருப்பனவும் எவ்வாறிருந்த வெனின், நீல நிறமுடைய கடலின் மீது செந்நிறக் கதிர்களோடு ஒரு கதிரவன் காலையில் எழுவதைப் பல இளஞ் செஞ்ஞாயிறுகள் பல சிறு கடல்களின் மீது எழுந்து இலங்குவன போன்றிருந்தன. ஓமத்தின் புகையினால் இரவும், திருநீற்றினொளியினாற் பகலும் அவ்வூருக்கு வேண்டாவாயின. வானளாவிய சோலைகளில் நுழைந்து மலர்த்தாதுந் தேனுந் தோயப்பெற்று வெளிப்பட்ட திங்களானது வெண்ணிறமாறிச் செந்நிறம் பெற்று, மாலையில் விளங்குங் கதிரவனைப் போன்றது. வயல்களிலே மலர்ந்த செந்தாமரையாகிய செந்தீயிலே அவ்வயல் வரம்பிலுள்ள தேமாமரத்தின் கனி கிழிந்து ஒழுகும் பழச்சாறாகிய நெய்யானது எப்பொழுதும் இலைகளின் நடுவே யோடிப் பொழிவதனாலே, அவ்வூரிலுள்ள மரங்களும் வேள்வி செய்யுந் தன்மையனவாய்த் தோன்றின இக்கருத்தமைந்த பாட்டு வருமாறு:

பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலா னெடிதவ்வூர்
மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால்.

(சம்பந்தர்புராணம் - எ)

பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், சிரபுரம், தோணிபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டும் அப்பதிக்குரிய பெயர்க

ளாம். குற்றமற்ற மந்திரங்களை ஓதி நல்லொழுக்கத்திற் சிறந்த கவுணியர் குடிக்கு அணியாய் விளங்கிய சிவபாதவிருதயரும், அவர் கருத்திற் கிணங்கி யொழுகும் அவர் வாழ்க்கைத் துணை யாகிய பகவதியாரும் பரம்பரையாகச் சிவநெறிபோற்று மரபி னில் வந்தனர். அவர்கள் இருவரும் சிவபெருமானது திருவடித் தாமரைகளையே யன்றி வேறொன்றையும் வழிபடாதவர்களாய்த் திருநீற்றன்பு மிக்கவராய்த் திகழ்ந்தனர். அக்காலத்தே சமண சமயமும் புத்தசமயமும் தென்னாட்டிலே எங்கும் பரவினமை யால், வேதநெறியுஞ் சைவநெறியும் வலிகுன்றிநின்றன. அப் புறப்புறச்சமய இருளை நீக்கித் திருநீற்றினொளியை நிலை நிறுத்த வல்ல அரும் புதல்வரைப் பெறக்கருதி, அவர்களிருவரும் திருத் தோணி புரத்திலிருக்குஞ் சிவபெருமானையும் உமையம்மை யாரையும் வழிபட்டு அரியநோன்பு ஆற்றி அவர்களுடைய எண் ணம் நிறைவேறுங் காலத்தே பகவதியார் மகப்பேற்றிற் குரியவ ராயினர். பத்தாந் திங்களிற் கோள்கள் உயர் நிலையில் நின்று வலியுற்ற நல்லதொரு பொழுதாயமைந்த திருவாதிரை நாளிலே சைவநெறியும் மறைவழக்குஞ் சிறக்கும் வண்ணம், அடியாருள் ளங் களிகூரும் வண்ணம், திருநீற்றின் சிறப்பு உலகெங்குந் திக ழும்வண்ணம், ஏழுலகும் இன்புறும் வண்ணம், விண்ணவர் கூட் டம் வியப்ப, அந்தணரொழுக்கஞ் சிறப்ப, தமிழ் மக்கள் செய்த தவம் முற்றுப்பெற, அருந்தவத்தோர் செயல் விளங்க, எவ்வுல கினும் இவ்வுலகம் மேன்மை எய்த, எத்திசையினுந் தென்றிசை உயர்வுற, எம்மொழி வழக்கினுந் தமிழ்மொழி வழக்கே தழைத் தோங்க, இசைஞானமு மெய்ஞ் ஞானமும் நிலைத்திருப்ப, படைப்புத் தொழில் சீர்மைபெற, முக்காலத்துங் குற்றமில்லாது சீர்காழிப்பதி புகழ் பெற்றோங்க, தோணிபுரத் திறைவர் திருவ ருள் எங்கும் பெருக, நாத்திக மதங்கள் பாழ்பட, எப்பொருட் குஞ் சிவமாந்தன்மை தரவல்ல ஆளுடைய பிள்ளையார் இம்மேதி னியிற் றோன்றியருளினர். ஆளுடைய பிள்ளையார் தோன்றுங் காலை திருக்கழு மலத்திலுள்ள எல்லாருடைய உள்ளமும் உடம் பும் களிகூர்ந்து புளகமெய்தின. பொழில்களெல்லாம் நறுமணங் கமழ்ந்தன. கதிரவனது தூயவொளி எங்கும் பரவிற்று. தென்

காற்று வீசியது. விண்ணவர்கள் மலர் மழை பொழிந்து மண்ணவர் வேள்விக்குத் துணை நின்றனர். பூதகணங்கட்குத் தலைவர்களும் திருவருளின் பெருமைகண்டு மகிழ்வடைந்தனர்: மரங்கள் கொடிகள் முதலியவைகளுந் தழைத் தோங்கின. வானமும் குற்றமிலா வொளியொடு விளங்கிற்று. நற்புள்ளின் ஒலிகள் நாற்றிசைகளெங்கும் முழங்கி நற்குறிகள் காட்டின. காழிப்பதியின் தெருக்களிலெல்லாம் பல்வகை வாத்தியங்கள் தாமே முழங்கின. அருமைப் புதல்வர்க்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் பெற்றோர்கள் செய்தனர். அந்தணர் குலத்துப் பெண்மணிகள் மிகுந்த மகிழ்ச்சியினாலே தங்கள் மாளிகைகளிலே மலர்களுஞ் சாந்தும் அமைத்து, நிறை குடமும் வெண் முளைப்பாலிகைகளும் வைத்து, அவற்றைக் கவினுறச் செய்தனர். வறியவர்க்குப் பொன் முதலிய நற்பொருட் கொடையும், சிவனடியார்க்கு அமுதளித்தலும், நறுமலர் கொடுத்தலும், அகிற்புகை, ஆகுதிப்புகை, கடுகின்புகை முதலியவற்றால் நன் மணங் கமழ்வித்தலுமாகிய பல்வகை நற்செயல்கள் பத்து நாட்களிலும் நடைபெற்றன. பெயரிடுதல், தொட்டி லமர்வித்தல், அமுதூட்டுதல், திருநீற்றுக் காப்பமைத்தல் முதலிய சடங்குகளும் உரிய பருவங்களிலே செவ்வையாக நடந்தன.

அன்னையாரது மடியிலும், மணிப் பீடத்திலும் ஒளி பொருந்திய தொட்டிலிலும், மலர் அமளியிலுந் தமிழ் தழைக்க வருந் தனிப்புதல்வரை வைத்துப் பெற்றோர்கள் தாலாட்டி வளர்த்தனர். சின்னாட் சென்றபின்னர் சிவபெருமானது திருத் தொண்டைத் தவிர மற்றொன்றுங் கைக்கொள்ள மாட்டோ மென்று தெரிவிப்பார்போலப் பிள்ளையார் திருமுக மண்டில மசையச் செங்கீரை *யாடினர். புறச்சமயங்கள் விலகியோடவும் சிவபெருமானிடந் திருத்தாளம் பெறுவதற்கு முற்காட்டாகவுந் தமது கமலச் செங்கைகளாற் பிள்ளையார் சப்பாணி கொட்டினார். உயர்நெறியில் நில்லாத ஏனைச்சமயங்கள் தாழ்ந்து

---

* செங்கீரையாட லென்பது இருகையு முழந்தாள்களும் ஊன்றி தலைநிமிர்ந்தாடல்.

தடுமாறுவனவற்றைக் காட்டுவான் தமது திருமாளிகை முற்றத்திலே நாயனர் தவழ்ந்தருளினர். சுற்றத்தாரும் பிறரும் 'காழியர் தம் சீராட்டே, கவுணியர் கற்பகமே' என்று மகிழ்ச்சியுடன் கூறி நாயனரை வருக! வென்று அழைத்தனர். அழைத்தவருக்குத் திருநகையாலும் திருமேனி யசைவினாலும் பிள்ளையார் இன்ப மளித்தனர். கீழ்ச் சமயங்கள் தளர்வுறும்படி கிண்கிணி யொலியொடு தளர் நடை கொண்டனர். பின்னர் நடந்து விளையாடத் தொடங்கினர். சிறுதேருருட்டும் பருவமும் சிறு பெண்களது சிற்றில்களை அழிக்கும் பருவமும் கழிந்தபின் பிள்ளையார் மூன்றும் வயதுற்றனர்.



## பரஞ்சோதி முனிவரும், திருவிளையாடலும்

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

இவர் ஏறக்குறைய 280 ஆண்டுகளின் முன்பு, சோழ மண்டலத்திலே, திருமறைக் காட்டில், வழி வழிச் சைவர்களாகிய அபிடேகத்தர் மரபில் மீனாக்ஷி சுந்தர தேசிகர் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றியவர்; தந்தையாரிடத்தில் முறையானே தீக்கைகள் பெற்று, தமிழிலும் வடமொழியிலுமுள்ள பலவகையான அரிய நூல்களையுங் கற்றுத்துறை போயவர்; சிவபத்தி அடியார்பத்தி மிக்கவர்; அங்கயற் கண்ணம்மையின் திருவடிக்கு மிக்க அன்பு பூண்டவர்; இவர் சிவபெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் திருப்பதிகள் பலவற்றுக்கும் சென்று, மதுரையை அடைந்து கயற்கண் இறைவியையும் சோமசுந்தரக் கடவுளையும் நாடோறும் தரிசித்து வழிபட்டுக் கொண்டு அப்பதியில் வதியும் பொழுது, மீனாக்ஷி தேவியார் தமக்குக் கனவிலே தோன்றி 'எம்பெருமான் திருவிளையாடல்களைப் பாடுவாய்' என்று பணிக்க, அப்பணியைத் தலைமேற் கொண்டு இந்நூலைப் பாடி முடித்து, சொக்கேசர் சந்நிதியில் அறுகாற் பீடத்திலிருந்து, அடியார்களும் புலவர்களும் முதலாயினர் கூடிய பேரவையில் இதனை அரங்கேற்றினர்; என்று பெரி

யோர் கூறுவர். இவர் காலம் 400 ஆண்டுகளின் முன்பாமென்றும், 850 ஆண்டுகளின் முன்பாமென்றும் இங்ஙனம் வேற்றுமைப்படக் கூறுவாருமுளர்; ஒருவர் கூற்றும் ஆதரவுடன் கூடியதன்று; தக்க சான்று கிடைத்த வழியே இது துணிதற்குரியதாகும். இவரியற்றிய வேறு தமிழ் நூல்கள் வேதாரணியப் புராணம், திருவிளையாடற் போற்றிக்கலி வெண்பா, மதுரைப் பதிற்றுப்பத் தந்தாதி என்பன. திருவிளையாடற் புராணத்திலுள்ள மாணிக்கம் விற்ற படலம், கால் மாறியாடிய படலம், நரி பரியாக்கிய படலம் என்பவற்றை நோக்குழி இவ்வாசிரியரது அருங்கலை யுணர்ச்சியின் பரப்பு வெளிப்படும். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களிலும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய சங்கச் செய்யுட்களிலும், ஐம்பெருங்காப்பியங்களிலும், தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகளிலும், மெய்கண்ட நூல்கள் முதலியவற்றிலும் இவ்வாசிரியர் நல்ல பயிற்சியுடையவர்.

பரஞ்சோதி முனிவரியற்றிய இத் திருவிளையாடற் புராணத்திற்கு முதனூல் வடமொழியிலுள்ள ஆலாசிய மான்மியம் என்றும், இது பதினெண் புராணங்களிலொன்றாகிய காந்தபுராணத்தின் ஓர் பகுதியாம் என்றுங் கூறப்படுகின்றது. தல மான்மியங்களைப் பதினெண் புராணங்களிலொன்றனோடு இயைத்துரைப்பது அவற்றின் பெருமையை மிகுத்துக் காட்டவேண்டுமென்னும் கருத்தினாலாம் என்பது நல்லறிவுடையாரனைவர்க்கும் உடன்பாடாகும். யாதானும் ஒரு தமிழ் நூல் ஆரியத்தினின்று மொழி பெயர்க்கப் பட்டதானால் மட்டும் யாவரும் ஒத்துக் கொள்ளத்தக்க பெருமை யுடையதாம்; அதுவும் வேத ஆகம புராண இதிகாசங்களில் ஒன்றைச் சார்ந்ததாகவும், பின் நிகழப்போகிற வரலாறுகளை முன்னரே கூறி வைத்ததாகவும் இருக்கவேண்டும்; என்னும் இத்தகைய போலிக்கொள்கைகள் பிறருடைய பழக்கங் காரணமாகச் சென்ற சில நூற்றாண்டுகளிலிருந்த தமிழ் மக்களிடையே தோன்றின. அவை தமிழ் நூல்கள் சில மறைந் தொழியும்படி வடமொழி மூலம் இன்றென்று புறக்கணித் தொதுக்கு மாறும், சில தமிழ் நூல்களை ஆரியத்தில்

மொழி பெயர்த்துக் கொண்டு அவற்றினின்று இவை வந்தன வென்று காட்டுமாறுந் தூண்டக் கூடியவாதல் காண்க. எனி னும், அக்கொள்கைகள் வலியுற்று நின்ற காலத்தில் ஒருதமிழ்ப் புலவர் அந்நெறியே சென்றிருப்பின், அவர் அவற்றைக் கடக் கும் மதுகையிலராயினு ரென்பதன்றி, அவர்மீது வேறு குற்றஞ் சுமத்துதல் சாலாது. இற்றைக் நாளிலும் அத்தகையோ ரிருப் பதே பெரியதோர் வியப்பாகும். இன்னோர் இன்னமும் இருக் கின்றன ரென்பதனைத் திருவாலவா யுடையார் திருவிளையாடற் புராண முகவுரை கூ-ம் பக்கத்தில் மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியுள்ளதனு லறிக. சில ஆண்டுகளின் முன்பு சித்தாந்த நூற்பயிற்சி வாய்ந்தவராயிருந்த ஒருவர் குமரகுருபர சுவாமிகளின் சரித்திரத்தைத் தமிழில் எழுதி வைத்துக்கொண்டு, இதற்கு எப்படியாவது வடமொழி யில் மூலம் கற்பித்துவிட வேண்டுமெனத் தாம் எண்ணியதை என்னிடம் கூறியது முண்டு! தனித்தமிழ் நூல்களாகிய பெரிய புராணம் போல்வனவற்றைச் சிலர் ஆரியத்தில் மொழி பெயர்த்து வைத்துக் கொள்ள, ஆரியத்தினின்று இவை மொழி பெயர்க்கப்பட்டன வென்று கூறும் ஒன்றிரண்டுபேர் இன்னு மிருக்கின்றனரே. இதிற் கூறப்படும் திருவிளையாடல்க ளெல்லாம் செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே தமிழ் மக்களிடையே தமிழ் மொழியாற் பேசியும் எழுதியும் நிகழ்த்திப் போந்தன வாகலின், இவ் வரலாறுகள் ஆரியத்தில் எழுதப்படு முன்பே தமிழின் இரு வகை வழக்கினும் பயின்றனவாதல் வேண்டு மென்றும், இவற்றை வடநூற் புலவர் அம்மொழியில் எழுதுங்கால் தமிழ் வழக்குக்களை நன்கு அறியாமை முதலிய காரணங்களாற் சில பிறழ்ச்சிகள் நிகழ்ந்திருத்தல் இயல்பென்றும், இந் நூலாசிரியர் வடநூன் மேற்கோளாகக் கதைகளை எடுத்துக் கொண்டனராயி னும் பழந் தமிழ் நூல்களின் கருத்துக்களையும் சொற்களையும் தொடர்களையும் எடுத்தமைத்தே இந்நூலை அழகுபெறச் செய் திருக்கின்றன ரென்றும் தமிழ் மக்கள் உணர வேண்டும். கதை களிற் சில பிறழ்ச்சி நிகழ்ந்திருப்பினும், இந்நூல்களின் நோக் கம், சரித்திர வாராய்ச்சி செய்வதன்றி, முழுமுதல்வனுகிய

இறைவன் அடியார்களுக்கு எளிவந்து அருள் புரியும் பெருங் கருணைத்திறத்தை உணர்த்தி உயிர்களை உய்வித்தலே யென்பதை உன்னின், அஃதோரிழுக்காகத் தோன்றுமாறில்லை.

---

# *தொல்காப்பிய காலம்

[மறைமலையடிகள்]



தலைச்சங்கத்தார்க்கு நூல் 'அகத்தியம்' என்றும், இடைச் சங்கத்தார்க்கு நூல் "அகத்தியமுந் தொல்காப்பியமும் மாபுராணமும் இசைநுணுக்கமும் பூதபுராணமும் என இவை" என்றும் போந்த உரையில், 'அகத்தியம், தலைச்சங்கநூலென்றதூஉம், 'தொல்காப்பியம்' இடைச்சங்கநூலென்றதூஉம் உண்மையாகா. 'அகத்தியம்' என்றொரு நூல் பண்டைக் காலத்தில் இருந்ததில்லையென்பதை முன்னரே காட்டினும். மற்றுத் 'தொல்காப்பியமோ, குமரிநாடு கடல்கொள்ளப்படுமுன் ஆக்கப்பட்ட நூலென்பது பனம்பாரனார் கூறிய சிறப்புப் பாயிரத்தானும், அதற்கு 'இளம்பூரணர்' உரைத்த உரையானுந் தெளியப்படுதலின், அது தலைச்சங்ககாலத்தெழுந்த நூலேயாகுமல்லாமல் இடைச்சங்ககாலத்ததாகாது.

அற்றேல், தொல்காப்பியத்திற்குப் பாயிரஞ் செய்த பனம்பாரனார் "பல்புகழ்நிறுத்த படிமையோனே" என்று ஆசிரியர் தொல்காப்பியனாரைத் தவவொழுக்கத்தினராக வைத்து உயர்த்துக் கூறுதலானும், 'படிமை' என்னுஞ்சொல் 'தவ வொழுக்கத்தினை' யுணர்த்துதல் சமண் மதத்தவர் நூல்களிலன்றி அவற்றிற்கு முற்பட்ட வடமொழி தென்மொழி நூல்களிற் காணப்

---

*தமது ஞானசாகரத்தில் மறைமலையடிகள் எழுதிவரும் மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும் என்னும் அரும்பெரும் நூலின் ஒரு பகுதியாகிய இக் கட்டுரையினைச் 'செந்தமிழ்ச் செல்வி'யின் கையொப்ப நேயர்களுங் கற்றுப் பயன்பெறும் பொருட்டு அடிகள் இதனை இதன்கண் வெளியிட்டுக் கொள்ள இசைந்தார்கள். அதற்காக அடிகட்கு நன்றி செலுத்துகின்றோம். பதிப்பாசிரியர்.

படாமையின் அச் சொல்லால் உயர்த்துரைக்கப்பட்ட தொல்காப்பியனார் சமண்மதத்திற்கு உரியவரேயாதல் அதனாற்போதரலானும், சமண் நூலார் உயிர்த் தொகைகளை ஓரறிவு முதல் ஐயறிவு ஈறாகப் பகுத்து அவ்வைவகையுள் அவற்றை வைத்து அடக்குமாறு போலவே தொல்காப்பியனாரும் 'மரபியலில்' உயிர்த் தொகைகளை ஒன்றுமுதல் ஆறு அறிவு ஈறாகப் பகுத்து அவ்வகைகளுள் வைத்து அவைதம்மை அடக்கிக் கூறுதல் கொண்டு அவர் சமண்மதத்தின ரென்பதற்கு மற்றுமொரு சான்று பெறப்படுதலானும் அவர் சமண்மதத்தினரேயாவர் என்பர் ஒரு சாரார்.* வடமொழி இலக்கண ஆசிரியரான பாணினி என்பவரும் 'ஐந்திரவியாகரண'த்தைச் செய்த 'இந்திரன்' என்னும் ஆசிரியரும் கி. மு. ௩௱-ஆம் ஆண்டில் இருந்த ஒரே காலத்தவராயினுந்,தொல்காப்பியனார் ஐந்திர வியாகரணத்தையே விரும்பிக் கற்றவராகலின், அவரை "ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்" என்று பனம்பாரனார் ஓதினார்; ஓதவே, தொல்காப்பியனார் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாதல் பெறப்படும் என்பர் பிறிதொருசாரார். † இவ்வாறுரைப்பவரே பிறிதோரிடத்தில், தொல்காப்பியம் கி-மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாகாது‡ என முன்னொடு பின் முரண உரை நிகழ்த்தினர். பின்னும் ஒருசாரார், இலங்கைத்தீவின் வரலாற்றில்§ முதற் கடல்கோள் கி. மு. உ௲அஎ-இலும், இரண்டாங் கடல்கோள் பாண்டுவாசன் அரசுபுரிந்த கி. மு. ரு௱௪-இலும், மூன்றாவதொன்று கி. மு. ௩௱௬ - இலும் நிகழ்ந்தமை குறிக்கப்பட் டிருத்தலின், இறையனாரகப் பொருட்பாயிரவுரையிற் சொல்லப்பட்ட கடல்கோளைக் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் நிகழ்ந்த மூன்றாங் கடல்கோளாக வைத்துத் 'தொல்காப்பியம்' அக் கடல்கோளுக்குச் சிறிது முன்னே செய்

* செந்தமிழ், தொகுதி கஅ, பகுதி கூ; தொகுதி கக, பகுதி ௫.

† 'Dravidian India' by Mr. T. R. Sesha Iyengar, M. A., pp. 158, 159. ‡Ibid, p. 170

§ Tennent's History of Ceylon; see also P. Arunachalam's Sketches of Ceylon History, pp. 8, 9.

யப்பட்ட தெனவும், கி. மு. நான்காம் நூற்றாண்டில் இந்திய நாட்டின்மேற் படையெடுத்து வந்த கிரேக்க அரசனை அலெக்சாந்தருடன் போந்த கிரேக்க வான் நூலாசிரியர் கொணர்ந்த 'ஹோரா' என்னுங் கிரேக்க மொழியைத் தொல்காப்பியனார் 'ஓரை' எனத் திரித்துத் தமது நூலுள் வழங்குதலே அவர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் இருந்தா ரென்பதற்குப் பின்னும் ஒரு சான்றாமெனவும் உரையாநிற்பர்*. மற்றும் ஒருசாரார், கிறித்து பிறந்த முதல் நூற்றாண்டாகிய அத்துணைப் பழைய காலத்தில் தமிழ்மொழி அத்துணை ஒழுங்கானதோர் உயர்ந்த நிலையை அடைந்திருத்தல் நம்பற்பால தன்றெனத் தங்கருத்து உரைத்துப், பாண்டிமன்னர் வழங்கிய 'வட் டெழுத்துக்கள்' என்பன அசோகமன்னன் வழங்கிய 'பிராமி' எழுத்துக்களினின்றே வந்தனவாகல்வேண்டு மாதலானும், 'பிராமி' எழுத்துக்களால் ஆக்கப்பட்ட கல்வெட்டுகள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டன அன்மையால் வட்டெழுத்துக்கள் தோன்றிய பின்னன்றித் தமிழ்மொழி எழுத்துரு அடைந்திருத்தல் ஏலாமையானும் தொல்காப்பியம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகுமென்று கோடலே பொருத்தமாம் என்பர். கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. எட்டாம் நூற்றாண்டு வரையிற் சென்ற ஆயிர ஆண்டுகளில் வட்டெழுத்தாற் செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டுத்தானுந் தமிழ்நாட்டின்கட் காணப்படாமையின், கி-பி எட்டாம் நூற்றாண்டிற்கு முன் தமிழ்மொழி ஓர் ஒழுங்குபெற்ற நிலையை எய்தவில்லை யென்பதேதிண்ணமாம் எனவும் இன்னார் உரையாநிற்பர்.† பின்னும் ஒரு பார்ப்பனர், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் தொல்காப்பியம் இயற்றப்பட்டதெனக் காட்டுவான் புகுந்து, சிலப்பதிகாரத்திற், "புண்ணிய சரவணம் பொருந்துவிராயின், விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவிர்" (கக, கூஅ-கூகூ) எனவும், "கப்பத்திந்திரன் காட்டிய நூலின், மெய்ப்பாட்டியற்கையின் விளங்கக் காணாய்" (கக, கடுச-கடுடு)

---

* Studies in S. Indian Jainism, pp. 38, 39.

† Studies in South Indian Jainism by Mr. M. S. Ramaswami Ayyangar, M. A., pp. 168—171.

எனவும் போந்த அடிகளிற் குறிப்பிடப்பட்டது 'பத்ரபாகு' என்னுஞ் சமண் முனிவராற் செய்யப்பட்ட 'கல்பசூத்திரமே' யாகுமென்றும், இக் கல்பசூத்திரமானது 'ஐந்திரம்,' 'ஜைநேந்திரம்' என்னும் பெயர்களால் வழங்கப்படுவதாமென்றும், இதனைக் கடைமுறையாக வெளியிட்ட 'பூஜ்யபாதர்' என்னுந் தேவநந்தியின் மாணாக்கரான 'வஜ்ரநந்தி' என்பவர் கி. பி. சசா-இல் மதுரையின்கண் ஒரு திராவிடசங்கம் நிலை நிறுத்தினராகலின் அச் சங்கத்தாருள் ஒருவரான தொல்காப்பியர் சமண்முனிவரே யாதல் வேண்டுமென்றும், இவ்வாற்றால் தொல்காப்பியர் கி. பி. கூருயா-ஆம் ஆண்டளவில் இருந்தாராகற் பாலரென்றும் மொழிந்திட்டார்*. இங்ஙனமாகப் பார்ப்பனரும் அவர் வழிச்சார்ந்தார் ஏனைச் சிலரும் ஒருவர்பின் ஒருவராய் எழுந்து, தமிழ்க்குந் தமிழர்க்கும் இயற்கையாயுள்ள தனிப் பெருஞ்சிறப்பினையும் பழைய நாகரிகத்தினையுங் குறைத்து விடுதற்கும், தம்பால் வந்து கலந்த ஆரியரது கூட்டுறவினாலேயே தமிழர் ஓராயிர ஆண்டுகளாகத்தான் சிறிது நாகரிகம் எய்தி வருகின்றார்களென்று காட்டுதற்கும் உண்மை யல்லாதவைகளை உண்மைபோல் எழுதித் தமிழ் மக்களை இழித்துப் பேசி வருகின்றார். தமிழரில் ஆராய்ச்சியுணர்வு வாயாதார் எல்லாம் பார்ப்பனர் உரைக்கும் இப்பொய்யுரைகளிற் சிக்குண்டு, தாமும் அவர்க்குத் துணையாய் நின்று தம்மினத்தவரை வேரறுக்குங் கருவியாய் அவர்க்குப் பயன்றந்து வருகின்றாராலெனின்; அவர்தம் பெற்றி எவ்வாறாயினும் ஆகுக. ஒப்புயர்வில்லாத் தொல்காப்பிய நூலின் உண்மைப் பழமையைக் குறைப்பான் புகுந்த இப்பார்ப்பன ருரைகள் அத்தனையும் பொய் யுரைகளாதலை முறையே வகுத்தாராய்ந்து காட்டுவாம்.

(தொடரும்)

* See the 'Hindu' for the 4th April, 1925.

# கொங்கு நாட்டுத் திருத்தலங்கள்

[கு. குமாரசாமி பிள்ளை யவர்கள்]

பரிதியொடு வெண்மதி பரிக்கவொளி நல்கு
முருகெழு கனற்புதல்வ னுண்டவொரு சோ
லிருசுட ருயிர்த்தவர்க ளாண்டவிரு நாட்டின்
குருவென விளங்கியது கொங்குவள நாடு.

(கச்சியப்ப முனிவர்)

என ஆன்றோரால் மனமார மதித்து வாயார வாழ்த்தப் பெற்றுள்ளதாய கொங்கு மலிந்திலங்கு மிக் கொங்குநன் னாட்டின்கண், நம் சைவசமய பரமாசாரிய மூர்த்திகள் மூவராலும் தேவாரத் திருப்பதிகங்க ளோதித் துதித்துள்ள திருத்தலங்கள் ஏழென்பது குன்றின் மேலிட்ட விளக்குப்போன்று விளங்குவதாம்.

மற்றும் திருக்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகங்களுள்ளும், திருவாசகத் திருமுறை முதலிய சைவத் திருமுறைகளுள்ளும் கூறப்பெறும் வைப்புத் தலங்களாக இக் கொங்கு நாட்டின்கண் தற்போது தெரிவனவற்றின் விளக்கங்களைத் தெரிந்தவரை வரைவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முன்னர்ச்

"சிலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி திருநணு
கொடி மாடச் செங்குன்றூர் தானே"

எனவும்,

"வெஞ்சமரக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின்
மேவுமே ழாம்"

எனவும் வரும் ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் திருவாக்கின்படி வந்துள்ள திருப்பதிகம் பெற்ற திருத்தலங்களின் விளக்கம் ஒரு சிறிது கூறுவல்.

### க. திருவவிநாசி

இத்திருத்தலம், உலகில் நடந்த எல்லா அதியற்புத அருஞ்செயல்களுள்ளுந் தலைசிறந்த தொன்றாக நம் சுந்தரமூர்த்தி சுவாமிகள், "நாட்டாரறிய முன்னாளில் நன்னாளிறந்த வைம்படையின், பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன் தன்னைப் புக்

கொளியூர்த், தாட்டா மரைமீர் மடுவின்கட் டனிமா முதலை நின்று, மீட்டார்" என விதந்தோதப் பெறும் திருவருட் சிறப்பு வாய்ந்ததாகும்.

இத்திருத் தலத்திற்கு முதலையுண்ட மகவை மீட்ட திருவருட் செயலை விளக்கும் திருப்பதிகம் ஒன்றேயுளது. ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகளும் "அரியபொருளே யவிநாசியப்பா பாண்டி வெள்ளமே" யெனத் திருவாசகத்துட் டிருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

இத்திருத் தலத்திற்கு ஈரோட்டிலிருந்து கோயமுத்தூர் செல்லும் இருப்புப் பாதையில் மங்கலம் என்னும் இடத்தில் இறங்கி வடக்கே கற்சாலை வழியாக ஐந்து மைல் தூரஞ்சென்று காணத்தக்கது. என்றும் விநாசமற்றதாதலின் இஃது இப்பெயர் பெற்றது. அம்பிகை சர்வ சம்மார காலத்துத் தவஞ்செய்து பேறுபெற்ற திருத்தலம். தீர்த்தம், காசிக்கங்கை, முதலையுண்ட மகவழைத்த திருக்குளம் ஆகிய இவற்றை யுடையது. பாதிரி தல விருக்ஷம். மாவெனப் புராணங் கூறும்.

## உ. திருமுருகன் பூண்டி

"செற்றார்தம் புரமெரித்த சிலையார் தெய்வத்
　　திருமுருகன் பூண்டியினிற் செல்லும் போதிற்
சுற்றுருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட
　　தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு
முற்றாத முலையுமையாள் பாகன்பூத முதற்கணமே
　　யுடன் செல்ல முடியாப் பேறு பெற்றார்"

என்று நம் சைவசமய குரவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சேக்கிழார் பெருமானார் விதந்து கூறித் துதித்தற்கு ஏதுவாய திருவருட் செயல் நடந்த திருத்தலம். முருகப்பிரான் வழிபட்ட திருத்தலம். இத் திருத்தலத்திற்கு மேற்கூறிய வேடர் பறியாம் திருவருட் பெருமையை உலகிற்கு விளக்கிக் காட்டும் திருப்பதிகம் ஒன்றே யுளது. வாகீசப் பெருந்தகையாரும் தமது திருக்ஷேத்திரக் கோவைத் திருப்பதிக முதற் பாசுரத்துள் "முல்லைப் புறவ முருகன் பூண்டி" எனத் திருவாய் மலர்ந்தருளுதலுங் காண்க. இது முன்னர்க் கூறிய திருவவிநாசியி

னின்றும் மூன்று மைல்தூரம் தென்கிழக்காகச் சென்று காணத் தக்கது.

ங. திருநணா

இத்திருத்தலம் ஈரோட்டிலிருந்து கற்சாலை வழியே வட மேற்கில் ஒன்பது மைல் தூரஞ்சென்று தரிசிக்கப் பெறுவது. தெய்வ நதியாம் காவிரியுடன் பவானிநதியும், உள்ளோட்டமாக அமுதநதியும் கலக்கும் சங்கமுகத் தானத்திலுள்ள பெருமை வாய்ந்தது.

திருவேணி சங்கமம், தக்கணவதரி வனம் முதலிய பல காரணத் திருநாமங்களை யுடையது. இலந்தை தலவிருக்ஷம். திருஞான சம்பந்தசுவாமிகள் திருவாய் மலர்ந்த திருப்பதிகம் ஒன்றினையே யுடையது. இத்தலத்தில் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு புறாக்கள் முன்பிறப்பின் வேண்டுகோட்படி ஒரு வயிற் றிற் பிறந்தே இன்பம் அனுபவித்து முத்திபெற்ற சரிதத்தைக் கேட்போர்க்குத் திருவருளின் பெருமை வெளியாவதுடன் அன்னார் வியப்பையும் எய்தாதிரார்.

ச. கோடிமாடச் செங்குன்றூர்

இத்திருத்தலம் எம்மிறைவன் 'தோலுங் துகிலுங் குழை யுஞ் சுருடோடும், பால்வெள்ளை நீறும் பசுஞ் சாந்தும் பைங் கிளியும், சூலமுந் தொக்கவளையுமுடைத் தொன்மைக், கோல'த் துடன் எழுந்தருளி யுள்ளார். இத் திருத்தலத்திற்குத் திருஞான சம்பந்த சுவாமிகள் எழுந்தருளிய ஞான்று அவர் தம் பரிசனங் கட்கு நளிர் சுரம் வந்தெய்த "அவ்வினைக் கிவ்வினை" யென்னுந் திருநீலகண்டத் திருப்பதிகத்தைத் திருவாய் மலர்ந்தருளி, அந் நளிர் சுரம் அப்பரிசனர்களையும், இந்நாட்டி னுள்ளார்களையும் பீடிக்காமல் அகற்றியருளிய அற்புதம் வாய்ந்தது.

இதற்குத் திருப்பதிகங்கள் இரண்டு. இத்திருத் தலத்தை ஈரோட்டினின்றும் சென்னை போகும் இருப்புப் பாதையிலுள்ள சங்ககிரி ஸ்டேஷனிலிருந்து, தென்கிழக்காக ஐந்துமைல் தூரம் கற்சாலை வழியே சென்று காணப்பெறுவது. திருமலை செந்நிற முடையதாதலின் இத்திருநாமம் பெற்றது. நாகவடிவாயுள்ள தாதலின் "நாககிரி" எனவும் திருநாம முண்டு. எண்ணிறந்த

சுனைத் தீர்த்தங்களுள. அப்பர் திருக்ஷேத்திரக்கோவை. ரு-ம் திருப்பாசுரத்துள்ளும் போற்றப்பெற்றது. பதினோராந் திருமுறையில் "கபிலதேவநாயனார் அருளிச்செய்த" சிவபெருமான் றிருவந்தாதியுள்,

> சிவன்மாட் டகெவெழுது நாணு நகுமென்னுஞ்
> சிவன்மேய செங்குன்றூ ரென்னுஞ்—சிவன்மாட்டங்
> காலிங்கன நினையு மாயிழையீ ரங்கொன்றை
> யாலிங்கன நினையு மாறு.

எனவும் புகழப் பெற்றுள்ளது. முருகப்பிரான் றிருவருள் பெற்ற நம் அருணகிரிநாத சுவாமிகட்கு மிக்க அபிமானத் திருத்தலம்.

## ரு. வெஞ்சமாக் கூடல்

இத்திருத்தலம் சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகட்குப் பொன் தருதற்காகத் தமது திருக்குமாரர்களாகிய மூத்த பிள்ளையாரையும், இளைய பிள்ளையாரையும் ஓர் முதியாளிடம் ஈடாகவைத்துப் பொருள்பெற்றுக் கொடுத்தனரென அங்குள்ள பழம்பாடல்களும் கர்ண பரம்பரைச் சரிதமும், கொங்குமண்டல சதகமுங் கூறுவதால் விளங்குகிறது. இதற்குச் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகம் ஒன்றேயுள்ளது. வாகீசர் திருக்ஷேத்திரக்கோவை அ-ந் திருப்பாசுரத்தும் கூறியருள்கின்றூர்.

இது திருக்கருவூரி லிருந்து 9 - மைல் தூரம் அரவக்குறிச்சி செல்லுங் கற்சாலையிற் சென்று, பின்னர்த் தென்கிழக்காக மணல் வழியில் மூன்றுமைல் தூரம்போய்ச் சிற்றூற்றின் கீழ்க்கரையிற் காணத்தக்கது. ஆலயம் மிகப் புராதனமானது.

## சு. திருப்பாண்டிக் கொடுமுடி

இது காவிரி நதியின் றெற்குக் கரையிலுள்ளது. வாயுதேவனூற் பறித்தெறிந்த மேருகிரியின் கொடுமுடிகளுள் ஒன்றே சிவலிங்கப் பெருமானாக விளங்குவது. இதனை இத்தலத் திருநாமமும், மலைக்கொழுந்தீசர் என்னும் சிவபெருமான் றிருநாமமுமே விளக்குவனவாகும்.

நம் சைவசமய குரவர்களுள் திருஞான சம்பந்த சுவாமிகளும், அப்பர் சுவாமிகளும் திருவாய் மலர்ந்தருளிய பஞ்சாக்

கரத் திருப்பதிகங்கள் மூன்றும் ஓர் தலத்திற் குரியனவாகாமல் பொதுமையினின்று உலகிற்கு நலம் பயப்பனவாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் "கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயின்முன் குறுகிச், சங்கவெண் குழையார் குழைவலஞ்செய்து சார்ந்தடி யிணையினிற் றாழ்ந்து, பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதர்பொன் மேனியை நோக்கி, யிங்கிவர்தம்மை மறக்கவொண் ணுதென் றெழுந்தமெய்க் குறிப்பினி லெடுப்ப."

அண்ணலா ரடிகள் மறக்கினு நாம
வஞ்செழுத் தறியவெப் பொழுதும்
எண்ணிய நாவே யின்சுவை பெருக
விடையறா தியம்புமென் றிதனைத்
திண்ணிய வுணர்விற் கொள்பவர் மற்றுப்
பற்றிலே னெனச்செழுந் தமிழால்
நண்ணிய அன்பாற் பிணிப்புற நவின்றார்
நமச்சிவா யத்திருப் பதிகம்.

என்ற சேக்கிழார் பெருமான் றிருவாக்கின் வண்ணம் "உலகெலாமுய்ய உறுதியாம் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தைத் தனக்குச் சொந்தமாக வுடைய திருத்தலம். இதற்கு திருப்பதிகங்கள் மூன்றும். இவையே யன்றி அப்பர் சுவாமிகள் திருக்ஷேத்திரக் கோவையுள் மூன்றும் பாசுரத்துள்ளும், பத்தாம் பாசுரத்துள்ளும், கூறுவதுடன் கோயிற்புக்க திருத்தாண்டகம் முதற்றிருப்பாசுரத்துட் "கொங்கிற் கொடுமுடியார்" எனவும், திருச்சாய்க்காட்டுத் திருத்தாண்டகம் ஏழாம் பாசுரத்துட் "பாண்டிக்கொடுமுடியுந் தம்மூர் போலும்" எனவும் போற்றப் பெற்றுள்ளது.

இது திருக்கருவூரிலிருந்து ஈரோடு வரும் இருப்புப்பாதை வழியிலேயே யிறங்கிக் காணத்தக்கது.

## எ. திருக்கருவூர்த் திருவானிலை

இது திருக்கருவூர் என்பது திருத்தலத்தின் றிருநாமமும், திருவானிலை யென்பது திருவாலயத்தின் றிருநாமமுமாகும். இதனை,

"தொன்னெடுங் கருவூரென்னுஞ் சுடர்மணி வீதிமூதூர்"

எனவும்,

"அந்நிலை யரனூர்வாழ்வ தரனிலை யென்னுங்கோயில்"

எனவும் வருஞ் சேக்கிழார் பெருமான் றிருவாக்காற் காணலா கும். இத் திருத்தலம் காமதேனு பூசித்துப் பேறு பெற்றது. எறிபத்த நாயனார், சிவகாமி யாண்டார், புகழ்ச்சோழ நாயனார், கருவூர்த் தேவர் முதலியோர் முத்தி பெற்றது. முசுகுந்தச் சக்கரவர்த்தி அரசு புரிந்தது. இதற்குத் திருஞான சம்பந்தர் திருப்பதிகம் ஒன்றே யுளது. (தொடரும்)

---

# பெரியபுராணத் தலைவியர்கள்

[T. S கந்தசாமி முதலியார் அவர்கள், B. A.]

தண்டமிழ் நாட்டுக் கவிஞர் பெருமக்களுள் சேக்கிழார் தனி இடம் பெறுதற் குரியர். கவிச் சுவையுடன் பத்திச் சுவை யைக் கலந்தமுதின் ஊட்டும் நூல்களுள் அப்பெரியார் இயற்றி யருளிய திருத்தொண்டர் புராணத்தின் மிக்கதும் இல்லை; அதற் கிணையாய் நிற்பதும் ஒன்றில்லை. அப் பெற்றித்தாய இனிய நூலுட் கூறப்படும் பெரியார்கள் பலர். அப் பெரியார்களுட் சிலர் பெண்மணிகள். அப் பெண்மணிகளின் சரிதங்களை ஆசிரி யர் சேக்கிழார் கூறுமாற்றிற் கற்பவர் இதயம் களிக்கும். மேலும் அச்சரிதங்கள் கற்பவர் உள்ளத்தை உருக்கி உண்மை நெறியில் நிறுத்தும். ஆதலின் அப் பெண்மணிகளின் சரிதங்க ளைக் கற்றல்வேண்டும். உலகிடை உயிர்த் தொகுதியை உற்று நோக்கின் அதில் ஓர் பகுதி பெண்ணுருவாய் விளங்குவதைக் காணலாம். இறைவன் தன் திருமேனியில் எந்திழைக்கோர் பிரி யாப் பகுதி கொடுத்துள்ளான் என்ப.

சைவசமயம் ஆடவர்க்கென ஓர் ஏற்றமும் மகளிர்க்கென ஓர் தாழ்வும் அமைக்கவில்லை. சைவசமய உரிமைகளுள் ஆடவர் எற்றிற் குரியரோ அற்றிற்கெல்லாம் உரியர் மகளிரும்.

யாண்டு மகளிர் அறிவினும் அன்பினும் சிறந்து விளங்குகின் றாரோ, யாண்டு உடல் நலத்துடன் உளநலமு மோங்கப் பெற் றுள்ளாரோ, யாண்டு முடியமைந்த மன்னர்க்கு மதியமைந்த

அமைச்சர்போல் தத்தம் கணவர்க்கு வாழ்க்கைத் துணையாய் உயிர்த்துணையாய் மன்னி மிளிர்கின்றாரோ, ஆண்டேதான் நாகரிகம் நனியோங்கப் பெற்றுளதெனக் கூறலாம். எம்மனையில் இல்லறம் நடத்தும், தலைவன் தலைவியர்கள், தம் மக்களுடன் வைகறையிற் றுயிலெழுந்து, திருவெண்ணீ றணிந்து, அன்பு கலந்த உள்ளத்தராய் ஒருங்கமைந்து, கேட்போர் செவியிடைப் பாய்ந்து சிந்தையிற் றேக்கி, கல்லினும் வலிய உரத்தையும் கரைக்கும் கடவுட் டன்மை வாய்ந்த தேவார திருவாசகங்களை யும் மற்றுமுள்ள திருமுறைகளையும் இன்னிசையுடன் ஓதுகிறார் களோ அம்மனையே போகங்கள் மாறாதுமலிந்து கிடக்குந்தேவ ருலகத்தினும் தேடிக்கிடையா இன்பங்களுடைய சிறந்த போக பூமி எனலாம். மகளிருடைய நல்லொழுக்கம் நாகரிகத்தின் முதிர்ச்சியைச் சுட்டும்.

மகளிர் இயற்கையால் அன்பிற்கினியர். இல்லற வாழ்க்கையில் ஆடவர் செய்வதறியாது நிலை கலங்குங்கால் அவரை வாட்ட முறாது காப்பதும் மகளிர் தலையன்பே. ஆடவரிடத்தில் பொது வாகக் காணப்படாச் சில சிறப்பியல்புகள் மகளிரிடத்திலுண்டு. மகளிர் இயற்கையில் உணர்ச்சி வயத்தர். உணர்ச்சி வயத்தாரி டத்தே தான் இரக்கமும் உண்டு. அவரே அழகிலும், இசை யிலும், ஓவியத் துறையிலும் நாட்டமுடையராவர். உணர்ச்சி தூய்தா யிருப்பின் அதனை யுடையார் அன்பிற் சிறந்தாராய் ஒழுகுதல் ஒருதலை. அன்பிற் சிறந்தாரும் தூய உணர்ச்சி யுடை யராதலும் ஒருதலை.

'அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாள் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்'

என்று அன்புடையார் தம்மால் அன்புசெய்யப்பட்டாரது துன்பம் கண்டுழித் தாமும் தூய உணர்ச்சியால் மனங்கலங்கிக் கண்ணீர் சொரிகுவர் எனக் கூறினர் திருவள்ளுவ தேவரும்.

'தாயொக்கு மன்பில்'

என்று அன்பின் தலைமைக்குத் தாயின் அன்பையே எடுத்துக் காட்டினர் கவியரசரும். தந்தை யன்பினும் தாயன்பு ஒருவனைப் பிணிக்குந் தன்மையிற் சிறந்தது. சோதர சோதரிகள் அன்

பினைத் துய்த்தறிந்தார்க் கெல்லாம், சோதரிகளின் அன்புமிகச் சிரியதெனப் புலனும். சொல்லரசர் பால் திலகவதியார் வைத்த அன்பின் தூய்மையையும், சீர்மையையும் உற்று நோக்கிஞருள் யாரே அவ்வன்பினை வியவாதார்! அவ்வன்பிற்கோர் அவதியுண் டோ? தூய உணர்ச்சியும் அதன்வழித்தாய்ப் பிறக்கும் அன்பும், ஒருவர்க்குக் காலத்தாலும் இடத்தாலும் சேய்மைக்க ணுள்ள நிகழ்ச்சிகளை அவர் முன்கொண்டு வந்து நிறுத்தி அவரைக் காணுமாறு செய்யும். அத்தூய உணர்ச்சியே இறைவனைக் காணச்செய்யும் சேய்மைக் காட்சிப்பொறி; பத்திக்குக் கார ணம். முன் தம்முட் பகைமை கொண்டிருந்தாலும், மக்கள் தூய உணர்ச்சிபெற்ற ஞான்று, பகைமை மாறி அன்பினுற் பிணிப்புண்டு இன்புற்று வாழ்வர், ஆனுயர் வேய்ங்குழல் கொண்டு இன்னிசையால் திருவைந் தெழுத்தை ஓதி இசைவாரி யைப் பெருக்கியபோது, அங்குள்ள பிறப்பு முதல் தம்முட் பகைமை கொண்டுள்ள உயிர்கள் அவ்விசை வாரியிற் படிந்து அவ்விசையின்வழி அவை ஒருமுகப்பட்டு நின்று, தூய உணர்ச்சி யில் இயங்கிப் பகைமை நீங்கி அன்புடன் கலந்து நின்றன என்று ஆசிரியர் சேக்கிழார் அழகொழுகக் கூறியுள்ளார்.

'நலிவாரு மெலிவாரு முணர் வொன்று நயத்தலினுல்
மலிவாய் வெள்ளெயிற் றரவம் மயில்மீது மருண்டுவிழும்
சலியாத நிலையரியும் தடங்கரியு முடன் சாரும்
புலிவாயின் மருங் கணையும் புல்வாய புல்வாயும்'

ஆடவரினும் மகளிர் இயற்கையில் அன்பிற் சீரியர் என் பதையும், தூயவுணர்ச்சியுடன் கலந்த அன்பே மெய்ப்பொரு ளைக் காணுமாறு செய்யும் என்பதையும் புலப்படுத்தும் கதை யொன்றுண்டு. அதையீண்டுக் கூறுதல் தகும். அக்கதை பின்வரு மாறு: பண்டொரு நாள் கண்ணன் பொருட்டு அவனடியார் கூடி வேள்வி செய்தனர் என்றும், அப்போது வேள்வி நாயக னும் அக்கண்ணனே அவ்வேள்விச் சாலையிற் றேன்றி பலபகல் உணவுமாறிப் பசியால் வருந்தி உணவில் பெரும் வேட்கை கொண்டான்போல் அவரிடம் உணவு கேட்டு நின்றுனென்றும், அன்பின்மையாலும், மெய்யுணர்ச்சி யின்மையாலும் அவ் வேள்வி வினைஞர் அங்கு நிற்பான் கண்ணன் என்று அறியாது

கண்ணனுக்கு வேள்வியுணவை அளித்த பின்தான் அவற்கு உணவளிக்கப்படுமென மறுத்துக்கூறி அவனைப் போக்கினர் என்றும் அங்குநின்றும் அக்கண்ணன் உடனே அவ்வடியார் மனைவியரிடத் தெழுந்தருளி உணவு கேட்க, அவன் வடிவிற் சோர்வைக் கண்டு ஆற்ருது, தங்கள் நாயகர் காணின் அவர் உணவளியாரென உட்கொண்டு, தாமே அவ்வேள்விச்சாலையுட் புகுந்து உணவின் வகைகள் பலவற்றையும் கரவாக வாரிக்கொடு வந்து அக்கண்ணற் கன்பொடு ஊட்டினர் எனக் கூறுப. மகளிர் அன்புடையாரென்பது உளநூற்புலவரும் கண்ட உண்மை.

---

# பரதர்

[மு. சி. பூரணலிங்கம்பிள்ளை அவர்கள், B. A., L. T.,]

பரதர் என்பது துஷியந்த மகராசனுக்குச் சகுந்தலையினிடமாய்ப் பிறந்த பூர்வ சந்திரகுலப் பரத சக்கரவர்த்தியின் வழித் தோன்றல்களையே குறிக்கும் பெயராக வழக்கிலிருந்து வருகின்றது. 1891 ல் பதிப்பிக்கப்பெற்ற 'பரதகுல பாண்டியர் பழமை' என்ற புத்தகத்தில் பக்கம் 4, 68 ல் பரதர், பரதவர், பரவர் என்பன ஒரு பொருள் குறிக்கும் பலகிளவிகளெனக்கூறப்பட்டிருக்கின்றது. அஃது எத்துணை உண்மை யென்பது ஆராயற்பாலது. நெய்த நிலமாக்களின் பெயர்கள் பல திவாகரத்திற் காணப்படுவதில் பரதரும் பரதவரு மொன்றென்று விளங்கவில்லை. மக்கட் பெயர்த் தொகுதியில் 'பரதவர் நுளையர் கடலர் வலையர் சலவர் திமிலர் நெய்தல் நிலமாக்கள்'' என்றே காணுகின்றேம். பரதர் என்ற சொல் அப்பெயர்களி லொன்ருகத் தரப்படவில்லை. திவாகரத்தில் பரதர் என்ற கிளவி செட்டிகளைக் குறிக்கும் பல பெயர்களி லொன்ருகக் கொடுக்கப்பட் டிருக்கின்றது. 'இப்பர்' பரதர், வைசியர், கவிப்பர், எட்டியர், இளங்கோக்கள்' இத் தொடக்கமுடையது அச் செய்யுள். வின்சுலோ, இராட்லர் அகராதிகள் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்டுள.

''பரதர்'' பெயர்ச் சொல், பன்மை ஒருமை. 'பரதன்' பெண்பால் 'பரத்தி' முத்து சங்குமீன் முதலிய பகுப்போராகையால் கடற்கரை யோரமாய் வசிக்கிறவர்கள். அல்லது நெய்த நிலமாக்கள். இன்னம் விவரமறிய வேண்டில் 'பரதவர்' என்னு மொழிக்கு (சாதாரணமாய் அல்லது வழக்கமாய் 'பரவர்')

கடற்கரை யோரமாய் வசிப்போர், முத்து, சங்கு, மீன் முதலிய படுப்போர். "பரதன் என்னு மோரரசன் முதல் இவர்கள் பரத ரேன்று அழைக்கப் படுகின்றார்கள்" இது பெரும்பிழை. பரவன், பெண்பால் பரத்தி என்பது வழக்கு. பரதன் என்ற அரசன் மனைவிக்குப் பரத்தி பாற்பெயர் பொருந்தாது. உவின்சிலோ பாதிரியாருடைய பிழை புத்தக வடிவமாய்ப் பெருகிற்று. ராட்லர், வீரமாமுனிவர், இப்பிழையைப் பரப்பினர் போலும். இம்மே னுட்டாராக்கிய அகராதிகள் தக்க மேற்கோள்களாகா. சேந்தன் திவாகரமே முந்தினது. நிகண்டுகள் பல பின் வெளிவந்த நூல் கள். திவாகரத்தில் பரதர் பரதவர் ஒன்று என்று கூறப்பட வில்லை. முற்றிலும் வேறுபட்ட வகையாரென்றே துலங்குகிறது. 'பழமை' நூலாசிரியர் பரதவர், பரவர் சந்திர குலத்தவரென் றும், பட்டங் கட்டிகளென்றும், பாண்டியவரசர்கள் பரதவர்க ளென்றும், பரதரே பரதவரென்று ராட்லர், பெஸ்கி வகையார் கூற்றை பின்பற்றித் துணிந்து கூறியுள்ளார். அவருடைய எடுத்துக் காட்டுகள் அத்துணைப் பொருத்த முடையனவாகத் தோன்ற வில்லை. பாண்டியர் பரதகுலத்தவராக இருந்திருக்கலாம். பரதர் பரதவரே யென்பதற்குத் தக்க ஆதாரமில்லை: 'பழமை' நூலா சிரியர் நெய்தல் நிலமாக்களில் பரதவர் தலைவரென்றும் ஏனைய பெயருள்ளார் தாழ்ந்தவரென்றும், வெள்ளாளர் என்ற பெயர் பயிரிடும் பலமக்களைக் குறிப்பினும் உழவரி லுயர்ந்தோராகிய வேளாள வகுப்பினரையே குறித்தல் சான்றென்றும் வரைந்து ளார்.

சங்கநூல்கள் பரதர் பரதவரைப்பற்றி யாது கூறுகின்றன வென்று ஆராய்வாம்.

'திண்டிமில்தன் பரதவர்' (24)

கூம்பொடு

மிசைப்பாய் களையாது மிசைப் பரந்தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅ
ரிடைப்புலப் பெருவழிச் சொரியும்' (30)

'தென்பரதவர் மிடல் சாய
வடவடுகர் வாளோட்டிய' (378)

இம் மூன்று புறப்பாட்டும் பரதவர் நுளையராகிய நெய்தல் நிலமாக்களையே குறிப் பிடுகின்றன. புறம் 24ன் உரையில் 'திண்ணிய திமிலையுடைய வலிய நுளையர்' என்றும், புறம் 30ல் 'பெரிய மரக்கலத்தைப் பரதவரும் அளவரு முதலாகிய தகுதி யில்லாதோர்' என்றும், 378-ல் பரதவர் வலிகுறைய என்றபொரு ளிலுமே பரதவர் என்ற சொல் வழங்கப்பட் டிருக்கின்றது.

பத்துப்பாட்டு மதுரைக் காஞ்சியில் 'தென் பரதவர் போரேறே' என்ற விடத்து 'தென்திசைக்கண் வாழும் பரத வர்க்குப் போர்த் தொழிலைச் செய்யும் ஏருயவனே. இதனுற் பரதவரைத் தனக்குப் படையாக அடிப்படுத்தினமை கூறினுர்.' என்று பொருள் கூறப்பட் டுளது. மேலும், உரையாசிரியர் 'பரதவர்' 'தென்றிசைக்கட் குறுநில மன்னர்' என்றெழுதுவ தால் பேரரசராகிய பாண்டியர் பரதவரல்லரென்பது வெளியா கும். அன்றியும், அதே பாட்டில் அடி 317-ல் 'பரதர் தந்த பல் வேறு கூலம்' என்றதற்கு உரைகாரர் 'செட்டிகள் கொண்டு வரு தலான் மிக்க பலவாய் வேறுபட்ட பண்டங்கள்'என்றுபொருள் கூறப்பட்டிருப்பதால் பரதர், பரதவர் வெவ்வேறு வகுப்பின ரென்று ஏற்படுகின்றது.

சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்த காதை, அடி 25 'மீன்விலைப் பரதவர்' என்று தரப்பட்டிருத்தலை யுற்றுநோக்குழி பொருள் வெளிப்படை. உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் 'பரதவர்' (நெய்தனில மாக்கள்) என்று வரைந்துளார். அதே காதையில் அடி 158, 'அரசகுமரரும் பரதகுமரரும்' என்பதற்கு 'அரசகுமரரும் வணிகர் குமரரும்' என்ற பொருள் பரதர் வேறென்பதை வற்புறுத்தும்.

திவாகரத்திலன்றி பின்னர் மண்டல புருடரா லாக்கப் பெற்ற சூடாமணி நிகண்டிலும் பரதர், பரதவரும் ஒருவரே யென்று சொல்லவில்லை.

'பரதவர் நுளையரோடு பஃறியார் திமிலர் சாலர்
கருதிய கடலர் கோலக் கழியரே நெய்தன் மாக்கள்' (78)

தமிழ்ச் செல்வர்கள் இதனை நன்கு ஆராய்ந்து தெளிவித் தல் பற்றியே இக்கட்டுரை வரையப்பட்டுளது.

# * தோலாமொழித் தேவர்

[S. அக்கினீச்சுவரப்பிள்ளை, B. A.,]

தமிழ்மொழி வரலாற்றை, ஆசிரியர் பலரும் பலவாறாக இயற்கைப் பகுப்புகளாகப் பிரித்திருக்கின்றார்கள். அவற்றுள் திருவாளர் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் தமிழ் மொழியின் கால நிகழ்ச்சியை,

1. அபோத காலம் வரிவடிவின்றி ஒலிவடிவு மாத்திரமாய் நின்ற காலம்.

2. அட்சர காலம் அகத்தியரால் நெடுங்கணக்கு ஏற்பட்டது முதல் அகத்தியம் நிறைவேறியது வரை.

3. இலக்கண காலம் தொல்காப்பியன் முதலிய பன்னிரு இலக்கண வாசிரியர் காலம்.

4. சமுதாய காலம் அல்லது சங்க காலம். தலை, இடை, கடைச் சங்க காலம்.

5. அநாதார காலம் அல்லது புத்தர் காலம். சங்க காலத்தின் பின் தமிழை ஆதரிப்பாரின்றி யிருந்தகாலம்.

6. சமண காலம் சங்கத்தின் பிற்காலம் சமணர் தலைப்பட்டது. தாயிறந்த பெண்ணிற்கு ஒரு சிற்றன்னை வாய்த்தது போலும் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

7. இதிகாச காலம் இராமாயணம் பாரதம் முதலிய புராண காவியங்கள் எழுந்த காலம்.

8. ஆதீன காலம் இது சந்தான குரவர் காலமுதல் திருவாவடுதுறை முதலிய ஆதீன பண்டார சன்னிதிகள் தமிழை வளர்த்த காலம். என எண் கூறாகப் பிரித்திருக்கின்றார்கள்.

---

* இக்கட்டுரை சென்னை இராஜதானிக் கல்லூரியிலுள்ள பவல் மூர்கெட் தமிழ்ப் பரிசுப் பரீட்சைக்கு எழுதப்பட்டு ரூபா 150 பரிசளிக்கப் பட்டது.

9. ஆதீனங்களுந் தமிழைக் கைவிட்ட தற்காலம்.

அந்தோ! தமிழை ஆதரிப்பார் தற்காலத்து யாவருமின்றி உருக் குலைந்து விட்டதே. கல்விக் கடலின் கரை கண்டோமென எம். ஏ., பி. ஏ. பட்டம் பெற்றாருஞ் செந்தமிழில் மூன்று வார்த்தை முறையே பேசுவது அரிதாகி விட்டதென்றால் சாமானிய மனிதரைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இனியேனும் பல்கலைக் கழகத்தார் (University) துயில் நீங்கித் தமிழை ஆதரிக்க முன் வருவார்களென்று நம்புகிறோம்.

## The Age of Jains—சமணர் காலம்

சங்க காலத்தின் பின் தமிழை ஆதரிப்பாரின்றி ஈனநிலை யடைந்த காலத்துக் கைகொடுத் துதவியவர் சமணரென்று முன்னரே கூறினோம். நமது ஆசிரியர் தோலாமொழித் தேவர் அக்காலத்தின ராதலால் சமண காலத்தைப் பற்றி ஆராய்வாம்.

கி. மு. ஆறாவது நூற்றாண்டில் வட இந்தியாவில் புத்தர், மகாவீரவர்த்தமானர் என இரு மகான்கள் தோன்றி முறையே பௌத்த மதத்தையும், சமணமதத்தையும் நிறுவினர். சமணர் பல திசைகளிலும் சென்று தம் மதத்தைப் பரப்பினர். இவர்கள் தாம் சென்ற இடமெல்லாம் அங்கங்கேயுள்ள மொழிகளைக் கற்று வல்லவராகி, அம்மொழிகளில் தம் சமய நூல்களை வெளியிட்டுத் தேச மொழிகளைச் செழிக்கச் செய்தனர் என்பது இந்திய இலக்கிய சரித்திர ஆராய்ச்சியில் உள்ளங்கை நெல்லிக்கனி போலாகும்.

தெற்கே சென்ற சமணர் தமிழை ஆராய்ந்து பல அரிய இலக்கண இலக்கிய நூல்களை வெளியிட்டனர். அவை ஸ்ரீ புராணம் சத்திய சிந்தாமணி போன்ற வசன நூல்களும், சூடாமணி திவாகரம் பிங்கலம் போன்ற நிகண்டுகளும், சிந்தாமணி சூளாமணி போன்ற காவியங்களும், நாலடியார் பழமொழி அறநெறிச்சாரம் போன்ற சர்வ சமய சமரசமான நீதி நூல்களும், நேமிநாதம் நன்னூல் யாப்பருங்கலம் முதலிய. இலக்கணங்களுமாம்.

இன்னோரன்ன சமணர் தமிழிற்கு என்ன உதவி செய்தன ரென்று ஆராய்வாம். சமணர் வடமொழியில் வல்லுநராய் வட நாட்டினின்றும் தென்னாட்டிற் குடியேறினர். தங்கள் மதக் கொள்கைகளையும் நூல்களையும் நன்கு ஓதியுணர்ந்தவராதலின் தமிழை ஐயந் திரிபறக் கற்று, தம்மதக் கொள்கைகளை தமிழர் எளிதில் அறியும் வண்ணம், முதனூலாகவும் வழி நூலாக வும் பல இயற்றினர். தம் நாட்டு மொழியாகிய வட மொழியைத் தமிழுடன் விரவி மொழித் தொகையை அதிகப் படுத்தினார்கள். மணிப்ரவாள நடையில் கத்திய ரூபத்தில் பல நூல்கள் இயற்றி வசன நூல்களுக்கு அடி கோலினார்கள். இவற்றோடு நில்லாது சுவையெலாம் செறிந்து விளங்கும் காவி யங்கள் பல இயற்றினர். தமிழில் முதன் முதல் விருத்தத்தில் பாட்டு இயற்றியவர்கள் சமணப் புலவர்களே யாவர். ஆதி காலத்து இலக்கணங்கள் அருமையிற் பெரியவையாய் இருந் தமையான் அவற்றை யாவருக்கும் எளிதிற் புலப்படும்படி நன் னூல் முதலிய இலக்கணங்களைத் தொகுத்தனர். பல் பொருள் கொண்ட ஒவ்வொரு மொழியையும், இலக்கியம் கற்பாருக்கு உதவும்படி தொகுத்து நிகண்டுகளாக வெளியிட்டனர். இன்னோ ரன்ன பேருதவி புரிந்து மொழியை வளர்த்த சமணருக்குத் தமிழ் என்றும் கடைப்பா டுடைத்தாம்.

இசை நாடக சம்பந்தப் பட்ட மட்டில் சமணர் காலத்தை ஆங்கில இலக்கிய சரித்திரத்தில் (Age of Puritans) பியூரிடன் காலத்தோடு ஒருவாறு ஒப்பிடலாம். பியூரிடன் எனும் மதத் தார் மதக் கொள்கைகளையே பிரதானமாகக்கொண்டு நாட கங்களைத் தாம் எழுதா திருந்ததுமன்றி அவை நடைபெறு வண்ணமும் செய்தனர். அவ்வாறே சமணர் காலத்தும் இசைத் தமிழும் நாடகத் தமிழு தழைத்தோங்க வில்லை. சமணர்கள் 'முற்றத்துறந்த முனிவர்களாய் மக்களுக்குள் ஒழுக்கச் சீர் திருத்தம் செய்யப் புகுந்து உலக வாழ்க்கைக்கு அறம்பொருள் இன்பம் என்ற மூன்றுஞ் சிறந்தனவா' மென்னு முண்மையுண ராது, 'அறமே யாவருக்கும் பின் பற்றுதற்குரியது மற்றின்பம் கைவிடுதற் குரியது' என்று எடுத்தோதி இன்பத்தைக் கடிய

வேண்டு மென்று வற்புறுத்தினர். அதன் பயனாக அநேக இசை நூல்கள் அழிந்து போயின. இன்னும் 'நாடகங் காண்பதால் காமமே அறிவிலும் மிகப் பெருகுகின்றது' என்ற போலிக் கொள்கையைக் கொண்டு சமணர்களும் ஆரியர்களும் நாடகத்தைக் கடிய வேண்டுவனவற்றுள் சேர்த்துக் கூறினராம். இன்னும் அக்காலத்திய அரசர்களுக்கு இம்மாதிரி எடுத்துரைத்துத் துற்போதனை செய்த காரணம் பற்றி நாடகத்தமிழும் மடிந்தது. இம்மாதிரி பண்டிதராலும் பாவலராலும் கடியப்பட்ட நாடகத்தமிழ் பாமரர் கையகப்பட்டு இழிவடைந்து தெருக்கூத்தளவிலே நின்றது.

சங்க காலத்தின் பின், தமிழ் நாட்டில் அந்தகார மேற்பட்டபோது, அவ்விருள் நீங்கி ஒளி வீசச்செய்தவர் சமணரே. தற்காலத்தில் பாண்டி நாட்டில் சமணர் காணப்படவேயில்லை. தென்கன்னடம் வட ஆற்காடு தென்னாற்காடு முதலிய ஜில்லாக்களிற் காணப்பட்டாலும் அவர்களுடைய ஜனத்தொகை குறைந்துவிட்டது. கலைமகள் அவர்களை விட்டு நீங்கவும் திருமகள் அவர்களை யடைந்தனள். சமணர் பலர் பம்பாய் மாகாணத்தில் செல்வச் சீமான்களாய் வாழ்கின்றனர். சமணர்கள் தம் முன்னோரியற்றிய நூல்களின் ஏட்டுச்சுவடிகளை மகாமகோபாத்தியாய சுவாமிநாதய்யர், தாமோதரம் பிள்ளை போன்ற வெளியிடு மாசிரியருக்குக்கொடுத்துதவியதாக அறிகிறோம். அவையெல்லாம் அச்சேறுமாயின் தமிழுலகிற்குப் பெரும்பயன் விளையும்.

## தோலா மொழித் தேவர்

சமண ஆசிரியருள் தலையாய் விளங்கி யவருள் தோலா மொழித் தேவர் ஒருவர். 'தேவர்' என்பது பெரும்பான்மையும் சமண முனிவர்களுக்குப் பெயராய் வழங்கும். சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர் என்பதை நோக்குக. தேவர் என்ற பெயரான் திருவள்ளுவரையும் சமணர் தம்மதத்தின ரென்பர்.

நூலாசிரியரையும் உரையாசிரியரையும் அவர் தம் இயற்பெயர் கொண்டழையாது மற்றொரு காரணம் பற்றிய பெயரால் அழைப்பது முற்காலத்திய வழக்கமாயிருந்தது. உதாரணமாக, திருக்கோவையார் உரையாசிரியர் 'பேராசிரியர்' என்றே வழங்கப்படுவார். அதுபோலவே 'இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்' எனும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கிணங்க 'தோல்' என்பதனைக் கூறும் மொழியினையுடையார் என்ற காரணப்பெயரிடப்பட்டு நமது ஆசிரியரும் வழங்கப் பட்டன ரென்றே திரு. பலராமையரவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இன்னும் பழைய நூல்களுக்கும் ஆசிரியருக்கும் செய்யுட்களிற் பிரயோகித்த அருமையான தொடர் மொழி காரணமாகப் பெயர் வழங்கினதாகவுந் தெரிகிறது. 'கல்பொரு சிறுநுரையார்', 'மீனெறி தூண்டிலார்' 'தேய்புரி பழங்கயிற்றினார்' என்ற புலவர்கள் பெயரும் அவர்கள் உபயோகித்த மொழிகளால்வந்தனவாம் அவ்வாறே சூளாமணி ஆசிரியரும் தோல்வியடையாத என்ற பொருளில் 'தோலா' என்ற சொல்லை 'ஆர்க்குந் தோலாதாய்' 'தோலா நாவிற் சுச்சுதன்' என்ற இடங்களில் உபயோகித்தமையால் 'தோலா மொழித் தேவர்' என்றபெயர் பெற்றனர் எனலும் பொருந்தும். இவ்விரு காரணங்களாலும் ஆசிரியர் பெயர் காரணப்பெயர் என்றே துணியலாம்.

(தொடரும்)

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[தமிழாசிரியர் பாலசுந்தரனவர்கள்]

'திருவருட்பா' என்னும் இராமலிங்க அடிகளின் சைவத் தமிழ் அருணூலை எல்லாரும் அறிவர். இது சிவபிரான் ஒருவனையே முழுமுதற் கடவுளாகத் தேறி வழுத்தும் வணக்கப் பாடல்கள் ஏறக்குறைய பத்தாயிரங் கொண்டது. அவை ஆறு திருமுறைகளாக வகுக்கப்பட்டு முந்நூற்றறுபத்தைந்து தலையங்கங்களுக்கு மேலும் உடையவாயிருக்கின்றன. ஒவ்வொரு தலையங்க

களும் ஒருவரம்பின்றி நூற்றுக்கணக்கான பாட்டுக்களையும் பெற்றுள்ளன. இச்செந்தமிழ்ப்பாடல்கள் வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பாவாகிய பாவினத்தின் பல துறைகளாலும் இசைக்கப் பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றும் சொல் பொருள் இசை முதலிய எல்லாச் சுவைகளிலும் ஒன்றை யொன்று ஒவ் வாவாய் எந்நலங்களும் ஒருமிக்கக் கெழுமிப் படிப்பார் நெஞ்சை இழுத்து ஒடித்துச் சிவத்தின் திருவடிக்கண் அழுத்தி உருக்குந் தன்மையவாய் மிளிர்கின்றன. இவ்வகையாய் அமையப்பெற்ற அருட்பாவின் அப்பத்தாயிரம் பாடல்களையுந் திருவருளை முன் கொண்டு ஒருவாறு நோக்குகையில்.

"அடியேற்கு
அருளியது அறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்லகில்லேன்
செழுந்தண் பால் கடல்திரை புரைவித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம் ததும்ப
வாக்கு இறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்"

என்று நம் மணிவாசகப் பெருமான் தமக்குக் கைவரப்பெற்ற சிவநுகர்ச்சி நிலையைக் கூறமுடியாது கூறுவதாகிய திருவாசகச் செழுமறையடிகள் கல்லினுங் கடிய வன்நெஞ்சுடைய அடிமைக் கும் ஒருவாறு ஒக்கும் என்பது மிகையாகாது.

அருட்பாவை அருளிய அடிகள் இனச் சமய இழிவுகளை முழுதுந் தொலைத்து, "அருளே நம் குலம், அருளே நம், இனம் அருளே நாம்" (௬, அருட்பெருஞ்சோதி அகவல்) என ஒழுகித் "தேவா! நின் பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில் யார் உளர்? நீ சற்றே அறை" (௬, சமரசநிலை, கக) என்று அவர் கள் கூறியவாறே இறையருளை முழுதும் விழுங்கித் தம் உடலுயி ரெங்கும் அவ் அருளமிழ்து நிறைந்து தளதளவென வழியுநிலை யில் இலகும் அருட்பழ முதல்வராதலின், அவர்கள் கனிந்து உமிழ்ந்த அருந்தமிழ்ப் பாக்களின் ஒவ்வொரு மொழியும் இறை யருட் பிழிவைப் பயில்வார் நெஞ்சில் அறிதொறறியாமையாய்

இனிப்ப இனிப்ப ஊறி ஊறிச் சொட்டுகின்றன. மேலும் இப்பெரியார், தம்முட் குழுவிய பேரருளைக் கொண்டு சிவத்தை இடையறாது சுவைபடப் பாடிப்பாடி மகிழ்வதில் அளவுகடந்த அவா உடையவர் என்பது, "இன்பத்தனி நடம்செய் இணைத்தாள் தவலரும் சீர்ச் சொல்மாலை வனைந்து வனைந்து தானுகி நானுடைத் தருணம் இதுதானே" (சு, பிரியேனென்றல், கக) "பகம்பெறத் தேம்பழம் பிழிந்து பாலும் நறும்பாகும் பசுநெய்யும் கலந்ததெனப் பாடி மகிழ்வேனே" (சு, அத்துவிதாநந்தத் தநுபவ விடையீடு, ச) என்பவையாலும், அங்ஙனம் பாடும்பொழுதும் தமது மெல்லுள்ளம் எரிகண்ட இழுதுபோல உருகிக் கண்கள்வழி ஆறுய்ப் பெருகப் பாடி வழுத்தும் விழுமியார் என்பது, "நின் இன் அருளை நினைந்து கார்பூத்த கனமழைபோல் கண்களில் நீர்சொரிந்து கனிந்து மிகப்பாடுகின்ற களிப்பை அடைந்தனனே" (ச, ஆநந்தமாலை, அ)

"இருத்திக்கருத்தில் உன்தயவை எண்ணுந்தோறும் அந்தோஎன்
இதயம்உருகித் தளதளஎன்று இளகிஇளகித் தண்ணீராய்
அருத்திப்பெருநீர் ஆம்றெடுசேர்ந்து அன்புப்பெருக்கில் கலந்ததுதான்
அதுவென்றுஒன்றும் தோற்றுதே அச்சோ அச்சோஅச்சோவே"
(சு, அமயங்கூறல், ரு)

என்பவையாலும் நன்கு தெளியப்படும். இவ்வாறெல்லாம் வள்ளலார்தம் அருளுயிர்க் கடலிலெழுந்து அவர்கள் விருப்பெனுங் குளிர்ங்காற்றிற் படிந்து குவிந்து கறுத்து இறைவன் திருவடிமலையைத் தாவிக் குமுறி மழையாய்விழுந்து செந்தமிழ் மண்சுவையூறித் திரண்டதாலன்றோ, அத்தெளிநீ ரமிழ்தத் திருவருட்பா மறைகட் கெல்லாம் பெருமறையாய்ப் பொது மறையாய்த் தமிழ் மறையாய்த் தனிமறையாய்ச் சிவமறையாய்ச் சிறந்து விளங்குகின்றது. ஆதலினன்றோ அதனைச் சிவமும் விருப்பொடு ஏற்றது. இவைகள், "விரவிக்களித்து நாத்தடிக்க விளம்பி விரித்த பாட்டெல்லாம் வேதாகமத்தின் முடிமீது விளங்கும் திருப்பாட்டு ஆயினவே" (சு, அமையங்கூறல், அ) எனவும், "ஏதாகுமோ எனநான் எண்ணி இசைத்த எலாம் வேதாகமம் என்றே மேலணிந்தான்" (சு, பாமாலையேற்றல், ௩) எனவும்

வரும் அடிகள் உரைகளாலேயே துணியப்படும். உலகில் எழுந்த எல்லா மொழிகளையும்விட மென்மையும் இனிமையுந் தழுவி யொழுகுந் தமிழே அம்மென்மையும் இனிமையுங்கெழுமி யியலும் அருளியலை விளக்குதற்கு ஏற்றதென்று அடிகள் அதிற் பாட விழைந்தமை, "மெய்யடியார் சபைநடுவே எந்தை! உனைப் பாடி மகிழ்ந்து இன்புறவே வைத்தருளிச் செந்தமிழின் வளர்க் கின்றாய்" (ஃ, திருவருட்கொடை, ௬) என்னும் அவர்கள் திரு மொழியால் இனிது விளங்கும்.

இன்னும் இவ்வருட் பெருநூல் புதிது தோன்றியதால், இஃது இக்காலத்து இயற்கைக்கு ஏற்ப மிகமிகத் தெளிந்த எளிய சொற்களால் அருளப்பட் டிருக்கின்றது. எனினும், பெரிது கற்றார்க்கும் ஊக்கந்தருங் "காதரவு," "புதம்," "பொத்து," "எட்டை," "தெட்டு," "விது," "சனிப்பு," "சோறு," "சிவம்," முதலான அருஞ் சொற்களும் இதன்கண் இல்லாமல் இல்லை. இவை பிங்கல நிகண்டிலுங் காணப்படா. சில காணப்படினும் அவைவேறு பொருளின் மேலவாய் நிற்கின் றன. பழமுத லிலக்கியம் பயின்றார்க்கும் இவை தம்மை ஆராய்ந்து உரியபொருளை வழியுடன் தேறுதல் அரிது. இங்ங னமே அரிதுணர் பொருளனவாய்த் "தாவக்குகுகுதகுகுகுகுத் தாமே ஐந்து விளங்க அணி" (க, இங்கிதமாலை, கரு௬),

"நீர்க்கு இசைந்த நாமநிலைமூன்று கொண்டபெயர்
போர்க்கு இசைந்தது அறியாப் புன்நெஞ்சே—நீர்க்கு இசைந்தே
ஒன்றுஒன்று ஒன்றுஒன்று ஒன்றுஒன்று ஒன்றுஒன்று தில்லைமணி
மன்று ஒன்று வானைமகிழ்ந்து" (ஃ, நெஞ்சொடுகூறல், உ),

"தம்மை மதன் மாமாமா மாமாமா மாமாமா மாமாமா மாமாமா மாமாமாமா" (௬, வெறிவிலக்கு) முதலான சில பல தனிப் பாடல்களும் இதில் ஆங்காங்குத் தோன்றுகின்றன. இதன் சந்தப் பாடல்களெல்லாம் விந்தை பயப்பன. வினாவிடை யாகப் பாடாண்டினை கூறும் இதன் இங்கிதமாலை அறிஞர்க்கு விருந்தாக ஆசிரியரின் புலத்துறை விளங்க அமைந்துள்ளது. "மான்ற மலத்தாக்கு" "இற்றவள்" "பனிமை" "கன்மை"

"குளங்கொளக் கண்ணன்" "கனியுஞ்சிலே" முதலியவாகப் புதிது சமைக்கும் சில சொல்லமைப்புகள் ஆசிரியரின் ஆற்றலைக் காட்டுகின்றன. "அங்கலிட்டகளம்" முதலிய பிரித்தற்கரிய சில சொற்றொடர்ப் புணர்ச்சிகளும் அங்ஙனமே விடாது உயிரைப் பற்றிய மலம் அலைத்தும் அடங்கியும் நிற்றலால் அதை விளக்குதற்கு அங்ஙனமே விடாது வானத்தைப் பொருந்தி அலைத்தும் அடங்கியும் நிற்குங்காற்றை உவமையாகக் கொண்டு, "வானம் விடாது உறுகால்போல் என்றன்னை வளைந்துகொண்ட மானம் விடாது" (க, திருவருண் முறையீடு, சகூ) என்றும், முழு அறியாமைய தாதலால் ஆணவத்தை முழு இருட்டாகவும்; அதனை நீக்குவதானாலும் மறைப்பு முடைமைபற்றி மாயையை விடியற்கால இருளாகவும் உருவகமாகக் கொண்டு, "ஆணவ இருள் போய் அழிந்தது கழிந்தது மாயைமால் இரவு" (௬, திருப்பள்ளி யெழுச்சி, ங) என்றும் அருளியது போலப் பலப்பல உவமை உருவகங்கள் சிலநூலிற் போலாது இயற்கை நலங் கனிந்து இயல்கின்றன. விண்ணப்பக் கலிவெண்பாவில் எதுகைத்திறம் எதிர்ந்து நிற்கின்றது.

அருட்பாவில் அருள்நலமே ஒடிந்து ஒடிந்து ஒழுகுதலின், அதற்குத் தகக் "கொழுது," "செழுது" முதலான மென்தமிழ்ச் சொற்களுங் "கொழிதரு மருவி பொழிதருந் தணிகை," "பொழில்சாரெழில் சேர் தணிகாசலனார்" வாழையடி வாழை," "இளவேனின் மாலையாய்," "அருளே பழுத்த சிவதருவில் அளிந்த பழந்தந் தடியேனை" என்பனவாக மொழுமொழுவென வழுக்கியலும் இன்னோசைத் தொடர்களுமே அதன் கண் மிகுந்து தோன்றுகின்றன. சொற்களுந் தொடர்களுமே யல்லாமல்,

"மாவீழ்ந்திடு விடையார்திரு மகனூர்பசு மயின்மே
னீவீழ்ந்திட நின்றூரது கண்டேனென்ற னெஞ்சே
பூவீழ்ந்தது வண்டேமதி போய்வீழ்ந்தது வண்டே
நாவீழ்ந்தது மலரேகழை நான்வீழ்ந்தது மலரே"

(இ. பவனிச்செருக்கு, க)

"தாழைப்பழம் பிழிபாலொடு சர்க்கரைச் சாறளிந்த
வாழைப்பழம் பசுநெய்ந் நறுந்தேனும் மருவச்செய்து
மாழைப் பலாச்சுளை மாம்பழமாதி வடித்தளவி
யேழைக் களித்தனையே யருளாரமு தென்றென்றையே"
(சு, மாயை நீக்கம், உ)

என்பவை போன்று சொற்சுவையும் பொருட்சுவையும் செய்யுண் முழுதுங் கெழுமி மிளிர்கின்ற இடங்களும் அருட்பாவிற் பெரும்பாலன. இவ்வாறு நூன்முழுதும் மெல்லோசை தழுவி விழுமியது பயக்கும் பேரழகு தழைவதால்,

"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியானடி நிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிவதொன் மொழிப் புலவர்"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரப்படி அடிகளின் அருள்பழுத்த செழுந்தமிழ் நூலைத் தோலழகின் மேலதாய்க்கூறி மகிழமெய்ப் புலவர் இழுக்கார். வள்ளலார் அருண்மொழிகளை நோக்கநோக்க, இயல்பாயினும் பைந்தமிழோசை யழகை அவர்கள் துறைபோகப் பல்காலும் உணர்ந்து உணர்ந்து அருளொடு புணர்த்து நெகிழ்ந்து இன்பூரிய பெரியார் என்பது விளங்குகின்றது. ஓசை இடையற்றுப் போகாது வழுக்கியியலும் வண்ணம் அடிகள் எழுதியருளிய உரைநடைப் பகுதிகளைச் சிறிது உற்றுணருந் தீவிய தமிழோசைப் பழக்க முடையார்க்கும் இது விளங்குவதே யாம். நிற்க,

ஆசிரியர், சொல்வேறு பொருள்வேறு இலக்கியம் இவை யிரண்டினும் வேறு என்பனபட "விளங்கும் வேதமுடி இலக்கியமா மேடையிலே" (சு, திருவடிப் புகழ்ச்சி, ௩), "சொல்பொருளும் இலக்கியமும்" (சு, அருள்விளக்கமாலை, சுo), "சொல் நிறைந்த பொருளும் அதன் இலக்கியமுமாகி" (ச, அருட்பிரகாச மாலை, கூo), என்று பல்லிடத்தும் பாடுவதும், அங்ஙனமே சொற்பொரு ளழகுகட்கு மேலும் அருட்பாவில் இலக்கிய அழகு என்பது பளிங்கில் நிழலெனத் துளும்புவதும் அவ்விலக்கியப் பயிற்சி வல்லார்க்குப் பெயராத பேரின்பம் பில்குமென்

பது ஒருதலை அடிகள் இறையியலை விளக்குதற்கு "உரைவளர் கலையே கலைவளர் உரையே உரைகலை வளர்தரு பொருளே" (சு, பதிவிளக்கம், க),

"என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடை அன்பே,
என்னுளே விளங்கி என்னுளே பழுத்து
என்னுளே கனிந்த என்னுடை அன்பே!"
(சு, அருட்பெருஞ்சோதி அகவல்)

என்பவை போன்ற சொற்றொடர்களைக் கொள்ளுவதெல்லாம் விளக்கமும் வியப்புந் தருகின்றன. உயிர்கள் சிவத்தை அடைதற்குரிய நெறிமுறைகளை ஆசிரியர் சொன்முறையிலே காட்டுந் திறம் மிகப் பெரிது. "கண்டுகொண்டேன், கனிந்து கொண்டேன், கலந்துகொண்டேன், களித்தே" (சு, திருவடிப்புகழ்ச்சி, ரு க), "பார்த்தேன், பணிந்தேன், பழிச்சினேன், மெய்ப்புளகம் போர்த்தேன், என் உள்ளமெலாம் பூரித்தேன், ஆர்த்தெழுந்து ஆடுகின்றேன், பாடுகின்றேன், அன்பு உருவானேன், அருளை நாடுகின்றேன் சிற்சபையை நான்" (சு, சிவானந்த நிலை, உ) என்பவைகளைக் காண்க. ஆணவ மலத்துக்கே சிறப்புப் பெயராக ஆசிரியர் "தடை" என்னுஞ் சொல்லை அடிக்கடி வழங்கியிருப்பது உற்று நோக்கற்பாலது. மறைகளையெல்லாம் பாயிரமென்கிறார்கள் (சு, வாதனைக்கிரங்கல், கூ) உயிரநுபவம், அருளநுபவம், சிவநுபவம் என்னும் உண்மைப்பொருளியலைத் தொகை விரிமுறையில் வள்ளலார் தெளிவுறுத்திய அருட்டிறனையும் அருட்கருத்தையும் சமயப்பெரியார் கண்டு சாலவும் மகிழ்கின்றனர். (ச, ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை, உ, ௩, ச, ரு). நிலைவேறு தெரியக்கூடாத அத்துணை அணுக்கம் வாய்ந்த வேதாந்த சித்தாந்தத்தின் உண்மை இயல்பையும் நுணுக்கத்தையும் "துனிவுறு சித்தாந்தப்பெரும் பொருளே தூய வேதாந்தத்தின் பயனே" (சு, சிவானந்த நிலை, க) என்று தெளிவாக அருளும் வல்லமையை என்னென்பேன்! ஆசிரியர் திருமூலரும், "தான் ஆன வேதாந்தம் தான் என்னும் சித்தாந்தம்" என்று அருளினமை காண்க.

இங்ஙனமே,

"அன்பு என்பதே சிவம் உணர்ந்திடுக
எனஎனக்கு அறிவித்த சுத்தஅறிவே!"
(சு, ஞானசம்பந்தர் தோத்திரம்)

"உருவராகியும் அருவினராகியும் உருவருவினராயும்
ஒருவரே உளார் கடவுள் கண்டு அறிமினோ உலகுளோர் உணர்வுஇன்றி
இருவராம் என்றும் மூவரேயாம் என்றும்இயலும் ஐவர்கள் என்றும்
எருவராய் உரைத்து உழல்வதுஎன் ?
உடற்குஉயிர் இரண்டுமூன்று எனலாமே?" (சு, பதினிச்சயம், க)

"எவ்விடத்தும் எவ்வுயிர்க்கும் இலங்கு சிவம்ஒன்றே
என்ஆணை என்மகனே இரண்டுஇல்லை ஆங்கே,
செவ்விடத்தே அருளோடுசேர்த்து இரண்டு எனக்கண்டு அறிநீ
திகைப்பு அடையேல் என்றுஎனக்குச் செப்பியசற்குருவே"
(சு, அருள்விளக்கமாலை, அசு)

"சிவம் எனும் பெயர்க்கு இலக்கியமாகி எச்செயலும் தன்சமூகத்தே
நவம் நிறைந்தபேர் இறைவர்கள் இயற்றிட ஞானமணி மன்றில்
தவம் நிறைந்தவர் போற்றிட ஆநந்தத் தனிநடம் புரிகின்றோன்
எவன்? அவன்திரு ஆணைஈது இசைத்தனன் இனித்துயர் அடையேனே"
(சு, சத்தியவார்த்தை)

"மணம்உறு பேரருள்இன்பம் அமுதம்எனக்கு அளித்து"
(சு, அருள்விளக்கமாலை, கக)

(தொடரும்)

---

# திரிபதார்த்த சிந்தனை

(ச - ம் சிலம்பு, ௫௫ - ம் பக்கத் தொடர்ச்சி)

காரிய சுத்தம், சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலசாக்கிரமுதல் ஐந்தவத்தைப் படுதலாம். உஎ

மலநிவிர்த்திக்குக் காரணம் யாது?

அநாதி தொடுத்து மோட்ச பரியந்தம் ஆன்மாவாலுண்டாகிய சிவபுண்ணியமே.

அச் சிவபுண்ணியமும் அபுத்திபூர்வ சிவபுண்ணியம் புத்தி பூர்வ சிவபுண்ணியம் என்றும், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம் என்றும், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் என்றும் பத்து விதப்படும். இவைகளைச் செய்துமுடித்தபின்பு தத்துவரூபமுதல் போகமீறாகவுள்ள பத்தையும் நின்மல சாக்கிர முதல் ஐந்தவத்தையிலு மடக்கி ஆசாரியர் பக்குவப்பட்ட சீடனுக்கு நிர்வாண தீட்சை பண்ணி யறிவிப்பர்.

அடங்கு முறைமை.

தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம் ஆகிய நான்கும் நின்மலசாக்கிரத்திலடங்கும்.

ஆன்ம தரிசனம், சிவரூபம் ஆகிய இரண்டும் நின்மல சொப்பனத்தி லடங்கும்.

திருவருளாற் செய்யப்படும் பஞ்சகிருத்தியங்களை ஆன்மா, தானே செய்யக்கூடுமென்று கருதல் மாத்திரமேயன்றி, நின்மல சுழுத்தியில் தசகாரியத்தி லொன்று மடங்குவதில்லை.

ஆன்மசுத்தி, சிவதரிசனம், சிவயோகம் ஆகிய மூன்றும் நின்மல துரியத்திலடங்கும்.

சிவபோக மொன்றுமே நின்மல துரியாதீதத்திலடங்கும். உஅ

கன்மம்: சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியமென மூன்று வகைப்படும்.

சஞ்சிதம்: மாயையிலே கட்டுண்டிருக்கும் புண்ணிய பாவமாம்.

பிராரத்துவம்: ஆன்மா தான் எடுத்த தேகத்தில் நின்று புசித்துத் தொலைப்பதாகிய சுகதுக்கமே.

ஆகாமியம்: பிராரத்துவம் புசிக்கையிலுண்டாகிய இதாவிதமே.

மனம் வாக்குக் காயங்களினாற் செய்யப்பட்ட நல்லதொழிலே இதம். அவைகளாற் செய்யப்பட்ட தீயதொழிலே அகிதம்.

சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமென்னும் ஐந்து விஷயங்களே சுக துக்கங்களுக் கிருப்பிடங்களாம். இவ்விஷயங்களில் ஒவ்வொன்றும் விருப்பு வெறுப்பு என்னும் இருதிறத்தனவாய்ப் பத்துவிதப் படும். உசுூ

எண்ணிறந்தகோடி புவனங்களிலிருக்கிற ஆன்மாக்களுக்கும், அறிவித்துத் தொழில் நடத்துகையினால், சிவன் வியாபகனென் றறிக.

எண்ணிறந்தகோடி ஆன்மாக்களுக்கும் அறியாமையிருத்தலால் மலம் வியாபகமுள்ளதென் றறிக. ௩௰

நித்தியனுயுள்ள ஆன்மாவைப் பிறந்தான், இறந்தான் என்று சொல்வதெப்படி ?

ஆன்ம போதமானது மாயா கருவியைப் பற்றி யறிதலே பிறப்பு. ஆன்ம போதமானது மாயாகருவியைப்பற்றி யறியாதிருத்தலே இறப்பு. ௩க

எண்ணிறந்தகோடி ஆன்மாக்களுக்குஞ் சிவன் ஒருவனுகவிருந்து அறிவிப்பதெப்படி?

(க) எண்ணிறந்த கோடி கண்களுக்கும் ஆதித்தனொருவனுகவிருந்து காட்டுதல் போலும்.

(உ) ஒருவண்ணான் பலபெயருடைய புடவைகளை வாங்கி வெளுத்து அவரவர் புடவையை யறிந்தெடுத்துக் கொடுத்தல் போலும். மேலும் ஓர் இடையன் பலபெயருடைய மாடுகளை மேய்த்து அவரவர் மாடுகளையறிந்து வீட்டின்கண் கொண்டு விடுதல்போலும்.

மலமொன்றுகவிருந்தும் எண்ணிறந்தகோடி ஆன்மாக்களின் அறிவை மறைக்கிறதெப்படி?

எண்ணிறந்தகோடி கண்களை இருள் ஒன்றுகவிருந்து மறைத்தல்போலும்.

சிவன், ஆன்மா பிராரத்துவம் புசித்தற்பொருட்டு நல்வினை தீவினையிரண்டையுங் கருவியாகக் கூட்டினுன். அந்தச் செய்தியை

ஆன்பா மலத்தினாலே தன்னுடைய செய்தியாக நினைந்து கொண்டான். ஆகையினாலே அவ்விரு தொழிலும் ஆன்மாவிற்கு ஆகாமியமாயிற்று. ௩௩

வேதாகமங்களை ஓதி அறுதியிட்டறிந்து நித்திய கன்மாநுட்டானங்களில் வழுவில்லாமல் ஞானசாத்திரங்களைக் கற்று, கேட்டல், சிந்தித்தல், தெளிதலை யடைந்து நிட்டையைப் பொருந்துதலாம். ௩௪

சிவன் சத்தியுடன் கூடினால் பிரபஞ்சம் தோற்றும். சத்தி சிவனுடனே கூடினால் பிரபஞ்சம் ஒடுங்கும். ஆன்மா ஆன்மபோதத்துடன் கூடினால் பிரபஞ்ச முண்டாம். ஆன்மபோதம் ஆன்மாவுடன் கூடினால் பிரபஞ்சம் ஒடுங்கும். ௩௫

ஆன்மாவிற்கு உடம்பு மலப்பிணியினாலுண்டானது. சிவனுக்கு உடம்பு, ஆன்மாவின் மலப்பிணியைத் தீர்க்குங் கருணையினாலுண்டானது. ஆன்மா தன்னுடைய போத மிழந்து சிவபோதத்துடன் பிராரத்துவத்தை யனுபவிக்கில் மலப்பிணி நீங்கும். சீவபோதத்துடன் அனுபவித்தால் மலப்பிணி நீங்காது. ௩௬

அநாதி சிருஷ்டி செய்யுங்காலத்திலேயே சிவபெருமான், மூர்த்தி தலந் தீர்த்தமாகத் திருமேனி கொண்டெழுந்தருளி ஆன்மாக்களுக்குச் சிவபுண்ணியத்தை யுண்டாக்குவர். எப்படியானால் சிவலிங்க அர்ச்சனைக்கான தளிர்களைக் கொடுக்கும் விருக்ஷங்களாகவும், நிவேதனத்திற்குரிய நெல் முதலியவற்றைக் கொடுக்கும் பயிர்களாகவும், அபிடேகத்திற்குரிய பால் முதலியவற்றைக் கொடுக்கும் பசு முதலிய மிருகங்களாகவும் செனிப்பித்தலினாலேதான்.

சிவதலங்களிற் புழுவாய்ப் பிறந்து வசித்து நசித்தாலுஞ் சிவபுண்ணிய முண்டாம்.

சிவதீர்த்தத்தின் திவலைதெறித்தாலும், அத்தீர்த்தம் பாய்ந்து விளையும் நெல் முதலியவற்றைப் புசித்தாலும் எவ்வகைப்பட்ட பிராணிகளும் சிவபுண்ணியத்தை யடைவார்களென்பதிற் சந்தேகமில்லை. ௩௭

தத்துவரூபம்: ௩௬ தத்துவங்களின் ருெழிலறிதலாம்.

தத்துவதரிசனம்: ௩௬ தத்துவங்களுஞ் சடமென்றறிதலாம்.

தத்துவசுத்தி: சிவஞானத்தினுல் ௩௬ தத்துவங்களையும் விட்டு நீங்குதலாம்.

ஆன்மரூபம்: ஆன்மா பஞ்சமலங்களையும் நீங்கித் தன்னைச் சிவமென்று பாவித்தலாம்.

ஆன்மதரிசனம்: தனக்கொரு செயலுமில்லை யென்றறிந்து நிற்றலாம்.

ஆன்மசுத்தி: ஆன்மா சிவஞானத்திற்குள் அழுந்தித் தற்சுதந் திரந்தோன்ருமல் அந்தச் சிவஞானமாய்ப் போதலாம்.

சிவரூபம்: ஆணவமலத்தில் அழுந்திக்கிடக்கிற ஆன்மாக்கள் பாகபேதங்களைத் திருவுள்ளத்தடைத்து, சிவன் பஞ்சகிருத்தியங் களைச்செய்து பஞ்சமலங்களையும் நீக்கி மோட்சத்திலே விடுமென் றறிதலாம்.

சிவயோகம்: சிவசத்தி செய்யுங் கிருத்தியங்களைச் சிவன் சற் றுஞ் செய்யானென் றறிதலாம்.

சிவபோகம், ஆன்மா சிவானந்தத்தைப் புசித்தலாம். ௩அ

தத்துவம் என்றது அழிவில்லாத தென்று பொருள்படும். பதி, பசு, பாசமென்னுந் திரிபதார்த்தங்களுந் தத்துவங்களே யாம். ௩௯

நிருவாணதீட்சை இருவகைப்படும்.

(க) அசத்தியோ நிருவாணம். அறிவிக்கவறியுந் தன்மை யில்லாத சீடனுக்கு ஆறத்துவாவையு மறிவியாமல் தீட்சை செய் தலாம்.

(உ) சத்தியோ நிருவாணம்: அறிவிக்கவறியுந்தன்மையுடைய சீடனுக் கறிவித்து தீட்சைசெய்து அவத்தையைப் போக்கு தலாம். ௪0

சிவனுக்குரிய திருமேனிகளெல்லாம சர்வசங்கார காலத்தில் நீங்கிப்போம். ஆன்மாவாகிய திருமேனி சர்வசங்கார காலத்தி லும் நீங்காது. ௪௧

ஆன்மாக்களுக்குப் பக்குவம், சிவபுண்ணியம், மலபாகம், சத்திநிபாதம், இருவினையொப்பு, ஞானசாரியர் திருமேனிகொண்டு வந்து திருவுளம் பற்றுதலாகிய இவைகள் முறையே ஒன்றன்பின் னொன்ருகப் பொருந்துவனவாமென ஞானசாத்திரங் கூறும்.

---

# *எல்லாம் ஐந்தே

[வ. சுப்பையாபிள்ளை யவர்கள்]

உலகம் ஐந்து பகுப்புக்களாற் பிரிக்கப்பட்டுள்ள தென்பதை நம் பண்டைத்தமிழ் நாட்டவர்கள் மிகவுஞ் செவ்விதாக எழுதி யிருக்கின்ருர்கள். ஆரிய நூல்களிலும் அக்கருத்து காணப்படுகிற தெனினும் ஒரு நூலில் ஒருவிதமும் மற்ருெரு நூலில் மற்ருெரு விதமுங் கூறப்படுகின்றது. அவ்வைந்து பகுப்புக்கள் எவையாமெனின், நிலம், நீர், நெருப்பு, வளி, வான் ஆகியவையே. அண்டம் எவ்வாறு ஐந்து பகுப்புக்களை யுடையதோ அவ்வாறே பிண்டமாகிய உடலும் அமைந்துள்ள தென்பதை உடலை ஓர் அண்டமாக உருவகப்படுத்தி அதனை ஐந்து பகுப்புக்களாக வகுத்துக் காட்டியிருக்கின்ருர்கள் நமது பெரியோர்.

(1) தாளிலிருந்து இடுப்புவரையிலும் நிலத்தன்மை யுடையது. அஃதாவது கால் திண்ணிய எலும்புகளாலும் உரத்த தசைகளாலும் ஆக்கப்பட்டு நெகிழ்ச்சித்தன்மை மிகக் குறைவுடையதாயும் நிலத்தைப்போலத் திண்ணிய தன்மை மிக்குடையதாயும் இருக்கக் காண்கின்ருேம்.

(2) பின்னர் இடுப்பு முதல், நெஞ்சுப்பள்ளம்வரை நீர்த்தன்மை யுடையது. என்னையோவெனின் சிறுகுடல், பெருங்குடல், நீர்க் குண்டிக்காய்கள் முதலியவை அங்கே யிருக்

---

* இது 1927-ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 5, 6-ம் நாட்களில் பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் சித்தாந்தப்பிரகாச சபை இரண்டாவதாண்டு விழாவின் பொருட்டுத் திரு. பா. வே. மாணிக்க நாயகரவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

கின்றன. அவை உணவைச் செரிக்கச் செய்வதற்கு வேண்டிய நீரை உண்டாக்குவதற்கும், செரித்த பின் உடலோடு சேர வேண்டிய பொருள்களைக் குருதியோடு சேர்த்து உடலெங்கும் பரவச் செய்வதற்கும், கழிவு நீரைப் பிரித்து வெளியிடுவதற்கு முரிய கருவிகளாகும். அவற்றின் றொழில் நீர் வயத்ததாகவே இருக்கின்றது. ஆகவே அப்பகுதி நீர்த்தன்மை யுடையதென் பதை உடற்கூறு நூலான் நன்கு தெரிகின்றோம்.

(3) நெஞ்சுப்பள்ளத்திலிருந்து தோள்வரையிலும் நெருப் புத் தன்மையுடையது. குருதிக் குண்டிக்காய்கள், நுரையீரல், இரைப்பை முதலியன அங்கே யிருக்கின்றன. இரைப்பையில் உணவுப் பொருள் செரிப்பதற்கு நெருப்பைக் குருதிக் குண் டிக்காய்கள் கொடுக்கின்றன. உயிர்க்காற்றை (Oxygen) இழுத்துக் குருதியைத் தூய்மைசெய்து அதனை உடம்பில் பல இடங்களுக்கும் பரப்புவதால் நெருப்புண்டாகிறது. ஆகவே அப்பகுதி நெருப்புத்தன்மை யுடையதென்பதை உடற்கூறு நூலான் அறிகின்றோம்.

(4) தோள் முதல் மூக்கு வரையும் வளித் (காற்று) தன்மை யுடையது. வாய், மூக்கு முதலியன காற்றை இழுத்து வெளிவிடக் கூடிய தொழிலைச் செய்கின்றன. ஆகவே அப் பகுதி வளித்தன்மை யுடையதா யிருக்கின்றதென்பதை அறி கின்றோம். (5) பின்னர் மூக்கு முதல் மண்டைவரை வான் (ஆகாயம்) தன்மை யுடையது. மண்டையில் மூளை யிருக்கின் றது. அது மண்டைக்குள் அடங்கிக் கிடக்கினும் எத்தனையோ மைல் தூரத்திற்குச் செல்லும் ஆற்றல் உடையது; இருந்த இடத்திலிருந்தே பல இடங்களுக்குஞ் சென்று வேலைசெய்து வரும். ஆகவே அது வான்றன்மை யுடையது.

இவ்வைந்து தன்மைகளும் ஒன்றிருக்க வேண்டிய இடத் தில் இன்னொன்றும், அல்லது அளவில் மிகுந்தும் குறைந்தும் இருக்குமாயின் உடல் துன்புற்றிருக்கும். அவ்வைந்தும் உரிய அளவில் உரிய இடங்களில் இருக்கின்ற வரையிலும் உடல் தழைத்திருக்கும்.

பின்னர் உடலமைந்துள்ளதுபோல நாம் குடியிருக்கக் கட்டு மனையும் அமைக்கப்பட்டுள்ளதை அறிதல் மகிழ்ச்சிதருவ தொன்றாகும். ஒரு வீட்டின் அடிப்படை மிக அழுத்தமாயும் உரமாயும் அமைக்கப்படுவதால் அப்பகுதி நிலத்தன்மையை யும், பிறகு தரைமட்டத்தில் நீர்த்தாரைகள் (தூம்புகள்) அமைக் கப் படுவது நீர்த்தன்மையையும், பிறகு தரை மட்டத்திற்கு மேலும், பல கணிகளுக்குக் கீழும், அடுப்பு அமைக்கப் படுவ தால் அப்பகுதி நெருப்புத் தன்மையையும், பின்னர் அதற்கு மேல் அமைக்கப்படும் பலகணிகள் காற்றுத் தன்மையையும், அதற்குமேல் கூரை வான் றன்மையையும் உடையதென்பதை அறிகின்றோம். இவ் வமைப்புக்கு மாறாக ஒரு கட்டடமும் அமைக்கப்படுகிறதில்லை என்பது நன்கு அறிதல் வேண்டும், மாறுபடுமாயின் கட்டடம் நிலைபெற்று இயங்காப் பொருளா யிருக்க முடியாது. இதனை நம் பண்டைமக்கள் எழுதிய மனை யடி நூலான் நன்கு தெரிகின்றோம்.

பின்னர் தண்ணீரில் மிதக்கும் படகின்கண்ணும் நிலம் முதல் வானீறாகிய ஐந்து பகுப்புக்களும் அமைந்துள்ளதை அறியப்புகுவது மகிழ்ச்சியேயாம். படகின் அடிப்பாகம் உரமாய் நிலத்தன்மை யுடையதாயினும் அது நீரின்மேல் மிதப்பதால் இயங்கு பொருளாகவே இருக்கின்றது. படகின் அடிப்படை நிலத்தன்மையும் மற்றைய மேற்பகுதிகள் மனைபோல நீர் முதல் வானீறாகிய நான்கு தன்மைகளையு முடையன. அந்தப் படகின் அடியில் ஓர் துவாரம் போடப்பட்டால் நீர் உட்சென்று அதனை நிரப்பிக் கீழே நிலத்திற்குக் கொண்டு வந்துவிடும். நிலத் தன்மையுடைய பாகமும் நிலத்தோடு சேர்ந்துவிடும். மற்றைய நான்கு தன்மைகளும் இல்லாமற் போகும்.

ஆகலின் உலகம் நிலம், நீர், நெருப்பு, வளி, வான் முதலிய ஐந்து பகுப்புக்களால் அமைந்திருப்பதுபோல உடலும் அமைந்திருக்கின்றது. அண்டத்திலுள்ளது பிண்டத்தில் என் பது இதனாற் பெறப்படுகின்றது.

பின்னர் மக்கள் கருமுதல் மீன் கருவரை பல கருக்களின் வடிவுகளை எடுப்பின் அவை ஆரம்ப நிலையில் ஏறக்குறைய ஒரே தன்மை யுடையனவாய் ஓங்காரவடிவில் அமைந்திருக்கின்றன. பின்னர் அவை வளர்ச்சியுறுந் தோறுஞ் சிலசில மாறுதல்களுடன் முடிவில் மக்கள் கரு அதிக மாறுதல் இல்லாமலும், மற்றைய கருக்கள் சிறிது சிறிதாக அதிக மாறுதல்களைப் பெற்றும் வருகின்றன. மீன் முதலியன முதலுருவை முடிவில் முழுது மிழந்து விடுகின்றன. மக்கள் கரு தான் தோன்றியது முதல் முடிவுவரை ஏறக்குறைய ஒரே வடிவத்திலிருக்கக் கிடக்கின்றது. மக்கள் கரு ஐந்து மடிப்புக்களை யுடையதென்றும், ஒவ்வொரு தன்மையுடைய உடற்பகுதி தோன்றும்போது ஒவ்வொரு மடிப்பை யிழந்துகொண்டே வருகின்றதென்றும் டார்வின் என்னும் மேனாட்டுப் புலவர் எழுதிய நூலான் விளங்குகின்றது. நமது திருமூலநாயனார் அருளிய "ஓமெனு மோங்காரத் துள்ளே யுருவரு" என்னும் அருண்மொழியை நோக்குகையில் ஓங்காரத்தின் உண்மைத் தன்மையை நம் பண்டைத் தமிழ் மக்கள் எவ்வளவு நுணுகியாராய்ந் தெழுதி வைத்திருக்கின்றார்க ளென்பது புலனாகின்றது.

பின்னர் ஓம் என்னும் வடிவமே கடவுள் வடிவமென்றும், அதிலிருந்தே நமசிவாய என்னும் திருவைந்தெழுத்து தோன்றிய தென்றும், ஓம் என்ற எழுத்தையே நமசிவாய என்னும் ஐந்து எழுத்தாக எழுதலாமென்றும், குடியியல் அதன்கண் அமைந்து கிடக்கிறதென்றும், அஃதாவது ந என்ற எழுத்து நிலத்தைப் பண்புசெய்து விளைவு செய்வாராய உழவரைக் குறிக்குமென்றும், ம என்பது நீர்த்தன்மையுடைய வணிகரையும், சி என்பது நெருப்புத் தன்மையுடைய அரசரையும், வ என்பது காற்றுத் தன்மையுடைய அந்தணரையும், ய என்பது வான்றன்மையுடைய அறிவரையுங் குறிக்குமென்றும், நாடு நலம்பட செழித்தோங்க வேண்டுதற்கு உழவரைக் காட்டிலும் வணிகர் குறைவாயும், வணிகரைவிட அரசர் குறைவாயும், அரசரைவிட அந்தணர் குறைவாயும், அந்தணரைவிட அறிவர்

குறைவாயுமிருக்குமென்றும், இதனால் பண்டைநாளில் சாதிப் பிரிவு கிடையாதென்றும் அறிந்து நமது பண்டைத் தண்டமிழ் மக்களது பேரறிவுப் பெருங்கடலிற் றோய்தல் சாலவும் நன்று.

---

## நிலங்களின் தட்பவெப்பங்களால் மொழி நடைமாறல்

[க. ப. சந்தோஷம் அவர்கள், B. A., L. T.]

(அ - ம் சிலம்பு இஉஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

வெப்பம் மிகுந்துள்ள நிலங்களில் உணவுப் பொருட்கள் விரைவில் வளர்ந்து பயன் தருமென்று முன் கூறப்பட்டது. இதை இன்னும் சற்று ஆழ்ந்து நோக்கில், சூடு சாலவுமுடைய நாடுகளில் மரம் செடி கொடிகள் கடிதில் முளைத்து வளர்ந்து அழிவது புலப்படும். சூட்டின் மிகுதியால் பூ பிஞ்சாதலும், பிஞ்சு காயாதலும், காய் கனியாதலும் கடிதில் நிகழ்கின்றன. தோன்றல், திரிதல், கெடுதலாகிய நிகழ்ச்சிகள் எந்நேரமும் நாம் வழக்கமாய்ப் பார்க்கும் காட்சிகளாகும். மக்களுக்குள்ளும் பிள்ளை நிலைமையிலிருந்து இளமையும் முதுமையும் விரைவில் வருகின்றன. தட்ப நாட்டுப் பெண்கள் நன்மையடையும் வயதைச் சூட்டுநில மகளிர் நன்மை எய்தும் வயதோடு சீர்தூக்கிப் பார்த்தால் இஃது எளிதிற் றெளிவாகும். பிள்ளைத் தன்மை நீங்கு முன்னரே குழந்தை பெறும் பெண்களை நமது நாட்டில் ஆங்கிலர் கண்டு வியப்படைகின்றனர். இங்ஙனம், மண நிகழ்ச்சியும் பிள்ளைப்பேறும் கடிதில் நடக்கின்றமையால் மூப்பும் நரையும் முடுகி வருகின்றன. ஆங்கிலர் முப்பது அல்லது முப்பத்தைந்து வயதாகிய பின்னர் மணஞ்செய்து கொள்வதைப் பார்ப்பது நமக்கு வியப்பாயிருக்கிறது. முப்பது நாற்பது வயதில் நம்மிற் பலர் மணந்து மக்களைப்பெற்று மூப்பெய்தி மாண்டுபோகின்றனர்.

இங்கிலாந்தில் பிறக்கும் குழந்தைகளுக்குள் நூற்றுக்குப் பத்துக்குமேல் சாவதில்லை; இந்தியாவில் நமது சென்னைப் பகுதியில் நூற்றுக்கு முப்பது விழுக்காடு குழந்தைகள் இறந்துபோ

கின்றன. இது குறைந்த கணக்கு. இந்தியாவின் வேறு பகுதி களில் இதைவிட அதிகமாய்க் குழவிகள் மாள்கின்றன. யாது பற்றி இவ்வாறு நடக்கின்றதென்பதை நாம் ஆராயவேண்டிய தில்லை. மக்களின் அறிவின்மையாலும், தாயின் உடல்வளர்ச்சிக்கு வேண்டிய உணவின்மையாலும் இவ்வாறு நேருகிறதென்று கரு தப்படுகிறது. இஃதெவ்வாறிருப்பினும், நமது மக்கள் அடிக்கடி சாவைக் காண்கின்றார்களென்பது மாத்திரம் நாமிங்கு அறிய வேண்டியது. மக்களின் சராசரி வயது நமது நாட்டில் இருபத் தைந்திற்குக் குறைந்தது. இங்கிலாந்தில் அது நாற்பத்தைந் திற்கு உயர்ந்தது. இவற்றால் பொதுவாக நமது மக்கள் ‘உலகம் நிலையாமை’ என்பதை அடிக்கடி உணர வேண்டியதாகின்றது. நமது இலக்கண இலக்கியங்களிலும், பழக்க வழக்கங்களிலும் நிலையாமையைப் பற்றி எப்போதும் நினைப்பூட்டப்படுகிறோம். ஆதலின், நமது நாட்டில் எழுதப்பட்ட நூல்களில் பெரும் பான்மை, உலகில் காணப்படும் பொருள்களைப்பற்றிய ஆராய்ச்சி செய்யாமல் உடல், உயிர், கடவுள் என்ற மூன்றின் தொடர்பை உற்றுநோக்கி விரித்துக் கூறுகின்றன. நாம் காணும் யாவும் நிலையில்லாப் பொருட்களானதால் இவற்றினின்றும் விலகி என் றும் அழியாதிருக்கும் நிலைமையாதென வினவி அறிந்து அதை ஊக்கத்தோடு தொடர்வதையே தொன்றுளிலிருந்து இந்நாள் வரை நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

இம்மைக் கடுத்தவற்றில் மேனாட்டார் மிகவும் ஊன்றி நின்று உழைத்து வெற்றியுடன் விளங்குகின்றனர். வையகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் அவர்கள் சென்று செல்வமும் ஆட்சி யும் தேடிக்கொண்டனர். தட்ப நாட்டார்க்கு ஆராய்ச்சி முறை யில் முடிவென்பது கிடையாது. தங்கள் முன்னோர்கள் தேடிய அறிவையும் செல்வத்தையும் வளர்த்துப் பெருக்க அவர்கள் இடையறு முயற்சி செய்கின்றனர். இதில் அவர்கள் எவ்வளவு உயர்வெய்தித் திகழ்கின்றனர் என்பதை நாமிங் கெடுத்துக்கூற வேண்டியதில்லை. எடுத்ததற் கெல்லாம் ஊழ் என்று சொல்லி வாளாவிருப்பது நம்மவரிற் பெரும்பாலோர் இயற்கையாகும். ஊழ் என்பது ஒன்று உண்டென்பது பலருமறிந்த உண்

மையாயினும் ஒருவனது முயற்சி எப்போது ஊழால் தடுக்கப்படுகிறது என்று ஒருவராலும் சொல்லொணாது. ஊழை நினைந்து உளமுடைந்து செயலற்றிருப்பது விளக்கமும் உறுதியு மற்றோர் செயலேயாகும். அன்றியும், முயற்சியால் ஊழையும் மேற்கொள்ளலாம் என்று நூல்களில் பெரியோர்களால் எடுத்துக் காட்டப்பட்டிருப்பதையும் நாம் கருத்திற் கொள்ளவேண்டும். ஆதலின், உள்பொருளாராய்ச்சியில் ஒப்பில்லா உயர்வெய்திய நம்மவர், மேல்நாட்டார் மிகப் பயின்றுவரும் இம்மைக்குரிய பொருளாராய்ச்சிகளில் முன்னினும் அதிகமாக முயலல்வேண்டும். தட்பநாட்டார் துறவுபோன்ற வாழ்க்கையைக் கைப்பற்றியபோதும் செயல் ஒடுங்குதலின்றி ஒழுகுகின்றார்; வெப்பநாட்டார் இளமையிலேயே துறவுநிலையில் விருப்பமுற்றுச் செயலற்றிருக்க அவாவுகின்றார். சிலவாண்டுகட்குமுன் அமெரிக்காவிலுள்ள ஹார்வர்ட் கல்லூரியில் பெரும்புலவராயிருந்த ஜேம்ஸ் என்பவர், தாமெழுதிய ஒருநூலில் "இந்தியாவிலுள்ள பிள்ளைகள், ஒருநாளில் ஒன்று அல்லது இரண்டுமணிநேரம் ஓரிடத்தில் செயலின்றிச் சும்மாவிருக்கக் கற்பிக்கப்படுகிறார்கள்; அவ்விழ்தப் பயிற்சி அமெரிக்கப் பிள்ளைகளுக்குக் கொடுக்கப்பட்டால் சால நலமாயிருக்கும்" என்று எழுதியிருக்கிறார். நாமறிந்த அளவில் நமது நாட்டில் பிள்ளைகள் இவ்வாறு பயிற்றப்படுவதைக் கண்டதில்லை. ஆயினும் (பொதுவாக உள்ளத்தையடக்கி வினையின்றி வாளாவிருக்கும் மக்கள் இந்தியாவில் பெருந்தொகையினர் உண்டு என்பதை ஒத்துக்கொள்ளலாம். இங்ஙனமே மேல்நாடுகளில் அல்லும் பகலும் ஒய்வின்றி உழைத்து நேரத்தைப் பணமாகக் கருதும் மக்கள் மிகுதியுமுளர். அவர்கள் அமைதியின்றி ஓடித்திரிந்து உழல்வதைக்கண்டு மேல் நாம் கண்ட புலவர் வாளாவிருப்பதன் பெருமையை எடுத்துக்காட்டு முகத்தான் மேற்காட்டியவாறு புகன்றார்.

இதுகாறும் யாம் எழுதியவற்றில் நிலங்களின் தட்பவெப்ப வேற்றுமையால் எங்ஙனம் மொழியிலும் நடையிலும் உடையிலும் கொள்கையிலும் வழக்கத்திலும் மாறுதல்கள் தோன்றுகின்றன என்பது ஒருவாறு காட்டப்பட்டது. யாம்

கூறியது பொதுவாக உண்மையே ஆயினும், மக்களின் உரத்தாலும் முயற்சியாலும் ஆக்கப்பெறும் செயல்களுக்கு அளவேயில்லை. பெரிய நோக்கங்களும் தூய எண்ணங்களும் உறுதியுள்ள மக்களின் உளத்திற் புகுந்தால் தட்ப வெப்பத்தாலும் பிறவற்றாலும் வரும் தடைகள் அவர்களை என் செய்யும்?

---

## கிராமங்களில் படித்தவர்கள் செய்ய வேண்டியவேலை

[M. P. S. வேலாயுதம்பிள்ளை அவர்கள்]

"கிராம இந்தியா" என்ற பத்திரிகையில் திரு. டப்ளியூ. சாமியா அவர்கள் பின்வருமாறு எழுதுகிறார்கள் :—

கடந்த ஐம்பது ஆண்டுகளாகக் கிராமங்களிலுள்ள அறிஞர்களும், செல்வவான்களும் பட்டணங்களிலும், நகரங்களிலும் குடியேற ஆரம்பித்திருக்கிறார்கள். கல்வியின் பொருட்டு அவர்கள் தத்தம் கிராமங்களிலிருந்து வெளியேறினார்கள். பின்னர் அரசாங்கத்தில் உத்தியோகங்கள் சம்பாதித்துக் கொண்டும், மற்ற பதவிகளிலும், வியாபாரத்திலும் ஈடுபட்டுப் பணம் சம்பாதித்து, பட்டணங்களிலேயே நிலைத்து விட்டார்கள். அவர்கள் இன்னும் முன்னேற, மடங்கள், கோயில்கள், வியாபார ஸ்தலங்கள் முதலியவற்றில் அவகாசங் கிடைத்தபோதெல்லாம் தங்களுடைய நன்மையையே கவனித்துக் கொண்டார்கள். ஆகவே அவர்கள் பிறந்த கிராமத்தை அடியோடு மறந்து விட்டார்கள். பணம் வசூலிக்கவோ, சாகவிருக்கும் உற்றாரைப் பார்ப்பதற்கோ அவர்கள் கிராமங்களுக்குச் செல்லுகிறார்களேயல்லாமல், மற்றப்படி அவர்கள் ஆங்குச்செல்வது அபூர்வமாயிருக்கிறது. அவர்கள் நகரவாழ்க்கையிலேயே மூழ்கிக் கிடந்தமையால், தங்கள் வாழ்க்கையின் பிற்காலத்தில் கிராமங்களுக்குச் சென்று ஆங்கு இருக்க அவர்களுக்கு முடிகிறதில்லை. ஆனால் இவர்கள் தான் கிராமங்கள்பால் மிகவும் ஈடுபடக் கடமைப் பட்டிருக்கிறார்கள். அவர்கள் கல்விகற்றதும், செழிப்படைந்ததும், கிராமங்களிலிருந்து வசூலித்த வரிகளைக் கொண்டுதான். ஆகவே அவர்கள் பெற்ற அறிவையும் அநுபவத்தையும் கிராமங்களே மீண்டும் அடையுமாறு பயன்படுத்தவேண்டும். உபகாரச்சம்பளம்

பெற்று வாழும் முதியவர்கள், கிராம மக்களின் முன்னேற்றத் திற்காக எவ்வளவோ முயற்சி செய்யலாம். அவர்கள் அத்துறை யில் ஈடுபட நினைந்தால். கிராமங்களில் சமாதானமாகவும், பயன் படத் தக்கவாறும் வாள்நாளைக் கழிக்கமுடியுமென்பதைக் கண்டு கொள்வார்கள். அவர்கள் ஆற்றக்கூடிய சிறிய உதவியும் கிராம மக்களுக்குப் பெரிய நன்மையாகக் காணப்படும் அறிவும் அனு பவமும்பெற்ற முதியவர்கள் வாழும் கிராமங்கள் அதிர்ஷ்டமு டையதென்றே சொல்லவேண்டும். நியாய இலாகாவிலிருந்து, உப காரச் சம்பளம் பெற்று வாழ்பவர்கள், கிராமங்களிலுள்ள விவ காரங்கள் நீதிமன்றங்கள்வரை செல்லாதவாறு தடுத்து, பஞ்சா யத்து மூலமாய் விசாரணைசெய்து, சமாதானமாய்த் தீர்த்து வைக்கலாம். ரெவினியூ இலாகாவில் இருந்தவர்கள், ரெவினியூ விவகாரங்களில் கிராம வாசிகளுக்கு அறிவூட்டி நன்மை செய்ய லாம். மருத்துவ நிபுணர்கள், மருத்துவ சாலைகள் ஏற்படுத்தி, சுகாதாரத்தைக் கவனிக்கலாம். என்ஜினீர் வேலை பார்த்தவர், கிராமங்களில் கிணறு, குளம் வெட்டவோ, வீடுகள் கட் டவோ, தெருக்கள் போடவோ, சாக்கடை கால்வாய் முதலி யன அமைக்கவோ உதவி செய்யலாம். கல்வி இலாகாவி லிருந்தவர்கள், கிராமத்திலுள்ள சிறுர்களுக்கு கல்வியறி வூட்ட லாம். இது போலவே, உபகாரச் சம்பளம் பெற்று வாழும் ஒவ்வொருவரும், ஒவ்வொரு வழியில் ஈடுபட்டு, கிராமங்களுக்கு நலம் விளைவிக்கலாம். கிராம வாசிகளுக்கு உதவி செய்ய இவர் கள் கடமைப்பட்டு மிருக்கிறுர்கள். இவர்களுடைய உதவி இப் போது மிகுதியுந் தேவையா யிருக்கிறது. கிராமப் பஞ்சாயத்து கள் பஞ்சாயத்துக் கோர்ட்டுகள், நீர்ப்பாசனப் பஞ்சாயத்து கள், யூனியன் போர்டுகள், கூட்டுறவுச் சங்கங்கள், பாங்கிகள் இவை யெல்லாம் இப்போது கிராமங்களில் பெருகிவருகின்றன. ஆனுல் இவைகள் அனுபவ மற்றவர்களால் பரிபாலிக்கப் பட்டு வருவதால், சரியான நிலைமையில் இருந்து வரவில்லை. உபகாரச் சம்பளம் பெற்று வாழும் முதியவர்கள் இத்துறைகளில் ஈடுபட் டால், கிராமங்களுக்குப் பேருபகாரமா யிருக்கும்.

---

## யாண்டு பலவாயினும் நரையின்மை



யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு
மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே. (புறம்-கருக)

கோப்பெருஞ் சோழன் :

என் அரிய நண்ப, நீ, என்ன இந்திர ஜாலம் கற்று வைத்தாய்? நீ, ஆண்டில் மிக முதிர்ந்தும் ஒரு சிறிதும் நரை அடைந்தனை இல்லையே! இவ்வரிய நிலையை எப்படிப் பெற்றாய்?

பிசிராந்தையார் :

ஆருயிர் நண்ப, ஈதறியாயா? சொல்லுவேன் கேள். எனக்கு வாய்த்த மனைவி வருவாய்க்குத் தக்க செலவு செய்பவள்; தன் நிறையினால் தன்னையே காத்துக்கொள்ளும் கற்புடையவள். என் மைந்தர் அறிவிற் சிறந்தவர். என் ஏவலர் குறிப்பறிந்து செய்யும் பணிவுடையவர். அரசன் செங்கோல் வழுவாதவன். என் ஊர் குற்றமற்ற சான்றோர்களை யுடைய வளப்ப முடையது. இவற்றா னெல்லாம் நான் நிறைந்தவனா யிருக்க, நரையுந் திரையும் என்னை வந்தடைய இடமேது?

---

# மருத்துவம்

[மருத்துவாசிரியர் மா. வடிவேலுமுதலியார் அவர்கள்]

## சோகைக்குச் சூரணம்

### இது தேரையர் கரிசல்

சோகைக்குச் சூரணத்தைச் சோர்விலா துரைக்கக்கேண்முன்
சோகையி ன்றைங்கலாங்கேள் சோர்வுகை கால்கட்குண்டாம்
சோறுவேண் டாமைதுக்கம் சோளிபோ லண்டம்வீங்கும்
சோதினி யெனக்காதாகும் சோங்கடர் காகமாங்கண்
சோம்பலுக் குறையுளாமெய் சோணித மெங்கேபோமோ
சோத்திரங் கவியையொப்பாஞ் சோலிசை யிந்தரோய்க்குச்
சோகையன் றொருபேராமச் சோகைநோய்க் நவிழ்த்ந்சொல்வாம்
சோமனட் பரத்தங்காமன் சோற்றினுக் கிகல்முப்பல்லை
சோபியுப் பதிங்கங்கோட்டஞ் சோளவேர் பனைவேர்வில்வேர்
சோணாா யுருவிவேருஞ் சோகவேர் கணிவேர்வேல்வேர்
சோர்விலாச் சரக்கிரட்டிச் சோட்டில்வேர் வகைகள்கூட்டிச்
சோரவார் துளசிச்சாறு சோடசத் தினமிவ்வாறே
சோதியா தபத்துலர்த்திச் சோடைபோ லிடித்துத்தூள்செய்
சோனையில் வளர்கரும்பு சோபன மாகத்தந்த
சோடிலா விசயமத்தஞ் சோதிவர் திடுமுன்காலை
சோதிபொன் றிடுமுன்மாலை சோகியா ரளவுதின்று
சோர்வில்பத் தியமேற்கொள்ளச் சோகையு மகன்றேமெம்மே.

இச்செய்யுள் சோகை என்னும் நோய்க்குணங்களையும், அதைத் தீர்க்கும் மருந்து முறையையும், தின்னும் அளவையும், பத்தியம் இருக்கவேண்டு மென்பதையும் கூறுகின்றது.

இது உரைநடையாக எழுதப்பட்டாலே சாலுமென்று சிலர் சொல்லலாம். அஃது உரைநடை யளவேயாய்ப் பொருள் நின்று பாட்டி னுண்பொருள் தோன்றுமவழிதற்கோர் வழியா யிருத்தலினாலும், பாட்டுடன் உரைநடையு மிருந்தால் இவ்வுரை நடையோடு அறிஞர்க்கு வேறு நுண்பொரு ளிருப்பின் தோன்றக் கூடுமாகலானும் செய்யுளும் எழுதப்பட்டதென் றறிக.

### சோகையின் குணங்கள்.

பிண்டப் பொழிப்பு:—கைகால் சோர்தல், சோறு விரும்பாமை, தூக்கமிகுதல், விரை பைபோல் பெருத்தல், காது செத்தைபோலாதல், கண்பார்வை நன்கு 'தெரியாமை, சோம்பல், குருதிக் (இரத்தம்) குறைவு, கேள்வி விலங்குகேள்விபோலாதல் என்னும் இவைகளாம்.

### சூரணம்.

அல்லிப்பூ, அல்லது கிழங்கு, குங்குமப்பூ, சிறுதிப்பிலி, சீரகம், கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், தான்றிக் காய்த்தோல், சுத்திவாளம், கறியுப்பு, அதிமதுரம், சாதிக்கோட்டம், இப்பதினொரு சரக்குகளும் ஒவ்வொரு பலமாகவும் சோளவேர், பவளவேர், வில்வவேர், சிவப்பு நாயுருவிவேர், அசோகவேர், கரிசலாங் கண்ணிவேர், வேலம்வேர் இவ்வேழு வேர்களும் ஒவ்வொன்று மூன்றுபலம் ஒரு வராகனெடை 14 குன்றி யளவாகவும் எடுத்து எல்லாவற்றையும் ஒருமட் சட்டியிலிட்டு இச்சரக்குகள் அழுந்தும்படி துளசிச்சாறு தினமும்விட்டு வெயிலில் வைக்கவும். இப்படி 16 நாள் விட்டுப் பிறகு வெயிலில் நன்றுயுலர்த்தி யிடித்துச் சூரணஞ்செய்து கரும்பு சர்க்கரை இச்சூரண எடைக்குப் பாதி எடைசேர்த்து வைத்துக்கொண்டு காலையில் சூரியன் புறப்படா முன்னும், மாலையில் சூரியன் மறையு முன்னும் பலகரையளவு சாப்பிட்டு இச்சாப் பத்தியமாயிருந்தால் சோகை நீங்கும்.

நாளளவு சொல்லப் படாமையால் நோய் வன்மைக்குத் தக்கபடி கொள்க.

# சிறுமணம்

## [சிறுமணம்பெற்ற கூத்தன்]

நறுமணம் பெருமணம் முதலியவெல்லாம் விட்டு நான் ஏன் சிறுமணம் பேசவந்தேன்? ஏனென்றால், நான் சிறுமணம் பெற்ற கூத்தனுகலின் என்பீர்கள். அப்படியன்று. நான் சிறுமணத்தைப் பெற்ற கூத்தனு? சிறுமணத்தாற் பெறப்பட்ட கூத்தனு? என்பது உங்களுக்குத் தெரியாதவரையில் நீங்கள் உங்கள் விருப்பம்போல் முடிவு கட்டுதல் தவறு. அது பெருந் தவறு. நீங்கள் என்னினும் ஆண்டில், அறிவில், உடலில், பொருளில், ஆவியில் முதியவர்களா யிருப்பினுங்கூட இவ்வளவு வரம்புமீறிச் செல்லுதல் அடாது. அது நானன்றே அறிவேன். நானே அறிந்ததொன்றை எனக்கு விருப்பமிருந்தாலொழிய உங்களுக்கு அறிவிக்க வேண்டுமென்று எனக்கு என்ன கவலை? சிறுமணம் எனக்குப் பெரிதாயிருக்கிறது. என்றால், உனக்கு மூக்கு இயற்கைக்கு மாருய்ச் சிறிதாயிருக்கலாம் என்பீர்கள். ஓ! என் மூக்கைப்பற்றி உங்களுக்கு ஏன் கவலை? எனக்கு மூக்குச் சிறிதாயிருப்பின் மூளை பெரிதாயிருக்கலாம். ஒருறுப்புக் குறைவாயின் மற்ருேருறுப்பால் நிறைவு கொள்ளுகிறேன். ஏன், நான் பண்டமாற்றுதல் செய்துகொள்ளக் கூடாதா? சொற்களும் தொடர்களும் விளைத்தலால் நான் என்றும் வேளாண்மைத் தொழிலோடு அமையவேண்டுமா என்ன? நீங்கள் அவற்றை எடுத்துக் கொள்ளுகிறபோது நான் பண்டமாற்றல் செய்தவனுகவில்லையா? அப்படியாயின் என்னை வணிகன் என்பீர்கள். இப்பண்ட மாற்றுதலிலே நீங்கள் என்னைக் கொள்ளை யிடாதபடி நான் காத்துக்கொள்ள வேண்டுவதும் என் முதற் கடமையன்ருே? அதனுல் என்னை நீங்கள் காவலன் என்பீர்கள்! சரி. நான் உங்களுடைய பேரன்பை மறுக்கக் கூடாதவனுய்க் காவலனுகின்றேன். ஆனுல், அக்காவலை வெற்றியோடு காத்தற்குப் போதிய நுண் ணுணர்வுகளை ஆராய்ந்து அறிய வேண்டியவனுகின்றேன். உடனே நீங்கள் என்னை அறிவாளன் என்பீர்கள் போலும்! ஓ! உங்களுடைய பேரன்பே அன்பு! உங்களுடைய அருந் துணையினுலே என்னை நீங்கள் அறிவாளனுகிய இவ்வளவு பெரிய நிலைக்குத் தூக்கிவிட்டபிறகு என்னுடைய அறிவே என்னை வாளா இருக்கவிடாது. எப்படி வறிதே விடும்? அறிவு அறி என்னும் வினையடியாகப் பிறந்த தொழிற் பெயரன்ருே? அவ்வினை ஒரு ஏவலைச் சுட்டிக்கொண்டேயன்ருே இருக்கும். (தொடரும்)

---

# உவகைச் சிறுமொழி

[த. செங்கல்வராய பிள்ளை B. A.]

சென்னையிலிருந்து பெங்களூருக்கு இருப்புப்பாதை வண்டியில் சென்று கொண்டிருந்த நண்பர்கள் நால்வரிலொருவர் "சோரர் பயம்; ஜாக்ரதையாயிருங்கள்" என்ற பொருள்பட வடமொழியிலும் தெலுங்கிலும் எழுதியிருந்ததை யறிந்து அதைச் சுட்டி, "சென்னையிலிருந்து புறப்படுகிற வண்டியில் தமிழர்களுக்கு எச்சரிக்கை செய்யாமல் விட்டதென்ன?" என்றார்.

மற்றொருவர் "தமிழர்கள் நுண்ணறிவுடையாரென்பதும் வருமுன் காப்போரென்பதும் வெள்ளைக்காரனுக்குத் தெரிந்திருக்கிறது போலும்" என்று குறுநகை யாடிக் கூறினார்.

அவர்களிலொருவர் தெலுங்கராதலால், "நாங்கள் சோரர்களல்ல. ஆதலால் தான் எங்களுக்கு மாத்திரம் எச்சரிக்கை செய்தான்" என்று மெல்லிய குரலில் இயம்பி நகைத்தார்.

---

கப்பலில் சென்று கொண்டிருந்த ஓர் அமெரிக்கா தேசத்து மங்கை அண்டையிலுள்ளாரை விளித்து, "உங்களில் ஜெர்மானியன் ஒருவனைக் கொன்ற வீரர் எவரேனும் உண்டோ?" என்றான். பிரெஞ்சு தேச இளைஞனொருவன் "நான் ஒருவனைக் கொன்றேன்" என்றான். "எவ்வாறு?" என்ற கடாவுக்கு, "என் வலக்கையால் குத்திக்கொன்றேன்" என்று விடையிறுக்கு முன் அவன்நீட்டிய வலக்கையைத் தனது கரத்தாற்பற்றிப் புன்னகை தவழும் தனது இதழ்களைக் குவித்து முத்தமிட்டாள்.

நிகழ்ந்த யாவற்றையும் நோக்கிய வண்ணம் நின்று கொண்டிருந்த ஓர் ஆங்கிலக் கப்பற்படைவீரன், "நான் இருவரைக் கொன்றேன்" என்றான்.

அமெரிக்க மாது: "எவ்வாறு?"
ஆங்கில வீரன்: "என் வாயாற்கடித்து"

---

# இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டம்

[சமய வழக்கன்]

இதன் சீர்திருத்த மசோதா மாண்புமிக்க இந்திய அரசப் பிரதிநிதியால் எற்றுக் கொள்ளப்பட்டு, சட்டமானதை அறிந்து சைவ உலக முழுவதும் அரசர் பிரதிநிதிக்கு அளவற்ற நன்றி பாராட்டுகின்றது. முந்திய சென்னை அமைச்சர்கள் பிறப்பித்த சட்டங்கள் எல்லாவற்றினும் இதுவே மிகவும் இன்றியமையாதது. நாட்டிற்கு அளவிறந்த பெரும்பயனை அளிக்கவல்லது. நமது முன்னோர் வருந்தித் தேடிய பெருநிதியின் பெரும்பாகத்தை நமது சமய அறநிலையங்களுக்கு நன்குடையாக அளித்துள்ளார்கள். அவர்கள் இம்மை மறுமை வீடென்னும் மும்மை நலங்களையும் நமக்குத் தரவல்லது கடவுளுடைய திருவருளே என்று உணர்ந்து கடவுளை வழிபடுதற்குரிய சமய நிலையங்களை மிக்க கவலையோடு பாதுகாத்து வந்தனர். கடவுளுக்சென்று விடப்பட்ட பொருளை அபகரித்

தவர்களுக்கு அக்காலத்து அரசர்கள் கடுமையான தண்டனை விதித்திருந்தார்கள். பிற்காலத்திலே, கடவுள் நம்பிக்கையும் சமயப்பற்றுங் குறைந்து, அறநிலைய அதிகாரிகள் சமய நலத்திற்குரிய சொத்தைப் பாதுகாவாமல் வீண்செலவிட்டு வந்தனர். ஆங்கில அரசாங்கத்தார் முதலில் சமய நிலையங்களைப் பாதுகாத்து வந்தபோதிலும் நெடுநாளாக நம்மவர்களுக்கே அவற்றின் பொறுப்பைச் சுமத்திவிட்ட படியால் கேள்வி கேட்பாரின்றி அறநிலைய காப்பாளர்கள் மிகுந்த கெடுதியை விளைத்துவிட்டார்கள். அதனால் இந்நாட்டு மக்கட்குச் சமய நலம் ஒன்றும் சிறப்பாக இல்லா தொழிந்தது. ஆதலால், சமயநிலைய சம்பந்தமாக நல்லதோர் சட்டம் அமையப்பெற வேண்டுமென்று சென்ற 50-ஆண்டுகளாகப் பல நியாயவாதிகளும் அரச வேலையாளரும் முயற்சி செய்து வந்தும், கனம். பனகால் ராஜாவினாலேயே அப்பெரு முயற்சி நிறைவேறுத லாயிற்று. பனகால் அரசர் கொண்டுவந்த சட்டமானது சமய நிலையப் பொருளை சமயப் பொது நலத்திற்குப் பயன்படுத்தாது தங்களுக்கே பயன் படுத்தக் கருதிய ஒருசிலரால் மிகவும் ஊக்கமாக எதிர்க்கப்பட்டது. அவர்கள் எழுப்பிய கூக்குரல் எல்லாம் இச்சீர்திருத்த மசோதா, சட்டமானவுடன் பயனற்றவாய் ஒழிந்தது. கழிபெருநலம் பயக்கும் இச்சட்டத்திற்கு இன்னும் எதிரிடையாக வேலை செய்பவர்களைச் சமயப் பகைவர்கள் என்றே நாம் கொள்ளவேண்டும். எதிரிகளின் முயற்சி, இனி, யாதும் பயன்படாதென்பது திண்ணம்.

இப்பொழுது ஏற்பட்டுள்ள சட்டத்திலும் சமய சம்பந்தமான சில சீர்திருத்தங்கள் இனிமேலாவது அமையப் பெறவேண்டும். இம் மாகாணத்திலுள்ள, கோயில்கள் அனைத்தும் சைவம், ஸ்மார்த்தம், வைணவம், மாத்துவம் என்னும் நான்கு சமயங்களுள. இன்ன இன்ன சமயத்தை இன்ன இன்ன கோயில் சார்ந்தது என்று தீர்மானிப்பதற்கு உள்ள விதியும், அதற்கேற்ற பகுப்பு முறையும் ஏற்படவேண்டும். அவ்வச் சமயங்களுக் குரியாரே அவ்வச்சமயக் கோயில்களுக்கு அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமை உடையராதல் வேண்டும். ஒவ்வொரு சமயத்திற்கும் உரிய விதிகளைத் தெரிந்து கூறுவதற்கு அவ்வச் சமயத்தாருள் சமயக் கல்வித் தேர்ச்சியுற்ற ஒருசிலர் அடங்கிய தனிச்சிறு கழகங்கள் ஏற்படவேண்டும். இவை போன்ற விதிகள் சட்டத்தில் சேர்க்கப்படும் வரை, சமயக்குழப்பம் முடிவுபெறாது. ஆதலால் சமயப்பற்றுடைய அறிஞர்யாவரும், இத்தகைய சீர்திருத்த விதிகளைச் சட்டத்தில் சேர்ப்பதற்கு முயலவேண்டும். அம் முயற்சி சித்திபெறுமாறு, இறைவன் திருவருள் புரிவாராக.

---

## ஐயவினாவுக்கு விடை

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

செந்தமிழ்ச் செல்வி, 4-ஆஞ் சிலம்பு, 12-ஆம் பரலில் ஒருவர் எழுதிய ஐயவினாவைக் கண்டேன். பாண்டிவள நாட்டிற் பாய்கின்ற ஆறு சில நூல்களில் வையை எனவும், சில நூல்களில் வைகை எனவும் வழங்கப் பெறுகின்றது; இவற்றுள் எவ்வாட்சி குற்றமில்லது; என்பது வினா.

சங்கப் புலவர்கள் பாடித்தொகுத்த எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலியவற்றிலும் சிலப்பதிகாரம் முதலியவற்றிலும் இவ்வியாறு பல

விடங்களிற் கூறப் படுகின்றது; பரிபாடலில் இதற்கென்றே பல பாட்டுக்களுள; எவ்விடத்தும் வையை என்னும் பெயரே காணப்படுவது; வைகை என்று ஓரிடத்தும் வழங்கப் படவில்லை. பழைய தமிழ் வழக்குகளை அறியாமையாலோ, வடமொழியில் எழுத நேர்ந்தமை முதலிய காரணங்களாலோ பிற்காலத்தார் சிலர் சில தமிழ்ப் பெயர்களைத் திரித்து வழங்குவாரும்; அங்ஙனம் திரிக்கப்பட்டோ அன்றி மருவியோ வழங்கும் பெயர்களுக்கேற்பக் கதைகள் கட்டிக் கூறுவாரும் ஆயினர். பொதியில் என்னும் தமிழ்ச் சொல்லைப் பொதிகை என்று திரித்து வழங்குதலுங் காண்க. இவ்வாற்றால், பழைய தமிழ்வழக்குடன் பொருந்த வையை என்று கூறுவதே சாலவும் பொருத்த முடைத்து; எனினும், பிற்காலத்துப் பெரியோர் சிலர் தம் கால வழக்கைத் தழுவி ஒரே வழி வைகை என்று பாடியிருப்பின் அஃது ஓர் குற்றமாகா தென்க.

# மதிப்புரை

செங்குந்தர் பிரபந்தத் திரட்டு. இதனில் கவியரசராய் விளங்கிய ஒட்டக் கூத்தர் பாடிய ஈட்டி யெழுபது அரிய உரையுடனும், செங்குந்தர் மரபின் சிறப்பு வழக்க ஒழுக்கம் முதலிய விளக்கும் பிரபந்தங்கள் பலவும் அடங்கி யிருக்கின்றன. சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் உரையுடன் சைவ உலகுக்கு இருமுறை வெளியிட்டு உதவிய பெரியார், வண்ணக் களஞ்சியம் உயர்திரு, காஞ்சி நாகலிங்க முனிவரவர்கள் இதன் பதிப்பாசிரியர் எனின், இது மிக்க திருத்தத்துடனும் செவ்விய முறையுடனும் வெளி வந்திருத்தல் வியப்பாகாது. முனிவர் அவர்கள் தமது முதிர்ந்த வயதையும் துறவற நிலையையும் பாராட்டாது தம்மவர்களின் மேம்பாடு கருதி உழைத்தல் அவர்களது அருளுள்ளத்தை விளக்குகிறது. இதனை வெளியிட்டோர் திருவாரூர் முனிசிபல் கவுன்சிலரும், சைவப்பற்றும் வள்ளன்மையு மிக்க திருவாளர். தி. க. சபாபதி முதலியார் அவர்கள். இதற்குப் பல சிறந்த புலவர்கள் நல்லுரை அணிந் திருக்கின்றார்கள். விலை ரூ. 3—8

தமிழன். இது யாழ்ப்பாணத்தில் சுன்னாகம் திரு-N. S. கந்தையா அவர்கள் வழி வெளிவரும் ஓர் மாதப்பத்திரிகை யாகும். இது வரை ஆறு இதழ்கள் வெளிவந் திருக்கின்றன. இது தனித்தமிழ் வளத்தையும், தமிழ் மறையின் சிறப் பியல்பையும், தமிழிற்கு வடமொழிக் கலப்பு வேண்டா வென்பது பற்றியும், தமிழ் மக்களுக்கு ஆரிய வேதம் வேண்டியதில்லை என்பதைப் பற்றியும், தமிழர் கொள்கைகளே ஆரிய நூல்களில் விரவிக்கிடக்கின்றன வென்பதைப் பற்றியும் எடுத்துக்கூற எழுந்ததாகும். இவ் விதழாசிரியரது ஊக்கமும் ஆர்வமும் போற்றத் தக்கன. ஒவ்வொரு தமிழ் மகனும் இதனை வாங்கிக் கற்று உண்மை தெரிந்து நலமடைதல் இன்றியமையாததாகும். ஆண்டுச் சந்தா ரூ. 1.

அருணகிரி. இது கோயமுத்தூர் ஜில்லா பள்ளத் தூரிலிருந்து புதிதாக வெளிவரும் ஒரு சிறந்த வாரப் பத்திரிகை யாகும். இதன் ஆசிரியர் திரு சி. ராம. ராமனாதன் என்பவராவர். இது பொதுவாகத் தமிழ் மக்களுக்குப் பல துறைகளிலும் கட்டுரைகள் வழங்குவதோடு சிறப்பாகச் செங்குந்தர் மரபினரது மேம்பாடு கருதி நடப்பதாகும். கடிதம், அச்சுப் பொறி முதலியன சிறப்புடையன. தமிழ் மக்கள் இதனை ஆதரிப்பாராக. ஆண்டுக் கையொப்பம் ரூ. 4.





உலவாக்கிழி பெற்றது

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எளஅ மாசித் திங்கள் 1927ஆ பிப்ரவரிமீ—மார்ச்சுமீ | பரல் உ |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## தமிழ் மக்களும் வெளியீடும்

[சிறு. முனி. நடேச முதலியாரவர்கள்]

'மக்கள் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையர்' என்ப. இது 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' என்னல் வேண்டும். ஏனெனின், இதன் உண்மையை இதுகாறும் நாம் காட்சி யளவையின் வைத்துத் தெற்றெனக் கண்டுவருகின்றோம். நம்மவர் யாதொரு நிகழ்ச்சியில் ஈடுபடுகின்றனரோ அதனின் அதனின் நனிமிகச் செல்கின்றனர். நன்மையுந் தீமையும் ஆய்ந்துணரார்; மற்று, 'கண்டதே காட்சி கொண்டதே கோல'மாய்க் கழிவர். ஆயின் இது மக்கள்மேல் ஏற்றிச் சுமத்த வேண்டுவதோர் பிழைபாடே யாமென்று அறுதியிடற்கும் அமைவதில்லை. என்னை? 'உயிர் அறிவித்தாலன்றித் தானுயறியுந் தன்மை யுடைத்தன்று'

என்று காண்டலின் என்க. இதனாற்றான் தொன்றுதொட்டு நமது நாட்டில் அவ்வக் காலங்களிலே செயற்கரிய செய்வர் ஆசில் அருங்குரவர் தோன்றி மக்கள் உய்திகூடும் அருநெறிகள் அளிதரு முளத்தானருளி ஆட்படுத்துவா ராயினர்போலும். இத்தகையின ராய மக்கள் ஒரு நூற்றாண்டுக்குப் பின்னரே நமது நாட்டில் தோன்றிய வெளியீட்டுநலனைச் சிறிதும் உணாவில்லையே என்பது வியப்புறுதற்குரிய தாகாது. பன்னூற்றாண்டுகட்கு முன்னரே வெளியீட்டு முறையினை முதன்முதற் கண்டு பயன்றுய்க்கும் ஆங்கில நாட்டிலும் 'டாக்டர் ஜான்சன்' முதலிய மேற்புல அறிஞர் தம் மக்களுக்கு வெளியீட்டின் அரும்பயனும் இன்றியமையாமையும் பற்றிக் கூறிப் போந்தனரென அறிகின்றோம். ஆயின், நம்மவர் வெளியீட்டு நலனைச் சிறிதும் உணராதார் என்று கூறுதற்கும் அமையாத நிலையில் ஆங்கில வெளியீடுகளை எத்துணையோ ஆர்வத்தோடும் பெற்றுப் படிக்கின்றனரே எனின்? நம்மவர் நீண்ட காலமாக வடமொழி ஆங்கிலம் முதலிய வேற்று மொழிகளின் கவர்ச்சியில் தம்முள்ள மிழந்து அவையிற்றிலுள்ள நூல்களையோ வெளியீடுகளையோ படித்தலிலேயே பழகி விட்டமையும்; நமது மொழியிலுள்ள ஐம்பெருங்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலிய தூய தமிழ் நூல்களின் பெயர்தானும் கேட்டறியாத பேரறியாமையாலுமே யென்க.

இது நம் தமிழ் மக்கள் மாட்டு மட்டுமே காண்டற்குரிய 'அரியசெய்கை'யாகும்! வடநாடுகளிலே நூல்களாயினும் வெளியீடுகளாயினும் முதன்முதல் தம் தாய் மொழியிலேயே வரைதலும் வெளியிடுதலும் செய்து, பின்னரே வேண்டியிருப்பின் ஆங்கில முதலிய பிற மொழிகளிலே காணச்செய்வர். இதற்கு இன்றும் அறிஞர் இரவீந்திரநாத் தாகூர் முதலிய பெரியார்களே சான்றாயிருக்கின்றனர். தாய்மொழிப் பற்று நம்மவரிடத்தே பதியாத வரையில் தமிழ் நூல்களும் தமிழ் வெளியீடுகளும் உயரிய நிலைக்கு எய்துவதும் அதனல் தமிழர் மேம்பாடுறுவதும் இயலாவாம். நீண்ட நாட்களாகவே, பிரான்ஸ்நாட்டு அறிஞர் ஏரியல் (Mr. Ariel), இத்தாலிய நாட்டு அறிஞர் பெஸ்கி (Father Beschi), ஜர்மானிய நாட்டு அறிஞர் டாக்டர் கிரால் (Dr. Graul),

ஆங்கிலநாட்டு அறிஞர்கள் எல்லிஸ் (Ellis), டிரு (Drew), கால்ட்வெல் (Caldwell), போப் (Dr. Pope), முதலிய மேனாட்டு அறிஞர் பல்லோர், தமிழ் நூல்களின் அருமையையும் தமிழர்தம் பெருமையையும் கண்டு இறும்பூ தெய்துவாராயினர். திரு. நடேச சாஸ்திரியார், திரு. சீனிவாச சாஸ்திரியார், திரு. சதாசிவ ஐயர் முதலிய அறிஞர்களும் எத்துணையோ புகழ்ந்திருக்கின்றனர். மிக அண்மையிலுங் கூட, டில்லியில் நடைபெற்ற ஒரு தமிழ் நாடகத்தில் அரசியலில் உயர்நிலையி லிருக்கும் திரு. விஜயராகவாச்சாரியார் என்பார் ஆங்கிலக்கலப்பின்றித் தமிழில் பேசுதற்கு இடர்ப்பட்டதைக் கண்டு, எள்ளி வருந்திய திரு. சீனிவாசசாரியார் அவர்கள், ஆயிரக் கணக்கான மைல்களுக்கு மேற்பட்ட மிகச் சேய்மையிலுள்ளதோர் இடத்தில் (கினிவா) பல்லாண்டுகட்கு முன்னரே குடியேறியவர்களும் தமிழறியாத மக்களிடத்தே பழகி வருவோருமான தமிழர் இன்றும் அழகாகத் தமிழ் பேசி இன்பநுகர்ந்து வருவதைத் தம் கண்களாற் கண்டு களித்தமையை இடித்துக்கூறினர். தமிழ் நாட்டிலேயே வதியும் தமிழ் மக்களினும் பார்க்க அவர்கள் எத்துணையோ சிறந்தவர்களாவார் என்னின் இழுக்காமாறில்லை. அவர்களே உண்மைத் தமிழர் என்று கூறுவதும் பொருந்தும்.

அந்தோ! தமிழரினும் எண்ணிறந்தோர் ஒரு சில தொடர்தானும் தமிழிலே பேசுதற்கு இயலாத நிலையில் வாழ்கின்றன ரென்றால் இத்தகையரின் தமிழறிவு எத்துணையவாம்! இத்தகையோர் தமிழ் நூல்களைக் கல்லாதொழியினும் தமிழ் வெளியீடுகளையேனும் படித்தற்குத் தலைப்படுவார்களானால் எத்துணையோ விரிந்த அறிவு தலைக்கூடுவான்றே? வெளியீடெனப்படுவது நூற்பொருளும் உலகியற் பொருளும் ஒருங்கே தாங்கித் தன்னையடைவார்க்குப் பேரறிவும் பேராற்றலும் பெருமிதமும் தருவதன்றே?

தமிழருள்ளே ஆடவரே இத்துணைச் சிறப்பாக மொழிப்பற்றும் வெளியீடு போற்றலும் உடையரெனின் பெண்டிரின் நிலை ஆராயவேண்டுவதின்று. அவர்களிடத்து நூல்கள் என்றால் 'ஆம் ஈதறியோமா? ஆடையிலமைந்த இழையன்றோ?' என்பர். மொழிப்பற்று என்றால் விழிப்புற்று நிற்பர். வெளியீடு என்னின், உள

மிகக் களித்து, 'ஆம், மயிலையில் மகிழடியாம் திருவொற்றியூரில் திருப்பூம்பாவையாம் காண்போம் வெளிப்படுங்கள்' என்று மிகப் பொருத்தமாக உளறுவர். அம்மவோ! முன்னைத் தமிழ் மாதர் நிலையென்னே? வீரஞ்செறிந்த தாய்மார்களும் நல்லிசைப் புலமை மெல்லியலார்களும் இன்றெங்கே? அவர்களது மணிவயிற்றிலே பிறந்த தமிழ் மக்களெங்கே? நாமவர்களது மக்கள்தாமா? அற்றாயின் அவர்களது வீரஞ்செறிந்த—புலமை நிறைந்த—உண்மை கலந்த—குருதி நம்முடலில் ஓடவில்லையா? எனின், மறுக்கத் துணிவதில்லை. அங்ஙனமாக, மகன் தந்தைக்காற்றுமுதவி நாம் செய்யவேண்டுமன்றோ? முந்தையோர் கண்ட முறையை நாமெல்லாம் போற்றுதல் கடனன்றே? அக்கடனை அணிபெற ஆற்றுவதுண்டெனின் நாம் தாய் மொழிப்பற்றில் வழுவாதவர்களாய், உண்மைப் பற்றுடையவர்களாய், அதற்கு உறுதுணையான வெளியீட்டையும் பொன்னேபோற் போற்றுவோராய் வாழ்தல் இன்றியமையாததன்றோ? ஆடவர் மட்டும் இவ்வெளியீடு பேணுந் துறையில் முந்துறுவது சாலாது; அறிவறிந்த தாய்மார்களுக்கும் வெளியீடுகளைக் கொடுத்து அவர்கள் அவற்றின் பயனை நன்கு உணரும்படிச் செய்தல் இன்றியமையாதது. இன்றைக்கு அவர்கள் பாலூட்டித் தாலாட்டி வளர்க்கும் சிறுவர் சிறுமியர்களே நாளைக்குத் தாய் தந்தையாக வரப் போகிறவர்களாதலின், இப்போதுள்ள தாய்மார்கள் வெளியீடுகளிலே நிரம்பிய பயிற்சியுடையவர்களா யிருந்தாலன்றி அவர்களை இச்செவ்விய முறையில் வளர்க்க இயலாது. ஆகலின் ஆடவர் பெண்டிர் ஆகிய தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் இனியேனும் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத் துணையான தமிழ் வெளியீடுகளை மனமொழி மெய்களாற் போற்றி, எண்ணிறந்த சீரிய வெளியீடுகள் தோன்றும்படிச் செய்து, ஒவ்வொரு வெளியீடுகளையும் பெற்றுப் படித்து இன்புறுவதோடு தாய்மார்களும் சிறுவர் சிறுமியர்களும் இத்துறையில் நன்கு பயிற்சி பெறுமாறு விரைவின் முயன்று இன்பம் நிறைந்த தமிழ் நாடாகவும், வீரஞ்செறிந்த தமிழகமாகவும், உலகெலாம் போற்றிய முன்னைத் தமிழுலகாகவும் காண்பார்களாக.

# சம்பந்தர் தேவாரம்

[கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A., M. L.]

தமிழ் நன்மக்கட்குப் பண்டுதொட்டு நிலவிய கடவுள் நெறி சிவநெறியே யென்பது தமிழ் இலக்கண ஆசிரியர்க்குள் முதல்வராகிய அகத்தியனார் சிவபெருமான்பால் தமிழறிவு பெற்றமையானும், சிவனாரது புதல்வராகிய முருகக்கடவுள் தமிழ்க் கடவுளாகக் கருதப்படுகின்றமையானும் நன்கு தெளியப்படும். தமிழிற்கு முதனூல் இலக்கணங்கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார், 'முதல்வன் கண்டது முதனூலாகும்' என்றமையால், முதல்வனாகிய சிவபெருமானது திருவருளால் இயற்றப்பெற்ற நூலே தமிழரது ஆதிக் கடவுணூலென்பது யூகிக்கப்படும். ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்துக்கு முன்னேயே அத்தகைய நூல் இருந்திருக்கவேண்டும். தொல்காப்பியம் அரங்கேற்றப் பெற்றது, நான்மறை முற்றக்கற்ற அதங்கோட்டாசானிடமென்று தொல்காப்பியப்பாயிரத்துட் கூறப்பட்டுள்ளது. ஆதலினால்,நான்மறையென்னும் நூலே தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு சிறந்திலங்கியது என்பது அறியக் கிடக்கின்றது. பாயிரத்துட் கூறிய நான்மறை இப்பொழுது வழங்கும் நான்மறையல்ல என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தனர். வடமொழி நான்மறைக்கும், தமிழ் இலக்கண நூல் ஆராய்ச்சிக்கும் யாதும் இயைபின்மையின், அவை வடமொழி நான்மறை யென்றுகோடல் பொருந்துவதன்று. தொல்காப்பிய நூலுள் எழுத்துஞ் சொல்லும் ஆராய்தல், பொருளாராய்தற் பொருட்டாதலின், பொருள் அதிகாரமே சிறப்புடைத்து ஆதலானும், பொருளென்பது, அறம், பொருள், இன்பம், வீடாகலானும், அந்நால்வகை உறுதிப் பொருளினைத் தெரிக்குமாண்பு முதனூலாகிய பண்டை நான் மறைக்கும் அமைந்திருத்தல் வேண்டுமென்பது யூகிக்கப் படும். திருஞானசம்பந்தப்பெருமான் தமது தேவாரத்துள்,

"நூலடைந்த கொள்கையாலே நின்னடிக் கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழன்மேவி அருமறை சொன்ன தென்னே?"

என்றும்,

"அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு
மொழிந்தவாயான்"

என்றுந் திருவாய்மலர்ந் தருளியவாற்றால் உறுதிப் பொருள் நான்கினையுங் கூறும் அருமறை நூல் முதல்வனால் அருளப்பட்டதென்பது போதரும். இஃதன்றியும், கடவுள் திருவருள்பெற்ற நிறைமொழி மாந்தர் பலரால் தமிழில் மறைகள் வகுக்கப் பட்டன வென்பது,

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியற்பாலது. 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும்' என்னுந் திருக்குறளும் அதனை வற்புறுத்தும்.

"விதித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்"

என்ற தேவாரத்தால் தமிழ்முதனூல், நான்மறை யென்பது துணியப்படும்.

இதுகாறுங் கூறியவாற்றால் ஆதியிலே முதனூலாகிய நான் மறையும், பிறமறைகளும், தமிழ் மொழியிலே மெய்யுணர்வு பயக்கும் சமய நன்னூல்களாக நிலவின வென்பது பெறப்படும். இக் கொள்கையைப்பற்றிய விரிவுரை, திருநான்மறை விளக்கத் துள்ளும், பிறண்டுங் கண்டுகொள்க. இத்தமிழ் மறைகள், மறைந்தொழிந்த காலத்தே வடமொழி வேதங்களும், பிறவும் தமிழ் நாட்டிலே வழங்க நேர்ந்தன. அப்போது தமிழ் மக்கள் தமது பண்டைக் கடவுள் நெறியின் உண்மை யியல்பு அறியா ராய்த் தியங்கி மயங்கினர். அம்மயக்கத்தைத் தீர்த்து உறுதிப் பொருளினை யாவரும் பொதுமையி னினிதுணர்தற் பொருட்டு ஆசிரியர் திருவள்ளுவனார் பொதுமறையாகத் தமது திருக் குறள் நூலை இயற்றியருளினார். இந்நூலினைத் திருக்களிற்றுப் படியார் ஆசிரியர் தமது சைவசித்தாந்தக் கொள்கைக்கு முதனூலாகக் கொண்டனர். தேவாரத்துள்ளும் 'அகர முத

லானே' என்றும், 'ஐயுணர் வெய்தி மெய் தேறினர்' என்றும் வருவன திருக்குறட் கருத்துக்களாதல் காண்க. திருவள்ளுவர் காலத்திற்குப்பின் சமண் சமயம் புத்த சமயம் எங்கும் பரவவே திருக்குறளினுல் உணர்த்தப்பட்ட கடவுணெறிக் கருத்துக்களைத் தமிழ்மக்கட் பெரிதும் மறப்பாராயினர். அக்காலத்து நிலவிய வடமொழி நூல்களாகிய சுருதிகளும், தந்திரங்களும் சிவநெறி யின் பெருமையினைத் தெளிவுறப் புலப்படுத்தாமையின் பண் டைத் தமிழ்மறைக் கருத்துக்களை இனிது விளக்கிச் சிவப் பே ரொளியை எங்கும் நிலைநாட்டவல்ல சமயப் பெருந்தலைவர்கள் இந்நாட்டின்கண் தோன்றுதல் இன்றியமையாததாயிற்று. ஆத லின் சிவபெருமானது திருவருளினுலே சைவத்திருநெறித் தலை வர்கள் அவனியிற் புகுந்து எம்மனோரை யாட்கொள்வான் செந் தமிழ் மறைகள் ஓதுவாராயினர்.

திருமறைக்காட்டிலே பண்டை யருமறைகள் அடைத்த திருக்கோயிற் கதவுகளைத் திறக்க அம்மறையோதும் பேரன் பினர் இலராதலின் திருக்கோயிற்குட் செல்வதற்கு வேறுவழி வகுக்கப்பட்டதென்பது ஆசிரியர் சேக்கிழார் பெருமான்,

"அருமறைக டிருக்காப்புச் செய்து வைத்த
வக்கதவந் திறந்திடவம் மறைக ளோதும்
பெருகியவன் புடையடியா ரணைந்து நீக்கப்
பெறுமையினு லன்றுமுத லாகப் பின்னை
யொருபுடையோர் வாயிலமைத் தொழுகுந் தன்மை"

என்று மொழிந்தமையாற் றெளியப்படும். அக்கதவங்களை ஆளுடைய பிள்ளையாரும், ஆளுடைய அரசரும் தமிழ்மறை ஓதித் திறந்தனர். ஆதலின் அவரது மறைமொழிகள் பண்டை யருமறைகளோடு ஒப்பவலியுடைத்தென ஊகிக்கப்படும். அவர்களது திருமுறைகளே பண்டை முதனூல்களோடொப்பக் கருதிச் சீராட்டிப் பாராட்டத்தக்க அருமறைகளாம்.

"சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே"

என்ற அடியிலே புகலி மன்னர் தமது செந்தமிழத் திருப்பதிகத்தை 'மறையிலங்கு தமிழ்' என்றது காண்க. சித்தஞ் சிவமாகவும், செய்தனவே தவமாகவும் பெற்ற பேரன்பர்களது அருளுரை இறைவனது திருமொழியாகவே கொள்ளத் தக்கனவென்பது 'எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந்தேறிய நிமலன்' என்று அருளிச் செய்தமையால் துணியப்படும். இத் தேவாரத் திருமுறைகளின் பெருமையை உமாபதி சிவனுர் திருமுறைகண்டபுராணத்துள்,

> "கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்
> கைகாணு மந்திரம் கண்ணுதலோன் கூறல்"

என்றும்,

> "அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேட
> மதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
> பரபதமுந் தற்பரமும் பரனே யன்றிப்
> பலரில்லை யென்றெழுதும் பனுவல்"

என்றும் இயம்பியவாற்ருல் இனிது புலனும். இன்றுள்ள சைவ நூல்கள் யாவற்றுள்ளும் முதனூலெனச் சிறப்பாகக் கொள்ளத் தக்கவை தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளே யாம். தமிழ் மொழிக்குப் பன்னிரு எழுத்துக்கள் உள்ளன போலத் தமிழரது கடவுணெறியாகிய சைவசித்தாந்தத்திற்கு உயிர் நூலாக இலங்குவன பன்னிரு திருமுறைகளேயாம். புறவிருளை நீக்கும் பகலவன் பன்னிருவர் என்னும் கொள்கைக்கிணங்க அகவிருளை நீக்கும் அறிவுச் சுடர்கள் பன்னிரு திருமுறைகளாகும். மன்னுயிர்கள் தாமே முயன்று அறியவொண்ணுத பரம்பொருள் இயல்பினைக் கழிபெருந் தவத்தின் பயனைப் பெற்ற திருவருள் கொண்டு தமது அநுபவத்திற் கண்டுணர்ந்த பேரறிஞரது அருளுரைகளின் தொகுதியாக இப்பன்னிரு திருமுறைகள் அமைந்ததுபோல் ஒரு நூற்ருெகுதியும் பிறமொழிகளில் அமைந்திலது. வடமொழிமறைகள் இத்திருமுறைகள் போலக் கடவுள் அடியார்க்கு எளிவந்து அருள் செய்யுந் திறத்தை இனிது விளக்கவில்லை.

காணு மாறுமற் றரிதரி தாமெனக் கணிப்பிலாப் பலசாகைக்
கோணை மாமறை யாவையுந் தனித்தனி குழறுவ தல்லாமன்
மாணு மாறிது தானெனக் காட்டிட வல்லதே யிளங்காட்டிற்
பேணு நாயக னடியவர்க் கெளியவன் பெற்றியை முறையோடே.

(இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி-எச)

என்னும் சிவஞான சுவாமிகளது திருவாக்கா னுணர்க. ஆதலின் அவற்றை இயற்றிய பெரியாரும் பன்னிரு திருமுறை யாசிரியர்கள்போல உலகிற்குப் பெருநன்மை செய்திலர். வடமொழியாகமங்களின் முழுவடிவத்தைக் காண்பது எம்மனோர்க்கு அரிதாயிருக்கின்றது. அவைகளின் முதனூல்கள் தமிழிலே இருந்தன எனக் கருத இடமுண்டெனினும் அவைகள் இப்பொழுது கிடைத்திலவாகலின் அவற்றாற் போந்த பயனும் பன்னிரு திருமுறைப் பயனுக்கு நிகராகாது. இப்போதுள்ள ஆகமங்கள் திருக்கோயிலினையும், சிவவழிபாட்டினையும் ஒழுங்குபெற அமைத்தற்குப் பயன்படுவனவேயன்றிச் சிவபரம்பொருள்மாட்டுப் பன்னிரு திருமுறைபோலப் பேரன்பு விளைக்குந் தகையனவல்ல. பன்னிரு திருமுறையுட் போந்த உண்மைகளைச் சாத்திரமுறையால் விளக்குஞ் சைவசித்தாந்த நூல்கள் கற்றல் கேட்டல்வல்ல அறிஞர்க்குப் பெரிதும் பயன்படுதல்போல பிறர்க்குப் பயன்படுவனவல்ல. பன்னிரு திருமுறைகளே கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய், அன்பிலாதவர்க்கும் அன்பினையும் அறிவினையும் விளைக்கும் பான்மையன. பன்னிரு திருமுறைகளுக்குப் பின் வழிநூல் செய்த ஆசிரியர்கள் பன்னிரு திருமுறைகளையே தமக்கு மேற்கோளாகக் கொண்டனர்.

"மொழிக்குமொழி தித்திப்பாக மூவர்சொலுந் தமிழ்கேட்கும்
திருச்செவிக்கே மூடனேன் புலம்புவதும் முற்றுமோதான்"

என்று தாயுமானவடிகள் அருளியதாற் காண்க. ஆதலால் பன்னிரு திருமுறைகளோடு ஒத்த சிறப்புடைய நூல்கள் வேறு இல்லை யென்பதே கருதற்பாலது. ஒப்புயர்வற்ற இப்பேரருட் டிருமுறைகளைச் சைவநன்மக்கள் யாவரும் தமக்குரிய கடவுட் பனுவலாகப் போற்றி யோதிப் பயன்பெறுங் கடப்பாடுடையர்.

பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகளும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரமாகும். இத்தேவாரத்திருப்பதிகங்கள் தோத்திர இலக்கியங்கள்யாவற்றினுஞ் செந்தமிழ்ச் சொல்வளத்தினும், பெருமித உயர்நடையினும் இயற்கை வனப்பினைப் பலபடப்பகுத்துச் செவ்விதின் விளக்குவதினும் இணையற்றதாய், இம்மை மறுமை வீடென்னும் மும்மைக்கும் பெருநலம் பயப்பதாய், இசைவளம் மிக்கதாய், கற்பார்க்கும் இனிமையும் மகிழ்ச்சியும் தருவதாய் அமைந்துள்ளன. ஒவ்வொரு பதிகத்திலும் இறுதி நான்கு பாடல்களும், முறையே இராவணனுக்குச் சிவபிரான் அருள்புரிந்த திறத்தையும், மாலயன் அவரது அடிமுடி தேடிய திறத்தையும், புத்தம் சமணம் முதலிய புறப்புறச் சமயங்களின் குறை பாட்டினையும் திருப்பதிகப் பயனையும் தெரிவிப்பன. இவைகளுள் 8-ம் பாட்டானது குற்றஞ்செய்யினும் அதனை யுணர்ந்து கடவுளுடைய திருவடிகளை யடையின் அவர் அதனைப் பெற்றுத் தம்மைச் சார்ந்தாரை ஆட்கொண்டருள்வர் என்று அறிவிக்கு முகத்தால் கடவுள் பேரருளாளர் என்பதை விளக்குவது. 9-வது பாட்டு ஆணவமலப் பிணிப்பினால் வருங் கேட்டினை விளக்குவது. 10-வது பாட்டு உயிர்கள் தாமாகக் கடவுளுடைய திருவருட் டுணையின்றித் தாமாக உய்தி கூடுந் தன்மையுடையன வல்லதென்பதை நிலைநாட்டுவது. 11-வது பாட்டாகிய திருக்கடைக் காப்பு கடவுள் வழிபாட்டினால் உயிர்கள் பெறும் போகம் வீடெனும் இருவகைப் பேற்றையுஞ் சுட்டுவது. ஆகவே, இந்நான்கு பாட்டானும் பதியியல்பும், பாசவியல்பும், பசுவியல்பும், பயனியல்பும் கூறியவாறாகும்.

தாம் பெற்ற பேரின்பத்தினை வையகமனைத்தும் பெற்றுய்ய வேண்டுமென்ற பெருங் கருணையினாலே மன்னுயிர்களுக்கு உறுதி கூறுதற் பொருட்டுத் தமது திருப்பெயரைத் திருக்கடைக்காப்பிலே அமைத்துப் பாடியுள்ளார் நமது காழியர்கோன்.

---

# தொல்காப்பியகாலம்

[மறைமலையடிகள்]

(உக - ம் பக்கத் தொடர்ச்சி)

தொல்காப்பியத்திற்குப் பாயிரச்செய்யுள் உரைத்த பனம் பாரனார் "பல்புகழ் நிறுத்த படிமையோனே" என்பதில் தொல் காப்பியனாரைப் 'படிமையோன்' என்று கூறினமையானும், 'படிமை' என்னுஞ்சொல் சமண் நூல்களிலன்றி வேறு வட மொழி தென்மொழிப் பழைய நூல்களில் தவவொழுக்கத்திற் குப் பெயராய் வழங்காமையானுந் தொல்காப்பியர் சமணரே யாதல் வேண்டுமென்றார் கூற்றை முதற்கண் ஆராய்வாம். 'படிமை' என்னுஞ் சொல் 'ப்ரதிமா' என்னும் வடசொல்லின் திரிபாகுமென்பது எல்லார்க்கும் உடன்பாடாம்; இது 'படிவம்' எனவுந் தமிழிற்றிரிந்து வழங்கும். "மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய" என்னுஞ் சூத்திரவுரையில் (தொல்காப்பியம், பொ ருள், ௩௰), உரையாசிரியர் இளம்பூரணர், "'படிமை' என்பது 'ப்ரதிமா' என்னும் வடமொழித்திரிபு; அது தேவர்க்கு ஒப்புமை யாக நிலத்தின்கட்செய்து அமைத்த தேவர்மேல்வந்தது" என்று உரைகூறியவாற்றால் இச் சொல்லின் உண்மை தெளியப்படும். படவே, 'படிமை' என்பது கடவுளர்க்குப் பிரதியாக அதாவது கடவுளரையொப்ப அமைத்த வடிவங்களை உணர்த்துதல் பெற் றாம். பெறவே, இச்சொல் முதலில் ஒரு தெய்வத்தோடு ஒத்த வடிவத்தையும், பின்னர்த் தெய்வவடிவம் போல்வாராகிய அருந் தவத்தோரையும், அதன்பின் அவ்வருந் தவத்தோர்க்குரிய தவ வொழுக்கத்தையும் உணர்த்துதலும் பெற்றாம். "பாரோர் காணப் பலர் தொழ படிமையன்" (சிலப்பதிகாரம், கரு, கருஅ) என்புழி அச்சொல் தெய்வ வடிவத்தினையும், "கூறினை பெருமநின் படிமையானே" (பதிற்றுப்பத்து, எச) என்புழி அது தெய்வ வடிவத்தோடொத்த தவவொழுக்கத்தினையும், "இஃதிவர் படிவம் ஆயின்" (புறநானூறு, ௩௪௪) என்புழித் தவவொழுக்கத்தின் பாலதான நோன்பினையும், "தண்டொடு

பிடித்த தாழ் கமண்டலத்துப், படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (குறுந்தொகை, கடுசு) என்புழித் துறந்த பார்ப்பனரின் தவவொழுக்கத்தினையும் அஃதுணர்த்துதல் காண்க. "கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்" என்னும் முல்லைப்பாட்டின் ங எ-ஆம் அடியினுல் அந்தணரிற் காவியாடை யுடுத்தாரின் தவவடிவத்தைப் படிவம் என்னுஞ்சொல் உணர்த்துதலும் நன்கு விளங்காநிற்கும். மேற்காட்டிய குறுந்தொகைச் செய்யுளால் அவ் வந்தணத் துறவோர் முக்கோலுந் தண்ணீர்க்கரகமுங் கைக்கொண்டிருப்ப ரென்பதூஉம் இனிது புலனும். கலித்தொகையிற் போந்த,

"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித் தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவல் அசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன் மாலைக் கொளை நடை அந்தணீர்!"

(பாலைக்கலி, அ) என்பதனுலும் பண்டைக்காலத்துத் தண்டமிழ் நாட்டு அந்தணரில் துறவொழுக்கத்தின் பாலராய் நின்றார் தவவடிவம் நன்கெடுத்து மொழிந்திடப்பட்டமை காண்க. ஆசிரியர் தொல்காப்பியனுருந் தமது காலத்திருந்த அந்தணர்க்குரிய வடிவங் கூறுகின்றுழி,

"நூலே கரகம் முக்கோன் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய" (மரபியல், எ0)

என்று ஓதுதலால், அக்காலத்து அந்தணரில் இல்லறத்தாருங் கூடத் தவவடிவங் கைக்கொண் டிருப்பரென்பது பெற்றும்.

பெறவே, அக்காலை அந்தணர் கொண்ட தவவடிவம் அப்பெற்றித்தாயது என்னை யென்பது ஆராயற்பாற்று. பண்டைத் தமிழ்மக்கள் காணவுங் கருதவும்படாத முழுமுதற் கடவுளைக் காணவுங் கருதவும் எளிதாம்படி தம்மையொத்த ஒரு மக்கள் வடிவில்வைத்து வழிபடலாயினர். அங்ஙனம் மக்கள் வடிவில் வைத்து அவனை வழிபடினும், அவன் மக்களுள் ஒருவனும் போலுமெனத் தம்மனோர் மயங்கிவிடாமைப் பொருட்டு, உல

கத் தோற்றத்திற்கட் புலனும் விழுப்பொருள்களையே அவன்றன் திருவுருவத்திற்குப் பல்வேறு உறுப்புகளாக்கினர். உலகத்தில் நடைபெறும் ஒழுக்கங்களெல்லாம் ஒளியுடைப் பொருள்களின் உதவியால் நடைபெறக் காண்டலின், அவ் வொளியுடைப் பொருள்களை அப் பெருமானுக்குக் கண்களாகக் கருதினர். உலகின்கட் காணப்படும் ஒளியுடைப் பொருள்கள்: ஞாயிறு, திங்கள், தீ என்னும் மூன்றுமேயாம்; ஆகவே, சிவபிரானுக்கு ஞாயிறு வலக்கண்ணாகவுந், திங்கள் இடக்கண்ணாகவுந், தீ நெற்றிக் கண்ணாகவுங் கொள்ளப்பட்டன. இம்மூன் றொளியுடைப் பொருள்களும் இறைவனுக்கு மூன்றுகண்கள்போல் விளங்குவதோடு, அருளொளியினனாகிய அவனுக்குத் திருமேனிபோலவும் பொலிதலால் அம் மூன்றும் அவ் வொப்புமை பற்றி அம் முழுமுதற் கடவுளாகவே வைத்து வணங்குதலும், வாழ்த்துதலுஞ் செய்யப்படும். இதுபற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார்,

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"
(புறத்திணையியல், ௩௩)

என ஓதினர். இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் மெய்யுரை கண்டிலர். நச்சினார்க்கினியர் 'கொடிநிலை' என்பதற்கு 'வெஞ்சுடர் மண்டிலம்' எனவும், 'வள்ளி' என்பதற்குத் 'தண்கதிர் மண்டிலம்' எனவும் மெய்யுரைகண்டு மொழிந்தனரேனுங், 'கந்தழி' என்பதற்கு 'ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்' என்று ஒருவாற்றாற் பொருந்தாவுரை கூறினார். 'கந்தழி' என்பது முழுமுதற் கடவுளை மட்டுமே உணர்த்துவதாயின் அவர் அதற்குக் கூறியவுரை பொருந்துவதேயாம். மற்றுக், கொடிநிலை, கந்தழி, வள்ளி என்னும் மூன்றனைவாழ்த்தும் வாழ்த்துரையுங் கடவுள் வாழ்த்தோடொப்பக் கருதுமாறு வரும் என்று ஆசிரியர் தொல்காப்பியனார் மேற்காட்டிய சூத்திரத்தில் அருளிச்செய்தலின், அம் மூன்றும் முதற் கடவுளாகா என்பது ஆசிரியர் கருத்தாதல் பெற்றாம். பெறவே, முழுமுதற் கடவுளாகாமல் முழுமுதற் கடவு

ளோடு ஒரு புடையொப்பக் கருதப்படுங் 'கந்தழி' என்பதற்கு முழுமுதற்கடவு ளிலக்கணமாகிய ஒருபற்றுக்கோ டின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்' என்பதனை ஏற்றுதல் ஆசிரியர் கருத்தறிந்த உரையாகாமையுந் தெற்றென விளங்கும். அற்றேல், மற்றென்னோ அதற்கு மெய்யுரையெனிற் கூறுதும்: 'கந்தழி' என்றது 'தீப்பிழம்பினையே' யாம்; அஃது அப்பொருள் தருமாறு யாங்ஙனமெனிற்; 'கந்து' எனுஞ்சொல் 'பற்றுக்கோடு' என்னும் பொருட்டாதல், "மறங் கந்து ஆக நல்லமர் வீழ்ந்த" (புறநானூறு, கூங) என்பதனாலும் அதனுரையாலும் அறியப்படும். 'அழி' என்பது அழிப்பது; எனவே, 'கந்தழி' என்பது 'தான்கொண்ட பற்றுக்கோட்டினைத் தானே அழிப்பது' என்பது பொருடருவதாகும். இனித், தீயானது தான்பற்றிய விறகினையுந், திரி, நெய்யினையும் அழித்துவிடுதல் எவரும் அறிந்ததேயாம். அதனாற், 'கந்தழி' என்பது தீப்பிழம்பேயாயிற்று. மேலும், ஞாயிறு திங்கள் என்னும் இரண்டு ஒளியுடைப் பொருள்களோடு இயைபுடையது அனற்பிழம்பேயல்லது பிறிதின்மையின் 'கந்தழி' என்பதற்கு அவ்விரண்டோடு இயைபு சிறிதுமில்லா வேறுபொருள் உரைத்தல் ஆசிரியர் கருத்துக்கு முற்றும் முரணுமென்க.

அற்றாயின், ஞாயிறு தீ திங்கள் என்னும் வெளிப்படைச் சொற்களால் கிளவாமற், கொடிநிலை கந்தழி வள்ளி என்னுந் திரி சொற்களால் ஆசிரியன் அவற்றைக் கிளந்தது என்னையெனின்; ஞாயிறு தீ திங்கள் என்னுஞ் சொற்கள் கற்றார் முதற் கல்லாதார் ஈறான எல்லாரானும் வழங்கப்படுதலின், அச்சொற்கள் ஒளியுடைய அப்பொருள்களின் கடவுட் டன்மையினை நினைவுறுத்த மாட்டா. ஆகலான், அருளொளியுருவினனாகிய இறைவன் அவ்வொளியுடைப் பொருள்களைத் தனக்குத் திருமேனியாகக் கொண்டு அவற்றின்கண் விளங்கித் தோன்றி எல்லா உயிர்களின் அறிவையும் மறைக்கும் புறவிருள் அகவிருள் இரண்டனையும் ஒட்டி அவை தமக்கு அவ்வறிவை விளங்கச் செய்தல் குறித்து, அம்மூன்றுங் கடவுட்டன்மையுடையவாதல் தெரிப்பார் அவை தம்மைக் கொடிநிலை கந்தழி வள்ளி யென்னும் பெயர்களாற்

சிறந்தெடுத்துக் கூறினர். அற்றேல், அச்சொற்கள் கடவுட் டன்மையினைக் குறிக்குமாறு யாங்ஙனமெனிற் காட்டுதும்: ‘கொடிநிலை’ என்னும் இருமொழித் தொடரிற் ‘கொடி’ என்பது கிழக்குத் திசையினை யுணர்த்துதல்,

> “பொய்தீர் உலகம் எடுத்த கோடி மிசை
> மையறு மண்டிலம் வேட்டனள்” (கலித்தொகை, கஉக)

என்று உரைகாரர் நச்சினார்க்கினியர் ஆண்டெடுத்துக் காட்டிய செய்யுளால் நன்கு விளங்கும். விளங்கவே, கீழ்த்திசைக் கண்ணே வந்து நிற்குங் கதிரொளியை அஃதுணர்த்துதல் புலனும். திங்களும் இல்லாத இரவின் எல்லையெல்லாங் கண்ணொளியை மறைத்த இருளால் அறிவொளியும் மறைபட்டு அயர்ந்துறங்கிய உயிர்த்தொகைகள் அத்தனையுங், கிழக்கின்கட் கதிரொளிவந்து நிலைபெற்ற அளவானே தங் கண்ணொளியுங் கருத்தொளியும் ஒருங்கு விளங்கப்பெற்று முயற்சியுடையவாதல் கண்டாமன்றே. இங்ஙனமாக உயிர்ப் பன்மைகளின் அறிவும் முயற்சியும் விளங்கி புடைபெறுதற்குக் கீழ்த்திசைக்கண் எழுந்து நிலையும் ஞாயிறு ஏதுவாதலின் அக் கீழ்த்திசைக் கதிரொளி கடவுட் டன்மையுடைய தென்பது அறிவுறுத்துதற்கே அதற்குக் ‘கொடிநிலை’ என்னுஞ் சொல்லைப் பேரறிவு மிக்க ஆசிரியன் வழங்குவானாயினன். ஞாயிறு என்னும் வழக்குச்சொல் கீழ்த்திசை மேற்றிசை இரண்டினும் நிற்கும் கதிரொளிக்குப் பொதுப் பெயராகலானும், மேற்றிசைச் சென்ற ஞாயிறு விரைவில் மறைந்து புறவிருள் அகவிருள்களை வருவித்தலின் அது கடவுட்டன்மையுடையதாகாமையானுங், கடவுட் டன்மை யுடையதென வைத்து வாழ்த்துதற்கு ஏற்புடையது கீழ்த்திசை ஞாயிறே யென்பதனை வலியுறுத்துவான் வேண்டி அப்பொருள் பயக்குங் ‘கொடிநிலை’ என்னுஞ்சொல்லை ஆசிரியன் அதற்கு விதந்தெடுத்துக் கூறினனென்பது. இதனானன்றே, ஆசிரியர் நக்கீரனார்,

> “உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
> பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்கு”

என்று திருமுருகாற்றுப்படையிலும், ஆசிரியர் இளங்கோவடிகள்,

"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் திகிரிபொற் கோட்டு
மேரு வலந்திரித லான்"

என்று சிலப்பதிகார முகத்திலுங் கீழ்த்திசை எழூஉஞ் செங்கதிர்ச் செல்வனை வாழ்த்துவா ராயினர் என்க.

இனி, மேலது போலவே தீ, நெருப்பு, அழல், தழல்முதலான சொற்கள் மக்கள் எல்லாரானும் வழங்கப்படுதல் நோக்கி, அவை அதன் கடவுட் டன்மையினை உணர்த்தா வென்றறிந்த ஆசிரியன், அதன் கடவுட் டன்மையினை யுணர்த்துதற் கேற்ற 'கந்தழி' என்னுஞ் சொல்லால் அதனைக் குறிப்பானாயினன். தனக்கொரு பற்றுக்கோ டின்றித் தான் எல்லாவற்றிற்கும் ஒரு பற்றுக் கோடாய் நிற்பதூஉந், தான்பற்றிய உயிரின் பருப் பொருளறிவினை யழித்து அவ் வறிவினை நுண்ணிதாக்கி அதனைத் தன்றன்மையால் நிற்கச் செய்வதூஉந், தான் எதனானும் பற்றப்படா அருவுமாய்க் கட்புலனானுந் தொடப்படுவதல்லாத உருவுமாய் இவ்வாறு இருதிறமும் விராய அருவுருவாய் நின்று திகழ்வதூஉம் எல்லாம்வல்ல இறைவ னியல்பாதல் போலத், தீப்பிழம்புந் தானிருத்தற்கு ஒருபற்றுக்கோடு வேண்டு மென்பது இன்றாய் எல்லா உயிர்ப்பொருள்களி னிருப்புக்குந் தாளுெரு பற்றுக்கோடாய் அவற்றினுள்ளும் ஏனைப் பொருள்களினுள்ளும் விரவி நிற்றலானுந், தான் பற்றிக்கொண்டு தோன்றும் விறகு திரி நெய் முதலியவற்றின் பருப்பொருட்டன்மையை அழித்து அவற்றை நுண்பொருளாக்குவதுடன் தான் பற்றி எரியுங்காறும் அவற்றைத் தன் நிறமாக வயங்கச் செய்தலானுந் தான் புலப்பட்டுத்தோன்றுவழி எங்கு முள்ள அருவாய் விளக்கு விறகு முதலியவற்றிற் புலப்பட்டுத் தோன்றிய வழியும் எவரானும் பிடிக்கப்படுவ தல்லாத உருவுமாய் இவ்வாறு அருவும் உருவுமாம் இருதிறமும் ஒருங்கு கலந்த இயல்பிற்று மாகலானுந் தீ கடவுட்டன்மை யுடையதாதல் துணியப்படும். இப் பெற்றித்தாந் தீப் பிழம்பின் இலக்கணத்தை உணர்த்துதற்கு

வாய்ப்புடைத்தாதல் பற்றியே ஆசிரியன் 'கந்தழி' என்னுஞ் சொற் கொண்டு அதனையுங் கடவுள் வாழ்த்தின்பாற் படுப்பானுயினன் என்க. இனி, ஞாயிறு திங்கள் என்னும் இருமண்டிலங்களுங்கூடத் தீத்திரளைகளே யாகலானும், தீ யொன்றுமே அவற்றின் விளக்கத்திற்கு ஏதுவாகலானுங் 'கொடிநிலை' என்னும் ஞாயிற்றிற்கும், 'வள்ளி' என்னுந் திங்களுக்கும் இடையே 'கந்தழி' என்னுந் தீப்பிழம்பின் வாழ்த்தை ஆசிரியன் வைத்திட்டானென்பதூஉம் அறியற்பாற்று.

இனித், திங்கள், நிலா, அம்புலி என்னுஞ் சொற்கள் எல்லாராலும் வழங்கப்படுதலின் அவை அவருள்ளத்தே கடவுள் நினைவினைத் தோற்றுவியா எனக் கருதி, அந் நினைவினைத் தோற்றுவித்தற்கு ஏற்ற 'வள்ளி' என்னுஞ் சொல்லால் அதனை ஆசிரியன் குறிப்பானுயினன். கதிரொளி வெம்மைகலந்த ஆற்றலை* உலகுயிர்களுக்குத் தராநிற்ப, நிலவொளி தண்மை கலந்த ஆற்றலை† அவற்றிற்கு வழங்கி அவற்றைப் பேணி வளர்த்தலின் 'வள்ளி' எனப்படுவதாயிற்று. அற்றேற், கதிரவனும் வெம்மை கலந்த ஆற்றலை வழங்கும் வண்மை (ஈகை) யுடையனுகலின் அவனையும் 'வள்ளி' எனக் கூறல் வேண்டுமாம் பிறவெனின்; அற்றன்று; கொடுமையொடு கொடுக்குங் கொடையினைக் கொடை என்று எவரும் உயர்த்துக்கூறுர், அஃது இன்றியமையாக் கொடையேயாயினும். மற்று, அகங்கனிந்து முகம்மலர்ந்து குளிர்ப்பக்கூறிக் கொடுக்குங் கொடையினையே எவரும் மகிழ்ந்து புகழாநிற்பர். அங்ஙனமே, ஞாயிறு கொடுக்கும் மின்னுற்றல் இன்றியமையாத தொன்றேயாயினும், அது வெம்மையோடுகூடியிருத்தலின் அதனை 'வண்மை' என ஆசிரியன் கொண்டிலன்; மற்றுத் திங்கள் வழங்குந் தண்மைகலந்த மின்னெளி எவரானும் விரும்பி ஏற்கப்படுங் குளிர்ச்சியுடைமையின் அதனையே ஆசிரியன் 'வண்மை' என வேண்டினுன். அதுவேயுமன்றிக், கதிரொளி வெய்யதாகலின், அஃது ஆண்டன்மைப்பாற்படும்; நிலவொளி தண்ணிதாகலின் அது பெண்டன்மைப் பாற்படும்‡.

* Positive electricity. † Negative electricity.

‡சதபதபிராமணம் க, க, க, உ௰.

அப்பெண்பாற் றன்மையினை 'வள்ளி' என்னுஞ் சொல் இகர விகுதியால் நன்குணர்த்துதலின், அது திங்கள் மண்டிலத்தின் வண்மைத் தன்மையினை அறிவிக்கும் பெயராதற்குப் பெரிதும் ஏற்புடைத்தாதல் காண்க. ஈண்டுக் காட்டிய இவ்வியல்புகள் "ஞாயிறு நெருப்பின் றன்மையும் ஆண்டன்மையும் உடைமையானும், திங்கள் நீரின்றன்மையும் பெண்டன்மையும் உடைமையானு மென்பது. அல்லதூஉம், வெண்கதிர் அமிர்தந் தேவர்க்கு வழங்கலானும் 'வள்ளி' என்பதுமாம்" என்று நச்சினார்க்கினியர் கூறியவுரையானும் புலனாதல் கண்டுகொள்க*. இறைவன் ஒருபால் ஆண்டன்மையனாயிருந்து அழித்தற் றொழிலினையும், மற்றொருபாற் பெண்டன்மையனாயிருந்து படைத்தல் காத்தல்களையுஞ் செய்கின்றனனாகலின், அவன்றன் ஆண்கூற்றின் பாற்பட்ட 'கொடிநிலை' போல, ஈண்டு 'வள்ளி' என்பது அவன்றன் பெண்கூற்றின் பாற்பட்டு நிற்றலும் நுணுகியுணர்ந்து கொள்க.

---

## †வள்ளுவர் வாய்மொழி

[பண்டிதர், ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

வள்ளுவர் வாய்மொழி என்னும் தொடர் திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறள் என்னும் பொருளதாகும். திருவள்ளுவ மாலையில் 'வள்ளுவர் வாய்மொழி மாண்பு' 'வள்ளுவர் வாய்மொழி மாட்டு' என வருதலுங் காண்க. வாய்மொழி என்பது மெய்யுரை என்னும் பொருளதுமாம். திருவள்ளுவரைப் பொய்யில் புலவர் என்றும், அவரியற்றிய திருக்குறளைப் பொய்யா மொழி என்றும் சான்றோர்கள் போற்றி வந்திருக்கின்

* தொல்—புறம், ஙரு-ம் சூத்திர உரை.

† திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் ௰, சு-ம் ஆண்டுகளின் விழாவின் முதல் நாளில், உயர்திரு. வாலையானந்த சுவாமிகளின் தலைமையிற்கூடிய பேரவையில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

றனர். 'திருவள்ளுவர் மொழிந்த பொய்யாமொழி' என்னுந் தொடர் திருவள்ளுவ மாலையில் உள்ளது. நல்லிசைப் புலவராகிய கூலவாணிகன் சாத்தனார் தாம் இயற்றிய மணிமேகலைக் காப்பியத்தில்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்"

எனத் திருவள்ளுவரைப் பொய்யில் புலவன் என்றும், திருக்குறளைப் பொருளுரை யென்றும் கூறியிருத்தலுங் காண்க. பொருள் என்பது மெய்ம்மை என்னும் பொருளதாதலை 'பொருள்சேர் புகழ்' என்பதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையாலறிக. இத்தகைய மெய்ந்நூலை இயற்றிய ஆசிரியரது வரலாறாக இப்பொழுது நாம் அறியக்கிடப்பது ஒன்றுமில்லை யென்றே சொல்லலாகும். இவரைப்பற்றி வழங்கும் கதைகள் பலரும் அறிந்தனவாகலின் அவற்றை இங்கெடுத்துக் கூறுகின்றிலேன். அவையெல்லாம் வள்ளுவனார் காலத்துடன் தொடர்புற்றெழுந்த சான்றுகளுடன் கூடியனவல்ல. அவை எங்ஙனமாயினும் அவரது நெய்தற்றொழில், மனையறமாண்பு என்பவற்றைக் குறிக்கும் கதைகள் சிறந்த நீதியை அறிவுறுத்துவனவாகலின் அவற்றைப் போற்றிக் கொள்வதில் இழுக்கொன்று மில்லை.

இனி, ஆராய்ச்சி முறையிலே அவருடைய காலம், இடம், பிறப்பு, மதம் என்பன குறித்து எனக்குத் தோன்றுவனவற்றைச் சுருக்கமாகக் கூறுகின்றேன். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டஞ் சமைத்து வழிபட்ட நாளில் அங்கு வந்திருந்த மன்னர்களில் 'கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்' ஒருவனாதல் கொண்டு சிலப்பதிகார மணிமேகலைகளின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டென்று துணியப்படுகின்றது. மணிமேகலை ஆசிரியர் திருக்குறளை மேற்கோளாக எடுத்தாண்டது முன்பே காட்டப்பெற்றது. இவ்வாற்றால் வள்ளுவனார் கி. பி. முதல் நூற்றாண்டில் விளங்கினராவரெனக் கருதுதல் பொருந்தும். வேறு தடையில்வழி இன்னும் ஒன்றிரண்டு நூற்

ருண்டுகள் முன்னாகக் கூறுதலும் இழுக்கின்றும். இவர் பிறந்த இடம் திருமயிலாப்பூர் என்பது வழக்கு. 'செந்நாப்போதார் புனற்கூடற்கச்சு' என்பது கொண்டு இவர் மதுரையிற் பிறந்தாராவர் எனக் கருதுவாருமுளர். இவர் மதுரையிற் பிறந்தமையாலோ, அன்றி அங்குச் சிலகாலம் வதிந்தமையாலோ, அங்கிருந்து திருக்குறளை அரங்கேற்றினமையாலோ கூடற்கு அச்சு என்று கூறப்பெற்றாராதல் வேண்டும். இவர் பிறப்புப் பற்றிப் பலர் பலவாறு கூறுவர். திருவள்ளுவ மாலைச் செய்யுள் ஐம்பத்து மூன்றுள் நாற்பத்தாறு செய்யுட்களில் வள்ளுவர் என்னும் பெயர் வந்துளது. கல்லாடத்தினும், தொல்காப்பியவுரை முதலியவற்றினும் இப்பெயரானே இவர் கூறப்பெறுகின்றார். வள்ளுவர் என்பது தமிழ்நாட்டு மக்களுள்ளே ஓர் குடியினைரைக் குறிக்கும் பெயராதலை இருவகை வழக்கினும் அறியலாகும். பழைய தமிழ்ப் பெரியார் பலர் குடிப்பெயரால் வழங்கப்பெறுதலும் பலருமறிந்ததே. இன்ன காரணங்களால் இவர் வள்ளுவக்குடியிற் பிறந்தா ரென்பது தெளிவாகின்றது. குடிப்பெயராகிய சிறப்புப்பெயரே பின் இவர்க்கு இயற்பெயர் போன்று ஆயினமையின் 'தெய்வப் புலவன் திருவள்ளுவன்' என அதனை இயற்பெயராகக் கொண்டு உரையாளர்கள் எடுத்துக் காட்டுவாராயினரென்க. வள்ளுவன் என்பதற்கு வண்மையுடையோன் என்று பிற்காலத்தார் சிலர் பொருள் கூறுவாராயினர். வண்மையுடையோன் என்ற பொருளில் வள்ளல், வள்ளியோன் என வழங்குதலன்றி, வள்ளுவன் என யாண்டும் வழங்கக் காணமையின் அதனைப் பொருளெனக் கொள்ளுமாறில்லையென்க. இவரது சமயங் குறித்தும் பல்வேறு கொள்கைகள் உண்டு. கடவுள் வாழ்த்திலே 'மலர்மிசை யேகினன்' 'அறவாழி யந்தணர்' என்று கூறியிருக்கும் கடவுட் பெயர்களும், வேறு சில ஏதுக்களும் திருவள்ளுவர் சமண ரென்பதனைக் காட்டுமென்றும், பௌத்த ரென்பதனைக் காட்டுமென்றும் ஒவ்வொரு சாரார் கூறுவர். வள்ளுவனர் உலகிற்கு முதலாகக் கடவுளுண்டென்பது, வேள்வியை ஒத்துக்கொள்வது முதலிய காரணங்களால் அக் கொள்கைகள் மறுக்கப் படுகின்றன. இவர் இப்பொழுது

இந்துமதம் என்னும் பெயரால் வழங்கும் சமயத் தொகுதியுட் பட்டவரென்பதே ஒரு தலையாகத் துணியற்பாலதாகின்றது. இச்சமயங்களுள்ளும் இவரைச் சைவரென்று கூறுதற்கு அடிப் பட்ட ஆட்சி வலியுடைத்தாய் நிற்கின்றது. இவரியற்றிய நூலொன்று கொண்டே இவரை வைணவரல்லரென்று மறுத் தற்கிடனில்லையெனக் கருதுகின்றேன். சைவசமயநெறித் தலை வர் சிலர் திருக்குறளைத் தங்கள் சமயநூற் பொருண்மைக்கும் மேற்கோளாக எடுத்துக் காட்டுதலும், சைவ தவ வடிவமாகத் திருவுரு நிறுவி இவர் வழிபடப் பெறுதலும், நாயனர் என்று பெயர் தந்து தமிழ் மக்களால் வழங்கப் பெறுதலும் போல்வன சைவரென்னும் ஆட்சியின் பாலவாம். எனினும் இவரியற்றிய நூலானது உலகத்தாரனைவர்க்கும் பொதுவாகிய தொன்றென் பது பலரும் இதனைப் பொதுமறை யெனப் போற்றுதலானே அறியலாகும்.

"ஒன்றே பொருளென்னின் வேறென்ப வேறென்னின்
அன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென்ன
எப்பா லவரும் மியைபவே வள்ளுவனர்
முப்பான் மொழிந்த மொழி"

எனத் திருவள்ளுவமாலையிலும்,

"சமயக் கணக்கர் மதிவழி கூறா
துலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன்"

எனக் கல்லாடத்திலும் கூறியிருப்பன சிந்திக்கற்பாலன.

இனி, ஆசிரியர் வரலாற்றை இவ்வளவில் நிறுத்தித் திருக் குறளின் மாண்புகளில் இச்சிறிது பொழுதில் இயலுமளவு கூறத் தொடங்குகின்றேன். திருக்குறளின் மாண்பெல்லாம் ஆசிரியர் மாண்பாமென்பதும் கடைப்பிடிக்க. திருவள்ளுவர்க்குப் பின் றோன்றிய ஆசிரியர்களில் இந்நூலைப் போற்றாதார் யாருமிலர். பெருங்காப்பியங்களியற்றிய புலவர் பெருமக்களும், இறைவன் அருட்கடலிற்றிளைத்து நின்று பதிகங்கள் பாடிய பேரருளாளர்

களும், கடவுள் உயிர் உலகம் என்பவற்றின் இயல்பினைத் தெரிவிக்கும் உண்மை நூல்களியற்றிய ஆசிரியர்களும், மற்றுள்ள புலவர்களும் திருக்குறட் பாக்களையும் தொடர்களையும் தங்கள் செய்யுட்களில் எடுத்தமைத்து அழகு படுத்தியிருக்கின்றனர்; அதன் ஆணை வழியில் நின்று அதனை மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கின்றனர். திருவள்ளுவரையும் திருக்குறளையும் எல்லையின்றிப் புகழ்ந்து பாராட்டியிருக்கின்றனர். ஒப்புயர்வற்ற பெருங்காப்பிய மியற்றிய கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர் தமது இராமாயணத்தில் எத்தனையிடத்தில் எத்தனை திருக்குறட் பாக்களை எத்தனை முறையாக அமைத்திருக்கின்றனர் என்பதனை நோக்குவார்க்குத் திருக்குறளானது கவியுலகத்தை எங்ஙனம் ஆட்கொண்டிருக்கின்றதென்பது புலனாகும். இற்றை நாளிலோ ஆங்கிலம் முதலிய மேனாட்டு மொழிகள் பலவற்றிலும், வடமொழி, தெலுங்கு, மலையாளம் முதலியவற்றிலும் திருக்குறளை மொழி பெயர்த்துப் படித்துப் பயனெய்தி வருகின்றனர். பண்டை நாளிலேயிருந்த தண்டமிழ்ப் புலவர் பலரும் இதனை ஒப்புயர்வற்ற நூலாகப் பாராட்டியதேயன்றி, இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த மேனாட்டுப் புலவரொருவரும் 'திருக்குறள் போன்றதொருநூல் வேறெந்நாட்டு மக்களிடத்தும் காணப்படுவதின்று' என்று மனமுவந்து கூறும்படி இதன் புகழ் யாண்டும் விஞ்சிப் பரப்பதாயிற்று. இவ்வாறெல்லாம் பலரும் ஒருபடித்தாய் இந்நூலைப் பாராட்டுதற்கு இதன்கட் காணப்படும் சிறப்பியல்புகள் என்னை? இவ்வினாவிற்குச் சில மொழிகளில் விடையிறுத்து விடுவதென்பது எளியதொன்றன்று. பன்னாற் பயிற்சியுடையராய் இந்நூலைப் பல்காலும் பயின்றுவரும் மதிநல முடையார்க்கு இதன் ஈடு மெடுப்புமில்லாத சிறப்பியல்புகள் விளங்கும். ஈண்டு சிற்றறிவிற் கியைந்தவாறு ஒன்றிரண்டு காட்டலுறுகின்றேன். 'எல்லாப் புலவர்க்கும் வெண்பாப் புலி' என்றோதப்படும் வெண்பா என யாப்பினுள்ளும் அளவிற்சிறியதொரு குறட்பாவைக் கருவியாகக்கொண்டு, கூறக் கருதிய பொருட் பரப்பை யெல்லாம் எவ்வகைக் குற்றமுமின்றி, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல் முதலிய அழ

கெல்லாம் பொருந்தக் கூறிவைத்திருப்ப தொன்றே ஆசிரியரது தெய்வப் புலமையின் பெற்றியைத் தெரிவிக்கப் போதியதாகும். மற்று, இந்நூலின்கண், ஒன்றுக்கொன்று சேய்மையவாகிய உலகியற்றுறைகளனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளத் தெளிய வுணர்த்தும் உலகியலுணர்வின் நிறைவு காணப்படுகின்றது. இதற்கு உதாரணமாகச் சில காட்டுகின்றேன்.

"தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்"

என்பது உழவின் நுணுக்கமான செய்தி யொன்றை யுணர்த்துவது.

"நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்பது மருத்துவம் புரியும் திறப்பாட்டை விளக்குவது. இத்துறைகளில் இவ்வகை யுணர்வுபெற்ற ஆசிரியர் அரசியல் கூறுவதைக் காணுங்கள்.

"அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்"

"வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்"

இவ்விரண்டு செய்யுட்களும் அரசியலில் எவ்வளவு விரிந்தனவும் இன்றியமையாதனவுமான செய்திகளை அகப்படுத்துள்ளன. இங்ஙனமாக இருநூற்றைம்பது பாக்களால் அரசியலும், நூறு பாக்களால் அமைச்சியலும் கூறலுறுகின்ற ஆசிரியர் எவ்வளவு பொருட்களை ஆராய்ந்து முடிவுகட்டி யிருப்ப ரென்பதனைச் சிந்தித் துணர்மின்.

"சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
ஊக்க மழிப்ப தரண்"

என்பது அரணின் மாட்சியையும்,

"ஒற்றொற் றுணராமை யான்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்"

என்பது ஒற்றரை ஆளும் முறைமையையும் உணர்த்துவன.

இனி, நீதியை வற்புறுத் துரைக்கும் அழகிற்கு மூன்று பாக்கள் காட்டுகின்றேன்:

"கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து"

"ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து"

"ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை"

இனி, இந்நூலுட் கூறப்பட்டிருக்கும் உவமைகளை யாரால் விலை மதிக்கலாகும்? 'நவிறொறு நூனயம்போலும்' 'அறிதோ றறி யாமை கண்டற்றால்' 'தம்மிலிருந்து தமதுபாத் துண்டற்றால்' 'எழுதுங்கால் கோல்காணாக் கண்போல்' என்னும் உவமைகள் பலமுறை சிந்தித்து இன்புறற் குரியவை.

"கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேங் கரப்பாக் கறிந்து"

"உள்ளத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து"

என்பன காதலின் சிறப்பை எவ்வளவு அருமையாக விளக்கு கின்றன!

இனி, மக்கள் யாவரும் உயர்நிலை யெய்துதற்குரிய பொது வான நெறிகளை இவ்வாசிரியர்போற் கூறினார் யாவர்?

"பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று"

"எனைத்தானு மெஞ்ஞான்று மியார்க்கு மனத்தானும்
மாணாசெய் யாமை தலை"

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

என்பன மக்களுள்ளத்தே என்ஞான்றும் நிலை பெறற்பால வாய்த் தலை சிறந்த குணநலத்தினைத் தெளிவித்தல் காண்க. உயிர்களைப் பற்றியுள்ள எவ்வகை அழுக்கையுங் கழுவித் தூய்மை செய்தற்கு இவர்கண்டு கூறிய கருவி வாய்மை என்பதாகும். இவ்வாய்மையின்கண் இவர் கொண்டுள்ள உறுதிப்பாடு,

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற"

என்பதனால் விளங்கும்.

இனி, வீடடையும் நெறியினை இவ்வாசிரியர் கூறியிருக்கும் முறை போற்றற்பாலதாகும். கல்வி யறிவும் குணநலங்களும் சான்ற கணவனும் மனைவியும் தலைசிறந்த அன்பினை யுடையவ ராய்க் கடியற்பாலவாய குற்றங்களைக் கடிந்து, விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவு முதலிய அறங்களைப் புரிந்து வாழவேண்டுமென் பதும், இல்லறம் முற்றுப்பெற்றவழி அன்பின் முதிர்ச்சியாகிய அருளினை யுடையராய்த் தவஞ்செய்ய வேண்டு மென்பதும் இவர் கருத்தாகின்றன. துறவின் முதற்படியாகிய தவவொழுக் கம் அல்லது நோன்புகளில் உறைத்து நிற்றலால் உளத்தூய்மை யுண்டாகும்; பின்னர் நித்த அநித்தப் பொருள்களின் வேறு பாட்டுணர்வு தோன்றும்; என்பதும், வீடடைதற் குரியார் இருவகைப் பற்றுக்களையும் அறவே துறக்க வேண்டும் என்ப தும், பற்றுக்களை விடுத்து மனம் அடங்கிய வழியும் மெய் யுணர்வில்லாவிடின் அதனாற் பயனின்றென்பதும், மெய்ந்நூற் பொருள்களைக் கற்றும் ஆராய்ந்தும் உண்மையை யுணர்ந்து மெய்ப்பொருளை இடையறாது சிந்திக்கவேண்டு மென்பதும், அச்சிந்தனையுள் அழுந்தி நிற்றலால் பிறவிக்குக் காரணமாய வினைப்பகுதிகள் ஒழியப் பேராவியற்கைத்தாகிய பேரின்ப வாழ்வு கிடைக்கு மென்பதும் தெய்வப் புலவரின் திருவுள்ளக் கிடைகளாகின்றன.

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என்னும் இக்குறட்பாவானது தியானம், சமாதி என்னும் இரு நிலைகளையும் உணர்த்துவதாகத் திருக்களிற்றுப்படியாரிலுள்ள ஓர் அழகிய செய்யுள் கூறுகின்றது; அதனை யெடுத்துக் காட்டி இச் சிற்றுரையை முடிக்கின்றேன்.

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகி னென்றமையாற்
சார்புணர்த லூனே தியானமுமாம்—சார்பு
கெடவாழுக னல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று."

---

# காஞ்சிப்புராண இன்கவித் திரட்டு*

## உரையுடன்

[ராவ் சாஹிப் V. P. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]



### விநாயகர் காப்பு

க. இருக வுட்டுளை வாக்குகார்க் கடங்கள்இங் குலிகக்
குருநி றத்திழி தோற்றமுன் குலாய்த்தவழ்ந் தேறிப்
பரிதி மார்பினிற் சமனொடு காளிந்தி பயிலும்
திருநி கர்த்தசிர் ஐங்கரக் களிற்றினைச் சேர்வாம்.

இதன்பொருள்:—(விநாயகக் கடவுளது யானைமுகத்தின் கண் உள்ள) இரண்டு கன்னத் துவாரங்களும் பொழிகின்ற கரியநிறமுடைய மதநீர்த்தாரைகள் சாதிலிங்க நிறம் (போலச் சிவந்தநிறம் உடைய (அவர்) மார்பிலே வழிகின்ற காட்சி, (சிவந்த) சூரியனுடைய நெஞ்சிலே (அவன் குழந்தைகளாகிய கருநிறமுள்ள) யமனும் யமுனையும் தவழ்ந்தேறி (விளையாடல்) செய்கின்ற அழகை ஒத்திருக்கும் ஐந்து கைகளுடைய (அந்த) யானை (முகக்கணபதி) யை இடைவிடாது சிந்திப்பாம் எ-று.

கவுள் - கன்னம், யானைக்கன்னம். வாக்குதல் - வார்க்குதல். கார் - கருமை. கடம் - மதம். இங்குலிகம் - சாதிலிங்கம். குரு - நிறம். நிறம் - மார்பு. குலாய் குலாவி யென்பதன் விகாரம். சமன் - எமன் - சூரியன் புத்திரன். காளிந்தி-யமுனை-சூரியன் புத்திரி - எமன் தங்கை. பயில்வு-செய்கை (தமிழ்ச்சொல் லகராதி). திரு - அழகு. சீர் - சிறப்பு. களிறு-யானை. சேர்தல்-இடைவிடாது சிந்தித்தல். (குறள் ௩-ன் உரை)

இந்த இன்கவித்திரட்டில், இனிமையான பாட்டுகளே யன்றி, நீதிபோதிப்பன, உலகியலுணர்த்துவன, பத்தி பயப்பன முதலிய பாட்டுக்களும் தேர்ந்தெடுத்துச் சேர்க்கப்படும். மாமரங்கள் மலிந்து வேறு விருக்கங்களும் விரவியுள்ள தோப்பு மாந்தோப் பெனப்படுவதுபோல, இத்திரட்டு இன்கவித் திரட்டெனப் பெற்றதென்க. (க)

௨. மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆயவேல் அவை அருள்மயம் ஆகும்மற் றதுபோற்
பேய னேன்பிதற் றுரையும்ஏ கம்பர்தம் பெருமை
தூய காதைஉள் உறுதலால் துகள்அறத் தோன்றும்.

இ - ள்:—(பிரபஞ்ச காரணமான) மாயை (யினின்று தோன்றி, அதனால் அம் மாயையின்) காரிய (மாகவுள்ள பிரபஞ்சப் பொருள்களுள்ளே கல் செம்பு முதலியவற்றா லாகிக் கேவலம் அசேதனமாகவுள்ள) விக்கிரகங்களும் சிவபெருமானது வடிவமானவை யென்றால் அவைகள் (வணங்குவோர்க்கு வேண்டும் பேறளிக்கும் அவருடைய) அருள் நிறைந்தனவாம்: அதுபோலப் பேயின் தன்மையுடையேன் பிதற்றுகின்ற வாசக (மாகிய இந்தக் காஞ்சிப்புராண) மும், (காஞ்சிபுரத்தில் திருக்கோவில் கொண்டருளி யிருக்கும்) திருவேகம்ப நாதருடைய (திருவருளொடு கூடிய மூர்த்தி தீர்த்தம் தலம் ஆகியவற்றின்) மகிமையும் (அவருடைய) புனித சரிதமும் அடங்கப்பெற்றதாதலால், குற்றம் நீங்க (ப் பெற்றதாகி) விளங்கும் எ - று.

உரு-விக்கிரகம் (தமிழ்ச்சொல் லகராதி). விக்கிரகம் வார்த்தலை உருவார்த்தலென்னும் உலக வழக்குண்மையும் காண்க. ஆயவேல் - ஆகியவையென்றால். உரை - சொல், காஞ்சிப் புராணம். பெருமை-மகிமை (மூர்த்தி மகிமை, தீர்த்த மகிமை, தல மகிமை). காதை - கதை. துகள் - குற்றம். அற - நீங்க. (௨)

௩ இழித்த சொற்புணர்த் தெளியனேன் இயம்பிய கவியும்
கழித்த ஐவகை இலக்கண வழுவுக்குக் காட்டாப்
பழித்தி டாதெடுத் தாளுவர் பல்வகைச் சுவையும்
கொழித்த நாவின ராகிய வழுத்தபு குணத்தோர்.

இ - ள்—(ஏனைய நூல்களெல்லாம் இலக்கண அமைதி உடையவை. ஆதலால் அவற்றுள் எதனினும் இலக்கணங்களுக்கு உதாரணங்கள் கிடையா. இந்நூலிலோ, எல்லா இலக்கண வழுக்களும் நிரம்ப இருக்கின்றன. ஆதலால், இந்நூலிலே) எளியேன் இசைத்திருக்கின்ற பாட்டுக்களைப் பழியாமல் வித்துவான்கள் (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும்) ஐந்து வகை இலக்கண (ங்களினும் உள்ள விதிகளுக்கு விரோதமான) வழுக்களுக்கு உதாரணமாக (க் காட்டுதற்கு அப்பாட்டுக்களை) எடுத்தாள்வார்கள்.

இழித்த சொல் புணர்த்து - இகழப்பட்ட (தாழ்வான) வார்த்தைகளைச் சேர்த்து. வழு-குற்றம். தபுதல்-நீங்குதல். (௩)

௪ எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோற்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட்போ லியையும்
பழுத்த கேள்வியோர் கைக்கொள்வ ரென்பதுபற்றி
விழுத்த நாணினேன் சிலகதை விளம்புதற் கிசைந்தேன்.

இ - ள்:—(வித்துவான்கள்) எழுத்துப் போலியையும் (போலிதானே யென்று தள்ளாமல்) எழுத்தைப்போலவே (ஒப்புக்கொண்டு) உபயோகிப்பார்கள்: அதுபோல, நான் (அறிவின்றி) மயங்கிக் கூறிய செய்யுட்போலியையும் முதிர்ந்த கேள்வி யுடையோர் (ஆகிய அந்த வித்துவான்கள்) அங்கீகரிப்

பார்க ளென்பதை (உறுதியாக) க் கொண்டு சில கதை (யாகிய இந்தப் புராணத்தைக்) கூறுதற்கு ஒருப்பட்டேன் எ-று.

நாயினேன் - நாயின் தன்மையுடையேன். பிதற்றுதல் - மயங்கிக் கூறுதல். செய்யுள் - பாட்டு. நான் விழுத்தேன், விழுத்த நாணினேனென நின்றது: நாணத்தை உகுத்தவனென் பது பொருள். (ச)

௫ நெறிவ ழாஉமை பூசனை போல்நெறி பிறழ்ந்தோன்
எறித ரும்கலும் கைக்கொளும் கச்சிஎம் பெருமாற்
கறிவின் மேலவர் காப்பியம் பனுவல்போல் அறிவின்
குறியி லேன்கவிப் புன்சொலும் கொள்வது வழக்கால்.

இ - ள்—(சிவாகம விதிப்படி சிவபூசை செய்யும்) முறை (சிறிதும்) தவறாத உமாதேவியார் பூசை (யில் அருச்சித்த மென்மையான மலர்கள்) போல (அந்தப் பூசை) முறை (முழு தும்) தவறியவர் (ஆகிய சாக்கிய நாயனார்) எறிந்த (வன்மை யான) கற்களையும் (இனியனவாக) ஏற்றுக்கொண்ட காஞ்சி புரத்துச் சிவபெருமானுக்கு அறிவின் மிக்கார் (கூறிய) காவிய கவிகளை (அவர் அங்கீகரிப்பது) போல, அறிவின் அடையா ளமே யில்லாதேன் (கூறிய இப்புராணத்துள்ள) ஈனமான சொற்களாலாகிய கவிகளையும் கைக்கொள்வது நியமமாம்.

வழா - வழுவாத. தரும் துணைவினை. பனுவல் - பாட்டு. (இலக்கியச்சொல்லகராதி). குறி - அடையாளம். கவிப்புன் சொலும் என்பதைப் புன்சொற் கவியெனக் கூட்டிப் பொருள் கூறப்பட்டது. வழக்கு - நியாயவாதம் (இலக்கியச் சொல்லக ராதி. (௫)

சாக்கிய நாயனார் வரலாறு:—"சங்கமங்கை என்னும் கிரா மத்தில் பௌத்தர் குலத்துத் திருவவதரித்துச் சாத்திர விசா ரணை செய்யப் புகுந்து தமது சமயம் பொய்யென அறிந்து அக்குலத்தை நீங்காமல் புறத்தில் தம்மைச் சேர்ந்தவர் களிக்க அகத்தில் தாம் களிப்புடன் சிவலிங்கத் திருவுருவத்தை வெளிப் படையிற் கண்டு கல்லினை மலராக எண்ணி எறிந்து வந்தனர்.

இவ்வகை நாடோறுஞ் செய்து வருகையில் ஒருநாள் மறந்து போசனஞ்செய்ய உட்கார நினைவுதோன்றி ஓடிச்சென்று கல்லொன்றை எடுத்து எறிகையில் சிவமூர்த்தி இடபாரூடராய்க் காட்சி தந்து முத்தி அளித்தனர்." என்பது

(அபிதான சிந்தாமணி)

---

# சொற்பொருள் வேறுபாடு

[S. அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் M. A., L. T,]

மொழிகளினிலக்கணத்தை ஒப்புநோக்கு முறையானுராயும் மொழிநூற்கண் நான்கு பகுதிகளுண்டு. ஒலிகளினிலக்கணத்தை ஆராய்வது முதற்பகுதி. இரண்டாவது சொல்லாக்கத்தை யாராயும். மூன்ருவது சொற்றொடரிலக்கணத்தை யாராய்வது. நான்காவது சொல்லின் பொருள் வேறுபடுமாற்றை ஆராய்ந்துரைக்கும். இந்நாற்பகுதியையுடைய மொழிநூல் தமிழில் ஒருவாறு தோன்றியிருப்பினும் வளர்ச்சியடையாதிருக்கின்றது. முதன் மூன்று பகுதிகளைப்பற்றிச் சிறிது விரிவாகவே சிலர் ஆராய்ச்சி செய்துள்ளாரெனினும் நான்காவது பகுதி இதுவரை ஆராய்ச்சிக் கெடுத்துக் கொள்ளப்பட்டதாகப் புலப்படவில்லை. அது மொழிநூலின் ஒரு முக்கிய பகுதியென்றும் அதனாராய்ச்சி மற்றைய பகுதிகளுக்கு எவ்வளவு துணை செய்யுமென்றும் உணர்ந்து கொள்ளாமையே இதுவரை அத்துறையில் யாவரும் இறங்காமைக்குக் காரணமென்று கொள்ளக்கிடக்கின்றது. ஆயினும் அதனைப்போலக் கற்ருர்க்கும் கல்லார்க்கும் ஒருங்கே இன்பந்தருவது வேருெருவகை ஆராய்ச்சியுமின்று. சொற்களை வழங்குவோரெல்லாம் அவற்றின் பொருளுணர்ந்தே வழங்குவர். பொருள் மாறுபடுவதைக் காணும் வன்மை இயற்கையிலேயே ஒவ்வொருவரிடத்தும்அமைந்துளது. ஆதலால் ஆராய்ச்சி செய்யத்தொடங்குவோர் தம் வன்மையையும் அவ்வாராய்ச்சி தரும் இன்பத்தையும் உணர்தல் ஒருதலை.

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ. இயற்றிய தமிழ் மொழியின் வரலாறு என்னும் நூலுள் பாஷை வேறுபாடுரைக்கும் பகுதியுள் இவ்வாராய்ச்சி சுட்டப்பட்டுளது. "சொற்களும் சொற்றொடர்களும் வாக்கியங்களும் சொல்லின் பாகங்களும் தத்தமக்குரிய பொருட்பெற்றி விரிந்துங் குறைந்தும் முற்றிலும் வேறுபட்டும் போகின்றன. பொதுவாகப் பல பொருள்களைக் குறித்து நின்ற சொற்கள் சிறப்பாகச் சிலவற்றையேனும் ஒன்றையேனும் குறிக்கும் நிலைமையை அடைகின்றன. இதனைப் 'பொதுப்படை நியமம்' என்னலாம். உதாரணமாக 'நெய்' என்ற சொல்லைக் காண்க. இஃது ஆதியிற் பசுவின் நெய், வேப்ப நெய், எள்ளின் நெய், ஆமணக்கு நெய், இலுப்பை நெய் முதலிய பலவற்றிற்கும் பொதுவான சொல். அஃது இப்பொழுது பசுவினெய், எருமை நெய்களையே சிறப்பாகக் குறிக்கின்றது.

"மற்றுச் சிறப்பாக ஒவ்வொரு பொருளையே குறித்து நின்ற சொற்கள் பொதுவாகிப் பல பொருளையுங் குறிக்கும் நிலைமையை யடைதலு முண்டு. இதனைச் 'சிறப்புடை நியமம்' என்னலாம். ஆதியில் எள்ளினின்று போந்த நெய் என்ற ஒரே பொருளைக் குறித்த 'எண்ணெய்' என்ற சொல் இப்போது பொதுவாகி, 'வேப்பெண்ணெய்,' 'விளக்கெண்ணெய்,' 'இலுப்பெண்ணெய்' என்பனவாகிய பல பொருள்களையுங் குறிக்கின்றது."

'ஓலை,' 'மரக்கால்' என்னுஞ் சொற்கள் தம்பொருட் பெற்றி முற்றிலும் வேறு பட்டனவாமாறு காண்க." "தமிழ் மகளிர் பனையோலைச் சுருளும் தென்னோலைச் சுருளும் தங்காதணியாகக் கொண்டமை பற்றி அக்காதணியும் 'ஓலை' யென்னப்பட்டது; இப்போது பொன்னானும் மணியானு மியன்ற காதணிகளும் அந்த 'ஓலை'ச்சொல்லையே குறிக்கப்படுத லுணர்க. ஆதியில் மரத்தினாற் செய்யப்பட்ட உழக்கிற்கு 'மரக்கால்' என்று பெயர்; இப்பொழுது அஃது இரும்பினாலாகிய குறுணியளவு கருவியையே குறித்தலுமுணர்க.

"சில சொற்கள் ஆதியில் இழிபொருளுணர்த்தி இப்போது அவற்றை இழந்து உயர் பொருளுணர்த்துவனவாம். 'களிப்பு' என்ற சொல் முதலிற் கள்ளுண்டு களித்தலையே யுணர்த்திற்று; இப்பொழுது 'மகிழ்ச்சி' என்ற உயர் பொருள் பெற்றது. 'விளையாட்டு' என்ற சொல் ஆதியிற் கள்ளுண்டு ஆடுதலைக் குறித்தது; இப்பொழுது அது கள்ளுண்ணாமல் ஆடுகின்ற பலவகை விநோதமான ஆட்டங்களையும் குறிக்கின்றது. இவ்வாறு வரும் நியமத்திற்கு 'உயர் பொருட்பேறு' என்னும் பெயரிடலாம்."

இனி இதுபோலவே 'இழி பொருட்பேறு' முண்டு. அஃதாவது சொற்கள் முதலில் உயர் பொருள் உணர்த்திப் பின்னர் இழிபொருள் தருமென்பது. உதாரணமாக 'நாற்றம்' என்ற சொல்லைக் காண்க.

"ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
யாகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகைக் குறிப்போ டின்ன பிறவுங்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை"

என்ற நன்னூற் சூத்திரவிதியிற் கூறப்பட்டுள்ள குறிப்புச் சொற்களெல்லாம் பொருட்பெற்றி வேறுபடுமாறு காட்டுகின்றன.

"இனி மக்களாவார் உணர்ந்து கொண்டே சில வேறுபாடுகள் செய்தலுமுண்டு. ஒவ்வொரு கூட்டத்தார் யாதேனும் ஒரு பொருளை மறைத்துக் கூறவேண்டி அதனது சொற்குறியை யொழித்து வேறொரு சொற்குறியால் அதனைக்கூறும் 'குழூஉக்குறி' யென்பதும் 'பிறிதினவிற்சி', 'புனைவிலிபுகழ்ச்சி' முதலிய அணிவகைகளும் அறிந்துசெய் வேறுபாட்டின்பாற் படுமென்க".

(தொடரும்)

# தோலாமொழித் தேவர்

[S. அசகினீச்சுவரப்பிள்ளையவர்கள், B. A.,]

(௩௭ - ம் பக்கத் தொடர்ச்சி)

## காலம்

சூளாமணியிலிருந்து யாப்பருங்கல விருத்தியிலும், யாப்பருங்கலக் காரிகை விருத்தி யுரையிலும், சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லாருரையிலும், செய்யுட்கள் எடுத்தாளப் பட்டிருத்தலின் இவற்றிற்கெல்லாம் முந்திய காலத்தது சூளாமணி என்பது துணிபு. இற்றைக்கு 1500 ஆண்டுகளுக்கு முன்னர் சோழ நாட்டில் கார்வெட்டி நகரத்தில் அரசாண்ட விசய வரசன் காலமே சூளாமணியின் காலமென்பது நூற் சிறப்பில் 'திக்கெட்டும் புகழ்படைத்த திறல் விசயன்' என்றற் றொடக்கத்துச் செய்யுளால் அறியக் கிடக்கின்ற தென்பார் தாமோதரம் பிள்ளையவர்கள். ஸ்ரீனிவாசையங்கார் தமது 'தமிழாராய்ச்சிகள்' என்ற நூலில் 'தோலாமொழித் தேவர் அரசனுகிய சயந்தன் மாறவர்மன் ஆவணி சூளாமணியாகிய தந்தையின் நினைவிற்கறிகுறியாக சூளாமணி என்னும் காப்பியத்தை இயற்றினர்' என்று சொல்லி சயந்தன் காலம் கி. பி. 650 ஆதலின் சூளாமணியின் காலம் கி. பி. 650 என்று அபிப்பிராயப் படுகிறுர்கள். இவற்றினின் றும் ஆசிரியர் தோலாமொழித் தேவர்காலம் சற்றேறக்குறைய கி. பி. 500 என்று ஊகிக்கலாம்.

ஆசிரியருடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றியாவது, அவர் இயற்றிய பிற நூல்கள் உண்டா என்பதைப்பற்றியாவது என் சிற்றிறவுக்கு எட்டிய மட்டில் ஒன்றும் தெரியவில்லை.

## HISTORICAL VALUE OF CHULAMANI

சூளாமணி :—இது தலையிலணியும் இரத்தினம் எனப் பொருள்படும். இங்கு உவமவாகு பெயராய் யாவரும் தலைமேற் கொண்டுகொண்டாடத் தக்கதோர் சிறந்த நூலுக்குக் காரணக் குறியாயிற்று. இந்நூல் தவிர இப்பெயர் கொண்ட சந்திரசூளா

மணி, சூடாமணி நிகண்டு ஆகிய பிற நூல்களும் உள. சிந்தாமணி கௌத்துபமணி என்பனபோல சூளாமணியும் ஒருதேவ மணியென்று பிங்கலந்தை நிகண்டு கூறுகின்றது. சிந்தாமணியில் பிரதான அரசனைச் 'சிந்தாமணி' எனக் கூறப்பட்டிருப்பது போல, சூளாமணியில் பிரதான அரசனைச் சிற்சில இடங்களில் 'சூளாமணி' எனக் கூறப்படுகின்றது.

இந்நூலினின்றும் அக்காலத்திய மக்கட் பரப்பு, மகளிர் வழக்கம், பிற நம்பிக்கைகள் முதலியவற்றைப் பற்றி அறிகின்றோம்.

## மக்கட் பரப்பு

வித்தியாதரவேந்தர் உயர்ந்த மலைநாட்டில் வசித்தனரென்றும், அவர்கள் பூவுலக மன்னரிடம் திறை வாங்கினரென்றும், அதிக பலவான்களாய் உத்தர, தக்கண சேடியை ஆண்டனரென்றும் கூறப்படுகிறது. இதனின்றும் இமயமலைச் சாரலில் வசித்தவரே வித்தியாதரர் என்றும், அவர்கள் மலைநாட்டில் வசித்தமையால் திடகாத்திரராய் இந்துஸ்தான சமவெளிகளில் ஆண்ட மன்னரை வென்று அவரிடம் திறைபெற்றுவாழ்ந்தனர் என்றும் ஒருவாறு ஊகிக்கலாம்.

## மகளிர் வாழ்க்கை

அரச மகளிர் குழவிப் பருவத்து சுயம் பிரபையைப்போல், பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என்னும் ஐவகைத் தாயரும் பாராட்டிப்போற்ற நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்தனர். பெண்டிர்கள் தற்காலத்தேபோல் அகத்துச் சிறைப்பட்டு வாணாளை வீணே கழித்து உடல்மெலியச் செய்தனரல்லர். அவர்கள் உடலுக்குறுதி பயக்கத்தக்க விளையாடல்கள் புரிந்தனர். மகளிர் கழங்காடல், அம்மனையாடல், பந்தாடல் முதலியவற்றைப் பொழில்களிற் சென்று விளையாடி செய்குன்றங்களில் ஏறித் திரிந்து, மலை விளையாட்டாடிச், சிலம்பெதிர்கூவித் தம் பொழுதைப் போக்கினர்.

## கல்வி

முற்காலத்துப் பெண்டிர் கல்வி கற்றிலர் எனும் போலிக் கொள்கையுடையவர் நம்மவருட் சிலர் இருக்கின்றனர். தூது சென்ற மரீசிதன் குலமுறை கூறுங்காலத்து 'என்பெயர் மரீசி, தந்தைபெயர் அஞ்சுமான், தாய்பெயர் அருசிமாலை, கலைமகள் பொருவும் அப்பெரு மகளால் யான் அநேக நூல்களைக் கற்றுளேன்.'

'மற்றவளோடும் வந்தேன் மன்னன்யான்...
பெற்றதாயருசி மாலை பெருமகளருளினால்யான்
கற்றநூல்பல்லவாகுங் கருமணிக் கடகக்கையாய்'

என்ற செய்யுளால் தாய்மார் தம்மக்களுக்குப் பல நூற்களையும் கற்பிக்கும் திறத்தினராய் இருந்தனர் எனத் தெரிகிறது. பெண்டிர் கற்றலோடு நில்லாது சித்திரம் முதலிய வரைவதிலும் வல்லவராய் இருந்தனர் என்பது மாதவசேனை என்னும் தோழி சுயம்பிரபையின் உருவை ஒரு பலகையில் எழுதித் திவிட்டன் வியக்குமாறு காண்பித்தலினின்றும் வெளியாகின்றது.

சாரணர் வினை நீங்கத் திருவடித்தியானம் செய்தல் வேண்டுமென்பதைக் கேட்டதும் சுயம்பிரபை சக்கிரவாள மென்னும் ஓர் விரதம் நோற்கச் சங்கற்பித்தாள். சுயம்பிரபை மணக்கோலங்கொண்டு விமானத்து ஏறும்போது தான் வளர்த்த கிளி, நாகணவா யாதியவற்றோடும் புறப்பட்டாள். பெண்கள் விரதம் நோற்றனரென்றும், தமக்குகந்த பறவைகளை வளர்த்தனரெனவும் அறிகிறோம்.

## மணம்

பெண்கள் தக்கவயது வந்ததும் பெற்றோர் தகுந்த கணவனைத் தேடி மணந்து கொடுத்தனர். சுயம்பிரபைக்குத் தக்க கணவனை யாராயுமிடத்து மந்திராலோசனை சபையில் 'வயோதிகனை அச்சுவகண்ட மன்னனுக்கு மணம்செய்யலாம்' எனலும், சுமந்திரி 'அரசனே அச்சுவகண்டன் வயோதிகனாதலின் அவன்

மனத்தால் நினைக்குந் தகையனுமன்று' என்றான். மன்னவன் மறு மொழியாக 'ஒருபெண்ணுடைய தந்தைதாயர்கள் அவளுக்கு ஓர் குரூபியை மணவாளனாக்கினும் அப்பெண் தன்விதியை மனத்துள் நொந்துகொள்வதல்லாது பிறர்க்குப்புலப்பட இவன் எனக்கு வேண்டாமென்று சொல்லாள். மாணிக்கத்தைத் தகுதியான இரத்தினாபரணங்களுக்கு நடுவே பதியாமல் ஈயத்திலே பதித்தாலும் அது தான் மாட்டேனென்று சொல்லாது. பதிப்போர் அதன் தகுதி அறிந்து பதித்தால் எழிலடைந்திருக்கும் என்றான். அதுபோல தந்தை தாயரும் தம்மக்களுக்கு அவளுக்கேற்ற அழகுள்ள ஒரு கணவனை மணஞ்செய்து வைத்தால் அக்குடும்பஞ் சிறப்புற்றுவாழும். பொருளாசை கொண்டு, அறுப்புச் சுகம் பெற்று ஆனந்தமாய் வாழலாமென்று, தம்மகளைச் செல்வவான் பெண்களான கிழவருக்கும் குடியருக்கும் மணஞ் செய்விக்கும் தற்காலத் தந்தையார் தயைசெய்து மன்னவன் மொழிகளைக் கவனித்தல் இன்றியமையாததாகும்.

திவிட்டன் தன் மகளுக்கு மணவினை நிகழ்த்தக் கருதி சுயம்வர நாளேற்படுத்த, பலதேயமன்னரும் வந்து சுயம்வர மண்டபத்திற் குழுவ, தாதியர் சோதிமாலைக்கு மன்னவர் புகழெலாம் கூற, அவள் தன் மனதிற்குகந்த அமிர்ததேசனை மணமாலை சூட்டினள். இச்சிறந்த வழக்கம் நந்தமிழ் நாட்டில் தற்காலத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. மணமகள் தன் மனதிற்கியைந்த நாயகனை மணத்தலால் இல்வாழ்க்கை சிறக்கும். பின்னர் மணச் சடங்குகளெல்லாம் முறையே நடந்தன. அம்மி மிதித்து அருந்ததி காட்டினர். இக்காலத்திய மணச் சடங்குகளும் அம்முறைப்படி நடப்பினும் அவற்றின் உண்மை யறியாது நடத்துகின்றனர்.

### காதற்றிறம்

திவிட்டராசனை முதன்முதற் கண்ட வுடனேயே காமம் மிகுந்து சுயம்பிரபை மிகவும் வருந்தினள் என்றதாலும், அமிர்த தேசனைத் தாதியர் சுட்டிக்காட்டி அவனை இன்னனென்று

உணர்த்து முன்னரே சோதிமாலையின் கண்கள் அக்காளையின் பேரழகாகிய வலையிற் சிக்குண்டது? என்றதாலும் பெண்கள் தமக்குரிய கணவனை முதற்கண் காண்டலும் (Love at first sight) காமநுகர்வு மனதிற் றோன்றியது புலப்படுகிறது.

மணஞ்செய்த பின்னர் காதலனும் காதலியும் பொழிலிற் சென்று மலர்கொய்தும், மலையெதிர் கூவியும், ஆடல் பாடல்களைப் பாடியும் இன்பம் நுகர்ந்தனர்.

'ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்'

என வள்ளுவர் கூறியதற்கிணங்க, பொழிலில் அசோகு அலரும் வண்ணம் கால் வைத்தவள் 'விஞ்சைய மடந்தை, அரசனுக்குரிய அரிய தெரிவை' எனத் திவிட்டன் கூறலும், சுயம்பிரபை அரசனுக்குத் தன்னைவிட வேறோர் மடந்தையும் மனைவியாக இருக்கிறாள் என்று கருதி அனற் பொறிகால, நுதல் வெயர்க்கக் கோடங்கொண்டு 'அவளோடு கலந்து விளையாடுதிர். யான் எனது பூக்கமழும் ஆக்கமுள்ள சேக்கை மாடத்து நீக்கமறப் போயிருப்பேன்' எனக்கடிந்து சொல்லலும், மன்னன் வருந்தி 'அன்னம் அனையாய், என்மீது பிழையுளதாயின் தண்டனை செய்க' என இரந்து கேட்டலும் அவள் அரசன் மீதோர் குற்றமுமிலது பார்ப்பானைப் பிடித்து வாருங்கள்' எனலும் விதூடகனைப் பிடித்துக் கட்டினார்கள். கன்னிகையும் சினம்மாறி நகைத்தனள்.

பெண்கள் காதலைக் கவருமாறு ஆடவர் செய்த பல சூழ்ச்சிகளில், தான் காதலித்த பெண்ணிற்குப் பல துன்பங்கள் ஏற்படுத்தி, அத்துன்பத்தினின்றும் தான் அவளை நீக்கிக் காத்தலும் ஒன்று என்பது, வயோதிக வேடம்பூண்ட சுப்பிரமணியர் அண்ணா! அண்ணா! என்று யானையை வரச்செய்து வள்ளி பயந்து தன்னிடம் அடைக்கலம் புகுந்த காலத்து, அவளிடம் தன்னை மணக்க வேண்டுமென்னும் உறுதி மொழி பெற்று யானையை விரட்டியது வள்ளிநாடகம் வாசித்த அல்லது பார்த்த யாவரும் அறிந்ததே.

(தொடரும்)

# தமிழின் முற்காலச் சிறப்பும் தற்காலக் குறையும்

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.]

(௬-ம் சிலம்பு ௫௬௨ -ம் பக்கத் தொடர்ச்சி)

தமிழிலே விலங்குநூல், பறவைநூல் (Zoology), உயிர் நூல் (Biology), நிலநூல் (Geology), தாவரநூல் (Botany), பூதநூல் (Physics), சடப்பொருள் நூல் (Chemistry) முதலிய மேலைத்தேசத்து நுண்ணூல்களும், வைத்தியநூல், ஓவியநூல் தொழிற்றிறக் கலைகளும் வளர்ந்தோங்க வில்லையென்று பலர் கூறுவதற்குக் காரணம், அவைகளைப் பற்றிய தனித்தனிப் புத்தகங்கள் வெளிப்படாமையே யாமென்க. தமிழிலே, மருத்துவமானது மிகவும் விரிவாக அமைந்துள்ளது. சித்தர் நூலென்னும் பெரிய கடலானது பல வகையான நுண்ணூல்களையும் தன்னகத் தடக்கிக் கொண்டிருக்கிறது. அவற்றின் சில பகுதிகள் உயர்ந்த செந்தமிழ் நடையில் எழுதப் பட்டிராமையால் அவற்றின்பால் இக்காலத்துத் தமிழ் மக்களுட் பண்டிதர் பலரும் தமது கருத்தைச் செலுத்தாமலும் அவற்றைப் பாதுகாவாமலும் அசட்டை செய்து வருகின்றார்கள். சித்தர் நூற் குவியல்களை ஒன்று சேர்த்துப் பழுதுபார்த்து ஆராய்ந்து, அவற்றைப் பலபட வகுத்துப் பரிசோதனை செய்தால், மேலை நாட்டில் வழங்கும் ஒவ்வொரு நுண்ணூலுக்கும் உரிய கருத்துக்களைத் தொகுத்தல் எளிதாகும். அங்ஙனஞ் செய்தலோடு ஆங்கிலத்திலுள்ள நுண்ணூல்களையும் உயர்கலைகளையும் தமிழிலே மொழி பெயர்த்தற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

தமிழ் நாட்டிலே முன்னோரா லமைக்கப்பட்ட கோயில்களையுங் கோட்டைகளையும் பிறகட்டிடங்களையும் பார்ப்பவர்களுக்கும் தமிழ்ப் பண்டை நூல்களிலே எழுநிலைமாடம், பாவை விளக்கு, போர்ப் பொறிகள் முதலியவற்றைப் பற்றிக் கற்பவர்கட்கும், தமிழர் சிற்பம் ஓவியம் போர்த்தொழில் முதலிய பலவற்றிலும் மிகப் புகழ் படைத்தவரென்பது இனிது விளங்கும். அவைகளைப்பற்றிய நூல்களைத் தேடியெடுத்து அச்சிற் பதிப்

பாரின்மையாலும், அக்கலைகள் சிலவற்றிற் சிறந்த கம்பியர் முதலி யோர் அவற்றை வடமொழிப் படுத்தி வடமொழி வாயிலாகவே அவற்றைக் கற்றுக் கொள்வதாலும் தமிழிலே அவை விளங் காமற் போயின. அவற்றையும் நன்காராய்ந்து வெளிப்படுத்து தற்கு வேண்டிய முயற்சிகள் செய்தால் தமிழரது பண்டைக் கால நாகரீகம் தலைசிறந்து விளங்கும்.

தமிழரென்பார்க்குத் தனிச்சமயங் கிடையாதென்று இக் காலத்தே பலர் பிதற்றுகின்றார்கள். ஆதியிலே அவர்கட்குச் சிறந்த தனிப் பெருநெறி யிருந்ததென்பது ஆராய்ச்சி வல் லார்க்கு நன்கு புலப்படும். டாக்டர் சிலேட்டர் என்பவர், இந்து மதத்தின் சிறப்பும், விரிவும், ஆதித் தமிழரது கடவுட் கொள்கையால் அமைந்தனவே யாமென்று வற்புறுத்தியுள்ளார். டாக்டர் சிலேட்டர் பின்வருமாறு கூறியுள்ளார்.

"Hinduism shows a philosophic bent of mind, a continuous search after ever more satisfactory explanation of the Universe. In the existing deities and worship of South India, we can trace that development," "Indian culture with its special characteristic of systematic and settled philosophical thought must have come from people, capable of originating and developing it, that capacity would naturally be exhibited also in the evolution of the language and the purest Dravidian language does exhibit it in a higher degree than any other Indian language" "While the Dravidians were arianised in language, the Aryans were dravidianised in culture." தற்காலத்திலே பண்டைத் தமிழ்ச் சமய நூல்கள் இறந்து விடவும், அவற்றின் கருத்துக் களை ஒருவாறு தம்முள் கொண்டுள்ள வடநூன்முறை பற்றியே சமயச் சடங்குகள் நிகழ்ந்து வருவதாலேயும் தமிழரது சமயம் ஆரியரிடங் கடன் வாங்கியதென்ற தப்புக் கொள்கையானது தலையெடுத்து விட்டது. ஆதியிலே, கடவுள் முதனூல் அருளிச் செய்தாரென்னுங் கொள்கையானது தமி

மூர்க்கே யுரித்தா யிருந்தது. வடமொழி இருக்கு வேதத்துள் யாண்டும் அந்நூல் கடவுளா லியற்றப்பட்ட தென்பதற்குப் பிரமாணங் காண்பதரிது. தொல்காப்பியத்திலே, தமிழிலே முதனூல் வழிநூல் என நூல் இருவகைப் படுமென்றும், முதனூல் முனைவன் கண்டதென்றும், தெளிவாகக் கூறப்பட் டுள்ளது. ஆதித் தமிழ் முதனூல்கள் மறைந்தபின்னர் பலராற்பல தெய்வங்களைக் குறித்துச் செய்த வடமொழி வேதமானது கடவுள் வாக்கென்ற தப்புக் கொள்கையானது ஏற்படலாயிற்று. தமிழிலே வேதமந்திரங்கள் உள்ளனவென்று, ஆசிரியர் தொல்காப்பியனார் தெளிவாகக் கூறியுள்ளார். உரையாசிரியர்களும் அதனை மறுக்கவில்லை. ஒலி நயமிக்க மந்திரங்கள் யாவும் வித்தெழுத்து என்ற பெயரால், தமிழ்ச்சித்தர் நூல்களுள் வழங்குவதொப்ப, ஆரியத்துள் யாண்டுங் காணப்படுமாறில்லை. பிரணவ மென்பது தமிழில், முதுமொழி யென்றும், வண்மொழி யென்றும், ஒருமொழி யென்றும், முத்தமிழென்றும் பலவாறுகக் கூறப்படுவதையும், பிரணவத்தின் சொற் பொருளும் வடிவமும் தமிழிலேயே உள்ளன வென்பதையும் அறியாது அதனை ஆரிய மந்திரமென்று கூறுதல் பெருந் தவறு மென்க. ஓம் என்பது ஓம்பு என்பதின் மூலமாகும். ஓம் என்பதற்குப் பாதுகாத்தலென்பது பொருளென்று வடமொழிக் கூர்மபுராணங் கூறுகின்றது. அப்பொருளிலே ஓம் என்னுஞ் சொல்லின் அடியாகப் பிறந்த மொழி வடமொழியிற் காணப்படவில்லை. 'அவ' வென்ற சொல்லே பாதுகாத்தல் என்ற பொருளில் வடமொழியில் வழங்குகின்றது. அக்காரணம்பற்றி அந்த அவச் சொல்லே ஓம் ஆயிற்றென்று வடமொழியார் கூறுகின்றூர்கள். அஃது எத்துணைப் பிழைபட்ட தென்பது கூறவேண்டியதில்லை. ஓங்காரத்தின் வடிவம் தமிழிலேதான் செவ்வையாக வமைந்துள்ளது. தமிழெழுத்தாகிய ஒகாரம், ஓங்காரக் கடவுளுடைய யானைமுகத்தை ஒத்திருத்தலின் வைத்து அஃது இனிது புலனுதல் காண்க.

'கொன்றைச சடையார்க்கு ஒன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழாற் பகர்வோனே'

என்ற அருணகிரி நாதர் திருவாக்குங் காண்க. ஓம் என்பதி னின்று வேதாகமங்க ளெல்லாம் பிறந்தன வென்பதால், வேதா கமங்களுக்கு மூலம் தமிழென்பதே பெறப்படும். திருவைந் தெழுத்தும் தமிழே. அதனுட்போந்த ஒவ்வொரு எழுத்திற்கும் உள்ள தத்துவப் பொருளின் தொகையே ஐந்தெழுத்தின் உட் கிடையாகும். அங்ஙனங் கொள்ளுதல் தமிழ் மரபே. வட மொழியிலே அச்சொற்றொடர் சிவனுக்கு வணக்க மென்றே பொருள்படும். அப்பொருள் அத்துணைச் சிறப்புடையதன்று. இதனை ஈண்டு விரிப்பிற் பெருகும். இதுகாறுங் கூறியவாற்றால் இப்பொழுது வழங்கும் வித்தெழுத்துக்களாகிய பீஜமந்திரங் களும், ஓங்காரமும், திருவைந் தெழுத்துந் தமிழற்கே ஆதியில் உரியனவா யிருந்தன.

இனி, ஆகம வணக்க முறையாகிய வடிவ வழிபாடும், சிவ லிங்க வழிபாடும், ஆதியில் தமிழற்கே உரியனவா யிருந்தன. வடமொழி வேதத்திலே வேள்வியே சிறப்பாகக் கூறப்பட் டுள் ளது. சிவலிங்க வழிபாடு இகழப்பட்டும் உள்ளது. குளிர் மிகுந்த நாட்டில் ஆரியர் குளிர் காய்தற்குரிய அனலிலே கடவு ளரை வழிபட்டனர் என்பதும், தமிழர் வெப்ப மிகுந்த நாட் டிலே நிழன் மிக்க மரங்களடியிலே கடவுளை வடிவங்கள் வாயி லாக வழிபட்டனர் என்பதும், சரித்திர வாராய்ச்சியால் தெளி யப்படும். தென்னாட்டிலே யுள்ள தலங்களெங்கும் புண்ணிய மரங்க ளுண்மையும் இதனை வற்புறுத்தும். சிவதருமோத்தரம் பொதியிலுக்குத் தெற்கே யிருப்பதாகக் கூறிய மகேந்திர மலை யிலே ஆகமங் கூறப்பட்ட தென்று திருவாசகத்துள் காணப் படுதலால், தென்னாட்டு மொழியாகிய தமிழ் மொழியிலே தென்னாட்டு வழிபாடு முறையையே ஆகமந் தெரிவிப்ப தென்பது ஊகிக்கப்படும். திருமுருகாற்றுப் படையிலே, மலைவேடர்கள் 'குடந்தம் பட்டு'க் கொழுமலர் சிதறி 'ஐதுரைத்து' முருகனை வழிபட்டன ரென்று கேட்கப்படுதலால் ஆவாஹன முத்திரை போன்ற அடையாளங்களும், மந்திரங் களும், அன்னோர் அறிந்திருந்தன ரென்பது போதரும். தமிழ் நாட்டு வேடர்க்கும் இவ்வாகமமுறை தெரிந்திருந்த தென்றால்,

ஆகம முறை தமிழென்பதே நன்கு ஊகிக்கற்பாலது. இப்பொழுது ஆகமங்கள் வடமொழியி லிருப்பது காரணமாகத் தமிழர்க்கு ஆகமநூல் இல்லை யென்று கூறுதல் தவறு. தமிழரது கடவுள் வழிபாட்டு நூல்களே பிற்காலத்தில் வடமொழியிலே ஆகமமாகப் பரிணமித்தன. இக் கருத்துப் பற்றியே டாக்டர் சிலேட்டர் என்பாரும், ஆரியர் தமிழ் நாகரீகத்தைக் கைக்கொண்டனர், தமிழர் ஆரிய மொழியைக் கைக்கொண்டனரென்று கூறிப் போந்தனர். இப்பொழுதும், தமிழர் தமது கடவுள் வழிபாட்டினைச் செம்மையான தமிழ்மொழிகொண்டே யியற்றிக் கொள்வதற்குரிய ஏற்பாடுகளைச் செய்ய முன் வருவாராயின், அவர்களது பண்டைச் சமய மாண்பு உலகில் நிலைபெறுமாதலின் அத்தகைய முயற்சிகளைத் தமிழ் நன்மக்கள் விரைவிற் செய்து ஈடேறுவாராக.

இதுகாறுங் கூறிய வாற்றால் பண்டைத் தமிழ் நன் மக்கள் எல்லாவகைக் கலைகளிலும் வல்லவராய் உயர் நாகரீகம் பெற்றிருந்தனரென்றும் அவர்களது தனித்தமிழ் மொழிபோல அவர்களது சமயமும் தனிப்பெரு மாண்புடையதா யிருந்ததென்றும், இக்காலத்திலே, கல்வியிலும் நாகரீகத்திலும் தமிழ் மொழி உயர் நிலையடைய வேண்டுமாயின், நூற்பாது காப்புச் சங்கம், ஆராய்ச்சிக்கழகம், மொழி பெயர்ப்புக் கழகம் முதலியவைகள் ஏற்பட்டுத் தத்தங் கடமைகளைச் செவ்விதி லியற்ற வேண்டு மென்றும், தமிழ்மக்க ளியற்றும் கடவுள் வழிபாடு, திருக்கோயில் நியமங்கள் முதலியன யாவும் தமிழிலே தமிழ் மந்திரங்கள் கொண்டு நிகழ்தற்குத் தக்க செந்தமிழ் நூல்கள் இயற்றப் பெற்றுப் பெரு வழக்காகப் பரவுதல் வேண்டு மென்றும், இவையாவற்றிற்கும் அடிப்படையாகத் தமிழ் மொழியின் கண்ணே மெய்ம்மையான பற்றுளது தமிழ் மக்கள் மனதில் நிலை பெற்றுத் திகழவேண்டு மென்பதும், அத்தகைய பற்று தமிழ் மொழியானது எவ்வகைப் பயனையும் தரத்தக்க சிறப்புடைய தென்ற உணர்ச்சி தமிழ் நாடெங்கும் பரவுதலாலேயே உறுதிப்படு மென்பதும், அவ்வுணர்ச்சியைப் பரவச்செய்தல் தமிழறிஞர் கடனுமென்பதும் உய்த்துணர்ந்து கொள்ளற்பாலதாம்.

# கிழக்கும், மேற்கும்

[க. ப, சந்தோஷமவர்கள், B.A., L.T.,]

இது நிகழும் அட்சய ஆண்டு தைத்திங்கள் 1-ம் நாள் 14-1-27 பிற்பகல் 4—மணிக்கு திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல்., அட்வகேட் அவர்கள் தலைமையின் கீழ் வேலூர் திரு. க. ப. சந்தோஷம் பி. ஏ. எல். டி. அவர்களால் நிகழ்த்தப்பட்டது.

கிழக்கு மேற்கு என்ற சொற்கள் முறையே தாழ்வு உயர்வு என்று பொருள்படும். கிழக்கு என்பது கீழ் என்ற சொல்லிலிருந்தும் மேற்கு என்பது மேல் என்ற முதல் நிலையிலிருந்தும் தோன்றுவதால் நாம் குறித்தபொருள் வெளியாகின்றது. தொன்னாளில் தமிழர்கள் திசைகளுக்குப் பெயர் கொடுத்த பொழுது நிலத்தின் ஏற்றத் தாழ்ச்சியை உற்று நோக்கி, ஆறுகள் எழுகின்ற திசை உயர்ந்திருக்க வேண்டுமாதலால் அதற்கு மேற்கு என்றும் ஆறுகள் கடலில் விழுந் திசை தாழ்ந் திருக்கவேண்டுமாதலால் அதற்குக் கிழக்கு என்றும் சொல்லமைத்தனர். இது நாற்பது ஆண்டுகட்கு முன் கால்ட் வேல் என்பவரால் காட்டப்பட்டது. ஆதலின் கிழக்கு மேற்கு என்ற சொற்கள் உயர்வு தாழ்வு என்ற பொருளில் வருவது தமிழ் நாட்டைக் குறித்தமட்டில் பொருத்தமாகும். வையகம் முழுவதையும் எடுத்துப் பேசுங்கால் அந்தப் பொருள் செல்லாது. ஆயினும் உலகத்தின் இக்காலத்திய நிலைமையை நோக்குங்கால் முன்னாள் தமிழர் கொடுத்த மேற்கு கிழக்குப் பெயர்கள் குவலயம் அனைத்திற்கும் பொருத்த முடையதென்றே சொல்லலாம் மேல் நாடுகளென்று நாம் இப்பொழுது கூறும் ஐரோப்பிய அமெரிக்கா தேசங்கள் கீழ்ப்பகுதியாகிய ஆசியா ஆப்பிரிக்காவைவிட மிக உயர்ந்து மிளிர்கின்றன.

ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்குமுன் இம்மைக்குரிய அரசு அமைச்சு வர்த்தகம் கைத்தொழில் ஆகிய வற்றில் மேற்

கும் கிழக்கும் பொதுவாக ஒரே நிலையிலிருந்தன. ஆனல் அதன் பின் இடையருது மேற்கு உயரத் தொடங்கிற்று. இங்கிலாந்தில் பதினரும் நூற்ருண்டில் உணர்ச்சி நிறைந்த பல புலவர்கள் எழுந்து அக்காலத்து மக்களுடைய உளத்தில் மறைந்து நின்ற எண்ணங்களையும், தெளிவற்று நின்ற ஆவல்களையும் தங்கள் நூல்களில் வெளியிட்டு ஊக்கத்தை எழுப்பினர்கள். விண்ணிலும் மண்ணிலும் மாந்தர் கண்டறியாத இடங்களும் பொருள்களும் இருக்கின்றனவென்பதையும், அவற்றைக் கண்டு பிடித்துப் பயன்படுத்திக் கொள்வது மக்களது கடமை யென்பதையும் பலர் கூத்தநூல் முகமாகவும், இனிய செய்யுள் முறையிலும் கட்டுரையின் வாயிலாகவும் வெளியிட்டனர். இதனல் மக்களுடைய காட்சி பெரிதும் விரிந்து அகன்று துணிவு பெருமிதம் என்ற பண்புகள் வளரலாயின. அதே காலத்தில் மக்கள் அதுவரையில் பழகிவந்த மதத்தில் உள்ள சில குறைகளைக் கண்டித்தும் குருக்களுடைய அளவு மீறிய அதிகாரத்தைத் தகர்த்தும் எல்லோரும் பல நூல்களைத் தாமே கற்று, தம் அறிவிற்கேற்ப அதை உணர்ந்து கொள்ளுமாறு லத்தீன் மொழியிலிருந்த விவிலியத்தைச் சில பெரியார் ஆங்கிலத்தில் திருப்பினர். அது தொடங்கி பொது ஜனங்களுடைய சுய மரியாதை பெருகி இறைவனது அமைப்பில் தாங்கள் எளியப் பூச்சிகளாய் பிறருடைய அடிவருடி கிடந்துழல வேண்டியதில்லை என்ற உணர்ச்சி அதிகமாயிற்று. இங்ஙன மவர்கள் தங்கள் சமய அடிமைத்தனத்தி னின்றும் நீங்கியபின் அரசியல் வகையில் தங்களுக்கு நேர்மையாகச் சேரவேண்டிய உரிமைகளுக்காக அவர்கள் போராடத் தொடங்கினர். இந்தப் போராட்டம் 17 - 18 - 19, நூற்ருண்டுகள் வரையில் நடந்துகொண்டேயிருந்தது. இன்னும் நடக்கிறது. நமக்குள்ளோ இன்னும் குருக்களுடைய அதிகாரம் ஒழியவில்லை, சமய நூல்கள் பல எல்லோரும் அறியக்கூடிய எளியநடையில் எழுதப்படவில்லை. எந்தப் பொருளின் மேலும் கவனத்தைச் செலுத்தி ஆராயத்தக்க உளப்பான்மை பெரும்பாலரான மக்களுக்கு இல்லை. தாங்கள் இன்னதென்று உணராத சடங்குகளைத் தாங்கள் அறியாத மொழியில் குருக்களின்

கட்டளைப்படி குருட்டுத்தனமாய்ச் செய்து வருகிறார்கள். உளத்திலுள்ள அவ்வடிமைத்தனம் நீங்காதிருக்கும் வரையில் துரைத்தனத்தில் அவர்கள் அடிமைத்தனம் நீங்காது.

நான் மாணுக்கனு யிருந்தபோது ஒரூரில் திருப்புகழில் ஒரு பாட்டை மிக உரத்த குரலில் பாடிக்கொண் டிருந்தேன். இரண்டு மூன்று பேர் என்னுடைய பாட்டைக்கேட்டு நானிருந்த விடத்தில் வந்து சேர்ந்தனர். அவர்கள் என்னை மேலும் இரண்டு மூன்று பாட்டுகள் பாடச்சொன்னார்கள். அதன்பின் அவர்களில் நாற்பத்தைந்து வயதுடைய ஒருவர் யான் பாடிய பாட்டின் பொருள் உனக்குத் தெரியுமா என்று கேட்டார்; தெரியும் என்று நான் சொன்னேன். அப்போதவர் எங்கே கொஞ்சம் சொல்லுங்கள் பார்ப்போம் என்றார். நான் சொன்ன பொருளை அவர் கேட்டுவிட்டுத் திருப்புகழின் பெருமை யாரறிவார், அதற்கு இவ்வளவு எளிதாகப் பொருள் தெரியுமோ என்று என்வாயை அடக்கிவிட்டார். இத்தகைய மனப்பான்மை யுடையோர் நமது நாட்டில் ஏராளமாயிருக்கின்றனர். தெருத் தெருவாய் துணி விற்கு மொருவன் (Hawker) ஒரு சிற்றூரில் பலர் குழுமி யிருக்க அவர்களிடஞ் சென்று ஆங்கிலப் பெண்கள் அணிவதற்குரிய ஒருவகைத் துணியை எடுத்து அதன் சிறப்பைச்சொல்லி வரும்போது இடையே கதை ஒன்று சொன்னான். அஃதாவது ஆங்கிலர்களெல்லாம் ஒருகாலத்தில் தேவர்களா யிருந்தார்கள்; அப்போது அவர்களுக்கு இறக்கைக ளிருந்தன; ஆனால், யாதோ ஒரு சாபத்தால் அவர்கள் மக்களாய்ப் பிறந்தனர். ஆனால் ஒரு காலத்தில் அவர்கள் தேவராய் இருந்ததன் அறிகுறியாகப் பெண்கள் தங்கள் உடையின் தோளில் இறக்கைகள் வைத்துக் கொள்கின்றனர். இந்த கற்பனைக் கதையைக் கேட்டு அவனைச் சூழவிருந்தவர்க ளெல்லாம் புருவந் தூக்கி விழித்து அஃது உண்மையெனத் தலையாட்டிக்காட்டினர். இப்படி நமது பொது மக்கள் அறியாமையிலும் வீண் நம்பிக்கையிலும் ஆழ்ந்து கிடக்கின்றனர். உண்மையை யறியுந் திறன் அவர்களுக்கில்லை. பெரும்பாலோரான மாந்தர் இவ்வாறிருக்குங் கால் உண்மையை அவர்களுக்குப் புகட்டுவது பெரிய வருத்தமாகின்றது. தமிழில்

நான் மறை இருந்திருக்கலாமென்று அவர்களுக்கு எடுத்துச் சொன்னால் அவர்கள் அதை எவ்வாறு நம்பப்போகின்றனர் ?

மேல் நாடுகள் உயர்ந்ததற்கு மற்றவற்றைவிட முதன்மையான காரணமாக ஒன்றைக் கூறக்கூடுமானால் அது சாத்திர ஆராய்ச்சியேயாகும். இந்த சாத்திர ஆராய்ச்சியும் சென்ற முந்நூறு ஆண்டுகளாகத்தான் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் வளரத் தலைப்பட்டது. ஒருவன் கண்டவற்றையும் கேட்டவற்றையுங் கண்மூடித்தனமாக நம்பிக்கொள்ளாமல் அவற்றை நுணுகிப்பார்த்துக் காரண காரிய சம்பந்தப்படுதலே சாத்திர அறிவாகும். இவ்வறிவு இதுவரையில் ஆங்கில முதலிய பிற மொழிகளின் வாயிலாக நமக்குக் கிடைத்ததே யொழிய நமது சொந்த மொழியில் நமக்கு எட்டவில்லை. சாதாரண தமிழ் மக்கள் இவற்றை அறியக்கூடியவாறு தமிழில் மேல்நாட்டு சாத்திர அறிவை நாம் வெளிப்படுத்தல் வேண்டும். இதன் தொடர்பாகத் திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் எடுத்துக் கொண்டிருக்கும் ஊழியம் மிகப் போற்றற்பாலது. கூடிய விரைவில் அவர்கள் எல்லா சாத்திர நூல்களையும் தமிழில் வெளியிடுவார்களென்று நம்புகிறோம்.

இஃதன்றிக் கீழ் நாடுகளில் முக்கியமாய் இந்தியாவில் விதியின்வலி இடைக்காலத்துப் புலவர்களால் அளவுகடந்து போற்றப்பட்டு வந்திருக்கின்றது. ஒருவனது செய்கை எப்பொழுது விதியின்பயன் எப்பொழுது முயற்சியின் பயன் என்று அறுதியிட்டுச் சொல்ல ஆகாது. ஒவ்வொருவனும் தான் செய்வதைத் திருந்தச்செய்து அதனால் வரும்பயன் என்னவாயினும் அதைப் பெற்றுக்கொள்வதே கடமையாயிருக்க முயற்சியின் வலியைக் குறைத்து விதியின் திண்மையைப் பெருக்கிக் காட்டுவதால் மக்கள் நன்மை யொன்றும் பெறார். மேல்நாட்டு ஆட்சிமுறை வல்லுநருட் பலரும் படைத்தலைவரும் புலவரும் தங்களுக்கு முன்னிருந்த பல பெரியாருடைய வரலாறுகளைப் படித்ததனால் தாம் பெற்ற நன்மைகளை வியந்து வெளியிட்டிருக்கின்றனர். சென்ற முந்நூறு நானூறு ஆண்டுகளாய்த் தமிழ்மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஒரு இலக்காக வைத்துப் பின்பற்றக்கூடிய ஒரு மகனின் வரலாறும் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. பிறப்

பினும், சுகமின்மையாலும், பொருளின்மையாலும் வந்த இடுக்கண்களைப் பொருட்படுத்தாது விடாமுயற்சியைக் கைப்பற்றி வெற்றியடைந்து விளங்கியவர்களின் வரலாறுகள் நமது நாட்டிலில்லாதது ஒரு பெரிய குறையேயாகும். புராண இதிகாசங்களில் கூறப்பட்டிருக்கும் பெரியோர்களின் சரித்திரம் பெரும்பாலும் நாம் மேற்குறித்த இலக்கிற்கு உதாரணமாக இதைப்பற்றி விரித்துக் கூற இஃது இடமன்று.

எல்லாவற்றையும் பாராமற் கற்பது கல்விக்கு இன்றியமையாதது என்ற கொள்கை நம்மவரிற் பெருகி யிருந்ததால் படித்ததை மறவாமல் காப்பாற்றிக் கொள்வதையே மாணுக்கர் பெரிதும் விரும்பிப் பழகினரேயன்றிக் கற்றதைப் பகுத்துப் பார்த்து அதன் தொடர்பையும் முடிவையுங் காணுராயினர். இதனுல் நமது நாட்டில் முறைப்படி நியாயவாதஞ் செய்பவரும், கிளிப்பிள்ளை போல் கற்றதைப் பிறருக்குச் சொல்பவரும் பெரும்பாலும் அதிகமாயிருக்கின்றனரேயன்றிப் புது உண்மைகளைக் கண்டுபிடித்து மெய்ப்பித்து உலகத்துக்கீவார் ஒருவர் இருவருமிலர். ஆதலின் மாணுக்கர் தாமே ஒன்றைச் சோதித்து அறிந்து கொள்ளும் முறையை நமது ஆசிரியர்கள் பெரிதும் கையாடவேண்டும். அன்றியும் மக்களுடைய அறிவு குறித்த சில வரம்பு கட்டுப்பட்டதென்றும் முற்காலத்திருந்த பெரியோர் அவ்வரம்புகளைக் கண்டுவிட்டனர் என்றும், புதிதாய் நாம் காணக்கூடியதோ சொல்லக்கூடியதோ ஒன்றுமில்லையென்றுமாய எண்ணம் நம்மவரிற் பரவியிருக்கின்றது. தங்களுடைய நன்மையின் பொருட்டு இவ்வெண்ணத்தை அதிகமாய்ப் பரவச்செய்து மனிதரை ஏமாற்றுபவரும் நமக்குள்ளிருக்கின்றனர். இதைத் தொலைக்க யாவரும்முயன்று பாடுபடவேண்டும். அறிவுத்துறைகளில் எவ்வளவு முன்னேற்றம் அடைந்தாலும் மேனுட்டார் அதோடு அமையாமல் மேலேறிச் செல்வதிலேயே கண்ணுங் கருத்துமா யிருக்கின்றனர். மாணுக்கருக்குக் கல்வி புகட்டுவதில் மேனுட்டு ஆசிரியர் நாமறியாத பல முறைகளைக் கையாள்கின்றனர்.

மற்றொரு வகையிலும் நாம் பிற்போக்கான நிலைமையிலுள்ளோம். அரும் பெரும் புலவர்பாடிய செய்யுட்களைக் கற்று

இன்ப மெய்துவோர் நம்மிலே சிலர். தமிழ் பயிலும் மாணக்க ருட் பெரும்பாலார் தாம் கற்கும் பாடல்களில் இன்பமொன்றுங் காண்பதில்லை. அறநெறிச்சாரம், ஆசாரக்கோவை, முதுமொழிக்காஞ்சி முதலிய செய்யுள் நூல்களை மனப்பாடமாகக் கற்று அவற்றின் பொருளை வருத்தப்பட்டு அறிந்து கொள்வதே தவிர, புறநானூறு, கலித்தொகை முதலியவற்றில் மலிந்து கிடக்கின்ற அகச்சுவை நிறைந்த செய்யுட்களைக் கற்று இன்பமடைய வழியில்லை. ஒரு மாணக்கனுக்குத் தான் கற்பதில் இன்பம் இருந்தாலன்றோ அவன் திரும்பத் திரும்ப அதைப் பயில்வான். டெனிஸன், ஒட்ஸ்வொர்த் என்ற ஆங்கிலப் புலவர்கள் செய்த அரிய பாடல்களைப் படித்து ஆனந்தப்படுவோர் அனேகம் ஆயிரவர் உண்டு. சங்கத் தமிழ்நூல்களை அறிந்து இன்பம் நுகர்ந்தவர் தமிழ் உலகில் ஆயிரத்துக்கு ஐவர் இருப்பரோ என்ற ஐயம் பிறக்கிறது. ஆதலின் பழைய தமிழ் நூல்களை அறிந்து அவற்றிற் பொதிந்து கிடக்கும் மேன்மையான கருத்துக்களை உவகையுடன் எவரும் ஏற்றுக் கொள்ளும்படி செய்ய வேண்டுவது கற்றோர்கள் கடமை.

இதுவரை கிழக்கு மேற்கு என்ற வேற்றுமைபற்றி வந்தனவற்றைக் கண்டோம். வையகத்திலே கிழக்கு மேற்கு என்பன இறுதியான சொற்களல்ல. ஒன்றிற்கு மேற்கா யிருக்குமிடம் மற்றொன்றிற்குக் கிழக்காயிருக்கும். சீனாவிற்கு ஜப்பான் கிழக்காயினும், அமெரிக்காவுக்கு ஜப்பான் மேற்காகும். வையகத்திலே இவ்வாறிருக்க இதைக் கடந்து மேற்சென்றால் அளவற்ற ஆகாய வெளியில் மேற்குமில்லை கிழக்குமில்லை. இவற்றையெல்லாம் கடந்து நின்றவர் கடவுள் என்ற உண்மையை யறிந்த நம் தமிழர் கிழக்கு மேற்கு என்ற கட்டுகளால் பிணியுண்டு கிடக்கவேண்டிய தில்லை. எல்லையற்ற பெரு வெளியில் கிழக்கும் மேற்கும் மறைந்து ஒன்றுவதுபோல் யாவற்றையுங் கடந்த இறைவனது முன்னிலையில் வெள்ளையர், கரியர் என்ற வேற்றுமை யொழிந்து உயிர்கள் யாவும் பேதமற்று நிற்கும். ஆதலின் கபிலரென்று வந்த வித்தியாசத்தையும் மறந்து நல்லதெல்லாம் நம்மது என்ற துணிவுடன் எல்லா மக்களும் ஏற்றத்தாழ்வின்றிக் கூடி வாழும் உயர்நிலையை உலகம் காணுமாறு செய்வது தமிழர்மேல் விழுந்த முதற்கடமையாகும்.

# தேவார உரை

[செப்பறை ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்]

(௪-ம் சிலம்பு கஅக-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி செவி, விடை, மதி, பொடி, என்பவற்றை யியற் பெயரா னோதாராயினர். அவை செயல்பற்றி வந்தனவென்ப துணர்த்தற்பொருட்டு. ஒர் மதி என்றது மதியின் கலைகளுள் வைத்து ஒர்கலையினை யென்க. தூய்மை வெண்மைகள் முறையே அகம்புறங்களின் விசேட வியல்புணர்த்திநின்றன. சுடலைக் காடு என வேண்டாது கூறினர். அவருக்கு அஃது இயல்பன்மை யுணர்த்தற்பொருட்டு. உள்ளமென்றதீண்டு, உயிருணர்வை—மலரான்—பிரமன். அது பிரமாவென முன்வருதலின் அக் குறிப்பானே கமலமலரை உணர்த்திநின்றது. அரியுந் திரிமல ரென்பது தோன்ற மலரானென வெடுத்த லோசையான் வைத்தோதினர். “விரைக்கமலத்தோன் மாலுமேவலான் மேவினோர்கள் புரைத்ததிகார சத்தி புண்ணிய நண்ணலாலே” என்பதூஉ மீண்டுய்த்துணர்ந்து கொள்ளப்படும். எல்லாமலருமே ஏடுடையவாயினும் அவையவை அவற்றைத் தாமுள்ள துணையுமுடையவாகா திடையே யிழந்தொழிவனவாம். இஃதன்ன தன்றென் றுணர்த்தற்கு இயற்கையடை புணர்த்தோதினர்.

இனி மலரால் அர்ச்சித்து என்றுரைப்பினு மமையும்; காயத்தின் தொழில் வாக்கின் தொழில்கள் கூறவே ஏனை மனத்தின் தொழிலு முடன் கொள்ளப்படும். ஒரோ வொன்றேயுடைய வேனைத் தலங்கள் போலாது குருலிங்க சங்கம மூன்றுந் தன்கணுடைமை முதலிய பீடு ஒருதிறப்படாது பல்வேறு திறப்படுதலின் அவையெல்லா மடங்க ஒன்றனை விதவாது பொதுமையிற் பீடுடைய வென்றார். இனி அருள்செய்த பீடு எனினு மமையும். இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேனின்றது. மேவிய என வேண்டாது கூறினர், பிறுண்டு வைகுமாறுபோலாது ஈண்டு மிக்குவைகுமென்ப துணர்த்தற் பொருட்டு மேற்போந்த பெருமையனைத்து மொருங்குடைய பெரும் பெயர்க் கடவுளென்பது தோன்றப் பெருமானென்றார். இனி பிரமாபுர மேவுதலிற் பெம்மா னெனினு மமையும். மே-விருப்பம், பெம்மென்பதுமது, தோணிபுரம் வேணுபுரம்முதலிய பெயரானோதாது இப்பெயரா னோதினர், இதுபோல் அவை ஆன்மாக்கள் மாசொழித்தற்குரிய நித்திய நைமித்தி

யஞ் செய்தற்கேற்ற உறுப்புடைத்தாமாறு செய்யப்படாமையா னுஞ் செய்தற் கேதுவாகாமையானும் செய்வாரின்மையானும்.

இனி பிரமாபுரமென்பதுந் தகராகாசமெனக் கொண்டு ஈரிட மும் அடங்குமாறு பொதுமையிற் பிரமாபுரமேவிய வென்றோதி யருளினாரெனினு மமையும். முனேயென்பது இடைக்குறைந்து நின்றது. அற்றேல் மிக்குமேவுதற்கு ஏதுவென்னை யெனின் ? கூறுதும்.

"குருவுருவாயிருந்து விதிகொடுப்பானுங் கொடுத்தவிதி கொண்டுபோற்
தருவுருவாயெழுந்த சிவலிங்க பரனுமுளந் தடுத்தாட்கொள்ள [றத்
அருவுருவாய் வந்ததொரு சங்கமனு மோரிடத்தின் வைகக்கண்டும்
பெருநிலமே லீதறியார் விளக்கிருக்கத் தீக்குழலும் பித்தராமால்"

என்றோதுதலின் அதுவே யதற்கேதுவெனக் கொள்க. அற்றே லஃதாக, குருவுருவா யிருந்தருளுதலும் இருந்து கொடுத்தரு ளிய விதியு மென்னையெனின் திருத்தோணிமேல் வைகியருளும் பெருமானும் அங்ஙனம் வைகியருளித் தமிழ் வேதாகமங்களைக் கோவைப்படச் செய்து அதனை யாளுடையபிள்ளையாரென்னுங் குருபரம்பரையின் வைத்தலுமென்னு மிவையேயென்க. அற் றாகலினன்றே பிரமதீர்த்த தீரத்தருளிய துணையி னமையாது தோணிவடிவாய பிரணவ மென்னப்படும் பீடமேலெழுந்தருளி வைகியதன் காரியமாய வவை கோவைப்பட்டுக் குருபரம்பரை யாதற்கு மூலமாய கதாசிரியர்க்குச் செய்யப் பெற்றதூஉ மென்பது. இவ்வா றுண்டுச் சிவபரம்பொருள் எமது பரமா சாரியப் பெருமானுக்கு வெளிப்பட்டுத் தோன்றி நின்றருளி யேனையோர்க்கு மறைந்து நின்றருளுஞ் சிற்றருள் போலாது பேரருள் செய்தருளிற் றென்பதாம்.

எனவே சிவபரம்பொரு ளெம்மனோர் போலத் தாமோ ருருவுடைப் பொருளன்றாயினும் பக்குவமுடையாருக் கருளுதற் பொருட்டுத் திருவுருத் தரித்தருளிப் பேரருள் செய்யுமென் னுஞ் சுருதிப்பொருளை விளக்கியவாறு மாயிற்று. இதுவே ஞான நூல்களுள் அருள்நிலையென வைத்து வழங்கப்படும் பேரருளென்றோதுப.

அற்றாகலினன்றே ஆசிரியர் அகத்தியனார் இத்திருப்பதிகம் நுதலும் பொருள் "குருவருள்" என முதற்கண்வைத் தருளி யதூஉ மென்பது.

இனி யித்திருப்பாவை யோதுமுறையா னேதுவோர் விடெய்தலொருதலை. அது "செம்மை பெறவென". ஆசிரி

யர் தாமே யெடுத்தோதுமாற்ரு னுணரப்படும். செம்மை-சிவ பரம்பொருள். அது செம்பொருள் காண்பதறிவு என்று மூத் தர வேதமுடையா ருரைத்தருளியவாற்ருனு முணரப்படும். இனி செம்பொருள், இலக்கணைப் பொருள், குறிப்புப் பொரு ளென்று மூன்றனுட் செம்பொரு ளென்றலு மொன்று.

அற்றேல் ஆண்டுச் செம்மை பெறவெனத் தமதாசிரியரா கிய ஞானசம்பந்தப் பெருமான் பெறக்கிடந்ததனையே எம தாசிரியரெடுத் துரைத்தாரெனின், அற்றன்று "இம்மாநிலத் தோர்க் குரை சிறப்ப" என மேலெடுத் தோதியருளுதலின் அது பிறர்க்குரியபயனே பிறிதன்ருகலான் உரையாவது ஒத்து; சிறப்பு-மிகுதி. ஒதன் மிகப்பெருக வென்றவாறு. இனி, பொ ருள் மேம்பாடு பொருந்தவென் றுரைப்பினு மமையும்.

அற்றேல் மேலே செம்மைபெற வென்ருெழியாது "மாநி லத்தோர்க் குரை சிறப்ப" வென மதித்தெடுத் தோதியது புன ருத்தியாய் முடியும்போலுமெனின், முடியாது பொது, சிறப்பென்னு மம்முறைபற்றி யோதியருளினு ராகலின். ஈண் டேற்புழிக்கோடலான் இம்மாநில மென்றது தமிழுலகத்தின் மேனின்றது.

அற்றேல், செல்வக் கடவுட் டொண்டர்கள் பகை நட்பின் றிப் பல்லுயிரு மொக்கப் பார்க்கும் பண்பின ரென்பதனேடு இது முரணும்போலு மென்னுங் கடாவை விடுத்தற்கு இம்மா நிலத்தோர்க்கன்றி வேறெந் நிலத்தோர்க்கும் அவ்வவர் தகு திக் கேற்ப வைத்துபகரிக்கு மியல்புடைத் தென்பார் "பல்லுயி ருங் களி சிறப்ப." என அதனை வேறெடுத்துக்கொண்டு அடுக்க வைத்துபதேசித் தருளினுர்.

அற்றேல் அஃதங்ஙனமாக ஒத்தென்பது ரூடிபற்றி வேத மொன்றற்கே உரிய திருப்பெயராம். அற்றேல் இஃதப்பெற்றித் தாய மறையென்றற்குப் பிரமாணமென்னை யெனின் "எழுது மறை" யென்னு மாசிரியர் ஆப்த வாக்கியமே பிரமாணமா மென்பது.

(தொடரும்)

---

# இல்லற மாண்பு



"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உறீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"

(குறுந்தொகை-கசுஎ)

தன்மகள் தனது இன்னுயிர்க் கணவனது இல்லின்கண் எப்படி யிருக்கின்றாள் என்பதைக் காணும்பொருட்டுச் சென்ற செவிலித்தாய்

அவ்விருவரும் கழிபேரன்பினராய் வாழ்தலைக் கண்டு தன்னுள் மகிழ்ந்து கூறியதாக இது பாடப்பட்டிருக்கின்றது.

இதன்பொருள்:—என் அருமை மகள் (தன் கணவன்மேலுள்ள ஆரா அன்பினால் ஏவலரும் பிறரும் சமையல் செய்வதற்கு இசையாதவளாய்) வற்றக் காய்ச்சிய கட்டித் தயிரைப் பிசைந்த காந்தள் மலர் போன்ற சிவந்த மெல்லிய விரல்களால், இடுப்பில் கட்டிய உயர்ந்த வெண்மையான ஆடை (சமையல் செய்யும் விரைவால்) அவிழ்ந்து விழ (கையினைக் கழுவிக் கட்டலாமென்றால் காலந் தாழ்க்கும், அதனால் கணவன் பசியால் வருந்த நேருமெனக் கருதி அதன்கண் அழுக்குப் படிதலையும் பொருட்படுத்தாது) அதனைக் கழுவாமல் உடுத்துக் கொண்டு, குவளை மலர்போன்ற மைதீட்டிய தன் கண்களிலே தாளிப்புப் புகைபட (அப்புறம் திரும்பினால் பாகம் தவறிவிடக் கூடுமேயென்று அதனையும் பாராமல்) தான் துடுப்பினால் துழாவி மிக்க அன்போடு ஆக்கிய தித்திப்பான புளிக்குழம்பினைத் தனது கணவன் இனிது இனிதெனச் சொல்லிக் கொண்டே உண்ணுதலைப் பார்த்து எழில் மிக்க என் மகளின் முகம் உள்ளுக்குள்ளே மகிழ்வடைந்தது.

இதன்கண் முல்லை யொழுக்கத்தை ஓவியமெழுதிக் காட்டினாற் போலப் பண்டைத் தண்டமிழ்ப் புலவர் விளக்கி யிருப்பது படிக்குந்தோறும் படிக்குந்தோறும் இன்பம் பயப்பது. முல்லை யொழுக்க மென்பது காதலனும் காதலியும் அன்பு கெழுமி இல்லறம் நிகழ்த்துவதாம். இவ்வொழுக்கம் நிறைந்த முல்லைக் கேற்ப 'தயிர்' என்ற சொல் இதன்கண் எடுத்தாளப் பெற்றிருக்கின்றது. பால், தயிர் கொடுக்கும் பசு முதலியனவும் முல்லை நிலத்திற்கே உரியன. இப்பாவின்கண் சில செஞ்சொற்களை அணிபெற அமைத்துப் பெரியதோர் பொருளை விளக்கி யிருப்பது போற்றற்பாலது. இதிலிருந்து பண்டைத் தமிழ் மக்களின் சிறப்பியல்புகள் இனைத்தென நன்கு தெரிகின்றோம்.

---

## ஐய வினாக்கள்

'நோடல்' என்னுஞ் சொல் பல சிறு நூல்களிலும் பெரு நூல்களிலும் எடுத்தாளப்பட்டு வருகின்றது. அதற்குச் சில உரைத் தலைவர்கள் 'வெண்காந்தள்' என்று பொருள் எழுதி யிருக்கின்றனர். அகராதியிலும் அப்பொருளே காணப்படுகின்றது. ஆனால், சிலர் வெண்காந்தளுக்கும் செங்காந்தளுக்கும் பொதுவான பேர் என்கின்றனர். கற்றவர்கள் உரிய பொருளை இச் செல்வியின் வாயிலாக வெளியிடுவாராக.

---

'ஊனடைந்த வுடம்பின் பிறவி' இது பெரியபுராணத்தோர் செய்யுளின் முதலடி. இதற்கு இதுகாறும் உரை கண்டவர்கள், 'மாமிசம் பொருந்திய உடம்பாலாய மக்கட் பிறப்பு' என்று உரை எழுதி யிருக்கின்றனர். மனிதரை யொழித்த மற்ற, ஊர்வன, நடப்பன, பறப்பனவும் மாமிசம் பொருந்திய உடம்பினவாயிருக்க, அவற்றை யொழித்துப் பொருள் கூறியதெப்படி? கற்றோர் தக்க பொருளிருப்பின் எழுதுவாராக.

---

# திருக்குறள் முதற்குறிப்பு

[மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A.]

## பாயிரம்

கடவுள் வாழ்த்தும் கவிவான் சிறப்பும்
நீத்தார் பெருமையு நிலையா மறன்வலி
யுறுத்த னன்கு முறைபா யிரம்மே.

## முதலதிகாரக் குறள்களின் முதன் மொழிகள்

அகர முதலகற் றதனுல் மலர்மிசை
வேண்டுத லிருள்சேர் பொழிதன் குவமை
அறவாழி கோளிலே பிறவி யாமிவை
முதலதி காரக் குறள்முன் மொழியே.

### அதிகாரம் உ

வான்துப்பு விண்ணோர் கெடுப்பது விசும்பில்
நெடுங்கடல் சிறப்பொடு தானநீ ரென்றிவை
இரண்டதி காரக் குறள்முன் மொழியே.

### அதிகாரம் ௩

ஒழுக்கத் துறந்தா ரிருமை யுரனே
ஐந்து செயற்சுவை நிறைகுண மந்தண
ரென்றிவை மூன்றதி காரமுன் மொழியே.

### அதிகாரம் ச

சிறப்பினு மறத்தி னெல்லு மனத்து
அழுக்கா றன்றறி யறத்தா று வீழ்நாள்
அறத்தான் செயனு லதிகார மொழியே.

---

# தமிழ்நூல் பேணல்

[வ. சுப்பையாபிள்ளை]

தமிழ்மக்கள் தமது மொழிநூல்களை என்றுமே பேணுவதில்லை என்பது பண்டைத் தமிழ் நூல்களிற் பல இப்போது கிடைக்கப்பெறுநிறந்தொழிந்தமையானும், இப்போது பதிப்பிக்கப்பட்ட நூல்களிற் பல விரும்புவார்க்குக் கிடைக்கப்பெறுமையானும் அறியற்பாலது. ஒவ்வொருவருக்குந் தமது மொழி தாய்மொழியெனக் கூறப்படுவது யாவரு மறிந்ததே. தாய்நன்றி மறப்பது நன்றன்று போலத் தாய் மொழி மறப்பதுமாகும். பெற்றதாயைப் பேணுது வாழ்பவனினும் கொடியவனிலன் என்று அறநூல்கள் கூறுகின்றன. அத்தகைய கொடியவனுவான் தாய்மொழியைப் பேணுது வாழ்கின்றவன். உலகத்திலே பல்வகை மக்கட்பிரிவினர் இருக்கின்றனர். அவரவர் வழங்கும்மொழி வெவ்வேறுகக் காணப்படுகின்றது. அம்மொழிகள் எல்லாவற்றினும் தமிழ்மொழியே மிகத் தொன்மையதென்று மொழிநூல் வல்லாரும், நிலநூல் வல்லாரும், மற்றுரும் ஒப்பக் கூறுகின்றனர். இப்போதும் பல புதுமொழிகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பேச்சுவழக்கில் மட்டுமிருந்த சிலமொழிகள் அம்மொழி பேசும் மக்களால் சிலகாலமாக எழுத்து வடிவில் ஆக்கப்பட்டுச் சிறப்பெய்தி வருகின்றன. அதற்குச் சௌராட்டிரம் போன்ற மொழிகளே சான்றுவனவாம். உலகிலுள்ள ஏனைய மொழியினர் ஒவ்வொருவரும் தமது தாய்மொழிமேல் அளவிறந்த பற்றுவைத்து அதனைப் பெரிதும் போற்றி வருகின்றனர். நமது தமிழ்மக்களோ புதிய நூல்களை எழுதிப் போற்றுவிடினும் முன்னரிருக்கிற நூல்கள் இறந்துபோகாமல் யாவருக்கும் எப்போதும் எளிதற் கிடைக்குமாறு செய்யக் கடப்பாடுடையவர்களல்லவா? மேனுடுகளில் தமது சமயம் மொழி யிரண்டினையும் உலகெங்கும் பரப்பக் கோடிக்கணக்கான பொருள் கொடுத்து வருகின்றுர்க ளென்பதைப் பத்திரிகை வாயிலாய் அறிகின்றோம். தமிழ்மக்கள் தமது சமயம் மொழியிரண்டையும் பிறநாடுகளிற் சென்று பரப்பாவிடினும் தம்மினத்தவர் பிறசமயம், பிறமொழி பேணித்தழுவுதலிற் செல்லாமல் தடைசெய்து அவர்களுக்குத் தமது சமயம் மொழியிரண்டினும் பற்று ஏற்படத்தக்க வழிகளைக் கற்பிக்க வேண்டாமா?

தொல்காப்பியத்திற்கு முன்னுள்ள தமிழ்நூல்கள் யாவும் இப்போது கிடைக்கப்பெறவில்லை. தொல்காப்பிய உரைகளிற்

காட்டப்படும் மேற்கோள் பலவற்றிற்கு இப்போது மூலநூல்கள் கிடைக்கப்பெறவில்லை. இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் நூல்கள் சிரம்பவிருந்தன வென்று அறிகின்றோம். இசை, நாடகமிரண்டிற்கும் இப்போது நூல்கள் கிடைக்கப்பெறவில்லை சித்தவைத்தியம் தமிழர்தம் சிறந்த வைத்தியமாகும். கடவுட் பத்தி மலிந்த வைத்தியம் சித்தவைத்தியமாகும். யோகம், மந்திரம் செறிந்த வைத்தியம் சித்தவைத்தியமாகும். அதனைக் கூறும் தமிழ்நூல்கள் எண்ணிலவிருந்தனவாகத் தெரிகின்றோம். ஆனால் இப்போது பதிக்கப் பெற்றுள்ளன ஒரு சிலவே. அவற்றிலும் கற்றறிந்த பண்டிதர்வாயிலாய்ப் பார்வையிடப்பெற்றுப் பதிக்கப் பெற்றுள்ளன ஒன்றிரண்டேயாம். ஆகவே அந்நூல்களில் இலைமறைகாய்போலப் பொதிந்து கிடக்கும் அருங்கருத்துக்கள் திரிந்தும் சிதைந்தும் பயன்படாதொழிகின்றன. இனியாவது 'உடம்பாரழியின் உயிராரழிவர்' என்ற திருமூலர் திருவாக்கை யுணர்ந்து தமது உடலுயிர் தழைக்கத் தமது சித்த வைத்திய நூல்களைப் பெரிதும் போற்றுதல் வேண்டும்.

பண்டைக் காலத்திலும், இடைக்காலத்திலும், சேர சோழ பாண்டிய அரசர்களும், பிரபுக்களும் தமிழ்ப்புலவர்களை நன்கு போற்றிப் பல அரிய தமிழ் நூல்களை எழுதுவித்து நமக்குப் பேரறிவுப் பண்டசாலையாக அமைத்துள்ளார்கள். இப்போது அரசினருதவி கிடையாது. மொழி, சமயம் பேண ஏற்பட்ட மடத்தலைவர்களும் அவற்றைக் கருதாமல் அறமல்லாத செயல்களிற் பொருளைக் கொட்டுகின்றார்கள். மற்றுஞ் செல்வர்களோ உண்டுடுத்தித் தமது இன்பவாழ்க்கையிலேயே அமைந்து விடுகின்றனர். ஆகவே தமிழ்மொழி நாளுக்குநாள் தனது சிறப்பியல்பு குன்றித் தளர்வுற்று வருகின்றது. ஒரு மொழியின் சிறப்பியல்புகளைவைத்தே அம்மொழி பேசும் மக்களின் நாகரிக வளர்ச்சியினை அறிதல் கூடும். பண்டைக்காலத்தில் இறந்தொழிந்த தமிழ் நூல்கள் போகத் தொல்காப்பியம் போன்ற எஞ்சிய சில நூல்களிலிருந்தே நமது பண்டை மக்களின் சிறப்பியல்புகளையும், நமது பண்டை நாட்டின் வளப்பத்தினையும் அறிகின்றோம். பிறநாட்டினரும் சரித்திர வாராய்ச்சியானும், மொழியாராய்ச்சியானும் அதனை உணருகின்றனர். இப்போது நாம் நமது மொழியினையும், மொழி நூல்களையும் பேணி நமது மக்களுக்குப் பதனப்படுத்தாவிடின் நம்மை அவர்கள் நாகரிகமற்றவர் என்று கருதி யழைக்கநேரும். உலகிலுள்ள ஏனைய நாடுகள் மொழியானும் பிறவாற்றானும் நாளுக்குநாள் சிறப்புற் றோங்கி வரும்போது நாம் அவற்றைப் புறக்கணித்து வாளாக் கழிவோமாயின் நமது மக்களைப் பிற்காலத்

தில் இருட்டுலகில்விட்டுத் துன்புறச் செய்வதேயாகும். நமது தமிழ் மக்கள் எதனையும் கூர்ந்து ஆராயாது உலக போகங்களிலேயே மிக்குத் தமது வாணாளைக் கழிக்கின்றார்களாகலினாற் றான் தமது மொழியினும் மொழிநூல்களினும் பற்றுவைக்கின்றார்களில்லை. தமிழ் மக்கள் தமது மொழி, சமய மிரண்டையும் இரண்டு கண்களாகக் கொண்டு போற்றி உலகத்திலே எல்லா வகைச் சிறப்புக்களையும் எய்துதல் வேண்டும்.

## தமிழ்நூல் பேணு முறை

க. தமிழ்நூல் அகராதி ஒன்று எழுதப்படல்வேண்டும். தமிழ் நூல்களில் இப்போது கிடைக்கப் பெறுவனவற்றிற்கும், பெயரளவாய்க் கேட்கப்படுவனவற்றிற்கும் விளக்கம் எழுதப்படல் வேண்டும். தமிழ் நூல்கள் ஒவ்வொன்றையும் எடுத்து 'அதன் ஆசிரியர் பெயர், அதனைப் பதித்தவர் பெயர், அந்நூற்கூறும் பொருள், எழுதப்பட்ட காலம், எத்தனை பதிப்பு பெற்றிருக்கின்றது, எந்த நூலில் அஃது எடுத்தாளப்பெற்றிருக்கின்றது, யாரிடமிப்போது கிடைக்கப்பெறும் என்ற குறிப்புக்களை எழுதி அகராதி வரிசையில் அமைக்க வேண்டும். அநேக நூல்கள் பெயர் தெரியாமலே மறைந்தொழிகின்றன. மேனாட்டார் தமது நூல்களுக்கு 30,000, 40,000 பக்கங்களில் அகராதி எழுதிவைத்திருக்கின்றனர். ஆண்டுக்கொருமுறை அதனைப் புதுப்பித்தும் வருகின்றனர். முதற்கண் நூற்பெயர் மறையாதிருப்பதற்கு இஃதோர் சிறந்த வழியாகும்.

உ. தமிழ் மொழியிலுள்ள அரிய நூல்களெல்லாம் எப்போதுங் கிடைக்கப் பெறுமாறு செய்யவேண்டும். அதற்குச் செல்வர்கள் உதவியே வேண்டும். இப்போது நூல் நிலையங்களுக்கு வேண்டிய பல அரியநூல்கள் கிடைக்கப் பெறுவதில்லை. ஒரு நூல் நிலையத்திற்கு ஐந்நூறு ரூபாவுக்குமேல் தமிழ்நூல் வாங்க வேண்டுமாயின், அதற்குப் போதிய நூல்கள் கிடைக்கப்பெறுவதில்லை. ஆங்கில நூல்களை வாங்கவேண்டுமாயின் நூறாயிரக் கணக்கான ரூபா விருப்பினும் போதாதாகும். தமிழ் நூல்களில் இப்போது கிடைக்கப்பெறாத சிலவற்றை ஈண்டு வரைகின்றனே.

கூர்மபுராணம், லிங்கபுராணம், சிவமகாபுராணம், காசிகாண்டம், சிவரகசியம், எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரை, சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை, மெய்கண்டசாத்திரம் உரை, குறுந்தொகை, தேம்பாவணி, சித்தியார் அறுவருரை, சிவஞானசுவாமிகள் பிரபந்தத்திரட்டு, திருவானைக்காப்புரா

ணம், விநாயக புராணம், த்ணிகைப்புராணம் இன்னும் பல உள.

இவை ஒவ்வொன்றிலும் 1000 பிரதிகள் பதிக்காவிடினும் 200, 300 பிரதிகள் பதிக்கலாம். ஆங்கில நாட்டில் ஓர் அரிய விலையுயர்ந்த நூலை வெளிப்படுத்த வேண்டுமாயின் 200, 300 பிரதிகள் பதிக்க ஏற்படும் செலவு இவ்வளவெனத் தீர்மானித்துப் பிரதி ஒன்றுக்கு விலை இன்னதென விளம்பரஞ்செய்து 200, 300 கையொப்பம் முன்பணத்துடன் வாங்கிப் பதித்து அக் கையொப்ப நண்பர்களுக்குக் கொடுத்துவிடுவது வழக்கம். அவ்வாறான முறையை நமது தமிழ் நூல் பேணுதலினும் கையாளுதல் வேண்டும். இதனால் அரிய பெரிய நூலாயிருப்பினும் அஃது இறந்தொழியாது நிலைபெறுதற் கேதுவாம். அதற்கேற்படும் பெருந்தொகையினைக் கொடுக்கத்தக்க 200, 300 பிரபுக்களும் பற்றுள்ளவர்களும் நம்நாட்டில் இல்லாமலில்லை.

ந. பொருட்டகுதியுடையா ரனைவரும் தமிழ்நூல்கள் ஒவ்வொன்றையும் கட்டாயம் வாங்க வேண்டுமென்ற ஓர் உறுதி செய்து கொள்ளல் வேண்டும். வறியோர்களுக்கு அவற்றைப் பயன் படுத்தல்வேண்டும். நூல்களை வாங்குவாரில்லையேல் பதிப்பாருமில்லாமற் போய்விடுவர். தமிழ்நூல் பதித்த பலர் தமது நூல்கள் விலையாகாமல் அவற்றைச்செல்லுக்கிரையாக்கி வறுமையுற்று வருந்தினர். அவர்கள் பட்ட வறுமைத்துன்பத்திற்குச் செல்வர்களே காரணராவர்.

'கலைப்பொருட்டால் வாங்கா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் நூல்பதிப்பா ரில்'

என்பது சிந்திக்கற்பாலது. நூல்வாங்கும்விழைவு நம்மவரிடமில்லையாகலாற்றான் பதிப்பார் நாளுக்குநாள் குறைந்து அரிய நூல்களெல்லாம் திரும்பத் திரும்பக் கிடைக்கப்பெறு தொழிகின்றன.

ச. தமிழ்மக்கள் தம்மிடமுள்ள ஏட்டுச் சுவடிகளையும், அரிய நூல்களையும் தக்க பதிப்பாளர்களிடஞ் சேர்க்கவேண்டும். அஃதில்லாமல் மாற்றார் எழுதிய புராணப்புளுகுரைகளை நம்பித் தமது விட்டில் முன்னோர் தொகுத்து வைத்த ஏடுகளையெல்லாம் நீரிலிட்டு மகிழ்கின்றனர். இதனினுந் தமிழுக்குச் செய்யும் பெருந்தீச்செயல் பிறிதின்று. அதுநிற்க, நம்மவர் மாற்றார் இனிய உரையாடலை நம்பி அன்னார் கை அரிய சுவடிகளைச் சேர்த்து அதனானும் தமிழ் நூல்கள் பல வெளிவராமற் போகின்றன. இனியாவது நமது மக்கள் எஞ்சியிருக்கிற சுவடிகளையுஞ்

புத்தகங்களையும் செல்லரிக்க விடாமற் பாதுகாத்துத் தக்க பதிப்பாளர்களிடஞ் சேர்த்தல் தலையாயகடனாகும்.

மேற்கண்ட முறைகளை யாண்டும் பரப்பி அரிய தமிழ் நூல்களை எல்லாம் பதித்து வெளியிடவே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஏற்பட்டுள்ளது. இதன்கண் பங்கு எடுத்து இதனை யாதரித்து வருபவர் தமிழ் மொழிக்குப் பேருதவி செய்தவராகக் கருதப்படுவர். ஒவ்வொருவரது தனித்த தொண்டனைத்தும் ஒருவழிப்பட்டுப் பெருந்தொண்டாகத் தமிழுலகிற்குப் பெரும் பயனளிக்கு மென்பது ஒருதலை. செந்தமிழ் மணம் யாண்டும் பரவுக!

---

# இளைஞரியக்கம்

[M. P. S. வேலாயுதம்பிள்ளையவர்கள்]

இளைஞர் இயக்கம் அவசியந்தானா? இளைஞர்கள் ஏன் ஒன்றுபட்டுத் தொண்டாற்ற வேண்டும்? இளைஞர்களால் ஆவன முதியவர்களால் ஆகாவோ? முதியவர்கள் முயன்று தவறிய காலத்தில் இளைஞர்கள் வெற்றியடைந்திருக்கிறார்களா? ஆம். இளைஞரியக்கம் அவசியம். அவர்கள் ஒன்றுபடவேண்டியது மவசியம். முதியவர்களால் ஆகாதன இளைஞர்களால் ஆகும். முதியோர் தோல்வியடைந்து, இனி என்செய்வது என்று எதிர்காலத்தில் நம்பிக்கையற்றிருந்த காலத்தில் இளைஞர்களே முன்வந்து வெற்றி மாலை சூடியிருக்கிறார்கள். ஓர் சமுதாயம், சமூகம், நாடு முன்னேற, இளைஞர் கூட்டுறவும், அவர்களுடைய ஒன்றுபட்ட தொண்டும் அவசியம் வேண்டும். அரசியல் விடுதலைக்கோ, சமூக முன்னேற்றத்திற்கோ, சமய அபிவிருத்திக்கோ, இன்னும் எத்தகைய தொண்டிற்கோ, இளைஞர்கள் தான் முன்வரவேண்டும். வயதில் முதியவர்கள் தளர்ச்சியுற்று, இனி நம்மால் ஒன்றும் இயலாது என்று சோர்வுற்றிருக்கும் வேளையில், அவர்கள் ஆரம்பித்த வேலைகளை, சித்திபெறச் செய்ய வேண்டியது இளைஞர்களின் கடமை யல்லவா? மேலும், முதியவர்கள் வாழ்நாளில் பல துன்புங்களில் ஈடுபட்டு, வாடி, வதங்கிச் சோர்வடைந்திருப்பது இயற்கை. அவர்களுக்கு இளைஞர்களுக்கு இருக்கக்கூடிய ஆத்திரம் இருக்க முடியாது. அவர்கள் பால் கட்டுப்பாடும் இருக்காது. ஆனால் இளைஞர்களோ, எப்போதும் முன்னேற வேண்டும் என்ற அவாவே கொண்டிருப்பவர்கள். அவர்கள் ஒரு காரியத்தில் ஈடுபட்டால் அதனை முடிக்கும்வரை வேறொன்றிலும் பிரவேசிக்க மாட்டார்கள். அவர்க

ஙிடைக் கட்டுப்பாட்டைப் புகுத்துவது எளிது. ஆகவே இளைஞர்களால் ஆகாதது ஒன்றுமில்லை. அவர்களைத் துவக்கத்திலேயே மனோதைரிய முடையவர்களாயிருக்கச்செய்ய வேண்டியது முதியவர்களின் கடமையாகும். மலை புரண்டு வீழினும், சமுத்திரமே நிலை கலங்கினாலும், வானமிடிந்தாலும், மனோதைரிய மிழக்காத இளைஞர்களே வேண்டும். முதியவர்கள் இளைஞர்களை உற்சாகப்படுத்தி, இளமையிலேயே கல்விபுகட்டி, நல்லொழுக்க முடையவர்களாய்ச் செய்து, அறிவாளிகளாய் விளங்குமாறு தூண்ட வேண்டும். "இளமையிற் கல்வி சிலையிலெழுத்து", "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பதுபோல் இளைஞர்கள் இளமைப் பருவத்தில் கொண்ட பழக்கவழக்கங்களோ, அவர்கள் வாழ் நாட்களில் நிலைத்து நிற்கும். இளைஞர்கள் நாட்டிற்கோ, சமூகத்திற்கோ, பயனுடையவர்களாய், அல்லது பயனற்றவர்களாய் விளங்குவதற்கு அவர்களுடைய முதியவர்களே பொறுப்பாளிகள்ாவர். இளைஞர்களைக் குடத்திற்குள் வைத்த விளக்குகள் போன்று, வீட்டிற்குள் அடைத்து வைக்காமல், கல்வி புகட்டி, அறிவு விசாலிக்கும்படி செய்து, பரந்த நோக்கமும், சுய நலமற்ற எண்ணங்களும் அவர்கள் பால் என்றும் நிலைத்து நிற்குமாறு முதியவர்கள் செய்யவேண்டும். நம் நாட்டில், முக்கியமாய் நம் தமிழ்நாட்டில் நம் நிலைமை யென்ன? நாம் எங்கே இருக்கிறோம்? நம் அரசியல் நிலை யென்ன? சமய நிலை யென்ன? சமூக நிலை யென்ன? சமயத்தை அறிந்தவர்கள எத்தனை பேரிருக்கிறார்கள்? நம் சமூகம் புறமதத்தினரின் கோட்பாடுகளுக்கு அடிமைப்பட்டிருக்கிற தென்பதை எவரேனும் மறுக்க முடியுமா? அவ்வடிமைத்தனத்தை யொழித்துத் தமிழ் நாட்டைச் சுதந்தர நாடாக்க இளைஞர்களாலன்றி வேறுயாரால் முடியும்? நம் தமிழ் நாடு, சமூக சமய விடுதலை பெற்றால், சுயமரியாதை பெற்ற நாடாகும். சுயமரியாதை என்று பெறுகிறதோ, அன்றைக்கே அரசியல் விடுதலையும் பெறும். ஐர்லாந்தென்ன? எகிப்தென்ன? துருக்கி யென்ன? நமது அண்டை விடான சீனாவென்ன? இந்நாடுகளெல்லாம் இன்று உரிமை பெற்றோ, அல்லது உரிமைபெறவோ, முன்வந்திருப்பதற்கு அந்நாடுகளில் இளைஞர்களல்லவா காரணம்? அவர்கள் ஆங்கு வெற்றிபெற முடிந்ததென்றால் நம் நாட்டில் நாம் வெற்றிபெற முடியாதா? வேண்டுவதெல்லாம், இளைஞர்கள் ஒன்றுபடவேண்டும், கட்டுப்பாட்டுடன் தொண்டாற்ற வேண்டும், ஒற்றுமையுடன் முன் செல்ல வேண்டும். தமிழ் நாட்டு இளைஞர்களே உங்களிடம் இதனை எதிர் பார்ப்பது அதிகமோ?

---

# சி று ம ண ம்

[சிறுமணம்பெற்ற கூத்தன்]

நான் இன்று உங்களுக்கு என்ன சொல்லுவதென்று தெரியவில்லை. 'உடையது விளம்பேல்' என்பது ஔவைக் கிழவியாரின் அருளுரையன்றே? பேதையேன் நான் அதனைச் சிறிதும் எண்ணினேனில்லை. அதன் உண்மையை இப்போதே உறுதிபெறக் கண்டேன். முன்னர் நான் உங்களிடத்தில் எனக்கு மூளை பெரிதா யிருக்கலாம் என்று சொல்லியிருந்தே னல்லவா? அஃது என்னைப் பெருந்தொல்லைக்கு உட்படுத்தியது. மூளை பெரிதோ சிறிதோ! சொன்ன அளவிலேயே இப்பாடா ஒல் அதைப்பற்றி வேறென்ன? முடிவுகட்டியும் சொன்னே னில்லையே, இருக்கலாம் என்றுதானே சொன்னேன். அம்மம்ம! அதற்கே இத்துணைப்பாடா! குற்றங்காண்பதே இப்பரந்த உல கத்தின் சிறந்த செயல்போலும்! நன்மை கடல்போலிருப்பி னும் கடுகளவு தீமையையே காணமுயல்கின்றனர். என்னுடைய நண்பர்களோ என்னிடத்து நிறைந்த அன்புடையர்! அணுத் துணையாக் குற்றம் நிகழினும் பனைத்துணையாப் பாராட்டும் பேரிரக்க முடையவர்! சிறுமணம் என்று நான் பேசவந்தது நிர்மணமாம். ஒரு மணமும் காணவில்லையாம்! பேர்மணம் மட் டுமே பார்க்கப் பார்க்கக் கிடக்கின்றதாம்! ஒருமணமும் இல்லாததற்குச் சிறுமணம் என்று பெயரிட்டதும் பெரும்பிழை யாம். மூளை பெரிதாகவும் மணம் சிறிதாயிற்று போலும் என் கின்றனர். சரி! எம்மணத்தைத் தான் பேசத்தான் எனக்குத் தான் உரிமைத்தான் உண்டோதான் அறிகிலம். ஏர்மணம் இயம்பவோ வெனின் நீர்வற்றிச் சேடையற்ற இதுபோழ்தோ வென்பர்! பார்மணம் பகரவோ வெனின் ஊர்கூடி வரட்டும் என்பர்! போர்மணம் பேசுதுமோ வெனின் புறநானூறு போதாதோ என்பர்! கார்மணம கழறவோ வெனின் கார்த்தி கைத் திங்களில் கருமுகில் பொழியட்டும் என்பர்! நார்மணம் நவி லவோ வெனின் நறுமலர் மல்லிகை கிடைக்கும்போ தென்பர்! தார்மணம் தருதுமோ வெனின் சிவபெருமானே ஒருகாலத்தில் கொன்றை யந்தார் தணந்தனரே என்பர்! ஒரு மணத்துக்கும் ஒருப்படார்! இவ்வாறெல்லாம் பலபல ஏசிப் பேசி என் மூளை யைப் பிய்த்துவிட்டார்கள். என் மூளை இருக்கிறதோ இல்லை யோ வென்று நீங்கள் கவலைப்படாதிர்கள். என்ன! அவ்வளவு எளியனோ நான்? என் நண்பர்களானாற்றான் என்ன? உங்க ளிடத்தே நான் பேச வந்தபோது என்னிடத்தே அவர்களுக்கு என்ன வேலை. இருங்கள், இருங்கள், 'ஒரு மணமும் பெற் றேனே உரைசெய் தணிகாசலனே' என்று ஒரு பெரியார்

கூறிய முறையீடு நல்ல வேளையில் என் நினைவுக்கு வருகிறது. ஆ! என்ன அழகிய தொடர்! என்ன அன்புகனிந்த சொற்கள்! தன் வழிபடு கடவுளை ஆராவியற்கை வயத்தராயன்றோ வினவுகின்றார்! வழுவில் அன்பு எத்துணைத் துணிவையுந் தருகின்றது! இப்படிப் பெரியோரெல்லாம் ஒருமணமும் பெறவில்லையென்று முறையிட்டிருக்கிறபோது இவர்கள் எவ்வளவு? ஓ! ஓ! நான் உங்களுக்குத் தொடர்ந்துகூற வேண்டியதை விட்டு உங்களை மிகவும் காக்கவைத்து விட்டேன். பொறுங்கள்! நீங்கள் ஏதோ என்னிடத்தில் உங்களையும் அறியாது வைத்த பேரன்பினாலே மிகக் கடிதில் என்னை அறிவாளனாக்கிவிட்டீர்கள். இருந்தும் என்ன? அவ்வறிவு இரக்கங் காட்டவேண்டுமே! பிள்ளையார் வரங்கொடுத்தாலும் பூசாரி வரங்கொடுக்க வேண்டாமா!

அதுபோல அவ்வறிவு, நீயார்? நீ முதலில் யாராயிருந்தாய்? பின் என்னவானாய்? இப்போது என்ன செய்கின்றாய்? என்று ஒவ்வொரு விநாடியும் என் மூக்கைப் பிடித்துத் திருகிக்கொண்டேயிருக்கும். ஓ! ஓ! இப்போது தெரிந்தது! அதனால்தான் நீங்கள் முன் கருதியதுபோல் என் மூக்கு சிறிதாய் விட்டதோ என்னவோ? எனக்கு உண்மையாகச் சொல்லமுடியாது. உங்களைப்போலவே நானும் யூகிக்கவே செய்கிறேன். நல்லது! உங்கள் சிற்றத்தைத் தெரிந்து கொண்டேன். நான் என் அறிவின் ஆராய்ச்சியிலேயே சென்று உங்களை வானில் பறக்க விட்டுவிட்டதாக எண்ணி விட்டீர்கள்! உண்மைதான். நான் என்செய்யட்டும்! நீங்கள் எனக்குக் கொடுத்த அறிவாளன் வினையன்றோ இப்படி வானில்பறக்கவிட்டது!

உங்கள் சிற்றத்தைப்பற்றி எனக்கென்ன கவலை? இனி உங்களுடைய அன்பும் அருளும் எனக்கேன். ஒரு சிறிதும் வேண்டாம். நான் உங்களையெல்லாம் அடக்கியாளும் அறிவாளனன்றோ? நீங்களெல்லாம் என் ஏவலாளர்தாமே? சரி போனது போகட்டும், உங்கள் சிற்றத்தை வானிலேயே வளரவிட்டு நீங்கள் மட்டும் இப்போது என்னோடு வாருங்கள். என்னை அந்த அறிவு ஓயாது தொந்தரவு கொடுத்து வந்தது உங்களுக்குத் தெரிந்ததன்றோ? நச்சு நச்சு என்று ஓயாது துன்புறுத்தினால் எவ்வளவு காலம்பொறுக்கமுடியும்! நான் என்னகல்லா மண்ணா? மனிதன்தானே? முடிவில் நான் அதன் கட்டளைக் கிணங்கி எல்லாத் தொழில்களையும் அறவே ஒழித்து உட்கார்ந்துகொண்டேன். என்னுடைய எல்லா உறுப்புக்களும் நல்ல ஒய்வு பெற்றுக்கொண்டன. அவைகள் என்னை வாழ்த்தும் ஒலிகள் என் காதுகளை நிரப்பின. அணுத்துணையும் எனக்கு செயலில்லை. சும்மாவிருக்குந் திறமரிது எனப்பல பெரியோர் இடர்ப்பட்டமை

அடிக்கடி என் நினைவுக்குவரும். அப்படி எனது நினைவுக்கு வரும்போதெல்லாம் என்னை யறியாது எனக்குக் குறுநகை யெழும்! என்னுடைய அறிவை அவர்கள் பெற்றார்களில்லை போலும் என்று இரங்குவேன். என்னுடைய அருமந்த அறிவு அவர்களுக்கு எப்படி வரும்? நான் இதுகாறும்பட்ட துன்பங்க ளெல்லாம் நீங்கள் அறியமாட்டீர்களா! துன்பத்துக்குப் பின் இன்பம் என்றார்களே அவர்கள் உண்மை கண்டே கூறியிருக்க வேண்டும்.

## உவகைச் சிறுமொழி

[த. செங்கல்வராய பிள்ளையவர்கள், B.A.]

திருவாளர் பா.வே. மாணிக்க நாயக்கரவர்கள் கருப்பையி லிருக்கும் கருவுருவைப் படத்திற் பெருக்கி யெழுதி அதிற் பொதிந்துள்ள கருத்துக்களை விளக்கிக் காட்டுமுகத்தான் அவை யிற் குழுமியோர்களை விளித்து, "இவ்வுருவைக் காண்பீராயின் உங்கட்கு முன்னமே தெரிந்த ஒன்று இங்குப் புலனாகும்" என்றார். அப்பொழுது கூட்டத்தில் "ஓ" என்று ஒரு தனிக் குரலொலி கிளம்பிற்று.

நாயக்கர் :—"இப்பொழுது வெளிப்பட்ட ஒலி வியப்புக்கு அறிகுறியோ!"

கணக்காசிரிய ரொருவர் பிழையறக் கணக்கு செய்த பிள்ளை களை இல்லமேக்கக் கட்டளையிட்டுப் பிழைசெய்த ஒருவனைத் தனி யே நிறுத்திப் பிழையறச் செய்து போம்படிப் பணித்தார். யாவ ரும் விளையாடுமாறு மைதானம் சென்றுவிட்டிருப்பராதலால் விரைந்து செல்லுதல் வேண்டுமென் றெண்ணிச் செய்து முடித் தான். ஆசிரியர் கணக்கைப் பார்த்து 'இன்னும் பதினைந்து அணு குறைகின்றது' என்றார்.

மாணவன் :—'வேண்டுமாயின். அந்தப் பணத்தை நாளை எந்தையிடமிருந்து வாங்கிவந்து தந்து விடுகிறேன். என்னை இப்பொழுது தயைசெய்து விட்டுவிடுங்கள்' என்றான்.

## விபூதிப் பிரசாதம்

[மா. வே. நெல்லையப்பப்பிள்ளை அவர்கள், B.A.]

தென்காசிச் சிவாலயத்தில் பூசாகாலத்தில் தேவாரம் ஓதினபின் விபூதி முதலிய பிரசாதங்கள் பிராமணர்களுக்கும் ஏனையர்களுக்கும் ஒரே காலத்தில் கொடுத்ததற்காகப் பிராமணர்கள் கலகம் விளைத்த தைப்பற்றிச் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-4. பரல்-12-ல் பிரசுரஞ் செய் யப்பட்டிருந்தது. அதைப்பற்றிச் சைவநண்பர்களை நமது பத்திரிகைக்கு எழுதும்படி கேட்டிருந்தோம். திருவாளர் ஆ. சு. இராமலிங்க ஓதுவா

மூர்த்தியவர்கள் மட்டும் எழுதினார்கள். அவர்கள் எழுதினது செல்வியில் பிரசுரஞ் செய்யப்பட்டிருக்கிறது. வேறு சைவநண்பர்கள் ஒருவரும் எழுதவில்லை.

தங்கள் ஊர் சிவாலயங்களில் நடைபெறும் முறையைப் பற்றியும் திருநெல்வேலி ஜில்லா சிவாலயங்களில் சில தேவஸ்தானக் கமிட்டியார் அவர்கள் தர்மகர்த்தர்களுக்கு இது சம்பந்தமாய் யாதாஸ்து அனுப்பிய பின் தங்கள் ஊர் சிவாலயங்களில் விபூதி முதலிய பிரசாதங்கள் கொடுக்கும் முறையைப் பற்றியும் சைவநண்பர்கள் எங்கள் பத்திரிகைக்கு எழுதும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

## குலசேகரபட்டினம் சைவசித்தாந்த சங்கம்

நாளது தைத் திங்கள் 24, 25-ம் நாள்களில் திருக்கோவலூர் மணம் பூண்டி திருவாளர். ம. ரா. குமாரசுவாமியாபிள்ளை அவர்கள் குலசேகரபட்டினத்தில் பச்சையம்மாளுடைய சொற்பொழிவு மண்டபத்தில் மனுநீதிகண்டசோழர்புராணம் என்னும் பொருள்பற்றி தலைவர் மா.வே. நெல்லையப்பபிள்ளை அவர்கள் தலைமையின்கீழ் சொற்பொழிவு செய்தார்கள். ஆண்பாலாரும் பெண்பாலாருமாகச் சுமார் 300 மக்கள் கூடியிருந்தார்கள்.

நாளது தைத்திங்கள் 26-ந்தேதி குலசேகர பட்டினம் பச்சை அம்மாள் சொற்பொழிவு மண்டபத்தில் நமது தென் இந்திய சைவசித்தாந்த சங்கம் தலைவர் திருவாளர் மா. வே. நெல்லையப்பபிள்ளை அவர்கள் ஸ்ரீவைகுண்டம் தாலூகா போர்டு பிரசிடெண்டு திருவாளர் சங்கரலிங்கக் கவிராயர் அவர்கள் தலைமையின்கீழ் சைவசமயம் என்னும் பொருள் பற்றி ஒரு சொற்பொழிவு செய்தார்கள். சுமார் 250 பேர்கள் ஆண்பாலாரும் பெண்பாலாரும் ஆகக் கூடியிருந்தார்கள். சொற்பொழிவின் முடிவில் அவர்கள் குலசேகரபட்டினத்தில் திருநெல்வேலி சைவசித்தாந்த சங்கத்தின் கிளையாக ஒரு சைவசித்தாந்தசங்கம் நிறுவல்வேண்டும் என்று கூறினார்கள். 34 கனவான்கள் கிளைச்சங்கத்தின் அங்கத்தினராகச் சேருகிறதாக ஒப்புக்கொண்டு கையெழுத்துச் செய்தார்கள்.

தைத்திங்கள் 27-ந் தேதி திருவாளர் மா. வே. நெல்லையப்பபிள்ளை அவர்கள் தலைமையின்கீழ் திருவாளர் ம. ரா. குமாரசுவாமியா பிள்ளை அவர்கள் ஒரு சொற்பொழிவு செய்தார்கள். அவர்கள் நேற்று நிறுவிய சைவசித்தாந்த சங்கத்தின் அவசியத்தைப்பற்றிக் கூறினார்கள்.

திருவாளர் ஸ்ரீவைகுண்டம் தாலூகா போர்டு பிரசிடெண்டு சங்கரலிங்கக் கவிராயர் அவர்கள் நாளது மாசித்திங்கள் 22, 23, தேதிகளில் திருநாட்காலத்தில் தங்களுடைய ஊராகிய வெள்ளூரில் ஒரு சைவசித்தாந்தசங்கம் நிறுவல்வேண்டும் என்று தலைவர் அவர்களை அங்கே வரும்படி அழைத்திருக்கிறார்கள்.

சைவசித்தாந்த உண்மை நமது நாட்டில் எங்கும் விளங்குதற்கு சைவசித்தாந்த சங்கம் ஒவ்வொரு ஊரிலும் நிறுவி சைவசமய நூல்கள் படித்தும் சொற்பொழிவு செய்தும் வரல்வேண்டும். சைவசித்தாந்த சங்கம் நிறுவுதற்கு எங்கள் உதவி வேண்டுபவர்கள் எங்களுக்கு எழுதும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். சைவசித்தாந்த சங்கம் எந்த ஊரில் நிறுவினாலும் அதைப்பற்றி எங்களுக்குத் தெரிவிக்கும்படி வேண்டிக்கொள்கிறோம்.

தென் இந்திய சைவசித்தாந்த சங்கத்தார்

# தமிழ்ப் பல்கலைக் கழகம்

தமிழ்ப் பல்கலைக்கழகமென்பது தமிழ்மொழியை வளம்படுத்தும் பொருட்டும் தமிழ் நாகரிகம் பேணும் மக்களினது நன்மையின்பொருட்டும் அமையப் பெறவேண்டும். சென்னைப் பல்கலைக்கழகத்தைப் போலப் புதிதாகத் தமிழ்நாட்டில் ஏற்படும் பல்கலைக்கழகம் வடிவெடுக்குமாயின் அது தமிழ் நாட்டினருள் பெரும்பான்மையோர்க்குச் சிறந்த பயனைக் கொடுக்கமாட்டாது. தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் தமிழானது யாவர்க்கும் கட்டாயப் படிப்பாக ஏற்படுதல் மாத்திரம் போதாது. தமிழ் வாயிலாகவே உயரிய கல்வி அளிக்கப் பெறுவதோடு தமிழினை வளர்த்தற்கு வேண்டும் கலை நிலையங்கள் பலவும் செவ்விதின் நிறுவப் படவேண்டும். தமிழ் நாகரிகத்தை விளக்குதல் அக்கழக நோக்கமாக இருக்குமாயின் அந்நாகரிகத்தை மெய்யாகப் பேணும் அறிஞரே எவ்வகைப் போதகாசிரியராகவும் நியமிக்கப்பெறுதல் வேண்டும். இங்ஙனமெல்லாம் செய்தற்கு அடிப்படையாக வேண்டியவற்றை நிறுவிக் கொண்ட பின்னரே பல்கலைக்கழகம் ஏற்படுதல் பொருத்தமாகும். மேலை நாட்டு நுண்ணூல்கள் (Sciences) பலவும் தமிழிலே மொழிபெயர்த்தற்கு ஓர் நிலையம் அமைத்து ஒவ்வொரு நுண்ணூலையும் படிப்படியாக கற்றற்குரிய ஐந்து அல்லது ஆறு புத்தகங்கள் எழுதப் படல் வேண்டும். தமிழிலே யுள்ள அச்சுக்குவராத நூல்கள் பலவற்றையும் தொகுத்து வகுத்து பகுத்துப்பார்த்து ஒப்பிட்டுப் பதித்தற்கு வேண்டிய புலவர் கழகமொன்று அமையப் பெறுதல் வேண்டும். அக்கழகமானது இலக்கியம், இலக்கணம், சைவசித்தாந்தம், வைணவசித்தாந்தம், இசை, மருத்துவம், சோதிடம், நாடகம் முதலிய பல்வகைக் கலைகட்குமுரிய நூல்களைக் கோவைசெய்து குற்றமற வெளியிடுதல் வேண்டும். வடமொழியினின்றும், பிறமொழியினின்றும் தமிழில் மொழிபெயர்க்கப் பெறுதற்குரிய நூல்களை மொழிபெயர்த்தற்கும், மணிப்பிரவாளம் நடையிலுள்ள நூல்களைச் செவ்விய தமிழில் எழுதுவதற்கும் ஓர் மொழிபெயர்ப்பு நிலையம் ஏற்படவேண்டும். தமிழின் துணை மொழிகளாகிய தெலுங்கு, கன்னடம், துளுவம், மலையாளம் முதலியவற்றின் இலக்கணங்களையும், சொற்கோவைகளையும், தமிழ் இலக்கணத்தோடும், சொற்கோவையோடும் ஒத்துப் பார்ப்பதற்கும், தமிழைப் பிறமொழிகளோடு ஒத்துப்பார்ப்பதற்கும் மொழியாராய்ச்சிக் கழகம் ஏற்படுதல் வேண்டும். தமிழ் நாட்டுப் பண்டைச் சரித்திரத்தை ஒழுங்கு பெற எழுதவும், பிற நாட்டுச் சரித்திரங்களைத் தமிழ்ச் சரித்திரங்களோடு ஒத்துப் பார்ப்பதற்கும் சரித்திரம்வல்லார் கழகமொன்று நிலைநாட்டப் படல் வேண்டும்.

தமிழிற்குச் செய்யுள் வழக்கிலுள்ள மொழிகட்கும், உலக வழக்கிலுள்ள மொழிகட்கும் தனித்தனி விரிந்த அகராதி எழுதப்படல் வேண்டும். இப்பொழுது சென்னைப் பல்கலைக்கழகத்தாரால் நடத்தப்படும் அகராதி வேலையானது செவ்வையாக நிகழவில்லை. மருத்துவத் தொடர்புள்ள மொழிகளைக் கோவைசெய்து அகராதியிற் சேர்ப்பதற்கும், சோதிடத் தமிழ் மொழிகளை அவ்வாறே சேர்ப்பதற்கும் உரிய புலவர்கள் நியமிக்கப்படவில்லை. மொழிநூலாராய்ச்சி செய்தற்குத் தக்க

புலவர்களது உதவியையும், இவ்வகராதிக் கமிட்டியார் நாடுவதாகத் தெரியவில்லை. மிகுந்த பணஞ் செலவழித்து வெளிப்படுத்தப்படும். இவ்வகராதியானது இக்காரணங்களால் குறைவுடையதாகவே தோன்றும் போலும். அங்ஙனந் தோன்றுவதற்கு முன்னேயே வேண்டிய சீர் திருத்தங்கள் எற்படுமாயின் அகராதி செம்மையாக முடிந்துவிடும். இதுநிற்க,

இனித் தமிழிலே இலக்கிய இலக்கணங் கல்லாது எழுதும் நாடகங்களும், நாவல் என்னும் புதுக் கதைகளும் மலிந்துள்ளன. அவைகளை யாராய்ந்து, கொள்ளத்தக்கவை இவையென்றும், தள்ளத்தக்கவை இவை என்றும் தீர்மானிப்பதற்கு நூலாராய்ச்சிக் கழகம் ஒன்றும் எற்படவேண்டும். மேற்கூறிய பல்வகை நிலையங்களும் செவ்வையாகத் தமிழ்ப் பற்றுடையாரால் நிறுவி நடத்தப்பெற்று சின்னாள் கழியுமாயின் அக்கழகங்களில் மிக உழைத்துப் பெயர்பெற்றவர்கள் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிலைநாட்டிச் செவ்விய முறையில் அதற்கு வடிவு கொடுத்துத் தமிழையும், தமிழ் நாகரிகத்தையும் வளர்த்தற்குப் பெரிதும் பயன்படுவார்கள். ஆதலால் தமிழ்ப் பல்கலைக் கழகமானது செவ்வையாக அமையவேண்டுமாயின் முன்னுகச் செய்யப்படும் இம்முயற்சிகள் இப்போதே தமிழ்ப் பற்றுடைய பேரறிஞர்களால் தொடங்கப்பெற்று நிகழவேண்டும். உறுதியான அடிப்படை யில்லாது கட்டும் கட்டிடம் நிலைபெறாதாகலின் தொடக்கவேலையானது செவ்விதின் நிகழ்ந்தே தமிழ்ப் பல்கலைக் கழகம் எற்படுதல் வேண்டும். தொடக்க வேலைகள் இப்பொழுதே செய்யப்படல்வேண்டும்.

---

தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

## 5, 6-வது ஆண்டுகளின் நிறைவு விழா

நிகழும் தைத் திங்கள் 9 10-ம் நாட்களில் (22, 23-1-27) ஷை சங்கத்தின் 5, 6-வது ஆண்டுகளின் நிறைவு விழா மிக்க சிறப்புடன் திருநெல்வேலி தாயம்மையம்மாள் பெண் கல்விச்சாலையில் அமைத்த கொட்டகையில் பஞ்சாட்சரபுரம் உயர்திரு. வாலையானந்த சுவாமிகளுடைய தலைமையின் கீழ் நடைபெற்றது. அந்நாட்களில் திருத்தலைவரவர்களால் 'சிவதீக்கை, சமயம்' என்ற பொருள்களும், திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்களால் 'அத்துவிதம்' என்பதும், திரு. T. S. கந்தசாமிமுதலியாரவர்களால் 'பெரியபுராணத் தலைவியர்கள்' என்பதும், திரு. N. M. வேங்கடசாமிநாட்டா ரவர்களால் 'வள்ளுவர் வாய்மொழி', தமிழின் சிறப்பியல்பு', என்பனவும், திரு. கலியாணசுந்தர பட்டரவர்களால் 'விக்கிரக ஆராதனை' என்பதும், திரு. ந. சிவகுருநாத பிள்ளையவர்களால் 'சித்தாந்தமும் உயகியற்கையும்' என்பதும், திரு. ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்களால் 'அஞ்சு அது அஞ்சு' 'ஆறு அது ஆறு' என்பனவும் முறையே பேசப்பட்டன. பின் ஷை சங்கம் மூன்ருவது ஆண்டுப் பரிசுப் பரீட்சையிற் றேரிய மாணவ மாணவிகட்குப் பரிசளிக்கப்பட்டது.

---



திருஞானசம்பந்த சுவாமிகள்

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ரு } மெய்கண்டான் யாண்டு-எாசு பங்குனித் திங்கள் 1927ஆம் மார்ச்சுமீ—ஏப்ரல்மீ { பரல் ௯

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்திநாயனர் சரித்திரம்

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M. A., M. L.]

### தோற்றுவாய்

முழுமுதற் கடவுளை வழிபட்டு அவரது திருவடிப்பேரின்பத்தை அடையக் கருதுவோர் இருவகைப்படுவோர், உலகப் பற்றை அறவே ஒழித்துத் துறவற நிலையில் நிற்போரும், உலகப் பற்றுடையராய்க் கடவுளிடத்து அன்பினை மிகுதியாக வளர்த்து அப்பற்று தானாக நீங்கும்படி முயல்வாரும் ஆவர். உலகத்தி

ளுள்ள பல சமயங்களுள் சமணம், புத்தம், சுமார்த்தவேதாந்தம், மாத்துவம் என்னும் சமயங்கள் துறவற நெறியையே வீட்டிற்கு வழியாகச் சொல்லும். வீட்டின் இயல்பினை முற்றிலும் ஆராயாத கிறித்து, மகம்மதிய மதங்கள் துறவற நெறியைப் பெரிதும் பாராட்டுவதில்லை. வீட்டியல்பினை முற்றும் உணர்ந்த சைவ சமயமானது இருநெறியையும் பெரிதும் தழுவி உரைப்பது பெரியபுராணத்தால் இனிது விளங்கும். இயற்பகைநாயனுர், சிறுத்தொண்டநாயனுர் என்னும் பெரியோர்கள் இல்லறத்தில் வாழ்ந்தும் மனைவி மக்கள்பாற் பற்றிலாதவராய் சிவனடிப்பேரன்பினையே மிகுதியும் உடையவராய் வீடெய்தினமை காண்க. பண்டைத் தமிழரும் இல்லறநெறியை வீட்டிற்கு ஓர் தந்திரவழியாகப் பயன் படுத்தும் ஓர் முறையை அறிந்திருந்தனர். இறையனுர்அகப்பொருளுரையில் களவியல் என்பதற்குப் பொருள் கூறுமிடத்து, உயர்ந்தஇன்பம் ஒத்த தலைவனும் தலைவியுங் கூடிவாழ்தலால் உளதாமென்றும் அவ்வாழ்க்கை தவத்தாற் கிட்டுவதென்றுங் கூறி, பின்னர் அத்தவத்தை வீட்டின் பொருட்டு பயன்படுத்த வேண்டுமென்று தந்திரமாகப் போதிப்பது அந்நூலின் நோக்கமென்றது அறியற்பாலது. உலகவாழ்க்கையில் அமிழ்ந்திக் கிடக்கும் உயிரைப் பற்றறச் செய்யும்பொருட்டு ஊன் ஒழித்தல் வேண்டுமென்றும், விடியற்காலத்தில் குளிர்ந்த நீரில் மூழ்கவேண்டுமென்றும், சடை மரவுறி முதலியன தரித்தல் வேண்டுமென்றும், வெயிற்காலத்தில் அனல் நடுவிலும், மழைகாலத்தில் தண்ணீரிலும், பனிக்காலத்தில் வெளியிலும் நின்று தவம்புரியவேண்டுமென்றும் பல துறவுநூல்கள் கூறும். அவ்வாறு கடுமையாகத் தவம் புரியாது, 'நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் என்றும் சிவன் தாள் நினை' என்றபடி எப்பொழுதும் கடவுளை மறவாத அன்பினையே கடைப்பிடிக்க வேண்டுமென்பது சில பேரறிஞர் கொள்கை. அங்ஙனம் செய்தலாலே முத்தியடைதல் கூடுமென்பதை துறவில் சிறந்த பட்டினத்தடிகள் மிகவும் அழகாக பின்வருமாறு நவின்றனர்.

மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கள்
மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவருங்
காடு மலையும் புக்குக் கோடையிற்
கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பி னழுவத்து நின்று
மாரி நாளிலும் வார்பனி நாளிலு
நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்து

முடையைத் துறந்து முண்ணு துழன்றுங்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன வருந்தயுங்
களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டுந்
தளர்வுறு மியாக்கையைத் தளர்வித் தாங்கவ
ரம்மை முத்தி யடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவு மொறுப்ப
ரீங்கிவை செய்யா தியாங்க ளெல்லாம்......
..............................................
மதியென மாசறு வதனம் விளங்கப்
புதுவிரை யலங்கல் குழன்மிசைப் பொலியு
மஞ்சொன் மடந்தைய ராகந் தோய்ந்துஞ்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தி
னறுசுவை யடிசில் வறிதினி தருந்தா
தாடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்துந்
தூசு நல்லன தொடையிற் சேர்த்தியு
மைந்து புலன்களு மார வார்ந்து
மைந்தரு மொக்கலு மகிழ மனமகிழ்ந்
திவ்வகை யிருந்தோ மாயினு மவ்வகை
மந்திரவெழுத் தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலி னந்த
முத்தியு மிழந்தில முதல்வ வத்திற."

சைவத் திருநெறித் தலைவர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்திநாயனார், மேற்கூறிய இருவகையுள் இரண்டாவது வகையைச் சார்ந்த மக்கட்குத் தலைசிறந்த ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றார். முன்னை வினையினாலே பெண்டிரொடு வாழ்ந்தும் திருவடிஞானம் உடையவராதலால் அவர் வீடுபேற்றிற்கு உரியரானார். எத்துணைத் தவங்கிடந்தாலும் சிவபெருமான் அளிக்கும் பதிஞானம் இல்லாதவர்கள் பிறவியறமாட்டார்கள் என்பதை அருணந்திசிவாச்சாரியர் பின்வருஞ் செய்யுளில் குறித்துள்ளார்.

"நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து
    நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்து
நீடுபல காலங்க ளித்தரா யிருந்தும்
    நின்மலஞா னத்தை யில்லா நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
    பெறிவிழியின் படைக்கடைக்கே கிடந்து மிறைஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
    குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்."

இச்செய்யுள் நமது நாயனார் பெருமையை இனிது விளக்கும்.

பெரியபுராணத்திற்குக் கதைத்தலைவராக எண்ணப்படுதற்குரியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளே. பெரியபுராணத்தின் முதலிலும், நடுவிலும், முடிவினும் கூறப்படுவது இப்பெருந்தகையார் புராணம் ஆதலால் இவர் சரித்திரத்தினுள்ளேயே இவர் கூறிய திருத்தொண்டர்களின் வரலாறும் அடங்கும். இவர் திருத்தொண்டத் தொகையை அருளிச்செய்யாவிடின் பெரியபுராணமே ஏற்பட்டிராது. அறுபத்துமூன்று தனியடியார் பெருமையும், ஒன்பது தொகை அடியார் பெருமையும் உலகத்திற்கு விளங்கமாட்டா? இவர் சைவ உலகத்திற்குச் செய்த பெரு நன்மையின் சிறப்பை உணர்ந்தே ஆசிரியர் சேக்கிழார் ஒவ்வொரு சரித்திரத்தின் முடிவிலும் இவர்க்கு வாழ்த்துக் கூறியுள்ளார். ஆதலால் இப்பெருந் திருவாளரது சரித்திரம் யாவராலும் கேட்டற்குரியது.

---

## ஆளுடைய பிள்ளையார் அற்புதத் திருநாட்கள்

[ப. அ. முத்துத் தாண்டவராயன்]

வரத்துயர் வெண்டா மரைமக ளாயினும்
பரப்பிய மாந்தர் பவமொழித் தருளலிற்
செந்தமிழ்ச் செல்வி செவ்வி திகழுவை
நந்தலில் விளக்கே நவிலுவன் கேண்மதி.

நின் செவ்விய இதழ்களின் ஆளுடைய பிள்ளையார் அவதார மகிமையும் அற்புதப் பெருமையும் ஆன்றோர் பலர் தம் மதியின் மதித்து மதிதொறும் வெளிப்படுத்துங் கட்டுரைகளைப் பேணி, யானும் சிலவற்றை யெழுதத் துணிந்தேன். அவற்றை நின்னிதழிற் பதித்தருளுக. அவை ஆளுடைய பிள்ளையார் அற்புதத் திருநாட்க ளென்பன.

திருஞானசம்பந்தப் பெருமானார் பெருமணநல்லூரில் நங்கை காதலியாரைக் கைப்பிடித்து அருளிய பின்னர் அவ் விவாக மண்டபத்திருந்த பெரியார் அடிகளை நோக்கி,

"அக்கினியை வலம் வந்து அம்மியில்
காதலியா ரடியைத் தூக்கி வையும்"

என, "கல்லூர்ப் பெருமணம்" எனத் துதித்து, வலம்வரல் சிவபிரான் திருவடிக்குச் செய்வது தகுதியென் றெழுந்து ஆலயஞ் சென்று, "காதலாகி" யென்னும் பஞ்சாக்கரப்பதிகம் பாடிய

வுடன் அச்சந்நிதியில் தோன்றிய ஒரு பெருஞ் சுடருள் அடியார்களைப் புகுத்தித் தாமும் தம்மனைவியாரோடு புகுந்தனர். இவ்வற்புதங்களைக் கண்ட அமரர் சீகாழிநாதர் திருமுன் வந்து பணிந்து, அந்நாதர் ஆஞ்ஞைப்படி அவ்வாளுடையவந்தணருக்கு ஆலயமமைத்து, ஆங்குப் பொன்விம்பத்தில் அன்னாரை ஆவாகனஞ்செய்து பூசித்து, நித்திய நைமித்தியங்களெல்லாம் முறைப்படி விளங்கப் புரிந்து, பன்னிருமாதத் திருவாதிரைகளிலும், வைகாசி மூலத்திலும், ஆவணி யைப்பசி சதயங்களிலும், மகர மாதத் தமாவாசையிலும், ஆனிமாதத்து உரோகிணியிலும் விசேட பூசையியற்றி, பங்குனி மாதம் சதய நட்சத்திரத்தில் கொடியேற்றி எட்டு நாளும் அவர் செய்த அற்புதங்களை விழாவாகச் செய்து ஒன்பதாம் நாள் ரதோற்சவமும் பத்தாம் நாள் திருவாதிரையன்று தீர்த்தோற்சவமும் செய்வித்து அனுக்கிரகம் பெற்றனர். இவ்வாறே இந்நகர மாந்தர் யாவரும் வருடந்தோறுஞ் செய்து வந்தனர். அன்றியும் விபுதர் ஆளுடையபிள்ளையார் திருவுருவொன்றைச் சமைத்து அதனை அர்ச்சித்து வருமாறு கிரியாசாரியார் ஒருவரிடம் அளித்தனர். அத்திருவுருவம் அவ்வாசாரிய பரம்பரையில் ஞானசாரியராக விளங்கிய கண்ணுடைய வள்ளலாரா லர்ச்சிக்கப்பெற்று அன்றுமுதல் குகபீடத்தமர்ந்து வருகின்றது.

இத்திருநாட்களின் அடைவு:—

"நிகழ்சித் திரைபங் குனிமாத நிறையா திரையும் வைகாசிப்
பகர்மூ லத்து மாவணியைப் பசியா மாதச் சதயத்தும்
மகர மதியிற் கதிர்மதிய மருவு நாளு மிதுனமதி
திகழ வருரோ கணியுமென்றேழ் தினத்து நைமித் தியமியற்றி
புரையில் கேள்வி யிமையோர்காள் புகல்பங் குனியிற் சதயத்தின்
நிரைசெய் மணிப்பூங் கொடியேற்றி நெடுமான் றலைநா டேர்நடத்தித்
திரைசெய் தீர்த்த மாதிரைநா டினைத்தா டுதிரென் றருள்செய்ய
வரைவி லமர ராண்டுதொறு மகிழ்ந்திவ் வாறு புரிந்தனரால்."

என்ற பாடல்களான் விளங்கும்.

இங்ஙனம் அமரரமைத்த ஆலயத்தை அவனிபர் பலர் புதுக்கி ஆட்டை விழா முதலியவற்றை நடத்திவரப் பல நிபந்தங்களேற்படுத்தினர். அவற்றின்பின் ராஜாதி ராஜன் இரண்டாவான் காலத்து 1181. A. D-ல் வெண்ணிமணிகிழான் சம்பந்தர்க்கு மகா நைவேத்திய நிபந்தமும், மூன்றாவன் குலோத்துங்கன் காலத்து 1181-ல் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்கள் ஆளுடையபிள்ளையாருக்குத் திருநாமத்துக் காணியும், பெருங்குந்தி பெருமக்கள் திருப்பாற்போனக நிபந்

தமும், 1182-ல் பெருமக்கள் திருமாளிகைத் தமிழ்விரகர் திருமுறைக்காப்பு நிபந்தமும், 1184-ல் வேளூர்த்திம்மன் நித்திய பூசை நிபந்தமும், சோழமண்டலத்து வேள்மான் மூப்பூ ராஜ விச்சாதரி சம்பந்தம் பிரதிட்டையும், அம்மன்னவர் ஆளுடைய பிள்ளையார்க்கு அர்ச்சனை நிபந்தமும். 1185-ல் சோளேந்திர சிங்கவிழுப்பரையன் ஸ்ரீபாதம் தாங்க நிபந்தமும், 1187-ல் அமரகோளப் பல்லவரையன் நந்தாவிளக்கு நிபந்தமும், 1188-ல் மும்முடிச் சோழன் பேரம்பலத்தார் திருப்பாற்போனக நிபந்தமும், 1189-ல் வெண்ணிக்கூற்றத்துக் குணநாடனுடையான் கூத்தாடுந் தேவர்க்கு நிபந்தமும், 1190-ல் பெருங்குறிப் பெருமக்கள் சம்பந்தர் தேவகன்மிகளுக்கு நிபந்தமும், ராஜராஜன் மூன்றுவான் காலத்து 1218-ல் ஆரம்பூண்டான் சம்பந்தர் பெருமதிலும், கொல்லிக் குரும்புடை யாண்டான் ஆயிரமடக்குப் பிரசாதமும் கறியமுது விஞ்சனமும் அமைக்க நிபந்தமும், 1228-ல் பராக்கிரம சோழ பல்லவரைய னுள்ளிட்டார் மங்கையர்க்கரசியார்க்கு நிபந்தமும், வீரஹரிஹரன் இரண்டாவான் புதல்வர் வீர விருப்பண்ண உடையார் 1393-ல் ஆளுடையபிள்ளையாருக்கு அருச்சனை செய்ய அர்ச்சகர், பட்டர், பண்டிதர் இவர்களுக்குத் திருநெறிமாளிகை மடத்து முதலியார்வாயிலாக நிபந்தமும் ஏற்படுத்தினர்.

இவ்வேற்பாட்டின் படியே அவ்வம் மகாசபையார் சோழவரசர் விஜயநகரத்தார் துளுவர் சாளுவர் நாயக்கர் மஹாராஷ்டிரர் பார்வையின் நடத்தி வந்தனர். பிறகு அச்சபைகள் மறையவே திருக்கைலாச பரம்பரைத் தருமபுர ஆதீன கர்த்தர்கள் இக்கோயி லதிகாரத்தை நேரில் வகித்துச் சிவாலய தருமத்தைப் பரிபாலனஞ் செய்து வருகிறார்கள்.

ஆளுடையகாழிவேந்தர்க் கமைந்த இத்திருநாட்களில் பங்குனித் திருவிழா நீங்க ஏனையாவையும் இந்நாள்வரை நடந்து வருகின்றன. அத்திருவிழா வொன்றும் எண்பது வருஷ காலமாக (எக் காரணத்தாலோ யான் அறியேன்) நின்றுபோ யிருக்கிறது. இனி நடக்குமோ என்று எதிர்பார்ப்பதற்கும் இடமுண்டோ? எனினும் அத்திருவிழா நடந்த விமரிசையை இங்குக் குறிக்கின்றேன்.

இவ்வாலயத்து நித்திய நைமித்திய காமிய பூசைகளும் உற்சவாதி பிராயச்சித்தாந்தங்களும் சைவாகமச் சுப்பிரபேதஞ் சாற்றுமியல்தேர் ஆற்றலினுல் (திருவிழா வத்தியாயம் 48) நடைபெறுவன. அத்திவ்வியாகமத்தின் வழியே சம்பந்தப்

பெருமா னுற்சவம் கொண்டாடப்பட்டது. துவஜாரோகண மாயினபின் முதல் எட்டு நாளும் நம்பிரான் அற்புத வைபவங் களும், ஒன்பதாம் நாள் திருத்தேரும், பத்தாம் நாள் தீர்த்த வாரியும் நடைபெறுமென மேற்குறித்துள்ளேன். அவ்வெட்டு நாளுள் (க) சுவாமிகள் திருவவதரித்துத் திருப்பாற் போன கம் உண்டு திருப்பதிகம் பாடிப் பின்னர் திருத்தாளம் பெற்று நித்திலச் சிவிகை யேறியதும் (திருப்பாற் போனகக் கட்டளை யிரண்டையும் திருக்கோயிலிலும் சுவாமி புறப்பாட் டில் வெளியிலும் நடத்துபவர் இருவர் துவிஜர், சோழதேசத் துப் பிராமணருள் ஸ்ரீவத்ஸ பாரத்துவாஜ கௌண்டிந்ய கோத் திரம் ஆபஸ்தம்ப சூத்திரத்து மஹாசைவர். இன்னோர் கிருகம் இரண்டும் இரட்டையக்கிரகாரம் தெற்குச்சிரேணிக் கீழ்க் கோடியிலுள்ளன. சைத்திரோற்சவம் இரண்டாம்நாள் திரு முலைப்பாலுற்சவம் இக்காலத்து நடைபெறுகிறது.), (உ) முய லகனகற்றியதும், (ங) பந்தரேய்ந்து கிழிபெற்றதும், (ச) அர வின்விடம் திருமருகலில் தீர்த்ததும், (ரு) வீழிநகர்க்கா செய் தித் திருமறைக்காட்டிற் கதவம் பிணித்ததும், (சு) குப்ஜபாண் டியர் வெப்பு விடுவித்துக் கனல்வாதம் புனல் வாதஞ்செய்து அமணரைக் கழுவிலேற்றியதும், (எ) திருப்பதிகத்தால் ஓடம் ஏற்றிப் புத்தன் தலையில் இடியேற்றியதும், (அ) காயாத பனை யிற் கனிகளேற்றி யங்கம்பூம்பாவை யாக்கியதும், ஒன்பதாம் நாள் திருமணமுடித்து இரதமூர்ந்ததும், பத்தாம்நாள் பவனி வரவும் தீர்த்தமாடலும் அற்புதச்செயல்களாக நிகழும்.

இவற்றுள் பவனி விழா வெகுசிறப்பாகப் பண்டைநாட் களில் கொண்டாடப் பெற்றதால் நம்பியாண்டார் நம்பிகள் சீகாழிச் செம்மல் திருவுலாமாலையில் அதனை வியந்து பாடியுள் ளார்கள் அவ்வுலாவின் சுருக்க வர்ணநம்:—"திருந்தியசீர்ச் செந்தாமரைத் தடத்துச் சென்று மேதிபாயத் தேசுடைய செறுவுகளும், கமுகாதிய கெழீஇ வளந்துன்று பொழிலின் மாடே நற்றவத்தோர் சார்விடமும் புகழ் ஆருந் தன்மைய வாய், நானூற்றுவர் மறையோர் மன்னிவாழுந் தகைமைத் தாய்ப் பார் விளங்கு செல்வம் நிறைந்த (ஸ்ரீ) காழிமன்னவும், பதினயிரநற்பனுவல் புலியவர்க்கு வாய்ப்பவும் கவுணியர்க்கு ஓர் சேயென்ன வந்து அவதரித்த வள்ளலை மறையோனைச் சேயை, நாற்பத்து எண்ணயிரவர் முனிவர்ட்டத்துள் இருப்ப, புகலிப் பூசுரர் புக்கு வீதி யெழுந்தருளவேண்டுமென விண்ணப் பஞ்செய்ய, அவர்க்கருளி, நூல்வலந்திகழ வெண்ணீற்றினெண் களப மட்டித்துக் கலிங்க முடல் புனைந்து, களிற்றைப் பரிக் காரர்கள் தாம்மாடணையக்கொண்டு வருதலுமே மேற்கொண்டு,

சந்தியனுகி, சிறுத்தொண்டர் பிறகு அணையத்தோன்றுதலும், வீதியணுகுதலும், பீடுடைய பேரிளம் பெண்ணீருகப் பேதை முதலாக மடநல்லார் புறப்பட்டுக் காண்டலும் மால்கொண்டு பூந்துகிலைப் பூமாலை யென்றணைவார், பூவினை முன் சாந்தமென மெய்யினிற்றைவருவார், வாய்ந்த கிளியென்று பாவைக்குச் சொற்பயில்வார், பந்தையொலி மேகலை யென்றுடுப்பார் (ஆகக்) கைதொழ முன்பேர்ந்தான் வீதியுலா'' என்பது. இத்தகைய அற்புதவாய்மைகள் புரிந்து நமது பெருமக்களை ஆளுடைய கழுமலநாதன் கவுணியர் குலபதி தண்டமிழ்விரகன் சைவசிகா மணி பண்டிதரின்பன் பரசமயகோளரி என புன்றமிழ் கொண் டிரங்கி என்னுள்ளத் தன்பினை யருளிய ஆண்டகை தண்புகழ் நிறைந்து திகழுக. செந்தமிழ்ச்செல்வி வாழி.

---

# கோயிலும் குறிகளும்

[S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் B.A., L.T.,]

மக்களிற் பெரும்பாலோர் பெருநெறி பிடித்தொழுகாது புலனின்பமே நாடி யுழலும் புல்லறிவுடையோர். இவர்களை நோக்கி இரங்கித் திருநாவுக்கரசு சுவாமிகள்,

"குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர்நின்றதொர் நேர்மையும்
அறியஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியிலீர்மனம் என்கொல் புகாததே''?

என்று வினவி யருளுகின்றார்கள். எம்மனோர் கருத்துட் பதிந்து நலஞ் செய்ய வேண்டுமென்று நம்மப்பர் சுட்டுவனவற்றுள் கோயிலும் குறிகளும் சேர்ந்துள்ளன. இவற்றின் பொருளை ஒரு சிறிது ஆராய்தலே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

முதலில் கோயில்களின் வரலாற்றைச் சற்று காண்போம்: நகரம், நியமம், கோட்டம், பள்ளி, ஆலயம் என்னுஞ் சொற்களும் கோயில் என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளன. 'கோயில்' என்பது, கோ + இல் எனப் பிரிந்து இறைவன் உறைவிடம் என்னும் பொருள் தரும். இவ்விறைவன் மண்ணாளு மன்னவனுயினு மாகலாம். "மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்''*

---

*சிலப்பதிகாரம்: ஊர்காண் காதை—ூ௨.

என்றவிடத்து, 'கோயில்' அரசன் அரண்மனையைக் குறித்தமை காண்க. நாளடைவில் இச்சொல் அரசரில்லத்தைக் குறிக்கும் வழக்காற்றலை இழந்து, ஆண்டவன் ஆலயத்தைமட்டுங் குறிப்ப தாயிற்று.

இறைவனுக்குக் கோயில் அமைத்தல் மிகவும் தொன்மை யான ஏற்பாடேயாம். இறந்தொழிந்த பெருமதங்கள் சுமார் பத்தென மதிக்கலாம். அவை, பெரு, மெக்சிகோ, ஆப்பிரிக்கா, மெசொபொடேமியா, எகிப்து, கிரீசு, உரோம், பாரசீகம் என் னும் இடங்களில் நின்று நிலவி மறைந்துபோனவை. இப் போது உயிரோடுள்ள பெருஞ் சமயங்களையும் பத்தெனக் கணிக்கலாம். இவற்றை, ஹிந்து சமயம், யூதமதம், ஜோராஸ் திரியமதம், ஷிண்டோமதம், டேவோமதம், ஜைனமதம், புத்த மதம், கன்பியூசியமதம், கிறிஸ்துவமதம், முகம்மதியமதம் என்று இவை தோன்றிய காலமுறையை யொட்டி வரிசைப் படுத்தலாம். இவற்றுள் முகம்மதியம் கி - பி. 7 - ம் நூற்றில் தோன்றியதாதலால், ஆண்டில் மிக இளையது. 1930 - வருடங் கட்கு முன் பிறந்த கிறிஸ்துவம் இதற்கு நேர் மூத்தது. மற் றவை யெல்லாம் இற்றைக்குச் சுமார் 2501-ஆண்டுகட்கு முற் பட்டவையே. இறைவனை வழிபடும் இடங்கள் என்னும் பொரு ளில் மேற்குறித்த எல்லா மதங்கட்கும் கோயில்கள் உண்டு. அவற்றின் அமைப்பு காலத்திற்கும் இடத்திற்கும் மக்கள் நாக ரிக வளர்ச்சி யளவிற்கும் ஏற்ப வெவ்வேறாய் வளர்ந்துவந் துள் ளது.

இங்ஙனம் தொன்றுதொட்டே உலகெங்கும் கோயில்கள் இருந்து வருவதற்குக் காரணம், சமய உணர்ச்சி மக்களிடம் என்ஞான்றும் ஏதோ ஓரளவில் இருந்து வந்ததேயாகும். "அஞ்சிலாயினும், அன்புபட்டாயினும், நெஞ்சம்! வாழி, நினை, நின்றியூரை நீ" என்று அறிவுறுத்தி யருளினர் ஆளுடைய பிள்ளையார். முதற்கண் அஞ்சி வழிபட்டவரே ஆதிகாலமக்கள். தங் கண்ணுக்குப் புலப்படாது நிற்கும் அறிவுடைப் பெருஞ் சத்தியொன்றும், பெரும்பாலும் அதற்கடங்கி நடந்து தம்முட் பொருதுகொண்டிருக்கும் வேறு சிறுசத்திகள் (தேவதைகள்) பலவும் உண்டென்றும், அவையெல்லாம் மக்கள் வாழ்க்கையிற் கலந்துகொண்டு நன்மையுந் தீமையும் விளைக்கும் தன்மைய என்றும், அவற்றின் தயவைத் தம் வழிபாட்டால் பெற்றாலன்றி அவை தம்மைத் துன்புறுத்துமென்றும் அவர்கள் நம்பித் தம் வாழ்க்கையை நடத்தினர்கள். அவர்கள் வழிபட்ட தெய்வங்க ளுட் பல, ஞாயிறு, திங்கள், வைகறைவானம், தீ, மழை, இடி,

காற்று முதலிய இயற்கைப் பொருள்களாம். இவற்றைத் தெய்வங்களாகக் கொண்டு இவற்றின் அருளைப் பெறவேண்டி உயிர்ப் பலியிடுதல் முன்னாளில் பெருவழக்காயிருந்தது. அப்பண்டை மக்கள் தாம் வளர்த்த ஆடுமாடுகளையும் சில சமயங்களில் மனிதனையுங்கூடப் பலியிட்டார்கள். இப்பலிப்பொருளோடு சேர்த்தோ தனித்தோ தாமுண்ணும் மரக்கறி யுணவுகளிற் சிலவற்றையும் படைத்ததுண்டு. இப்படி வேள்வி செய்தபோது தாம் வழிபடுந் தேவதைகளைப் புகழ்ந்து பாடித் தம் குறைகளை விண்ணப்பித்தனர்.

பெரும்பான்மை கருதிப் பேசுமிடத்து, மேற்சொன்ன உயிர்ப்பலிக் கமைந்த பலிமேடையே* முதன்முதல் மனிதன் கடவுளை வழிபட்ட கோவிலா யிருந்தது. இப்பலிமேடை ஒரு கற்பாறையே. இம்மேடை, ஒவ்வோரூரிலும் இயற்கை வளஞ் செறிந்ததோர் பக்கத்தில் செழித்துத் தழைத்த மரத்தடியில் அமைக்கப்பட்டது. கடவுள் அங்கெழுந்தருளித் தன்னை வழிபடுவோர் தரும் பலிகளையும் செய்யுந் தோத்திரங்களையும் ஏற்றுக் கொள்ளுகின்றார் என்னும் நம்பிக்கை வலுத்ததும், அப்பாறை இருந்த இடத்திற்கே பெருமதிப் பேற்பட்டுவிட்டது. குறித்த நாட்களில் அம்மேடைக்குச் சென்று பலியிட்டுப் போற்றி வரம் வேண்டும்போது மட்டுமன்றி, அம்மேடையைக் காண நேர்ந்தபோதெல்லாம் கடவுளை நினைத்து வணங்கிச் செல்வதும் இயல்பாயிற்று.

நெடுங்காலம் வரையில், இப்பலிமேடையைத் தவிர வேறு கோயில்கள் எவையும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பின்பு மனிதன் தன் கருத்துக்களைப் பருப்பொருளாக வெளியிடுதற்கு முயன்றபோது, தான் கண்ட பொருள்களின் உருவங்களை வரையத் தலைப்பட்டான். சித்திரம் இவ்வாறு தோன்றியது. பின்பு, புறக்கண்ணாற் காணப்பெறாது மனக்கண்ணாற் கண்ட காட்சிகளையும் உருவங்களையும் சித்திரிக்கலானான். நாளடைவில் இவ்வடிவங்களை மண்ணிலும், மரத்திலும் கல்லிலும் பன்னாட்களுக்குப் பின் உலோகங்களிலும் செய்யுந் திறமையும் வழக்கும் பெருகின.

இப்படிக் கடவுளை வழிபடுதற்கு ஏற்பட்ட பருவுருவங்களைப் பண்டைமனிதன் பலிமேடைக் கெதிரில் எழுந்தருளப்

---

* "வெறிகளங் கடுக்கும் வியல் அறைதோறும்" (—"வெறியாடின்ற களத்தை யொக்கும் அகன்ற பாறைகடோறும்") என்னும் மலைபடுகடாத்து 150 அடியைக் கருதுக.

பண்ணினன். இவற்றுள் மிகவும் பழையது, அனற்கொழுந்து வடிவாயுள்ள சிவலிங்கமே என்று கருத இடமுண்டு. எங்ஙன மென்று சிறிது காண்பாம்: ஞாயிறு, திங்கள் தீ முதலிய இயற்கைப்பெரும் பொருள்களைத் தனித்தனி தேவதைகளாய்க் கொண்டு வணங்கிய மக்களில் நாளடைவில் அறிவு பெருக, அவருட் சிறந்தோர் அவற்றிலுள்ள நலமும் வலியுமெல்லாம் ஒரே இறைவனுடையன என்று கண்டார்கள். அப்போது அவற்றை இறைவனது மாபெருமேனிகளாக, விளக்க நிலயங்களாக, கருதி வழிபடத்தலைப்பட்டார்கள். அவற்றுள் தீயானது மக்கள் கைக்கெட்டுவதாய் அவர்களால் வளர்க்கக்கூடிய தான போது 'அவ்வனற்பிழம்பைச் சிறப்பு வகையில் ஆண்டவன் திருமேனியாகக் கொண்டு போற்றும் வழக்கம் பெருகிற்று. கொற்கைத் தீயானது நெய்யும் விறகுங் கொண்டு ஓம்பப்பட்ட போதன்றித் தோன்றாது. அன்றியும் மனிதன் தன் அன்பின் அறிகுறியாக அவ்வனற் கொழுந்துக்கு நீராடலும் ஆடை சந்தமணி மலர் புனைதலும் இயலாவன்றே? ஆதலின், அவ்வனற்பிழம்புருவத்தைக் கல்லில் அமைத்து வணங்கும் வழக்கம் தோன்றியது. இவ்விலிங்க வழிபாடு பண்டை மெக்ஸிகோ, எகிப்து, அராபியா முதலிய வெளிநாடுகளில் இருந்ததற்குச் சான்றுகள் கிடைக்கின்றன. நமது நாட்டில் இப்பண்டை வழிபாடு இமய முதற் குமரி வரையில் இன்றளவும் காணக்கிடக்கின்றது. அறிஞர்கள் இவ்விலிங்கத்தின்கண் தத்துவங் கடந்த தனிமுதற் பொருளாங் கந்தழியை வழிபடுகின்றனர், மற்றையோரிற் பலர் ஒரு மரத்தின்கீழ் கல்லிலோ மண்ணிலோ இவ்விலிங்க வடிவைச் சமைத்து தம்மிஷ்ட தெய்வத்தை அதனில் வருவித்து வணங்குதல் இன்றும் கண்கூடாயுள்ளது.* மிகவும் பண்டையதான சிவலிங்க வழிபாட்டுடன் கைகால் முதலிய உறுப்புகள் பொருந்திய பல்வேறு உருவங்களை வைத்துச் செய்யும் வழிபாடுகள் பின்னளிற் பல்கின. இவற்றை விருப்பிற்பெருகும்.

இவ்வாறெல்லாம் உருவவழிபாடு பெருகிவருகையில், அளப்பரும் பெருமையுடைய ஆண்டவன் வதிதற்குத்தக்க சிறப்பமைந்த கோயில்கள் வேண்டும் என்னும் விருப்பமும் முயற்சியும் உடனே தோன்றின. அரசனில்லத்தினும் பார்க்க ஆண்டவன் உறையுள் சீரினுஞ் சிறப்பினும் விஞ்சி விளங்கவேண்டும் என்னும் ஆர்வம் பெருகிற்று. இவ்வாறு கோயில்கள் உலகெங்கும் தோன்றிப் பெரும்பொலிவொடு நிலவுவவாயின.

---

*சுறாமீனின் கொம்பை நட்டுத் தெய்வமாக 2000 வருடங்கட்கு முன் தமிழ்நாட்டுச் செம்படவர் வணங்கிய செய்தி பட்டினப்பாலையிற் காண்கின்றது.

பல நாடுகளிலும் காணப்படும் பல்வகைக் கோயில்களின் காலத்தையும் கட்டிட அமைப்பு வரலாற்றையும் திறம்பட ஆராய்ந்து மேல்நாட்டறிஞர்கள் பல அரிய நூல்களை எழுதியுள்ளார்கள். அவர்களைப் பின்பற்றி, இந்நாட்டிலும் ஒரு சிலர் அம்முயற்சியில் ஈடுபட்டு வருகிறார்கள். அறிவு வளர்ச்சியை அவாவிப்பெருமக்கள் பட்டுள்ள பாடு பெரிதும் போற்றற்குரியதாம். அக்கல்வியாளர்கள் தம் வீட்டையும் நாட்டையும் விட்டுக் கலத்தினும் காலினும் பிரிந்து, பன்னூறு காவதந் திரிந்து காடும் மலையும் கடுமணல் வெளியும் புகுந்து, அழிந்து பட்ட பண்டை நகரமண் மேடுகளைத் தோண்டிப் பொருள்களைச் சோதிக்கின்றனர். இறந்தொழிந்த மொழிகளைச் சுட்டசெங்கற் சுவடியினின்றும் வேறு சாசனங்களினின்றும் உயிர்த்தெழச் செய்கின்றனர். பண்டை நாகரீகங்களைப் பற்றிய பல உண்மைகளைக் கண்டுபிடித்து உலகத்திற்கு இனிது விளக்குகின்றனர். அவர்கள், எழுத்துத் திறமையாலும் புகைப்படம் யந்திரவிளக்கு முதலியவற்றின் உதவியாலும், கோயில்கள் முதலிய கட்டிடங்களின் வளர்ச்சி முறைமையையும் மற்றும் பல பண்டைச் செய்திகளையும் நம்மனோர் வியப்பும் பயனும் பெறுமாறு தெரிக்கின்றனர். இவர்களெழுதிய நூல்கள் யாவும் ஆங்கில முதலிய பிற நாட்டு மொழிகளில் இருத்தலால், அவற்றிற் சிலவற்றையேனும் தமிழ்ப்படுத்திக் கோடல் தமிழர்க்கு இன்றியமையாததாம். இது நிற்க.

கோயில் அமைப்பு வரலாற்றைச் சுருக்கமாகக் குறித்தற்கும் ஒரு கட்டுரை இடந்தராதென்பது தேற்றம். ஆயினும் மேற்சொன்ன ஆராய்ச்சியாளர் தரும் கண்கொண்டு காணக்கூடிய பொருள்களில் இரண்டொன்றையேனும் தொகுத்துச் சுட்டாது செல்ல மனம் இசையவில்லை. அவற்றிலொன்று சாலடி (Chalade) நாட்டுப் பண்டைக்கோயில். இது குறைந்தது 5000 ஆண்டுகட்கு முற்பட்டது. மெசோபொடோமியாவில் 'முகோ' என்னுமிடத்திலுள்ள மண்மேட்டைக் கிளர இதனமைப்பு அறிஞர்க்குப் புலப்பட்டது. இக்கோயில் சுட்டசெங்கல்லாலாயது. ஒன்றிற்கொன்று பரப்பிற் குறைந்த மேடைகள் ஒன்றின்மேலொன்றாய் அடுக்கியுள்ளன. மூன்றாவது மேடையின் உச்சியில் ஒரே அறையுள்ளது. இது தான் கோயில். இதற்கெதிரே பலிமேடையாக ஒரு கற்பாறையுள்ளது. கோயில் சுவர்களின் வெளிப்புறத்தில் பளபளப்பான நிலநிற எனமல் ஓடுகள் பதிக்கப்பட்டுள. உட்புறத்தில் மரப்பலகைகள் தைத்துள்ளன. இவற்றில் இடையிடையே சலவைக் கல்லும் பொன்னும் மணியுங்கொண்டு செய்த நுண்ணிய சிற்பவேலைகள் பதிக்கப்பட்டிருக்கின்றன.

இக்கோயிலில் இருந்த தேவதைக்கு ஙன்னர் என்பது பெயர். கீழிருந்து மேலேறிக் கோயிலையடைதற் கேற்றவாறு மேற் சொன்ன மேடைகளின் படிகள் அமைந்துள்ளன.

இனி எகிப்து தேசத்தைப் பற்றிப் படிக்கையில், அங்கும் மிகப்பழையனவான கோயில்கள் இருப்பதை அறிகின்றோம். அந்நாட்டின் தலை நகராகிய கெயிரோவுக்கு அருகிலுள்ள கீஜா என்னுமிடத்தில் ஸ்பிங்க்ஸ் கோயில் ஒன்றுள்ளது. இதுவும் வயதில் சுமார் 5000 ஆண்டுகட்குக் குறைந்ததன்று. கருங்கல் எளிதில் அகப்படாத சாலடி நாட்டுக் கோயில் போலல்லாது, அஃது எளிதிற் கிடைக்கும் இவ்வெகிப்தியக் கோயில் கருங்கற் கட்டிடமாயுள்ளது. இது தரையிலுள்ளதொரு மண்டபம். 55-அடி நீளமுள்ளது. இதனுள் சிற்பவேலை சிறிதுமில்லாத சதுரத் தூண் வரிசைகள் இரண்டுள்ளன. கருங்கல் பாவிய மேற்கூரை தட்டையாயிருக்கின்றது. கி-மு. 1600 தொடங்கித்தான் எகிப் தில் கோயில்கள் பெரிதும் மல்கியதாகத் தெரிகிறது நாளடை வில் மண்டபத் தூண்கள் சிற்ப வேலையாற் சிறந்து காண்ப வாயின. பின்னர், பாறைகளைக் குடைந்து கோயில் மண்டபம் அமைக்கும் வழக்கமேற்பட்டது. அப்பு சிம்பல் என்னுமிடத் தில் 150 அடி நீளமும் 100 அடி உயரமுள்ள கோயிலொன்று இங்ஙனம் குடையப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. எகிப்தியக் கோயில்களிலுள்ள தெய்வத்தின் உருவத்தைப் பலரும் எளிதிற் காணவொட்டாத வகையில் அங்கு வழிபடு முறைகள் அமைக் கப் பட்டனவாம்.

---

# கழுகின்காவலன்

[திரு. R. P. சேதுப்பிள்ளை அவர்கள் B. A., B. L.]

கோசலநாட்டைத் தசரத மன்னன் அரசுபுரியும் காலத் தில் பஞ்சவடியின் அருகே யிருந்த பசுங் கானகத்தில் கழுகின் காவலனை சடாயு வாழ்ந்து வந்தான். அக் கோசலநாட்டு அண்ணலும் கழுகின் வேந்தனும் உடலும் உயிரும்போலவும், மணியும் ஒளியும்போலவும் உயிர் நண்பராய் விளங்கினார்கள். கழுகரசன் ஆண்மையிலும் அருளிலும் தலைசிறந்து விளங்கி னான்.

தாயின் சொல்லை தலைமேற்கொண்டு நாடுதுறந்து காடு புகுந்த கமலக் கண்ணன், அக்கானகத்தில் கழுகின் வேந்தனைக் கண்ணுற்றான். இரக்கமற்ற ஓர் அரக்கன் நல்லோரை நலியு

மாறு கழுகுருக்கொண்டு கானகத்தில் கரந்து உரைகின்றனோ என்று ஐயுற்றான். அப்பால் அப்பறவை இறையிடம் பேசிய போது அவன் அரக்கனல்லன் என்றும், தன் தந்தையாரது உயிர்த்துணைவன் என்றும் உணர்ந்தான். வில்லைத்தாங்கிய வீரர் இருவரும் தசரத மன்னனது மைந்தர் என்றறிந்த கழுகின்காவலன் அளவிலா மகிழ்வடைந்து, மன்னனது உடல் நலம் வினவினான். மறுவற்ற கதிரவன் மரபின் பெருமையைக் காத்து மன்னவன் மாண்டான் என்றறிந்தபோது,

"இறக்கமுற்றான் என ஏக்கம் எய்தினான்
ஊக்கமுற்றான் என உணர்வு நீங்கினான்"

என்று கம்பர் பெருமான் கூறுமாறு கழுகரசன் ஏக்கமும் மயக்கமும் எய்தினான். அப்பால் ஒருவாறு மயக்கம் தெளிந்து கல்லும் கரைந் துருகுமாறு கண்ணீருகுத்தான். தசரதன் உடலும் தான் உயிருமா யிருக்க, உயிரை மண்ணுலகில் விட்டு, உணர்வற்ற கூற்றுவன் உடலை விண்ணுலக மேற்றினான் என்று வருந்தினான். மன்னவன் மக்களைத் தன் மக்களாகவே கருதி அழகிய சிறகால் அவரை அன்பொடு தழுவி,

"மருவினிய குணத்தவரை இருசிறகா
லுறத்தழுவி மக்காள் நீரே
உரியகடன் வினையேற்கும் உதவுவீர்
உடல்இரண்டுக் குயிரொன் றானான்
பிரியவும்தான் பிரியாதே இனிதிருக்கும்
உடற்பொறையாய் பிழை பாராது
எரியதனில் இன்றேபுக்கு இறவேனேல்
இத்துயரம் மறவேன் என்றான்.

உடல் இரண்டுக்கும் உயிர் ஒன்றாய்நின்ற தசரதன் ஆவி அகன்ற பின்னர், இவ்வுலகில் உயிர்வாழ மனமற்றவனாய்ப் பறவையரசன் எரியில் விழுந்து இறக்கத் துணிந்தான். இறந்தாரைப் பிரிந்திருக்க லாற்றாது எரியில் விழுந்து இறக்கும் செயல் உண்மைக் காதலின் உயரிய நிலையை உணர்த்துவதாகும். காதலரை யிழந்த கற்பமைந்த மங்கையர் பிரிவாற்றாமையால் எரியில் இறங்கி இறக்கும்நிலையை அகப்பொருள் அறிந்தோர் அகம் நிறைந்த காதலுக்கு அடையாளமாகப் போற்றிப் புகழ்வர். இத்தகைய உயரிய காதல் கழுகின்காவலனிடம் அமைந்திருந்ததாலேயே, தசரதன் இறந்த துயரம் பொறாது தானும் இறக்கத் துணிந்தான். அந்நிலையில் மக்களாய இருவரும் இடைநின்று தடைசெய்ய, அவர் நலங்கருதி உயிர் வாழ இசைந்தான். தந்தை

யை மெய்நெறியில் செலுத்தி, தாயின் சொல்லைத் தலைக்கொண்டு, அரசாங்க செல்வத்தைத் தம்பிக்கு அளித்த தாமரைக்கண்ணனை அன்பொடு தழுவி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். வாய்மையைப் பாதுகாக்குமாறு கண்ணினும் இனிய மைந்தனைக் கானகம் போக்கி அவன் பிரிவால் உயிர்துறந்த மன்னவன் பெருமையை மனமாரப் புகழ்ந்தான். தசரதன் பெற்ற பெருமையும் புகழும் தனக்கும் உரியதென்று கருதி அகமகிழ்ந்தான். மன்னன் இறந்தான் என்று கேட்டபோது எய்திய துன்பம் அவன் இறந்த ஏதுவை யறிந்தபோது இன்பமாக மாறிற்று. அயோத்தி மன்னனும் கழுகின்வேந்தனும் நேசம் என்னும் பாசத்தால் பிணிப்புற்று இன்ப துன்பங்களைப் பகுந்து நுகரும் பான்மையுற்றிருந்தாரென்பது இதனால் இனிது விளங்கும்.

பஞ்சவடியில் மைந்தர் இருவரும் சீதையோடு இனிதமர்ந்திருந்தபோது, கழுகரசன் மூவர்க்கும் உற்ற துணையாய் அமைந்து பார்ப்பைப் பார்க்கும் பறவைபோலப் பாதுகாத்து வந்தான். இவ்வாறிருக்கையில் சீதையைத் தன் இதயமாம் சிறையில் வைத்த இலங்கைவேந்தன் அத்திருமகளை வஞ்சனையால் கவர்ந்து செல்லக் கருதி ஓர் அரக்கனை மாயமானாக அம்மங்கையின் முன்னே அனுப்பினான். அம்மானை மாயமான் என்றுணராத மங்கை அதன்மீது மையலுற்றாள். அம்மானைப் பிடித்துத் தருமாறு தன் மணாளனை வேண்டினாள். மங்கையின் உள்ளத்தை மகிழ்விக்கக் கருதிய இராமனும், பொன் மானைப் பின்தொடர்ந்து சென்றான். நெடுந்தூரம் சென்ற தமையனைத் தேடித் தம்பியும் பின்னே சென்றான். அப்போது தனியாயிருந்த தையலை இலங்கை வேந்தன் நிலத்தொடு பெயர்த்தெடுத்துக் காற்றினும் கடிது செல்லும் விமானத்தில் இவர்ந்து ஆகாய வழியே இலங்கையை நோக்கிப் புறப்பட்டான்.

இலங்கை மன்னனது மாயமே மானாகவந்து தன்னை மயக்கிற்றென்று சீதை யறிந்தாள். இரக்கமற்ற அரக்கனைத் தடுத்துத் தன்னைக் காத்தற்குரிய தலைவனும் இளவலும் இல்லாமை நோக்கி ஏங்கினாள். மலைகளும் மரங்களும் மாய அரக்கனை நோக்கி அஞ்சுவதைக் கண்டு அயர்ந்தாள். தனக்கு உதவி செய்வார் ஒருவரையும் காணாது மலையையும் மரனையும், மயிலையும் குயிலையும், கலையையும் பிணையையும் கூவி யழைத்து அவ்வுயிர்களிடம் தன் துயரை அறிவித்தாள். மாதா வனைய கோதாவிரியைக் கண்டபோது,

“கோதா விரியே குளிர்வாய் குழைவாய்
மாதா அனையாய் மனனே தெளிவாய்”

என்று அன்போடு அழைத்து, தன் துயரை ஆற்றினிடம் அறிவித்தாள். இவ்வாறு அபயம் அளிப்பார் எவரையும் காணாது அரக்கனது வலையில் அகப்பட்ட திருமகள் அழுது நைந்தாள்.

அந்நிலையில் கழுகின்காவலன் அவ்விடம் விரைந்துவந்து சேர்ந்தான். விண்ணில் விரைந்து செல்லும் விமானத்தில் நஞ்சினும் கொடிய இலங்கை நாதனைக்கண்டான். அவன் கையிலகப்பட்ட அன்னம்போன்ற திருமகள் அயர்வதை நோக்கினான்.

"சஞ்சலம் கலந்த போது தையலாரை உய்யவந்து
அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே."

என்று எண்ணி அருந்துயரில் ஆழ்ந்த மங்கைக்கு அபய மளித்தான். இலங்கை வேந்தனது அளவிறந்த வலிமையையும், அரிய பெரிய வரங்களையும் கழுகரசன் அறியாதவன் அல்லன். முன்னவன் அருளால் முக்கோடி வாழ்நாளும், திக்கெலாம் வெலும் வரமும் பெற்றிருந்தான் என்பதை அறிந்தும், அவ்வரக்கன் வாய்ப்பட்ட அன்னத்தைக் காப்பது தன் கடமை யென்று கழுகின் காவலன் கருதினான். அல்லலுற்ற மாது அயலாளேயாயினும் அவ்வழிச் செல்லும், ஆடவன், அவளது துயரை விலக்க முயல்வானென்றும், அவ்வினையில் தன்னுயிரையும் ஒரு பொருளாக மதியான் என்றும், வீரமக்களது வரலாறு விளங்கக் கூறுகின்றது. இவ்வுண்மை,

"ஆறுடன் செல்பவர் அஞ்சொல் மாதரை
வேறுளார் துயர்செயில் விலக்கி வெஞ்சமத்
தூறுறத் தம்முயிர் உகுப்பர் என்பதும்
தேறினன் துயரம் நான்தீர்க்க கிற்றிலேன்"

என்று இராமவீரன் வருந்திக்கூறும் மொழிகளாலும் இனிது விளங்கும் ஆகவே அயல்மாது துயரத்தால் நலியினும் அத்துயரை அகற்றுவது ஆண்மையுற்ற ஆடவரது தன்மையாகும் என்பது பெறப்படுகின்றது. இப்பொது முறையே யன்றியும், சிறப்பு முறையில் சீதை கழுகின்மன்னனது மருகியாய் அமைந்தாள். அம்மங்கையையும் மன்னவன் மக்களையும் பாதுகாப்பதாகப் பறவை மன்னர் முன்னரே வாக்களித்து மிருந்தான். ஆதலால் எவ்வாற்றானும் இலங்கை வேந்தனைத் தடுத்து, மங்கையைக் காப்பதே ஏற்றதாகுமென்று துணிந்தான்.

(தொடரும்)

# இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும்

## முதல் அதிகாரம்

## இராமாயண காலத்துத் தென்னந்திய சாதி நிலைமை

இராமயணமும் பாரதமும் இதிகாசங்களென்று கூறப்படுகின்றன. இவ்விரண்டுள், பாரதம் உண்மையாக நடந்த சரித்திரத்தை ஆதாரமாகக்கொண்டு அச்சரித்திரத்தைக் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் பலபடப் புனைந்தும் கூறும் நூலென்று பூர்வ சரித்திர ஆராய்ச்சிவல்லார் கூறுகின்றனர். அவர்கள், இராமாயணம் அப்படிப்பட்டதொரு நூல் அன்றென்றும், அதற்கு ஆதாரமாக உண்மையான சரித்திரம் யாதொன்றும் இருந்ததாகக் காணப்படவில்லை யென்றும், அதில் பிரதானமாகக் கூறப்பட்ட சீதை, ராமன் என்ற பதங்கள் வேதத்தில் முறையே படைச்சால், நீர் என்று பொருள்பட ஒரோவிடத்து வருகின்றன வென்றும், ஆரியர் என்ற பதத்தின் மூலப்பொருள் ஏருடையா ரென்றும், அவ் ஏருடையா ரென்னும் பேருடையார் முன் காடுகளாகவிருந்த இடங்களை உழுது, படைச்சால்களாக்கி, நீர் பாய்ச்சிப், பயிருண்டாக்கி, நாடுகளாக்கி, ஆரிய நாகரீகத்தைப் பரவச் செய்ததை அந்நூல் குறிப்பாக உணர்த்தி, அவ்வாரியர்கள் வடக்கேயிருந்து பூர்வகுடிகளைச் செயித்துக்கொண்டு தென்னிந்தியாவைக் கடந்து இலங்கைவரை ஜெயசாலிகளாகச் சென்று இராச்சிய ஸ்தாபனங்கள்செய்ததை வெளிப்படையாகப் புலப்படுத்துகிற தென்றும், அதனால் அஃது ஆரியரது வீரத்தையும் வெற்றியையும் மேம்படுத்த ஆரியகவி யொருவர் பல கற்பனை அலங்காரங்களோடு நவரசமும் மலியப் புனைந்து கட்டியதோர் கற்பிதக்கதை யென்றும் கூறுகின்றனர். அப்படியானல், வான்மீக ராமாயணம் ஆரியகவி யொருவர் தமது சாதி வீரரது விஜயப் பிரதாபத்தை விதந்து கூறுவதாம்.

அந்நூலில் கூறும் ஆரியரது* குற்றங்கள் அக்கவியால் ஒப்புக்கொள்ளப்பட்டதனல், ஆரியர்களால் ஒப்புக்கொள்ளப்

* ஆரியர் என்ற பதம் இப்பரதகண்டத்தில் வைதீகமதப் பிரவர்த்தகராயுள்ள சகல ஜாதிகளுக்கும் பொதுப்பெயராகப் புராண, இதிகாச காவியங்களில் வழங்கினும், சரித்திர ஆராய்ச்சி முறையில், அச்சொல்

பட்டு அவைகள் உண்மையானவைக ளென்பதற்கு வேறு சாட்சியம் வேண்டாதவைகள். அதிற் கூறும் அநாரியரது† குணங்களும் ஆரியராகிய எதிரிகளால் வியந்து பாராட்டப்பெற்ற காரணம்பற்றி உண்மையானவைக ளென்று நிலைநாட்டப்பட்டவைகள். அவ்வநாரியர் யாரெனின்: வாலி முதலான தென்னிந்தியவாசிகளும் இராவணன் ஆதி இலங்கைவாசிகளுமாம். வாலி சுக்கிரீவ ஆதியர் குரங்குகளென்று ஆரியகவியால் கூறப்பட்டிருந்தாலும், அவர்கள் அவ்வாரியரைப் போலவே, கடவுளால் மனிதராகப் படைக்கப்பட்டிருந்தவர்களே. இராவணாதியர் இராக்கதரென்று கூறப்பட்டிருந்தாலும் அவர்களும் ஆரியரைப் போல மனிதரே. இவ்விரு வகுப்பு மனிதரும் நமது முன்னோராகிய திராவிடரே.

அத்திராவிடருள் சிறந்தோராக விருந்தோர் சிலரைக் கூறி அவர்கள் குற்றங்களையும் கூறி, அக் குற்றங்களுக்காக இராமன் அவர்களோடு போர்புரிந்து வெற்றிகொண்டு அவர்கள் இராச்சியங்களைக் கவர்ந்து, தனக்கு உதவிசெய்த திராவிட இளவரசரைத் தன் கீழ்ச் சிற்றரசராக்கி அவருக்குத் தான் கைப்பற்றிய இராச்சியங்களை அளித்ததாக வான்மீகம் கூறுகின்றது. அத்திராவிடர்களுள் குற்றம் செய்தார் யாவர்? அவர்கள் செய்த குற்றங்கள் எவை? அவர்களைச் செயித்த வழிகள் எத்தன்மைய? என்று விசாரிப்பாம்

I. குற்றஞ் செய்தாருள் முக்கியமானவர்:—

i. இராவணன்.

ii. வாலி.

II. குற்றங்களின் முக்கியமானவை:—

i. இராவணனுடைய குற்றங்கள்:

(1) தேவரை வென்று சிறையிட்டது.

(2) முனிவருக்கு இடையூறு இயற்றியது.

(3) சீதையைக் கவர்ந்து சிறை வைத்தது.

---

தென்னிந்தியாவிற் குடியேறிய பிராமணரையுள்ளிட்டு வட இந்தியாவிலுள்ள பல சாதியர்க்குரிய குறியீடாம்.

† அநாரியர் - ஆரியரல்லாத பிறசாதியார்.

ii. வாலியினுடைய குற்றங்கள்:

(1) சுக்கிரீவனை ராச்சியத்தினின்று துரத்தியது.

(2) அவன் மனைவியைக் கவர்ந்தது.

III. செயித்தவழிகள்: பின்னர்க் கூறப்படும்.

## I. குற்றஞ் செய்தோர்

i. இராவணன் வேதசாஸ்திர விற்பன்னன்; சிறந்த கல்விமான்; மஹாவீரன்; தீரன்; தன் புயவலியினால் அநேக இராச்சியங்களைக் கைப்பற்றியவன்; அகோர தவஞ்செய்து பிரபல வரபலம் பெற்றவன்; சங்கீத வித்துவ சிகாமணி; பந்து மித்திரர்களையும் தன் கீழ்வாழ்ந்த குடிகளையும் ஆதரித்தவன், என்று இங்ஙனம் பலவாருகப் புகழ் பெற்றவன். அவனுக்குப் பத்துத் தலையும் இருபது கையும்* இருந்தனவென்று கூறியது அவன் அறிவின் சிறப்பையும் வலியின் மிகுதியையும் குறிப்பித்தற்கே. இதுபோல இயற்கைக்கு விரோதமாகக் கூறப்பட்டவைகள் எல்லாவற்றையும் அதிசய அலங்காரமாகவும் உபசார வழக்காகவும் கொண்டு உண்மையை உய்த்துணர்தல் வேண்டும்.

---

* ஐரோப்பா அமெரிக்கா முதலிய தேசங்களில் ஆழமாகத் தோண்டிய சில இடங்களில் யானையிலும் மிகப்பெரிய காத்திரமுள்ள "மாமத்" என்ற மிருகங்களின் எலும்புகளும் ஆடுமாடுகளையும் விழுங்கும் பெரும்பாம்பு (Boa Constrictor) களைக்காட்டிலும் மிகப்பெரிய ஊரும்செந்துக்களின் எலும்புகளும் காணப்பட்டு அப்பெரும் பிராணிகள் ஒருகாலத்தில் இந்தப் பூமியின்மீது உயிர்வாழ்ந்த உண்மை வெளியாயிருக்கிறது. மேற்கூறிய மாமத் என்ற பிராணி ஒன்று, சடிதியாக உறைபனி மூடி யிறந்து புதைபட்டிருந்தது. மூடிய பனிப்படைகள் வெட்டி வெளிப்படுத்தப்பட்டபோது, சதை தோல் உரோமம் ஒன்றும் அழியாமல், (பல்லாயிர வருடங்களுக்கு முன் இறந்திருந்தும்) இப்போதுதான், செத்ததுபோலத் தோன்றி, அதன் மாமிசத்தை அறுத்துப்போட, நாய்கள் தின்னும்படி பதனழியாமலிருந்திருக்கிறது. இவ்வாறே, இப்போதில்லாத பல பிராணி வருக்கங்கள் முன்காலத்தில் இருந்தனவென்பது அவைகளின் எலும்புகள் காணப்பட்டிருப்பதினால் விளங்குகின்றது. ஆயினும் இக்காலத்து மனிதரிலும் மிகப்பெரிய உருவமுள்ள மனிதராவது, ஒன்றுக்கதிகமாயுள்ள தலை இரண்டுக்கதிகமான கைகள் உள்ள மனிதராவது இருந்தார்களென்று கூறும்படியான மனித எலும்புகளொன்றும் அகப்படவில்லை. இரண்டு தலை நாலு கை முதலிய விசித்திர உறுப்புகளுள்ள உற்பாதப் பிறவிகள் இப்போது காணப்படுகின்றனவே யென்றால், அவைகள் மிகவும் ஏகதேசமாக உற்பத்தியாய் அற்ப ஆயுளுடையவைகளாய் இறந்தொழிந்து விடுகின்றன. இதனாலே தான் இப்படிப்பட்ட கோர ரூப மனித எலும்புகள் அகப்படவில்லை.

ii. மேற்கூறிய சிறப்பையுடைய இராவணனைச் செயித்த தொன்றே வாலியின் அபாரவீரத்தை விளக்கப் போதும். இவன் சிவபூஜாதுரந்தரன்; தந்தைசொற்றவறுமை, சகோதரவாஞ்சை, பத்தினி விரதம், பக்தபரிபாலனம், அஞ்சாவீரம், அதிசயசினேகம், சொற்பிறழாமை, சுவபரித்தியாகம் என்றவை முதலிய சிறந்தசிலங்கள் பகைவரிடத்துக் காணப்படினும், அவர் பால் இதயமும் என்பும் ஒக்க நெக்குருகி அன்பு மயமாகிவிடும் இயல்பினன் என்பது, தனது சுதேச, சுசாதி விரோதியாகிய இராமனைப் பாராதிருந்தும் அவனது நற்குண நல்லொழுக்கங்களைக் கேட்டே அவன்பாற் பேரன்பு பூண்டிருந்தமையால் விளங்கும்.

## II. குற்றங்கள்

இத்தகைய நற்குணங்களை யுடையாரென ஒப்புக்கொள்ளப் பட்டார் குற்றஞ் செய்தற் பாலரோ? அவர்கள் செய்தனவாகச் சொல்லப்பட்ட குற்றங்கள் குற்றங்களோ? என்று விசாரிப்பாம்.

### i. இராவணனது குற்றங்கள்

(1.) இராவணன் தேவரைச் சிறையிட்டானும். அதனால் என்னை? தேவர் யார்? அவர்கள் ஆரியருள் ஒரு வகுப்பினர். ஆரியர் தஞ்சாதியா ரல்லாத சாதியார்களை 'அசுரர்', 'அரக்கர்', 'குரங்குகள்', என்று இழித்துக் கூறியது போலவே தஞ்சாதியாரை 'தேவர்', 'சுரர்', என்று உயர்த்திக் கூறினர். [பிராமணருக்குப் பூசுரரென்ற பெயரும் இவ்வாறு வந்ததே- பூசுரர் என்பதன் பொருள் பூமித்தேவர், அதாவது—பூமியில் வசிக்கும் தேவர் என்பதே. இந்தப் பெயரைத் தாங்களே தங்களுக்குச் சூட்டிக் கொண்டதோடு, இதர சாதியாருக்கு ஒப்பாகத் தாங்கள் புசிக்கும் போஜனத்தைத் தாங்களே தேவபூசை யென்றும் சொல்லிக் கொள்கின்றனர். என்ன அநீதம்!!] ஆகவே, தேவரென்ற ஆரியர்கள் இராவணனது சாதியாருக்கு விரோதிகளாகிய சாதியார். விரோதிகளை யுத்தத்தில் செயித்துச் சிறைப்படுத்தியது புகழ்தற்குரியதே யன்றிக் குற்றமாகுமா?

(2.) இராவணன் முனிவருக்கு இடையூறியற்றினது— முனிவர் யாவர்? அவர்கள் ஆரியருள் வைதிகரானோரே. அவர்கள் படையெடுத்துத் தென்திசைநோக்கி வந்த வைளீக பிரவர்த்தகரான மற்றைய ஆரியரோடு வந்து இவர்கள் செயித்தும் செயிக்காமலும் இருக்கும் திராவிட தேசத்தின் ஆரணியங்களில் திராவிடரது அநுமதி யின்றி நுழைந்து அங்கிருந்துகொண்டு

தங்கள் வைதிக கிரியைகளை நடத்துவதோடு திராவிடரது பலா பலன்களைத் தெரிந்து எதிரிகளின் உளவு புகல்வோரா யிருந்த னர். இம்முனிவர்களை இராவணுதியர் தங்கள் தேசத்தினின் றும் அப்புறப்படுத்த முயன்றதே இடையூறு செய்ததாகக் கூறப்பட்டது. இவ்வாறு அவர்களை அப்புறப்படுத்த முயன்ற விடத்தும் திராவிடரது உயர்ந்த குணம் விளங்குகின்றது. எவ் வாறென்னில், இவர்கள் அம்முனிவரது வேள்விக்கு விக்கினம் இழைத்தார்களே யன்றி எளிதாகக் கொல்லக்கூடிய அம்முனி வர்கள் எவரையும் கொன்றதாகக் கூறப்படவில்லை. கொன் றிருந்தால், எதிர்பக்கத்துக் கவியாகிய வான்மீகி கூறுது விடு வாரா? பகைவராஞலும் வைதிகர்களைக் கொல்வது நெறி யன்று என்னும் உயர்ந்த கருத்தினராய்த் தமது பலாபலம் தெரிந்து எதிரிகளுக்கு உளவு புகலாநின்ற உருத்திராட்சப் பூனைகளை இராவணுதியர் கொல்லாமல் துரத்த முயன்றது குற்ற மாகுமா?

(3.) சீதையைக் கவர்ந்து சிறைவைத்தது — ஒரு சாதி யாருக்கும் மற்றொரு சாதியாருக்கும் யுத்தம் நடந்துகொண் டிருக்கும் காலத்தில் அல்லது விரோதமிருக்கும் காலத்தில் ஒரு பக்கத்தார் மற்றொரு பக்கத்தாரது மாடுகளைப் பொருள்களைக் கவர்தல், ஆடவர் பெண்டிரை அகப்படுத்திச் சிறைப்படுத்தல் முதலிய செயல்கள் அக்கிரமமானவைகளென்று யாவரும் எக்காலத்தும் கூறக் கேட்டிலேம். ஆரியரோ திராவிடரது தேசத்தை ஆக்கிரமித்துக் கைப்பற்ற முயன்றுகொண்டிருந்த னர். அப்படிப்பட்ட காலத்தில் இராவணன் சீதையைக் கவர்ந்து சிறைப்படுத்தியது குற்றமாகுமா? யுத்த முறையில் சீதையை இராவணன் கவர்ந்தது, ஐக்கியமாய் ஓர் அரசனுக்கு உள்ளடங்கி வாழும் குடிகளுள் ஒருவன் மனைவியை மற்றொருவன் கவர்ந்தது போலப் பெருங்கொடும் பாதகமாகப் பிரமாதப்படுத்தி யிருக் கிறது. இது நிற்க, சீதையைக் கவர்ந்து சிறைவைத்த இராவ வணன் அவளை எவ்வாறு நடத்தினு னென்பதை விசாரிப் போம். அவளது இராஜ கௌரவ ஸ்திதிக்குக் தகுதியாகத் தன் தம்பி விபீஷண மகளை அவளுக்கு நீங்காத பாங்கியாக்கி [வான் மீகி கோரரூபமுள்ள அரக்கிகளென்றுலும் மனுஷிகளே யாகிய] வேறு ஸ்திரிகளை ஏவற்பெண்களாக நியமித்து அவளைத் தனது சிறந்த சிங்காரத் தோட்டமாகிய அசோகவனத்தில் வாழவைத் தான். வைத்தவன், பலாத்காரம் சிறிதும் செய்யானுய், இனிய நன்னய வார்த்தைகளால் அவளிசைவு பெறுமாறு முயன்றுன். அவளிசைந்தால் முறைப்படி மணஞ்செய்து அவளைத் தன் பட்டமகிஷியார்க்கும் கருத்தினனு யிருந்தான். அன்றேல்,

"தேவர் தேவியர் சேவடி கைதொழுந்
தாவில் மூவுல கின்தனி நாயகம்
மேவு கின்றது நுன்கண் விலக்கினே:
யாவர் ஏழையர் நின்னின் இலங்கிழாய்?"

என்றது பொருந்தாது. பலவாறு போதனை செய்ய அவள் இணங்காம லிருந்தும் அநாகரிகர் போல அவளைப் பலவந்தஞ் செய்தா னல்லன். இம்மட்டோ? இராமலக்குமணர் தன் தேசத் துட் புகுந்து, தன் நகரத்தைப் பெருஞ் சேனையோடு வளைந்து, தன் இனத்தவர்களைத் திரள் திரளாகக் கொன்று, தன் அரு மைத் தம்பி கும்பகர்ணனையும் செல்வப் புதல்வன் இந்திரசித்தை யும் வதைத்த காலத்தும், கோபமூண்டு சீதையைக் கொன்று னல்லன். எவ்வகைத் துன்பமும் அவளுக்கு இயற்றினானு மல் லன். கொல்லுங் கருத்து அவனுக்குத் தோன்று திருந்ததோ வென்னில், தோன்று திருக்கவில்லை. தோன்றித்தான் இராமன் முதலியோரைப் பயமுறுத்தற்கு மாயா சீதையைக் கொன்ற னன், உண்மைச் சீதையின் ஓர் உரோமத்திற்கும் தீங்கிழைத் திலன்.

இனி மற்றொரு விஷயங் கவனிக்கற் பாலது. திராவிட இரா வணன் தன் கைவசப் பட்ட ஆரிய சீதையை நடத்திய விதம் இதுவாக, ஆரிய இலக்குமணன் கைச்சிக்கிய திராவிட சூர்ப்ப ணகையின் கதி எவ்வாறாயிற் றென்று பார்ப்போம். அவன், அவள் மூக்கு முதலிய உறுப்புகளை அரிந்து, அங்கபங்கமும் மானபங்கமும் செய்தான். அவ்வாறு செய்த அநியாயத்தை நியாயமாக்குவதற்கு வான்மீகி கூறும் ஒரே முகாந்தரம் அவள் சீதையைத் தூக்கிக்கொண்டு போக யத்தனித்தா ளென்பதே. இதை யாவர் ஒப்புவர்? இஃது உண்மையென்று வைத்துக் கொண்டாலும், தன் காவலில் உள்ள சீதையை ஒரு பெண்பிள்ளை கொண்டுபோகாதபடி கிரமமான வேறு வழிகளால் தடுக்க மாட்டாமல் இந்திரசித்துவை வென்ற வீரன் இவ்வாறு செய்தா னென்பது நகைப்புக் கிடமன்றோ? இராமனாயினும் இது தக்க தன்றெனத் தம்பியைத் தடுத்தானா? தடுக்குமுன் அப் பங்கங் கள் நிகழ்ந்துவிட்டன வென்னின், அதற்காகப் பச்சாதாபப் பட்டானா? தன் கைப்பட்ட தாடகையைக் கொலையே புரிந் தோன், தம்பி மற்றொரு மாதைப் பங்கப்படுத்தல் மட்டும் செய்வதற்கு, வருந்துவ தெங்ஙனம்? ஆயின், இப்பெண்கள் அரக்கிகளல்லரோ? இவரைக் கொல்வதும் பங்கப்படுத்துவதும் குற்றமாகுமோ? என்னில், முன்னமே நான் அசுரர், அரக்கர், குரங்குகள் என்பவை பிற சாதியாருக்கு ஆரியரிட்ட பெயர்க

ளென்றதை ஞாபகப்படுத்துக. தாடகை, கும்பகர்ணன் முதலி யோரைப் பிரமாண்ட காத்திரமுள்ளா ரென்றது மனிதரை இராக்கதரென்றதனோடு பொருந்தக்கூறியதேயன்றி வேறன்று. இவ்வாறு வான்மீகி கூறுவதனால், வெளிமாசகற்றி உள்ளுறை உண்மைப் பொருளைத் தெரியவல்லார் மயங்கார்; மயங்கிப் பெண் மானபங்கமும் பெண்கொலையும் பழிப்பானவைக ளல்ல வென்று ஒப்புக்கொள்ளார்.

தன் பாட்டி தாடகையைக் கொன்று தன் தங்கை சூர்ப்ப ணகையை மானபங்கமும் அங்கபங்கமும்செய்த பகைவர் திறத் தில் பழிக்குப்பழி செய்ய வேண்டு மென்னுங் கருத்தினனாய் இராவணன் சீதையைக் கவர்ந்திருக்கலாமே. அப்படிக் கவர்ந் தான் என்றால் அவன் செய்கை குற்றமென்னும் பேருக்கும் உரிபதாமோ? இவ்வாறாக சீதை விஷயத்தில் இராவணன் நடந்துகொண்ட நடக்கையினாலும், தாடகை சூர்ப்பணகை திறத்தில் இராம லக்குமணர் செய்த செய்கைகளாலும், பெண் பாலாரைத் திராவிடரும் ஆரியரும் நடத்தின முறைகளும் அவ ரது நாகரிக நிலைமைகளும் விளங்கும். திராவிடர் ஆரியரை மிலேச்சரெனக் கருதியதும் ஆச்சர்ய மின்றாய்விடும்.

இராவணனது நகரம், தெருக்கள், மாளிகைகள், சோலை கள் முதலியவைகளைப் பற்றிய வருணனைகளால் அக்காலத்துத் திராவிடர் சகலவகை நாகரிகங்களிலும் சிறந்திருந்தா ரென்பது வெளிப்படுகின்றது. இராவணன், அநுமான் முதலியவர்கள் கல்வித் திறத்தைப்பற்றிய புகழ்ச்சியால் திராவிடர் கல்வி கேள்வி களின் மேம்பாடு குறிப்பிக்கப்பட் டிருக்கின்றது. அநுமானை யும் அங்கதனையும் இராவணன் நடத்திய விதத்தினால் தூதரைத் திராவிடர் நடத்திய முறை விளங்குகின்றது. சீதைக்குச் சிறை யினிடத்து நடந்த மரியாதைகளால் திராவிடர் ஸ்திரீகளிடத் துக் கௌரவ புத்தியுடைய நாகரீகர் என்பதும் புலப்படுகின்றது.

## ii. வாலியின் குற்றங்கள்

தன் தம்பி சுக்கிரீவனை நாட்டை விட்டுத் துறத்தியதும், அவன் மனைவியைக் கவர்ந்ததும் வாலியின் குற்றங்களாகக் கூறப்பட் டிருக்கின்றன. அவைகளையும் விசாரிப்போம். வாலி தன்னிராச்சியத்திற்குச் சேட்ட புத்திர பரம்பரைப் பாத்தியத் தினால் அரசனானான். அவன் சில காரணத்தினால் அயல் நாடு சென்றபோது, சுக்கிரீவனிடம் இராசாங்கத்தை ஒப்பித்துப் போனான். சுக்கிரீவன் இராச்சிய இச்சையால் தமையன் திரும்பி

வந்தபோது அரசாட்சியைத் திரும்ப ஒப்பிக்க மறுத்தான் அதன்மேல் வாலி அவனைச் செயித்து இராச்சியத்தை மீட்டுக் கைவசப்படுத்தி, அவனையும் அவனுக்குத் துணையாய் நின்ற இராச துரோகிகளாகிய அநுமான் முதலியோரையும் தேசத்தினின்று அகற்றி விட்டான். சுக்கிரீவன் மனைவி முதலிய அவ்விராச துரோகிகளைச் சார்ந்த பெண்பாலரை இருந்த இடத்தே இருக்கவிட்டான். இஃது உண்மையாயிருக்கலாம், இதைச் சற்று மாற்றி, இராம நேசனென சுக்கிரீவனுக்கு அநுகூலமாக, வான்மீகி கூறியிருக்கிறாரென்று ஊகிக்கத்தக்ககாரணம் உண்டு. சுக்கிரீவன் இராச்சிய இச்சையே காரணமாகத் தமயனைக் கொல்ல வில்லையானால், வாலி இறந்தபோது கிரமமாக ராச்சியத்தை அடைய வேண்டிய வாலிபுத்திரனை அங்கதனுக்கு முடிசூட்டி யிருப்பான். அவ்வாறு செய்யாது தானே பட்டங்கட்டிக் கொண்டதே அவன் சகோதர காதகத்துடன் இராச துரோகமும் உள்ளவனென்பதை நாட்டுகின்றது. சுக்கிரீவன், தனக்குத் தமயனும் அரசனுமாகி இருவகையாலும் தகப்பனைப் பாவிக்கற்பாலனான வாலியை இராமனால் கொல்லுவித்த மாபாதகத்தையும் இராமன் தன்பால் பேரன்பு பூண்டு விசேட விசுவாசம் வைத்திருந்த வாலியைக் கொன்ற விசுவாச காதகத்தையும் ஒருவாறு நியாயமாகத் தோன்றும்படி செய்ததற்காக, சுக்கிரீவன் மனைவியை வாலி கவர்ந்ததாக வான்மீகி கூறி யிருப்பினு இருக்கலாம்.

## III. ஆரியர் திராவிடரைச் செயித்த வழிகள்

இராமன் தன்பால் விசுவாசமுள்ளவனும் நியாயத்துறையிலிருந்தவனும் அதி பலசாலியுமான வாலியைச் சிநேகம் செய்யாது, சுக்கிரீவனை நட்புக் கொள்வானேன் என்பதை விசாரிப்பாம். வாலியோ எவ ருதவியும் வேண்டாத நிலைமையனாயிருந்தான். அவனோடு சிநேகம் பண்ணினால் அவனும் சிநேக வாஞ்சை பாராட்டுவா னாயினும், தன்னைப் போலவே திராவிட ராசனாகவும் தனக்குப் பழைய நட்பாளனாகவும் உள்ள இராவணனை, பகைச்சாதி யரசனும் புதிய நண்பனுமான இராமன் வெல்லுதற்கு உதவி செய்வானா? செய்யான். சுக்கிரீவனோ நாட்டினின்றும் துரத்துண்டு சகல செல்வமும் சம்பத்தும் இழந்து வருந்திக்கொண் டிருந்தான். இவனுக்குச் சகாயம் செய்து இராச்சியத்தைப் பெறும்படி செய்தால், இவன் இயல்பாக மிக்க நன்றி யறிவுடையவனா யிருப்பான்; தமயனையே எதிர்த்தோனாதலால், சுசாதி யரசனான இராவணனை எதிர்த்தற்குத் தடையில்லாமல், தன் சேனையோடு தானும் அவ்விராவணனை வெல்லு

தற்குத் துணையாவானென்று ஆலோசனை செய்து இராமன் சுக்கிரீவனை நட்புக் கொண்டு அவனுக்கும் அவனோடு கூடவிருந்த அநுமான் முதலிய வீரருக்கும் தனக்குத் தெரிந்திருந்த அரிய யுத்த தந்திரங்களைக் கற்பித்து வெல்லும் உபாயமும் சொல்லிக்கொடுத்து, அவர்களைக் கொண்டு வாலியையும் அவன் சேனையையும் எதிர்க்கச்செய்து, தான் முன்னில்லாமல், மறைவாயிருந்து சண்டை நிகழ்ந்து கொண்டிருக்கையில், தக்க சமயத்தில், தன் வில்லில் அம்பைத் தொடுத்து எய்து வாலியைக் கொன்றான். வெளிப்படையாகச் சுக்கிரீவனுக் குதவி செய்து அவன் தோற்றுவிட்டால், தன்பால் முன் விசுவாசமுள்ளவனாக இருந்த வாலி பகைவனாய் விடுவான் ஒருகால் அவ்வாலியை வேண்டி அவன் உதவிபெற்று இராவணனை வெல்லுவதற்கும் இடமின்றாய் விடும் என்று இராமன் கருதிக் கரவாகச் சுக்கிரீவனுக்கு சகாயம் செய்தானென்று ஊகிக்க வேண்டியிருக்கின்றது.

வாலியையும் அவனுடைய இராச்சியத்தையும் அவன் தம்பி சுக்கிரீவனுதவியைக் கொண்டு செயித்தது போலவே, இராவணனையும் அவன் தேசத்தையும் அவன் தம்பி விபீஷணனது சகாயத்தால் இராமன் செயித்தான். இந்த விபீஷணனை வான்மீகி மிக வுயர்ந்த குணங்களுடையவ னென்று புகழ்ந்து கவுரவப்படுத்தி யிருக்கிறார். அது காரணமாகப் பின்னோர் விபீஷணாழ்வார் என்று, வைணவ ஆசாரியாருட் சிறந்தோர்க்கே உரித்தாகிய "ஆழ்வார்" என்ற பட்டம் சேர்த்தே, அவன் பெயரைக் கூறும்போதெல்லாம் கூறுவாராயினர். இவ்வளவு பெருமையை இந்தத் திராவிடனுக்கு ஆரியர் கொடுத்ததற்குக் காரணம் அவன் தன் சாதி நன்மை, தன்தேச நன்மை, தன் தமயன் முதலிய பந்துக்களின் நன்மை இவைகள் எல்லாவற்றுக்கும் விரோதமாக ஆரியருக்கு உதவி செய்ததே. சுக்கிரீவனைப் போலவே விபீஷணனும் சகோதர துரோகத்தோடு இராச துரோகமும் செய்து இராமனுக்கு உதவி செய்தவன். அவனுக்கும் இவனுக்கும் உள்ள முக்கிய பேதம் இவன் வஞ்சகமே. அவன் அஞ்சாத தீரன்; இவன் பயந்த கோழை. அவன் உயிரை வெறுத்து அதிபலசாலியான வாலியையும் எதிர்த்துப் போர் செய்தும் இலங்கையில் நிகழ்ந்த யுத்தத்தில் பல சமயங்களில் சாவுக் கஞ்சாது சாகசங்கள் செய்தும் உள்ளவன்; இவன் எப்போதாயினும் போர் செய்தா னென்று கேட்டிலேம். இவன் உயிரைக் கவர இந்திரசித்து விட்டவேலை இலக்குமணன் ஏற்கத் தப்பிப் பிழைத்தவன். அவன், சேட்டபுத்திர பாத்தியத்தால், தன் தமையன் வாலி யடைந்திருந்த

பூர்வ ராச்சியத்தைப் பகிரங்கமாக வலியினாலடையக் கருதினான்; இவன் தன் தமையன் புயபலத்தினால் வென்று சுவார்ச்சிதமாக அரசாண்டு வந்த இராச்சியத்தை அந்தரங்கமாக வஞ்சனையினால் கவர இச்சித்தான். அவன் நியாயமாகவோ, அநியாயமாகவோ தமயனால் நாட்டினின்று துரத்துண்டு காட்டில் காலந் தள்ளும்படி துன்புறுத்தப்பட்டிருந்தான்; இவன், தமையனால் சகலவித வைபவங்களோடு நாட்டிலே இனிது வாழும்படி, இராச பதவியில் வைக்கப்பட்டிருந்தான். இவ்வாறு சிறந்த பதவியிற் றன்னை வைத்திருந்த இராவணனுக்கு விரோதமாக விபீஷணன் ராமனைச் சேர்ந்த காரணம் யாதென்று தெரிவோம்.

(தொடரும்)

---

# சொற்பொருள் வேறுபாடு

[திரு. அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் M. A., L. T.,]

சொல்லின் பொருள் வேறுபடுதலைப் பற்றிய ஆராய்ச்சி பல்வகையான் நிகழ்த்தப்படும். தமிழ்மொழிக்கே யுரிய சொற்கள் தமிழ் வழக்கிலேயே பொருள் வேறுபடுதலை ஆராய்தல் ஒருவகை. அவை தமிழோடியைபுடைய கன்னடம், தெலுங்கு, மலையாள முதலிய மொழிகளின் வழக்கில் பொருள் வேறுபடுதலை ஆராய்தல் பிறிதொருவகை. ஆரியத்தினின்றும் தமிழில் வந்து வழங்கும் வடசொற்கள் தமிழ் வழக்கிற் பொருள் வேறுபடுதலை ஆராய்தல் மற்றொருவகை. திசைச்சொற்களென்று உண்மையாகச் சொல்லுதற்குரிய அந்நிய பாஷைச் சொற்கள் தமிழில் வந்து வழங்குங்கால் பொருள் வேறுபடுதலை ஆராய்வதும் தமிழ்ச் சொற்கள் அப்பாஷைகளிற் சென்று வழங்குங்கால் பொருள் வேறுபடுதலை ஆராய்வதும் வேறொருவகையாம். சொற்பொருள் வேறுபாட்டைப் பற்றி நூல் எழுதுவோர் இந்நால்வகை யாராய்ச்சியையும் விரிவாகச் செய்பபாலர். இங்கு நூலின் சில பகுதிகளைச் சுட்டலே பொருளாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

இனி, மேல் மூன்றாவது வகையாகக் குறிக்கப்பட்ட வடசொற்பொருள் வேறுபாட்டாராய்ச்சி ஒரு சிறிது செய்யப்படும். வடசொற்கள் பொருள் வேறுபடுங்கால் ஆரியமொழியில் தமக்குள்ள விரிபொருள் சுருங்கும். 'பொதுப்படை நியமம்' என முன்னர்க் குறிக்கப்பட்டதும் அது.

'ஆசார்ய' என்னும் ஆரியச் சொல் தமிழில் 'ஆசாரியன்' என்றும் 'ஆசிரியன்' என்றும் தற்பவமாய்வருங்கால் அச்சொற் பொருளையே குறிப்பதுண்டாயினும், 'ஆசாரியன்' என்பது வைணவப் பிராமணருட் சிலரால் சாதி குறிக்கும் பட்டப் பெய ராகத் தம் பெயர்களின் பின் வைத்து வழங்கப்படுகிறது.—மாத் துவப் பிராமணருட் சிலரும், சௌராட்டிரருட் சிலரும் அத னைத் தம் பெயர்களின் பின் வைத்துவழங்குவதுமுண்டு—அது முதலில் ஆசாரியத்தன்மை வகித்தோர்க்கு வழங்கப்பட்டதாயி னும் இக்காலத்தில் அதற்கும் 'ஐயங்கார்' என்னும் பட்டப் பெயர்க்கும் வேற்றுமை யிருப்பதாகத் தெரியவில்லை. ஸ்மார்த்த பிராமணருட் சிலராற் கொள்ளப்படும் 'சாஸ்திரி' என்னும் பட் டப் பெயரும் இதற்குத் துணைபோவதே. பற்று, 'ஆசாரியன்' வழக்கில் 'ஆசாரி' என்றும் வழங்குகிறது; 'ஆசாரி' என்றும் 'சாரி' யென்றும் ஏகதேசத்தில் வழங்கும். 'ஆசாரி' பிராமண ரைக் குறிக்குங்கால், தமிழ் மரபுக்கு விரோதமாய் 'ஆச்சாரி' என்று உச்சரிக்கப்படும். அதற்குக் காரணம், 'ஆசாரி' என் பது தமிழில் கம்மாளர்க்குப் பட்டப்பெயராயும் சாதிப்பெய ராயும் வழங்கிவருதலேயாகும். சென்னை முதலிய இடங்களில் இவ்வழக்கினும் அவ்வுச்சரிப்பையே கொள்கின்றனர். ஆயினும் அவ்வகுப்பினர் பெயர்கள் பெரும்பான்மை சைவப்பெயர்களா யிருத்தலால் சைவப் பெயர்களையடுத்து 'ஆசாரி' என்னும் பட் டப்பெயர் வருமாயின் அவை வைணவப் பிராமணர் முதலியோ ருடைய பெயர்களல்ல வென்று தெளியப்படும். மலையா ளத்தில் இது 'ஆශாரி' யென்றே எழுதப்படுகிறது. 'ஆசாரியன்' என்பது கம்மாளர்க்கு எப்படி வழங்க ஏற்பட்டது? ஆதியில் கம்மாளருள்ளும் தம் தொழிலில் மிக வல்லராய்ப் பிறர்க்கு அதனைப் போதித்தார்க்கு அச்சொல் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். பின் பல சந்ததிகள் அத்தொழில் வன்மையையும் பட்டத்தையும் ஒருங்கே வகித்திருக்கவேண்டும். ஆயினும் அச்சொல் காலக்கிரமத்தில் வெறும் பட்டப்பெயராய் மாறிவிட் டது. இனி 'ஆசார' என்னும் ஆரியச்சொல் 'நடை' என்னும் பொருளதாதலை நோக்கின், அது, 'தொழில்' என்னும் தமிழ் மொழியியைபால் சிறிது பொருள் மாறி,ஒரு தொழிலாளியைக் குறித்தற்கு 'ஆசாரி' என்னும் சொல் வழங்கியிருத்தல் கூடும். 'கர்மகார' என்னும் ஆரியச்சொல்லே தமிழில் 'கம்மாளன்' என மாறுகின்றதாதலின் 'ஆசாரி' கம்மாளர்க்குச் சாதிப்பெயராதல் இயல்பே.

'ஆஜ்ஞா' என்னும் ஆரியச்சொல் அதற்குரிய 'கட்டளை' என்னும் பொருளில் தமிழில் 'ஆஞ்ஞை' என்றும், 'ஆக்கினை'

என்றும் தற்பவமாக வருதலன்றியும், பாகதமூலமாய் 'ஆணை' என்றும் வந்து வழங்குகின்றது. 'ஆணை'க்குக் கட்டளையென்னும் பொருள் நூல்களில் மாத்திரமேயுள்ளது. 'ஆணையிடுதல்' சத்தியஞ்செய்தல் என்னும் பொருளிலேயே சாதாரணமாய் வழங்குகின்றது. ஆணையிடுங்கால், 'கடவுள்மேல் ஆணை' 'அப்பன்மேல் ஆணை' 'அம்மைமேல் ஆணை' என்று கடவுள் பெயரையும் பெரியோர் பெயரையும் எடுத்தல் இயல்பு. 'என் பிள்ளைமேல் ஆணை' என்றும் வரும். நாகம் ஆணைக்கு அடங்குவதென்றும், மந்திரவாதி ஒரு கோடு கீறினால் அக்கோட்டை விட்டுப் புறஞ் செல்லாது கிடக்குமென்றும் மக்கள் நம்புகின்றனர். ஓடுந் தேளைப் பார்த்துப் 'பிள்ளையார்மேல் ஆணை' என்றால் அஃது அசையாது நின்றுவிடுமென்பதும் அவர்கள் நம்புவதே. ஆணையிடுதலில் அவர்கள் கருத்தென்ன? பொய்யாணையிட்டோரும் ஆணைபிழைத்தோரும் கடவுளின் பெயரை எடுத்தால் அவரால் துன்பத்துக்குள்ளாவரென்பதும், சார்ந்த மனிதர் பெயரை எடுத்தால் அவர்களைத் துன்பத்துள்ளாக்குதலால் தமக்கும் வருத்தம் விளைத்துக்கொள்வரென்பதும் மக்கள் கருத்தாயிருத்தல் கூடும். நம் நாட்டு நீதி மன்றங்களில் வழக்குகளில் கர்ப்பூரத்தை ஏற்றிவைத்து அவிக்கச் சொல்வதும், இராமாயண முதலிய பெருநூல்களைக் கையில் வைத்துக்கொண்டு சத்தியஞ் செய்யச் சொல்வதும் இக்காலத்தும் உண்டு. மக்கள் 'கண்ணாணை' என்று சொல்லும்பொழுது, சொல்வது பொய்யாயின் கண்ணொளி போய்விடுமென்பதே அவர்கள் கருத்து. இது சில வேளைகளில் 'என் கண் அவிந்துபோகட்டும்' என்று அதுவே மாறி வருதலால் தெளிவாகும். 'என் பிள்ளைமேல் ஆணை' என்பதை 'என்பிள்ளை எனக்கு உதவாமற்போகும்' என்று மாற்றிச் சொல்வதும் இதுபோன்றதே. இன்னும், 'கடவுள்மேல் ஆணை' என்பதும், 'கடவுள் அறியச் சொல்லுகிறேன்' என்றும், 'கடவுள் சாட்சியாக' என்றும் மாறிவருதலும் உண்டு. இவ்விதமாக 'ஆணை' கட்டளையென்ற பொருள்மாறிச் சத்தியஞ்செய்தலைக் குறிக்க வந்தது.

---

# தேவாரக் குழந்தை

[திரு. தி. சு. பாலசுந்தரனாரவர்கள்]

"ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்"

என்னும் சேக்கிழாரடிகள் அருண்மொழிப்படி, மங்கையர்க் கரசியாரும் அவரமைச்சர் குலச்சிறையாரும், திருவாலவாய்த் திருமடத்தில் நீறணிந்த மெய்யும் நிறையணிந்த நெஞ்சும் உடைய தன் தொண்டர் வெள்ளம் தொழுத கையராய் அருகு சூழ்ந்திருப்ப அவர் நடுவண் எழுந்தருளியிருந்த சைவச் செந்தமிழ்த் தெய்வக் குழந்தையை ஆராத பேரவா முன்ஓடப் பின் அணைந்து "மகிழினிது கந்தம் உடல் சிறியர் என்று இருக்க வேண்டாம்" என்னும் உண்மை மொழி விளங்குமாறு அதன் அருளுருவங் கண்டு "மண்டியகண் அருவி நீர்ப்பாய மலர்க்கை குவித்துப் புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்த நிலமுறவிழுந்து கொண்ட குறிப்பொடு நெடிதுயிர்த்து அழிந்த கொள்கையராய்" உரை குழறி மெய்ந்நடுங்கி ஒன்றும் அறிந்திலராகித் தரையின் மிசைப் புரண்டு அயர்ந்து சரணகமலம் பற்றிக் கரையில் கவலைக் கடற்கோர் கறைபற்றினார் போன்று விரைவுறு மெய்யன்பினால் அளவிமகிழ்ந்தார்கள். அப்பொழுது அக்காழிக் கொழுந்து தாய்ப் பாலுண்ணுந் தனியிளங் குழவிப்பருவத்ததாய்த் திகழ்ந்த தென்பது அதன்பின், அன்றைப் பொழுதிலேயே, பாண்டியன் அவைக்களத்தில், தம்மைப் "பால் நல்வாய் ஒருபாலன்" என்று தாமே அரசியாருக்குக் குறித்தருளினமையான் துணியப்படுகின்றது. அப்பச்சிளம் பருவத்தில் நம் குழந்தை, அறிவுருவும், மறைத்திருவும், வளர் நிலவின் அமிழ்தன்ன நெகிழ்ந்த அருளழகும், அவ்வழகுக்கு இசைய எழும் இழுமென் இசைச் செழிவுமாய் வயங்கிற்றென்றால் உள்ளங்காணும் இயல்புவாய்ந்த தேவிக்குங் குலச்சிறையார்க்கும் அவையன்றி வேறு என்ன தோன்றும்!

பின்பு, ஒழியாத வெப்புநோயை வேந்தற்கு இழைத்துப் பின் ஒழித்ததுமன்றிப் பல்லாயிரம் சிவனடியார்க்குந் தமக்குந் தீயிட்டுத் தீங்காற்றிச் செருக்கிய சமணரை நீரிலும் நெருப்பிலும் ஏடிட்டு எதிரேறி செலுத்தியும் எழில்பெற விளக்கியும் செறுத்றுத் தொலைத்து, இறைவன் தேருத அச்சமண் படுகுழியில் விழுந்துகிடந்த நெடுமாறனையும் அம்மாறன் குடிமாந்தரையும் எழுவித்துச் சிவந்தேறி அருள்பழுத்து இன்பூற்றுஞ் செந்தமிழ்ப் பயனும் சைவப்பேரணையில் நிறுத்தி, அதன் திருவாகிய ஐந்தெழுத்தும் நீற்றொளியும் அருளினருளி, அம்முறையே வளவர்கோன் பாவைக்கும் வாட்டமில் அமைச்சர்க்கும் வயங்கிய மகிழ்ச்சியும் அமைதியுந்தந்து இவ்வாறு பாண்டி நாடெங்குஞ் சிவம் பெருக்குச் சிவம் வழுத்திய குழந்தை குழந்தையாகவே கழுமலம் அணைந்தது. புத்த மதத்தையும் வரும் வழியிலேயே சிதறச்செய்தது. முள்ளுங் கொக்கியும் மூடிக்கிடக்கும் பருத்த

பலாப்பழத்தைக் கூரிய கத்தியாற் கிறித்துமித்து அவற்றுள் மறைந்து கிடக்கும் சுவைச்சாறு கசியும் சுளைகளைச் சுளைசுளை யாக வேறெடுத்துத் தேனிலிட்டு ஊறவைத்துச் சுவைமுதிரச் செய்து தருவானை யொப்பப், பாய்ந்து பரவிய சமணிருளையும் புத்த மயக்கையும் சற்றே மறத்தருளாற் கிறித்துமித்து அவற் றுண் மறைந்து கிடந்த அன்பருட் சுவையை ஊற்றெடுத் தொழுக்கும் மறைதவழ் மாண்பின் சைவத் திருவருட் பெரும் பொது நெறியை நெறிப் படுத்தித் தீஞ்சுவை மிகுந்த செந்தமிழி லிட்டு அவ் வழக்குக்கே அதை உரித்தாக்கி இசை முதிரச் செய்து கொடுத்த பால் அருந்த வாயரின் இவ் அருட்பெருஞ் செய்கை ஆ! எத்துணைப் பெருமையானது!!

இதற்கு முன்னும் பின்னும் நிகழ்த்திய செயற்கருஞ் செய்கைகளினும் இதுவே நங் குழந்தைக்குக் கண்ணுகும். இது, பால் பருகியது முதல் தன் திருமணங் கண்டாரைச் சிவ ஒளி யுட் செலுத்தியது ஈருக நிகழ்ந்த தன் அருட் செய்கைகளில் ஏதொன்றையுங் கூறுமல் அக்குழந்தை, தான் அருளிய தேவா ரத் திருப்பதிகங்கள் ஒவ்வொன்றிலும் பத்தாவது பாடலில் சமண் புத்த மதங்களை நசுக்கிவிடுந் தன் எழுச்சிதோன்ற அச் சமயங்களைப் பற்றி மட்டும் இழித்துப் பாடி யிருப்ப தொன்று னுந் தெளியப்படும். திருத்தொண்டத தொகையிலும் பிள்ளையார் அருட் பிறப்பைக் குறித்துவரும் ஐந்து பாட்டுக்களில், முத லிலுங் கடைசியிலும் முறையே,

> "பரசமயத் தருக்குஒழியச் சைவம்முதல்
> வைதிகமும் தழைத்து ஓங்க"

எனவும்,

> "அவம் பெருக்கும் புல்அறிவின் அமண்முதலாம் பரசமயப்
> பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் ஊழிதொறும்
> தவம் பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்
> சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்"

எனவும் அருளிப் பிள்ளையார் தோன்றியதன் பயன் பரசமயக் கீழ் நெறியைப் பாழ்படுத்துதற்கே யாமென்று அருண்மொழித் தேவர் அருளியிருத்தல் காண்க. அதுமட்டுமோ, பிள்ளையாரின் குழந்தைப் பருவத்து விளையாட்டுகளைப் பற்றி வகைவகையாக அருளுமிடத்தும் இந் நோக்கத்தைப்,

> "பெருமழுவர் தொண்டவ்வால் பிறிதுஇசையோம் என்பார்போல்
> திருமுகமண் டலம்அசையச் செங்கீரை யாடினர்"

"நாம்அறியோம் பரசமயம் உலகில்எதிர் நாடாது
போம்அகல என அங்கை தட்டுவதும் சப்பாணிகொட்டினார்"

"விதிதவறு படும்வேற்றுச் சமயங்கள் இடைவிழுந்து
கதிதவழ மாளிகைமுன் றின் மருங்குதவழ்ந் தருளினார்"

"எவ்உலகும் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை வருகவருக என அழைப்ப"

"கீழ்மைநெறிச் சமயங்கள்
தளர்நடைவிட்டு அறத்தாமும் தளர்நடையிட் டருளினார்"

"சிறுமணித்தேர் தொடர்ந்துஉருட்டிச் செழுமணல்சிற் றில்கள்இழைக்
நறுநுதல்பே தையர்மருங்கு நடந்துஓடி அடர்ந்துஅழித்தும் [கும்
குறவியாப்புத் தளிஅரும்பக் கொழும்பொடிஆ டியக்கோலம்,
மறுகுஇடைப்பேர் ஒளிபரப்ப வந்துவளர்ந்து அருளினார்"

என்று வெளிப்படையாகவுங் குறிப்பாகவும் அருளுவார்கள். பின்னோரிடத்தும் "இந்த மாநிலத்தின் இருள் நீங்கிட வந்த வைதிக மாமணி" என்பார்கள். இங்ஙனமே, ஆங்காங்கும் அவர் வரலாற்றிற் பற்பல குறிப்புகள் இது குறித்துக் காணப்படும். அவையெல்லாம் இங்கெடுத்தால் இதுவிரியும். எனவே பிள்ளையார் தோற்றத்தின் முதற்செய்கை பரசமயம் பாற்றலென்றும் துணைச்செய்கை மற்றவை யென்றும் அறிதல் வேண்டும். இது செய்து மீளச் சீர்காழி யடைந்த பின்னரே குழந்தைப் பருவம் மாறிற்று.

இதன் பின் நிகழ்ந்த அருட் செயல்கள், ஆண்பனையைப் பெண்பனையாக்கிச் சமணர் தருக்கைத் தகர்த்ததும், என்பைப் பெண்ணாக்கியதும், திருமணம் பெற்று உடனிருந்தாரைச் சிவமாக்கியதுமாம். அம்மையப்பரை நேரே கண்டு திருவருட் பாலுண்டதும், தானம் பெற்றதும், தில்லை மூவாயிரவரைச் சிவ கண நாதராய்க் கண்டதும், முத்துச்சிவிகை முத்துக்குடை பொற்சின்ன மாவன கொண்டதும், முயலகன் தீர்த்ததும், செங்குன்றூரில் தம் அடியார்க்கும் அவ்வூரார்க்கும் வந்த குளிர்க் காய்ச்சலை ஒழித்துக் கொங்கு நாடெங்கும் அப்பிணியை விளைத்த பனிப்பெயலை அடக்கியதும், வேனிற் பருவத்தில் தான் அறியாதபடி சிவபூதமும், அறிந்த பின் சூழ வருவோரும் பூவணைந்த முத்துப் பந்தர் ஏந்திவர அதன் தண்ணிழல் தாங்கிச் சென்றதும், பொற்கிழி வாங்கித் தந்ததும், இசை பெருக்கியாழ் முறித்ததும், பாம்பின் நஞ்சு தீர்த்து இறந்தவனை யெழுப்பி

அவனைக் காதலித்து வந்த வணிகப் பெண்ணுக்குத் திருமணம் புணர்த்ததும், திருமருகலில் கணபதீச்சரத்தின் அம்மையப் பரான் திருக்கோலங் கண்டதும், கனவு கண்டவாறே திருவீழி மிழலையில் திருத்தோணிபுரத்தின் அமர்ந்த காட்சியை நேர்ந்த தும், பொற்காசு பெற்று வட்டந் தீர்ந்ததும், மறைக்கதவம் அடைத்ததும், அப்பர் பின் சென்று திருவாய்மூரில் அருளுரு வக் காட்சி தோன்ற அதைப் போற்றியதும், இன்னும், பாண்டி நாடெங்கு மொரு கிளர்ச்சி பெறச் செய்ததும், சமணரிட்ட தீயின் தவிர்ந்து அதனை அரசனுக் கேவியதும். திருவாலவா யிறையின் திருக் குறிப்புக் கண்டதும், வாது புரிந்து முன்னும் பின்னும் ஒவ்வொரு பக்கமாக வேந்தற்கு வெப்புநோய் ஒழித் ததும், கனவில் ஏடிட்டதும், புனலில் ஏடிட்டு மிகக்கடுகி எதி ரேறியதால் பரிமிசை விரைந்த குலச்சிறையார்க்குக் கையகப் படப் பாடியதும், பாண்டியனைத் திருத்தி அந் நாட்டுக்குச் சைவப் பேரொளி தந்ததும், பாண்டியன் கூனை நிமிர்த்தியதும், மங்கைக்கும் அமைச்சர்க்கும் மனநிறைவு அளித்ததும், பின் னும், நிலைக்காத நீரில் கோவின்றி ஓடமோட்டியதும், தருக்கிய புத்தனை இடிவீழ்த்துத் தலையிடரச் செய்ததும், சாரிபுத்தனை வாதிட்டுத் தோற் கடித்ததும், சமணிடரிற் சளையாத விஞ்சிய நாவுக்கரசர் சின்னேரஞ் சிவிகை தாங்க அதை உணர்ந்ததுமான அதன்குழந்தைப்பருவத்தில் நிகழ்ந்த இப் பலப்பல அருட் செய்கைகளின் பேராற்றலை உணரவல்லார்க்குப், பரசமயம் பாற்றிக் காழிசேர்ந்த பின்னர் மேல்நிகழ்ந்த அவ் அருஞ் செய்கைகளும் தம் குழந்தைப் பருவத்திலேயே நேர்ந் திருக்கு மாயின் அவைகளையும் பிள்ளையார் ஆற்றுவார் என்பது ஐய மின்றி விளங்குமன்றோ! ஆகவே கவுணியத் தலைவர் இவண் தோன்றிப்புரிந்த ஆட்சி குழந்தைக்கால ஆட்சியேயாம் என்பது பிழையின்று. அதனுவன்றோ, அறுபான் மூன்று திருத் தொண் டர் சீரையும் பரசிய தெய்வச் சேக்கிழார், திருஞான சம்பந் தர்க்கு மட்டும் குழந்தைக் காலத்து விளையாட்டு வகைகளை விரித்தோதி மகிழ்ந்ததூஉமென்க.

இனி, எங்கும் எவர்க்கும் அறிவின் முளைப்பு தேறாத குழந்தைப் பருவத்தில் செயற் கரிதாம் இத்தெய்வத் திருவருட் செய்கைகளை நம் குழந்தை எளிதாக ஆற்றியதாயின் இறைவ னுக்கும் அக் கொஞ்சுமொழிக் குழந்தைக்கும் உள்ள அணுக்க நிலை உணர்வரிது. பால் பருகிய அப்பொழுதே "தோடுடைய செவியன்" என்று பாடிய முதல் திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பில், "ஒரு நெறியமனம் வைத்து உணர் ஞான சம்பந்தன்" என்று பெயரிடப்படாத அக் குழந்தை தன் பெயரைத் திறன்

தோன்றக் குறித்தருளியது ஒன்றே அதன் அளப்பரிய பெருமைக்கோர் எல்லைச் சான்றும். அமிழ்ந்து வடிவாய்ச் சிவம் நேரே ஊட்ட அச் சிவஞானத்தில் சம்பந்தப்படுதலும், ஒரு நெறிய மனம் வைத்தலும் எளிதில் கூடுவதா! அங்ஙனம் தொடர்புற்று வைக்கத் தெரிந்தாலும், வைத்த பின்பு உணர்வது என்பது எவ்வளவு அரிதானது. இவ்விரண்டுங் கைவரப் பெற்றாலும் அதனோடு இயைபுண்டாமாறு நன்மொழிப் புலமையும், நினைந் தாங்கு நிகரின்றிச் சொற்பொருட் சுவைகள் பொதுளி இசைச் சுவை சொட்டப் பாசிப் பாடுந் திறமும் பெற்றிடுதல் அம்மம்ம! அரிது! அரிது!! இவை யெல்லாமும் அடைவதா யிருக்கட்டும், ஆ! மாயை உலகிற்பட்ட தாய் தந்தையைக்கூட ஏதோ ஒரடையாளப் பழக்கத்தானன்றிச் சொற்பொருள் முதலிய வேறெவ் வாற்றானும் சிறிதுந் தெரிந்துகொள்ளக்கூடாத இரண்டாண்டு முற்றிய அத்துணைப் பச்சைப் பருவத்தில் இந்நிலை யடையும் அருட் களஞ்சியப் பெருமையை என்னென்பேன்! என்னென்பேன்!! இச் செல்வக் குழந்தையே தோன்றாது போமாயின் அக் காலத்துச் சமண சாக்கியப்பாம்பினின்றும் பிழைக்காது போவதோடு இக்காலத்துப் புதுமுறையாராய்ச்சியினும் வென்று தலையிடம் பெறுதல் சைவசமயத்துக்கு இயலாதுபோம். உள்ளத்திற் பல்காலும் உள்ளிப் பழகிய நினைவின் வலிவே கட்புலனுக்கு உருவெளியாய்த் தோன்றுவதுபோல அடியார்கள் ஆன்றோர் வழக்கால் கடவுள் உண்டு உண்டு என்று நம்பிப் பலகாலும் நினைத்துப் பழகிய நினைப்பாற்றலே அவர் கண்ணுக்கு உருவாய்த் தோன்றுதலின் உண்மையில் கடவுளொருவர் இல்லை கேள் என்பாரைச் சைவ நன்மக்கள் தம் சமய ஆன்றோரில் எவரைக் கொண்டு வென்று மிகுந்திடுவர்? சற்றே நினைமின்கள்! அக்கருத்தை யொழிப்பதற்கு நங்காழிக் குழந்தை யல்லவா புன்னகையோடு கைதட்டி ஓடிவரும்! இல்லத்தில் தங் கண்ணுக்குப்பட்ட பருப் பொருள்களைக் கூடச் சில நொடியேனுந் தொடர்ந்து நினைக்க மாட்டாமல் அவ்வப்பொழுதும் சிதர்ந்த நினைவுகளுடைய அக் குழந்தைகட்கு ஒரேகருத்தில் நெஞ்சிருத்தலும் நெஞ்சூன்றலும் நெஞ்சழுத்தலும் நெஞ்சடர்த்தலும் நெஞ்செடுத்தலும் தொடர்புபடுத்தலும் நீளநினைத்தலும் பழகலும் எவ்வாறு இயலுவதாம். அதனினும் மாயை யுலகுக்கு நெடுந்தொலைவிற்பட்ட அருளுருவக் கருத்திலா அவை இயலுவது. இயலா தாகவே அப்பருவத்து ஞானசம்பந்தக் குழந்தை தன் நினைவாற்றலால் சிவத்தைக் கண்ட தென்பது பொய்ப்பட்டு அந்நினைவாற்றலுக்கு வேறான உண்மைக் கடவுளையே உள்ளட்டி கண்டதாம் என்றிங்ஙன் இறுத்து வெல்லுதல் கூடும். எனவே இத் தேவாரக் குழந்தையே சைவத்துக்கு உயிர் நிலை

யென்க. இதனாலன்றோ, "யார்க்குங் காணாரைக் கண்டழுத கனிவாய் மைந்தர்", "இறையுருக் காட்டுமாறெழுந்தார்" என்று சீகாழித்தலபுராணமும் பிள்ளையாரை வழுத்துவதாயிற்று. இன்னும் "கொழுந்திலே வயிரமுற்றனையார்" "தமிழ்ப்பாலுண்டார்" "எவ்வுலகும் இறைஞ்சவந்தார்" என்பனவாக வரும் அதன் செஞ்சொற்றொடர்கள் நம் செல்வத்துக்கே சிறப்பாவனவாம். குழந்தையே தன்னை "இணையில் சம்பந்தன்" என்று ஓரிடத்திற் குறிப்பதால் வேறு கூறுதல் மிகைபடும். எனவே அதன் செந்தொடைத் தேவாரத்துக்கும் இணையான தொன்றில்லை என்பது பெறப்பட்டது. என்றால் அதனினும் மிக்கதொன்றுண்டுகொல்!

இவ்வகையான அருமையும் பெருமையும் படைத்த திருஞானசம்பந்தர் சமண்புத்த மதங்களின் வலி தொலைத்து அவ்வழியே சைவந் தழைக்கச் செய்தலையே தம் வாழ்நாட் செயலாகக் கொண்டு அதைத் தன் குழந்தைப் பருவத்திலேயே ஆற்றிய உண்மை அறிந்து மகிழக் கூடியது. குழந்தைகட்குத் தொன்றுதொட்டுவரும் அறியாமை யொன்றே உளதாமன்றி அவ்வறியாமை மலம்மாயை மலத்தோடு உறழ்வதாற் கிளர்ந்து வரும் அவா முதலிய தீய இயல்புகளும் புதிய வினைகளும் அவைகட்கில்லை. தான் சேரும் பொருள் வண்ணமாகும் பளிங்கைப் போலவே தன்னோடு பழகுவாரியல்பை அப்படியே பற்றிக் கொள்ளும் பான்மை யுடையது அக் குழந்தைகளின் தூய நெஞ்சு. அப்பரிசிற் பதியான அணிகொள் ஞானசம்பந்தப் பசுங் குழந்தைக்கு அவ்வறியாமை மலந்தானும் முழுதும் இல்லை. ஆகவே மற்றக் குழந்தைகள் மாசு மூடிய பளிங்குக்கும், மறை ஞானசம்பந்தம் மாசு நீங்கிய பளிங்குக்கும் ஒப்பென்க. ஏதொரு களங்கமும் இல்லாமல் விளங்கி யருஞ்சம்பந்தப் பளிங்கில் சிவஞானத் திருவருட்பால் தோய்தலும் அக் குழந்தை சிவ ஞானசம்பந்த மாயிற்று. அதன் சொல் சிவஞானச் சொல்லாயிற்று. செயல் சிவஞானச் செயலாயிற்று. இவ்வாறு முழுதுங்களங்க மற்ற குழந்தைப் பருவத்தில் திருவருள் பெற்றதனால் தான் அக் குழந்தை, நெஞ்சம் அஞ்சும் பேரிடர் புரிய மடிதற்று நின்ற சமண் சாக்கியப் பெருந்தீமை அவித்தொழிக்கும் முழுப்பேராருள் வலிவும் ஆண்மையும் பெற்றிருந்தது. குழந்தைக் காலத்தில் தோய்ந்த சிவத்திருவருள், உலக வேதனைகளில் சுழல்பட்டுத் தளரும் வேறுபருவத்தில் தோயுமாயின் அப்பருவம் முழுதும் அருள்வண்ண மாகாதாய் அத்துணை வலிவுடைத்தாகாது. உடல் ஒடுங்கிய கிழப் பருவமும் அதற்கேற்றதன்றாம். அதன்கண் இறையருள் விளைந்தாலும் மல மாயைகளிற் பல்காலும் உழன்ற பழக்கத்தால் அப் பருவத்

தார் மீண்டும் அவற்றின் நினைவு தோன்றப் பெறுவாராய் நெகிழ்ந்து போவராதலால் அவர் நெஞ்சுங் களங்கமற்று வலி வுடைய தாகாது. "ஆன்மாக்களுக்கு அச் சாதகங்களான் ஞானம் விளங்கி ஞேயங் காட்சிப்பட்ட விடத்தும் பயிற்சி வயத்தான் முன்னர்த் தான் நோக்கிய பாசத்தை நோக்கி நிற்கும்" என் னும் சிவஞானமுனிவர்கள் திருமொழியும் இங்கு நினைவு கூரற் பாலது. ஆதலால், அருளாட்சி பெறும் அப்பருவம் இடரில் தளராது பர சமயத்தை முறித்துப் பறக்கடிக்கத் தக்க வலிவு பெறுதென்க. பல வகையாலும் தம் எண்ணம் ஈடேறப்பெறாது 'கிடைத்தாற் கவளமாக அப்படியே விழுங்கி விடலாம், ஐயோ, கிடைக்க வில்லையே, வேறு என்னசெய்யலாம்' என்னும் சூழ்ந்த எண்ணமுடையராய்ப் பொறுமையுருக்காட்டி நெருங்கி நிற் கும் சமணரை அவர்களெதிரிலேயே, அதனிலும் அவைக்களத் தில், பின்னும் வெகுளி பெருகப் "பல அல்லல்சேர் ஈனர்கள்" என்று இழித்துவைது,

"பால்நல்வா யொருபாலன் ஈங்குஇவன் என்றுநீ பரிவுஎய்திடேல்
ஆனைமாமலை ஆதியாய இடங்களில் பலஅல் லல்சேர்
ஈனர்கட்கு எளியேன் அலேன்திரு ஆலவாய் அரன்நிற்கவே"

என்று எதற்கும் அஞ்சாத திண்மையுடன் நம் அருமைக்கிளி ஆண்மை கூறியதாயின் குழந்தைப் பருவத்தின் வலிவாற்றலை என்னென்று உரை கூறுவது!

மேலும், நண்பர் பகைவர் பிறர் என்னும் முத்திறத்தாரா லும் அன்பு செலுத்தப்படுவது குழந்தைப் பருவமே. ஆண் டில் முதிர்ந்தவரைவிட இளந்தைக் காலத்தினரும், அவரை விட மழலைப் பருவத்தினரும் கண்டார் நெஞ்சைக் கவ்வி விடும் பேரழகுடன் எத்துணை இனிமையாய் இளகித் திகழ்ந்து தம் மாட்டுப் பேரன்பை விளைவித்துக் கொள்ளுகின்றனர். விலங்கு முதலிய கீழ் நிலை உயிர்களிலும் மூத்தவைகளைவிட அவற்றின் குட்டி முதலானவைகள் அழகாய் விளங்கி அன்பு தருகின்றன வல்லவோ? ஆகவே, அன்புருவப் பருவம் அதுவாதலின், தன் னைக் கண்டாரெல்லாரையும் எல்லையில்லாத தன் அழகாலும் அறிவாலுங் கவர்ந்து தன் இனத்தவராக்கிக்கொண்டு பரசமய மக்களை வேறு படுத்து அவரை எளிதில் வெல்லுதற்கு அது தக்கதாயிற்று. இன்னும் பிள்ளையாரின் பிள்ளைப் பருவம் தன க்கு அரிதான பேருணர்வு நிலையை உடைமையால் எல்லார்க் கும் வியப்புணர்வு விளைத்துத் தன்கண் அருந்திய நம்பிக்கையை வருவித்தது. இவ்வாறு மழலைப்பருவம், கிளர்ச்சியும் வியப்பும்

நம்பிக்கையும் தன் வலிவமைப்பால் தருவதாற்றுன் கெட்ட வரை ஒழித்து நல்லவரை வளர்த்து நாட்டை நலம்படுக்கும் அருள் வடிவங்கள் குழந்தைக் காலத்தனவாக இருந்தன. முருகக் கடவுள், மெய்கண்ட குழந்தை முதலிய அருளுருவங்கள் இப்பொழுது நினைவுக்கு வருகின்றன.

ஆகவே, சைவசமயம் பெருக்கிச் சமண் சாக்கிய மொழிக்கும் பேராற்றலைப் பெய்யத் திருஞான சம்பந்தக் குழந்தையைத் தேடி எடுத்த சிவனுர், பொருள் போற்றிப் பொருளல்ல பாற்றும் பெருநூல் பெய்யக் குறளடி இரண்டைத்தேடி எடுத்த திருவள்ளுவனுர்க்கு ஒப்பானவர் தாமென்க!

---

# அத்துவிதம்

[திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

அத்துவிதம் என்பது கடவுள் உயிர் என்னும் இரண்டு அறிவுடைய பேதப் பொருள்களும் தம்முள் அபேத மாதற்குரிய சம்பந்தம் ஆகும். இந்தச் சம்பந்தம் இந்து சமயம் என்று சொல்லப்படுகின்ற சமயத்தின் ஒவ்வொரு உட்சமயத்திலுங் கூறப்பட்டுள்ளது; ஏனைய சமயங்களிற் கூறப்படவில்லை. அந்த உட்சமயங்கள் நான்கு; அவை சைவம், வைணவம், மாத்துவம் ஸ்மார்த்தம் என்பன. அவைகளில் ஒவ்வொன்றும் அத்துவிதத்தைப்பற்றி, கூறுவதில் கருத்து வேறுபாடு உடையது. சைவம் தவிர ஏனைய மூன்று உட்சமயங்களும் வேதத்தை ஆதாரமாகக் கொண்டு அத்துவிதக் கருத்துகள் கூறுகின்றன. அந்த உட்சமய ஆசாரியர்கள் அத்துவிதத்தைப்பற்றிக் கூறும் வேத மொழிகளுக்கு வேறு வேறு பொருள் கூறுகின்றார்கள். சைவ சமயம் ஒன்றே வேதம் என்னும் பொது நூலையும் ஆகமம் என்னும் சிறப்பு நூலையும் ஆதாரமாகக்கொண்டு அந்த இரண்டு நூல்களுக்கும் இணங்க அத்துவிதக் கருத்துக்களை விளக்கிக் கூறுகின்றது. சைவ சமயம் ஒன்றே,

"வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் சிறப்பும் பொதுவு மென்றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே."

என்று திருமூலர் கூறியபடி வேதம் ஆகமம் என்னும் இரண்டு நூல்களும் ஒரு முடிபினை யுடையன என்று கூறுகின்றது.

ஸ்மார்த்த உட்சமயம் கூறும் அத்துவிதக் கருத்து குறைவும் பிழைபாடும் உடையதாயிருப்பினும் ஸ்மார்த்தர்கள் தாங்களே அத்துவிதிகள் என்றும் ஏனையோர்கள் அத்துவிதிகள் அல்லர் என்றும் கூறுகின்றார்கள். சைவநூல்கள் கல்லாத சைவர்கள் அந்தத் தப்புக்கருத்தை உண்மை என்று ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஸ்மார்த்தர்கள் கூறும் கூற்று உண்மை அல்ல என்றும் சைவசமயம் வேதாகமங்களை ஆதாரமாகக் கொண்டு கூறும் அத்துவிதக் கருத்துக்களில் ஏனைய மூன்று சமயத்தார்கள் கூறும் அத்துவிதக் கருத்துக்களெல்லாம் அடங்கியுள்ளன என்றும் இயன்றவாறு விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முதலாவது அத்துவிதம் என்னும் சொல்லானே பெறப்படும்பொருளைக் கருதுவாம். அத்துவிதம் என்பது ஓர் வடமொழிச் சொல்லாகும். அத்துவிதீயம் (अद्वितीय) என்னும் வடமொழிச்சொல் தமிழில் அத்துவிதம் என வந்திருக்கிறது. ந என்னும் உபசர்க்கம் துவிதம் என்னும் சொல்லுடன் சேரும் பொழுது வடமொழி இலக்கணப்படி நகர உயிர் மெய்யிலுள்ள நகர ஒற்றுக்கெட்டு அத்துவிதம் என்றாகியது. நகரம் வடமொழி வழக்கின்கண் அன்மை இன்மை மறுதலை என்னும் மூன்று பொருள்களை உணர்த்தும் அப்பிராமணன், அமலம், அநீதி என்பன முறையே உதாரணங்களாம். அப்பிராமணன் என்னும் சொல் பிராமணன் அல்லாத க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய இவர்களைக் குறியாது பிராமணத்தன்மை அல்லாதவன் என்னும் பொருளைக் கருதலால் அகரம் அன்மைப் பொருளில் வந்தது. அமலம் என்பது மலம் இன்மையைக் குறித்தலால் அகரம் இன்மைப் பொருளில் வந்தது. அநீதி என்பது நீதியின் மறுதலையைக் குறித்தலால் அகரம் மறுதலைப் பொருளில் வந்தது. இவ்வாறு நகரம் மூன்று பொருளை யுணர்த்தினும் எண்ணுப்பெயர் மேல்வந்த நகரம் அன்மைப்பொருள் ஒன்று மாத்திரமே உணர்த்தும் என்பது வடமொழி இலக்கண வழக்கு. உதாரணமாக அஃது ஏகம் என்ற எண்ணுப்பெயர் முன்னாக அனேகம் (ஒன்று அல்ல) எனவும் துவிதம் என்னும் எண்ணுப்பெயர் முன்னாக அத்துவிதம் (இரண்டல்ல) எனவும் வருவது காண்க. மூன்று முதலிய ஏனைய எண்ணுக்களுடன் அகர உபசர்க்கம் வருவதே யில்லை. ஆதலின் அத்துவிதம் என்னும் சொல் 'இரண்டன்மை' என்று மாத்திரம் தான் பொருள்படும்.

இரண்டின்மை என்ருவது இரண்டின் மறுதலை என்ருவது அது பொருள்படமாட்டாது.

வடமொழி இலக்கண வழக்குக்கு மாருக ஸ்மார்த்தர்கள் இன்மைப் பொருள்கொண்டு அத்துவிதம் என்னும் சொல் ஏகம் என்று பொருள்படும் என்பர். அப்படிக் கொள்வதனுல் அவர் பிரமப்பொருள் ஒன்றேயுள்ளது அன்றி இரண்டாவது பொருள் இல்லை என்றும் அப்படியுள்ள ஒரு பொருளும் குணம், சத்தி, சங்கற்ப முதலியவற்ருல் விசேடிக்கப்படுதலின்றி நிர்விசேடமாய் நிற்கும் என்றும் கூறுவர். இப்படிக் கூறுதலினுல் அவர் கேவலாத்துவிதி என்று கூறப்படுவர். உயிர் (சீவான்மா) என்ருவது உலகம் என்ருவது பிரமப்பொருளைத் தவிர வேறு பொருள்கள் இல்லை என்றும் ஏகமாகிய பிரமப்பொருள் உயிராகவும் உலகமாகவும் காரியப்பட்டது என்றும் அவர் கூறுவர். ஏகமான ஆன்மாவைப் பிரமம் என வாதிப்பதால் ஏகான்மவாதி எனவும் அவர் கூறப்படுவர். கடவுளும் உயிரும் ஒன்று என்று அவர் கூறுதலால் அபேதவாதி எனவும் அவர் கூறப்படுவர். பொன்னும் மணியும்போலக் கடவுளும் உயிரும் என்று அவர் உவமைகூறி பொன் ஒன்றே பலவணிகள் ஆயினுற்போலப் பிரமப் பொருளிலிருந்து உயிரும் உலகமும் கற்பிதமாயின என்று மொழிவர்.

வேதத்தில் "ஏகமே வாத்விதியம் பிரம்ம" (ऐकमेवाद्वितीयं ब्रह्म) என்ற வசனமும் இதுபோன்ற பிற வசனங்களும் காணப்படுகின்றன. ஸ்மார்த்தர்கள் இந்த வசனத்திலுள்ள ஏகம் என்ற சொல்லுக்கும் அத்துவிதம் என்ற சொல்லுக்கும் ஒன்று என்று பொருள்கொள்வர்.

மாத்துவர்கள் ந என்னும் உபசர்க்கத்துக்கு மறுதலைப் பொருள்கொண்டு இரண்டின் மறுதலை ஒன்று எனவும் மறுதலை இரண்டு பொருட் கண்ணதாகலின் மறுதலையாகிய ஒன்று கொள்ளவே இரண்டும் கொள்ளக்கிடக்கின்றது எனவும் ஒன்ருகிய கடவுளும் இரண்டாவதாகிய உயிரும் வெளியும் இருளும் போல வேறு வேறு பொருள்கள் எனவும் கூறுவர். இவ்வாறு அவர்கள் கடவுளும் உயிரும் வேறு வேருன இரண்டு பொருள்கள் என்று கூறுவதால் துவிதிகள் எனவும் பேதவாதிகள் எனவும் கூறப்படுவர்.

பாஞ்சராத்திரிகள் (வைணவர்கள்) இன்மைப்பொருள் கொண்டு கடவுள் வியாபகப் பொருள் எனவும் உயிரும் பாச

மும் கடவுளில் அடக்கம் எனவும் அடக்கமாயினும் உயிரும் பாசமும் பலவாயினாற்போலக் கடவுள் பல அல்லாமல் ஒன்றே எனவும் கடவுளைவிட உயிர் வேறன்றாயினும் உயிர் கடவுள் ஒன்று எனவும் கூறுவர். கடவுள் உயிர் பாசம் இவைகளானும் தன் குணங்களாகிய சத்தி, சங்கற்பங்களானும் விசேடிக்கப் பட்டு விசிட்டனாய் நிற்பன் என்று அவர்கள் சொல்லுதலால் விசிட்டாத்துவிதிகள் என்றும் உயிர் கடவுளைவிட வேறன்று என்று அபேதமாயும் கடவுளும் அன்று என்று பேதமாயும் கூறுதலால் பேதாபேதவாதிகள் என்றும் கூறப்படுவர். அவர்கள் "சொல்லும் பொருளும்போல" என்று உவமை கூறுவர்.

---

# மணம்

[திரு. க. ப. சந்தோஷம் அவர்கள் B. A. L. T.]

மணம் என்பது இனிய மலர்களிலிருந்து காற்றில் வெளிப் படும் நாற்றமாகும். இந்நாள் வழக்கில் நாற்றம் என்பது தனிச் சொல்லாய் வரும்போது கெட்ட மணத்தையே குறிக்கின்றது. ஆண்டி என்றசொல் ஆள்கின்றவனைச் சுட்டியது போய், இரந் துண்பவனைக் காட்டியது போல், நாற்றம் என்ற மொழியும் மக் கள் விரும்பாத மணத்தையே இக்காலத்தில் பொருளாக உடை யதாயிற்று "பொன் மலர் நாற்றமுடைத்து" என்ற அடியில் இச்சொல் நல்ல மணத்தையே குறித்தது. இந்த நாற்றம் என்ற சொல்லுக்கும், ஆண் பெண் சேர்க்கையாகிய 'மணம்' என்ப தற்குமுள்ள இயைபு யாதெனச் சிறிது ஆராய்வாம்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் ஐம்புலன்களாற் பெறப்படும் இன்பங்களும் மகளிரிட முண்டென்றார் மூத்தோ ருள் முன்னோராகிய வள்ளுவர்.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுமைம் புலனும்
ஒண்டொடி கண்ணே யுள" (புணர்ச்சிமகிழ்தல்—க)

ஐம்புலன்களின் வழியாகவும் இன்பம் நுகர்தல் புணர்ச்சியுள் நிகழ்வது பற்றி ஆசிரியர் இது கூறினார். உலகிலுள்ள பல இன் பங்களிலும் இது தனித்து நவில்தற்குரிய சிறப்புடைத்து. இதைச் சிற்றின்பமென்று ஆன்றோர் கூறியபோது இழிவு கருதி யவ்வாறு பெயரிட்டார் என்று சொல்வதற்கில்லை. அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையும் முறையே வகுத்து விளக்

கிய திருவள்ளுவர், இன்பப் பகுதியில் களவு, கற்பு என்ற இரண்டையுமே கூறிப் போந்தார். இவற்றை இழிவுடையவாக அவர் கருதியிருந்தால் அவர் இயற்றிய இணையற்ற நூலில் இவற்றிற்கிடமேது? முன்னோரியற்றிய பிறநூல்களிலுங் காதலின்பங் குற்றமுடையதாகக் காட்டப்படவில்லை. ஆண் மக்கட்குக் கூறும் அழகினையுடைய ஒரு தலைவனோடே சென்ற தன் மகளைத் தேடிக்கொண்டு வந்த தாய், வழியில் அந்தணர் சிலரைக்கண்டு, தன் செல்வியையவர்கள் கண்டதுண்டோ? என்று கேட்க, காதலனுடன் வெஞ்சுரத்தைக் கடந்த தலைவியைப் பார்த்த அவ்வந்தணர், "நறிய சந்தனமும், வெள்ளிய முத்துக்களும், ஏழு நரம்பாற் கூட்டிய இனிய ஓசைகளும் முறையே மலையிலும் கடலிலும் யாழிலும் பிறக்கின்றன. ஆனால் பயன்படும்போது அவை முறையே மெய்யில் பூசிக்கொள்வோர்க்கும், கழுத்தில் அணிந்து கொள்வோர்க்கும், பாடுவோர்க்கும் பயன் தருமேயன்றி, மலைக்கும், கடலுக்கும், யாழுக்கும் பயன்படா. ஆராயுங்கால் நும்முடைய மகளும் பயன்படும் பருவத்து நுமக்கும் பயன்படாள்" என்று உண்மை கூறியபின்,

"இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே" (பாலைக்கலி-அ)

என்று அவ் வன்னைக்கு அறநிலையை எடுத்தோதினார்கள். இதன் பொருள்: "மிக்க கற்பினை யுடையாளுக்கு வருத்தமுறாதே கொள்ளுமின். இருமுது குரவரினுஞ் சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே போனாள். இம்மையில் இங்ஙனங் கற்புப் பூண்டு நிகழ்த்தும் இவ்வில்லறமே அறங்களில் தலையான அறம்; மறுமையில் இவ்விருவரும் நீங்காமற் சுவர்க்கத்திலே செல்லும் வழியும் அவ்வழிபாடே". இவ்வாறு பெரியோர் சொல்லிய பாடல்கள் பல. இங்ஙனமாகவும், சிற்றின்ப மென்பது இழிவுடையதொன்று என்று கொள்வதற் கிடமேது? பேரின்பத்தோடு ஒப்பிடுங்கால் அது சிற்றின்பமாகுமே யன்றித் தன்னில் தானே அது சிறுமை யுடையதன்று. சிற்றம்பல மென்பதற்குச் சிறுமையையுடைய அம்பலமென்று பொருள் கொள்வாருமுளரோ? என்றாலும் பின் வந்த புலவர் பலரும் காதலின்பத்தைச் சாலச் சிறுமையுடையதாகவே பழித்துரைத்தார். காதல் என்பது மக்கள் பெற்ற பேருணர்ச்சிகளில் ஒன்று; அது சீரிய நோக்கத்திற்காக இறைவனால் அமைக்கப்பட்டது என்ற அறிவு குன்றிய காலத்தே, இழிமொழிகள் பல வந்தன. இதைத் தமிழர் பிறரிடமிருந்து கற்றுத் தம்மை இழிவுபடுத்திக் கொண்ட

னர். இவ் வாழ்க்கையில் நாம் பெரிதும் போற்றும் பலசொற்கள் காதலால் வந்தன. காதலில்லையேல், கணவன், மனைவி, கற்பு, ஆண்மை, வீடு, தாய், தந்தை, மைந்தர் என்ற சொற்களேது? "எந்தாய் பராபரமே" என்பதேது? கலித்தொகை, அகநானூறு முதலிய உயர்ந்த நூல்கள் செய்யப்பட்ட ஞான்று தமிழர் இருந்த மேல்நிலையையும் பெண்களைப் பற்றியும் இந்நாள் பிதற்றப்படும் தீச்சொற்கள் அறவே ஒழிதல் வேண்டும்.

நிற்க,

இயற்கை யமைப்பை உற்று நோக்குவோமாயின் உயிருடைய ஒவ்வொன்றும் தன்னைப்போன்ற பிறிதொன்றைத் தோற்றுவிக்க முற்படுகிறதென்பது எளிதில் வெளிப்படும். கொடி, செடி, மரம், விலங்கு அனைத்தும் இறந்தொழிவதற்கு முன் தத்தம் வகையின் வளர்ச்சியின் பொருட்டு ஒரு விதை, கொட்டை, கன்று, குட்டி ஆகிய இவற்றைக் கிளையிலோ, வேரிலோ, வயிற்றிலோ அமைக்க முயல்கின்றன. பொதுவாக இவற்றை மூளை என்று சொல்லலாம். மக்களும் ஒருகான் மூளையைப் பெறுவதை மிகவும் விழைகின்றனர். இதற்குப் புணர்ச்சி வேண்டியதாயிருக்கிறது. இங்கு நாம் கவனிக்கவேண்டியதொன்றுண்டு. புணர்ச்சியின் பயனாக மூளையுங் கான்மூளையுந் தோன்றுவது உண்மையேயாயினும், மூளை அல்லது கான் மூளையின் பொருட்டுப் புணர்ச்சி நிகழ்கின்றதென்று கூறலாகாது. மக்களுள், ஒரு குழவி வேண்டுமென்பதன் பொருட்டாகப் புணர்ச்சி நடப்பது. ஒரு வேளை இளமை கழிந்த பின்னர் இருக்கலாம். வலியும் அழகும் மிகுந்து மிளிரும் இளமையில் பொதுவாகப் புணர்ச்சியின் இன்பத்தைத் தவிர வேறு பயன்கருதிக் கூடல் நிகழ்வதில்லை. காதலெனும் பெருங் கவர்ச்சி தகுந்த வயதில் இயற்கையாகவே எழுகின்றது. அதில் ஊறிய நினைவொன்றுமில்லை. சூழ்ச்சியுமில்லை. காதலாற் கவர்ச்சியுற்றவர் 'புனலோடு வழிபுற் சாய்ந்ததுபோல்' வணங்கவேண்டும். இஃதிவ்வாறு தல் பற்றிக் காதலின் கொடுமையையுந் தாங்கொணுமையையும் உளம்போனவாறு இழித்துரைத்தார் பலர். மக்களின் பல்வேறுகிய நன்முயற்சிகட்கு இது பேரிடையூறாய் நிற்கின்றதென்று இங்ஙனம் பேசியவருமுளர். ஆனால் காதலின்வலி இவ்வளவு உரமுடையதா யிருக்கவேண்டு மென்பதற்குக் காரணமுண்டு.

(தொடரும்)

---

# குழந்தைகளின் நல்வளர்ப்பு

[பு. க. முத்துச்வாமிப் பிள்ளையவர்கள்]

## IV

இத் தலைப்பின்கீழ் முன் ஐப்பசிச் செல்வியில் பிறப்பின் உடல்நிலை பெற்றோரின் உடல் நிலையளவேதா னிருக்கும் என்றும், நல் வளர்ப்பாளன் ஒவ்வொருவனும் நன்மணத்தையே விரும்புதல் வேண்டு மென்றும், தாய்மார்களின் விருப்பங்களை (தேவைகளை) நன்கு உணர்ந்து அதன் வழியாக இனிவரும் நம் வழியாளரைக் காக்கவேண்டு மென்றும், ஒரு குற்றத்தில் ஈடுபட்ட ஆண் பெண் இருவரில் ஆணுக்கு யாதொரு தண்டனையுமின்றிப் பெண்ணை மட்டிலும் மிகுந்த தண்டனைக்குட்படுத்தல் எவ்வாற்றானும் பொருந்தா தென்றும், நம் வழியினர் நன்றாயிருக்கவேண்டுமென்று விரும்பும் நாம் தாயின் நலம் கருதல் ஒரு தலையான் வேண்டற்பாலதென்றும் தெரிவித்தேம்.

பிரான்சு தேசத்துப் பெயர்பெற்ற இரசாயன நூல் வல்லார் பைனார்டு (Pinard) என்பவரும் இங்கிலாந்திலுள்ள பாலண்டைன் (Ballantyne) என்பாரும் தங்கள் வாழ் நாளில் பெரும் பகுதியைப் பிறப்பின் பின் பெற்றவள் பிள்ளை இவர்களது உடற்கூற்றை அறிதற் பொருட்டுச் செலவிட்டனர். பலர் இவர்களைப் பழித்து வினோதம் காலத்தைப் போக்குகின்றார்களென இழி மொழியும் கூறினார்கள். பாலண்டைன் இவர்கள் இழி வுரையைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. எனக்கு முன்னர் பாஸ்டியர் (Pasteur) என்னும் இரசாயனநூல் வல்லாரை இவ்வாறே இகழ்ந்தார்கள். இப்பொழுது என்னையும் இகழ்ந்துரைக்கின்றனர். இன்னும் பார்ப்போம் என மொழிந்து இவ்வித பயனற்ற மொழிகளை நீத்தொதுக்கித் தனது ஆராய்ச்சியில் கண்ணும் கருத்துமா யிருந்து இப்பொழுது எல்லாருக்கும் பயன் படும்படியான ஒரு அரும்பெரும்நூலை வெளியிட்டுள்ளார்.

இப்பெரும் வழிகாட்டிகள் பிறக்கும்பொழுது குழந்தைகளின் உடல் நிலை அவர்களது தாயின் கருப்ப காலத்திற்கு முந்திய உடல் நிலையைப் பொறுத்த தென்றும் அத் தாய்மார்களின் நிலை நன்மகவைக் கருவுயிர்த்தற்கு ஏற்றதா யில்லை யென்றும் சொல்லி வருந்துகின்றார்கள்.

இங்கிலாந்திலும் பிரான்சிலும் பிறக்கும் குழந்தைகளில் மூன்றில் ஒரு பகுதி தாங்கள் பிறக்க வேண்டிய காலத்திற்கு

முன்னரே பிறந்துவிடுகின்ற என்றும், அவைகள் எளிதில் நோய் வாய்ப்படு மென்றும், ஒருவாறு நோய்க்குத் தப்பினும் அக் குழந்தைகள் எப்பொழுதும் நலமின்றி மெலிவுற்று இவ் வுலகில் உலாவித் திரியுமென்றும், இவைகளில் நூற்றுக்கு முப்பது இறந்து படுகின்றன என்றும் கணித்துக் கூறியுள்ளார்.

இத்தகைய கெடுதலி லிருந்து தப்புவதற்கு வழியாகத் தாய்மார்கள் தங்கள் பேறு காலத்திற்கு அண்மித்த காலத்தில் மிகுந்த வேலையின்றி ஓய்ந்திருத்தல் வேண்டு மென்றும் இவ் வகைப்பட்ட ஓய்வினால் விரைவுப் பேறு காலம் உண்டாகாமல் இரண்டொரு கிழமை தாழ்த்திச் சரியான காலத்தில் குழந்தை பிறக்கும் என்றும் சொல்லுகின்றார்கள்.

குருடர்களையும், செவிடர்களையும், மூடவர்களையும் நாம் கவலையுடன் காக்கின்றோம் அல்லவோ? இக் கர்ப்பிணிகள் அவர்களைவிட மிகுதியான காப்பிற்கு உரிமை யுள்ளவர்கள் அல் லவா? என்று மன்றாடுகின்றார்கள். செம்மையிற் சிறந்த மேல் நாட்டு நிலை இவ்வாறாயின், இயற்கையிலேயே உடல் நலக் குறைபாடுள்ள நம் இந்தியக் கர்ப்பிணிகளின் நிலை எவ்வாறிருக் கும்.

ஹாவ்லாக் எல்லிஸ் (Havelock Ellis) என்னும் கலைவல் லார் ஒரு தாய் தன் குழந்தைக்கு ஆறு திங்களுக்கு வேண்டும் பாலைத் தன் உடலில் ஆக்குவதற்குச் செலவிடும் வலியைக் கொண்டு ஒருடன் நிறையை எண்ணூறு அடி உயர்த்தலாம் என்பதாகச் சொல்லுகின்றார். இவ் வேலையின் தன்மை என்ன என்றும் இதனால் ஆக்கப்படுவன எவை என்பதனையும் ஒருவன் நன்கு உணர்வானானால் இஃது எத்தகைய கைத்தொழில்களி னும் சிறந்த தெனவே நினைத்தல் வேண்டும். பயனற்றவர் களுக்கு இவ்வுலகில் எவ்வகை உரிமையும் இல்லை. எல்லா வகை உரிமையும் பயனுள்ளவர்களுக்கே உரித்து. அதில் தாய்மார்க ளின் உரிமையே தலைமை வாய்ந்தது. வருங்கால அரசிருக்கை யில் அக்காலத்தின் உயிரை ஆக்கவும் வளர்க்கவும் தாய்மார் களே ஏற்படுகின்றார்க ளாதலால் தேன் கூட்டில் தாய் ஈயைப் போலும் (ராணி) அரசிபோலும் பெறற்கரும் உயரிய நிலையை அவர்களே அடைவார்கள். இவ் வகைப்பட்ட தாய்மார்களின் உரிமையை மக்கட் கூட்டத்தினர் தங்களது மணத்தினால் பெறு கின்றனர். ஒருவன் தான் ஒரு பெண்ணை மணந்து கொள்வ தால் சில பொறுப்புக்களைத் தாங்குவதாக ஒப்புக் கொள்ளுகின் றான். அவையாவன:—தான் தன் மனைவிக்கு வேண்டுவன வற்றைத் தந்து அவளைக் காத்தல். பின்னர் அவள்பால் தோன்

றும் பிள்ளைகளுக்கு வேண்டியவற்றை யுதவி அவர்களை வளர்த்தல் முதலியன.

இதில் அரசுறுப்பினர் (அரசாங்கத்தார்) செய்ய வேண்டுவது பெற்றோர்கள் செய்ய வேண்டியதையே தாங்களும் செய்ய வேண்டுவ தல்ல. ஆனால் பெற்றோர் செய்ய வேண்டியதை அவர்களைக் கொண்டு செய்வித்தலே. தங்கள் பிள்ளைகளுக்கு வேண்டியவற்றைத் தாங்கள் செய்யக்கூடாமலிருந்தால் மட்டிலும் அரசுறுப்பினராவது நல்வளர்ப்பாளனாவது இத் திக்கற்ற குழந்தைகளைக் கவனித்தல் பொருந்தும்.

நம் கவனக் குறைவால் தங்கள் பேறு காலத்தில் உயிர் துறக்கும் நம் இந்திய மாதரின் எண்ணம் குறைந்து உடல் நிலை நன்கமைந்த மக்களின் தொகை நாளுக்கு நாள் மிகுந்து நம் இந்தியத் தாய் இவைகள் எனது நன்மணிகள் என்று பெருமையாய்ச் சொல்லும் நாள் என்றுவருமோ

---

# தமிழ்ப் போதனு முறையும் பாட புத்தகங்களும்

(V. கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள் B. A.)

இவ் விருபதாம் நூற்றாண்டின்கண், மேலை நாடுகளிலும், புத்தம் புதிய முறைகளில், இளைஞர்களுக்குக் கல்வி கற்பித்து, எளிய வழிகளில், மிக ஊக்கத்துடன், சிறந்த இலக்கிய நூல்களையும், பெரிய அறிவு நூல்களையும், அவர்கள் ஐயந் திரிபற உய்த்துணருமாறு செய்து, எல்லா வித்தைகளிலும் மேம்பாடடைந்து பெரும் பேறெய்துவது, நாம் கண்கூடாகக் காணுவதாகும். எனினும் சிலர், புதியன எவையும் நமக் குரியதல்லவென்றும், பண்டை வழிகளே கொண்டாடற்பாலன வென்றும் மொழிவர். அவர் கூற்றை யுணர்ந்தன்றோ, புலவரிற் சிறந்தார், 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினனே' என்று, வழங்கினர். அதனால் சிறந்த அறிவும், பரந்த நோக்கமும், நிறைந்த பெரியார் யாவரும், எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதே கருத்தெனக் கொண்டு, நுண்ணிய ஆராய்ச்சி செய்து, நம் நாட்டுச் சிறுவர்கள் கல்விப்பேறு அடையும் வழிகளில் ஈடுபட்டு, அதற்கான உதவிகளைப் புரிவாரென்பதில் ஐயமில்லை.

நாம் புதிய முறைகளின் சிறப்பை ஆராயப் புகுவதற்கு முன்பு, நம் தமிழ்மொழி, எவ்வளவு தூரம் போதிக்கப் பட்டும், கற்கப் பட்டும் வருகிறதென்பதைக் கவனிப்போம். அங்ஙனம் ஆராயுங் காலத்துப் பிற நாடுகளில், நிகழும் நிகழ்ச்சிகளை உணர வேண்டியது அவசியமாக இருக்கிறது. நம் நாட்டினர் போலவே, இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய நாடுகளில் வெகு காலமாக, தங்களுடைய சொந்த தாய் மொழியைப் பெரிதும் போற்றுமல், உலக வழக்கிறந்துபட்ட லத்தீன், கிரீக் முதலிய மொழிகளைக் கற்று வந்திருப்பது, சரித்திர வாயிலாக அறியக் கிடக்கின்றது. பத்தொன்பதாம் நூற்றுண்டிலுங்கூடப் பாலர்கள் பள்ளியில் பட்டபாடும், லத்தீன் மொழியின் இலக்கணத்தை, மனப்பாடம் செய்வதில் அடைந்த துன்பமும், எழுதற்கரியவையாம். பள்ளியின் நீங்கின பிற்றை நாட்களிலும், ஆசிரியர் மாட்டும், பள்ளியினிடத்தும், தாம் கற்ற நூலின்பாலும், சொல்லொணு வெறுப்படைந்தனரெனில், அம்முறையின் குறைகளை எங்ஙனம் உரைத்த லியலும்? அஃதேபோல, நம் நாட்டிலும் கல்வி கேள்விகளிலும் அறிவு ஆற்றல்களிலும் அனுபவ ஞான முதிர்ந்தவர்களிலுங்கூடச் சிலர், பேச்சு வழக்கிற்குப் பயன்தராத வடமொழியைக் கற்றலினுல் பெருமை யுண்டென்று நம்பியிருத்தல் எவர்க்கும் வியப்பைத் தராதொழியாது. ஆனுல் மேனுட்டார்களோ இம்முயற்சியின் பயனன்மையை அறிந்து, லத்தீன் போன்ற மொழிகளினின்றும் தம்தேயச் சிறுவர்களை விடுவித்து விட்டனர். நாமோ பண்டைமொழிகளைக் கற்பதில் சிறப்புண்டென நம்பி யிருக்கிறேம். இதற்குக் காரணம் பழயமொழிகளெல்லாம் நம்முடைய அறிவைப் பெருக்குகின்றனவென்றும், படிக்கும் ஆற்றலை (discipline) உண்டு பண்ணுகிறதென்ற கொள்கையேயாகும். ஆனுல் தற்காலத்தில் உளநூலறிஞர்கள் (Psychologists) அக்கொள்கை, முற்றிலுந் தவறு என்று தக்க ஆதாரங்களுடனும், சான்றுகளுடனும், விளக்கிவிட்ட பின்னுங்கூட நம் எண்ணங்களை மாற்றிக் கொள்ளாதிருத்த லென்னே.

இவையேயன்றிப் பன்னூ லாராய்ச்சியில் வல்லுநராகிய மேல்நாட்டார் பலரும், இக்காலத்தில் கண்ட உண்மைகளில் தலையாயதென்ன வெனின், பள்ளிச் சிறுவர்களுக்கு, அறிவு வளர்ச்சியடைய வேண்டுமானுல், உலக நிகழ்ச்சிகளைத் தெரிந்து, அவற்றுல் பேறடைய வேண்டுமானுல், நன்னூல்களின் சுவையை நுகர வேண்டுமானுல், தம் வாணுளை இன்புற நடத்த வேண்டுமானுல், முதன் முதலில் அடிப்படையாகத் தங்கள் தாய்மொழியில் முற்றும் பயின்றிருத்தலின்றியமையாததென்பதே! தற்காலம் வழங்கப்படும் அயல்நாட்டு மொழிகளில் சிறந்ததொன்று,

நம் வர்த்தக வியாபாரங்கட்கும், அயல் நாட்டுச் சம்பந்தத்திற்கும், மற்ற லௌகிக விஷயங்களுக்கும், முக்கியமா யிருத்தல் வேண்டுமாயினும், சிறிது காலம், தாய் மொழியில், நம் இளைஞர்களைப் பயில்வித்த பின்னரே, அயல் மொழிகளைக் கற்பித்தல் சாலச்சிறந்ததாகும். இதுபற்றியன்றோ மேலை நாடுகளில், பிறமொழிகளைப் பருவங்கடந்த பின்பே புகட்டுகின்றார்கள்.

மேலும் பிற நாடுகளில், சரித்திரம் பூகோளம், விலங்கு நூல், உயிர் நூல், நில நூல், பறவை நூல், சடப்பொருள் நூல் ஆகிய இவற்றைத் தம் மொழிகளிலேயே, சிறுவர்களுக்குப் பயிற்றுவிக்கும் இக்காலத்தில் நம் நாட்டில் மட்டும், அந்நிய மொழியைக் கையாடுதலும், அதையே பேசுங் கருவியாகக் கொள்ளுதலும், அம்மொழியைப் போற்றுதலு மாகிய கொடிய வழக்கத்தை நம்மவர்கள் தகர்த்தெறிய முன் வராமல், அதனால் இடர்ப்படுங் குழந்தைகளைக் காப்பாற்ற முயற்சிக்காமலு மிருப்பது என்ன அறியாமை! இதைக் குறித்துப்பெரியார் பலர் வாதித்து வந்தது யாவரும் அறிந்ததே. நம்மொழி மேம்பட்டதன்றென்றும், நடைமுதற் பழக்கத்தில் அம்மொழியின் மூலமாகப் பயில்வித்தல் இயலாத காரியமென்றும், தமிழில் பாடபுத்தகங்கள் கிடைத்திலவென்றும், ஆங்கிலமொழியில் தற்காலத்தில் உள்ள அறிவு மிகுதியும் குறைவுபடும் என்றும், நம் மாகாணத்தின்கண், பற்பல மொழிகள் இயங்கி வருவது, ஒரு கட்ட மென்றும், இன்னோரன்ன, இடை யீடுகளை எடுத்து இயம்பாநிற்பர் சிலர். இவற்றிற்கெல்லாம் தக்கவாறு விடையிறுக்கப்பட்டுவிட்டதுமன்றி அதைக் குறித்து, இன்னும் எத்துணை வாதங்கள் நிகழினும், தளராமல் சமாதானம் விரைவாக மொழிதற்கு வல்லேம். எனினும், குறித்த காரியத்தைப் பற்றி எழுதுவான் வேண்டி விரிவஞ்சி விடுத்தனம்.

(தொடரும்)

---

# படிக்காசுப்புலவர் வரலாறு

படிக்காசுப்புலவர் தொண்டை மண்டலத்திலே பொற்களத்தூரிலே செங்குந்தர் மரபிலே தோன்றி இராமநாதபுரம் கிழவன் சேதுபதி என்னும் நாமம்பெற்ற இரகுநாதசேதுபதி (1686-1723) சமஸ்தான வித்துவானாய் இருந்தார். சீட்டுக்கவிகளெழுதுவதிலும் வசைபாடுவதிலும் மிக வல்லவர். தமிழ்க்கலை பயின்று நல்வாக்கினைப்பெற்று இல்லறவாழ்க்கையிலே இருக்கு

நாளில் அந் நாட்டிலுள்ள வல்லை நகரத்தை யடைந்து, காளத்தி யரசனைக் கண்டு,

"பெற்றா ளொருபிள்ளை யென்மனை யாட்டிப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமல்ல பாலிரக்கச்
சிற்றாளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்றா தரவல்லை யாவல்லை மாநகர்க் காளத்தியே."

என்னுங் கவிபாடி அவரிடத்தி லிருந்து சில பாற்பசுக்களைப் பெற்றனர். அன்றியும் மாவண்டூரிலே மிக்க செல்வரா யிருந்த கத்தூரி முதலியார் புதல்வர் கறுப்பமுதலியார் என்னும் ஓர் வேளாளர் வேண்டுகோளின்படி தொண்டைமண்டலத்தைப் புகழ்ந்து தொண்டை மண்டல சதகமென்னும் ஓர் அரிய நூலைப் பாடி அரங்கேற்றி அவரிடத்திலிருந்து அளவற்ற பொருள்கள் பெற்றது மன்றி, அக்கறுப்ப முதலியாரே இவர் பல்லக்கையுஞ் சுமந்தனர்.

பின்பு தென்னாட்டை யடைந்து இரகுநாத சேதுபதியைக் கண்டு கவிபாடிச் சில பரிசுபெற்றுப் பல்லக்கு முதலிய விருதுகளுடன் மதுரைப்பதிக்கு வந்தபோது அந்நாட்டையாண்ட திருமலைநாயக்கர் இவரது ஆரவாரத்தை நோக்கிக் கிளிக்கூட்டுச் சிறையில் அடைத்து இவர் செருக்கு அடங்கி யிருக்கிறாரோ எனப் பார்த்ததற்காக இரண்டொருநாள் கழித்துச் சிறைக் கூடம் போனபோது,

"நாட்டிற் சிறந்த திருமலையா துங்க நாகரிகா
காட்டில் வனத்திற் றிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்னும் பசுங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடுதே"

என்று பாட, அரசன் அதைக் கேட்டு மகிழ்ந்து சிறையினின்றும் விடுத்துப் பெரும் பரிசுங் கொடுத்தனர்.

அதன் பின்பு, காயற்பட்டணத்தை யடைந்து சீதக்காதி மரக்காயரைப் புகழ்ந்து மிகவுயர்ந்த வைர மோதிர முதலிய அணிகலங்களைப் பரிசு பெற்றுத் திருச்செந்தூர் முருகக் கடவுளை வழிபட்டுப் போற்றி, வைத்தீச்சுவரன் கோயிலை யடைந்து தையல்நாயகி யம்மையையும் வைத்தீச்சுவரரையும் வழிபட்டுப் புள்ளிருக்குவேளூர்க் கலம்பகத்தைப் பாடிப் பெருமான் திருமுன்னர் அரங்கேற்றினார்.

சிலநாட் சென்றபின் துறவு பூண்டு தில்லையை யடைந்து அப் பதியிலேயே வாழ்க்கையைக் கழிக்கவேண்டு மென்னும் விருப்பத்தினால் அங்கு ஓர் மடம்கட்டி அதிலிருந்துகொண்டு திருக்கோயிலை யடைந்து தில்லைமன்றுளானை வணங்கும்பொழுது நாடோறும் திருவைந்தெழுத்துப் படியில் ஐந்து பொற் காசுக ளிருக்கப் பெற்ற காரணத்தால் படிக்காசுப் புலவரெனப் பெயர் வழங்கியது.

இவரது செய்யுட் டிறத்தைப் பற்றிப் பல பட்டடைச் சொக்கநாதப்புலவர்,

"மட்டாரும் தென்களந்தைப் படிக்காச னுரைத்ததமிழ்
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்த வேட்டைத்
தொட்டாலும் கைம்மணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும்
துய்ய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது
நளினந் தானே"

என்று புகழ்ந்திருக்கின்றனர். அன்றியும்,

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ செயங்கொண்டான்
விருத்த மென்னு
மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா வந்தாதிக்
கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக்
காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச லாதொருவர்
பகரொ ணாதே"

என்னுஞ் செய்யுள்களால் தெரிய வருகிறது.

பழமொழி விளக்க மென்னும் மறுபெயருடைய தண்டலை யார் சதகமும் செய்தவர் இவரே. இவர் ஏறக்குறைய இருநூற்று நாற்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்தவரெனத் தெரியவருகின் றது.

வ. சு.

# சடங்குகள்

[வ. சுப்பையாபிள்ளை]

சடங்குகள் நம்மக்களிடையே பலவாய்க் கிடக்கின்றன. ஒருவன் தாய்வயிற்றிலிருக்கிறபொழுது வளை காப்புச் சடங்கு நடைபெறுகிறது. பிறகு பிறந்தவுடன் பிறந்தநாட் சடங்கு ஏற்படுகிறது. பின்பு பேரிடல், படிக்கவைத்தல், பெண்பேசி உறுதி செய்தல், நாட்கால் நடல், மணம் நடத்தல் முதலிய சடங்குகள் முறையே ஒருவனுடைய வாழ்க்கையில் நடைபெறுகின்றன. இவை தவிர அவனுடைய தாய்தந்தையோர்க்கு ஆண்டுதோறும் சிராத்தம் (இறந்தநாட்கடன்) முதலிய சடங்குகள் ஏற்படுகின்றன. பெண்குழந்தையாயிருப்பின் பூப்புச் சடங்கு நடைபெறுகின்றது. இதுதவிர நோய்வாய்ப்பட்ட காலத்தில் களிப்புச் செய்தல், தகடுகட்டுதல், பொன்கொடுத்தல், திருப்பதிக்குக் குடை எடுப்பித்தல், முருகனுக்குப் பாற்குடக் காவடி எடுப்பித்தல் முதலியன ஏற்படுகின்றன. இவைநிற்க ஒருவன் இறந்தவுடன் பிணச்சடங்கு செய்தல் முதலியனவும் நடைபெறுகின்றன. ஆகவே ஒருவன் வாழ்க்கை எண்ணிறந்த சடங்குகளால் பிணிக்கப்பட்டிருக்கின்றது.

இனி, இச்சடங்குகள் வேண்டற்பாலனவா ? அல்லவா ? என்பதுபற்றிய ஆராய்ச்சி தற்காலத்தில் நிகழ்கின்றது. அங்ஙனம் ஆராய்ச்சி செய்து வருகிறவர்களில் ஒரு சிலர் "பண்டைத் தண்டமிழ் நூல்களில் சடங்குகளைப் பற்றிய குறிப்பே கிடையாது. தொல்காப்பியத்தைத் துருவித் துருவிப் பார்த்தும் அதன்கண் யாதொரு குறிப்புங் கிடைக்கவில்லை. தலைவனும் தலைவியும் முன்னரே ஒருவர்க்கொருவர் அன்பு காட்டியபின் தாய்தந்தையர் அதனைத் தெரிந்து மணத்தை முடித்துவைப்பது வழக்கம். ஆகலான் அதற்கு யாதொரு சடங்கும், அதனை நடத்துவதற்கு யாதொரு புரோகிதரும் வேண்டியதில்லை. இறந்துபோன உயிர் எங்குச் சென்றது? எப்படியிருக்கிறது? என்பன தெரியாதவரையில் பிணச்சடங்கு நடத்துவதும் பொருத்தமில்லாததேயாகு" மென்று கூறுவர்.

வேறுசிலர், "சடங்குகள் யாவும் தத்தம் மொழியிலேயே யாவரும் தெரியக்கூடிய முறையில் நடைபெறுவித்தல் வேண்டும். இப்போது பொருள் விளங்காத வடமொழியில் நடத்துவிப்பதை அறவே தொலைத்துவிடவேண்டும், சுமார்த்தப் பிராமணரை ஒழித்த ஏனைய குருக்கள் வடமொழி கற்றுத் தம்மைப் பெரியராக உயர்த்திக்கொண்டாலும் நாம் அவர்களை

ஒதுக்கிவிடாமல் அவர்கள் தமிழர்களே யெனவும், அவர்கள் கோயிற் சடங்குகளைத் தமிழிலேயே செய்யவேண்டுமெனவும், தமிழை நன்கு கற்கவேண்டுமெனவும் அவர்கட்கு அறிவுறுத்த வேண்டும்'' என்று கூறுவர்.

வேறு சிலர், "சடங்குகளே வேண்டாம். சடங்குசெய் விக்குந் தலைவர்களெல்லாம் தம்மைப் பெரியராகக் கருதி உடனுண்ண இசைகின்றார்களில்லையாகலான் அப்பேர்ப்பட்டவர்களைத் தலைவராக எங்ஙனங் கொள்வது? 'நீயும், இப்பெண்ணும் மணந்து பிள்ளைகளைப் பெறுக'' என்ற பொருளிலேயே ரிக்வேதத்தில் மணவினை மந்திரங் கூறப்பட்டிருக்கிறது. இப்பொருளைத் தமிழிலேயே சொன்னால் மந்திரமாகாதோ; நாலு வருணத்தார்க்கும் நாலுவகையான மந்திரங்களைக் கற்பித்து வைத்திருக்கின்றனர். வேதத்திலுள்ள மந்திரங்களைப் பிராமணர்க்கும், ஸ்மிருதிகளிலுள்ள மந்திரங்களை ஏனை வருணத்தார்களுக்கும் சொல்லுகின்றனர். நம்மவர்கள் யாதொரு பொருளையும் அறியாது சடங்குகளைச் செய்து வருகின்றனர். கோயிலிற் சென்று மணவினை நடத்துவதே சிறந்ததாகும். வடமொழி நூல்களிலுள்ள மந்திரங்களின் பொருளை எடுத்துத் தமிழ்ப்பாட்டாக்கி வெளியிட ஒருகழகமமைக்கவேண்டும். அக்கழகத்தார் வெளியிட்ட நூலை அறிஞர்கள் பார்வையிட்டுத் திருத்தங்கற்பித்தலும், பின்னர் அதனைச் செவ்வையான முறையில் பதித்து வெளியிடுதலும் வேண்டும். சடங்குகளில் அடிமைப்பட்டிருப்பது அரசியல் அடிமையினும் மிகக்கொடியது. இவ்வடிமைத்தனத்தினின்று நீங்குவோமாயின், அரசியல் அடிமையினின்றும் நீங்குதல் எளிது. ஐரோப்பியநாடுகளும் சில குருட்டுத்தனமான சடங்குகளிற் சிக்குண்டுழல்கின்றன. நாம் நமது அடிமைத்தனத்தை ஒழித்துவிடின் அடிமைத்தனமுடைய மற்றைநாடுகள் நமக்கு அடிமையாகுமென்பதில் தடையில்லை'' என்பர்.

வேறு சிலர், "சடங்கு காலங்களில் அன்புபற்றிவரும் பெரியோர்களில் ஒருவரைவைத்துச் சடங்குகளை முடித்துக் கொள்ளுதல் நன்று. அப்படியே எளிதான முறையில் பிரமசமாசத்தினரும், ஆரியசமாசத்தினரும் தமது சடங்குகளைச் செய்துகொள்ளுகின்றனர். பிராமணரை ஒழித்துவிட்டுக் குருக்களை வைப்பதால் பயனில்லை. தமது தாய்மொழியிலேயே சடங்குகளை எளிதான முறையில் பொருட்செலவு மிகுதியின்றி நடத்துதல் வேண்டும்'' என்பர்.

மற்றுஞ்சிலர் "கிரியை என்பது அவசியம்வேண்டும். தமிழிலேயே சடங்குமந்திரங்களும், இறைவனை வழிபடுதற்குரிய

மந்திரங்களும் எழுதப்படல் வேண்டும். அவற்றைக்கொண்டு கிரியை வேண்டுபவர் செய்துகொள்ளட்டும். கிரியை வேண்டா மென்பார் ஒன்றுமில்லாதிருப்பதைப் பற்றிக் குற்றமில்லை. கிரியையே வேண்டாமென்றால் மக்கள் இயல்புக்குக் கேடுசெய்வதாகவே முடியும்'' என்பர்.

இனி, என்சிற்றறிவிற் கெட்டியதைக் கூறத்துணிகின்றேன். நமக்குக் கிரியைகள் அவசியம் வேண்டும். கிரியைகளெல்லாம் கடவுணெறியோடு கூடியவை. ஆனால் நாமிப்போது அதனை உணர்வதில்லை. உணராததால் கிரியைகளை அறவே ஒழிப்பது நன்றாகாது. மற்று செயத் தகுவது எதுவெனின்? கடவுணெறி கலந்தது கிரியை என்ற உணர்ச்சியை நம் மக்கள் உள்ளத்தில் எழச் செய்வதே. மக்கள் எந்நேரமும் உலகபோகங்களிலேயே உழன்று திரிகின்றமையால் கடவுளை நினைக்கின்றார்களில்லை. அவரை நினைக்கும் பொருட்டே கிரியைகள் பல நம் பண்டைப் பெரியோர்களால் அமைக்கப்பட்டிருக்கின்றன. நம்முடைய நெருங்கிய உறவினரும், அன்புடைய நண்பர்களும் கிரியா காலங்களில் நம்மோடு உண்டு நமது நலன்களைக் கோருவதற்கே கிரியைகள் அமைந்திருக்கின்றன. கிரியா காலங்களிலே சில ஏழைகளுக்கு அன்னமிடும் சிறந்த அறத்தைப் பெறுகின்றோம். கல்விச்சாலை யமைத்தல், அறச்சாலை கட்டுவித்தல், ஏழைப்பிள்ளைகளுக்குப் பொருள்கொடுத்துக் கல்வி கற்பித்தல், நூல்நிலையம் அமைத்தல் முதலிய அறச் செயல்களைச் செல்வர்களிடம் நிகழ்த்துவது கிரியையேயாம். மனதைப் பண்படுத்தி இறைவனிடத்திற் பதியவைப்பது கிரியையே. ஒருவருடைய நலத்தை அவருடைய உறவினரும், நண்பரும் ஒருசேரக் கடவுளை வணங்கிக் கோரச் செய்வது கிரியையே. மக்கள் கூட்டுறவை வன்மை படுத்துவதுங் கிரியையே. ஒருவர் நலத்தைப் பலர் ஒரே நேரத்தில் கோருவார்களாயின் அது சித்தியாகும் என்று மேனாட்டு உளநூலாரும் கூறுகின்றனர். அப்படியே ஒருவருடைய கேட்டைப்பற்றிப் பலர் ஒரே நேரத்தில் நினைப்பார்களாயின் அவர் கேடுற்று வருந்துதல் வெளிப்படையே. ஆகலான் கடவுணெறியும், மக்களன்புநெறியும் கலந்த கிரியைகளை வேண்டாமென்று ஒதுக்குவது அறமாகாது.

ஆனால் நமது கிரியைகளைப் பொருள்தெரிந்து செய்தல் வேண்டும். நமது தாய்மொழியிலேயே பொருள்விளங்க அவற்றைச் செய்தல்வேண்டும். ஒவ்வொருவரும் அவரவருடைய வகுப்பிலுள்ள கற்றறிந்த பெரியோர்கள்வழியே செய்துகொள்ளவேண்டும். செல்வரும், வறிஞரும் அக்கிரியைகளை நடத்

தத்தக்க முறைகள் கற்பிக்கப்படவேண்டும். பெரும்பொருட் செலவிட்டுச் செல்வர் செய்யும் கிரியைகளை வறிஞர் அவ்வளவு பொருளில்லாமல் அவற்றைச்செய்யாது விட்டுவிடவுங் கூடாது; அல்லது கடன்வாங்கி அவற்றைச் செய்து துன்புறவுங்கூடாது. ஆகலான் கிரியைகளைப் பொருட்செலவின்றி யாவரும் எளிதில் நடத்திக்கொள்ளுமாறே அவை அமைக்கப்படல்வேண்டும். கிரியைக்கு வரும் உறவினரும் நண்பரும் தாம் வந்ததன் உண்மையையறிந்து கிரியை நடத்துவோர் நன்மைகளை நாடுவதிலேயே கருத்துடையராயிருத்தல் வேண்டும். திருமணத்தில் தாலிகட்டுகிற நேரத்தில் பரபரப்புடன் திருச்சங்கு ஒலிப்பிக்கச் செய்வதும், மேளதாளங்களை முழக்கச் செய்வதும், டம்மாரம் அடிப்பிக்கச்செய்வதும் எதற்காகவெனின், திருமணத்திற்கு வந்தோர் யாவரும் அதுவரை வேறு நினைவிலும், பேச்சிலும், உறக்கத்திலுமிருந்தாலும் அந்நேரத்திலாவது அவர்களுடைய மனதையெல்லாம் இழுத்து ஒருவழிப்படுத்தி அவர்கள் மணமக்களின் பூவும் மணமும் போன்ற பொருந்திய இனிய வாழ்க்கையையும், நீடுவாழ்வையும், நன்மக்கட் பேறு அடைதலையும், மற்றும் பேறுகளையுங் கோரி இறைவனை வழுத்துமாறு தூண்டுதற்காகவே.

பிறமொழிகளில் பிறசமயத்தலைவர்களால் பொருள்விளங்காமல் செய்யப்படுங் கிரியைகளை அறவே ஒழித்துவிடல்வேண்டும். பண்டைத் தமிழ் நாட்டில் கிரியை இருந்திருக்கிறதென்பதற்கு அகநானூறு முதலிய நூல்கள் சான்றுகூறும். ஆகலான் கடவுணெறியோடும், நம்நெருங்கிய சுற்றத்தார் முதலியோர் அன்பு மிக்க வாழ்த்துரையோடும், நமது அறச்செயலோடும் நம்முடைய கிரியைகளை நடத்தி அவற்றானும் பயனை எய்துவோமாக.

---

# திருக்கோயில்களில் அரிவையர் ஆடல்

[வ. சுப்பையா பிள்ளை]

இது பண்டுதொட்டு நடைபெற்று வந்திருக்கின்றதா? எதன் பொருட்டு அது நிலைபெற்றது? அல்லது இடைக்காலத்தில் ஏற்பட்டதா? இவற்றை யாராய வேண்டுவது இன்றியமையாததே யாகும். அரிவையர் ஆடல் பண்டு தொட்டுத் தமிழ் நாட்டில் நடைபெற்று வந்திருக்கிற தென்பதற்கும், அதனை யாவரும் போற்றி வந்திருக்கின்றன ரென்பதற்கும் பரதநூல்,

சிலப்பதிகாரம் போன்ற பழந்தமிழ் நூல்கள் முதலியன சான்று கூறுகின்றன. ஆயினும் திருக்கோயில்களில் அஃதேற்பட்ட தன் உட்கருத்து ஒருவாறு ஆராய்தற்குரியதே.

முதற்கண் திருக்கோயில் வழிபாட்டையும் அதற்கு அறிஞர்களால் ஏற்படுத்தப்பட்ட முறைகளையும் ஆராய்ந்து பின் அரிவையர் ஆடலை எடுத்துக் கொள்ளலாம்.

திருக்கோயில் வழிபாடு மக்கள் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாது வேண்டற்பாலதேயாகும். எப்போதும் உலகங்களிலும் உலகத்துப் பொருள்களிலுமே கருத்தைச் செலுத்தி உழன்று கொண்டிருப்பவர்கள் கடவுளை நினைத்தற்குத் திருக்கோயில்களேயல்லாமல் பிறிதின்று. திருக்கோயில் வழிபாடே அகத்தூய்மை, புறத்தூய்மை இரண்டையும் ஒருங்கு அளிப்பதாம். ஐந்துறுப்பு, எட்டுறுப்பு வணக்கங்களும், திருவலம் வருதல்களும், மற்றுஞ் சில திருப்பணிகளும் உடல் வலிமையைத் தருகின்றன. வில்வம், துளசி முதலிய பச்சிலைகளை உட்கொள்வதால் பிணி நீங்குகின்றது. இன்னிசை மிக்க பாடல்களையும் மேள வாத்தியங்களையும் கேட்பதால் மனம் ஒருவழி நிற்றல், அவா அடக்கம் முதலிய சீரிய தன்மைகளும், நோன்பு, ஈகை, மந்திர உருவேற்றல் முதலியவற்றால் மனவுறுதியும், பிறர்நலம், நாடும் பெருந்தகைமையும் ஏற்படுகின்றன. ஆகவே நமது பண்டைப் பெரியோர்கள் பல நன்மைகள் விளைவிக்கக்கூடியதொரு காரியத்தையே நாடிச்செய்து வந்திருக்கின்றார்கள். ஆதலினாற்றான் திருமேனி வழிபாட்டிற்குரிய திருக்கோயில்களைக் கட்டுவித்து அவற்றின்கண் மக்கட்குப் பலவகை நன்மைகள் விளையக் கூடிய முறைகளை ஆண்டுக் கற்பித்திருக்கின்றனர். இது நிற்க,

பரதநூலிற் குரியார் பெண்களேயாதலால் அவர்களைக் கொண்டு நடனம் முதலிய பணிகளைச் செய்வித்திருக்கின்றனர். நல்லொழுக்கத்தையும், நற்குணத்தையும் வளர்ப்பதில் முக்கிய கருத்துடைய பெரியோர் பொய்ப் பொருள்பற்றிப் போகந் துய்க்கும் காமக் கிழத்தியர்களைத் திருக்கோயிலிலே அடியார் குழாத்திலே நடிக்கும்படி செய்திருப்பாரா? என்பது ஆராயற்பாலதே. பிறசமயங்களில் கன்னியர் மாடங்கள் அமைந்திருப்பது போல அன்பு மிகுதியால் இறைவனையே தலைவனாகக் கொண்டு அவனுக்குத் திருப்பணி செய்வதிலேயே வாணாளைப் போக்கக் கருதி மணஞ்செய்து கொள்ளாத பெண்மக்கள் சிலர் இருந்திருக்கின்றார்கள். அவர்களே இறைவனுக்குத் திருத்தொண்டு செய்யக் கருதிப் பரதநூலைப் பயின்று நாட்டியம் கற்

திருக்கின்றார்கள். ஆதலினாற்றான் அவர்கட்குத் திருக்கோயில் களிலே பொட்டுக்கட்டுதல் முதலிய பெருமைகள் ஏற்பட்டிருக் கின்றன. அவர்கள் எப்படி இறைவனைத் தலைவனாகவும், தங்க ளைத் தலைவியர்களாகவும் வைத்து நடிக்கின்றார்களோ அப் படியே நாமும் அவர்களுடைய ஆடலைக்கண்டு ஆண்டவனைத் தலைவனாகவும் நம்மைத் தலைவியர்களாகவும் வைத்துத் திருவரு ளைப் பெறுதல் வேண்டும். இதனையே கோவை நூல்கள் கூறு கின்றன. மேலும் பத்தி செறிந்த அவர்களையும், அன்பு நிறைந்த அவர்கள் ஆடல்களையுங் கண்டாலுமே காம இச்சை யொழிந்து பேரின்பமே பெருகி வளரும். அவர்களைப் பெற்ற தாய் போலவே கருதி வழிபடல் வேண்டும். இத்தகைய அரிவையர் களுடைய ஆடல் பாடல்கள் பண்டு தொட்டு ஏற்பட்டு நடை பெற்று வந்திருக்கின்றன. மற்றப்படி எந்நேரமும் காம இச்சை யில் அலமந்துழலும் இக்காலத்திய பரத்தையர்களுடைய ஆடல் பாடல் முதலிய திருப்பணிகள் பரங்கருணைத் தடங்கட லாகிய ஆண்டவனுக்கு ஒருபோதும் ஏற்புடைத்தாகா.

இக்காலத்திய பரத்தையர்களிற் பெரும்பாலார் கடவுட் பத்திசிறிதுமின்றித் தங்களை விலைப்படுத்தும்பொருட்டே அழகு படுத்திக்கொண்டு திருக்கோயில்களுக்கு நல்விழாப்போது வரு கின்றார்கள். இவர்கள் ஓர் ஊரிற் கோயிற்பணியும் மற்றோரூரில் இன்ப வாழ்க்கையும் நிகழ்த்துகின்றனர். திருக்கோயில் விழாக் களில் பெருமான் வீதிவலம் வரும்போது அவரை வணங்கச் சென்ற பலர்களிடம் "இன்று, பெருமான் என்ன வாகனத்தில் வீற்றிருந்தார்" என்று கேட்டால் அவர்கள் ஒன்றுஞ்சொல்லத் தெரியாமல் விழிக்கப் பார்த்திருக்கின்றேன். ஏனெனில் அவர் கள் சுவாமிக்கு முன் அழகு படுத்திச் செல்லும் பரத்தையர் களைக் கண்ட வளவிலே நின்று விட்டவர்கள். இக் காலத்தில் அரிவையர் ஆடல் திருக்கோயில் வழிபாட்டிற்குத் திங்கிழைப்ப தன்றி நன்மை பயக்கிறதன்றென்பதை ஒருவரு மறுப்பாரிலர்.

நிற்க, அக்காலத்தில் கன்னியர்கள் காமவிச்சை யொழிந்து எந்நேரமும் திருக்கோயில் திருப்பணியிலேயே தமது வாழு ளைக் கழித்து வந்தனர். அங்ஙனந் திருப்பணி நிகழ்த்துகையில் மணஞ் செய்துகொள்ளக் கருதின் தங்களைப் போன்ற ஒத்த சிவவடிவும் சிவசிந்தனையுமுடைய ஆண்மக்களையே மணந்து கன்னிமாடத்தி னின்றும் நீங்குவார்கள். சங்கிலியார் தம்மினும் மிக்க சிவ சிந்தனையுடைய சுந்தரமூர்த்தி நாயனாரைத் திருவரு ளிசைவோடு மணந்தமை யாவருங் கேட்டறிந்ததே.

"எங் கொங்கை நின்னன்ப ரல்லார் தோள் சேரற்க"

என்ற திருவாசகத் தேமொழியே அக்காலத்துக் கன்னிமார்களின் அரிய இயல்பினை நன்கு விளக்கும். ஆனால் இக்காலத்து அறிவையர்களோ மணமுஞ் செய்யாது, கோயிற் திருப்பணியிலும் அன்புடன் செல்லாது பொருள் கொடுப்பார் யாராயினும், எத்தன்மையா ராயினும், எம்மதத்தாராயினும் அவர்பாலெல்லாஞ் சென்று சேருகின்றனர். இவர்களுடைய ஆடல் பாடல் முதலிய பணிகள் ஒருபோதும் வேண்டப்படா. திலகவதியாரைப் போன்ற பெண்மணிகளன்றோ திருக்கோயிற் திருப்பணிக்குரியராவர்

திருக் கோயில்களிலும், பொழில்களிலும் அரிவையர் ஆடல் நிகழ்ந்திருக்கின்றது என்பது தேவார திருவாசகங்களால் உணரக் கிடக்கின்றது. திருக் கோயில்களுக்கு நிலம், பொருள், பசு முதலியன கொடுத்து வருவதுபோல அக் காலத்தில் சில குடும்பங்களி லிருந்து சிவப்பணி செவ்விதே நடைபெறுதற் பொருட்டு, இறைவனிடத்துள்ள ஆரா அன்பினால் ஒரு குடும்பத்தில் சில பெண்களிருப்பின் ஒரு பெண்ணைத் திருக்கோயிலுக்கென விட்டு, முத்திரை தரிக்கச் செய்வது வழக்கம். சில ஆண்டுகளுக்கு முன்பு வரையும் இவ் வழக்கம் சில பதிகளில் நடைபெற்று வந்திருக்கின்றது. ஆதலினாற்றான் சில ஊர்களில் காமக் கிழத்தியர் மிகுதியா யிருக்கின்றனர் போலும்!

இப்போது அரிவையர் ஆடல்களினால் திருமேனி வழிபாட்டிற்குக் கேடு விளைகின்றதேயல்லாமல் நன்மையுண்டாமாறில்லை. ஆகலான் அவற்றை நிறுத்தி விடுவதால் யாதொரு தீங்குமில்லை. "மேலுலக மில்லெனினும் ஈதலே நன்று" என்றாற்போல இவ்வாடல்களைத் தடுப்பதால் பெருங்கேடு விளையும் என்று கூறுவாராயினும் அதனைப் பொருட் படுத்தாமல் நன்மை நாடிச் செய்வதே நல்லோர்க் கழகாம்.

"செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்"

---

# மாணவர்களுக்கு ஓர் அறிவுரை

[வ. சுப்பையா பிள்ளை]

சிறுவர்காள்!

உங்கள் தாய் தந்தையர்கள் தாம் மிக்க உழைப்பால் தேடிய பொருளை உங்கள் பொருட்டுச் செலவு செய்கின்றார்கள். எதற்காக வென்று கேட்பீர்களாயின்,

"தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்ற பொய்யாமொழிப்படி நீங்கள் திருந்திய அறிவைப் பெற்று அறிஞரது அவைகளில் உங்களுடைய கல்வியறிவொழுக்கங்களான் சிறந்த மதிப்பினையடைய வேண்டுவதற்காக வல்லவா? உங்களிடத்தில் கல்வி நிரம்பிய அறிவைவிட, அறிவு நிரம்பிய ஒழுக்கமே சிறப்பாக விரும்பப் படுவது. கல்விச் சிறப்பானது ஒழுக்கமில்லாவிடில் யாதொரு பயனையுங் கொடுக்க வல்லதன்று. எம். ஏ., பட்டம் பெற்ற புலவரும், யாழ்வாசிப்பிற் சிறந்த புலவரும், கழைக் கூத்திற் றேர்ந்தார் ஒருவரும் ஒழுக்கத்தைக் கருதாவிடத்தில் ஒரே படியிலுள்ளவ ராகவே கருதப்படுவர்; மற்றைய தேர்ச்சிகளைவிட நூல் கற்பதிற் சிறப்பு ஏற்பட்டதற்குக் காரணம் என்னையோ வெனின், நன்று கூறினை! மற்றவைகள் பருப்பொருட் டன்மையனவாய் ஐம்புலன் கட்கு மட்டும் இன்பந் தருவனவாய்க் கழிகின்றன. நூல்களோ புலனின்பம் தருவதோடு அமையாமல் உள்ளத்தையுஞ் சீர்ப்படுத்து முகத்தான் எழுமையும் தொடர்ந்து உறுதி பயக்கின்றன.

"ஒருமையிற் றான்கற்ற கல்வி யொருவற்கு
எழுமையு மேமாப் புடைத்து"

என்ற வள்ளுவர் வாய்மொழி இங்கு சிந்திக்கற்பாலது.

இத்தகைய சீரிய கல்வியைக் கற்கத் தலைப்பட்ட நீங்கள் கல்விச் சாலைகளில் செய்யத் தக்கவை யாவை? தமக்கு விதிக்கப்பட்ட பாடங்களை முறையே கற்று ஒப்புவித்து உங்கள் ஆசிரியர்களுடைய விருப்பத்தையும், உங்கள் தோழர்களுக்குள்ளே நன்மதிப்பையும் பெற வேண்டும். உங்களுடைய ஒழிவு நேரங்களில் நண்பர்களுடன் நல்ல உரையாடல்களைச் செய்து சொல்வன்மையைப் பெறுதல் வேண்டும். யாங்சாயினும் அறிஞர்களால் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுமாயின் அங்கே சென்று அமைதியுட னிருந்து அவற்றை மிக நுணுக்கமாகக் கேட்டு அறிவிற் பதித்துக்கொள்ளுதல் வேண்டும். வேண்டுமாயின் குறிப்புக்கள் எழுதிக் கொண்டு பின்னர் விரிவாக எழுதப் பழகலாம்.

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை"

என்பதும்,

'கேள்வி முயல்'

என்பதும்,

'கற்றலிற் கேட்டலே நன்று'

என்பதும் கருதற்பாலன. பல நூல்களையும் நுணுகியாராயும் திறமை ஒவ்வொருவருக்கும் அமைதல் அருமை. ஒருவர் ஒரு நூலிலும், மற்றொருவர் மற்றொரு நூலிலும் புலமையுடையரா யிருப்பர். ஒரே நூலை இருவர் படித்தும் அதனைப்பற்றிப் பேசப் புகுவார்களாயின் இருவர்க்கும் கருத்து வேறுபாடு புலனாதல் தெளிவு. ஆகலான் ஒருவர் நமக்குத் தெரிந்த பொருளைப்பற்றியோ, தெரியாத பொருளைப்பற்றியோ பேசினாலும் நாம் அவை யிரண்டினையுங் கேட்க வேண்டுவது இன்றியமையாததாகும். சொற்பொழிவுகளைக் கேட்கக் கேட்கத்தான் பேசும் வன்மை ஏற்படும்.

அது நிற்க ஒழிவு நேரங்களில் உங்கள் தோழர்களோடு உடம்பு உரமுறத்தக்க விளையாடல்களிற் செல்ல வேண்டும். தாயம், சீட்டு முதலிய சூதாட்டங்களில் ஒருபோதும் செல்லுதல் கூடாது. பந்தடித்தல், டென்னிஸ், ஓட்டம், கிளித்தட்டு, முதலிய விளையாட்டுக்களையே கொள்ளுதல் வேண்டும்.

இவற்றை விட்டு அயலான் தோப்புக்களிற் சென்று மாங்காய், தேங்காய் முதலியவற்றை அடித்து வீழ்த்தும் விளையாட்டு ஒரு போதுங் கூடாது. அது விளையாட்டாகாது. அது திருடு. அப்பேர்ப்பட்ட பையனை யாராவது விரும்புவார்களா? உங்களுக் கிடையில் அவனிருப்பின் அவனோடு பழகுவீர்களா? அவனைத் தோட்டக்காரன் பிடித்து, குடுமியைப் பற்றி உதைத்து மேஜிஸ்டிரேட் முன்பு சேர்த்து அவன் தண்டிக்கப் படுவானாவான். அப்போது, அவர்களுடைய பெற்றோர் பட்ட பாடும்போய் அவன் வாழ்நாளும் பயனற்றுப போமன்றோ.

மேற் குறித்த தண்டனைக்குத் தப்பிக் கொள்வரேனும் பிறர்பொருளைப் பறிக்குந் தீச்செயலாகிய களவு அவனைப் பற்றிக்கொள்ளும். நுணுக்கமான தீப் பொறியானது பெரியதோர் வைக்கோற் படப்பில் மறைவாக இருந்து காற்றின் உதவி வாய்த்தபொழுது கனிந்து பற்றிச் சாம்ப ராக்குதல்போல் இச் சிறு களவு அவர்களுடைய பிற்காலத்தில் ஏற்ற சமயம் வாய்த்த பொழுது அவர்களைப் பாழாக்கி விடும். சிறிய துரும்புக்கும் அதற்குத் தக்க நிழல் அமைந் திருப்பதுபோல நல்வினை தீவினை யிரண்டும் மிகச் சிறியனவா யிருப்பினும் அந்த மட்டுக்கும் அவற்றின்பயனைக் காட்டாமற் போகா. ஆதலான் அன்புடைய இளைஞர்களே! உங்களுக்கு உரிமை யில்லாத பொருளின்

மேல் நாட்டம் வைக்காதீர்கள். அது காதற்ற ஊசியாயினும் உடையவனுடைய விருப்பமின்றி அதனைத் தொடாதீர்கள்.

பிறனொருவன் பொருளைக் களவாடலாமென்று உள்ளத்தால் நினைத்தலே தீதென்றும், களவு செய்யப்பட்ட பொருள் ஒருவனுக்குப் பயன் தருவதுபோற் றோன்றி ஒழிந்து விடுமென்றும் கூறிய வள்ளுவர் வண்மொழிகள் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்"

"களவினா லாகிய ஆக்க மளவிறந்
தாவது போலக் கெடும்."

ஒரு நன்னடையிற் சிறந்த பையனுடைய கதையைக் கேளுங்கள்.

ஓர் சிறிய பையன் ஓர் தோட்டத்தி னருகே சென்றான். அத் தோட்டத்தில் நறுமணமிக்க மலர்கள் இருந்தன. அவன் நின்ற இடத்திலிருந்து வேலியினூடே கையை நீட்டி வேண்டிய மலர்களைப் பறித்துக் கொள்ளலாம். அவ்வமயம் தோட்டத்தினும் புறத்திலும் அவனைப் பார்க்கக்கூடிய நிலையில் ஒருவருமில்லை. எனினும் கடவுள் ஒருவர் இருக்கிறார்; அவர் நமது செயல்களை எப்போதும் பார்த்துக் கொண்டே யிருக்கின்றார் என்று தனது தந்தையார் சொல்லிய அறிவுரை அவன் நினைவிற்கு வந்தது. ஆகலான் அவன் உடனே தோட்டத்திற்குட் சென்று ஓர் கிழவனைக் கண்டு அவனிடம் சில மலர்களைக் கேட்டுப் பெற்றுக் கொண்டான். நேரான வழியிற் சென்றதனால் தான் கருதியதை நிறைவேற்றிக் கொண்டான். அத் தோட்டக்காரனுடைய நன்மதிப்பையும் பெற்றான். திருட்டுத் தொழிலான் ஏற்படும் அச்சத்தையுந் தவிர்ந்து மனவமைதியுற்று மகிழ்வடைந்தான். அதுபோல நீங்களும் நல்லொழுக்க முடையவராக வேண்டும். ஒழுக்கத்தை உயிரினுஞ் சிறப்பாகக் கருதுதல் வேண்டும். நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும் என்பதையும தீயொழுக்கம் என்றும் இடும்பை தருமென்பதையும் அறிந்து தீ யொழுக்கம் கடிந்து நல்லொழுக்கத்திற் றலைசிறந்து விளங்க வேண்டும்.

"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல்எனனுஞ் சொல்"

என்ற பொய்யிற்புலவர் புகழுரையின்படி இத்தகைய நல்ல மகனைப் பெறுகிறதற்கு இவனுடைய தந்தை என்ன தவம் செய்தானோ? என்று யாவரும் எண்ணத்தக்க நல்லொழுக்கம் நிரம்பிய புகழுடைச் செல்வராக நீங்கள் விளங்க வேண்டும்.

---

# இராமகிருஷ்ணபரமஹம்சரின் அருண்மொழிகள்

[M. P. S. வேலாயுதம் பிள்ளை]

1. உண்மையான அறிவுடன் விளங்குகிறவனே மனிதன்; மற்றவர்கள் பெயரளவுக்குத்தான்.

2. சமூக சீர்திருத்தங்களைப் பற்றியா பேசுகிறாய்? நீ கடவுளைக் கண்டறிந்த பின் அவ்வாறு செய்யலாம். பூர்வகால முனிவர்கள், கடவுளையறிய முதலில் உலகப்பற்றைத் துறந்தார்கள். அவசியமானது இது தான். மற்றவைகளெல்லாம உன்னை வந்து சேரும், முதலில் கடவுளைப்பார். பின்னர் மற்றவை யெல்லாம்.

3. ஞானி யொருவனும், ஓர் பக்தனும் காட்டு வழியே செல்லுகையில், தூரத்தில் ஒரு புலி வருவதைக் கண்டார்கள். 'நாம் பயந்து ஓட வேண்டாம். எல்லாம்வல்ல கடவுள் நம்மைக் காப்பாற்றுவார்" என்று ஞானி சொன்னார். இதைக் கேட்ட பக்தன், "இல்லை சோதர! நாம் ஓடி விடுவோம். நம் முயற்சியால் ஆவனவற்றிற்குக் கடவுளைத் தொந்தரவு செய்வானேன்" என்றான்.

4. கடவுளுடைய அருள் ஒருவனுக்கு ஏற்படும்போது, அவனவன் தன் தவறுகளை உணர்ந்து கொள்வான். இதனை யறிந்த நீ சண்டையிடாதே.

5. சூரியன் உதயமாகு முன் பல பலவென்று விடிவது போன்று கடவுள் அருள் ஏற்படு முன்னர், நெஞ்சங் கரைகின்றது.

6. "இவை யெல்லாம் நான்-இவை யெல்லாம் நீ-நீயே தலைவன்; நான் உனது ஊழியன் - என்றவற்றில் ஒன்றை எவன் அறிகிறானோ அவன் உயர் நிலையடைகிறான்.

7. பக்தனுக்கு ஒரேவழி கடவுளிடம் தன்னை ஒப்புவித்து விடுவதே.

8. ஜீவனானது என்றைக்கு "நானல்ல, நானல்ல, ஆனால் நீயே, ஓ கடவுளே, நீயே தலைவன், நான் உனது ஊழியனே" என்று சொல்லுகிறதோ, அன்றுதான் துன்பத்தின் முடிவு. விடுதலை.

9. அறிவுள்ளவனே இவ்வுலகத்தில் பத்திரமாய் வாழ முடியும். இத்துடன் பற்றில்லாமையும், கடவுளிடம் அளவற்ற பக்தியும்வேண்டும்.

10. கடவுளை நெஞ்சங்கரைய வணங்கு, மலையத்தனை பஞ்சும் ஒரு சுடர் நெருப்புப்பற்றினவுடனே மறைந்து விடுவதுபோல, உன் பல ஹீனங்களெல்லாம் மறைந்து விடும்.

# மக்கட்பேறு

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே"

(புறம்—கஅஅ)



இஃது அறிவுடை நம்பி என்னும் பழந்தமிழ்ப் புலவர் பாடியது. இதன்கண் ஆசிரியர் தூய செந்தமிழ்ச் சொற்களை அணிபெற அமைத்திருப்பது உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுந் தகையது.

(இதன் பொருள்) ஒருவர் பெறுதற்கரிய செல்வ மனைத்தையும் பெற்றுப் பலரோடு கூடவுண்ணும் பெரும் பொருளை யுடையாராயினும் குறுகுறுவென நடந்துசென்று சிறிய கையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனை எடுத்துத் தரையிலே இட்டும், கூடப் பிசைந்து தோண்டியும், வாயாற் கவ்வியும், கையால் துழாவியும், செய்யுடைய சோற்றை உடம்பின்கட்படச் சிதறியும் இங்ஙனம் அறிவை இன்பத்தான் மயக்கும் மக்களை இல்லாதார்க்கு இவ்வுலகில் தமது வாழ்க்கையில் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை.

அடியிற்காணும் பாக்களும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசிற்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்" (நளவெண்பா)

"பிள்ளை யில்லாச் செல்வம் கள்ளியிற்
சோறே போலப் பேரே யன்றி
வேறே யென்பயன் விளக்கும்" (மனோன்மணீயம்)

"அமிழ்தினு மாற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

"மக்கள்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

"குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்" (குறள்)

---

# உவகைச் சிறுமொழி

[த. செங்கல்வராய பிள்ளை B. A.]

1. தனதுளத்தில் மன்னிய நடராசனை யன்றிப் பிறனொருவனை 'இறக்கினும் மணப்பதற் கிசையேன்' என்று உறுதி கொண்டனள் அரசிளங்குமரியின் பெறற்கருந் தோழி வாணியென்பாள்; அவள் தந்தையோவெனின் கொள்கைக்கு நேர்மாறாக அமைச்சன் குடிலன் மகனுக்கு மணநேரக் கருதி அரசவை ஏகி வழுதியை நோக்கித் தான் குறித்த மகனை மணப்பதற்குத் தன் மகளை இசைவிக்குமாறு ஆட்சி செலுத்த வேண்டினான். ஆங்கு அதைக் கண்டிருந்த நாராயணனெனு மொரு நன்மகன் வாணியின் நிலைக் கிரங்கி—

"பாதகன் கிழவன் பணத்திற் காக
ஏதுஞ் செய்வன். இறைவனோ அறியான்.
ஓதுவங் குறிப்பாய். உணரி லுணர்க."

என்று தனக்குள் சொல்லிக் கொண்டு, பின்பு அரசனை நோக்கிப் பின்வரும் வெண்பாவைப் பாடினான்.

"மாற்றலர்த மங்கையர்க்கு மங்கல நாணங்கவிழ
வேற்றிய நாண்விற்பூட்டு மேந்தலே—சோற்றதற்காய்த்
தன்மகவை விற்றவரிச் சந்திரனு முன்னவையி
லென்மகிமை யுள்ளா னினி."

அரசன்: "தனிமொழி யென்னே?"

நாராய "சற்றும் பிசகில்ல
நீட்டல் விகாரமாய் நினையினு மமையும்."

அரசன்: "காட்டுவ தெல்லாம் விகாரமே. காணுய்
கிழவரி னழுகை"

நாராய: "சிலவருடந்தான்.
நெடு நாணிற்கு மிவையவ ரழுகை" (மனோன்மணீயம்)

2. சென்னையில் 'அமபட்ட வாராவதி' என்றோரிட மிருக்கிறது. புதிதாய் சென்னைக்குச் செல்வோர் இதன் பொருளறியாது மயங்கு கின்றனர். பண்டிதராயினர் 'அழகிய பட்டர்கள் உறையிடத்தைச் சார்ந்த பாலம்' என்றும், பாமரர்கள் 'நாவிதர்க ளிருக்கையாற் போந்த பெயர்' என்றும் ஐயுறுவர். உண்மையில் அம்பட்டர்களுக்கும் இப் பாலத்துக்கும் தொடர்பேதேனு முண்டோவெனின் ஒன்றுமில்லை.

சென்னை மாகாண அரசப் பிரதிநிதியாயிருந்த வில்லிங்டன்துரை முதலியோர் பெயர்களை எற்று அவர்கள் பெயர்களை நினைவூட்டிக் கொண்டிருக்கும் பாலங்கள் பலவற்றில் இதுவு மொன்று: சென்ற நூற்றாண்டின் பிற் பகுதியில் சென்னை நகர பரிபாலன சபைத் தலைவராகவும் அச் சபையைச் சார்ந்த கண்காணிப்பாளருமா யிருந்த ஹேமில்டன் (Hamilton) என்பவர் பெயரைக் கொண்டு 'ஹேமில்டன் வாராவதி' யாகி, அஃதே நாளடைவில் 'அம்பட்டன் வாராவதி' யெனத் திரிந்து அத்தொடர் மொழிகட்கு நேராக இப்பொழுது ஆங்கிலத்தில் Barber's Bridge' என வழங்கலாயிற்று.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிடும் அகராதியில், 'குப்பை மேனி'யை 'Rubbish Plant' என மொழிபெயர்த்ததும் இவ்வாறு தான் போலும்!

---

## மயிர் என்னும் சொற்பேர்

[சிற்றம்பலவன்]

## மயிரே நீ தமிழன்றோ?

'மயிர் என்னும் சொல் தமிழன்று. வடமொழியில் உலக வழக்கில் மட்டும் வழங்கிய சமசரு என்னும் சொல்லின் திரிபாகும். நூல் ஆட்சியில் இல்லை' என்று மயிரை முதலாக வைத்துச் சில சொற்களைக் காட்டிச்(தமிழின்உற்பத்தி) சொல்லிப்போந்தனர் அறிஞர் ஆர்.சாமிநாதய்யர்.

• • •

எடுத்துக்காட்டாகத் தாம் குறித்த சொற்களுள் மயிரை முதலாக வைத்ததில் ஒருபொருளிருக்கிறது. உடலுறுப்புக்களிலே தலையையே தலைமைப் படுத்துவது வழக்கு; ஆனால் தலைக்குத் தலைமையி லிருப்பதும் தலைக்கணியாயிருப்பதும் மயிரன்றோ !

* * *

ச்மசுரு என்ற சொல்லில் முதலெழுத்து கெட்டால் மசுரு என்றாகும். நல்ல வேளையாய்த் தமிழர் 'மசுரு' என்று திரித்துக்கொண்டனர் என்று சொல்லாத அவருடைய பெருந் தகைமைக்குத் தமிழர் நன்றி காட்டவேண்டும்.

* * *

ச்மசுரு என்ற சொல் ஆரியர்களிடத்து உலக வழக்கில்தான் ஆதியில் இருந்தது என்றார். மயிர் என்ற சொல் தமிழரிடத்து உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் இன்றும் இருந்து வருகின்றது. மயிர் என்ற அதன் வேர் இல்லை. வேர் இன்றிய செடியும் உள்ளது போலும் !

* * *

அப்படியன்று, ஆரியருடைய சொற்கள் இறந்து படுந்தன்மையன என்பதையும் தமிழருடைய சொல் என்றும் இருந்துவரும் தன்மையது என்பதையும் விளக்குதற்கு இப்படிச் சொல்லினர் போலும். அப்படியாயின் தமிழர் இன்னொரு முறையும் நன்றி காட்டக் கடப்பாடுடையர்.

* * *

'ச்மசுரு', 'மயிர்' என்ற சொற்களில் எது இனிமை பயக்கின்றது என்பது தெளிவாம். எனவே தமிழர் இனிய மொழியுடையவர் என்பதை விளக்கத்தான் கூறினர் போலும் என்றெண்ணுகிறேன்.

* * *

'ச்மசுரு' என்ற சொல்லை ஆரியர் வழங்கிவந்த காலத்திலேயே தமிழர் 'மயிர்' என்ற இனிய சொல்லை ஆண்டு வந்ததாகக் காண்கின்றமையின் அழகும் இனிமையும் அறிந்துவைத்த அறிவுடையர் தமிழர் என்பதைக் கூறவே வந்தவர்போலும் என்றெண்ணுகிறேன்.

* * *

இவற்றாலெல்லாம், இவர் தமிழ் மொழியைக் குறைகாண வந்தவரன்று. தமிழ் மொழியின் ஏற்றத்தையும் தொன்மையையும் விளக்கவந்தவராகவே அறிகின்றோம். ஆகையினால் மற்றுமொருமுறை தமிழர் இவருக்கு நன்றி காட்டவேண்டும் !

* * *

தம் இனத்திலேயேயுள்ள குறையைத் தாமே வெளிப்படக் கூறுவது அழகாகுமா? ஆயினும், மறைபொருளாகவாவது குற்றங்கடிய வேண்டுவது அறிவுடையோர்க்கமைந்த செயலல்லவா? ஆனால் இவர் இனத்தவராகிய ஆரியர் இவரைத் தூற்றாமல்விடார், ஆரியர் தூற்றினும் தூற்றுக; தமிழர் இவரை வாழ்த்துவாராக.

* * *

இவரது முன்னோர் அறிவுடையவர்களே ! எதனாலென்றால், இனிமையும் அழகும் பயவாத ச்மசுரு என்னுமொழியை நூலாட்சியில் கொள்ளாது நீக்கி வைத்ததோடு வழக்காட்சியிலும் தொடர்ந்து கொள்ளாமல் ஒழித்தாரன்றோ?

முன்னோர் அறிவுடையராகப் பின்னோரும் அறிவுடையராகவே யன்றோ காணவேண்டும்? அப்படியாயின் முன்னோர் ஒழித்ததை இவர் இழுத்து வெளியே கொட்டியது அறிவுடைமையாமா? எனின், ஏதோ கருத்திருக்க வேண்டும்.

* * *

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

பகுத்தறிவற்ற மானும் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாதாக, தமது சொல்லாகிய மயிரைப் பிறர் பறித்துக் கொள்ள இழந்து, வழி வழி வாழ்ந்து வருகின்றார்களே என்ற சினந்தான் போலும்!

* * *

இது தமிழ் மறைதானே, தமிழர் மறைதானே என்று பாராட்டாது விட்டிருக்கலாம். சினம் எல்லாச் சிறுமைக்கும் வித்தன்றோ?

* * *

இன்னும் இதைப்பற்றி மிகுதியும் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்க எண்ணவில்லை, முடிவாக ஒன்று சொல்லி முடிக்கிறேன். உலகவழக்கிலே 'மடி பிடித்துச் சண்டை செய்தான்' 'மயிர் பிடித்துச் சண்டை செய்தான்' எனப்படுவது இயல்பாகலின் இவர் மயிர் பிடித்தார் போலும்!

## சமயவுணர்ச்சி

[M. P. S. வேலாயுதம் பிள்ளை]

நமது வாழ்நாள் ஓர் போர்க்களத்தை யொத்ததாகும். ஒவ்வொரு படியிலும் நாம் முரணான தடைகளை எதிர்ப்படுகிறோம். வறுமை நோய், அசௌகரியமான நிலைமைகள், துன்பமான அனுபவங்கள், திடுக்கிடத்தக்க மனோ நிலைகள் ஆதியவற்றுடன் நாம் போராட வேண்டியிருக்கிறது. ஒரு சமயம் மகிழ்ச்சியாலும், உற்சாகத்தாலும் நம்மை மறந்திருக்கிறோம். பிறிதொரு சமயம் துன்பக்கடலிலாழ்ந்து தவிக்கிறோம். புயற்காலத்தில் கடல் நடுவில் மரக்கலனானது எப்பாடு படுமோ, அப்பாடு நாம் படுகிறோம்.

நாம் செய்ய வேண்டுவதென்ன? உண்மையிலேயே நமது நிலைமை உதவியற்றது தானோ? இல்லை. நமக்கு வேண்டுவது பலந்தான். தேக பலத்தைவிட மனோபலமே மிகவும் அவசியமாய் வேண்டும். எவ்வகையானும் அம்மனோபலத்தை யடையப்பெற வேண்டுவது ஒவ்வொருவனுடைய கடமையுமாகும். அந்தப் பலத்தைக் கொடுப்பதெதுவோ, அது தான் உன் சமயமாகும். உன் நெஞ்சில், உன் ஆன்மாவில், புதிய நம்பிக்கை, மனோதைரியம், பலம் இவற்றைப் புகுத்தாத சமயம், ஒரு சமயமாகாது. நீ சமய நூல்களைப் படித்தும், ஆலயங்களுக்குச் சென்றும், சமய உண்மைகளை உணர்ந்தும், நாளுக்கு நாள் அதிக பலத்தையடையாவிட்டால், நீ சமயத்தின் அடிப்படையை உணரவில்லை.

நீ கடவுளை மறந்து விட்டதனால்தான், உன் மனவுறுதி தளர்ந்து, பயனற்றிருக்கிறது. என்றுந் தளராத பலம் உன்னுள்ளேயே இருக்கிறதென்பதை யறியாமல் உன் ஆன்மா மூலமாய் கடவுளுடன் ஐக்கியமாகிறாய் என்பதை யறியாமல் கைவிடப்பட்ட சேய்கள் போன்று நீ அழுகிறாய். அந்தப் பேரூற்றினின்றும் உண்மையுணர் வென்னும் நீரைப் பருகி, உய்வாயாக.



கான்மாறியாடியது.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எாச சித்திரைத் திங்கள் 1927ஹு ஏப்ரல்மூ—மேமூ | பரல் ச |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## சமய உணர்ச்சி

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M. A., M. L.]

சமயம் என்னுஞ்சொல் நெறி என்று பொருள்படும். அது கடவுளை அடைதற்குரிய வழி என்று சொல்லலாம். கடவுள் ஒருவர் உண்டென்று நம்பாதவர்கள் சமயக் கொள்கை யுடையவராகக் கருதப்படமாட்டார். அவர்கள் முடிவான இன்பத்தை உயிர்கள் அடைவதற்குக் கூறும் வழியே அவர்கள் சமயமாகும். குருவைத் தவிரக் கடவுள் வேறில்லை என்று கூறுஞ் சமயிகளும் நாத்திகர்களே யாவர். கடவுள் உண்டென்பார்க்கும் இல்லை யென்பார்க்கும் பொதுவான சமயக் கொள்கை இல்லாமையால்

முன்னவர்களைப் பின்னவர்களினின்றும் பிரித்து முன்னவர்களையே சமயக்கொள்கை யுடையாரெனக் கொள்ளுதலுமுண்டு. பின்னவரும் மக்கள் தத்தம் நன்மையின் பொருட்டு உலக நன்மையைக் கருத வேண்டுமென்றும் அதற்கு நல்லொழுக்கம் இன்றியமையாததென்றுங் கூறுமிடத்து எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாக அமைகின்ற கொள்கை நல்லொழுக்கம் வேண்டுமென்பதேயாம். இனிக் கடவுள் உண்டென்பார் யாவர்க்கும் பொதுவான கொள்கை கடவுள் உண்மையேயாம். அவர்கள் கடவுள் உண்மையை நல்லொழுக்கத்திற்கு அடிப்படையாகக் கொள்வார்கள். இனிக் கடவுள் உண்டென்பாருள் கடவுளுக்குக் கூறும் இலக்கணங் காரணமாகப் பல்வேறு சமயிகள் காணப்படுவர். ஒவ்வொரு சமயத்தாரும் தமது சமயக் கொள்கையைச் செவ்விதின் உணர்ந்து தமக்கு அஃது ஒத்தவிடத்து அதனைப் பாதுகாக்குங் கடப்பாடுடையராவர்.

ஒரு சமயத்தின் கொள்கைகளை ஐயந்திரிபறக் கற்பதால் சமய அறிவு உண்டாகும். அக் கொள்கைகளை மெய்யென நம்புவதும் அவற்றிற்கு இயைந்து ஒழுக முயலுவதும் சமய உணர்ச்சியின் பாற்படும். சமயங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவான நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து அதனைப் பயிலுவதற்கேதுவாகிய உணர்ச்சியே மிகப் பொதுவான சமய உணர்ச்சியாகும். உலகத்திற்குத் தலைவனுய் நன்மை தீமைகளுக்குத் தக்க பயன் அளிக்கும் கடவுள் ஒருவர் உண்டென்று நம்புதல் சமயப் பொது உணர்ச்சியாம். ஒவ்வொரு சமயத்தின் உயிர்க் கொள்கைகளை அறிந்து போற்றுதல் சமயச் சிறப்புணர்ச்சியாம். இத்தகைய சமய உணர்ச்சிகளால் மக்களுக்குப் பெருநன்மை விளையுமாதலின் அவைகளின் இலக்கணங்களைச் செவ்வையாக ஆராய்தல் வேண்டும். செவ்வையாக ஆராயாத விடத்து சமய உணர்ச்சி யல்லாததும் சமய உணர்ச்சியாகத் தோன்றிப் பெருங்கேடு பயத்தல் கூடும். மெய்ச்சமய உணர்ச்சி நிலைக்குமாயின் அது யாவரையும் ஒன்றுபடுத்தும் வலிய நாணாக அமைந்து ஒற்றுமைக்கு இடையூறானவற்றை அகற்றி ஒழிப்பதற்குப் பெரிதும் பயன்படும்.

முதற்கண் நல்லொழுக்க உணர்ச்சி உலகர் யாவர்க்கும் பொதுவானது. நல்லொழுக்கம் யாதென்று வினவின் பற்பல சமயத்தாரும் பற்பல நாட்டினரும் தமது கொள்கைகளிற் சிற்சில வேறுபாடு உடையரெனினும் மாசற்ற உள்ளமுடைமையை அஃதாமென்று ஒப்புக்கொள்வர். மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன் என்பதும் அது. சிலர் பொய் சொல்லலாமென்

பர். சிலர் அஃது ஒருபோதும் கூடாதென்பர். இருதிறத்தாரும் நன்மை வேண்டுமென்று கருதியே அவ்வாறு கூறுவர். அதனுல் பிறர்க்கும் தமக்கும் நலத்தைத் தேடவேண்டு மென்பது இருவர்க்கும் ஒப்ப முடிந்தது. சிலர் ஒரே காலத்தில் ஒரு மனைவியே வாழ்க்கைத் துணைவியாதற்கு உரியவளென்பர். வேறு சிலர் பல மனைவி மணம் தக்கதென்பர். ஆப்பிரிக்கா முதலிய சில மிலேச்ச நாடுகளில் விருந்தினர்க்கு உணவு அளிப்பது போல போக மளிப்பதும் விருந்து செய்பவரது கடன் என்று கருதும் வழக்கம் காணப்படுகின்றது. அம் மக்கள் இல்லறத்தின் மெய்யியல்பு அறியாதவராவர். மணிமேகலையிலும்,

> "நம்பிக் கிளையளோர் நங்கையைக் கொடுத்து
> வெங்களு மூனும் வேண்டுவ கொடுமென"

என்று வருவது காண்க. அவர்களுடைய அறிவுக்கு எட்டியவரை தக்கதொரு செய்கையைத் தாங்கள் செய்வதாகவே அவர்கள் கருதுகின்றூர்கள். களங்கமில்லாத மனத்தோடு செய்யும் செய்கையைப் பகைத்தற் கிடமில்லை. இவ்வாறே நல்லொழுக்கத்தைப் பற்றியகொள்கை வேறுபாடுகள் பல இருப்பினும் தன்னெஞ் சறிவது பொய்யாது பிறர்க்குந் தமக்கும் நலந்தேட வேண்டுமென்ற கொள்கையானது மக்கட் கூட்டத்தினர் யாவர்க்கும் பொதுவாகக் காணப்படுதலின் நல்லொழுகக உணர்ச்சி யுடையவர் அக்கொள்கை எங்கெங்கு காணப்படுகின்றதோ அங்கங்கே அன்பு செலுத்தும் இயல்புடையராவர். இதனுல் அவ் வுணர்ச்சியுடைய மக்கள் யாவரும் ஒருங்குகூடி இன்பறுதற்கேதுவாம்.

நன் மனத்தைப் பொருளாகக் கருதாது தாங் கூறும் ஒழுக்கக் கொள்கையினைத் தழுவி நடப்பவரே நல்லொழுக்க முடையராவர் என்ற கொள்கையுடையவர் தம்மவரையே மதித்துத் தழுவிக் கொள்ளுவர். அவர் வழக்கத்தில் வேறுபாடும் உண்மையில் நல்ல உள்ளமுமுடைய பலரை நன்கு மதியார். அங்ஙனம் நன்கு மதியாமையே மக்களை மக்கள் வெறுத்தற்குக் காரணமாவர். இந்திய நாட்டினர் பிற நாட்டினரையும், பிற நாட்டினர் இந்திய நாட்டினரையும், வேறுக்க் கருதுவதற்கும் இந்த நாட்டிலேயே இந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் வேறுபாடு விளைவதற்கும் இஃதே காரணமாகும். ஆதலால் பொதுவான ஒழுக்க உணர்ச்சியே மிகுதியாகப் பரவுதல் வேண்டும். எந்த நாட்டினராய் இருந்தாலும் குற்றமற்ற உள்ள முடையவரைப் போற்றுதல் வேண்டும் என்ற உணர்ச்சியானது நம்க்குட் பரவி உறுதியுற் றோங்குமாயின் நடையுடை பாவனைகளிலும், வழக்கங்களிலும் ஏற்பட்டுள்ள

வேற்றுமை யுணர்ச்சி அருகி யொழியும். நன்னெஞ்சமுடைய யாவரும் ஒருங்கு சேர்வதற்கு ஒத்த உணர்ச்சியே காரண மாகும். இதனாற்றான் ஆசிரியர் திருவள்ளுவர்,

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்"

என்றனர். ஜெர்மானியப் பெரும் போருக்குப் பின் அமைதி வேண்டுமென்ற கொள்கை உலகிலுள்ள அரசர் பலரையும் ஒன்று படுத்தியது காண்க.

இராமாயணத்தில் குகன் என்பான் நாகரீக முடையவர்கள் அருவருக்கத்தக்க உடையும் உண்டியும் உருவமும் உடையவராயிருந்தும் ஆயிரம் பரதன்போன்றவனவன் என்று கம்பர் கூறுவது அவனது நன்மனப்பெற்றியை விளக்குதல் காண்க.

நல்லொழுக்கம் சமயத்திற்கு அடிப்படையாதலால் அவ்வொழுக்க உணர்ச்சியும் ஒருவகைச் சமய உணர்ச்சியாகவே கருதப்படுகின்றது. இக்கருத்தை ஆசிரியர் அருணந்தி சிவாச்சாரியார் ஒழுக்கம் அறம் ஆசாரம் என்னுந் திருப்பாட்டினால் விரித்தோதினர். புத்தம் சமணம் என்னுஞ் சமயங்கள் ஒழுக்கத்தையும் அடக்கத்தையுமே வற்புறுத்துதலால் ஒழுக்க உணர்ச்சியே அவைகளிற் சமய உணர்ச்சியாதல் காண்க.

இனி, உலகத்தில் படைத்துக் காத்தழிக்கும் ஒரு முதல்வன் உண்டென்று நாட்டும் பல சமயத்தாரும் சமயப் பொது உணர்ச்சியால் பிணிக்கப்பட்டு ஒற்றுமை யுடையராதல் வேண்டும். கிறித்தவர்கள், மகமதியர்கள், சைவர், வைணவர், மாத்துவ மதத்தினர், பாரசீக மதத்தினர் ஆகிய யாவரும் ஒரு கடவுளை நம்பினவர்களே. அவர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் நடை உடை பாவனை உணவு தோற்றம் பேச்சு முதலியவைகளில் வேற்றுமை, இருப்பதினாலே அவர்கள் தங்கள் யாவருக்கும் பொதுவான கொள்கையை மறந்து விடுகின்றார்கள். சமய வழக்கங்களிலுள்ள சிற்சில வேற்றுமைகளால் இந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் பெருத்த கலகங்கள் பல இடங்களில் ஏற்பட்டு விடுகின்றன. மக்களெல்லாரும் கடவுளுடைய பிள்ளைகள் என்ற பொதுக் கொள்கையை மறந்து மெய்ச்சமய உணர்ச்சி இல்லாது ஒருவர்க் கொருவர் கேடுவிளைக்க முயல்கின்றனர். அங்ஙனம் முயல்வது கடவுளுக்குகந்ததன்றென்பதை அறவே அறியாமையால் அவர்கள் தத்தம் சமய உணர்ச்சியு மில்லாதவரென்றே கருதப்படல் வேண்டும், கடவுட் கொள்கையுடைய

ஒருவன் பிறனொருவன் எச் சமயத்தானாயினும் நல்லொழுக்க மும் கடவுள் வழிபாடும் உடையனாயின் அவனை நன்கு மதித்தல் வேண்டும். அப்பொழுதுதான் கீழ்ப்பட்ட பலவகை உணர்ச்சி களில் ஈடுபடாது தூயதான சமய உணர்ச்சி நிலைபெறுவதாகும். தமது வழக்கங்களையே யாவரும் கைக்கொள்ளவேண்டும் என் றும் அங்ஙனம் கொள்ளாதவர்கள் பழிக்கத் தக்கவர்களென் றும் எண்ணுபவர்கள் ஒடுங்கிய வழக்க உணர்ச்சி யுடையாரே யன்றி உண்மைச் சமய உணர்ச்சி யுடையவராகார். இவ்வழக்க உணர்ச்சியினையே சமய உணர்ச்சி என்று கருதுவது பெருந்த வறு. சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்னே ஆங்கில நாட்டில் ஒரே கிறிஸ்துமதத்தைச் சார்ந்த இருபிரிவினர் இவ்வழக்க உணர்ச்சியால் தம்முள் கலகம் விளைத்துப் பல நன்மக்களைத் தீக்கிரையாக்கினர். இக்காரணத்தினால் சமயப்பற்றானது பெருங் கெடுதி விளைப்பதெனக் கருதப்பட்டது. இதனால் சமயத்தின் சாரத்தை அதனைச் சூழ்ந்துள்ள வழக்க முதலியவற்றினின்றும் பிரித்துணர்தல் ஒருதலையாக வேண்டுமென்பது அறியற்பாற்று. கடவுளை வழிபடும் முறைகளில் உள்ள வேறுபாடுகளைச் சமயப் பிளவுகளாகக் கருதக் கூடாது. ஆசிரியர் திருமூலர் 'எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்துமின்' என்றனர். திருஞான சம்பந்தப் பெருமானும்

"ஆட்பா லவர்க்கருளும் ஆதியும்ஆதிமாண்பும்
கேட்பான் புகில்அளவில்லை கிளக்க வேண்டா"

என்றருளிச் செய்ததுமது. ஒரு முறையைப் பின்பற்றியவர்கள் பிற முறைகளைத் தழுவி நடப்பவரைப் பகைத்தல் கூடாது. சிறந்த முறையைக் கையாளுகின்றவர்களும் நம்பிக்கை காரண மாகத் தாழ்ந்தமுறையைத் தழுவிநடப்பவரை இகழ்தல்கூடாது. உண்மையை அவர்க்கு அறிவுறுத்தல் அவர் கடனாகும். ஒரு குலத்திற் பிறந்தவர் பிறிதொரு குலத்திற் பிறந்தவரை இகழ் தல் தவறுவதுபோல ஒரு சமயத்திற் பிறந்தவர்கள் பிறிதொரு சமயத்திற் பிறந்தவரைப் பழித்தல் தவறு. தத்தம் அறிவுக்கு எட்டிய வண்ணம் மெய்யன்போடு கடவுளை வழிபடுதல் எவ ரிடத்துக் காணப்படினும் அவரைப் போற்றுதலே சமயப் பொது உணர்ச்சியின் பயனாகும். நல்லறிவும் நற்குணமும் மக் களது தன்மையை அறியும் உரைகல்லாமேயன்றி பிறந்த சமய மும் குலமும் உரைகல்லாகா. ஆதலால் சமயப்பொது உணர்ச்சி யுடையார் எல்லாச் சமயங்களையும் பல்வகை மக்கள் மனநிலைக் கேற்ப அமைந்துள்ளன என்று கொண்டு சமயப் பொறுமையே கடைப்பிடித் தொழுகுவார்.

சமயச் சிறப்புணர்ச்சியாவது ஒருசமயத்தின் சிறப்புக் கொள்கைகளை ஆராய்ந்தறிந்து அவற்றைமேற்கொண்டொழுகு வாரைப்போற்றும் உணர்ச்சியாம். ஒரு சமயத்தின் சிறந்த கொள்கைகளை நம்பி நடப்பவர்க்குள் சிற்சில கருத்து வேறுபாடு கள் நிகழ்தல் கூடும். அக்கருத்து வேற்றுமையைச் சமய வேற் றுமையாகக் கருதுதல் சமயச் சிறப்புணர்ச்சி இல்லாதவர்கள் குறைபாடாகும். இக்குறைபாடு காரணமாகவே ஒரு சமயத்தின் உள்ளேயே ஒத்த கொள்கையுடைய மக்களுள் ஒற்றுமைக்கேடு ஏற்படுகின்றது. சைவத்தின் முப்பொருள் உண்மையையும் அவற்றின் இலக்கணங்களையும் ஒப்புக்கொண்டு நடக்குஞ் சிலர் சில புராண கதைகளை நம்பாவில்லையாயின் அவர்கள் சைவர்களாகார் என்று கூறுதல் பெருந்தவறாகும். அங்ஙனஞ் சொல்லுவார் சமயத்தின் சாரத்தைக் கைவிட்டுச் சக்கையைச் சமயமென்று கொள்ளுபவர் ஆவர். இக் கொள்கையானது நிலைக்குமாயின் தூய சமய உணர்ச்சி அஃகி ஒழியும். இங்ஙனம் பௌராணிக மதத்தைக் கைப்பற்றிச் சைவ சமயத்தைப் புறக்கணித்தலால் சைவ சமயிகளுக்குள்ளேயே தூய சமய உணர்ச்சி ஒழிந்துபோய் ஒருவரையொருவர் பழிக் கும் வழக்கம் தலையெடுக்கின்றது.

இவ்வாறே சாதிக்குங் கொள்ளப்படும். சிலர் சாதியைச் சமய மென்றெண்ணி சாதியுணர்ச்சி மிக்குடையவராய் சமயத் தைக் கைப்பற்றுபவரை மதியாது சாதியைக் கைப்பற்றுபவ ரையே பெரிதும் போற்றுகின்றனர் நமது சிவாலயங்களில் சாதி யுணர்ச்சி மிகையினால் சமயம் நிலைகுலைந்து நிற்கின்றது. சைவ சமயக்கொள்கையும் சைவசமய ஒழுக்கமுமில்லாத பிறர்க் கும் சைவ சமயிகளைப் பார்க்கிலும் சிறந்த உரிமைகள் ஏற்பட்டு விட்டன. சைவ சமயத்தைப் பற்றி ஒழுகும் கீழ்க்குலத்தார்க்கு அவர் பிறப்புக் காரணமாக கோயில் புகாமல் முதலிய பல இடைஞ்சல்கள் ஏற்பட்டுவிட்டன. இவைபெல்லாம் மெய்ச் சமய உணர்ச்சி செம்மையாக நிலையாமையான் வந்த கேடுகளா கும். இவையெல்லாம் உண்மைச் சைவக் கொள்கைகளை மறுப் பனவாகும். சிவதருமோத்தரத்தில்

"புலையரே யெனினும் ஈசன் புலன்கழ லடியிற் புந்தி
நிலையரேல் அவர்க்குப் பூசை நிகழ்த்துதல் நெறியே யென்றும்
தலைவரே யெனினும் ஈசன் தாமரைத் தாளில் நேசம்
இலரெனின் இயற்றும் பூசைப் பலன்தரு வாரே யாரே"

என்று கூறியதை உற்று நோக்காது பெரியபுராணத்துள் திரு நீலகண்ட யாழ்ப்பாணர் முதலியவர்க்குச் சமய உரிமைகள்

அளித்தமையையும் கருதாது 'சாத்திரம் பல பேசும் சழக்கர் காள்கோத்திரமும் குலமுங்கொண்டென்செய்வீர்' என்றுரைத்த அப்பர் சுவாமிகள் உறுதி உரையையும் பொருட் படுத்தாது சாதியையே சமயமெனக் கொண்டு சுமார்த்த சமயத்தையே சைவ சமயமெனக் கொண்டு சைவசமயப் பொதுநோக்கத் தைக் கைவிட்டுச், "சேரவாரும் செகத்தீரே" என்றவண்ணம் உலகினர் யாவரும் வந்து புகுந்து ஒழுகுதற்குரிய சைவத்துள் பிறமதத்தர் பிரவேசிக்கக்கூடாதென்ற கொள்கையைப் பாராட் டிக் கலாம் விளைப்பதெல்லாம் சைவசமயச் சிறப்புணர்ச்சி இன் மையினால் வந்த பேரிழுக்காம் என்றுணர்க. இவ்விழுக்கினாலே யன்றோ சைவசமயத்துப் பிறந்தவர்கள் பிறசமயம் புகுதலும் சைவசமயிகள் சைவத்தின் உண்மையை யறியாது ஒழிதலும் ஏற்பட்டுச் சைவசமயம் ஒளியும் வலியுமிழந்து, உறுபயன் தராது கருத்து வேற்றுமையால் பிளவுபட்ட மக்கள் நிறைந்த சமயமாய் நாளுக்குநாள் தாழ்ந்த நிலையை அடைந்து வருகின்றது. தூய சமயச் சிறப்புணர்ச்சியும் சமயப் பொது உணர்ச்சியும் சைவர்க ளுக்குள் நிலைபெற்று வளர்ந்தோங்குமாயின் சைவசமயம் உயர் நிலையடைந்து உலகிலுள்ள பிறசமயங்களோடு பெருநட்புடைய தாய் தனது பண்டைப் பெருமையைப் பெற்றிலங்கும். ஆத லால் தூயமெய்ச் சமய உணர்ச்சியைப் பரப்புதல் நம்மவர் யாவர்க்கும் கடமையென்க.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

[திரு. வ. சுப்பையா பிள்ளை]

இது திருவாளர் பா. வே. மாணிக்க நாயகரவர்கள் இராயப் பேட்டை, பாலசுப்பிரமணிய பக்தஜனசபை ஆண்டு நிறைவு விழாவில் 23-4-27 பிற்பகல் 5-30 மணிக்குத் திருவாளர் கா. சுப் பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல், அவர்கள் தலைமையின் கீழ் இரண்டு மணிநேரம் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

சென்னையரசினரால் தமிழ்நாட்டெல்லையில் தமிழ்ப் பல்கலை மன்றம் ஒன்று நிறுவ உட்கழகம் ஒன்று ஏற்படுத்தப்பெற்று அதன்வழி முயற்சிகள் நடைபெறுகின்றன. அப்படி ஏற்படும் பொழுது தமிழிலேயே அறிவியல் நூல்கள் எழுதப்பெற்று மாணவர்களுக்குப் பாடமாக அமைக்கப் பெறுவது கருதி சில அறிஞர்கள் தங்கள் தங்கள் அறிவு நுட்பத்திற் கேற்ப அறிவி யற் சொற்கோவை எழுதியனுப்பியிருப்பதில் சொற்களும், சொற்

றொடர்களும் தூய தனித்தமிழிலேயே இருக்க முயற்சி காட்ட வில்லை. முயற்சி நன்மை தருவதாயினும் சொற்கள் வடமொழி ஆங்கிலமொழிமுதலியவற்றால் கலப்புற்றுக் காணப்படுவது பெரிதும் வருந்தத் தக்கதாகின்றது. அதனை நீக்கவே இச்சொற்பொழிவை ஈண்டுப் பேச எடுத்துக்கொண்டேன். அன்பர்கள் யாவரும் இதனை நன்கு கேட்டு என் முயற்சியோடு நின்றுவிடாமல் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கடமை என்று கருதித் தூய தனித் தமிழ்மொழி உலவத்தக்க முயற்சியினை இன்று முதல் செய்தல் வேண்டும்.

தமிழ் அறிவியல் நூல்களில் வடசொற் கலப்புக் கூடவே கூடாது. தமிழிலேயே அளவிறந்த சொற்கள் இருக்கின்றன. தமிழிலேயே புதிய சொற்களை எளிதில் அமைத்துக் கொள்ளுதலுங் கூடும். என்றும் இளமை குன்றாது உயிரோடிருக்கும் செந்தமிழ் மொழியின்கண் உலகவழக்கற்றொழிந்த வடமொழிச் சொற்களைப் புகுத்துவது தெளிந்த நீருடைக் குட்டத்தில் எருமைகளை ஓட்டிக் கலக்கிச் சேறுக்குவது போலாம். மேலும் தமிழ் மொழிக்கும் வடமொழிக்கும் மிக்க ஒற்றுமை உண்டென்று சொல்வது எங்ஙனம் பொருந்தும்? செத்த மனிதனுக்கும் உயிருள்ள மனிதனுக்கும் எவ்வளவு தொடர்பு உண்டோ அவ்வளவு தொடர்பே இறந்துபோன வடமொழிக்கும் உயிருள்ள தமிழ் மொழிக்குமுண்டு. வடமொழி 42 பாடசாலைகளால் போற்றப் பட்டு வந்தும் அஃது இன்னும் உயிர் பெறுவதற்கில்லை. தமிழ் மொழியைச் "சா, சா," என்று கூறி ஒரு வகுப்பார் அதன் வளத்தைக் குன்றச் செய்யப் பெருமுயற்சி எடுத்து வந்தாலும் அது மாளாது என்றும் ஓரிளமைத்தாய் நின்று நிலவுகின்றது. தமிழ் இயற்கை மொழி; வடமொழி செயற்கை மொழி. ஆகலான் செயற்கை மொழியை இயற்கை மொழியோடு சேர்ப்பதால் தமிழ்மொழி தனது இயற்கை வளமிழந்து இறக்குமொழியாகிவிடும். வடமொழிமேல் யாருக்கும் வெறுப்பில்லை. ஆனல் வடமொழி வடமொழியாகவே இருக்கவேண்டும். தமிழ்மொழி தமிழ் மொழியாகவே இருக்கவேண்டும். வழுக்கைத் தலையன் மயிருக்காசைப்பட்டு ஆட்டு மயிரை ஒட்டிக்கொள்வது போன்றிருக்க எண்ணவில்லை. இரண்டுமொழிகளையும் ஒன்றோடொன்று கலக்க வேண்டியதேயில்லை. தமிழ் மொழிக்கும் வடமொழிக்கும் பல வேற்றுமைகள் காணப்படினும் ஈண்டுச் சிலவற்றை மட்டும் குறிக்கின்றேன்.

தமிழிலக்கணத்தில் புணரியல்விதி இயற்கையோடு பொருந்தி அமைந்து கிடப்பதை அறிதல் வியப்பு தருவதொன்றாகும். புண

ரியல் என்பது ஓசையோடு ஓசை சேர்ந்து ஒலிக்கும்போது வேறு ஓசை உண்டாவதின் அமைப்புக் கூறுவதே. இது தமிழில் இயற்கையாக மூன்று சேருகின்றது. ஓசையோடு ஓசை சேரும் போது இயற்கையாய்ப் பிறக்கும் ஒலிச்சேர்க்கைக்கு விதிய மைக்கப் பட்டிருக்கின்றதே யல்லாமல் வடமொழி இலக்கணம் போல விதிசொல்லி அதன்படி ஒலிச்சேர்க்கை அமையப் பெற வில்லை. தமிழ்ப் பேசும் சிறுகுழந்தைகளும் இரண்டு சொற் களைச் சேர்த்துப் பேசும்போது புணரியல்விதி இயற்கையாகவே அமைந்து கிடப்பதைக் காணலாம். வடமொழியில் அதனிலக் கணம் தெரிந்தால் மட்டும் இரண்டு சொற்களைப் பிழையின்றிச் சேர்த்துப் பேசுதல் கூடும். ஆகலாற்றான் அது பேச்சு வழக்கி லில்லை. எடுத்துக் காட்டாக அவன் தந்தை என்ற இரண்டு தமிழ்ச் சொற்களைச் சேர்த்துப் பேசும்போது "அவன்றந்தை" என்ற ஒலிச் சேர்க்கை இயற்கையாகவே ஏற்படுகின்றது அங் ஙனம் கங்கா உதகம் என்ற இரண்டு வடசொற்களைச் சேர்த்து ஒரு தமிழ் மகன் பேசுவானானால் 'கங்காவுதகம்' எனத் தமிழ் இயற்கைப் புணரியல் விதியமையப்பேசுவான். வடமொழியில் 'கங்கோதகம்' எனச் சொல்லுதல் வேண்டும். இல்லாவிடில் அஃது இலக்கணப் பிழையாகும். வடமொழியிலக்கணங் கற்றி ருந்தாலன்றிக் கங்கோதகம் என இயற்கையில் சொல்லமுடி யாது. தமிழ் மொழி பேசுவோர் அங்ஙனம் அதன் இலக்கணங் கற்றுப் பேசவேண்டியதே யில்லை.

தமிழில் பாலிலக்கணங் கூறப்படுவதுபோல வடமொழி யில் கூறப்படவில்லை. ஆண், பெண், அலி என்ற பாகுபாட்டி லேயே உலகப்பொருள்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. சிறு குழந்தைகளும் சொல்லைக்கேட்ட அளவில் ஆண் பெண் அலி என்பதை எளிதில் சொல்லிவிடும். சாத்தன் என்ற அளவில் ஆண் என்று நினைந்து 'சாத்தான் வந்தான்,' என்று சொல் லுமே யல்லாமல் 'சாத்தன் வந்தாள்' என்றாவது 'சாத்தன் வந் தது' என்றாவது சொல்லா. வடமொழியில் கல், மனம், மரம், உலகம், மண் முதலிய எல்லாவற்றிற்கும் பால் வேற்றுமை கற் பிக்கப்பட்டிருக்கிறது. வடமொழிப் பாலிலக்கணம் நன்கு கற்று லல்லாமல் அதற்கு வினைமுடிவு அமைத்துப் பிழையறப் பேச முடியாது. தமிழிலக்கணத்தில் இயற்கையிலுள்ளபடி பொருள் களுக்குப் பால் வேற்றுமை கற்பித்திருப்பது எத்துணை இன்பந் தருவதாகின்றது? அத்துணைச் செம்மை சான்ற உயரிய மொழி யைப் பேணாது உயிரிழக்கச் செய்வது பெரிதும் வருந்தத் தக்கதாம்.

தமிழில் உயிர்ப்புச் செட்டு மிகுதி. ஆகலான் தமிழ் மொழி பேசுவோர் நீண்ட ஆயுளுடையராவர் என்பது அறிஞர் முடிபு. தமிழில் ஓரேழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்துச் சொற்களே மிகுதி. நான்கெழுத்து, ஐந்தெழுத்துச் சொற்கள் மிக அருமை. வடமொழியிலோ ஒரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்துச் சொற்கள் கிடைப்பன நரிக்கொம்பே. நான்கெழுத்துச் சொற்கள் மிகுதியாயிருக்கின்றன. 5, 6, 7 எழுத்துச் சொற்களும் மிக உள. தமிழ் மொழி உலகிலுள்ள ஏனையமொழிகள் எல்லாவற்றினும் உயிர்ப்புச் செட்டுடையது என்பது விளக்குதற்குரியது. ஒரே கருத்தைப் பலமொழியில் எழுதுவித்து ஜப்பான் காற்றுத் தலையணைப்பைகளிற் பல வாங்கி ஒவ்வொரு மொழியாக ஒவ்வொரு தலையணைப்பையில் பேசி அக்காற்றைத் தண்ணீர்ச் சாடிக்குள் அடைத்து அளந்து பார்த்ததில் தமிழ் மொழி பேசியதால் ஏற்பட்ட காற்று ஒரு பங்கும், ஆங்கிலக் காற்று ஒன்றரைப்பங்கும், வடமொழிக்காற்று நான்கு பங்குமாக காணப்பெற்றன. மற்றைய மொழிக்காற்றுக்களும் ஒருபங்கிற்கு மேலே தான் காணப்பெற்றன. ஆகவே தமிழ் மொழி பேசுகிறவர்கள் உயிர்ப்புச் செட்டுடையவர்களாய் இயற்கையோடு இசைந்து நடப்பவர்களாய்க் காணப்படுகின்றனர்.

தமிழ்ப்பண்டை இலக்கியங்களில் அவையல் கிளவிச்சொற்கள் (சொல்லத்தகாத சொற்கள்) யாண்டுங்கிடையா? வடமொழி நூல்களிலோ அவை அளவிறந்து கிடக்கின்றன "அவையல் கிளவி மறைத்தனர் கோடல்" என்ற தொல்காப்பியப் பழந் தமிழலக்கணவிதி காண்க. வடமொழி இராமாயண காவியத்தைத் தமிழில் எழுதிய கம்பர் வடமொழி இலக்கியத்திற் கேற்பத் தமிழிலும் அவையல் கிளவிச் சொற்களை மிகுதியும் எடுத்து ஆண்டிருக்கின்றனர். அனுமான் சீதையைக் கண்டதாக இராமனிடங் கூறி, சீதையின் முழுவுருவையும் விரித்துரைத்தமை காண்க. சிறந்த இலக்கியத்திற்கு அப்பேர்ப்பட்ட பகுதி மிகவும் அருவருக்கற்பாலதாம். தமிழ்மொழியின் சீரிய இயல்பு வடமொழியிலக்கியந் தழுவிக் காவியம், புராணம் இயற்றிய பிற்காலத்துப் புலவன்மார்களால் சிதைக்கப்பட்டது. தற்காலத்துப் புதுக்கதைகளிலும் அவையல் கிளவிச் சொற்கள் அங்ஙனமே மிகுதியாய்க் காணப்படுகின்றன. ஆகலான் அப் புதுக்கதைகளும் நம் நாட்டில் ஒழிக்கப்படல் வேண்டும். தமிழ் மொழியில் அவையல் கிளவிச் சொற்களைச் சொன்னால் குற்றமாகும். அவற்றை வடமொழி யுருவாய்ச்சொன்னால் குற்றமாகாது. ஆகவே நம்மவர்கள் இப்போது எழுதுகிற நூல்களில் அவையல் கிளவிச் சொற்களை வடமொழியாகப் பயிலுகின்றார்கள். ஆண், பெண், அலி

என்ற தமிழிலக்கணப்பாற்சொற்களுக்கு வடமொழியில் ஸ்திரீ லிங்கம், புருஷலிங்கம், நபும்சலிங்கம் என்று கூறப்படுவது எத்துணை வெறுக்கற்பாலதாகின்றது? ஒருவரைப் பார்த்த அளவில் ஆணு பெண்ணு என்பதை அறிவதைவிட்டுக் குறிப்பிட்ட உறுப்பைக்கொண்டு ஆண் பெண் என்று அறியும் வடமொழி வழக்கு மிகவும் அருவருத்தொதுக்கற்பாலது.

தமிழ் மொழியின்கண் வடமொழிபோல வல்லோசை கிடையாது என்று சிலர் கொள்வது தவறு. வடமொழியைவிட தமிழ் மொழியில் வல்லோசை மிகுதியே. மேலும் வல்லோசை, மெல்லோசை, இடையோசையாய மூன்றும் தமிழில் ஒரே அளவாக இருக்கின்றது. க. ச. ட. த. ப. ற என்ற ஆறு எழுத்துக்களும் வல்லோசை யுடையனவாய் ஆணவம் விளக்கவல்லனவாய் விளங்குகின்றன. ங. ஞ. ண. ந. ம. ன என்ற ஆறு எழுத்துக்களும் மெல்லோசை யுடையனவாய்க் காமியம் விளக்கவல்லனவாய் விளங்குகின்றன. ய. ர. ல. வ. ழ. ள என்ற ஆறு எழுத்துக்களும் இடையோசை யுடையனவாய் (மாயை) மயக்கத்தை விளக்கவல்லனவாய்இருக்கின்றன. மலையாளமுதலிய இடங்களில் மெல்லோசையிலும் திருநெல்வேலி முதலிய இடங்களில் இடையோசையிலும் சோழநாடு, தொண்டைநாடு முதலிய இடங்களில் வல்லோசையிலும் தமிழ் மொழி பெரும்பான்மை பேசப்படுகின்றது யாழ்ப்பாணத்திலும் வல்லோசையிற் பெரும்பான்மை பேசப்படுகின்றது. ஆணவம், மாயை, காமியம் என்ற மும்மலங்களையும் ஓரளவாக விளக்கத் தமிழில் ஓசைப் பாகுபாடு ஓளவில் அமைந்திருப்பதுபோல் வேறெம் மொழியிலும் அமையவில்லை. வடமொழி சாத்விககுணம் ஒன்றுக்குத்தான் சரி. ஆதலால் அது துறவிகளுக் கேற்றது. தமிழ் இல்லறத்தார்க்குரியது. நாம் இல்லறத்திற்கே பல்கலைக் கழகம் நிறுவ நினைக்கின்றோம். ஆதலான் வடமொழியிரவல் தமிழ் மொழிக்கு வேண்டியதில்லை.

தமிழ் மொழியிலிருந்து கன்னடம், துளுவம், தெலுங்கு முதலிய தமிழ்க்கிளைமொழி வழியாக வடமொழிக்குப் பல சொற்கள் போயிருக்கின்றன. அங்ஙனம் மலையாளம்வழி போனதாகத் தெரியவில்லை. தெலுங்கு, கன்னடம், துளுவம் வடமொழிக்கு அணித்தாயிருப்பனவாகலான் அவற்றின்வழி வடமொழி பல தமிழ்ச் சொற்களை இரவற்பெற்றுக் கொண்டுள்ளது. தெலுங்கு இசைநிறைந்த மொழி ஆகலான் அது தமிழினும் சிறப்புடைத்தென்பர். ஒருவன் வாழ்நாளுக்கு இசைமட்டும் போதாதாகும். ஆகலான் இசைக் குறைவினல் தமிழ் எவ்வாற்றானும் தெலுங்கினுந் தாழ்ந்ததன்று.

பிறமொழிக் கலப்பில்லாமலே தமிழ் அறிவியற் சொற்களை அமைத்துக் கொள்ளலாம் தற்காலம் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டு வரும் பொருள்களுக்கு ஐரோப்பியரும் ஆங்கிலருங்கூட தங்கள் தங்கள் மொழியிலேயே தூயசொற்கள் அமைத்து வர நாம் மட்டும் பிற மொழிகளினின்றும் இரவல் பெறுவானேன்? புதுப்பொருள்களுக்கு அவ்வப்போது புதுப் பெயர்கள் இடப்படுகின்றனவே யல்லாமல் பொருள்கள் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்னமேயே பெயர்கள் இருந்தனவாகவில்லை. பொருளைச்செய்து முடித்துப் பின்னரே அம்மொழியிலுள்ள பலசொற்பகுதிகளை சேர்த்துப் பெயர் அமைக்கப்படுகின்றது. எடுத்துக் காட்டாக, ரேடியம (Radium) என்ற இருட்டிலும் ஒளி காட்டும் பொருள் சில ஆண்டுகளுக்கு முன்னர்த்தான் ஐரோப்பிய நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டது. அதற்குமுன் ரேடியம் (Radium) என்ற ஒரு சொல் இருந்ததில்லை. ஆனால் (Radiate) ரேடியேட் (மின்னு) என்ற சொல் இருந்தது. அதிலிருந்து (That which radiates) மின்னுந் தன்மையுடையது (Radium) ரேடியம் என்று அதற்குப் பெயர் கொடுத்தார்கள். அதுபோல நாம் கதிர் (ஒளி) என்ற சொல்லைக் கதிரி என இகர விகுதி கொடுத்து (Radium) ரேடியம் என்னும் ஆங்கிலச் சொல்லைத் தமிழ்ப்படுத்தலாம். இப்படியே எல்லா அறிவியற் சொற்களையும் தூய தமிழாக்கலாம். இரவற்பெறமாறு வறுமையுடைய மொழியன்று நமது உயர்மொழியாய தமிழ் மொழி என்பது கருத்திற் பதியவைத்தல் வேண்டும்.

நிற்க, தமிழ்மொழியில் பல நிலை எய்திவரும் ஒருபொருள் அதன் அதன் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு தனிப்பெயர் உடையதா யிருக்கிறதுபோல வேறு மொழிகளிற் காணப்படவில்லை. எடுத்துக்காட்டாக பூ என்ற பொருளுக்கு அரும்பு, மோக்கு, அலா், மலர், வீ என அதன் ஒவ்வொரு நிலையிலும் தனித் தனிப்பெயர் கொடுக்கப்பெற்றிருக்கிறது. பிற மொழிகளில் அங்ஙனம் கூறப்படவில்லை. ஒரு பொருளில் பலவகை இருக்கிறதற்கு ஒவ்வொரு வகைக்கும் தனித் தனிப்பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றது. எடுத்துக் காட்டாக, கள்ளி என்பது கொடிக்கள்ளி, சப்பாத்துக்கள்ளி, பாற்கள்ளி, திருகு கள்ளி, திரிகள்ளி, சதுரக்கள்ளி, இலைக்கள்ளி எனப் பலவகைப் படும். அங்ஙனமே நெருஞ்சில் என்பது நெருஞ்சில், யானை நெருஞ்சில், செப்பு நெருஞ்சில், கொடி நெருஞ்சில் முதலியன வாகப் பலவகைப்படும். பழம் என்பது அதன் ஒவ்வொரு நிலையிலும் பிஞ்சு, காய், செங்காய், பழம் என்று அழைக்கப்படுகின்றது.

ஆங்கிலேயர்களும் தமிழ்ப்பெயர்களைத் தங்கள் மொழிக ளில் இணைத்திருப்பது அடியிற் குறித்தவற்றாற் காண்க.

| தமிழ் | ஆங்கிலம் |
|---|---|
| அலகை | ஆலோ |
| இஞ்சி | ஜிஞ்சர் |
| முருங்கை | மொருங்கி |
| ஒதியமரம் | ஒதினு |
| ஆடாதோடை | ஆடாதோடாவாசிகா |
| அகில்மரம் | அலான்தஸ்பெக்பெல்சா |
| மாங்காய் | மேங்கோ |

வடமொழியில் ஆஹாரப்பொருள் என்ற கலப்புச் சொல் தமிழில் வழங்கப் பெறுவது அரியற்பாலதொன்று. உழவர், "இந்தப் பயிரிற்கு ஊட்டம்போதா" தென்பர். இங்கே ஊட்டம் என்பது பயிருணவுக்குக் கூறப்படும். அடுத்த ஆண்டு 'உரம் போட்டுப் பயிர் செய்யவேண்டும்' என்ற மொழியில் உரம் என் பது பயிர் உணவுப்பொருள் என்று பொருள்படும். சேகரிக்கப் படும் பயிருணவுக்கு எரு என்றும், தயார் செய்யப்படும் பயிரு ணவுக்கு உரம் என்றும் பெயர். நிற்க 'எருத்து மாட்டிற்குத் தீனிவை' 'நாய்க்குத் தீனிவை' என்றும், 'கோழிக்கு இரைவை' என்றும் பாகுபடுத்தித் தமிழர் சொல்வது கவனிக்கற்பாற்று. ஆறறிவுடைய மக்களைக் குறிக்கும்போது 'ஐயா இன்னும் சாப் பிடவில்லை' என்றே கூறப்படும். பறையா பொட்லர் 'துரை தீனி தின்னுகிறார்' என்று சொல்லுவது மகிழ்தற்குரியது. துரைமார் குரங்குபோல ரொட்டி முதலியவற்றை இருகைகளிலும் வைத் துக் கடித்துத் தின்பதால் ஐயறிவுடைய உயிர்களோடு ஒப்பிட்டுப் பொட்லர்கள் அதற்குத்தக்க தமிழ்ச்சொல்லை எடுத்து வழங்கு வது மிகவும் போற்றற்பாலது. பகுத்தறிவில்லாதார் மக்க ளாய்ப் பிறந்தும் மாக்களாகவே கருதப்படுவர். "மக்கள் தாமே ஆறறிவுயிரே," "மாவு மாக்களும் ஐயறிவினவே" என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

இத்துணைச் சிறப்புவாய்ந்துள்ள தமிழ் மொழிக்கு மொழி யிரவல் அவசியமில்லை. ஐம்புல வுணர்ச்சியினைப் பிறர்க்கு எடுத் துரைப்பதே மொழி. அறிவு வளரவளர மொழிவளரும். இரவ லால் வளராது. ஆகலான் நமது நுட்ப அறிவினைக்கொண்டு எல்லா அறிவியற் சொற்களையும் தூய தனித்தமிழ் மொழியி லேயே அமைத்து நமது தாய் மொழியை வளம்பெறச் செய் வோமாக. இம்முயற்சியிற் தமிழ் மக்களாய்ப் பிறந்தஒவ்வொரு வரும் புகுதல்வேண்டும். இன்றே புகுதலும் வேண்டும். இன்னே புகுதலும் வேண்டும்.

# சொற்பொருள் வேறுபாடு

[திரு S. அனவரத விநாயகம்பிள்ளை அவர்கள் M. A., L. T.]

(கஙஅ - ம் பக்கத்தொடர்ச்சி)

'கர்ம' என்னும் ஆரியச்சொல் 'கருமம்' என்று தமிழில் தற்பவமாய் வருங்கால், தொழில் ஊழ் முதலிய அதற்குரிய பொருள்களில் வருவதோடு அந்திய கிரியைகளையுங் குறித்தற்கு வழங்கப்படுகின்றது. கருமாதி, கருமாந்தரம் என்னுஞ் சொற்றொடர்களும் இப் பொருளிலேயே வழங்குகின்றன. இவை முக்கியமாகப் பத்தாம்நாளோ பதினாறாம்நாளோ செய்யப்படும் கிரியைகளைக் குறிக்கும். கருமத்துக்கு அதிகாரியா யிருப்பவன் தன் ஆயுள் முடியுமளவும் செய்யவேண்டிய சிராத்தாதிகளுக்கு இது தொடக்கமா யிருப்பதால் கருமாதி யெனப்பட்டிருத்தல் கூடும். கருமாந்தரம் ஆரிய மொழியில் 'கழுவாய்' என்னும் பொருளிலும், 'சமயக்கிரியை முடக்கம்' என்னும் பொருளிலும் வருதலால், அக்காலத்துப் பூசை முதலியவைகளை நிறுத்தி வைத்தலையும், 'மாறுன தொழில்' என்னும் பொருளில் வருதலால் நித்திய வழக்கத்திற்கு மாறுன தொழில் புரிதலையும் குறித்ததெனக் கொள்ளலாம். பின் வலம் வருதல் நூலை மாற்றியிடுதல் முதலியன மாறுன தொழில்களே யல்லவோ? 'கருமஞ் செய்தல்' அக்காலத்துத் தலையை முண்டனஞ் செய்தலை மாத்திரம் குறித்தலுமுண்டு. 'கார்ய' என்னும் ஆரியச் சொல்லும் 'காரியம்' என்று தற்பவமாய்த் தொழில் என்னும் அதற்குரிய பொருளில் வருவதோடு அந்திய கிரியைகளையுங் குறிக்கின்றது. இது சென்னை முதலியவிடத்து வழக்கு.

'காலக்ஷேப' எனனும ஆரியச்சொல் தமிழில் 'காலக்ஷேபம்' என வருங்கால், அதற்குரிய காலத்தை எறிதல், காலத்தைக் கழித்தல் என்னும் பொருளில் வருதல் அருமை. ஒருவனை நோக்கி, 'உன் காலக்ஷேபம் எப்படி நடக்கின்றது? என்னும் கேள்வி கேட்கப்படுமாயின், ஜீவனம் என்னும் பொருள் தோன்றும், 'சற் காலக்ஷேபம்' என்னுமிடத்து நல்ல வழியிற் காலத்தைக் கழித்தல் என்னும் பொருள் ஏற்படுமாயினும் 'புராண காலக்ஷேபம்' என்னுஞ் சொற்றொடர் புராணம் வாசித் தறிதலையோ வாசித்துப் பிறர்க்குச் சொல்லலையோ குறிக்கும். பாகவதர்கள் கதாப்பிரசங்கஞ் செய்தலையே சாதாரணமாகக் காலக்ஷேப மென்கின்றனர். தேவார காலக்ஷேபம் திருப்புகழ்க் காலக்ஷேபம் என வழங்குங்கால் அவற்றைத் தக்க பண்ணுதிகளோடு பாடுதல் குறிக்கப்படும்.

'காஷ்ட' என்னும் ஆரியச்சொல் தமிழில் 'காஷ்டம்' என்றே வழங்குங்கால், அதற்குரிய விறகு என்னும் பொருள் குறுகி ஈமவிறகு என்னும் பொருளில் வருகின்றது. தற்பவமாகக் 'கட்டை' என்று வரும்பொழுது மரக் கட்டையையும் பொதுவாக விறகையும் குறிக்கின்றது.

'கீர்வாண' என்னும் ஆரியச்சொல் தேவன், தேவதையென்னும் பொருள்களுடையது. தமிழில் 'கீர்வாணம்' ஆரிய மொழியைக் குறிக்கும்: ஆரிய மொழி தேவபாடையென்பது தானே சாமானிய நம்பிக்கை. தேவர்களைக் குறித்த சொல் அவர்கள் மொழியைக் குறிக்க வந்தது இங்குப் பொருள் வேறுபாடு. 'க்ருஹஸ்த' என்னும் ஆரியச்சொல் 'இல்லாளன்' என்னும் பொருளது. அது கிருகஸ்தன், கிருகத்தன் என்னும் உருவங்களையடைந்து இப்பொருளைத் தரும். 'கிரேஸ்தன்' எனத் தற்பவமாகும் பொழுது, யோக்கியன், நம்பத்தக்கான் என்னும் பொருளில் வரும். இப்பொருள் வேறுபாட்டிற்குக் காரணமென்னை? ஆசாரியனையடைந்து ஓதலாதிகளைச் செய்யும் பிரமசாரி உலகமறியாதவன் சந்நியாசி உலகந்துறந்தவன். இவ்விருவரையும் போலன்றி இல்லாச்சிரமி வீடுங்குடும்பமு முடையனாயிருத்தலால் தான்செய்ய வேண்டிய கடன்களைத் தவறுதாற்றும் பொறுப்பை ஏற்றவனாய் உலக மதிப்பைப் பெற்றவனாவன். அதுபற்றி 'கிரேஸ்தன்' இப்பொழுது இல்லாளனல்லாத யோக்கியனையுங் குறிக்கின்றது.

'கோஷ்டி' என்னும் ஆரியச்சொல் 'விர்தா கோஷ்டி' யெனத் தாயுமானவர் வழங்குமாறும், 'புன்கோட்டி கொள்ளுமாங்கிழ்' என நாலடியாரில் வருமாறும் கூட்டம் என்னும் பொருளிலே வருகின்றதாயினும், உலக வழக்கில் 'கோட்டிக்காரன்' 'கோட்டி பிடித்தவன்' என வருங்கால் பைத்தியம் என்னும் பொருளைத் தருகின்றது. பைத்தியம் பிடித்தவன் தன்னைச் சுற்றி ஆட்கள் கூடும்படி செய்யுங்குணத்தினால் கோட்டிக்காரன் எனப்பட்டு அவனுடைய நோய்க்கும் கோட்டி யென்னும் பெயர் அமைந்திருக்க வேண்டும்.

'அஸ்திபாரம்' என்னும் ஆரியச் சொற்றொடர்ப்போலி தமிழில் 'அடிப்படை' என்னும் பொருளில் வழங்குகின்றது. அத்திபாரம் எனவும் அத்திவாரம் எனவும் உருவமாறியும்வரும். இதற்குக் கன்னடத்திலும் மலையாளத்திலும் இப்பொருள் உண்டு. இச்சொற்றொடர்ப்போலி பாரசீக மொழியிலுள்ள 'ஸ்திரமான' என்று பொருள்படும் 'உஸ்துவார்' என்னும் சொல்லின் திரிபென்பதே மொழியாராய்ச்சி வல்லார் கொள்கை. ஆயினும் ஆரிய மொழியோடு இதற்குச் சம்பந்தம் கற்பிக்க விழைவார் கூறுமாறு: 'என்புச்சுமை' என்பதே சொற்றொடரின்

இயற்கைப் பொருளாகவும் அது காலக்கிரமத்தில் கட்டடங்களின் அடிப்படையைக் குறிக்க வந்தது. என்புக்கும் அடிப்படைக்கும் தொடர் பென்னை? தேவாலயம் மடம் முதலிய பெருங்கட்டடங்கள் வகுக்குங்கால் சிங்கம், யானை முதலிய பெரு மிருகங்களின் என்பை அடியில் இட்டு மேல்கட்டடங்கள் கட்டல் பண்டைக்காலத்து வழக்கமென்று அறிந்தோர். மற்று அஸ்தி சரீரத்துக்கு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் கட்டடத்துக்கு அடிப்படையும் என்னும் கருத்தால் அஸ்தி பாரத்துக்கு அப்பொருள் வந்திருத்தல் கூடும். அஸ்திபாரத்துக்குச் செலவாகுஞ் செங்கலினளவே அதன்மேற் கட்டும் வீடு முழுவதுக்குமா மென்று சொல்வர் கட்டடநூல் வல்லார். 'அன்பிலாரெல்லாந் தமக்குரிய ரன்புடையார், என்புமுரியர் பிறர்க்கு' என்னுந் திருக்குறளாலும் என்பு முக்கியமாதல் விளங்கும். பிணத்தை எடுத்துக் காடாற்றுங்கால் என்புகளை மட்டும் பொறுக்கியெடுத்து அவற்றை அருகில் செல்லும் நதியிலிடுதலாலோ சேமித்து வைத்துக் கங்கையிற் கொண்டு போயிடுதலாலோ கடலிற்கொண்டு போயிடுதலாலோ என்பு முக்கியமென்பது ஒருவாறு புலப்படுதலுங் கூடும். இன்னும், சேமித்து வைத்த என்பு மாத்திரமேயன்றோ திருஞானசம்பந்தப்பெருமான் திருவருளால் பெண்ணுருவம் பெற்றது!

## திருப்பூந்துருத்தியும் திருநாவுக்கரசர் திருமடமும்

"திங்களும் ஞாயிறுந் தோயுந் திருமட மாங்கொன்று செய்தார்" என்று சேக்கிழார் பெருமான் திருநாவுக்கரசர் புராணம் 389-வது செய்யுளிறுதியிற் கூறியிருக்கிறபடி திருநாவுக்கரசுநாயனார் தாம் தங்குவதற்குச் செங்கற்களால் கட்டுவித்தருளிய திருமடமொன்று திருப்பூந்துருத்தியில் இன்றுங் காணப்படுகின்றது. அப்பதியில் சைவமக்கள் சிலரிருந்தும், பதிவழிபாடு செய்துவரும் சைவமக்கள் பலர் அதனைக்கண்டும் அது மேற்கூரையின்றியும் சுவர்கள் வெடிப்புண்டு சிதைந்துங் காணப்படுவது பெரிதும் வருந்தத்தக்கதாயிருக்கின்றது. திரு. சுந்தரமூர்த்திநாயனார், அப்பர்பெருமான் கைத்தொண்டாற்றிய திருவதிகையினை மிதிக்கவுமஞ்சி அப்பதிக்கணித்தாகிய திருமடமொன்றிற் றங்கி அப்பதிப்பெருமானை வணங்கிச் சென்றார் என்பதை யாவரும் புராணத்தால் அறிந்தும் நாம் அவர் கட்டுவித்த திருமடத்தினைப் பொன்னினும்பன்மடங்கு போற்றுங்கடப்பாடுடையோம் என்பதை உணராமல் அஃதிருந்த இடங்கூடத் தெரியாமல் மறைந்தொழியுமாறு வாளாயிருப்பது நமக்கு நமது சமயத்தினிடத்திலும் நஞ்சமயாசாரியர்களிடத்திலும் உணர்ச்சியின்மை என்பதை நன்கு விளக்குகின்றது. சைவமக்கள் அம்மடத்தை விரைந்து செம்மைப்படுத்தி அப்பர் பணியாற்றுக!

# கருவூர்த்தேவர்

[திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

[சிலம்பு ச, பரல் க, சஙூ௰வது பக்கத்தொடர்ச்சி]

எனவே சித்த மூர்த்திகளாய் விளங்கிய கருவூரார் என்பவரே நமது திருவிசைப்பா அருளிய கருவூர்த்தேவரோ? அன்றி அவர் வேறு இவர் வேறோ? என ஒரு ஐயம் நிகழ்கின்றது. மேலே கண்ட சில சரித வேறுபாடுகளினாலே இவ்விருவரும் வெவ்வேறு பெரியார்களாயிருத்தலும் கூடும். பிற்காலத்தவர்கள் இவ்விருவரையும் ஒருவரென மயங்கி இருவர்சரிதங்களையும் ஒன்றாய்ப் பிணைத்துக் கட்டியிருத்தலுங் கூடும் என ஊகிக்க இடந் தருகின்றது. கருவூர்ப்புராணத்திற்கண்ட தேவர் சரிதத்திலே அவர் அகத்தியர் போகநாதர் முதலிய பெரியோர்களுடன் சேர்ந்த இனத்தவராகவும் வைத்துக் காட்டப்பட்டிருத்தலும் இங்கு நமது ஐயப்பாட்டினை வலியுறுத்துகின்றது. காலக்கிரமத்திலுங்கூட எண்ணிப்பார்ப்போமானால் பதினெண் சித்தர்களிலே ஒருவரான கருவூரார் வெகு காலத்திற்கு முற்பட்டவராயிருத்தல்வேண்டும். சித்து வல்லார்களாய் வைத்திய நூல்வல்லராய்த் தமிழ்மொழி வல்லார்களாய்ச் சிவனடியார் திருக்கூட்டத்திலே மேம்பட்டவர்களாய் விளங்கிய பல பெரியார்களைக் காண்கின்றோம். உதாரணமாக அகத்தியர் திருமூலர் இவர்களைப் பார்க்கலாம். இவர்கள் எல்லாம் வெகு காலத்திற்கு முற்பட்டவர்களாவார்கள். அதுபோலவே கருவூரார் என்கிற சித்தரும் அப்பரிசே யுடையராதலின் நெடுங்காலத்துக்கு முன்னிருந்திருத்தல்கூடும்.

கருவூர்த்தேவர் என்ற பெயரால் இருவர் இருத்தல் கூடுமோ என்ற ஐயப்பாடு

ஆனால் நமது திருவிசைப்பா அருளிய கருவூர்த்தேவரோ என்றால் இராசராச சோழர், கங்கைகொண்ட சோழர் இவர்களின் காலத்திற்குப் பிற்பட்டவராதல் வேண்டு மென்பது இவர் திருவிசைப்பாக்களிலிருந்து தெரிகிறது. எனவே சித்தர்களில் ஒருவராகிய கருவூராரும், திருவிசைப்பா அருளிய கருவூர்த் தேவரும் வேறு வேறுவர் என்பதும் ஊகிக்கற்பாலதாம். வேறு ,வேறான இவ்விருவருடைய தனித்தனிச் சரிதங்களை ஒன்றாகப் பிணைத்துக் கருவூர்ப்புராணச் சரிதம் கட்டப்பட்டிருத்தலுங்கூடும். அப்படியிருந்தால் இந்தக் கட்டுக் கட்டியதற்குத் தமிழ்க் கருவூர்ப் புராணத்தின் ஆசிரியர் பொறுப்பாளியல்லர். ஏன்? இடைக்காலத்தே வடமொழி தன் அளவிற்கு

மீறிப் பெரிதும் மதிக்கப்பட்டும் வடமொழியில் உள்ளன யாவும் உண்மையே எனக் கொள்ளப்பட்டும், வடமொழியிலிருந்து மொழிபெயர்ப்புச் செய்துதருவதே பெருத்த மேம்பாடு என்று கருதப்பட்டும் வடமொழியில் குலம் இல்லாதிருந்தாலும் இருப்பதாகப் புனைந்து உரைத்துக்கொள்ளப்பட்டும் வந்தது. இந்தக் கட்டுக் கட்டிய பொறுப்பை வடமொழியிலே கருவூர்ப் புராணம் வகுத்த ஆசிரியரே ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்.

"அறையுபரி பாகத்தி லீரைம்பா னிருநான்கு
மறைந்த பின்னர்
மு:றையில்வரு மத்தியா யத்திலுரை பெருமை
வடமொழியை விண்ணோர்
இறையருளின் மூழ்குமறை யவர்முதல முதுக்குறைவோ
ரெவருந் தென்கால்
உறைமலய வரைக்கிழமைத் தவமுனிவ னிசைத்தமிழி
னுரையென் றூரால்"

என்பது கருவூர்ப்புராணம்.

இவ்வாறு வடமொழியாளர் இடைக்காலத்தே தமது மேம்பாட்டைத் தமிழ் நாட்டில் நிறுவக் கருதிப் பலப்பல புராணங்களையும் தமிழ்நாட்டுச் சரிதங்களையும் வடமொழியில் வகுத்தனர். அவர்கள் தமிழ்நாட்டு நிகழ்ச்சிகளையும் தமிழ்ப் பெருமக்களின் சரிதங்களையும் தேசசரிதத்தையும் உண்மையாய்த் தெரியாதவர்களாய்ப் பிறழப்பிறழ உணர்ந்து வடமொழிப் புராணங்கள் வகுத்துவிட்டனர். அம்மயக்க வுணர்ச்சியாலெழுந்த அந்நூல்களை மொழிபெயர்ப்புச் செய்த தமிழாசிரியர்கள் அவ் வடமொழியி லிருந்தவாறே தமிழிலும் வகுத்து விட்டார்கள். இதுதான் சில தமிழ்ப் புராணங்களில் தமிழ்நாட்டுச் சரிதைகள் பிறழ்ந்து காணக் காரணமாயிற்று என்று தோன்றுகின்றது. உதாரணமாக ஒன்றுகாட்டி மேற்சொல்வோம்.

திருப்புறம்பயத்திலே வன்னியற்புத வரலாறு என ஒன்று நிகழ்ந்தது. அஃதாவது ஒருவணிகன் விவாகத்துக்காகத் தன் மாமன் பெண்ணையும் உடன் அழைத்துக்கொண்டு மதுரை நோக்கிவரும் வழியிலே திருப்புறம்பயத்திலே தங்கினான். அவனைப் பாம்பு கடிக்க அவன் இறந்தான். அப்பெண்ணிற்கு இரங்கிப் பரமசிவன் மந்திரவாதிபோல வந்து விடந்தீர்த்து, அவ் விருவருக்கும் அங்கிருக்கும் இலிங்கம், அம்பிகை, வன்னி, கிணறு, அடுக்களை என்பவற்றைச் சாட்சியாக வைத்து விவாகம் செய்வித்தார். இவைகளே பின்னர் அவன் மனைவியர்க்குள் கலகம் வந்தபோது மதுரையிலே சாட்சியாக வந்தன என்பது.

பெரியபுராணத்திலே கண்டவாறு உள்ள திருஞானசம்பந்தசுவாமிகள் திருமருகலிலே விடந்தீர்த்த வரலாறு வேறு. பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்திலே வன்னியுங் கிணறும் இலிங்கமுமழைத்த திருவிளையாடலிலே விவரித்த வரலாறு தனித்தனி நிகழ்ந்த இவ்விருவேறு வரலாறுகளைப் பிணைத்து ஆக்கியதொன்று என்று தமிழுலகத்துக்குப் பரமோபகாரியாக விளங்கிய சுந்தரம்பிள்ளை M. A. அவர்கள் கருதுகிறார்கள். மேலேகாட்டிய வன்னியற்புத வரலாறு சம்பந்தமான வன்னி நாடகமானது சமீபகாலத்துக்கு முன்வரை ஆண்டுதோறும் திருப்புறம்பயத்தலத்திலே நடிக்கப் பெற்று வந்த தென்கின்றார்கள். இவ்வரலாற்றையும் ஒன்றாகப் பிணைத்துத்தான் திருவிளையாடற்புராண வரலாறு நடைபெறுகின்றது.

ஆனால் சிலர் கருதுகிறபடி இக்கட்டுக் கட்டியார் பரஞ்சோதி முனிவர் அல்லர். வடமொழி ஆலவாய்மான்மியத்தின் படி இவர் தமிழில் இயற்றியவரேயன்றி வேறல்ல. அவ்வடமொழி நூலாசிரியர்தான் இருவேறு வரலாற்றையும் ஒன்றுபடுத்திக் கட்டியமகான். பரஞ்சோதியாரும் அவருக்கு முன்னர்த் தமிழிலே புராணமியற்றிய வேம்பத்தூர்ச் சங்கத்தாரும் பிறரும் அவ்வடமொழி யாசிரியரைப் பின்பற்றியவர்கள் என்று எனதாசிரியராகிய பண்டிதர் திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள் தமது "மாணிக்கவாசகர்" என்ற அரிய ஆராய்ச்சிக் கட்டுரையில் எழுதியுள்ளது இங்கே நாம் கவனிக்கற்பாலதாம்.

இதுவரை தேவர் சரிதப் பகுதிகளை ஒருவாறு ஆராய்ந்தோம். அவர் சரிதப்பகுதிகட்கு அவர் தம்திருவாக்கில் கிடைக்கும் ஆதாரங்களையும் ஒருவாறு பார்த்தோம். இனி அவர் திருவாக்காகிய திருவிசைப்பாவைத் திருவருள் காட்டிய அளவிலே நமது சிற்றறிவிற் கண்ட வகையிலே சிறிது ஊன்றிப் பார்ப்போம். திருவிசைப்பாவைப் பற்றிப் பொது வகையாலே சில கருத்துக்கள் இந்தக் கட்டுரையின் தொடக்கத்திலே கண்டோம். திருவிசைப்பா என்னும் சொற்றொடர் திரு-இசை-பா என மூன்று சொற்களாலாகியது.

திருவிசைப்பா ஆராய்ச்சி

திரு என்பது "கண்டாரால் விரும்பப்படும் தன்மைநோக்கம்" அஃதாவது அழகு என்றார் பேராசிரியர். "யாவனொருவன் யாதொரு பொருளைக் கண்டானே அக்கண்டவற்கு அப்பொருள்மேற் சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு. அதன் மேலவற்கு விருப்பஞ்சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் எவ்வகையானும் பிறிதொன்றிற் கில்லாமையால் திருவென்றது அழகுக்கே பெயராயிற்று......கோயிலைத்திருக்கோயி

லென்றும், கோயில் வாயிலைத் திருவாயிலென்றும், அலகைத் திருவலகென்றும் பாதுகையைத் திருவடிநிலை யென்றும் வழங்கும்......'' என்று பேராசிரியர் இதன் பொருளை நன்கு விரித்திருக்கின்றார். எனவே திரு என்பது தன்னிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் எவ்வகையிலும் பிறிதொன்றற்கில்லாத அழகு என்று பொருள் பெறும். இசை என்பது புகழ். உலகத்திற் சிற்றறிவின ராகிய மக்கள் கருதும் பல வகைப்பட்ட புகழ்கள் யாவும் பொருள்சேர் புகழாகா. ஏன்? அவை எல்லாம் உண்மையிற் பொருள் சேராவாய்ப் புகழ்போற் காணப் பெறுவனவே யன்றித் தம்மின் உயர்ந்தவற்றோடொப்புநோக்க மெய்ப்புகழல்லா தொழியுந் தன்மை யுடையன உண்மைப் புகழ்கள் அல்லவாயினும் ஒரோர் காலத்து ஒரோரிடத்து ஒரோர் அளவிலே செல்லுந்தன்மை யுடையனவாகிய சிறு புகழ்கள் திரிபுணர்ச்சியாலே புகழ்களாக அறிவில்லாராற் கருதப்படும். அவை எல்லாம் பொருள் சேராப் புகழ்களேயாகி ஒதுங்கும். ஆயின் உண்மைப் பொருள் சேர் புகழ்யாது? எனின் இறைவன் புகழேயாம். இதனை "இறைமைக் குணங்க ளிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா ஆகலின், அவை முற்றவுமுடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழ் எனப்பட்டது'' என ஆசிரியர் பரிமேலழகர்,

> "இருள்சே ரிருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

என்ற திருக்குறளின்கீழ் நன்கு விளக்கி யிருக்கின்றார். இனி, பா என்பது பாட்டு. ஈண்டுத் தீந்தமிழ்ப்பாட்டினைக் குறித்து நின்றது. அது குறட்பா-வெண்பா - ஆசிரியப்பா எனத் தமிழிற் பல வகைப்படும்.

எனவே ஈண்டுத் திருவிசைப்பா என்னுஞ் சொற்றொடரானது தன்னிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் பிறிதொன்றற் கில்லாத அழகு வாய்ந்தமையிற் கண்டோரால் விரும்பப் படும் தன்மை வாய்ந்த இறைவனுடைய புகழ்களைக் கூறுந் தமிழ்ப் பாட்டு எனப் பொருள்பெறும் என்று கண்டாம்.

> உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப் பரிதி
> யொன்றுநூ றாயிர கோடி
> அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ
> வங்ஙனே யழகிதோ வரணம்
> பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம்
> பருவரை ஞாங்கர்வெண் டிங்கள்
> இலகுலாம் பதணத் திஞ்சிசூழ் தஞ்சை
> யிராசரா சேச்சரத் திவர்க்கே. (க)

நெற்றியிற் கண்ணென் கண்ணினின் றகலா
　　நெஞ்சினி லஞ்சிலம் பலைக்கும்
பொற்றிரு வடியென் குடிமுழு தாளப்
　　புகுந்தன போந்தன வில்லை
மற்றெனக் குறவேன் மறிதிரை வடபாற்
　　றிபுவனன் மதகில்வாழ் முதலை
யெற்றுநீர்க் கிடங்கி லிஞ்சிசூழ் தஞ்சை
　　யிராசரா சேச்சரத் திவர்க்கே. (உ)

தெள்ளுநீ றவனீ றென்னுடல் விரும்பும்
　　செவியவ னறிவுநூல் கேட்கும்
மெள்ளவே யவன்பேர் விளம்பும்வாய் கண்கள்
　　விமானமே நோக்கிவெவ் வுயிர்க்கும்
கிள்ளைபூம் பொதும்பிற் கொஞ்சிமாம் பொழிற்கே
　　கெழுவுகம் பலஞ்செய்கீழ்க் கோட்டூர்
வள்ளலே மணியம் பலத்துணின் றாடும்
　　மைந்தனே யென்னுமென் மனனே. (ச)

என்ற திருப்பாசுரங்களால் இத்திருவிசைப்பாவிலே இறைவனது ஒப்புவமையில்லா அழகிய புகழ்களும் அவை கண்டாரால் விரும்பப்பட்டு அவரைத் தம்மிடத்தே ஈடுபடச்செய்யும் தன்மையும் பாடப்பெற்றிருத்தல் காணலாம்.

பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட
　　புனிதனை வனிதைபா கனைவெண்
கோவணங் கொண்டு வெண்டலை யேந்துங்
　　குழகனை யழகெலா நிறைந்த
தீவணன் றன்னைச் செழுமறை தெரியுந்
　　திகழ்கரு வூரனே னுரைத்த
பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்
　　பரமன தருவமா குவரே. (ய)

"இறைவனை ஏத்துகின்ற விளையாண் மொழியின் றமிழால்"
(திருவிசைப்பா திருவாலியமுதனார் கோயில்-ய)

மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய்
　　முகத்தலை யகத்தமர்ந் தினிய
பாலுமா யமுதாம் பன்னகா பரணன்
　　பனிமலர்த் திருவடி யிணைமேல்
ஆலயம் பாகி னனையசொற் கருவூர்
　　அமுதுறழ் தீந்தமிழ் மாலை
சீலமாய்ப் பாடி மடியவ ரெல்லாஞ்
　　சிவபதங் குறியினின் றாரே. (ய)

என்பனவாகி திருவாக்குகளாலே மேலேகாட்டியவாறு இறைவனது அழகிய புகழ்களைத் தீந்தமிழ்ப்பாவில் அமைத்துப்

பாடி யருளப்பெற்றவை திருவிசைப்பாக்களாகும் என்பதும் விளங்கும்.

இத்திருவிசைப்பாக்களை அருளிய பெருமக்கள் திருமாளிகைத் தேவர் (1) சேந்தனார் (2) கருவூர்த்தேவர் (3) பூந்துருத்தி நம்பி காடநம்பி (4) கண்டராதித்தர் (5) வேணாட்டடிகள் (6) திருவாலியமுதனார் (7) புருடோத்தமநம்பி (8) சேதிராயர் (9) என ஒன்பதின்மராவர்.

இவர்களாற் பாடப்பெற்றதலங்கள் கோயில் (1) திருவீழிமிழலை (2) திருவாவடுதுறை (3) திருவிடைக்கழி (4) திருக்களந்தை ஆதித்தேச்சுரம் (5) திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் (6) திருமுகத்தலை (7) திரிலோக்கியசுந்தரம் (8) கங்கைகொண்ட சோளேச்சுரம் (9) திருப்பூவணம் (10) திருச்சாட்டியக்குடி (11) தஞ்சை இராசராசேச்சுரம் (12) திருவிடைமருதூர் (13) திருவாரூர் (14) எனப் பதினான்காம்.

இவைகளைப் பற்றிப் பாடிய பதிகங்கள் 29 க்குத் திருப்பாட்டுகள் 301 ஆகும் என்பது இந்தக்கட்டுரையின் முகப்பிலே குறிக்கப்பெற்றது. இவற்றிலே கருவூர்த்தேவர் அருளியவை 10 திருப்பதிகங்களாம். இவற்றில் 103 திருப்பாசுரங்கள் உள்ளன.

**பதிகங்களின் யாப்பும் பண் அமைதியும்**

இப்பதிகங்கள் பத்திலே ஒன்பது பதிகங்கள் எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தப் பாக்களாம். திரிலோக்கியசுந்தரர் என்ற ஒருபதிகம் மட்டும் கொச்சகக்கலிப்பாவில் அருளிச் செய்யப்பெற்றுள்ளது. தேவாரங்களுக்குப்போலவே திருவிசைப்பாக்களுக்கும் பண்ணமைதி வகுக்கப்பெற்றிருக்கின்றது. இவ்வாறு திருவிசைப்பாக்களுக்குப் பண் வகுத்தமை எந்தக்காலத்து யாவரால் நிகழ்ந்தது? நாம் காண்கிறபடி ஒன்பதாந் திருமுறையாகத் தொகுத்தார் யாவர்? என்பனவாதி வரலாறுகள் ஒன்றும் தெரிகின்றதில்லை. திருவிசைப்பாப் பதிப்புகள் சிலவற்றிலே இவற்றை "அருளிச்செய்த ஒன்பது நாயன்மார் திருநாமமும் திருப்பதிகவகையும் பண்ணின் வகையுந் தெரியுமடைவு" என்று தலைப்பின் கீழ் மூன்று விருத்தங்கள் காணப்படுகின்றன. அவை யாரால் செய்யப்பெற்ற வென்றும் விளங்கவில்லை. அப்பாட்டுக்களிலே,

ஐந்துடனால் வருமுரைத்த திருக்கடைக்காப் பிற்பண்
　ணறையின்மா ளிகைத்தேவர் நான்கிலொன்று காந்தாரம்
மூந்துகரு வூரர்பத்தி னிரண்டுபெற நீர்மை
　மொழிந்திகொந் தாரமொன்று காடவர்கோ னிரண்டில்

நந்தலில் சாளரபாணி யொன்றுவேனுட் டடிகள்
  நவின்றதொரு புறநீர்மை திருவாலி யமுதர்
பந்தமறச் சொன்னவதி லொன்று நட்டராகம்
  பகர்ந்திடி னென்றிந்தள மற்றெவையும் பஞ்சமமே.

என்ற பாட்டிலே பண்களின் அமைவு சொல்லப்பெற்றிருக்கிறதைப் பார்க்கலாம். எனவே கருவூர்த்தேவர் அருளிய பத்துப் பதிகங்களிலே இரண்டு புறநீர்மைப் பண்ணிலும் ஒன்று காந்தாரப் பண்ணிலும் மற்றை ஏழும் பஞ்சமப் பண்ணிலும் அமைந்தனவாம்.

இனிப் பண் என்பதுபற்றிச் சில பேசுவோம், "பண்" என்பது தமிழுக்கே உரிய இசைச் சிறப்புக்களில் ஒன்று.

"பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்"
"பாட்டிற் பண்ணும்"

என்பனவாதி தேவாரத் திருவாக்குகளானும் பிறவற்றானும் "பண்" என்பது தமிழுக்கு உரிய இசைஎன்பது விளங்கும். அது சிலர் எண்ணுகிறபடி இக்காலத்து வழங்கப் பெறும் "இராகங்"களுடன் ஒன்றாக வைத்து மாறுபட எண்ணற்பாலதன்று. இன்னபண் இன்ன இராகத்திற் பாடுகிறதென்று தற்காலவழக்கிற் பொதுவாக ஒரு அமைதி கொண்டுள்ளாரேனும் இராகமும் பண்ணும் ஒன்றல்ல. பழமும் அதன் இரசமும் போலத் தமிழ்ப் பாட்டின்கண்ணே அதன் சொற்பொருள் இசையுடன் சேர்ந்து பிரித்து இயலாததாய் அமைந்துகிடக்கும் ஒருவகை இனிய இசையமைதியே பண்ணாகும். யாப்பிலக்கணப்படி இன்னின்ன பாட்டென்று வகுக்கப்பெறும் பாட்டுக்களின் அமைதிக் கேற்பப் பண்ணும் அமையுமோ? எனின் அமையாது. பாட்டின் யாப்புக்கும்:பண்ணின் அமைதிக்கும் அவசியமான சம்பந்தமுமில்லை.

உதாரணமாக:—

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய திருநெய்த்தானம்

"மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்"

என்ற திருப்பாட்டும், திருவண்ணாமலை

"உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய ஒருவன்"

என்ற திருப்பாட்டும்,

ஸ்ரீசுந்தரமூர்த்திகள் அருளிய

"பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா"

என்ற திருப்பாட்டும் தமிழ்ப் பாட்டின் யாப்பமைதியிலே ஒரே வகையான அளவொத்த விருத்தப்பாட்டுக்களாம். எனினும் முந்திய இரண்டும் நட்டபாடைப் பண்ணிலும் பிந்தியது இந்தளப்பண்ணிலும் அமைவன ஆயின.

**திருவிசைப் பாவின் அருமைப்பாடு**

அங்ஙனமே கருவூர்த்தேவர் திருவிசைப்பாவிலும் பார்ப்போமானால் திரிலோக்கியசுந்தரர் என்ற திருவிசைப்பாப்பதிகம் ஒன்றுமட்டும் கொச்சகக் கலிப்பாவில் அமைந்துள்ளது. ஏனை ஒன்பது பதிகங்களும் எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்கள் என்பது கண்டோம்; எனினும் இவ்வொன்பதினுள்ளே கோயில், திருக்களந்தைஆதித்தேச்சுரம், என்ற இரண்டு பதிகங்களை மட்டும் புறநீர்மைப்பண் என்றும், மற்றை ஏழுபதிகங்களும் பஞ்சமப்பண் என்றும் வகுத்துள்ளார்கள். எனவே செய்யுள் யாப்பமைதிக்கும் பண்ணமைதிக்கும் இன்றியமையாத பொருத்தமில்லை என்பது போதருகின்றது.

இனி இப்பாட்டுக்கள் ஆற்றொழுக்கிலே இயல்பாக அமையப்பெற்றன. இழுமென் ஓசையும் உடையன. படித்தற்கும் கேட்டற்கும இனிமை பயப்பன. அருமையான அழகிய சொல்லாட்சிகளைக் கொண்டன. சொற்போக்கும் பொருட்போக்கும் ஒத்தியல்வன. பாட்டின் கருத்துக்கு ஏற்ற வர்ணனை விசேடங்களைப் பொருந்தியன. அடை அடுக்கு-சொல்லடுக்கு - எதுகைத் தொடை - முரண்டொடை முதலிய சொல்லணிகள் ஆங்காங்கே அழகுபெறக் கொண்டுள்ளன. அருமையான உவமங்கள் அமையப்பெற்றன. பற்பல அகப்பொருட்டுறைகள் நயம்பெற இயையப்பெற்றுள்ளன. அந்நாள் வழங்கிய பற்பல பழமொழிகளையும் பழக்க வழக்கங்களையும் தெரிக்கக் கூடியன. இறைவனது திருவடையாளங்களையும் அவனது எண்ணிறந்த அருட்குண விசேடங்களையும் அழகழகாக எடுத்துக்கூறுவன. நகை, இரக்கம் முதலிய பற்பல சுவைகளைத் தெரிப்பன. கேட்போரும் படிப்போரும் இரும்புமனத்தாராயினும் அவர்மனத்தை உருக்கும் தன்மைவாய்ந்தன. வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்த சாத்திரக் கருத்துக்களாகிய முடிந்த உண்மைகளைப் பலவிடத்தும் தெரித்து விளக்கி நிற்பன. இறைவனை முன்னிலையாகக் கண்டபெரியோரின் சுவானுபூதியான இன்பங்களை உலகினர்க்கு ஊட்டி உணர்த்தி ஈடேற்றும் திறம் வாய்ந்தன. 'ஆரணத்தேன் பருகி யருந்தமிழ்மாலை கமழவருங் காரணத்தினிலைபெற்ற கருவூரன்' என்று தேவர் தாமே அருளிச்செய்தவாறு வேத உபநிடதக் கருத்துக்கள் பல அங்கங்கே பொலிய விளங்குவன

பேதையேன் சிற்றறிவிற்பட்டவகையிலே ஒருசில எடுத்துக்கூற முயன்றேனன்றி வேறில்லை. இனி இவற்றைச் சிற்சில உதாரணங்களாற் காணமுயல்வோம்.

| | | | |
|---|---|---|---|
| அருஞ்சொல் | இருள் விரி | மழப்பு | (இராச - கக) |
| ஆட்சி. | தழைதவழ் | மழப்பு | (கீழ்க்கோட்டூர் மணி - எ) |

அவிர்சடை மழப்பு (இடை - க)
பிறைதவழ் மழப்பு (கோயில் - ௩)
சோலைசூழ் மழப்பு (கோயில் - ௫)
நீரணங் கசும்பும் கழனி (களந்தை - ௰)
சகடை - தெவ்வடு (கீழக் - எ)
கெந்தியாவுகளும் (பரிமளித்து) (கீழ்க் - ௰)
கிந்திசின்றும் (ஷை கக)
ஆர்த்துவந்தமரித்து (கோயில் - அ)
புரிசடை துதக்தும் (பூவணம் - ௩)
அலகெலாம் (அழகு) பொலிந்த திருவுடம்பு (இராச - க)

என்பனவாதி வருவனவெல்லாம் அருஞ்சொற்களின் ஆட்சிக்கு உதாரணங்களாம்.

எதுகைத்தொடை "முகத்தலை யகத்தமர்ந்து" "ஆவண வீதிப்பூவணம்"

"இஞ்சிசூழ் தஞ்சை"
"தண்ணிலா விரிய வெண்ணிலா விரிதரு" (இராச ௩)
"கங்குல் வாயங்குலி கெழும" ( ,, ச)
"ஈட்டமுந் தாட்டிருக் கமலத்து" ( ,, ௫)
"அருகுவால் பெருகுவான் றெருவில்" ( ,, ௬)
"மிகத்திகழ் முகத்தலை மூதூர்"
"நெஞ்சினிலஞ்சிலம் பலைக்கும்" (இராச-உ)
"உஞ்சகர் நெஞ்சகத் தொளிப்பர்" ( " ௬)
"மருவிடந் திருவிடை மருதே"

என்பனவாதி எதுகைத் தொடையழகு சொற்சுவைபெற அமைந்துள்ளதற்கு ஒரு சில எடுத்துக்காட்டுக்களாம்.

போர்த்த தம்பெருமை சிறுமை புக்கொடுங்கும்
புணர்ப்புடை யடிகள்" (கோயில் அ)

முரண்டொடை "அங்ஙனே பெரியசீ சிறிய என்மனம்
புகுந்த எளிமை" (கங்கை-கக)

"நுண்ணியை எனினும் நம்பநின் பெருமை
நுண்ணிமை யிறந்தமை" (பூவ-ச)

என்பனவாதி, திருவாக்குக்கள் முரண்பட்ட கருத்துக்களைச் சுவைபெறச் சேர்த்துத் தொகுத்து வைத்துக் காட்டினமையால் உட்கருத்தான உண்மையை மிக மேலாய் விளக்குவனவாம். முரண்டோடை நயத்தை இவற்றில் மிகக் காணலாம்.

(தொடரும்)

---

# இராமாயண உள்ளுறை பொருளும்

## தென்னிந்திய சாதி வரலாறும்

[திரு. வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள்]

(௧௫௬ - ம் பக்கத் தொடர்ச்சி)

ராவணன் சீதையைக் கவரும் வரையும் நெறிபிறழா திருந்தான், கவர்ந்து துன்மார்க்கன் ஆனனென்று கருதி விபீஷணன் தமயனைத் திரும்பச் சன்மார்க்கன் ஆகும்படி போதித்தானென்றும் அப்போதனையை அவன் கவனியாததால் இராமனைச் சரண் அடைந்தா னென்றும் வான்மீகி கூறியிருக்கின்றார். ஆரிய பாரபட்சமாக நோக்குதலை யொழித்துச் சமதிர்ஷ்டியாக நோக்கினால், இராவணன் சீதையைக் கவர்ந்தது குற்றமன்றென முன்னமே கூறப்பட்டது. அது குற்றமென வைத்துக்கொண்டாலும் அது விபீஷணன் இராவணனை நீங்குதற்குக் காரணமாமே யன்றித் தன் சாதி விரோதியாகிய இராமனைச் சார்தற்கு நியாயமாகாது. தன் தமயன் துன்மார்க்கப் பிரவேசனனென்று அவனை நீங்கியவன் நாடோ காடோ எதுவாயினுந் தனக்கு உவந்த இடஞ்சென்று கிருகஸ்தனாகவாயினும் சந்நியாசியாகவாயினும் வாழ்ந்திருக்கலாம்.

ஆயின், தமயன் சாதாரணமான மனிதனாக இல்லாமல் அரசனாக விருந்ததனாலும், துன்மார்க்கனான அரசன் உள்ள அளவும் நாட்டுக்குச்சேமமில்லை யாதலானும் நாட்டின் நன்மையினிமித்தம் அவனைக் களையவேண்டியது கடமையென்றும் அக்கடமையை நிறைவேற்றுவதற்காக இராமனுக்குச் சகாயனானென்றும் ஆலோசித்தாலோ, அதுவும் பொருந்தவில்லை. ஏனெனில் இராவணன் தன்சாதிக்குச் சத்துருக்களாகிய தேவரென்ற ஆரியசாதியாருக்கு இடுக்கண் செய்தானென்று கூறப்பட்டிருக்கிறதேயன்றி, அவனுடைய பந்துமித்திரருக்கும் அவன் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் சிவபெருமான் றிருவருளைத் தேடிக்கொடுப்பன. இன்னும் பற்பல அருமைவாய்ந்தன.

குடைக்கீழ்த் தங்கி வாழ்ந்தோருக்கும் எவ்வகை யிடையூறும் இயற்றினன் என்று எங்கும் கூறப்படவில்லை. விபீஷணன் போலவே கும்பகர்ணனும் இந்திரசித்தும் சீதையைச் சிறை யினின்றும்விடுதி செய்யவேண்டுமென்று இராவணன்பால்பரிந்து பேசினர். அவனவர்கள் வேண்டுகோளுக்கிணங்கவில்லை. அத ஞல் அவர்கள் விபீஷணனைப்போல் அவனைக்கைவிடுத்தனரோ? அவன் பக்கமே நின்று யுத்தம் செய்து அவனுக்காக உயிருந் துறந்தனர். கும்பகர்ணன் சர்வராச்சியங்களைப்பெறுவதற்காக வும் இராவணனுக்குத் துரோகஞ் செய்யானென்பதை மனத் துள் வைத்து, வாயினல், விபீஷணன், "அண்ணு இராமன் எனக்கு வாக்களித்திருக்கிற லங்கா ராச்சியத்தை நீ ஏற்றுக் கொண்டு ராமனைச் சேர்வாயாக" என்று யுத்த மத்தியில் கூறின தற்கிசைந்து, ஒருங்கே சாவினின்று நீங்குதலையும் சாம்பிராச்சிய மடைதலையும் பொருட்டாக மதியாமல் சகோதர வாஞ்சையும் இராச விசுவாசமும் சுதேச சுசாதியபிமானங்களுமே சிறப்பாக எண்ணி நடந்த பெரியோனுகிய கும்பகர்ணனுக்குக் கொடுக்கற் பாலதாகிய ஆழ்வார்ப்பட்டத்தை விபீஷணனுக்குத் தந்த திரா விடருடைய மதியை யென்னென்று கூறுவது? விபீஷணன், தமயனை நீங்கிய மாத்திரையில் நில்லாது எதிரியைச் சேர்ந்து, இராவணேசுவரன் தம்பி என்னும் அதிகவுரவ ராஜ கெம்பீர மஹோந்நத நிலைமைக்குச் சற்றும் ஒவ்வாது அடைக்கலம் புகுந்து, காலில் விழும் இழிதொழிலும் செய்து, தன் சொந்தச் சகோதரரையும் சகோதரரது புத்திரரையும் கொல்லும் மரு மங்களை எதிரிகளுக்குச் சொல்லிக்கொடுத்துக் கொல்வித்தான். விபீஷணன் இவ்வளவும் செய்ததற்குக் காரணம், இராச்சிய இச்சையாக இல்லாமல், இராவணனது துன்மார்க்கமாக விருந் தால், அவன் இராமன் அம்பால் இறந்தபோது, அவன் கிரீ டத்தைத் தன் தலைமேல் தூக்கி வைத்துக்கொள்வானேன்?

இனி, சமஸ்கிருத ஆதிகாவியமாகிய இராமாயணத்தால், திராவிட ஜாதியாருள் ஒரு சில வகுப்பாரது வரலாற்றையும் அவருட் பேரரசராய் இருந்தோரது செல்வமாட்சி, திண்போர் வலி, ராஜரீக முறைமை, நாகரீக வாழ்க்கை முதலிய சிறப்பு களையும் ஒருவாறு ஆராய்ந்து அறிந்தோம். அக்காலத்துத்தான் ஆரியர் தென்னிந்தியாவிற் குடியேறிக் கொண்டிருந்தனர்; பெரிய நகரங்களில் அவர்கள் இன்னும் பிரவேசிக்கவில்லை; காடாரம்பங்களில் குப்பங் குப்பமாய்க் குடிசைகள் கட்டிக் கொண்டு வாழ்ந்து வந்தனர்; என்றிவை முதலிய விபரங்களும் அவ் இதிகாசத்தால் விளங்குகின்றன. சாதி வேற்றுமை, யாதும் யாண்டும், அப்பொழுது இருந்ததாக இல்லை. புதிய வரவின

ராகிய அவ்வாரியர்க்கு அநுகூலராயும் பிரதிகூலராயுமிருந்த திராவிடப்பெருஞ்சாதி வகுப்பினரை ஆரியகவி அரக்கர் என்றும் குரக்கினம் என்றும் இழித்துக் கூறியது அவர்க்குரிய சாதித்துவேஷம், செய்ந்நன்றி கொல்லல் ஆகிய குணதோஷத்தைக் குறிக்குமேயன்றி, மற்றொன்றையுங் குறிப்பதன்று. பிராமணோத்தமராகிய பரத்துவாச முனிவராலும் அவரது கற்புடைய மனைவியாராலும் அன்புடன் வரவேற்று விருந்து உபசரிக்கப்பெற்ற அத்திராவிட நல்லாரை, வான்மீகி செய்ந்நன்றியறியுங் குணமுடையோராயின், வேறுவிதம் கூறியிருப்பர். இது நிற்க.

இராமாயணகாலத்து, விந்தியமலைக்குத் தென்பாலும் தற்கால நைசாம் ராச்சியத்திற்கு வடபாலுமாகக் கீழ் மேலாக, நீண்டு கிடந்த நிலம், கிழக்குப் பகுதி "தண்டகாரணியம்" எனவும், மேற்குப்பகுதி "ஜனஸ்தானம்" எனவும், காடுபாதி நாடு பாதியாய், இராவணனது ஆளுகைக்குட்பட்டிருந்தது. அந்த லங்கேசுரனது தங்கை சூர்ப்பணகை, ராஜப் பிரதிநிதியாய், அப்பூமியை ஆண்டு வந்தாள். இதற்குத் தெற்கே மைசூர்ப் பிரதேசம்வரை உள்ள நாடுகள் நீலன், சுக்கிரீவன், வாலி முதலிய சிறந்த திராவிட அரசர்களால் ஆளப்பெற்றன. மைசூர் மலைப்பிராந்தியங்களுக்குத் தென்பாலிருந்து *தமிழகம் அக்காலமுதலே மிக்க செழுமையும் சீர்மையும் பெற்றிருந்ததென்ற குறிகள் இராமாயணத்திற் காணப்படுகின்றன. "காவேரி நதியைத் தாண்டிப் பொருநை நதியைக் கடந்து, அப்பாற் சென்றால், பாண்டியனுடைய பொற்கதவமிட்ட மதிலரணைக் காண்பீர்கள்" என்று சுக்கிரீவன், அநுமான் முதலிய படைவீரர்க்குச் சொன்னதாக வான்மீகி கூறுகின்றார். பாண்டியனது கோட்டை பொற்†கபாடம் பொருந்தியதாய் இருந்ததால் பின்னுள்ளோரும் அதனைக் "கபாடபுரம்" என்ற காரணக் குறியால் அழைத்தனர். "இடைச் சங்கமிரீஇய" இந்நகரத்தின் தோற்றமானது இராமாயண காலத்திற்கு முற்பட்டதென்பது இதனாற் பெறப்படும். இக்கபாடபுரத்தின்கண்ணும், அதன்முன்னர், கடலாற் கொள்ளப்பட்டதும் முதற்சங்கம் நடந்தேறியதுமாகிய தென்மதுரையின்கண்ணும் நிலைபெற்றுச் செங்கோலோச்சிய பாண்டிய அரசாட்சியின் ஆரம்பம் இராமாயண காலத்துக்கும் இன்னும் வெகு முற்பட்ட காலம் என்பது சொல்லாமலே அமையும். அவ்‡விராமாயண பூர்வகாலத்துத் தென்னிந்தியாவின் சாதிநிலைமை எத்தன்மையதென்று இனி ஆராய்வாம்.

---

*தமிழகம் - தமிழ்நாடு. †கபாடம் - கதவு.

‡இராமாயண பூர்வகாலம்-இராமாயண காலத்துக்கு முந்தியகாலம்.

# இரண்டாவது அதிகாரம்.

## இராமாயண பூர்வகாலத்துத் தென்னிந்திய சாதி நிலைமை

இந்தியா வொழிந்த எந்தத் தேசத்திலும் சாதி பேதமென்பது கிடையாது. அந்தத் தேசங்களில் சாதியென்பது அந்தந்த ஜனங்கள் வசிக்கும் தேசம் பற்றி வழங்குவது; சீனதேசத்தார் சீனரென்றும், ஜப்பான் தேசத்தார் ஜப்பானியரென்றும், ருஷிய தேசத்தார் ருஷியர்களென்றும், ஜெர்மனிதேசத்தார் ஜெர்மனியரென்றும், இங்கிலாந்துதேசத்தார் ஆங்கிலேயர் என்றும் சாதிப்பேர் பெற்றிருக்கிறார்கள். இவ்வாறே எஞ்சிய பல சாதியாரும் அவரவர் தேசம் பற்றியே சாதிப்பேர் தரித்திருக்கிறார்கள். இங்கிலீஷ் காரரிலே சிலர் அமெரிக்காவில் குடியேறி அமெரிக்கரென்றும், வேறு சிலர் ஆஸ்திரேலியாவில் குடியேறி ஆஸ்திரேலியரென்றும் குடிபுகுந்த தேசத்தினால் பழைய சாதிப்பேர் மாறிப் புதுச்சாதிப்பேர் பூண்டிருக்கின்றனர். இந்தியாவிலும் ஆரியர் வருமுன் அந்தந்த சனங்கள் அவரவர்கள் வசித்த இடம்பற்றியே சாதிப்பேர் கொண்டிருந்தார்கள். தென்னிந்தியாவாகிய திராவிடதேசத்தில் அவரவர்கள் இருந்த நிலம் பற்றியும் தொழில்பற்றியும் சாதிப்பெயர்கள் வழங்கிவந்தன. அப்பெயர்கள் இன்னும் நிலைபெற்றிருக்கின்றன. நம்முன்னோர் குறிஞ்சி நிலத்தில் வாழ்வோனைக் குறவனென்றும், பாலை நிலத்தில் வசிப்போனை மறவனென்றும், முல்லைநிலத்தி லிருப்போனை இடையனென்றும், மருதநிலத்திலுள்ளோனை *மள்ளன் என்றும், நெய்தனிலத்தில் அமர்ந்தோனைப் பரவனென்றும் வழங்கினர். இச்சாதிப் பெயர்களும் இச்சாதிகளும் இன்னும் இருக்கின்றமை யாவரும் அறிவர். ஆயின், இச்சாதிகளுள் இப்போதுள்ள பேதம் ஆதியில் இல்லை. எவ்வாறெனில் நம்முன்னோர் நிலங்களைக் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்து வகையாக வகுத்து, அவ்வந்நிலத்திலுள்ள மனிதர், மிருகங்கள், பறவைகள் தாவரங்களை அவ்வந்நிலத்துத் †திணைப் பொருள்களாகப் பகுத்து, ஒரு நிலத்துப் பொருள் மற்றொரு நிலத்துக் காணப்படுவதைத் திணைமயக்கத்தின்பாற் படுத்திப் பாகுபாடு செய்கின்றனர். அவர்கள் மற்றைப் பொருள்களை அவைகளுள்ள நிலம்பற்றி வகுத்தது போலவே மனிதர்களையும் அவர்கள் வாழும் நிலம்பற்றி வகுத்தனரேயன்றி ஆரியரைப்

---

*மள்ளன், பள்ளன், உழவன், ஒரு பொருட் பெயர்கள்.

† திணை - சாதி.

போல் ஒருசாதி மேற்சாதி ஒருசாதி கீழ்ச்சாதி யென்று பேதம் ஏற்படுத்தினரல்லர்.

இக்காலத்தில் ஆங்கிலேயர் அமெரிக்காவில் குடியேறி அமெரிக்கரானதுபோல, முற்காலத்தில், குறிஞ்சி நிலத்தில் குறவனென் றிருந்தோன் முல்லை நிலத்தில் குடியாக அமர்ந்தால் இடையனாய் விடுவான். இவ்வாறே வேறெந்த நிலத்தானாவது மற்றொரு நிலத்தில் குடிபுகுந்தானானால் குடிபுகுந்த நிலத்துச் சாதியாய் விடுவான். ஒரு சாதிக்குடி மற்றொரு சாதிக்குடியாதல் போல, ஒருசாதி மற்றொரு சாதியோடு உடனுண்டு களித்தலும் பெண்கொண்டு கலத்தலும் வழங்கிவந்தன. சீவகசிந்தாமணி யாகிய பூர்வ காவியத்தை வாசித்தோர்க்குச் சீவகராஜன் பல சாதி மாதரை மணஞ் செய்து அப்பலசாதி மாந்தரோடு உண்டு உறவாடிக் களித்தமை ஞாபகத்துக்கு வரலாம்.

தென்னிந்தியாவுக்குத் திராவிட தேசமென்ற பெயர் பூர்வீகமானது. இதில் வழங்கும் பிரதானமான பாஷைகள் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவமென ஐந்து. இவ்வைந்தும் பஞ்ச திராவிடங்களென்று கூறப்படும். திராவிடம் என்ற பெயர் தமிழுக்குச் சிறப்புப்பற்றி உபசாரமாக வழங்குகின்றது. ஆயினும், அது மேற்கூறிய ஐந்து மொழிகளுக்கும் பொதுப்பெயர். இந்தியாவில் இவ்வைந்து மொழிகளும் வழங்கும் பாகமே திராவிட தேசமாம். இவ்வைந்து மொழிகளையும் முறையே தாய்மொழிகளாக வுடையவர் தமிழர், தெலுங்கர், மலையாளர், கன்னடர், துளுவர். இவர்களெல்லாரும் திராவிட சாதியாரெனப்படுவர். மேற்கூறிய குறவர் இடையர் முதலியோர் திராவிட சாதியாருள் தமிழரென்ற பிரிவாருள் அடங்குவர். இலங்கைத்தீவில் வடபாகத்தில் வாழ்வோர் பெரும்பாலும் தென்னிந்தியாவிலிருந்து குடியேறினவர்க ளாதலால் அவர்களும் திராவிட சாதியாருள் அமைவர்.

மேலே குறித்த இவர்களெல்லாரும் ஒரே சாதியாரோ? என்பதைப் பற்றிப் பின்பு விவகரிப்பாம். அந்த விவகாரந் தொடங்கும்போது சாதியென்பதன் பொருளை வரையறுத்தல் வேண்டும். அதுவரையும் அவர்கள் ஒரு சாதியாரோ பல சாதியாரோ வென்று நிச்சயிக்க வேண்டிய ஆவசியகமில்லை. இப்போது கூறவேண்டியதெல்லாம், திராவிடரென்ற பொதுப் பெயருளடங்கிய அவர்களெல்லாரும் ஆரியரினின்றும் வேறான சாதியா ரென்பதும், அவர்கள் ஒரு சாதியாரா யிருந்தாலும் பல சாதியாராகவிருந்தாலும் அவர்களுள் ஒரு வகுப்பாருக்கொரு வகுப்பார் உயர்ந்தவர் தாழ்ந்தவ ரென்பது அக்காலத்

தில் இல்லை என்பதுமே. ஆயின், அத்திராவிடர்கள் ஆரியரினும் உயர்ந்தோரோ தாழ்ந்தோரோ வென்னின் உயர்ந்தோருமல்லர், தாழ்ந்தோருமல்லர். சீனர், ஜப்பானியர் முதலியோர் எவ்வாறு ஆரியரினும் உயர்ந்தோருமாகாமல் தாழ்ந்தோருமாகாமலிருக்கின்றனரோ அவ்வாறே திராவிடருமிருந்தனர்.

ஆரியர் வந்த பின்பே நிலையான சாதிபேதமும் சாதிகளின் உயர்வு தாழ்வுகளும் உண்டாயின. இதுபற்றியே கபிலர் பார்ப்பாரை நோக்கி, "நாற்குலச் சாதியிந் நாட்டில் நீர் நாட்டினீர்" என்று கூறினார். பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நாற்சாதி ஏற்படுத்தினார் ஆரியரே. அவர்களுள்ளும் சாதிப்பிரிவுகள் ஆதியில் இல்லை. இப்போது சாதியைக் குறிப்பிக்கும் பெயர்கள் ஆரம்பத்தில் தொழிலைக் குறித்தவைகளாயிருந்தன. வரவர அவ்வத் தொழிலினால் அடையும் இலாபங் காரணமாக, அவ்வத்தொழிலாளர்கள் வெவ்வேறு வகுப்பாராய் வெவ்வேறு சாதியாரும் ஆயினார்கள். பிரம, க்ஷத்திரிய, வைசிய சாதிகள் மூன்றுமே ஆரிய சாதிகள்: சூத்திர சாதி யென்பது அவர்களினின்றும் புறம்பா யுள்ள எல்லாச் சாதியார்களுக்கும் அவ்வாரியரிட்ட ஒரு தனிப் பொதுப்பெயர்.

உலகத்தில் எல்லாச் சாதியார்களுமே தாங்களொழிந்த மற்றச் சாதியார்களை இழிவானவர்களாக எண்ணும் சுபாவமுடையார். இதற்கு வேறு சாட்சி வேண்டாம். தமிழர், தாம் இப்போது கவுரவிக்கும் பிராமணருள்ளிட்ட ஆரியரை மிலேச்சரென்று கொண்டிருந்ததேபோதும். ஆரியர் என்ற பதத்திற்கு "மிலேச்சர்" என்று நிகண்டு முதலிய பூர்வ நூல்களில் பொருள் கூறியிருப்பதைக் காணலாம். ஆரியரும் அவ்வாறே பிறசாதியாரை இழிவாகக் கருதும் இயல்பினர். அவர்களுள் தூரதேசயாத்திரை செய்தோர் மற்றைச் சாதிகளை முதல்முதல் கண்டபோது, அச்சாதியார்கள் அவ்யாத்திரிகரது மனோபாவனைக்குத் தோன்றியவாறே ஒரு சாதியாரை அசுரரென்றும், வேறொரு சாதியாரை இராக்கதரென்றும், இன்னொரு சாதியாரை வானரர் என்றும், பலவாறாகப் பல சாதியார்களுக்கும் பெயரிட்டனர். பின்பு ஆரிய வழக்கில் அச்சாதியார்களுக்கு அப்பெயர்கள் வழக்கமான பெயர்களாய்விட்டன. இவ்வாறு அசுரர்* முதலிய பெயரைப்பெற்ற சாதியார்கள் வாழ்ந்ததேசத்தில், ஆரியர்கள் செயித்தாவது, சமாதானப்படுத்தியாவது,

---

*அசுரர் என்ற சொல் பிற்காலத்துத் தாழ்வுப் பொருளைத் தரநின்றதாயினும் வேதகாலத்து உயர்வுப் பொருளைக் குறிப்பதா யிருந்தது. ருக்வேதத்தில் *அசுர என்ற பதம் "யஜமானர்" என்ற பொருளில் உப

பாதிசெயித்தும், பாதிசமாதானப் படுத்தியுமாவது குடியேறிய போது அச்சாதியாருள் தங்களைச் சேராதார்க்கெல்லாம் இழிவுப் பொருள்படும் சூத்திரப்பெயர் சுமத்தினர். இவர்களுள் அறியாதார், தாங்களும் தங்களையே சூத்திரர் என்று கூறிக் கொள்வாராயினர். எக்காலத்தும், எத்தேசத்தும், அறியாதார் தொகை அறிந்தார் தொகையினும் மிக அதிகமாதலால் சூத்திரர் என்னும் பெயர் ஆரியரையடுத்து வாழ்ந்த பிறசாதியாருக்குள்ளும் பெருவழக்கமாய் விட்டது. திருநெல்வேலி ஜில்லாவில் கிறிஸ்தவர் மிகுந்தும் இந்துசமயத்தினர் குறைந்தும் உள்ள கிராமத்தில் இந்துக்குடியானவனொருவனை "நீ கிறிஸ்தவனோ" என்று கேட்டால், "சாமி! நான் அஞ்ஞானி" என்று அவன் கிறிஸ்தவன் அல்லாவிடின், விடைகூறுதல் வழக்கமாயிருப்பது பலரறிந்தது. இதற்குக் காரணம் இப்படிப்பட்ட கிராமத்தி லுள்ள இந்துக்கள், கிறிஸ்தவர்கள் தங்களை "அஞ்ஞானிகள்" என்று கூறுவதன் பொருள் தெரியாமையேயாம். இக்காலத்தில் வான சாஸ்திரமுதலிய சாஸ்திரங்களிலும், விவசாய வியாபாரத்திலும், நெய்தல்தொழில் முதலிய கைத்தொழில்களிலும், யுத்த தந்திரங்களிலும், துரைத்தன முறைகளிலும் சிறந்தோராயும், நீராவிசத்தி, மின்சாரசத்தி முதலிய சில நூதன சத்திகளைக் கண்டுபிடித்து அவற்றைக் கையாளுந் திறத்தில் எக்காலத்தும் ஒத்தோரே இல்லாதாராயும் உள்ள ஐரோப்பியர்களுள் சிறந்த தத்துவசாஸ்திரிகளும் அதிசயித்துத் தலைசாய்க்கும் வண்ணம் பரமஞானம் பொதிந்த தமது சமயப்பெருமையை அறியாமையால் தங்களுக்குக் கிறிஸ்தவரிட்ட "அஞ்ஞானி"ப் பெயரை இவர்கள் ஏற்றுக் கொண்டது போலவே, ஆரியரைச் சூழ்ந்து வாழ்ந்த இதர சாதியாரும் ஆரியரிட்ட சூத்திரப்பெயரை ஏற்றுக்கொண்டனர். கிறிஸ்தவர் இந்தியாவில் சிற்சில இடங்களில் மாத்திரம் வாழ்வாராயும் தொகை குறைந்தாராயு மிருக்கின்றனர். அவர்கள் எங்கும் பரவி எண்ணிறு மிகுந்தாலோ இந்துக்களெல்லாரும் "அஞ்ஞானிகள்" என்று தங்களைத் தாங்களே கூறிக் கொள்ளுங் காலமும் வந்துவிடும்.

---

யோகப் பட்டுளது. ஆரியர் வட இந்தியாவிற் குடியேறிய காலத்து அங்கே அரசாண்ட தமிழரச இனத்தாரை அசுர என்றகௌரவப் பெயரால் அழைத்தனர். பின்னர் இருஜாதியாரும் ஒன்றாய்க் கலந்து வட இந்தியாவில் ஒரே ஜாதியாரான போது, கால அடைவில், அசுர என்ற பெயர் மறைய, யாவரும் ஆரியர் என்ற பெயரால் அறியப்பட்டதுடன், அசுர என்ற சொல் "ஆரியப்பகைவர்" என்ற பொருளையும் பயப்பதாயிற்று.

Vide. the Admixture of Aryan with Tamilian, by Pandit D. Savariroyan.

இதுகாறுஞ் செய்த ஆராய்ச்சியால், பூர்வகால திராவிடருள் திணைவகுப்பேயன்றிச் சாதி வகுப்பு இல்லை என்று கண்டோம். நிலையான சாதிபேதம் இருந்ததாக இவரது பழைய நூல்களில் ஆதாரம் ஒன்றும் காணப்படவில்லை. ஆரியர் தென்னிந்தியாவில் நுழைந்து ஸ்திரப்படும்வரை ஒருவகுப்பார் மற்றொரு வகுப்பாரோடு உடனுண்டு உறவாடி வாழ்ந்தனர் என்றும் திராவிடர் ஆரிய சாதியைச் சேர்ந்த நாற்பெரும் வகுப்பில் எவ்வகுப்பையுஞ் சேர்ந்தாரல்லர் ஆரியரைப்போலவே ஒரு தனிப் பெருஞ் சாதியார் என்றும் சூத்திரப்பெயர் இவருக்குச் சுமத்தியது அடாமையும் அறியாமையும் என்றும் மேலே சுட்டிக் காட்டினேன். இனி, ஆரியர் தென்னிந்தியாவில் நிலைத்த பின்னர் திராவிடப் பெருஞ்சாதிக்கட்டுள் உண்டான உலைவும் சிதைவும் என்னவென்று பார்க்கத்தகும்.

## மூன்றாவது அதிகாரம்

### *இராமாயண உத்தரகாலத்துத் தென்னிந்திய சாதி நிலைமை

இந்தப்பாகம் I ஆரியர் நிலைமை, II திராவிடர் நிலைமை என்று பகுத்துக் கூறப்படும்.

### I. ஆரியர் நிலைமை

ஆரியர் வடக்கேயிருந்து தெற்குநோக்கி வரும் வழியிலே, அங்கங்குள்ள பிறசாதியாரோடு மணம் புரிந்து கலப்புற்றுத் தென்னிந்தியாவை அடைந்தார்கள். தென்னிந்தியாவுக்கு வந்த பின் இங்குள்ள திராவிடரோடு கலந்து பூர்வ ஆரிய சுத்த நிலைமை வரவரக் குறைந்து மிகக் கலப்புற்றவராயினர். இது வடதேசத்து ஆரியருக்கும் தென்தேசத்து ஆரியருக்கும் உள்ள உருவபேதத்தை நோக்குவோர்க்கு நன்கு விளங்கும். ஆரியர் தெற்கேவந்த ஆரம்பத்திலும், பிற்பட்டும், திராவிடரோடு உடனுண்ணுதலும் செய்துவந்தனர். பரத்துவாசர் ஆச்சிரமத்தில் இராமராதி ஆரியரும் விபீடணாதி திராவிடரும் உடனிருந்து விருந்துண்டனரென்று இராமாயணம் கூறுகின்றது. ஆரியர் அல்லராயினும், இந்துமதஸ்தராய், மாட்டு மாமிசந் தின்றாராயுள்ள ஜாதி ஜனங்களுடனிருந்து, இன்றும், பொம்பாய் முதலிய வடதேசத்துப் பிராமணர் போசனஞ் செய்கின்றனர். பூர்வத்தில் குடியிருந்த இடம் போதாமையால் தெற்கு

*இராமாயண உத்தரகாலம் - இராமாயண காலத்துக்குப் பிந்திய காலம்.

வந்து குடியேறிக்கொண்டிருந்த ஆரியர் சிலராயும், அச்சிலருள்ளும் பெரும்பாலார் இயல்பாகஆடவராயும் இருந்தனர். இக்காலத்தில் ஒருதேசத்திலிருந்து மறுதேசத்துக்குப் போய்க் குடியேறுவோர் கூட்டத்தில் ஆடவர் தொகை மாதர் தொகையினும் 'மிக அதிகமாகவிருப்பது போலவே முற்காலத்திலும் இருந்திருக்கு மென்பதுதானேவிளங்கும். அவ்வாரியர் தஞ் சாதிப் பெண்கள் போதாததினால் திராவிடப்பெண்களைக் கலியாணம் செய்துகொள்வது வழக்கமாயிருந்தது. இவ்வழக்கத்தை அனுசரித்து மநுதர்ம சாஸ்திரம் பிராமணர் தம் சாதிப் பெண்களையன்றி மற்றைய மூன்று சாதி மாதரையும் மணஞ் செய்யலா மென்று கூறுகின்றது. இவ்வாறு திராவிட மாதரை மணந்து சந்ததி விருத்தி செய்ததனாலும் சில திராவிடரைத் தீக்ஷை செய்வித்துப் பிராமணராக்கிக் கொண்டதனாலும், வடக்கே யிருந்து பின்னும் பின்னும் வந்து கொண்டிருந்த தம்மினத்தவராலும் ஆரியர் தொகை பெருகலுற்றது. பெருகித் தம் சனத்தொகை திரள ஆரம்பிக்கவே திராவிடர்களுடைய பெண்களை மணத்தலைப் படிப்படியாக நிறுத்தலானார்கள்.

தென் தேசத்தை ஆரியர் தங்கள் படைகொண்டு செயிக்கவில்லை யென்றும் திராவிடராசர்களுள் உண்டாகிய யுத்தங்களில் ஒரு பக்கத்தா ரல்லது மற்றொரு பக்கத்தாருக்கு உதவி செய்தார்க ளென்றும் முன்னமே சொன்னேன். தம் உதவி பெற்றுச் செயித்த அரசரது இராச்சியத்தில் ஆரியர்கள் தங்கினார்கள். அவ்வாறு செய்த உதவி காரணமாக, அவ்வரசரது பிரியமும் மற்றையோர் மதிப்பும் உபசாரமும் பெற்றுக் கவுரவமாக வாழ்ந்தார்கள். ஆரியர் மேற்கூறிய யுத்தங்களில் காட்டியயுத்த தந்திர சாதுரியங்களைக் கண்டு அரசர் தங்கள் புத்திரருக்கு யுத்த வித்தை கற்பிக்கும் ஆசிரியராகவும் படைத்தலைவராகவும் ஆரியரை நியமித்தனர். இது, துரோணர் பாண்டவ துரியோதனாதியர்க்கு வில்லாசிரியராகவும், அவரும் கிருபரும் துரியோதனனது படைத்தலைவராகவும் நியோகிக்கப்பட்டிருந்ததனால் விளங்கும். இவ்வாறு அரசருக்கு ஆசாரியராதலால், அரசரால் வணங்கப்பெற்று அதனால் சகல குடிகள் வணக்கத்தையும் பெற்று, சர்வ ஜன பூஜ்யதைக்கு உரியரானார்கள். லௌகிகத் தொழில்களுள் முக்கியமான போர்த்தொழிலுக் காசிரியரானது பற்றி அவர்கள் வைதீக காரியங்களிலும் படிப்படியாகக் குருக்களாகத் தலைப்பட்டார்கள். ஆரியர் தென்தேசத்துக்கு வருமுன் திராவிடர்கள் சைவ மதத்தினரா யிருந்தனர். சைவ மதம் இங்கு அதிபூர்வமே ஸ்தாபிக்கப்பட்டிருந்தது. ஆனால் அஃது அக்காலத்தில் இப்போதிருப்பதற்குச் சற்று வித்தியாச முடையதா

யிருந்தது. ஆரியர் புரோகிதராகத் தலைப்பட்டகாலத்தில், பூர்வமாயிருந்த சைவத்தில் எவ்வளவு தள்ளக் கூடுமோ அவ்வளவையுந் தள்ளி, தள்ளக்கூடாது மிகுந்த பாகத்தைத் தங்கள் மதத்தோடு கலந்து, அதற் கேற்பப் புராணக்கதைகளைப் புனைந்து புகன்று திராவிட தேசமெங்கும் பல ஊர்களிலும் குடியேற லுற்றார்கள். அவர்கள் புரோகிதர்களாகவாக, அவர்களது ஆரிய மதமும் ஜாதிக்கொள்கைகளுக் கிசைவாகத் திராவிட ஜன வகுப்புகள் பல ஜாதிகளாகப் பிரிக்கப்பட்டன.

(தொடரும்)

---

# அத்துவிதம்

[திரு. M. V. நெல்லையப்பபிள்ளையவர்கள், B. A.]

(௧௬௬ - ம் பக்கத் தொடர்ச்சி)

6. சைவர்கள் அத்துவிதம் என்னும் சொல்லில் உள்ள அகரத்துக்கு அன்மைப்பொருள் கொண்டு கடவுளும் உயிரும் கலப்பினால் இரண்டு அன்று அஃதாவது ஒன்று என்றும் அப்படிக் கலப்பினால் ஒன்று ஆயினும் பொருளால் இரண்டு என்றும் உடன் செல்லுதலால் ஒன்று இரண்டு என்றும் கூறுவர். வேதத்திற் காணப்படும் ஏகமேவாத்விதீயம் பிரம்ம ऐकमेवाद्वितीयं ब्रह्म என்ற வசனத்தில் ஏகம் ऐकम् என்றசொல் கடவுள் ஒருவனே என்ற பொருளையும் பின்னேயுள்ள அத்விதீயம் अद्वितीयं என்ற சொல் கடவுளுக்கும் உயிருக்குமுள்ள மேலேசொன்ன மூன்று வித நிலையையும் குறிக்கிறது என்றும் ஸ்மார்த்தர்கள் கொள்ளுகிறபடி அகரத்துக்கு இன்மைப்பொருள் கொண்டு ஏகம் என்று பொருள்படும் अद्वितीयं என்ற சொல்லை முன்வந்த ऐकम् என்ற சொல்லிற்குப் பின் மறுபடியும் வழங்கல் அவசியம் இல்லை என்றும் சைவர்கள் கூறுவர். அன்றியும் மேலே உ-வது உட்பிரிவிற் (paragraph) கூறியவண்ணம் எண்ணுப் பெயர்முன் வந்த நகரம் அன்மைப் பொருளில் வருதலின்றி இன்மை மறுதலைப் பொருள்களில் வருதல் வடமொழி இலக்கண வழக்கில் இல்லை என்றும் அவர் கூறுவர். ஸ்மார்த்தர்கள் கூறும் அபேதக் (ஏகம்) கருத்து கடவுள் உயிர்களுடன் கலந்து அபேதமாய் நிற்கும் தன்மையில் உள்ளது என்றும் மாத்துவர்கள் கூறும் பேதக் கருத்து கடவுளும் உயிர்களும் வேறுவேறு பொருள்களாயுள்ள தன்மையில் உள்ளது என்றும் வைணவர்கள் கூறும் பேதாபேதக் கருத்து கடவுள் உயிர்களோடு உடனுய் நிற்கும் தன்மை

யில் உள்ளது என்றும் சைவர்கள் கூறுவர். ஆகவே சைவர்கள் கூறும் அத்துவிதக் கருத்துக்களில் ஏனைய மூன்று சமயவாதிகளில் ஒவ்வொரு சமயவாதி கூறும் அத்துவிதக் கருத்தும் அடங்கியுள்ளது. ஏனைய சமயிகள் அத்துவித உண்மையில் ஒவ்வொரு கூறினையே எடுத்துத் தங்கள் தங்கள் அத்துவிதம் என்றுகூறுவர். சைவர்கள் அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருநிலையில் கூறும் அத்துவித உண்மை முழு உண்மை ஆகாது என்றும் அவர்கள் மூவரும் மூன்று நிலையில் வைத்துக்கூறும் உண்மைகள் அனைத்துமே உண்மையான அத்துவிதம் என்றும் கூறுவர். சைவர்கள் கூறும் அத்துவித உண்மை சுத்தாத்துவிதம் என்று கூறப்படும். சுத்தாத்துவிதம் என்பது யாதொரு அடைமொழியினலும் சேர்க்கப்படாத அத்துவிதம் ஆகும். அவர்கள் சுத்தாத்துவிதிகள் என்று அழைக்கப்படுவர்.

7. மேலே கூறியவாறு சைவர்கள் கூறும் அத்துவிதமே வடமொழிச் சொல் வழங்கும் வழக்குக்கு ஒத்திருக்கிறது என்று நாம் கண்டோம். இனிப்பொருள் வழங்கும் வழக்குக்கு அஃது ஒத்திருக்கின்றதா, என்று சிறிது ஆராய்ந்து பார்ப்பாம்.

8. ஸ்மார்த்தர், மாத்துவர், வைணவர் மூவரும் தாங்கள் தாங்கள் கொள்கிற அத்துவித உண்மைப் பொருளை உவமை முகத்தால் விளக்கியிருக்கிறார்கள். ஸ்மார்த்தர்கள் பொற்பணி உவமை கூறி பொன் ஒன்றே பலவகைப் பணிகளாக (ஆபரணம்) மாறுகிறது போல பிரமப்பொருள் ஒன்றிலிருந்தே உயிர்களும் உலகமும் கற்பிதமா யுண்டாயின¹ என்று கூறுவர். பொன்னின் தன்மை பொற்பணிகளிலும் விளங்குதல்போல பிரமப் பொருளின் தன்மை உயிர்களிலும் உலகிலும் விளங்குதல்வேண்டும். அப்படி விளங்குதல் நாம் காண்கின்றோ மில்லையாதலின் சைவர்கள் பொற்பணி உவமை அபேதக் கருத்தை விளக்குகிறதற்குச் சரியான உவமை அன்று என்று கூறி உடல் உயிர் உவமையைக் கூறுவர். உடல் உயிர் உவமையில் உயிர்போல கடவுள், உடல்போல உயிர். உடல் உயிர் இரண்டும் பிரிக்க முடியாமற் கலந்து நிற்றல்போல கடவுளும் உயிரும் அபேதமாய்க் (ஒன்றாய்) கலந்திருக்கின்றன. ஆயினும் கடவுளும் உயிரும் வெவ்வேறு பொருள்களே. கடவுள் உயிர் ஆகான். உயிர் கடவுள் ஆகாது.

9. மாத்துவர்கள் தாங்கள் கூறும் துவிதமாகிய பேதக் கருத்தை விளக்குவதற்கு இருள்வெளி உவமை கூறுவர். இந்த உவமை கடவுளும் உயிரும் வேறு வேறு பொருள்கள் என்னும் உண்மையை நன்கு விளக்கினும் அது கடவுளுக்கும் உயிருக்கு

முள்ள சம்பந்தத்தை விளக்குகிறதில் முரண்பாடான கருத்தைக் குறிக்கின்றது. வெளியாகிய சூரியனொளி விளங்கும் பொழுது, இருள் தோன்றாது; இருள் தோன்றும்பொழுது சூரியனொளி விளங்காது. இவ்விரண்டு பொருள்களில் ஒன்றன் உபகாரம் மற்றொன்றுக்கு வேண்டப்படாததுபோலக் கடவுளுடைய உபகாரம் உயிருக்கு வேண்டப்படாதது என்றும் உயிர் கடவுளுடைய உபகாரம் வேண்டப்படாமல் தனித்து இயங்கும் ஆற்றலுடையது என்றும் நாம் கொள்ள வேண்டிவரும். இஃது இயற்கை உண்மைக்கு மாறானதாதலால் சைவர்கள் இருள் வெளி உவமையைத் தள்ளிக் கண் அருக்கன் உவமையைக் கொள்வர். கண் அருக்கன் உவமையில் கண்ணும் அருக்கனும் (சூரியனும்) வேறு பொருள்களா யிருத்தல்போல கடவுளும் உயிரும் வேறு பொருள்கள் என்னும் கருத்து விளங்குவதோடு கண் தன்னுடன் அருக்கன் ஒளி கலவாது ஒருபொருளேயும் பார்க்க இயலாததுபோல உயிர் தன்னுடன் கடவுள் கலந்து இயக்கினல் அன்றி இயங்க முடியாது என்ற கருத்தும் நன்கு விளங்குகின்றது. அகர அக்கரமும் ஏனைய அக்கரங்களும் என்ற உவமையையும் சைவர்கள் கூறுவர். "அகரமுதல வெழுத்தெல்லாமாதி - பகவன்முதற்றே யுலகு" என்னும் குறள் இந்த உவமையை நன்கு விளக்குகின்றது.

10. வைணவர்கள் தாங்கள் கூறும் பேதாபேதக் கருத்தை விளக்குதற்கு 'சொல்லும் பொருளும்' என்ற உவமை கூறுவர். இந்த உவமை கடவுளும் உயிரும் கலந்து ஒன்றாய் நிற்கும் தன்மையையும் கடவுள் உயிருடன் செல்லும் முறையில் உயிரின் வேறாய் நிற்கும் தன்மையையும் விளக்குகிறதாயினும் சொல் வாக்கிலும் பொருள்வாக்கின் வேறாய் உள்ளத்திலும் இருத்தல் போலக் கடவுளும் உயிரும் வேறு வேறு இடங்களிலிருப்பனவாகக் குறிக்கின்றது. ஆதலின் சைவர்கள் இந்த உவமை பொருத்தமல்ல என்று தள்ளிக் கண்ணொளி ஆன்மபோதம் என்னும் உவமையைக் கொள்வர். இந்த உவமையில் கண்ணொளி எப்பொருளிற் செல்லுகின்றதோ அப்பொருளில் ஆன்மபோதமும் உடன்சென்றால் அன்றிக் கண்ணொளி அப்பொருளேப் பார்க்க முடியாததுபோலக் கடவுள் உயிருடன் கலத்தலோடு உடனாய் நின்று செலுத்தினல் அன்றி உயிர் ஒரு விடயத்தைப் பார்க்கமுடியாது என்னும் கருத்து நன்கு விளங்குகின்றது.

11. இவ்வாறாக மூன்று சமயிகளும் கூறும் அத்துவிதப் பொருள்களுக்குச் சைவசமயம் வேறு வேறு உவமைகள்கூறி அவைகளே நன்கு விளக்குகின்றது.

12. இனி மூன்று சமயிகளில் ஒவ்வொருவர் கூறும் கருத்து மாத்திரம் நாம் கொண்டால் அத்துவித உண்மை நிரம்புமாறில்லை என்பதும் மூன்று கருத்துக்களும் ஒருசேரக் கொள்ளுதலே இயற்கை உண்மைக்கு இணங்கியுள்ளது என்பதும் கருதுவாம். சைவர்கள் கடவுளுக்கும் உயிருக்குமுள்ள சம்பந்தத்தைக் கலப்பினுல் ஒன்று (அபேதம்) எனவும் பொருளினுல் இரண்டு (பேதம்) எனவும் உடன்செல்லும் தன்மையினுல் ஒன்றிரண்டு (பேதாபேதம்) எனவும் மூன்று நிலையில் வைத்துக் கூறுவர். ஸ்மார்த்தர்கள் கூறுகிறபடி கடவுளும் உயிரும் ஒன்று என்னும் அபேதக் கருத்தைமாத்திரம் நாம் கொள்ளில் உயிருடன் கடவுள் கலந்திருத்தல் மாத்திரம் உயிர் நிலைத்திருத்தலுக்கு வேண்டப்படும் என்றும் உயிர் கடவுளால் அறிவிக்கப்படாமல் தானே அறியும் ஆற்றலுடையது என்றும் கடவுளாற் செலுத்தப்படாமல் உயிர்தான் அறிந்தவற்றிற் சென்றொழுகுதற்கு ஆற்றலுடையது என்றும் கொள்ளவேண்டி வரும். மாத்துவர்கள் கூறுகிறபடி கடவுளும் உயிரும் வேறு பொருள்கள் என்னும் பேதக் கருத்தை மாத்திரம் நாம் கொள்ளில் உயிர்தான் விடயங்களை அறிதலுக்கு மாத்திரம் கடவுள் அறிவிக்கவேண்டும் என்றும் உயிர் நிலைத்திருத்தலுக்குக் கடவுள் அதனுடன் கலந்திருத்தல் வேண்டியதில்லை என்றும் உயிர்தான் அறிந்தவற்றிற் செல்லுதலுக்குக் கடவுள் தன்னைச் செலுத்த வேண்டியதில்லை என்றும் கொள்ளவேண்டிவரும்; வைணவர்கள் கூறுகிறபடி உயிருடனய் நின்று அதனைக்கடவுள் செலுத்துகின்றுன் என்று பேதாபேதக் கருத்தை மாத்திரம் நாம் கொள்ளில் உயிர்தான் அறிந்தவற்றிற் செல்லுதலுக்கு மாத்திரம் கடவுள் அதனுடனய் நின்று செலுத்தவேண்டும் என்றும் உயிர் கடவுளால் அறிவிக்கப்படாமல் அறிதல் கூடும் என்றும் உயிர் தன்னுடன் கடவுள் கலத்தலில்லாமல் நிலைத்திருத்தல் கூடும் என்றும் கொள்ளவேண்டி வரும். இவ்வாறு சொல் வழக்கிலன்றிப் பொருள் வழக்கிலும் ஸ்மார்த்தர், மாத்துவர், வைணவர் மூவர்களில் ஒவ்வொரு சமயி கூறுகின்ற அத்துவிதக் கருத்தும் இயற்கை உண்மை நிகழ்ச்சிக்கு மாருக இருக்கின்றது என்றும் சைவசமயி கூறுகின்ற அத்துவிதக் கருத்து மாத்திரமே இயற்கை உண்மைக்கு இணங்கி யுள்ளதாயிருக்கிறது என்றும் நாம் அறிகிறோம்.

13. இனி உலக நடைக்குச் சைவர்கள் சொல்லும் அத்துவிதக் கருத்து எவ்வாறு இணங்குகின்றது என்பதைச் சிறிது ஆராய்வாம். அத்துவிதம் என்கிற கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள அபேதமான சம்பந்தம் உலகில் வாழும் உயிர்களுக்குள்

ஏகதேசமாய்க் காணப்படுகின்றது. மக்களுக்குள் அரசன், குடிகள், முதலாளி, வேலையாள், குரு, சீடன், உபாத்தியாயர், மாணவர்கள், கணவன், மனைவி, பெற்றோர், பிள்ளைகள், பாது காப்பாளர், சிறுவர், சிறுமிகள், (minors) முதலானசம்பந்தங் கள் காணப்படுகின்றன. அத்துவித சம்பந்தத்தில் கடவுள் ஆண் டான் என்றும், உயிர்கள் அடிமைகள் என்றும் கருதப்படுவது போலவே மேலே கூறிய ஒவ்வொரு சம்பந்த நிலையிலும் ஆள் கிறவர் ஒருவராகவும், ஆளப்படுகிறவர் மற்றொருவராகவும் கரு தப்படுகின்றனர். கடவுளுக்கும் உயிர்களுக்கும் உள்ள சம்பந் தத்தில் கடவுளிடத்தில் பேரறிவும், உயிர்களிடத்தில் சிற்றறி வும் காணப்படுதல்போல மக்களுக்குள் ஒவ்வொரு சம்பந்தத் திலும் ஆளுகிறவர் அதிக அறிவுடையவராகவும், ஆளப்படுகிற வர் குறைந்த அறிவுடையவராகவும் இருப்பதை நாம் காண லாம். மக்கள் உலக வாழ்வு முழுவதும் ஒருவருக்கும் மற்றொரு வருக்கும், அல்லது ஒரு கூட்டத்தாருக்கும், மற்றொரு கூட் டத்தாருக்கும் உள்ள சம்பந்த நிலைகளாகவே யிருக்கின்றன. இந்த நிலைகளை மக்கள் அறிந்து உணர்ந்து அதற்குத்தக்கபடி தங்கள் கடமைகளைச் செய்து ஒழுகுவதே அறமாகும். மக்கள் இவ்வாறு ஒழுகும் அறவொழுக்கம் தங்களுக்கும் கடவுளுக்கும் உள்ள அத்துவிதசம்பந்தத்தை அறிந்து உணர்ந்து ஒழுகுவதற் கும் உரிய வழியாம். அதனிலும் எல்லா உயிர்களிடத்திலும் கட வுள் தங்கியுளன் என்னும் உண்மையை உணர்ந்து ஒழுகுதல் மிகச் சிறந்த வழியாம். இவ்வொழுக்கத்தைத்தான் "உன் தொழிலெல்லாம் அரன்பணி என்று கொள்" என்று சைவசம யம் கூறுகிறது. இதனால் உலகவாழ்வின் ஒழுக்கம் மக்கள் கடவுளோடு அத்துவிதமாய்க் (இரண்டற) கலந்து வீடு அடைதற்கு ஏதுவாகும் என்பது பெறப்படுகின்றது, இப்படி அன்றி ஸ்மார்த்தர், மாத்துவர், வைணவர் ஆகிய இவர்கள் ஒவ்வொருவரும் கூறும் அத்துவிதக் கருத்து உலகவாழ் வொழுக்கத்துக்கு முற்றிலும் இணங்கியுள்ளதா யிருக்கவில்லை என்பது காண்க. ஸ்மார்த்தர் கூறுகிறபடி மெய்யான பிரம்மப் பொருளுக்கும் அநிர்வசனீயமான மாயையில் கற்பிதமான கூடஸ்த ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்தம் எவ்வண்ணம் இருக் கும் என்பதும் அந்தச் சம்பந்தத்தை மித்தையான உலகவாழ் வில், கற்பிதமான ஆன்மா தான்செய்யும் பொய்யானதான, தவங்களினால் எப்படி அடைதல்கூடும் என்பதும் கல்வி கேள்வி அறிவுடையார் உய்த்துணர்ந்து கொள்க.

13. கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்த மாகிய அத்துவித உண்மையை விளக்குதற்காகவே ஏனைய உண்

மைகள் எல்லாம் அமைந்திருத்தல் வேண்டும்; அப்படி யில்லாவிடின் உயிர்கள் அத்துவித உண்மையை அறிந்து அத்துவிதநிலையை அடைதல் கூடாததாகிவிடும். சைவசமய உண்மைகள் எல்லாம் அவ்வாறே அமைந்திருக்கின்றன. முப்பொருளுண்மை, உயிரைச் சார்ந்துள்ள ஆணவமல மறைப்பு, கடவுளுடைய எண்குணங்கள், ஒன்றனைச்சார்தலும் சார்ந்த வண்ணமாதலு மாகிய ஆன்மாவின் குணம், உள்ளது தோன்றும் இல்லது தோன்றாது என்னும் சத்காரியவாதம், ஆண்டான் அடிமைத் தொடர்பு, உலகில் கடவுளின் அருள் விளங்கும் தன்மை, அணுவின் அவயவத்தன்மை முதலிய சைவசித்தாந்த உண்மைகள் எல்லாம் சைவர்கள் கூறும் அத்துவித உண்மையை விளக்கி உயிர்கள் அத்துவித நிலையை அடையச்செய்யும்படி யுள்ளவைகளாயிருக்கின்றன. அத்துவித நிலையை உயிர்கள் அடைகிறதற்காகச் சைவசமயத்திற் கூறப்பட்டிருக்கும் வழிபாடுகளும் மேலே சொன்ன உண்மைகளைச் சார்ந்தேயுள்ளன. இதனை எடுத்து விரித்துரைப்பிற் பெருகும்.

14. மேலே கூறிய சைவசித்தாந்த உண்மைகளிற் சில தற்கால ஐரோப்பிய பௌதிக சாஸ்திரங்களாற் கண்டுபிடித்த உண்மைகளாம். வேறு சில இன்னும் அவர்களால் அறியப்படவில்லை. மாயையின் அநாதி நித்தியத்தன்மை (indestructribility of matter) ஒரே சத்தி உலகில் பலவாறாய் விளங்கும் தன்மை (the manifestatiou of one energy in various forms of matter) அணுவின் அவயவத்தன்மை (divisibility of atom into electrons) ஆகிய இந்தச் சைவசித்தாந்த உண்மைகளை இப்பொழுது பௌதிகசாஸ்திரிகள் பலவாறாய் விரித்துக் கூறுகின்றார்கள். இவைகள் வெகுகாலத்துக்கு முன்னே சைவநூல்களிற் கூறப்பட்டுள்ளன.

15. என் சிற்றறிவிற் கெட்டியவாறு இதனைப்பற்றி ஓர் கருத்தை இங்கே அதன் உண்மை தெரிவதற்கு நான் கூறுகின்றேன். அஃது அளவைப் பிரமாணங்களுக்கு ஒத்திருப்பின் அறிவுடையார் கொள்க; அல்லாவிடின் அதனைக் காரணம் கூறித் தள்ளுக. கடவுளுடன் உயிர்கள் அத்துவித நிலை அடைதல் அவன் அருளைத் துணையாகக்கொண்டு ஆகும். இந்த அருள் மாயையுடன் சம்பந்தப்படாத நிலையில் பராசத்தி என்றும் மாயையுடன் சம்பந்தப்பட்ட நிலையில் ஆதிசத்தி அல்லது திரோதானசத்தி என்றும் கூறப்படும். இந்த ஆதிசத்தி தான் உலகின்கண் வியாபாரிக்கும் பொழுது இச்சாசத்தி, ஞானசத்தி கிரியாசத்தி என மூன்று பிரிவாகின்றது. கடவுள் உயிர்களுடன் கலப்பினால் ஒன்றாதலும் பொருட்டன்மையால் உயிர்களின் வேறாத

லும் உயிர்களுடன் உடனாய் நிற்கும் தன்மையால் உடனாதலும் என்று கூறப்பட்ட மூன்றுவித அத்துவித நிலைகளும் இச்சா சத்தி ஞானசத்தி கிரியாசத்தி என்னும் மூன்று சத்திகளையும் சார்ந்துள்ளன. இச்சாசத்தி ஒன்றாதலுக்கும் ஞானசத்தி வேறா தலுக்கும் கிரியாசத்தி உடனாதலுக்கும் சார்ந்திருப்பவைகளாக நாம் ஊகித்து அறியலாம். ஓர் ஆன்மாவின் உள்ளத்தில் ஓரிச்சை நிகழ்ந்தால் அவ் விச்சையை நிறைவேற்றுதலுக்கு அதற்குரிய ஞானம் வேண்டும்; ஞான மிருந்தாலும் அவ் விச்சையை நிறை வேற்றுதற்குரிய ஞானத்தினால் அறிந்தபடி கிரியை நிகழல் வேண்டும். இச்சை மாத்திரம் நிகழ்ந்தாலும் இச்சை நிறை வேறாது; இச்சை நிறைவேறுதலுக்கு மற்றிரண்டும் ஒருங்கே நிகழ்தல் வேண்டும். இந்த அநுபவம் உலக வாழ்வில் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். உயிர்களிடத்தில் இச்சை நிகழ்த லுக்குக் கடவுள் உபகாரம் வேண்டும்; இந்த உபகாரம் செய்கிற தற்குக் கடவுள் உயிர்களுடன் கலந்திருக்கிறான். அறிவு நிகழ்த லுக்குக் கடவுளுடைய உபகாரம் வேண்டும்; இந்தக் (காட்டும்) உபகாரம் செய்கிறதற்கு அவன் உயிர்களின் வேறாய் நின்று அறிவிக்கின்றான். கிரியை நிகழ்தலுக்குக் கடவுளுடைய உபகா ரம் வேண்டும். இந்த (காணும்) உபகாரம் செய்கிறதற்கு அவன் உயிர்களுடன் செல்லுகிறான். ஆன்மாக்கள் பலர் தாங்கள் உலகில் ஒன்றைச் செய்தல் தங்கள் கடன் என்று அறிந்திருந்தும் செய் தற்கு இச்சையிருந்தும் அதனை அவர்கள் செய்யாதிருத்தலை நாம் காண்கின்றோம்; அதற்குக் காரணம் அவர்கள் தங்களோடு கடவுள் உடனாய் நிற்கும் உபகாரத்தை (காணும் உபகாரம்) உபயோகம்செய்து கொள்ளாமலிருத்தலாம்.

16. இவ்வாறாகச் சைவசமய அத்துவித உண்மை வட மொழிச்சொல் வழக்குக்கும் வேதப்பொருள் வழக்குக்கும் உலக நடை வழக்குக்கும் சமய உண்மை வழக்குக்கும் ஐரோப் பிய பௌதிக சாஸ்திரிகளின் ஆராய்ச்சி உண்மைக்கும் ஒத்துள் ளதாயிருக்கின்றது. இதனைப் பொதுவாக எல்லா மக்களும் சிறப்பாகச் சைவ மக்களும் சைவ நூல்களைக் கற்றும் தெரிந் தார் வாயிற்கேட்டும் கற்றும் கேட்டும் அறிந்தவற்றைத் தங்கள் உள்ளத்தில் ஆராய்ந்து சிந்தித்தும் சிந்தித்தவற்றை அநுபூதி அறிவில் தெளிந்தும் உணர்ந்தும் உணர்ந்தவாறே ஒழுகியும் எல்லா இன்ப நலங்களையும் அடையும்படி எல்லாம் வல்ல இறை வன் திருவருள் செய்வாராக.

## பிழைதிருத்தம்

சிலம்பு ரு. பரல் ௩. பக்கம் க௯அ - ல் भ्रह्म என்றிருப் பதை ब्रह्म என்று திருத்தவேண்டும்.

# கொங்கு நாட்டின்கணுள்ள தேவார வைப்புத்தலங்களின் விளக்கம்

[K. குமாரசாமி பிள்ளையவர்கள்]

## (க) திருப்பேரூர்

இத் திருத்தலம் கோயமுத்தூருக்கு மேற்கில் மூன்றுமைல் தூரத்தே காஞ்சிமா நதியின் றென்கரையில் விளங்குவது. மேலைச் சிதம்பரம் எனவும் வழங்கப் பெறும்.

ஆளுடைய நம்பிகள் ஈண்டெழுந்தருளப் பெற்றுத் தம்மை யாண்டவர் கோயிலுட் புக்கு வலங்கொண்டு, கரையிலாப் பேரன்பா லுருகித் தாண்டவமாடும் பெருமானுரைது திருவருளிற் றிளைத்துப் பின்னர்ச் சிதம்பரஞ் சென்று தரிசிக்குங்கால், நன்னெறிக்க ணின்றூர்கள். வழுவி நரகணையா வண்ணந் தடுப்பானைப் பேரூரிற் கண்ட வண்ணஞ் சிறப்பித்து "மீகொங்கி லணிகாஞ்சி வாய்ப் பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்று மன்றே" யெனப் போற்றியருளப் பெற்றது. அன்றியும் ஊர்த்தொகைத் திருப்பதிகத்துள் "பேரூருறைவாய்ப்பட்டிப்பெருமான் பிறவா நெறியானே"யெனவும், திருநாவுக்கரசுசுவாமிகள் திருக்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகம் (உ) ம் பாசுரத்துள் "பேரூர் பிரம புரம்" எனவும், திருவீழிமிழலைத் திருத்தாண்டகம் (அ) ம் பாசுரத்துள் "ஆரூர் பேரூர் அழுந்தூருள்ளார்' எனவும் போற்றியருளப் பெற்றது.

எலும்பு கல்லுருவாகும் காஞ்சிமா நதியாலும், பிறவாப் புளி, இறவாப்பனை ஆகிய தல விருக்ஷங்களால் பிறப்பிறப் பின்மையையும் விள்க்கிக் காட்டுவது.

## (உ) திருக்குரக்குத்தளி

இது "கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா" என ஆளுடைய நம்பிகளால் ஊர்த்தொகைத் திருப்பதிகத்துட் போற்றப் பெறுவதாகும்.

தொண்டை நாடு 24 கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருத்தல்போல, இக்கொங்கு என்னும் பெரும்பிரிவு நாட்டினையும் 24 உண்ணுடுகளாகப் பூர்வமே பிரித்துள்ளார்கள். அவற்றுட் குறும்பு என்னும் நாட்டில் உளது இத் திருத்தல மாதலினாலும், குரக்கரசனாகிய சுக்கிரீபன் வழிபட்டுப் பேறுபெற்றதாதலினு

லும் "கொங்கிற் குறும்பிற் குரக்குத்தளியாம்" எனத் திருவாய் மலர்ந்தருளினர் சுந்தரமூர்த்திசுவாமிகள் என்க.

சுவாமி திருநாமம் சுக்கிரீபேச்சுரர் என்பதும் இதனை வலியுறுத்தும், சிவலிங்கத் திருவுருவம் மிகப் பெரிய ஆகிர்தியையுடையதாயும், ஒளிமயமாயும் விளங்குவது.

பல கல்வெட்டுக்களையுடைய ஆலயம்; மிகச் சிறந்த சிற்ப அமைப்பினை யுடையது. திருவவிநாசியில் வரும் நள்ளாறு என்னும் நதியும் திருப்பேரூரினின்றும் வரும் காஞ்சிமாநதியும் கூடும் சங்கமுகத்துறைக்கு அருகிலுள்ளது. பதினைந்து வருடங்கட்கு முன்னர் வாவிப்பாளையம் குப்புச்சாமிக் கவுண்டரும், எளியேனும், இந்தலம் முன்னர் மைசூர்ச் சமஸ்தானத்தாரால் ஆதரிக்கப் பெற்று வந்ததெனத் தெரிந்து அங்கு விண்ணப்பித்துக் கொண்டதற்கு, அங்கிருந்து ஓர் அதிகாரி வந்து பார்த்துச் சாசனங்களைப் பிரதிசெய்து கொண்டு சென்று சிலமானவற்றைச் சீர்திருத்துமாறு 800 ரூபா அனுப்பப்பெற்று மேற்கூறிய கவுண்டரவர்களால் அவ்வாறே சில திருத்தப் பணிகளும் நடந்தேறின.

இஃது ஈரோட்டிலிருந்து கோயமுத்தூர் செல்லும் இருப்புப்பாதை வழியிலுள்ள கூளிபாளையம் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் தூரம் கற்சாலை வழியே தெற்குத் திக்கிற் சென்று, நஞ்சராயன் குளம் என்னும் பெரிய ஏரிக்கரையை யடைந்து, அவ்வேரியின் கால்வாய் வழியே கிழக்கில் அரைமைல் தூரம் சென்று காணத்தக்கது.

## (௬.) குடக்கோட்டூர் (மோக்கணீச்சுரம்)

இது திருவாதவூரடிகளால் திருவாசகத்துட் கீர்த்தித்திருவகவலுள் "மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி-சொக்கதாகக் காட்டிய தொன்மையும்" எனப் போற்றப் பெற்றுள்ள திருத்தலம். மொக்கணி - குதிரைக்குக் கொள்ளுக் கட்டும் பை. அப்பையே சிவலிங்க வடிவமாக ஓர் செட்டிப்பிள்ளை தன் அத்தானுக்குப் பரிகாசமாக அமைத்துவைக்க, அவன் மெய்ம்மைச் சிவவடிவ மென்றுன்னிக் குழைந்த பேரன்பால்வணங்க அதுவே சிவலிங்கமாக நிலைபெற்ற திருத்தலம். இஃது அங்குள்ள கர்ண பரம்பரைச் சரிதம். இதனைப்பற்றி நம் நண்பரும் சிவநேயச் செல்வருமாகிய கோயமுத்தூர் அரசாங்கக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியராகிய திருவாளர் அ. கந்தசாமிப் பிள்ளையவர்கள் முன்னமே நமது செல்வியில் விளங்க வரைந்துள்ளார்கள். அதனுள் இன்னும் விபரமாய்க் காணலாம்.

இவ்வாலயம் துருக்கர்களால் நாசமாக்கப்பட்டு அழிந்து போயிற்று. ஆலயமிருந்த அமைப்பு முழுதுங் காணலாகும்.

உற்சவ மூர்த்திகள் கிழக்கே மூன்று மைல் தூரத்தேயுள்ள சேவூர் என்னுந் திருத்தலத்தில் வைத்துப் போற்றப் பெற்று வருகின்றன. இதற்குத் திருவவிநாசியிலிருந்து ஐந்துமைல் தூரம் வடக்கே கற்சாலை வழியே சேவூர் சென்று பின்பு மேற்கில் மட் சாலை வழியே மூன்று மைல் தூரம் சென்று காணத்தக்கது.

## (ச) மாட்டூர் (சேவூர்)

இத்திருத்தலத்தை ஆளுடையபிள்ளையார் திருக்ஷேத்திரக் கோவைத்திருப்பதிகம் (எ)ம் திருப்பாசுரத்திலும், ஆளுடைய நம்பிகள் ஊர்த்தொகைத் திருப்பதிகத்துள் "மாட்டூரறவா மற வாதுன்னைப் பாடப் பணியாயே" எனவும் போற்றப் பெற்றுள் ளது. இது தற்காலம் சேவூர் என வழங்குகிறது. மாடு, சே ஆகிய விரண்டும் ஒரு பொருட் சொற்கள். இடபபுரி யெனச் செய்யுள்வழக்கில் இங்கு வழங்குகிறது. வாலி என்னும் குரங்கர சன் வழிபட்டுப் பேறுபெற்ற திருத்தலம். சுவாமி திருப்பெயர் "வாலீச்சுரர்" சேவூர் என்பதற்கு நந்தி யெம்பெருமானாலும் வழிபாடு செய்யப்பெற்றது போலும். கொடுமுடி ஞானசிவ தேசிகரவர்களாற் செய்யப்பெற்ற ஓர் தமிழ்ப் புராணமும் உண் டெனக் கேள்வி.

## (ரு) அறைப்பள்ளி

இத்திருத்தலம் கொங்கு நாட்டின் கிழக்கெல்லையாகிய கொல்லி மலையின்கண் விளங்குவது. இதனை ஆளுடைய வரசுகள் திருக்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் முதற்றிருப்பாசு ரத்துள் "கொல்லிக்குளி ரறைப்பள்ளி" எனவும், அடைவுதிருத் தாண்டகம் முதற்றிருப் பாசுரத்துள் "கள்ளார்ந்த கமழ்கொல்லி யறைப் பள்ளி" யெனவும் போற்றப்பெற்றுள்ளது. மிக்க குளி ரினையுடைய இடமாதலின் குளிர்அறைப்பள்ளி யென்றருளினர் போலும்.

இது கொல்லி யென்னும் மலையின் தாழ்வரையினின்றும் மலைமீதே ஆறு மைல் தூரம் சென்று காண்பது. ஆலயத்தின் முன்னர் மலையருவி அழகிய நதியாகச் செல்வது. பல வளங்கள் செறிந்த நல்லிடம். அர்ச்சகர் அங்கேயே தங்கி யிருந்து வாரத் திற் கொருவராக முறைவைத்துச் சென்று இருவர் பூசை புரிந்து வருகின்றார்களெனத் தெரிகிறது. ஆடிமாதம் பதினெட்

டாம் நாள்கடோறும் ஏராளமான ஜனங்கள் சென்று தரிசித்து வருகின்றார்களென்பதும் பிரசித்தம். சிவலிங்கத் திருவுருவம் மிக்க ஒளி வடிவாயது.

கொல்லி யென்னும் நல்லெழிற்பாவை யுளதெனப் பண்டைத் தமிழ் நூல்கள் கூறுவதும் இம்மலையையே தான். அப்பாவையை இப்பொழுது காண்டல் அரிதாகும். அஃது அறைப்பள்ளி யீச்சுரரது ஆலயத்தின் மேற்குத் திக்கில் உளதெனக் கொல்லிமலை அகராதி யெனும் நூலும் கூறுவதாகக் கொங்கு மண்டலசதகப் பதிப்பாசிரியர் கூறுகிறார்.

இத்தலத்திற்குக் கணபதிபாளையம் ஸ்ரீ வாகீச சைவசித்தாந்த சபை யடியவர்கள் சென்ற வைகாசியில் சென்று தரிசித்து வர அவர்களால் பல உண்மைகளும் விளங்கின. இத்தலம் வெயிற்காலத்திற்றான் சென்று தரிசிக்க வசதியாக வுளது.

## (சூ) ஏழூர்

இத்திருத்தலம் ஆளுடைய வரசுகளால் திருக்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் (ரு)ம் திருப்பாசுரத்துள் "ஏழூர் தோழூர் "எனப் போற்றப் பெற்றுள்ளது. இஃது திருச்செங்கோட்டிலிருந்து பதினான்கு மைல் தூரம் கிழக்கே யுள்ளது, அதன் அருகே யுள்ள மணலி, அகரம் முதலிய ஏழுதிருத்தலங்களிலுமிருந்து இங்கு மூர்த்திகளை எழுந்தருளுவித்துத் திருவிழா நடந்தமையால் இதற்கு ஏழூர் எனத் திருநாமம் வாய்ந்ததென்கிறார்கள். கொங்குநாட்டின் உட்பிரிவு நாடுகளுள் ஒன்றாகிய பூந்துறை நாட்டின் இணைநாடுகளுள் ஒன்றாகிய ஏழூர் நாட்டிற்குத் தலைநகராயது. இதனைப் பற்றி யான் கணபதிபாளையம் வாகீச சைவ சித்தாந்த சபையிற் பேசிக்கொண்டிருந்த பொழுது சிவநேயச் செல்வரும், அடியேனிடம் உழுவலன்புடையவரும் ஷெ சபை அடியவர்களுள் ஒருவருமாகிய இராம சுவாமிக் கவுண்டரவர்கள் அங்குச் சென்று, அங்குள்ளார்களை விசாரித்ததில் ஆலயம் நெடுங்காலத்திற்கு முன்னமேயே யழிந்து, அந் நிலங்களெல்லாம் பயிரிடும் நிலங்களாக ஆக்கப்பட்டு, சிவலிங்கப் பெருமான் மாத்திரம் தனித்து ஓர் கிணற்றின் கரையருகில் இருக்கக் கண்டனராம். அத் தோட்டக்காரனை விசாரித்த பொழுது அவன் இக்கோவில் எந்த நாளில் இடிபட்டதோ தெரியாதெனவும், இங்கே கிடந்த சில சிலா விக்கிரகங்கள் ஓர் அரச மரத்தடியிற் பிள்ளையார் கோவிலில் வைக்கப்பட்டிருப்பவாகவும் கூறக்கேட்டு, ஆண்டுச் சென்று நோக்குங்கால் தக்ஷிணா மூர்த்தியும், சூரிய மூர்த்தியும் இருக்கக் கண்டனராம். பின்னர் அவனை இச் சிவலிங்கத்தை ஏன் இவ்வாறு விட்டு விட்

டீர்கள் என்று கேட்டதற்கு அவன், இதனைத் தோண்டிப் பார்த்தோம். போகப்போக அது கீழேயே போய்க்கொண்டிருக்கிறது. எங்களால் தோண்டி அடியைக் காணமுடியவில்லை; ஆதலின் விட்டுவிட்டோம் என்றனனும். "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடி" எங்கே இப் பாவிகட்குக் காணக்கிடைக்கும். அந்தோ சுயம்பு மூர்த்தி வெயிலிற் காய்ந்தும், மழையாலும் பனியாலும் நனைந்தும் உள்ளாராம். பூசை முதலிய ஒன்றுங் கிடையாவாம். மணலியில் ஓர் ஜமீன்தார் இருந்தும் இதனைச் சிறிதும் கவனித்தாரில்லை. இத் திருத்தலம் விளக்கமுறு நாளென்றோ வறிகிலேம். இத் திருத்தலத்திற்கருகே ஓர் பெரிய ஏரியை யுடையதாகி மிக்க வளமலிந்த நல்லிடமாக விருக்கின்றதாம். இத் தலத்தின் திருத்தேர்களுள் ஒன்று திருச்செங்கோட்டில் சுப்பிரமணிய சுவாமிக்கு உரித்தாகத் திருவிழா நடைபெறுகின்றது. அத் திருத்தேர்க்கு அங்கு ஏழூர்த் தேரென்றே கூறுவது வழக்கமாக விருக்கிறது.

இத்தலத்தின் சில உற்சவ மூர்த்திகள் அங்குள்ள பெருமாள் கோவிலில் ஆராதனை முதலியன ஒன்றுமின்றி வைக்கப்பட்டிருக்கின்றனவாம். அந்தோ ஒவ்வொன்றும் பரிதாபகரமானவைகளேயாம்.

(எ) தோழூர்

இஃது அப்பர் திருக்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில் ஏழூருடன் சேர்த்து "ஏழூர் தோழூர்" எனவும், அடைவு திருத்தாண்டகம் (௪)ம் திருப்பாட்டில் "துறையூருந் துவையூருந் தோழூர் தானும்" எனவும் போற்றப் பெற்றுள்ளது. இத்திருத்தலம் சேலம் ஜில்லா நாமக்கல் என்ற நகரிலிருந்து வடமேற்கில் ஆறுமைல் தூரஞ்சென்று காண்பது. இதனையும் ஏழூர் சென்று கண்ட இராமசாமிக் கவுண்டரவர்களே சென்று தரிசித்து வந்து கூறினார்கள். இத்தலத்திலிருந்து வடமேற்கில் ஒன்பது மைல் தூரஞ்சென்றால் ஏழூர் காணலாம்.

(அ) பூந்துறை

இஃது அடைவு திருத்தாண்டகம் (கக)ம் திருப்பாட்டிற் காணப் பெறுவது கொங்கு 24 நாடுகளுள்ளும் தலைநாட்டின் தலைநகராயுள்ளது. சுயம்புலிங்கம் ஒன்றையும் உடையது. சுவாமி திருப்பெயர் புஷ்பவன நாதர். இதனை ஈரோட்டினின்று காங்கேயம் செல்லும் கற்சாலையில் தெற்காக எட்டு மைல் தூரஞ் சென்று காணத்தகும். இந்நகரில் தொன்மையான சமண் ஆல

யங்களும் விளக்கமாக உள்ளன. ஸ்தல புராணமும் உண்டு. தேவாரத்திற் கூறப்பெறும் பூந்துறை, சிந்துபூந்துறையே யெனவும் கூறுகிறார்கள். இது தாமிரபர்ணி நதிக் கரையிலுள்ளது. இவ்விரண்டில் எதனைக் கொள்வதென அறிஞர் உணர்த்தின் நலமாகும்.

## (கூ) திருக்கரபுரம்

இத்திருத்தலம் திருநாவுக்கரசு சுவாமிகளது திருவீரட்டானக் காப்புத்திருத்தாண்டகம் (எ)ம் திருப்பாட்டில் "கண்ணார் நுதலார் கரபுரமும் காபாலியார்தங் காப்புக்களே." எனப் போற்றப் பெற்றுள்ளது. உத்தமச்சோழபுரம் எனவுந் திருப்பெயர் வழங்குகிறது, திருமணிமுத்தா நதியின் கரையில் விளங்குவது. கரன் என்னும் அசுரன் வழிபட்டது.

பத்தாந்திருமுறை யாகிய திருமந்திரத்துள்,

"மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோம பிரம னுருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோ
டிந்த வெழுவரு மென்வழி யாமே.

எனத் திருவருட் பெருஞ்சித்தராய திருமூலநாயனார் திருவாக்கின் வண்ணம், அவர் தந் திருவருள்பெற்ற மாணாக்கர் எழுவருட் கஞ்சமலைச் சித்தர் என்றும் வழிபாடு புரிவது. இச்சித்தர் பெருமானது ஆலயமும் ஈண்டுக்கூறிய கஞ்சமலையில் மிக்க சிறப்போடும் விளங்குகிறது. இக்கஞ்சமலை கரபுரநாதர் ஆலயத்தின் மேற்குப்பாகத்தில் அருகிலேயே விளங்கும் உன்னதமலையாகும். இம்மலையில் உள்ள கருங்காடு என்னும் உயரிய வனத்திற்றான் அதிகமான் நெடுமான் வஞ்சி என்னும் சேரன் கருநெல்லிக் கனியை மேற்கூறிய சித்தர் பெருமானாற்பெற்று ஔவையார்க்குக் கொடுத்தனன். அதன் விபரம் இத்தலபுராணத்தில் விவரித்துளது. இக்கரபுரம் என்னுந் தலத்தில் ஓர் ஆதிசைவக் குழந்தைக்குப் பெருமான் திருமுடி சாய்த்தருளினர் எனப் புராணங் கூறுகிறது. இங்குள்ள மலைவளமும், திருமணிமுத்தாநதியாலாய நீர் நிலவளங்களும், ஆலய அமைதியுங் கண்டோர் மனமுங் கண்ணுங் களிதூங்குதல் திண்ணம். இத்திருத்தலம் சேலத்திலிருந்து கற்சாலை வழியாகத் தெற்கில் மூன்றுமைல் சென்று காண்பது. கஞ்சமலையின் தெற்குப் பாகத்தில் மகுடஞ்சாவடி என்னும் ஸ்டேஷனும், வடக்குப்பாகத்தில் அரியனூர் ஸ்டேஷனும் அருகாக உள்ளன.

திருவிரிஞ்சைக்குக் கரபுரம் என்னும் பெயரும் உண்டெனவுங் கூறுவர்.

## (ய) தகடூர்

இத்திருத்தலம் ஆளுடைய நம்பிகளருளிய திருநாட்டுத் தொகைத் திருப்பதிகத்துள் (க)ம் பாசுரத்தில் "தகடூர் தக்களூர்" எனப் போற்றப்பெற்றுள்ளது. இது தற்காலம் தர்மபுரி என வழங்குகிறது. தகடூர் என இத்தலத்துக் கல்வெட்டுகளுட் காணப்பெறுகிறது. இஃது அதிகன் என்னும் சேரனது ராஜதானி நகரம். தகடூர் யாத்திரை என்னுஞ் சங்கநூலும் இந்நகரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுவதெனவே கூறுவர். கொங்குமண்டல சதகத்தும் தகடூர் இத்தருமபுரியேயெனக் கூறப்பெற்றுள்ளது. இஃது சென்னை யிருப்புப்பாதையில் மொரப்பூரிலிருந்து பிரியும் கிளைவழியிற் சென்று காண்பது.

## (கக) மூலனூர்

இஃது ஆளுடைய நம்பிகளருளிய திருநாட்டுத்தொகை (ங)ம் திருப்பாட்டுட் காணப்பெறுவது. இதனைத் தவிரச் சோழநாடு, பாண்டி நாடு, தொண்டைநாடு முதலிய இடங்களுள் இப்பெயர்கொண்ட தலம் ஒன்று இருக்கின்றதோ என்னவோ அறிகிலேன். ஆனால் இங்கு ஓர் அருமையான புராதன சிவாலயமும் அவ்வாலயத்தைச் சார்ந்த ஆதிசைவ பரம்பரை யாதீன பரமசிவ பண்டிதர் என்னும் பட்டம் வாய்ந்த கர்த்தர் வசிக்கும் மடாலயமும் நன்கு விளக்கமாகவுள்ளன. யான் இருபத்தைந்து வருடங்கட்கு முன்னர் இத்தலத்திற்குச் சென்று தரிசித்துள்ளேன். இது த்ராபுரத்திலிருந்து கருவூர் செல்லும் கற்சாலையில் பத்துமைல் தூரம் கிழக்கே சென்று காண்பதாகும்.

## (கஉ) திருக்களந்தை ஆதித்தேச்சரம்

இத்திருத்தலம் களந்தை யாதித்தேச்சரமெனக் கருவூர்த்தேவர் திருவிசைப்பாத் திருப்பதிகத்தாற் போற்றப் பெறுவதாகும். இவ்வாலயத்துக் கல்வெட்டில் ஆதிச்சுரம் எனக் காணப்பெறுகிறதாம். இக் கல்வெட்டின் செய்தி போலீஸ் இன்ஸ்பெக்டர் திருவாளர். சண்முக முதலியாரவர்களால் தெரிந்தது. சுவாமி திருநாமம் ஆதித்தேச்சுரர். ஆதித்த தீர்த்தம் என ஓர் தீர்த்தமும் உளதாம். சூரியனால் வழிபட்டதெனத் தெரிகிறது. மூலஸ்தானத்தில் அம்பிகை விடைமீது எழுந்தருளிய திருக்கோலத்தோடே விளங்குவது.

இதனையன்றிப் பொன்விளைந்தகளத்தூர் என்பதே களந்தை யென மருவிற்றென்று கூறுகின்றனர் பலரெனச் சொல்வர். கொங்கிலுள்ள இத்திருக்களந்தை யாதொரு விகாரமுமின்றி யாவராலும் களந்தையென இன்றும் விளக்கமாகக் கூறுவதாம். இது கோயமுத்தூருக்கருகேயுள்ள போத்தனூரிலிருந்து பொள்ளாச்சி செல்லும் கிளை யிருப்புப்பாதை வழியே கோயிற் பாளையம் ஸ்டேஷனிலிறங்கி மட்சாலை வழியே கிழக்கில் ஐந்து மைல் தூரம் சென்று காண்பது.

இன்னும் இவை போன்ற பல திருத்தலங்களும் இருக்கலா மென எண்ண இடமுண்டு. திருஞானசம்பந்த சுவாமிகள் திரு க்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகம் (ரு)ம் திருப்பாசுரத்துள் திருவாய் மலர்ந்தருளும் “பாடி நான்கும்” என்பதற்கு, திரு வெதிர்கொள்பாடி, திருவாப்பாடி, திருமழபாடி எனும் மூன்று திருத்தலங்களையும் சைவத் திருவாளர் க. சதாசிவச் செட்டியா ரவர்கள் காட்டி யுள்ளார்கள். மற்றொருபாடி இக்கொங்கு நாட் டில் “இடைப்பாடி” என்ற ஒரு திருத்தலம் சேர்வராயன் மலை யினின்றும் பெருகிவரும் சரபங்க நதியின்கரையில் விளங்கு கிறது. அதனைப்பற்றிய விபரம் பின்னர் எழுதுகிறேன். பொருந்துமாயிற் சைவ வுலகம் கொள்க.

---

# மணம்

[க. ப. சந்தோஷம் அவர்கள் B. A., L.T.]

(சஎக - ம் பக்கத் தொடர்ச்சி)

ஒவ்வொன்றும் தனதினம் அழியாதிருப்பதை யுன்னித் தன்னைப்போல் பிறிதொன்றைச் சாகுமுன் ஈன்றெடுப்பது தகுதி யுடைத்தாயின், அதற்கு இன்றியமையாததாகிய புணர்ச் சியின் மேலுள்ள ஆவல் மற்றெவ்வகை ஆவலினும் வலிவுடைத் தாயிருத்தல் வேண்டுமென்பது எவரும் ஒப்புக்கொள்ளக் கூடி யது. ஒன்று அல்லது இரண்டு புலன்களுக்கு மாத்திரம் இன் பந்தருமொரு செயலைச் செய்ய எழுகின்ற வேட்கை, மூன்று அல்லது நான்கு புலன்களுக்கு இன்பத்தைப் பயக்கும் ஒரு செயலைக்கருதிய வேட்கையைவிட வலிகுறைந்திருக்குமென்பது சிறுமகாரும் அறியும் உண்மையாகும். பாட்டினிமை மிகநன்று; ஆயினும் இவ்வினிமையின் பொருட்டு உணவு இறங்காமையும், இரவுகழியாமையும், நினைந்து நெட்டுயிர்ப்பு விடுதலும் ஆகிய இவை போல்வன நிகழ்வதில்லை. அறுசுவை உணவுநன்று; ஆயி

னும் அவ்வுணவின் மேல் வந்த விருப்பத்தால் ஒருமகளுடைய வளைகள் கழலுமோ? அவளது மேனி பசக்குமோ? அவள் தன்னந்தனியளாய்த் தாய் தந்தையரை விட்டு வெய்ய சுரங் கடந்து வேற்றூர் செல்ல உடன்படுவாளோ? கண்ணிற்குக் குளிர்ந்த காட்சி யொன்றை நாடி ஒருமகன் நள்ளிரவிற் காடு மலையுங் கடந்து, கரடி புலிகளை யெதிர்த்துத் தன் உயிரிற்குத் தீங்கிழைத்துக் கொள்ள முன்வருவானோ? இல்லை. இவை ஒவ்வொரு புலனுக்கு நன்மை பயப்பனவாதலால், அவற்றின் மேலுள்ள விருப்பம் எவ்வளவு வலியுடைத்தாயினும் பொது வாக மக்களை மயக்கித் தம்மறிவு கெட்டுத்தடுமாறச் செய் வதில்லை. புணர்ச்சியின் மேலுள்ள விருப்பமும் இத்தகைய ஒன்றானல் மக்களதை எளிதிலடக்கிக் கொள்ளக்கூடும். அவ்வாறாயின் இயற்கையின் அமைப்பாகிய உயிர்வளர்ச்சி தடைபட்டு நின்று விடும். உயிரென்பது ஒன்றினின்றும் மற்றொன்றிற்கு ஊட்டப் படுமேயன்றி ஆக்கப்படாது; ஊட்டப்படுவதற்குக் கூட்டம் வேண்டும். ஆதலின் கூட்டத்தின் மேலுள்ள இவ்விழைவு ஒரு புலனைச் சார்ந்து நில்லாது ஐம்புலன்களிலுங் கூடிநின்று ஆற் றின்மேற் புணையென மக்களை வலித்துச் செல்கின்றது. இக் கருத்தை,

“கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள”

என்ற குறளில் வள்ளுவர் அமைத்துவைத்தது காண்க. இயற் கை யமைப்புக் கேற்ப நிற்கு மிக்காதலைக் கடிந்து கூறலாற் பய னொன்று மில்லை.

உயிர்வகைகளில் மிகக் கீழானவைகளாகிய புற்பூண்டு முத லிய சில்லறிவையே யுடையன. இவைகளுக்கு உணவை யருந் தும் உறுப்புக்கள் (வேர்) கீழும் புணர்ச்சிக்குரிய உறுப்புக்கள் (பூ) மேலும் அமைந்து நிற்பது தமிழறிஞர் மாணிக்கநாய்க்கர் அவர்கள் காட்டிய உண்மை. ஆறறிவுடைய மக்களுக்கு உணவரு ந்தும் உறுப்பு (வாய்) மேலும் புணர்ச்சிக்குரிய உறுப்புக்கள் கீழும் அமைந்திருக்கின்றன. இங்ஙனம் குறைந்த அறிவுடைய உயிர்களுக்குத் தலைகீழும் கால் மேலும், ஆறறிவுடைய உயிர்களுக் குக் கால் கீழும் தலை மேலுமாய் உறுப்பமைந்திருக்க, இவற் றிற்கு நடுவேயுள்ள ஊர்வன, நடப்பன, பறப்பன ஆகியவற்றிற் குத் தலை முன்னும் காலும் வாலும் பின்னுமாய் ஒழுங்குபட்டு நிற்கின்றன. இதுபற்றி இவற்றை விலங்கென்றார் தமிழர். (விலங்கு -குறுக்கே வளர்வது) புல் முதல் மக்கள் வரை உறுப் பமைப்புக்களில் வேறுபாடுகள் பலவிருப்பினும் எல்லா வுயிர்

வகைகளிலும் தீண்டலாலேயே புணர்ச்சி நடக்கின்றது. இதனால் உயிர்கள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்குந் தன்மையை யுணர்ந்து கொள்க. தீண்டலின் பெருமை இத்தன்மைத்தாக, புணர்ச்சியில் நாற்றம் எத்தனை வலியுடையதென்பதைச் சிறிது ஆராய்வாம்.

ஆடுமாடு முதலிய விலங்குகள் சேருங்கால் முகர்தலெல்லாவற்றினும் முதன்மையாய் நிற்கின்றது. நாய் பூனை புலி முதலியவை முகர்தலென்னு முணர்ச்சியாலேயே வாழ்கின்றனவாதலின் புணர்ச்சியில் முகர்வதாலவை யின்பம் பெறுவது சொல்லாமற் பெறப்படும், செடி கொடிகளைப்பற்றிப் பின்னுற்பேசுவோம். மக்களுங்காதல் நிறைந்தபோது நறுமணங்கள் வீசுகின்ற பூக்களையும் சரக்குகளையும் அணிந்து பூசிக்கொள்வது வழக்கம். தமிழ்நாட்டார் மற்றென்னாட்டாரினும் பூக்களை மிகவும் விரும்புகின்றவரென்பது மிகத் தொன்றொளிலேயே விளங்கிய உண்மையாகும். (''ஸ்ரீவான்மீகரும் தென்னாடும் என்ற தலைப்புடன் மு. இராகவையங்கார் அவர்கள் பழந்தமிழாராய்ச்சி (Tamil Antiquary)யில் எழுதியுள்ளதைப்பார்க்க. இன்றைக்குந் தமிழ்நாட்டில் மணமகனும் மணமகளும் காதலின்பத்தை முதன்முறை நுகருங்கால் மலரின்றி அந்நிகழ்ச்சி நிறைபெறாது. அன்றியும் காதலிருவர் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்தபோது முதலிலவர் கூடியகாலத்து அவர்கள் மேல் வீசிய மணம் மாறாமலவர்களுளத்தில் பதிந்து கிடக்கின்றது. அந்த மணமோ அல்லது அதை ஒத்த வேறுமணமோ வீசும்போது பழைய காதல் உடனே திரும்பிவரும். மணத்தைப்போற் காதலை யூட்டுகின்ற புலன் வேறொன்றில்லை. மலர்களுள் முல்லை இருவாட்சி மல்லிகை முதலியன சிறந்தனவாகும். இதுபற்றியே உளம்புளகிக்க உயர்மணம் வீசும் நறியபூக்கள் திரளாய்ப்பூக்கும் சித்திரை வைகாசித் திங்களை மணமுடிப்பதற்குக் காலமாக அமைத்தனர் போலும். கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டிலும் பூக்களின் பெயர்கள் நிறைந்து கிடக்கின்றன.

''............வள்ளிதழ்
ஒண்செங் காந்த ளாம்ப லனிச்சந்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
யுரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிள
மெரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடச
மெருவை செருவிளை மணிப்பூங் கருவிளை,
பயினி வானி பல்லிணர்க் குரவம்
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா

விரிமல ராவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்;
போங்கர் திலகந் தேங்கமழ் பாதிரி
செருந்திய திரல் பெருந்தண் சண்பகங்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்தல்
றாழை தளவ முட்டாட் டாமரை
ஞாழன் மௌவ னறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
பாங்கா மராஅம் பல்பூந் தணக்க
மீங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை
யடும்பம ராத்தி நெடுங்கொடி யவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகஞ் சிந்து வாரந்
தும்மை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவ நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
யாரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்த நாக நள்ளிரு ணாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவும்'' (சுயக—கூ௬)

குறிஞ்சி யென்பது கூட்ட நிகழ்வதற்கு ஆன்றோரால் வகுக்கப்பட்ட நிலமாகும். கூட்டத்திற்குப் பெரிதுந் துணையாய் நிற்கும் மலர்களை ஒன்று சேர்த்து ஈண்டுக் கூறியது எத்துணைப் பொருத்த முடைத்தென்பதை யறிந்து மகிழ்க. காதலர் கூடுஞ் செய்தியை மணமென்றுரைத்த தமிழர் பேரறிவைப் பெரிதும் போற்றுதும்.

காதலின்பம் நுகர்வதில் முகர்தல் முதன்மை பெற்றுத் திகழ்கின்றதென்று மேலே கண்டோம். இதைப்பற்றி இன் னுஞ்சிறிது கூறுவாம். அன்பின் மிகுதியால் ஒருவரை யொருவர் தழுவும்போது மூக்கொடு மூக்கு உரசுதல் அல்லது மூக்கினால் முகர்தல் சேர்க்கையினொரு பகுதியாகும். நீண்டு உயர்ந்த மூக் குடையோர் காதலின்பத்தைப் பெரிதும் விழைகின்றவ ரென்று உடற்கூற் றறிந்த புலவர் கருதுகின்றனர். இதையா மாராய்ந்து அறிந்ததில்லை. எனினும் முகர்வதற்கும் காதலுக் கும் நெருங்கிய தொடர்புண்டென்பது வேறொரு வகையானறி யப்படும். கலவியை நனிநச்சிப் பல பெண்களிடம் புணர்ச்சி யுடையோர்களுக்கு வரும் நோய்கள் பெரும்பாலும் மூக்கைத்

தாக்குகின்றனவாயிருக்கின்றன. (Havelock Ellis) ஹேவ்வலக் எல்லிஸ் என்னும் மருத்துவப்புல்வர் ஆண்பெண் இருபாலார்க்குமுள்ள தொடர்பைப் பற்றி எழுதிய பெரிய ஆராய்ச்சி நூலில் இதை விளக்கியிருக்கிறார். காதலின்பம் பெரும்பாலும் நாற்றமென்ற புலனைச் சார்ந்து நிற்கின்றதென்பது இதனுற் றெளியப்படும். (தொடரும்)

---

# தமிழ்ப் போதனுமுறையும் பாடப்புத்தகங்களும்

[திரு. V. கோவிந்தராஜலுநாயுடு அவர்கள், B.A.]

(௧௭௬ - ம் பக்கத்தொடர்ச்சி)

நம் தென்னிந்தியாவின்கண், ஒப்புயர் வற்றதாய், சீரும் சிறப்பும் பெற்றதாய், அருமையும் பெருமையு முற்றதாய், சொல்லின்பமும் பொருளின்பமும், செறிந்து நிறைந்திருக்கப் பெற்றதாய், பல் நூறுண்டுகளாகச் சிதைவொன்று மில்லாமல் தனித் தியங்குவதும், பல்வேறு மொழிகளுக்குத் தாய்மொழியாயிருப்பதுமான நந்தம் செந்தமிழ் மொழி எவ்வாறு போற்றப் படுகின்றதென்பதை நோக்குவோம். தமிழ் கற்பிக்கும் பண்டிதர்களின் திறனும், தமிழ்ப்பாடப் புத்தகங்கள் எழுதப்பட்டு வரும் முறையும், பாடங்களைக் கற்பிக்கும் முறையும், வெகு முற்காலத்தவையாகு மென்பதை எவரும் மறுக்கத் துணியார். உதாரணமாக, எள்ளினின் றெண்ணெய் எடுப்பதுபோல இலக்கியத்தி னின்றெடுபடு மிலக்கணம் என்று பெரியார் கூறியிருக்க, அவ்வண்ணமே, இலக்கியத்தை அறிதல், எளிதென்றும் தெரிந்திருக்க, இலக்கணத்தை முன்னதாக அறியப்படுத்துவது என்னே! பொருளுரைத்தல், விளங்க வைத்தலாதிய விஷயங்களிலும் குறைகள் மலிந்து கிடக்கின்றன வென்பதற்கு ஐயப்பாடுளதோ? அவற்றை யெல்லாம் குறித்துப் பின் கூறுவாம்.

முதலாவதாக, வயது முதிராத இளஞ்சிறுர்களுக்கு எவ்வண்ணம் தமிழ் கற்பிக்கத் தொடங்குவது என்பதை ஆராய்வாம். தற்போது அனுபவ முறையாக விருப்பது என்னையெனில், முதற்பாடம், என்று விற்கப்படும் புத்தகங்களை வாங்கி அவற்றிலுள்ள பாடங்களைப் படித்தலும் எழுதுவித்தலுமாம். பழைய முறையாகிய எழுத்துமுறையே, இன்னும் சில கிராமங்களில் கையாளப் படுகின்றதென்பது மிகையாகாது. அகரமுதல்

னகரவரையில் இளம் பிராயத்தர்களைப் பாடம்பண்ணி வைத்தலும், அவ் வெழுத்துக்களை ஒலிக்குந் தோறும் அலற வைத்தலுமே, வழக்கமாக இருந்து வந்தது. இப்பொழுது அம்முறையைத்தவிர்த்துச் சொல்முறையில் சில பாடப்புத்தகங்கள் வெளிவந்துள வேனும், அவையும், சில அணில் ஆடு என்றும், சில அ என்பதோர் அத்திப்பழம், ஆவென்பவன் ஆசைப்பட்டான் என்றும், பழய எழுத்து முறையைத் தழுவியே எழுதப்பட்டிருக்கின்றன. ஒலிகளெல்லாவற்றினும், உயிரே, மிக்க கடினமென்று, மொழிநூல் வல்லார் புகல்கின்ற இக்காலத்து: அவ்வுயிரெழுத்துக்களையே துவக்கமாகக் கொண்டு பாலர்களுக்கான பாடப் புத்தகங்கள் எழுவது என்னே? அதனுல் நம் சிறுவர்கள் எத்துணைத் துன்பத்திற்கு ஆளாகிருர்கள் என்பதை அறிந்திலே போலும். மேலும், அச்சொற்களால் குறிக்கப்பட்ட பொருள்களிற் பல குழந்தைகளின் அனுபவ ஞானத்திற் கெட்டாதனவாயிருத்தலின், அச் சொற்களுக்குப் பொருள் விளங்காது துயருறுவதை அறியாதார் எவரே? அதுவேயன்றி ஒரு பாடத்திற் காணும் சொற்களே ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாமலிருக்கின்றன. அதனுல், குழந்தைகளின் மனத்தில், பாடங்கள் பதிவதில்லை என்பதை மறுக்க வல்லார் யார்? மற்றும் இம் முறையில் போதிக்கப்பட்டவர்கள், பழைய எழுத்து முறையைப் போலல்லாவிடினும், அவ்வளவாக, பெரும் பயனடைவதாகக் காணப்படவில்லை.

தவிரவும், இக்காலத்தில், பள்ளிக் கூடங்களில் ஆசிரியர்கள், முதலில் படிக்கவும், பின்னர் படித்தவற்றை எழுதவும், கடைசியாகப் பேசவும், கற்பிக்கின்றனர். உலகில், மனிதர் எக் காரியத்தைச் செய்யப் புகினும், எளிதாகத் தொடங்கி, சிறிது சிறிதாக வலிய காரியங்களையும், முட்டின்றி முடித்துக் கொள்வது வழக்க மாயினும், நம் சிறுவர்கள் விஷயத்தில், கஷ்டமான வேலையிலே தொடங்குகிறேம். நமது அனுபவத்திலே கண்டறிந்த மட்டில், நம் இல்லங்களில், குழந்தைகள் இயற்கையில் முதலில் பேசக் கற்றுக்கொண்டு, பின்னர், படமாக வரைந்து, அதன் பின்னரே படிக்கத் தெரிந்து கொள்கின்றனர். இதுவே இயற்கையின் முறை மேலும் குழந்தைகள் பேசுகையில் சொற்றொடராகப் பேசுகின்றனரே யன்றி, எழுத்துக்களைக் கூட்டியாவது, சொற்களைத் தனியாகவாவது பேசுவதில்லை.

ஆதலால், நாம் செய்யவேண்டிய காரியம் என்னவெனில், சிறுவர்களுக்கு முதலில் சரியாகப் பேசக் கற்றுக் கொடுக்க

வேண்டும். அப்படிப் பேசுவதற்கு, உபயோகமாக சொற்றொடர்களையே ஆரம்பப் பாடமாக அமைத்தல் சாலச் சிறந்ததாகும். மற்றும், மனிதரின் அறிவு வளர்ச்சிக்கு ஆரம்பப் படியாக இருப்பது, ஒரு விஷயத்தைக் குறித்து, ஒரு தீர்மான எண்ணத்தைக் கொள்வதே யாகும். ஆதலின் இப்பொழுது வழங்கிவரும் பாடப் புத்தகங்களைப் போலன்றி சொற்றொடர்களையே தொடங்கிப் பாடப்புத்தகங்கள் வரையப் படல்வேண்டும். அங்ஙனம் எழுதப் படும் புத்தகங்கள், முக்கியமாக ஆசிரியர்களுக்குக் குறிப்பாக இருக்க வேண்டுமே தவிர பிள்ளைகள் கையாளும்படி யிருத்தலாகாது. அன்றி, சிறுவர்க்கான புத்தகங்கள் இயற்றப்பட்டன வேனும், மிகுதியும் படங்கள் நிறைந்தனவாயிருத்தல் நன்று. அப் படங்கள் எத்தகையனவா யிருத்தல் வேண்டுமென்று மற்று மொருமுறை கூறுவோம்.

படங்களின் உதவியாலும், பேசப்புகும் பொருட்களைக் கொண்டு, அவற்றில் நிறம், உருவம், ‡சினை, குணம், தொழில் முதலியவற்றைக் குறித்து, வினவிடைகள் மூலமாகப் பேசுதலே நலம். தவிர அவற்றைக் குறித்து, இலேசான பாட்டுக்களைப் பாடச் செய்யலாம். அவற்றை மூலமாகக்கொண்டு, கதைகளைச் சொல்லி அவற்றைத் திரும்பவும், பிள்ளைகளைச் சொல்லச் செய்யலாம். பின்னர், அக் கதைகளிலும், பாட்டுக்களிலும், சம்பாஷணைகளிலும், உபயோகப் படுத்தப்படும் முக்கியமான சொற்களைக் கரும்பலகையில் எழுதி, அவைகளைப் போலவே பிள்ளைகளை எழுதப் பண்ணி, பின்னர் சில எழுத்துக்களை ஒன்றுய்ச் சேர்த்துப் படிக்கச் செய்யலாம். இவ் விதமாகவே சிறுவர்கள், எழுத்துக்களையும், சொற்களையும், அதன் பொருள்களையும், தொடரில் அமைக்க வேண்டிய இடங்களையும், அவைகளை எழுதவேண்டிய முறைகளையும், உச்சரிக்கும் வகையையும் எளிதில் அறிந்து கொள்வார் என்பதற்கு ஐயமுண்டோ?

இதன் சம்பந்தமாக, இன்னுமொரு முக்கிய விஷயத்தைக் குறிக்காமலிருக்க முடியவில்லை. அஃதாவது, கல்வி போதிப்பதிற் சிறந்த அமெரிக்கா தேசத்தில், பண்டிதர்களின் தீவிர ஆராய்ச்சியின் பலனுகத் தெளிந்த உண்மையாவது, அந் நாட்டுச் சிறுவர்கள், தம் தாய் மொழியாகிய ஆங்கிலத்தைப் பயிலுங் காலை, தங்களுக்கு எட்டு வயதாவதற்குள், 3,600 சொற்களைத்தெரிந்து கொள்கிறுர்கள். பதினைன்கு பிராயத்தில், 9,000 சொற்களை அறிந்து கொள்கிறுர்கள். இதைக் கொண்டே (Thorndike) தாரண்டைக் என்ற பெரியார் வெகு முக்கியமானதும், உலக வழ்க்கில் பயின்று வருவதுமான சொற்களாக, 10,000 வார்த்

தைகளைச் சேர்த்து அச்சிட்டதுமன்றி, எவ்வெச் சொற்களை எவ்வெக்காலத்துக் கற்கவேண்டுமென்றும் குறிப்பிட்டிருக்கிறார். அக்கொள்கையைத் தழுவியே, நம் தமிழ்ப் போதனையிலும், ஒரு நோக்கத்தைக் கைக்கொள்ள வேண்டியது இன்றியமையாதது. சாதாரணமாக, நம் நாட்டில் குழந்தைகளை ஐந்து வயதாகும்போது பள்ளிக்குச் செல்ல விடுவது வழக்கம். அதை நோக்கின், ஒன்பது வருஷத்துக்குப் பின், அதாவது பதினான்கு வயதில், ஏன் ஒன்பதினாயிரம் சொற்களைப் பயிலக் கூடாது? முதல் ஆண்டில், சுலபமான, 500 சொற்களைச் சொற்றொடரிலமைத்துக் கற்றுக் கொடுக்கலாம். பின்னர், 750ம், அதன் பின்னர், வருஷம் ஒன்றுக்கு, 1000 சொற்கள் வீதமும், கற்பிப்பதற்குத் தடை என்ன இருக்கிறது! இவ்விதம், ஆசிரியர்கள் முயலுவார்களேயானால், 14 பிராயத்தில், நம் சிறுவர்கள், நல்ல இலக்கிய நூல்களையும், அறிவு நூல்களையும் படித்தறிந்து, அவற்றின் இன்பத்தை நுகருவதற்கு மிகவும் ஆற்றலுடையவராக விருப்பார்களென்பதற்கு ஐயமென்னே.

மற்றொரு முறை, தமிழ்ப் பாடப் புத்தகங்களின் குறைகளையும், அவற்றைத் திருத்தும் முறைகளையும், தமிழ் வசனத்தையும் பாக்களையும் எவ்வணம் போதித்தல் நலம் என்பதைக் குறித்தும், எவ்வகையில் பாக்களை எடுத்தாள வேண்டுமென்பதையும், இலக்கணத்தை எம்முறையில் போதிக்க வேண்டுமென்றும், வியாசங்கள் எழுதும் முறையைக் குறித்தும் சொல்லுவோம்.

---

## தூயவாழ்வு

[திரு M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள்]

சுத்தவீரனை அர்ச்சுனன் யுத்தகளத்தில் தளர்வுற்றபோது, கிருஷ்ணன் தெய்வீகம் பொருந்திய புன்னகையுடன், ஊக்கமளித்தார். "பிரிதாவின் குமாரனே! இத்தகைய தளர்வுக்கு இடங்கொடேல். உனக்கு இது தகுதியல்ல. அற்பமான மனத்தளர்ச்சியை உதறிவிட்டு, எதிரிகளை அடக்குபவனே! எழுந்திரு" என்று பேரூக்கமளித்தார் கிருஷ்ணன். வெறுப்பு, கண்டனம் அல்லாமல், அவற்றிற்குப் பதிலாக, நம்பிக்கை தரும் மொழிகளும் வெளிவந்தன. அத்தகைய சுத்தவீரன் யுத்தகளத்தில் துக்கமடைந்து, ஆண்மைகுன்றி வாடுவது, அடுக்காது என்பதைக் கிருஷ்ணன் அர்ச்சுனன் மனதில் பதியவைத்தார். அவர் அர்ச்சுனனுடைய உயர்வான தன்மையை எடுத்துக் காட்டிடவே, மனத்தளர்ச்சியை அர்ச்சுனன் வெருட்டியடித்து, போருக்குக் கிளம்பி இறுதியில் வெற்றி பெற்றான்.

இப்பெரிய வாழ்க்கைப் போர்க்களத்தில், தேசங்களும், தனிப்பட்டவர்களும் முன்னேற வேண்டுமென்று போடும் போட்டியில், உயிர் வாழவேண்டு மென்பதற்காகப் போராடுகையில், பன்முறை நாம் பின் வாங்கி, ஐயமுற்று, திகிலடைந்து, துக்கக் கடலிலாழ்ந்து விடுகிறோம். ஆனால் இத்துன்பங்களுக்கு இடையில் தானே ஒருநாள் கிருஷ்ணன், இயேசு, புத்தர், போன்ற பல முனிவர்கள் மூலமாய் வெளிவந்த இன்ப, தெய்வீகத் தொனியானது, கேட்கிறது. அவர்கள் மனிதவர்க்கத்தை உன்னத நிலைக்கு உயர்த்த இவ்வுலகில் தோன்றியவர்களல்லவோ? நமக்குப் புதிய பலம், நம்பிக்கை, மனோதைரியம் ஏற்பட்டு விடுகிறது. மனதில் ஏற்பட்டுள்ள குழப்பத்தை அகற்றி விடுகிறோம். நம்முடைய பல் வேறு கடமைகளை முன்னிலு மதிகமான ஊக்கத்துடன் ஆற்றப் புறப்பட்டு விடுகிறோம். இதுதான் நமது ஆன்மாவிலுள்ள தெய்வீகத்தொனி இதுதான் நமது உயரிய தன்மை.

நாம் ஓர் இருட்டறைக்குள் சென்று, "இருட்டாயிருக்கிறது, இருட்டாயிருக்கிறது" என்று கூச்சலிட்டால், இருட்டு அகன்று விடுமோ? ஒருபோது மில்லை. நாம் வெளிச்சத்தைக் கொண்டு வருவோம். பல்லாயிரக் கணக்காய்ச் சூழ்ந்திருக்கும் இருள் உடனே மறைந்து விடும். தவறிழைத்தல் மனித இயற்கை, குற்றங் குறைகள் உண்டு, இவ்வாழ்வில் நாம் பலதவறுகளைச் செய்து விடுகிறோம் என்பதை ஒவ்வொருவரும் அறிந்தே யிருக்கின்றனர். ஆனால் இந்நோயைத் தீர்க்க, என்ன வழிகள் உள? நமது பலவீனங்களை நினைந்து நினைந்து மனதைப் புண்படுத்திக் கொண்டிருப்பதா? இல்லை. அது நமது நிலைமையை மிகவும் கேவலமாக்கி விடும்.

நாம் கடவுளின் தோன்றல்கள், நம்மிடம் தெய்வீகத் தன்மை உண்டு, நாம் இறைவனுடன் ஐக்கியப்பட்டவர்கள், ஈசன் திருநாமத்தை வாயால் வாழ்த்துபவர்கள், இனி பாவமோ, பலவீனமோ நம்மை அணுகா, என்று நினைக்கும் தன்மை வரவேண்டும். நமது உயரிய தன்மையை அடிக்கடி உணர்ந்து, அதனால் நமது மனதில் நல்ல தூய்மையான எண்ணங்களையே புகுத்தி வந்தோமானால், வாழ்நாளின் துன்பங்கள் ஒழிய ஏது ஏற்படும்.

சமூகத்தால் புறத்தே யொதுக்கப்பட்ட, இழிநிலை யடைந்த ஒரு மகனை நாம் சந்தித்தால், அவன்பால் வெறுப்பும், குறை கூறலும் கொள்ளாமல், அவனைப் பாவி, தோஷியென்று சபியாமல், "அன்ப! நீ கடவுளின் தோன்றலல்லனோ? இத்தகைய செயல்கள் நீ செய்யத் தகுமோ? உன்பால் உயரிய தன்மைகள் மறைந்து கிடக்கின்றன. அவைகளை வெளிப்படுத்தி மனிதனுயிரு." என்று அன்புகலந்த மொழிகளால் அவனுக்கு அறிவுச்சுடர் கொளுத்துவோமாக.

கண்டனஞ் செய்வதாலல்ல, ஆனால் உயரிய தன்மையை எடுத்துக் காட்டி அதன்படி நடக்கச் செய்வதால் தான், ஒருவனை வாழ்நாளில் உயரிய நோக்கமுள்ளவனாய், சீரியவனாய், தூய்மை யுடையவனாய் வாழச் செய்ய முடியும்.

---

## பண்டை வீரப்பெண்மணிகள்



க. நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே. (புறம் - உஎஅ)

இது காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்னும் பெண்பாற் புலவரால் பண்டைப் பெண்பாலாரின் அரிய வீரத் தன்மையைப் புகழ்ந்து பாடப்பெற்றது.

(இ - ள்.) மாற்றாரோடு போர்புரியச் சென்ற தனது மகன் பகைவராற் றோல்வியுற்றுப் புறங்காட்டி ஓடினன் எனக் கேட்ட வீரமிக்க ஒரு தாயானவள் அங்ஙனம் ஓடித் தன் குடியியலுக்குக் கேடு சூழ்ந்தனனோ என்று நினைந்து மனம் மிக நொந்தவளாய்ப், படுகளத்தில் அவன் இறந்து கிடத்தலைக் காணேனாயின் இன்றே அவனுக்குப் பால் அருத்திய எனது மூலையை அறுத்தெறிவேன் எனக் கண் சிவப்ப, நெஞ்சு துடிக்க, வாய் பதைபதைக்கச் சொல்லிக் கையிலெடுத்த வாளோடு படுபிணம் நிறைந்து குருதிவெள்ளம் பெருகியோடும் போர்க்களத்திற்குச் சென்றாள். சென்றதும் அங்கே மாண்டு கிடக்கும் பிணவுடல்களை வாளாற் புரட்டிப் பார்க்கையில் தனது மகன் போரின்கண் எதிர்த்து வேறு வேறாகச் சிதைந்து இறந்து கிடத்தலைக் கண்டு அவள் அவனைப் பெற்ற பொழுதினும் பெருமகிழ் வெய்தினள்.

உ. கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுபட் டனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்றுமயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே. (புறம் - உஎகூ)

இஃது ஒக்கூர் மாசாத்தியார் என்னும் தமிழ்ப்புலமை சான்ற பெண்மணியார் பாடியது.

(இ - ள்.) போர்க்களத்தில் தன் கணவன் நேற்று மாண்டனன் எனக் கேள்வியுற்ற ஆண்மை மிக்க ஒரு தாயானவள், திரும்பவும் போர் நிகழ்வது அறிந்து தன் ஒரேமகனை அழைத்துத் தலைமயிரில் எண்ணெய் தடவிச் சீவிக் குடுமியை முடித்து, வெண்மையான ஆடையை உடுத்திக் கையில் வேல்கொடுத்துப் போர்க்களத்திற்குச் செல்க என்று அவனை வழியனுப்பினாள்.

இவ்விரண்டு செய்யுள்களையும் கருத்தோடு படித்துப் பார்க்கும்பொழுது இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது தமிழ்ப் பெண்மக்களின் கல்வித் திறமையும் உரத்த ஆண்மையும் நன்கு விளங்குகின்றன. இக்காலத்துத் தமிழ்ப் பெண்மக்கள் கல்வியும் ஆண்மையும்

இழந்து மரப் பொம்மைகளாய் விளங்குதல் பெரிதும் வருந்தத் தக்க தாகின்றது. பெண்மக்களால் தான் ஒருநாடு சீருஞ் சிறப்புமடையும்



என்பதை இனியாவது நம்மக்கள் உணர்ந்து தமது பெண்மக்களைக் கல்வியிலும் ஆண்மையிலும் சிறந்து விளங்கச் செய்தல் தலையாய கடனாம்.

வ. சு.

# திருவாசக வாக்கியங்கள்

[திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். ஏ அவர்கள்]

(சிலம்பு உ-பரல் க-பக்கம் ௬௱-தொடர்ச்சி)

## எ. திருவெம்பாவை

1. ஆதியு மந்தமு மில்லா அரும் பெருஞ் சோதி
2. கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
3. முன்னே சிவனேயென் றோலமிடினு முணரா யுணராய்
4. முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
5. உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலம்
6. எங் கெழிலென் ஞாயி றெமக்கு

## அ. திருவம்மானை

1. கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
2. கல்லைப் பிசைந்து கனியாக்கி
3. ஓயாதே யுள்குவா ருள்ளிருக்கு முள்ளானை
4. இப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான் பற்றியபேரானந்தம்

## கூ. திருப்பொற்சுண்ணம்

1. நறுமுறு தேவர் கணங்க ளெல்லாம்
   நம்மிற் பின்பல்ல தெடுக்க வொட்டோம்
2. இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்
   தமையனெம் மையன் தாள்கள்பாடி
3. தேவர் கனாவிலுங் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்கள்

## ௰. திருக்கோத்தும்பி

1. தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
   நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
   அனைத்தெலும் புண்ணெக ஆநந்தத் தேன்சொரியுங்
   குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ
2. கண்ணப்ப னொப்பதோ ரன்பு
3. நாய்மேற் றவிசிட்டு

## கக. திருத்தெள்ளேணம்

1. ஒருநாம மோருருவ மொன்று மில்லாற் காயிரந்
   திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ
2. கறங்கோலை போல்வதோர் காயம்பிறப்போ டிறப்பு
3. கன்னா ருரித்தென்ன
4. கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
5. வான்கெட்டு மாருதமாய்த் தழனீர் மண்கெடினுந்
   தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையன்

## கஉ. திருச்சாழல்

1. நாயகனே தண்டித்தாற் சயமன்றே வானவர்க்கு
2. தம்பெருமை தானறியாத் தன்மையன்

## கஉ. திருப்பூவல்லி

தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
வல்வினையின் வாயிற் பொடியட்டி
கன்னு ருரித்தென்னை யாண்டு கொண்டான்

## கச. திருவுந்தியார்

ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தந்தையி
லோரம்பே முப்புர முந்தீபற
ஒன்றும் பெருமிசை யுந்தீபற

## கரு. திருத்தோணேக்கம்

பூத்தாரம் பொய்கை புனலிதுவே எனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
கற்போலு நெஞ்சங் கசிந்துருக
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே

## கஎ. அன்னைப்பத்து

நித்த மணாள நிரம்ப வழகியர்

## உ௰. திருப்பள்ளியெழுச்சி

1. யாவரு மறிவரியா யெமக் கெளியாய்
2. கேட்டறி யோமுனைக் கண்டறி வாரை
8. மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்

## உக. கோயின்மூத்த திருப்பதிகம்

1. உடையாளுன்றன் நடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி
2. இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற் றிருந்தே வேசற்றேன்
8. பிரைசேர் பாலி னெய்போல்
4. இரங்கு நமக்கம் பலக்கூத்தன் என்றென் றேமாந் திருப்பேனை

## உஉ. கோயிற்றிருப்பதிகம்

1. திணிந்த தோரிருளிற் றெளிந்த தூவெளியே
2. குறைவிலா நிறைவே
8. சிறைபெறு நீர்போல்
4. நீயென் னுடலிடங் கொண்டாய்
5. உள்ளத் தெழுகின்ற ஞாயிறே

6. சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லையன்றி யொன்றில்லை யாருன்னை
யறிய கிற்பாரே.

---

## தமிழ்ப் பல்கலைக் கழகம் வருவதை நினைந்து நகையாடல்

[தமிழ்நலம் விழைவோன்]

இறந்தது நினைந்து இரங்கல் தவறென்று மூத்தோர் மொழிந்தனர். ஆயின் வருவது நினைந்து மகிழ்தலும் குற்றமாகும். "இறந்தது மறைந்தது, வருவதைப் பற்றி உறுதியில்லை, நிகழ்வது ஒன்றுதான் நமக்குரியது, ஆதலின் இறந்ததை மறந்து, வருவதைப்பற்றி ஆராயாது நிகழ்வதையே கருது" என்று மேனாட்டுப் புலவர் பலர் எழுதியிருக்கின்றனர். நான் புலவன் அல்லன், யான் ஒரு புல்லன். வலது புறம் இடது புறம் திரும்பாது நிலத்தில் புதைக்கப்பட்ட இருப்புக்கம்பியில் ஓடுகிற புகைவண்டிபோல் என்னுடைய எண்ணங்கள் ஒரு வழியிற் செல்லுகிறதில்லை. திருந்திய உளமும் அதற்குப் பொருந்திய செய்கையுமுடைய பெருமக்கள் ஒருவேளை இறந்த காலத்திலும் எதிர் காலத்திலும் தங்கள் நினைவுகளைப் போகவிடாமல் தடுத்து, நிகழ் காலத்திலேயே நிறுத்திக் கொள்ள வல்லோராயிருக்கலாம். எனக்கு அத்தகைய உளத்திட்பமில்லை. இறந்ததில் கொஞ்சம் இறங்குகிறதும் எதிர்வதைக் கொஞ்சம் எதிர்ப்பதும் எனக்கு வழக்கமாயிருந்து வருகிறது. இங்ஙனம் நான் இறந்தது தழுவி எதிரது போற்றி ஒருவகையில் உயிர் பிழைத்து வருகிறேன். என்னை யாராவது அடித்தால் அல்லது திட்டினால் அதை நான் பொறுப்பது மில்லை, மறப்பது மில்லை. பிறரிடத்தில் வாங்கியதைச் சும்மா வைத்துக் கொண்டிருக்கக் கூடாது, வாங்கிய முதலை வட்டியுடன் சேர்த்துக் கொடுக்க நாழிகை வருமாவென்று "வருமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு" என்ற முறையில் காத்துக் கொண்டிருப்பேன். எனக்கு ஒருவர் செய்த நன்மைகளையும் நான் பொறுத்து மறந்து விடுவதில்லை. இப்பொழுது கூட என் உள்ளம் இதை எழுதுவதை விட்டு வேறு எங்கேயோ செல்லுகிறது. "வாடியிருக்கு மாங்கொக்கு" என், ஐயா, மாங்கொக்கு? 'மாங்கொக்கு' என்றால் 'மாங்குயில்' என்பது போல் 'மாமரத்துக் கொக்கு' என்றல்லவோ பொருள்படும். இப்படித்தான் என்னுடைய நினைவுகள் செல்கின்றன. நிகழ் காலத்தில் என் உளம்பொருந்தி நிற்பதில்லை. எனக்கு எப்போதும் கொஞ்சம் கழியும் நிரம்ப வரவும் வேண்டும். ஆகையினால் தான் வரப்போகிற தமிழ்ப்பல்கலைக் கழகத்தைக் குறித்துக் கொஞ்சம் பேசப்போகிறேன்.

எனக்கு இயற்கையாகவே கொஞ்சம் பல்லீளம். போதாக் குறைக்கு நான் பத்து வயதாயிருக்கும் பொழுது தீமையின் உருவாய் வந்த ஒரு திருட்டுக்குதிரை என் இடது காதைப் பிடித்துக் கடித்து என்னை மேலே தூக்கிக் கீழேபோட்டு மறுபடியும் உதட்டைப் பிடித்துக் கடித்ததில் என்மேல் உதடு பிளவுண்டு எற்றபடி கூடாமற் போயிற்று. ஆகை

யால் என்னுடைய முன்னம் பல்கள் இருக்கும் அளவிற்கு அதிகமாய் நீண்டு தெரிகின்றன. பல்கலைக் கழகமொன்று ஏற்படப் போவதைக் கேட்டு நான் பெருமகிழ்ச்சி யடைந்தேன். பல்கலைக் கழகம் நிறுவப் படுஞ் செய்தி என்னைப்போன்ற பல்லோருக்கு (பல்லையுடையவர்களுக்கு) உவகை யளிப்பது இயற்கைதானே! அதிலும் தமிழ்ப் பல்கலைக் கழகம் என்றால் அந்த உவகையைச் சொல்லவா வேண்டும்! காய்ந்து கரிந்து கிடக்கின்ற தெலுங்கு நாட்டுக்கு ஒரு பல்கலைக்கழகம் துரைத்தனத்தார் அமைத்துக் கொடுத்திருக்கப் பல்வளம் பொருந்திய தமிழ் நாட்டுக்கு ஒரு பல்கலைக் கழகமில்லாது போவது எங்ஙனம் பொருந்தும்? கிருஷ்ணா கோதாவரி முதலிய ஆறுகள் ஓடுகின்ற தெலுங்கு நாட்டில் பல்வ மில்லையோ வெனின் அங்கே பல்வளமிருக்கலாம், ஆனால் பல்லழ இல்லை. தமிழ்நாட்டிலே பெரும்பாலான மக்களுக்குக் காதழகு, கண்ணழகு, மயிரழகு, மூக்கழகு, முகத்தழகு ஆகிய பல்லழகுண்டு. இது பிறவிடங்களிற் காண்பரிது. அன்றியும் மழுப்பல், உழப்பல், குழப்பல் ஒன்றை மற்றொன்றாய்த் திருப்பல், பிறர் ஆக்கங்கண்டு வெம்பல் ஆகிய பல் கலைகளில் நன்கு தேர்ச்சியடைந்த ஒரு வகுப்பார் தமிழ் நாட்டிலுண்டு. அவர்கள் இப்பொழுது தமிழ்ப் பல்கலைக் கழகம் நிறுவப்படுவதை விரும்பவில்லை என்று அறிகின்றேன். இன்னுங் கொஞ்ச நாட் சென்றபின் இவர்களே தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்குப் பல்லாண்டும் பல்லவியும் பாடுவார்கள்.

---

(தொடரும்.)

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

[திரு பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்]

இச் சங்கத்தார் நடத்திவரும் தனித்தமிழ்த் தேர்வுகட்கு விண்ணப்பங்கள், பல ஊர்களினின்றும் வந்துகொண் டிருக்கின்றன. சில ஊர்களிலுள்ள மாணவர்கள் தங்கட்குத் தேர்வு முறைத்தாள் கால தாமதமாய்க் கிடைத்தது காரணமாகக் குறித்த சித்திரைத் திங்கள் முதல் நாட்குள் விண்ணப்பித்துக் கொள்ள இயலவில்லை என்பதாகத் தெரிவித்துக்கொண் டிருக்கிறார்கள். ஆதலால் எல்லா மாணவர்களுடைய நன்மையும் கருதி இவ்வாண்டு தேர்வு விண்ணப்பங்கள் 1927 ஜூன்மீ 13உக்குள் அனுப்பப்படலா மென்பதாக முடிவு செய்யப்பட் டிருக்கிறது. தமிழ்த் தேர்வு, இளந்தமிழ்ப் புலவர், தமிழ்ப்புலவர் முதலிய தேர்வுகட்கு மாணவர்கள் விண்ணப்பித்துள்ளார்கள். புலவர் தேர்வுக்கு விண்ணப்பிக்கின்றவரிற் சிலர் பொதுவுக்குரிய பாடத் தேர்ச்சிக்குத் தனியே விண்ணப்பிக்கலாகின்றனர். இவர்கள் தமிழ்த் தேர்வுபாட முறைகள் 7-ம் பக்கம் குறிப்பு இரண்டாம் பத்தியை நன்கு படித்துணர்ந்து ஏதாவது ஓர் சிறப்புப் பட்டத்துக்குரிய பாடங்களையும் பயின்று அங்ஙனமே அமைச்சருக்குத் தெரிவித்துவிட வேண்டுமென்று அறிவிக்கப்படுகிறது. விண்ணப்பப்பதிவு எண், தேர்வு நடைபெறும் ஊர், இடம், மேற்பார்ப்போர் முதலிய குறிப்புகள் ஜூன் மாதத்தில இவ்விதழின் வாயிலாகவும் தனித்தனியாகவும் தெரிவிக்கப்படும். யாண்டும் கிடைக்காத புத்தகங்கள் தேர்வுக்குக் குறிக்கப்பட் டிருந்தால் அப்புத்தகங்களில் வினாக்கள் கேட்கப்பட மாட்டா.



குமரகுருபரசுவாமிகள் ஊமை நீங்கிக்
கந்தர்கலிவெண்பாப் பாடியது

மு. நா. மு.
சொக்கலிங்கம்
பாகனேரி
26. 6. 27

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எளஎ௬ வைகாசித் திங்கள் 1927ஹு மேமூ—ஜூன்மூ | பரல் ரு |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

## ஆராய்ச்சிமுறை

[திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை யவர்கள்]

*எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.*

இக்குறளை அடிப்படையாகக் கொண்டு இக்காலத்திலே பலர் நூலாராய்ச்சி செய்ய முயல்கின்றனர். பொருள்களை ஆராய்ந்தறியும் முறையினை நன்கறியாது நூலாராய்ச்சிசெய்தல் இடர்ப்பாட்டினை விளைத்தல்கூடும். செவ்விதின் ஆராயும் முறையினை அளவென்று ஆசிரியர் திருவள்ளுவனார் குறித்துள்ளார்.

* இது குமரன் ஆண்டு மடலினின்றும் எடுக்கப்பட்டது.

'அளவறிந்தார் நெஞ்சத்தறம்போல' என்றவிடத்து அளவினை அறிந்தவர்களே அறத்தினை உணர்ந்தவராவரென்று அவர் குறிப்பித்தமையால் அளவினை அறியாதாரது ஆராய்ச்சியின் பயன் அறத்திற்குப் பகையாக முடியுமென்பது உய்த்துணரற் பாலது. இக்கருத்துப்பற்றியே ஆசிரியர் மெய்கண்டாரது சிவ ஞானபோத முதற்சூத்திரத்திற் போந்த புலவர் என்ற முடி புச் சொற்கு அளவைநூல் வல்லார் என்று ஆசிரியர் சிவஞான முனிவர் பொருளுரைத்தனர். ஆதலால் எதனையும் ஆராயப் புகுவோர் முதற்கண் அளவை யியல்பினை அறிந்துகொள்ளு தல் வேண்டும்.

நாம் அறியவேண்டிய யாவற்றையும் நம்முடைய ஐம்புலன் கள் வாயிலாக நேரே அறிதல் இயலாததாகும். நேரே அறி யப்படுவன சில. புகையுள்ள இடத்து நெருப்புண்டென்று கருதுவதுபோலக் கண்டதின்வைத்து அதனோடு தொடர் புடையதாய்க் காணப்படாததையும் அறிதல் கூடும். அங்ஙனம் அறிதல் கருதலெனப்படும். நாம் காண்டலாலும் கருதலாலும் அறியக்கூடாதனவாய்ப் பிறரால் காட்சி கருதல் என்னும் இரு வகை அளவையானும் அறிந்து கூறப்பட்டதை நம்முடைய பகுத்தறிவுக்கு ஏற்புடைத்தாக இருந்த காலை ஏற்றுக்கொள்ளு தல் உரையளவை யெனப்படும். காண்டல் கருதல் உரை என் னும் மூவகை அளவைகளாலே நாம் அறியக்கூடிய யாவற்றை யும் அறியலாம். இவற்றுள் உரையளவையை ஆட்சிசெய்யு முறையே நூலாராய்ச்சிக்கு வேண்டப்படுவதாகும்.

இவ்வுரையளவையானது சமயநூல்களை ஆராயுமிடத்து மிகக் கவலையோடு பயன்படுத்தத் தக்கது. அங்ஙனம் பயன் படுத்தாமையாலும் தத்தம் சிற்றறிவுக்குத் தோன்றியவாறே அந்நூல்களை ஆராய்ந்து முடிவு கட்டுவதாலும் இவ்வுலகத்தில் ஏற்பட்டுள்ள சமயப் பிணக்குகள் எல்லையில்லாதன. ஒருசாரார் ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமய நூல்களை முற்றிலும் நம்பவேண்டுமென்றும் அவற்றுள் கூறப்படும் எதனையும் நமது பகுத்தறிவால் ஆராய்ச்சி செய்தல் பெருந்தவறென்றுங் கூறு கின்றார்கள். மற்றொரு சாரார் தமது காட்சிக் கொவ்வாத சமய நூற்பொருள் யாவும் கொள்ளத் தக்கனவல்லவென்றும், அவற் றை நம்புவோர்கள் பகுத்தறிவு சாலாதவர்களென்றும் இயம்பி, எள்ளி நகையாடா நிற்பர். உண்மையானது நடுநிலையாகவுள் ளது. 'காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையார் கண்ணதே' என்றபடி கருதலளவையை அறவே ஒழிக்கும் உவப்பும் காட்சியளவை ஒன்றனையே பேணுங் காய் வும் இல்லாமல் உண்மையை ஆராய முயலவேண்டும்.

உலகத்தில் ஒவ்வொரு சமயத்தாரும் சில நூல்களைக் கடவுள் வாக்கென்று கொள்ளுகின்றார்கள். தற்காலத்திலே சைவ சமயத்தார் வேதம் சிவாகமம் என்னும் இருவகை நூல்களும் சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்டனவென்று கொள்ளுவர். வைணவர்கள் வேதத்தையும் வைணவ ஆகமங்களையும் இறைவர் மொழியென்பர். கிறிஸ்துவர்கள் விவிலிய நூலைக் கடவுள் நூலாகக் கொள்ளுகின்றார்கள். மகமதியர்களுக்கு அத்தகைய கடவுள் நூல் கொரானென்பது. புத்தர் சமணர் முதலியோர் தங்களாசிரியர் இயற்றிய நூல்களைப் பிரமாணமாகக் கருதுவர். பிறவும் அன்ன. புத்தர் சமணர்களது ஆசிரியர்களைப்பற்றியும் அவர்கள் செய்த நூல்களைப்பற்றியும் சரித்திரம் தெளிவாயிருப்பதால் மக்களாய்த் தோன்றியவர்களாலேயே அச்சமய நூல்கள் இயற்றப்பட்டனவென்பது மறுக்கப்படுவதில்லை. கொரான் என்பது சுமார் ஆயிரத்து நானூறு ஆண்டுகட்குமுன் அரபிய நாட்டில் புகழ்பெற்று விளங்கிய மகமதுநபி என்னும் பெரியாரால் இயற்றப்பட்டது என்பது சரித்திரத்தால் தெளியப்படும். அம்மகமதுநபி மெக்கா என்னுமிடத்திலிருந்து மெடினு என்னும் இடத்துக்கு மறைந்து சென்றநாள் தொடங்கியே பசலியாண்டென்பது கணக்கிடப்பட்டு வருகின்றது. அவர் செய்த நூல் அரபியநாட்டில் உள்ளவருக்குத் தக்கவாறு சமயபோதனை செய்கின்றது. கிறித்தவர்களுடைய விவிலியநூல் பழைய ஏற்பாடு புதிய ஏற்பாடு என்னும் இரண்டு பகுதிகளையுடையது. பழைய ஏற்பாடு பெரும்பாலும் மகமதியர்களாலும் ஏற்றுக்கொள்ளப்படுவதே. பழைய ஏற்பாடு மோசஸ் என்னும் யூதப் பெரியராலும் தாவீது சாலமன் முதலிய யூத அரசர்களாலும் இயற்றப்பட்ட சிறுநூல்கள் பலவற்றின் தொகுதியாகும். புதிய ஏற்பாட்டில் முதல் நான்கு பகுதியும் கிறித்துநாதரின் நான்கு சீடர்களால் இயற்றப்பட்டவை; அவை பிற பகுதிகளினும் சிறப்பாகக் கொள்ளப்படும். அவை கிறித்துவின் சரித்திரத்தை நன்கு விளக்குவன. விவிலியநூற் பகுதிகளையும் கொரானையும் இயற்றிய ஆசிரியர்கள் கடவுள் திருவருள் பெற்று அவற்றை இயற்றினர் என்னும் கொள்கையால் அந்நூல்கள் கடவுள் வாக்காகக் கருதப்படுகின்றன. இது நிற்க,

மேற்போந்த சமயநூற் சரித்திரங்களால் விளங்குவது யாதெனில், ஒவ்வொரு நாட்டிலுமுள்ள மக்கட் பிரிவினர் உண்டுடுத்து நாகரிகம் பெற்றுக் கடவுளுணர்ச்சி யுடையராய் அவரை யடைந்துய்யும் வழியை நாடுகின்ற காலத்தே அவர்களுள் தக்க பெரியார்கள் அவர்கட்குரிய சமயநூல்களை இயற்றி

வர் என்பதே. 'பளிங்கனைய சித்துநீ உன்—பக்குவங் கண்டுணர்த்தும் பான்மையேம்யாம்' என்றதுமது.

உலகத்திலே மக்கட் பிரிவினர் பலதிறப்படுவர். நாகரிகமுற்றவர் நாகரிகமற்றவர் என்ற இரண்டு பிரிவு உண்டென்பதை யாரும் மறுக்க முடியாது. மணிமேகலை ஆசிரியர் மக்கள் ஊன்தின்னும் நக்க சாரணர் நாகர் என்பாரைப் பற்றிக் கூறியது உண்மை என்பது தற்காலத்திலேயே அத்தகைய மக்கள் சில சில தீவுகளிலே வசிப்பதை யாத்திரைக்காரர் வாயிலாக நாம் அறிவதால்போதரும் அத்தகைய மக்களுள் பலர் கிறித்துவப் பாதிரிமார்களால் திருத்தமடைந்துள்ளார்கள். இதனால் நாகரிகம் அற்றவர்கள் நாகரிகம் உறுதல் கூடுமென்பது தெளியப்படும். நம்முடைய நாட்டிலும் கள்ளும் ஊனும் உண்போர் அவற்றை விடுத்து நாகரிகமடைதலையுங் காண்கிறோம். மக்கட் கூட்டத்தினர் எவ்வாறு நாகரிக முற்றனரென்பதை அறிய வேண்டுமானால் குழந்தைகளின் வளர்ச்சியைக் கவனிக்கவேண்டும். குழந்தைகள் பிறந்தவுடன் உணவினையும் ஊறு செய்வதனையும் மாத்திரமே உணருகின்றது. மொழி வழங்கும் ஆற்றலை ஈராண்டு கழிந்த பின்னரே செவ்வையாகப் பெறுகின்றது. பொதுவாக ஐந்து வயதிலேதான் கல்விகற்கும் திறம் பெறுகின்றது. குழந்தைகள் அறிவு குணஞ் செயல்களில் ஏற்றத்தாழ்ச்சியுடையவர்களாயிருந்தாலும் முதற்கண் ஒரே நிலைமையில்தான் உதிக்கின்றனர். ஆதலினாற்றான் ஆசிரியர் திருவள்ளுவனார் 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்றார். இது தனித்தனி மக்கட்கும் ஒக்கும்; கூட்டங் கூட்டமாகவுள்ள மக்கட் குழாங்கள் பலவற்றிற்கும் ஒக்கும். உயிர்களுள் ஒவ்வொன்றும் 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகி' மக்களாதல் போல அது மனிதப் பிறவி யடைந்ததன் பின்னர் பிள்ளைநிலையிலிருந்து பேரறிஞர் நிலையை அடைதலும் இயற்கையாக உள்ளதே. மணிவாசகப்பெருமான் போற்றித் திருவகவலில், பல இடையூறுகளைக் கடந்தே தெய்வமென்பதோர் சித்தமுண்டாகுமென்று அருளிச் செய்தது காண்க. மக்கள் கூட்டம் ஒன்றினை ஆயுங்கால் அதன்கணுள்ள ஒவ்வொரு உயிர்க்கும் மேற்கூறியது ஒக்கும். ஆதலால் மக்கட் கூட்டமும் பிள்ளைமை நிலையிலிருந்து அறிவுமிக்க பெருநிலை யடைதல் இயற்கையாக நிகழ்வதொன்றே. நாகரிகமற்ற நிலையிலிருந்தே நாகரிக நிலையை மக்கட் கூட்டத்தினர் அடைகின்றார்கள். இது பலநாட்டுச் சரித்திர ஆராய்ச்சியால் தெளியப்படுவதாகலின் ஈண்டு முற்றிலும் விளக்கவேண்டுவதில்லை.

ஒரு நாட்டிலுள்ள மக்கட் கூட்டத்தாருட் பெரும்பாலார் உயர்ந்த நாகரிகத்திற்குரிய ராதற்குமுன் கடவுளே அவர்கள் நடுவில் தோன்றி ஒன்றைப் போதித்தாலும் அவர்கள் அதனை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். உதாரணமாக மக்களுன்றின் னும் மாந்தர் நடுவே உயர்ந்த சமய போதனையொன்றும் நிலை பெறாது. படிப்படியாகவே அவர்களைத் திருப்புதல் கூடும். மக்களோடு அளவளாவி அவர்களுக்கு ஒன்றைப்போதிக்க வேண்டுமாயின் அதனைச் செய்ய வல்லவர்கள் மக்களாகவே இருக்கவேண்டும். கடவுள் ஒருவர் உண்டென்பதைப் பல காரணங்களால் தெளிந்த மக்களும் முன்னைத் தவத்தினால் கடவுள் பால் அன்புசெலுத்தவல்லமக்களும் அக்கடவுளைத் தமது வடிவம்போன்ற வடிவினராகத்தான் வழிபடுதல் கூடும். கடவுள் மனிதனுக்குத் தோன்றக் கருதினாலும் அவனறிந்த வடிவெடுத்துத்தான் தோன்றவேண்டும். ஆதல்பற்றியே 'ஆரொருவருன்னுவா ருள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்' என்ற திருவாக் கெழுந்தது.

இதனை மனத்துட்கொண்டு, சைவ வைணவ முதல்நூற் றோற்றத்தினை ஆய்வாம். ஆகமங்களெல்லாம் சிவமயமென்னுங் கருத்தில், ஸர்வாகம மயசிவ: என்று நாரதபரிவிராஜக உபநிடதங் கூறுதலால், அவ்வுபநிடத காலத்துள்ள ஆகமங்கள் சிவாகமங்களே யென்பது துணிவு. ஐந்து இரவிற் செய்யப்பட்டதாகச் சொல்லப்படும் பாஞ்சராத்திர ஆகமம் மேற்கூறிய உபநிடதகாலத்தில் இருந்ததாய்த் தெரியவில்லை. அஃது எக்காலத்திற்றோன்றினும், அதனைத் திருமால் எப்போது செய்தாரென்பது விளங்கவில்லை. அவர் ஒன்பது அவதாரமெடுத்த போதும், பாஞ்சராத்திரநூல் செய்ததாகத் தெரியவில்லை. கடவுள் மனிதவடிவமெடுத்து அதனைச் செய்துகொடுத்தாலும், அதனை எழுதிப் படிப்போர் சில தலைமுறைகள் கழித்தாவது தங்கள் கருத்தையுமதன்கட் புகுத்தியிருத்தல் கூடும். கம்பராமாயணத்திற்குப் பாடபேதங்களும் இடைச்செருகலும் கம்பர் காலத்திலே ஏற்பட்டனவெனக் கேள்விப்படுகிறோம். பாஞ்சராத்திரமானது உயிர் படைக்கப்பட்ட பொருளென்று கூறுதலால் தத்துவக் கொள்கைக்குப் பிரமாணமாகாது என்று இராமானுஜர் மொழிந்திருப்பதாகத் தெரிகிறது. அத்தகைய கொள்கை திருமாலால் அதன்கண் சேர்க்கப்பட்டதென்பது நமது அறிவிற்குப் பொருந்துவதன்று. மேலும், பாஞ்சராத்திரத்திலே திருமால் கோயிற் சிறப்பும் பூசனையும் நடத்துமுறை கூறப்பட்டுள்ளது. சிற்பமானது மக்களுக்குள் தழைத்தோங்கிய காலத்திலே பெரிய கோயில்கள் கட்டப்பட்டன. மன்னனுக்குச் செய்

யும் வழிபாட்டு முறைகளே கடவுளுக்கும் ஆலயத்திற் பெரும்பாலும் செய்யப்படுகின்றன. வைணவ சமயத் தத்துவக்கொள்கைக்கு அறிகுறியாக உள்ள சடங்குகளும் பல உள்ளன. இவையெல்லாம், கடவுள் நேரே தோன்றவேண்டியதின்றி மக்களுள் தக்க அறிஞராலே வகுக்கப்படும் தன்மையன. மக்களாலேயே இயற்றத்தக்க நூல் ஒன்றினைக் கடவுள் இயற்றவேண்டிய அவசியமில்லை. கடவுள் அப்படிப்பட்ட நூலை இயற்றினாரென்பதால் அவர்பெருமை சிறந்து விளங்குதலுமில்லை. கடவுள் இயற்றிய நூலாயினும் மக்களியற்றிய நூலாயினும், அவை மக்கள் கைவசப்பட்டபின் சில காலத்துள், மாறுதலடைகின்றன. ஆதலால் அனைய நூல்களுட் கூறியவற்றை நம்முடைய பகுத்தறிவாலாராயாது முழுதும் நம்புதல் அறிவிற்குப் பொருத்தமானதன்று. கடவுள் மொழிந்த நூல் மாறாதிருக்குமாயின், உரையளவை யொன்றே போதும். கருதலளவை வேண்டியதில்லை. காண்டல், கருதல், உரையென்ற மூன்றும் வேண்டுமென்றே நூல்வல்லார் உரைத்தமையால், நூலாராய்ச்சிக்குக் கருதலளவை இன்றியமையாததே. அஃதே மெய்ந்நூலிற் கலந்த மெய்ம்மையை வெளியாக்கி, அந்நூலின் உண்மை வலிமையை உறுதிப்படுத்துவது. பொய்யையும் மெய்யையும் நமது பகுத்தறிவாற் பிரிக்க முடியாவிடின், நம்பிக்கையில்லாதவர்களால் மெய்யும் பொய்யாகக் கருதப்பட்டுப் பயனின்றி யொழியும்.

இவ்வுண்மையை வேதம் என்பதின் வைத்து ஒரு சிறிது விளக்குதும். வேதம் என்ற சொல் வித் என்னும் பகுதியிற் பிறந்து அறிதற்குக் கருவியான நூல் என்று பொருள்படும். அப்பொதுப் பொருளில் நூல்கள் யாவும் வேதம் என்ற சொல்லால் குறிக்கப்படும். இதன் பொதுப் பொருள் மறக்கப்பட்ட காலை வடமொழியிலுள்ள வியாசரால்தொகுக்கப்பட்ட இருக்கு, எஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வடமொழிநூல்களை மாத்திரமே குறிக்குமென்ற கொள்கையானது வேரூன்றிற்று. இவற்றுள் ஒவ்வொரு நூலும் மந்திரம் பிராமணம் உபநிடதம் என்ற மூன்று பிரிவுகளையுடையது. மந்திரங்களென்பன பலமுனிவர்களால் பல தெய்வங்களைக் குறித்துப்பாடப்பட்ட பதிகங்களே. ஒவ்வொரு பதிகத்தையும் செய்த முனிவர்களுடைய பெயர் அப்பதிகத் தொடக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. பிராமணம் என்ற பகுதி வேள்வி இயற்றுதற்குரிய விதிகளைக்கூறுவது. உபநிடதங்கள் முனிவர்கள் பலர்செய்த தத்துவ ஆராய்ச்சியை உணர்த்துவன. இவைகளை இயற்றிய முனிவர்கள் கடவுள் இடமிருந்து அவற்றைக் கற்றன ரென்ப

தற்கு வேதத்துள் ஆதாரம் ஒன்றுமில்லை. உபநிடதமொன்றில் வேதபுராண இதிகாசமிருதியெல்லாம் பரம்பொருளின் சுவாசம் என்று வாக்கியம் காணப்படுகின்றது. இதிகாசம் முதலியவற்றின் ஆசிரியர்கள் யாவர்க்கும் தெரிந்தவர்களே. மக்களுட் பெரியோர்களால் இயற்றப்பட்ட நூல்களெல்லாம் கடவுள் திருவருளால் உண்டாயின என்பதைக் குறிப்பதற்கே அவை பரம்பொருளின் சுவாசமென்று உபநிடதம் செப்பியதுபோலும். வேதம் முதலியவற்றை இயற்றிய ஆசிரியர்கள் பெயர்கள் வெட்டவெளியாகத் தெரிந்திருக்கும்பொழுது அவை கடவுளாற் செய்யப்பட்டன என்று கூறுதல் உண்மையன்று; உபசாரமே என்பதை எவரும் மறுக்க முடியாது. மேலும் மேற்கூறிய வடமொழி வேதங்களுள் சிறுதெய்வ வழிபாடும் மனிதப் பலி உள்ளிட்ட பல்வகைப் பலிகளும் சோமபானம் முதலான கட்குடியும் பயின்றிருப்பதை நோக்குமிடத்து அவை முழுமுதற் கடவுளரால் இயற்றப்பட்ட நூலென்று நம்புதல் அறிவுக்கு எவ்வாறு பொருந்தும்? வேதவாக்கியங்கட்கு வேறு பொருள் தெரிக்கப் புகுதல் சரித்திர உண்மையோடு முரண்படும். ஒரு நூலுள் வழங்கும் சொற்களுக்கு இயற்கையான பொருளை விடுத்துப் படிப்பவர் மனத்திற்குத் தோன்றியவாறு பொருள்கொள்ள முயலுதல் அந்நூலிற்போந்த பொருளை விடுத்துப் படிப்பவர் மனத்திலுள்ள பொருளை அந்நூலில் ஏற்றிக் காட்டுவதாகமுடியும். அங்ஙனமாயின் கொரான் விவிலிய நூல் ஆகியவற்றுக்கும் சைவசித்தாந்தப்பொருள் கூறுதல் எளிதாக முடியும். அப்பொழுது எதுதான் சமயநூலென்னும் துணிவிற்கிடமில்லாது எந்நூலையும் பொருள்கோள் முறையால் தத்தஞ் சமயநூல்களென சமயிகள் வாதித்தல் கூடும். அவ்வாதத்தால் நிகழும் குழப்பம் மக்கள் அறிவிற்குக் கலக்கத்தையும் மயக்கத்தையும் விளைவிக்குமாதலின் வலிந்து செய்யும் பொருள்கோள்முறை கைக்கொள்ளத் தக்கதன்றென்பது தெளிவு. காய்தல் உவத்தல் நீங்கின அறிவோடுகூடி வடமொழி வேதங்களைப் பார்ப்பவர் யாவரும் அவற்றைக் கடவுள் நூலெனக் கொள்ளமாட்டார்.

வேதத்தைக் கடவுள் வாக்கென்ற அளவோடு நில்லாது சில சுமார்த்தர்கள் அது சுயம்பென்றும் நித்திய மென்றும் இயம்புகின்றனர். இச் சொற்களின் பொருள் தெளிவாக விளங்கவில்லை. வேதமென்பது சொல்லினால் ஆயதே. சொல்லென்பது பேச்சொலியே. ஒரு மனிதன் மற்றொருவனுக்குத் தன் கருத்தை ஒலியினால் தெரிவிக்குங் காலத்திலே பேச்சொலி யுண்டாகிறது. கடவுளாவது மனிதனாவது ஒன்றையுஞ் சொல்

லாத காலத்திலே ஒலிவடிவாகிய சொல் எவ்வாறு தோன்றுமோ தெரியவில்லை. சொல் வடிவாகிய வேதத்தைத்தானே உண்டான சுயம்புறுலென்று கூறிஞல் அதை ஆகாயப் பூப்போல இல் பொருளென்பதே முடியும். வேதத்துட்போந்த கருத்துத் தானும் மனிதன் உள்ளத்திலாவது கடவுள் உள்ளத்திலாவது உருவெடுத்திருக்க வேண்டும். அங்ஙனமாயின் அக்கருத்துக்கள் மனிதனுடைய கருத்துக்களாக ஆதல்வேண்டும். அல்லது கடவுளுடைய கருத்துக்களாக ஆதல்வேண்டும். ஆதலால் வேதக்கருத்துக்களும் தாமே எழமாட்டா. ஆதலால் அவை களும் சுயம்பல்ல. வேதத்தின் சொல்லும் பொருளும் சுயம் பல்ல வென்ருல் வேறெவ்வாறு வேதம் சுயம்பாக இருத்தல் கூடும்? உலகத்திலே மக்கள் கடவுளை யறிவதற்கே எச்சமய நூலும் இயற்றப்பட்டுள்ளது. உலகமே தோன்றி நின்று அழி யுந் தன்மையதாமெனின் அவ்வுலகத்துள் தோன்றிய நூல் எவ் வாறு நித்தியமாதல் கூடும்? தோன்றிய யாவும் அழியுமாதலின் சொல்லும் பொருளுமாகத் தோன்றிய வேதமும் உலகை ஒடுக்கத் தில் அழியற்பாலதே. வேதத்தில் போந்த உண்மை என்றும் நிலைப்பதென்ருல் எந்நூலுட் போந்த உண்மையும் நிலைக்குந் தன்மையதே. ஆதலால் உண்மை நித்தியமென்ற கருத்தில் உண்மையைக்கூறும் எந்நூலும் நித்தியமென்றேற்படுமாதலின் வடமொழி வேதத்தை மாத்திரம் நித்தியமென்று கொள்ளுதல் யாங்ஙனம்? இது காறுங் கூறியவாற்ருல் வடமொழி வேதங்கள் மக்கள் நூலே என்பதும் அவைகளைச் சுயம்பென்றும் நித்திய மென்றும் கடவுள் வாக்கென்றுங் கூறுவது உபசாரமே யென் பதும் தெள்ளிதிற் புலனும். இவ்வுண்மையை உய்த்துணராது நம் மக்கள் இடர்ப்படுவதெல்லாம் உரைப்பிரமாணத்தைக் கரு தலளவையால் அளந்தறியாமையால் வந்த பேரிழுக்கேயா மென்றுணர்க. (தொடரும்)

---

# சித்தாந்தப் படவிளக்கம்

[பஞ்சாட்சரபுரம் ஸ்ரீ வாலேயானந்த சுவாமிகள்]

## அளவையியல்

### பிரமாணம்

பிரமாண மென்பது அளவை எனப்படும். அளவையாவது அளந்தறியப் படுவது. அஃதெவ்வாறெனின்:—உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும்

நால்வகை யளவினால் அளந்தறியுமாறுபோல, பதி முதலிய பொருள்களைப் பக்குவ ஆன்மாக்களுக்கு அளந்தறிவிப்பது.

"பண்ணிலார்க் கில்லாத பாட்டின் பயன் போன்றுங்
கண்ணிலார்க் கில்லாக் கவின்போன்று—மெண்ணிலா
வஞ்சொ லளவை யறியா தவர்க்கில்லைச்
செஞ்சொ லளவின் சிறப்பு." (அளவை விளக்கம்)

"ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி
னீதி வழுவா நிலைமையவான்—மாதே
யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்
றிறமாமோ வெண்ணிறந்தார் செப்பு" (அளவை விளக்கம்)

எண், தர்க்கம், அளவை, நியாயம், ஏரணம் என்பன ஒரு பொருட் கிளவிகள்.

"இராக மறியா ரிசைப்பயன் றானறியார்
தராதர மறியார் சற்கா ரியமறியா
ரோரா ரளவை யொருபயனுந் தானறியா
ராராய்ந் தளவை யறிந்துகொ ளீரே."

என்ற மேற்கோளினாலே புருஷார்த்தங்களாகிய தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் எனும் நான்கனுள் சிறந்த புருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்குப் பிரமாணங்கள் இன்றியமையாதன வென்பது துணியப்படும்.

பிரமாணமானது உத்தேசம், இலட்சணம், பரீட்சையெனும் மூன்று காரியங்களோடு கூடியது.

உத்தேசமாவது:—பொருள்களினது சொரூபத்தை (பெயரை) மாத்திரம் கூறுவது.

இலட்சணமாவது:—அப்பொருளுக்கு மாத்திரம் உரியதர்மம்.

பரீட்சையாவது:—அந்த இலட்சித வஸ்துவிற்குக் கூறிய இலட்சணம் சரியோ அல்லவோ என்று விசாரிப்பது.

பிரமாணங்களுக்கு உத்தேசங்களாவன:—பிரத்தி, காட்சி, அநுமானம், ஆகமம் என்பன.

அப்பிரமாணங்களுக்குப் பொது இலக்கணமாவது:—ஐயம், விபரீதம், ஸ்மிருதி எனும் மூன்றுக்கும் வேறாய்ப் பிரமையென்னும் வேறு பெயருள்ள ஆத்ம சிற்சத்தியே ஆகும்.

ஐயமாவது:—இரண்டு பொருள்களுக்கு உரிய பொதுவான தர்மத்தைக் கண்டு அதை யநுசரித்துண்டாகும் ஞானம்.

விபரீதமாவது:—இலட்சிதம் அல்லாததை இலட்சிதமாயறிவது.

ஸ்மிருதியாவது:—முன் அனுபவத்தாலுண்டாகிய சமஸ்காரத்தினால் தோன்றுகின்ற ஞானம்.

உத்தேசம், இலட்சணம், பரீட்சை யென்னும் இம்மூன்றிற்கும் பயன்களாவன:—

உத்தேசத்திற்குப் பயன்:— அநுமானத்தில் பட்சத்தின் ஞானம்.

இலட்சணத்திற்குப் பயன்:—பக்ஷத்தில் வேறு பொருள்களின் பேதஞானம்.

பரீட்சைக்குப்பயன்:—அந்த இலட்சிதத்தில் அதிவ்யாத்தி, அவ்யாத்தி, அசம்பவங்களாகிய தோஷங்களின் நிவர்த்தி.

அதிவ்யாத்தியாவது:—தனது இலட்சியத்திலும் அலட்சியத்திலும் இருப்பது.

அவ்யாத்தியாவது:—தனது இலட்சியத்தின் ஏகதேசத்தில் இராதது.

அசம்பவமாவது:—தனது இலட்சியத்திலேயே இல்லாதது.

ஒரு பொருளை உண்டு இல்லை என அறியும்போது, பிரமாணம், பிரமேயம், பிரமாதா, பிரமிதி எனும் நான்கு சாமக்கிரியைகள் உண்டு.

பிரமாணம் என்பது:—அளவை.

பிரமேயம் என்பது:—அளவையால் அளந்து அறியப்படும் பொருள்.

பிரமாதா என்பது:—அவைகளினாலே அளந்து ஒரு பொருளை அறிகின்றவன்.

பிரமிதி என்பது:—அங்ஙனம் அறிகின்ற மெய்யறிவு.

ஒருபொருளை அளந்தறியு மிடத்து காண்டல், கருதல், உரை, பொருள், ஒப்பு, ஒழிபு, உண்மை, ஐதிகம், இயல்பு முதலிய அநேக பிரமாணங்களைத் தருக்க நூலார் கூறுவர். காண்டல் எனினும் காட்சி எனினும் ஒக்கும். உரை எனினும் ஆகமம் எனினும் ஒக்கும்.

"காண்டல் கருத லுவம மாகமம்
மாண்டைய வருத்தா பத்தி யோடியல்
பைதிக வபாவ மீட்சி யொழிவறி
வெய்தியுண் டாநெறி யென்றிவை தம்மாற்
பொருளி னுண்மை புலங்கொள வேண்டும்."

இங்ஙனம் பல பிரமாணங்கள் கொள்ளப்பட்டாலும் அவையெல்லாம் காட்சி, அநுமானம், ஆகமம் எனும் மூன்றில் அடங்கும்.

"அளவைகாண்டல் கருதலுரை யபாவம் பொருளொப்பாறென்ப
ரளவைமேலு மொழிபுண்மை யையிகத்தோ டியல்பெனநான்
களவைகாண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லா
மளவைகாண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே."

அவற்றுள்

காண்டலாவது:—ஐயந்திரிபு மிகுதி முதலிய குற்றங்கள் இல்லாமல், ஆன்மாவினது சிற்சத்தியால் ஒன்றை அறிவது.

கருதலாவது:—நேரே அறியப்படுவ தன்றிச் சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்து நின்ற பொருளை, அதனைவிட்டு நீங்காது எப்பொழுதும் அல்லது எவ்விடத்தும் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு, அப்பொருளை அறிவது, கருதலெனினும், அனுமான மெனினும் ஒக்கும்.

உரையாவது:—காண்டல் கருதல்க ளாகிய இரண்டினாலும் அறியப்படாத பொருளை, சர்வஞ்ஞனும், சர்வாந்திரியாமியும், சர்வஜீவதயாபரனு மாகிய ஈசுவரனது வாக்கியங்களான வேதாகமங்களைக்கொண் டறிவது.

அபாவமாவது:—"ஒன்றனை மற் றொன்றென் றுருவிப்பி னுண்மையினே டொன்ற னபாவமென வோர்" என்பதனால் பெறப்படுவது. இந்த அபாவமானது:—என்றும் அபாவம், இல்லதன் அபாவம், ஒன்றின் ஒன்றபாவம், உள்ளதன் அபாவம், அழிவுபாட்டபாவம் என ஐந்து வகைப்படும்.

என்றும் அபாவமாவது:—முயற்குக் கோடில்லை என்பது.

இல்லதன் அபாவமாவது:—பெரியோர் வாயிற் பொய் இல்லை என்பது.

ஒன்றின் ஒன்றபாவமாவது:—கடத்தின்கட் படமில்லை, படத்தின்கட் கடமில்லை என்பது.

உள்ளதன் அபாவமாவது:—ஆனையைப் பந்தியிற் கண்டிலம் என்பது.

அழிவுபாட்டபாவமாவது:—கடமுடைந்தால் அஃதில்லை என்பது.

பொருள் என்பது:— அருத்தாபத்தியாகும்.

அருத்தாபத்தியாவது:—ஒரு புருஷன் பகலெல்லாம் போசனஞ் செய்யாமலும் பருத்தும் இருக்கின்றான்; என்றது கொண்டு, பகல் போசனம் பண்ணுதவனுக்குத் தேக புஷ்டியானது, இரவில் புசியாவிட்டால், கூடாதாகையால், அந்த அநுபவத்தினலே இரவில் புசிப்பான் என்று நிச்சயிப்பது.

"அடுத்துல கோதும் பொருளருத் தாபத்தி யாமிதுதா
னெடுத்த மொழியினஞ் செப்புவ தாகு மிவ்வூரிலருள்
படைத்தவ ரென்னிற் படையா தவருள ரென்றுமிவன்
கொடுப்பவ னென்னிற் கொடாதாருமுண்டென்று கொள்வதுவே"

ஒப்பாவது:—"கண்ணன் கருமுகில்போல் வண்ணனெனக் கேட்டவனைக், கெண்ணுமுணர் வொப் பனவே காண்." ஒப்பு - உவமானம்.

ஒழிபாவது:—பாரிசேஷமாகும்; அதனை

"சீரா ரொழிபென்று செப்பப் படுவது திண்புவிமேற்
போராடி நின்று பொருதா ரிருவர்தம் போர்க்களத்துப்
பாரா ரிராகவன் வென்று னெனிற்றன் பரிசழிந்து
நேரா மிராவணன் ருேற்றசொல் லாகநிகழ் வதுவே."

என்பதனுற் பெறப்படும்.

அஃதாவது உலக கருத்தா மாயையும், கர்மமும், ஆன்மாவும் அன்றென்றபோது சிவனே கருத்தா என்றறிவது.

உண்மையாவது:—சம்பவமாகும்.

அஃதாவது:—

"துயக்கற வுண்மை யெனநா வலர்க ணிந்துரைப்ப
தியற்கைப் பொருளினை யிற்றென லாமிது தானுரைக்கின்
வியக்குற்ற கால்சலிக்குந் தீச்சுடு நீர்குளிரும்
வயக்குற்றமண்வலி தென்றுபட்டாங்கு வழங்குவதே"

என அறிக.

ஐதிகமாவது:—

"கொன்பயில் வேலைக் கடல்புடை சூழுங் குவலயத்தோ
ரின்புட னுலி லலகையுண் டென்பர்க ளென்பதுவு
மின்பயில் புற்றில் விடநாகமுண்டென்ப ரென்பதுவு
மென்பர்க ளுவல ரென்பது மைதிக மென்பர்களே"

என அறிக.

இயல்பாவது:—

"மாமே லிருந்தொரு கோரூ வெனிற்சுள்ளிக் கோறரலுந்
தூமே லிருந்தொரு கோரூ வெனிற்றர வேதுணிந்து
பூமேவுங் கண்ணழுத் தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே
நாமே வியல்பென்று கூறுவர் நல்லசொன் ஞவலரே"

என அறிக.

இவைகளில் அபாவமும் இயல்புங் காண்டலில் அடங்கும். அபாவங் கண்ணுற் காணப்படுவது என்வும், கண்ணுற் காணப் படாததெனவும் இருவகைப்படும். கண்ணுற் காணப்படும் அபாவத்தில் கண்ணுற் காணப்பட்டிருக்கிற கடாதியினுடைய தோற்றரவு கண்ணுக்குக் காணப்படுகையினாலே அது காண்ட லில் அடங்கும். கண்ணுற் காணப்படாத அபாவமானது கண் ணுற் காணப்படுவதற்கு விடயமாகா திருக்கிற பரமாணு வாதிக ளினுடைய தோற்றரவின்றியிருத்தலால் அஃது அநுமானத்தில் அடங்கும். இயல்பு காண்டலில் அடங்கும். அருத்தாபத்தியும், உண்மையும், ஒழிவும் அநுமானத்தில் அடங்கும். ஐதிகம் அப்ரமாண மெனவும் ப்ரமாணமெனவும் இருவிதமாகும். ஆலின் கட் பேயுண்டு என்றபோது ஆலின்கட் பேயுண் டென்பதை ஒருவருங் காணுதிருத்தலால் அஃது அப்ரமாண ஐதிக மெனப் பெறும். ஆலின்கட் பேயுண் டென்றபோது சான்ரேர் வாக்கி யமே மூலமாக இந்த ஆலிற் பேயுண்டென்று நிச்சயித்து அறித லால் அது ப்ரமாண ஐதிகமாகும். ஐதிகம் உரையில் அடங்கும்.

உலகாயதன்:—காண்ட லொன்றுமே கொள்வன்.

பௌத்தனும் வைசேஷிகனும்.—காண்டலுடன் அநுமானமுங் கொள்வன்.

சாங்கியன்:—காண்டலும், அநுமானமும, உரையுமாக மூன்று பிரமாணமுங் கொள்வன்.

நையாயிகன்:—அம்மூன்றுடன் உபமானமுங் கொள்வன்.

அருகனும் பிரபாகரனும்:—அந்நாலுடன் அருத்தாபத்தியுங் கொள்வன்.

பாட்டனும் வேதாந்தியும்:—அவ்வைந்துடன் அபாவமுங்கொள் வன்.

பௌராணிகன்:—அவ்வாறுடன் சம்பவமும் ஐதிகமுங்கொள் வன்.

(தொடரும்)

# தமிழின் சிறப்பியல்பு

[திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

உலகிலே ஏனையுயிர்களினின்றும் மக்களை வேறு படுத்திக் காட்டுவதாய், மக்களின் அறிவு விளக்கத்திற்குச் சிறந்த கருவியாவதாய் உள்ளது மொழி. அன்றியும் மொழியானது அதனைப் பேசிவரும் மக்களின் கருத்துப் பொருள்களைத் திரட்டி வைத்திருக்கும் கருவூலமாயிருத்தலின், அதன் அமைப்பு முதலியன கொண்டே அம்மக்களின் நாகரிக நிலையை உணர்தலும் சாலும். இப்பொழுது எத்தனையோ பலவாறு மொழிகள் உலகத்தில் வழங்குவன என்ப. எனினும், தமிழ், ஆரியம், எபிரேயம், கிரிக்கு, இலத்தீன் முதலிய சில மொழிகளே மிக்க பழமையும் பெருமையும் உடையனவாக அறிஞர்களாற் கொள்ளப்படுகின்றன. இவற்றுள் இருவகை வழக்கினும் நின்று நிலவுவது தமிழ். தமிழின் சிறப்பியல்பு என்னின் பிற மொழியிலின்றித் தமிழின் மட்டுமேயுள்ள தன்மை யென்றாகும். பிறமொழி என்பது தமிழ் அல்லாத எல்லா மொழியையும் குறிக்குமாயினும் ஈண்டுத் தமிழுக்கு எதிராக நிறுத்தி ஆராய்தற்குரியது சங்கதம் எனப்படும் ஆரிய மொழியேயாகும்; பரத கண்டத்து வழங்கும் மொழிகளுள்ளே தென்மொழி என்றும் வடமொழி என்றும் திசைப் பெயரடுத்து எதிர் நிறீஇ வழங்கப்பெறுவன தமிழும் ஆரியமுமே யன்றோ? தமிழின் தனித் தன்மையையோ, உயர்வையோ கூறப்புகின் அது மற்றொன்றை வெறுப்பதோ இழிவு படுத்துவதோ ஆகுமெனச் சிலர் கருதுகின்றனர். அத்தகைய மனப் பான்மையினர் இவ் வவையின்கண் இரார் என எண்ணுகிறேன்.

எல்லா மொழிக்கும் ஆரியமே தாயாகுமென்றும், அம்முறையே தமிழும் ஆரியத்தினின்றே தோன்றியதாகு மென்றும் கொள்ளும் ஆராய்ந்து துணியாத கொள்கையினை யுடையார் சிலர் சின்னாளின் முன்புதொட்டு இருந்து வருகின்றனர். மொழியாராய்ச்சி யென்பது புதியகலை முறைகளில் ஒன்றாகி உண்மையை விளக்கிவருகின்ற இந்நாளில் அக்கொள்கை அருகி விட்ட தென்பதில் ஐயமில்லை. எனினும் அக்கொள்கை அறவே ஒழியுமாறு, தமிழின் சிறப்பியல்புகளை உள்ளவாறு எடுத்துக் காட்டித் தெருட்டுதல் நம்மனோர் கடன். இச் சிற்றுரையும் இக் கருத்தினைக் கொண்டே எழுந்ததாகும். மொழிநூல் ஆராய்ச்சியாளர் மொழிகளை அவ்வவற்றின் பண்புகள் கொண்டு வெவ்வேறு குடும்பம் அல்லது குழூஉவாகப் பாகுபடுத்தி யிருக்கின்றனர். இவ்வுரை பல்காமைப் பொருட்டு அவற்றை யெல்லாம் இங்குக் கூறாது விடுகின்றேன்.

வடமொழி தென்மொழி என்னும் பெயர் வழக்கே அவை வெவ்வேறு தனிமொழியாமென்பதுணர்த்தி நிற்கவும், வடக்கினின்று தெற்கு உதித்ததென்பார்போல வடமொழியினின்று தென்மொழி வந்ததென்பார் சிலர் தோன்றினமை பரிவுறற் பாலதே. அதிலும், தமிழ் இலக்கணங்களைத் துறைபோகக் கற்று இலக்கணக்கொத்து இயற்றிய சுவாமிநாத தேசிகர் "ஐந்தெழுத் தாலொருபாடை யென்றறையவுநாணுவ ரறிவுடையோரே" என்று கூறியதுதான் பெரிதும் இரங்கற்குரியது. தேசிகர்க்கும் அது கருத்தாகா தென்பதும், ஓர் முனைப்புப் பற்றியே அங்ஙனம் கூறிவிட்டன ரென்பதும் 'அகத்தியர்' என்னும் கட்டுரையில் முன் விளக்கியெழுதியுள்ளேன். வடமொழிப் பற்று மிக்காராய சுப்பிரமணிய தீக்கிதர் தாம் இயற்றிய பிரயோக விவேகத்தில் வடமொழிக்கும் தமிழுக்கும் வேற்றுமை சிறிது கூறி, "இது வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும்' பேதங் கோடி கூறிட்டு ஒரு கூறுண்டோ இன்றோவென்பது கூறுகின்றது." என்றனர். அங்ஙனங்கூறிய அவர் தாமே "வடமொழிக்குந் தமிழ்மொழிக்கும் இலக்கண மொன்றென்பதறியாது சம்ஞாபேதத்தாலும் பாடைவேற்றுமையாலும் இகழ்ந்து வேறென்பாரை நோக்கியென்க" என்றும் கூறிவைத்தனர். தேசிகர் கருத்தும் தீக்கிதர் கருத்தும் ஆரியமும் தமிழும் வெவ்வேறு மொழிகளே யாமென்பதும், எனினும் அவ்விருமொழிக்கும் இலக்கணம் ஒன்றே யாம் என்பதுமாகக் காணப்படுகின்றன. மொழியின் அமைதியே இலக்கணமாகவும், அவர்கள் மொழியையும் இலக்கணத்தையும் வேறு பிரித்தோதியது எங்ஙனம் பொருந்தும்? அவர்கள் வாளா இலக்கணம் ஒன்றென மொழிந்தாரேயன்றி, எங்ஙனம் ஒன்றாகுமென ஆராய்ந்து தங் கோள் நிறுவினாரல்லர்.

இனி, இருமொழிப் புலமையும் ஒருங்குடைய பெரியாராகிய சிவஞான முனிவர் தாம் இயற்றிய தொல்காப்பியப் பாயிர விருத்தியில் "ஐந்திரம் நோக்கித் தொகுத்தானெனின், தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும் வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமையானும்" என எழுதிய உரை சிந்திக்கற்பாலது. தொல்காப்பியத்திற்கு முதனூல் ஐந்திரம் எனக் கூறிய சுப்பிரமணிய தீக்கிதர் கூற்றையே ஆசிரியர் சிவ

ஞான முனிவர் இங்ஙனம் மறுத்துரைத்தாராவர். தமிழிலக்கணத்திற்கு வடமொழி இலக்கணம் முதனூலாதல் எவ்வாற்ரானும் பொருந்தாதென்பது இதனல் வலியுறுத்தப்பட்டது. தேசிகர் கூற்றும் இதனானே மறுக்கப்பட்டமை ஓர்க. வடமொழியிற் பெறப்படாத தமிழ்ச் சிறப்பியல்புகள் இவையெனத் தமிழிலக்கணப் பகுதிகள் பலவற்றைக் கிளந்தெடுத்தோதிய ஆசிரியர், அதனோடமையாது, 'இன்னோரன்ன பிறவும்' எனவும் கூறிப்போந்தனர். வடமொழியிற் பெறப்படும் தமிழியல்புதான் வேறு யாதுளது? பெயர்ச்சொல், வினைச்சொல், வினைமுதல், செயப்படுபொருள், பயனிலை, மூவிடம், முக்காலம் முதலியன வடமொழியிற் பெறப்படுவன என்னலாமோ? இவையில்லாத மொழிகளே உலகத்திலில்லை. உவகையில் இன்சொல்லும் வெகுளியில் வன்சொல்லும் எழுதல்போல இவையெல்லாம் எல்லா மொழியினும் இயல்பிலே அமைதற்குரியன. இவற்றை ஒன்றினின்று மற்றொன்றிற்கு வந்தனவென்று கூறுவோன் "மருந்திற் றணியாத பித்தனென் றெள்ளப்படுவான்" என்பது தேற்றம்.

இனி, ஐந்தெழுத்தா லொருமொழி யெனவும் அறிவுடையோர் நாணுவர் என்னுங் கூற்றை இன்னும் சிறிது ஆராயாது விடுதல் தக்கதன்று. தமிழெழுத்துக்கள் முப்பத்து மூன்றென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருப்பவும் அதனைச் சிறிதும் சிந்தியாது ஐந்தெழுத்தென்று கூறியது என் கருதி? தமிழ் முதலெழுத்துக்கள் முப்பதில் இருபத்தைந்தெழுத்து வடமொழியிலிருத்தலின் அவற்றைக் கழித்து, எஞ்சிய ஐந்துமே தமிழுக்குரியவாகக் கூறலாயிற்றெனின், வடமொழி யெழுத்துக்கள் யாவும் பிறமொழிகளிற் காணப்படுதலின் வடமொழிக்கென ஓரெழுத்தேனும் இன்றென ஏன் கூறுதல் கூடாது? இனி அவர் எள்ளிக்கூறிய ஐந்தெழுத்தும் அத்துணை எளிமை யுடையன வல்ல வென்பதையும் ஓர் எடுத்துக் காட்டில் வைத்து விளக்குகின்றேன்.

"நற்று டொழாஅ ரெனின்"

என்பது ஓர் குறட்பாவின் பின்னடி. இவ்வடியை வடமொழியில் எழுதுதல் சாலுமோ? இதன் முதலிலுள்ள 'ந' என்னும் ஒன்றன்றி மற்றைய எழுத்துக்கள் எழுதப்படாவாயின் வடமொழியன்றோ பெரிதும் எழுத்துக் குறைபாடுடையதென இது காட்டா நிற்கும்? இப்பொழுது ஐந்தெழுத்து எத்துணைப் பெருமை யுடையன வென்பது காண்க. (தொடரும்)

# கழுகின் காவலன்

[திரு R. P. சேதுப் பிள்ளையவர்கள் B. A.]

(கசரு. - ம் பக்கத் தொடர்ச்சி)

இலங்கை வேந்தனது விமானத்தில் வீணைக்கொடி பறந்தது. ஆரம் தாழ்ந்த அவனது அழகிய மார்பில் வீரக்கவசம் விளங்கிற்று. வலிய கரங்களில் வில்லும் வேலும், வாளும் இலங்கின. இத்தகைய படைக்கலங்களோடு விளங்கிய வீரனை, வலிய இறகே வாகனமாகவும், மூக்கே வாளாகவும், நகமே வேலாகவும், பல்லே வில்லாகவும் கொண்டு கழுகின் காவலன் எதிர்த்தான். புயவலியும் படைவலியும் படைத்த வேந்தனது வீணைக் கொடியைப் பறவை யரசன் பறித்து ஒடித்தான். அவனது வில்லைப் பல்லாற் பறித்துத் தாளால் இறுத்தான். முத்தார மார்பை மூடியிருந்த கவசத்தை மூட்டறுத்தான். இதனைக் கண்ணுற்ற இலங்கை வேந்தன் கடுங்கோபங் கொண்டு கூற்றினும் கொடிய கூரிய வேற்படையை வேகமாய்ச் சுழற்றிப் பகைவன் மேல் விடுத்தான். அவ்வேல் வீரம் செறிந்த கழுகின் இறகைத்துளைக்க வலியற்றுக் குழைந்து மீண்டது.

"பொன் நோக்கியர் தம் புலன் நோக்கிய புன்கணோரும்
இன் நோக்கியர் இல்வழி எய்திய நல் விருந்தும்
தன் நோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென் நோக்கியர் நோக்கமும் ஆமென மீண்டது அவ்வேல்"

என்று அவ்வேல் குழைந்த தன்மையைக் கம்பர் எழுதியுள்ள அழகு கற்றோர் உளத்தைக் கவர்வதாகும். வேசியர் நலத்தை விரும்பும், காசற்றவர் கருத்துப் போலும், இல்லாள் இல்லாத மனையிலெய்திய நல்விருந்து போலும், தவஞ்செய்யும் தன்மையிலமைந்த மாதவர் பாற்சென்ற மங்கையர் நோக்கம் போலும், கழுகரசனது சிறகில் அழுந்தும் ஆற்றலின்றி அவ்வேல் பயனற்று மீண்டது. அந்நிலையில் பறவை யரசன், தேர்ப்பாகனது தலையைப் பறித்து மோகம் படைத்த வேந்தனது முகத்தில் எறிந்தான். இதைக்கண்ட இராவணன் பெருஞ் சீற்றம் கொண்டு ஓர் ஆடகத்தண்டால் கழுகரசனை அறைந்தான். அதன் வெம்மையைப் பொறுக்கலாற்றாது பறவை மன்னன் மால்வரை போல மண்மேல் விழுந்தான். இச்செயலைக்கண்ட சீதை சிந்தையழிந்து, வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற்போல வருந்தித் துடித்தாள். மங்கையின் துயரைக்கண்ட பறவை மன்னன், தன் துயரை மறந்து 'அன்னமே அஞ்சேல்' என்ற அபய

மொழியோடு மீண்டும் அரக்கனது தேர்மீது பாய்ந்து அவனது தண்டைப் பறித்துத் தரைமீது எறிந்தான். இவ்வாறு தன் படைக்கலங்களைப் பாழாக்கிய கழுகின் காவலனது, வலிமையை எவ்வாறழிக்கலாமென்று இலங்கை வேந்தன் எண்ணியிருக்கையில், பறவை யரசன் தன் கூரிய மூக்கினால் அரக்கனது பரிகளைக் குத்திக்கொன்று, அவனது மார்பிலும் புயத்திலும் சிறகால் அறைந்து பற்களால் கடித்தான். அந்நிலையில் எல்லையற்ற வலியமைந்த இலங்கை நாதனும் உடல் உலைந்து உயிர்ப்படங்கி, மயங்கி முடிசாய்ந்தான். இவ்வாறு இலங்கை வேந்தன் மயங்கி மண்மேல் விழுந்த எளிமையை மேல் நாள் சடாயுவால் தரையில் வீழ்ந்தாய் என்று சிறையிருந்த சீதை கூறும் மொழிகள் செம்மையாய் உணர்த்துவனவாம்.

இவ்வாறு சிறிது நேரம், சிறகின் வலிமையால் நலிந்து மயங்கிய இலங்கை மன்னன் மயக்கம் தெளிந்தபோது, இறைவன் அளித்த மந்திர வாளாலன்றிக் கழுகரசன் மாளான் என்றறிந்து, அவ்வாளால் அவனை எறிந்தான். சங்கரன் அளித்த வாளின் வெம்மைக்கு ஆற்றாது கழுகரசன் குழைந்து மண்மேல் விழுந்தான். இவ்வாறு அறநெறி திறம்பிய அரக்கன் வென்று அருள் நிறைந்த கழுகரசன் தோல்வியுற்றதைக் கண்ட திருமகள் நஞ்சுண்டவள்போல நடுங்கி,

"அல்லல் உற்றேனைவந்து அஞ்சல் என்றஇந்
நல்லவன் தோற்பதே நரகன் வெல்வதே
வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
இல்லையோ அறமென இரங்கி ஏங்கினள்.

ஐயோ, அல்லலுற்ற ஏழையாகிய எனக்கு ஆதரவாய்வந்து 'அஞ்சேல்' என்று அபயமளித்த அருளாளன் தோற்பதும் அரக்கன் வெல்வதும் நீதியோ, முறையோ; இவ்வுலகில் மறமும் அறத்தை வெல்லுமோ, அறநெறி யென்பது உலகில் இல்லையோ, என்று ஏங்கியழுதாள். இரக்கமற்ற அரக்கன் திருமகளைக் கொண்டு தென்திசை சென்றான்.

இலங்கை யரசனது வலிமையையும் வரங்களையு மறிந்தும், அவன் வஞ்சித்துக் கவர்ந்து சென்ற மங்கையின் துயரம்கண்டு மனம் பொறாது, அவ்வரக்கனுடன் பொராது உயிர் கொடுத்துப் புகழ் கொண்ட பறவை மன்னன் 'தெய்வமரணம்' எய்தினன் என்று இராமவீரன் மனமாரப் புகழ்ந்தான்.

"சரண் எனக்கு யார்கொல் என்று சானகி அழுது சாம்ப
அரண் உனக்காவன் வஞ்சி அஞ்சல் என்று அருளின் ஓம்பி
முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணம் என்தாதை பெற்ற தென்வயின் வழக்கன்றோமோ"

என்று இராமன் கூறும் இனிய மொழிகளால், கழுகரசனது மரணத்தின் மாண்பு நன்கு விளங்கும். அடைக்கலம் புகுந்த புறவின் உயிரைக் காத்தற்பொருட்டுத் தன் ஆருயிர் கொடுத்த அரசனும், உலகெலாம் காக்கும் உயரிய அருளால் ஆலமுண்ட நீலகண்டனும், ஆதி மூலமே யென்றழைத்த ஆனைபால் அருள் சுரந்து அதன் துயரம் தீர்த்த திருமாலும், அடைக்கலம் புகுந்த அந்தணனைக் காக்குமாறு காலனைக்காலால் உதைத்த கடவுளும், நஞ்சினும் கொடிய இலங்கை நாதனை அஞ்சித்துயருற்ற அன்னத்திற்காகக் கடும்போர் புரிந்து ஆவி துறந்த கழுகின் காவலனும், அறநெறி யாகிய திருநெறியில் தலை சிறந்தவரென்பதில் ஐயமொன்றுண்டோ? இதனாலேயே சொல்லின் செல்வனாய அநுமன் பறவை மன்னனது பெருமையைச் சிறையிருந்த சீதையிடம் உரைக்கப் போந்தபோது 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு" என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்தான். இலங்கை வேந்தனுடன் போர் புரிந்து, பூதவுடம்பை நீத்த கழுகரசன், என்று மழியாத புகழுடம்பை எய்தினான் என்று அநுமன் கூறும் மொழிகள் ஆராய்தற்குரியனவாம். போர்க்களத்தில் மாற்றாருடன் மலைந்து, வெற்றி பெற்று அங்கேயே உயிர் துறந்த வீரனைப் போரில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான் என்று கூறுதல் பொருந்தும். அவ்வாறன்றித் தோல்வியுற்ற ஒருவனைப் புகழ்கொண்டான் என்று புகழ்வது பொருத்தமுடையதோ; என்று ஆராயும் பொழுது, பறவை மன்னன் இலங்கை மன்னனுடன் போர்புரிந்து பெற்ற தோல்வியும், வெற்றியின் பாற்படுதலாலேயே அநுமன் அவ்வாறு புகழ்ந்தான் என்பது இனிதறியப்படும். வரத்தினாலும் வலிமையினாலும் ஒப்பாரின்றி உயர்வுற்றிருந்த இலங்கை வேந்தனுடன் மலைந்து தோல்வியுறுவதும் வெற்றியே யாகும். தம்மின் மெலியாருடன் பொருது வெற்றி பெறுவதினும், வலியாருடன் மலைந்து தோல்வியுறுதல் சாலவும் சிறந்த தென்பது சொல்லாமையே அமையும். இவ்வுண்மையை இலங்கை வேந்தனே, தன் மைந்தனான மேகநாதனிடம், மற்றோரிடத்தில் எடுத்துரைக்கின்றான். சீதையை உரியவர்பால் ஒப்புவித்து, அவரது சீற்றம் தணிப்பதே ஏற்றதாகும் என்று எடுத்துரைத்த தன் மகனை நோக்கி இலங்கை வேந்தன்,

"வென்றிலன் என்ற போதும், வேதமுள்ளளவும் யானும்
நின்றிலன் அன்றே, மற்றவ் விராமன்பேர் நிற்குமாயின்
பொன்றுதல் ஒருகாலத்தும் தவிருமோ, பொதுமைத் தன்றே
இன்றுளார் நாளை மாள்வர், புகழுக்கும் இறுதியுண்டோ"

என்று கூறும் மொழிகளில் மேற்கூறிய உண்மை இலங்கக் காணலாம். இராமனுடன் போர் செய்து தோற்றலும் அது பெருமையேயாகும். அவ்வீரன் பெயர் இவ்வுலகில் நிலவும் காலமளவும் என் பெயரும் நிலவு மன்றே; என்றும் பூதவுடம்பிற்கு அழிவுண்டு: புகழுடம்பிற்கோ எஞ்ஞான்றும் இறுதியில்லை; ஆதலால் இராம வீரனுடன் போர் புரிந்து தோற்பதும் ஏற்றதாகும் என்று இலங்கை நாதன் கூறும் வீரமொழிகளே இவ்வுண்மைக்குத் தலை சிறந்த சான்றாகும்.

அன்றியும் இலங்கை வேந்தன் தனது புயவலியாலும் வீரத்தாலும் கழுகின் காவலனைக் கொன்றானல்லன். இறைவன் தந்த வாளின் வலிமையாற் கொன்றான். இறைவன் வீற்றிருக்கும் வெள்ளி மால் வரையின்கீழ் அகப்பட்டு வருந்திய இலங்கை வேந்தன் அத்துயர் கடக்குமாறு பாடிய இசையினுக்கு இரங்கிய ஈசன் கொடிய வாளும், நெடிய ஆயுளும் அவனுக்கு அளித்தான் என்பது.

"தோளாண்மை கருதிவரை யெடுத்த தூர்த்தன்றன்
தோள்வலியும் தாள்வலியும் தொலைவித்து ஆங்கே
நாளோடு வாள்கொடுத்த நம்பன்றன்னை
நாரையூர் நன்னகரில் கண்டேன் நானே"

என்னும் தேவாரத் திருவாக்கால் அறியப்படும். இவ்வாளின் வலியாலேயே இலங்கை வேந்தன் முன்னாள் காலகேயரது வலியழித்து, தானவகுலத்தை யெல்லாம் கலங்கச் செய்தான். அக்கால முதல் அவ்வாளின் பெருமையை யறிந்த வானவரும் தானவரும் அஞ்சி அடங்கி அயர்வாராயினர்.

"குலங்களோடும் தம்குல மணிமுடி யொடும் குறைய
அலங்கல் வாள்கொடு காலகேயரைக் கொன்ற தற்பின்
இலங்கை வேந்தன் என்றுரைத்தலும் இடியுண்ட அரவில்
கலங்குமால் இனும் தானவர் தேவியர் கருப்பம்"

என்று கம்பர் பெருமான் அருளிய கவிந்த மொழிகளால் இனிதுணரப்படும். இத்தகைய தெய்வவாளின் வலிமையாலேயே பறவை மன்னன் தோற்றான் என்னும் கருத்து

"தோற்றனை பறவைக்கு அன்று, துள்ளும் நீர்வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய், அன்றெனில் இறத்தி யன்றே"

என்று சீதை இலங்கை வேந்தை நோக்கிக்கூறும் உண்மை மொழிகளால் உணரப்படும். பறவை வேந்தன் சிறகால் அறை யுண்டு தோல்வியுற்ற இலங்கை வேந்தன், ஈசனது வாளின் வலி மையால் வென்றமையைக் கண்கூடாகக்கண்ட சீதையின் சான்று சிறந்ததாகக் கொள்ளப்படு மென்பதில் யாதும் ஐய மில்லை. ஆகவே கழுகின் காவலனை வென்ற பெருமை இறைவ னது வாளுக்குரியதேயன்றி, இராவணனது வீரத்திற்குரிய தன் றென்பது இனிது விளங்கும். அன்றியும் அவ்வாளால் பறவை மன்னன் ஆவிதுறப்பான் என்று ஒரு மொழியும் முன்னரே உண்டென்று உணரப்படுகின்றது. இதனை

"வலியின் தலை தோற்றிலன், மாற்றரும் தெய்வ வாளால்
நலியுந்தலை என்றது வன்றியும், வாழ்க்கை நாளும்
மெலியும்கடை சென்றுள தாகலின் விண்ணின் வேந்தன்
குலிசம் எறியச் சிறையற்ற தொர்குன்றின் வீழ்ந்தான்"

என்று கவியரசர் கூறும் மொழிகளிற் காணலாம்.

இன்னும் படைக்கலமில்லாத பகைவனைப் படைவலியால் வென்றழிப்பது அறப்போர் முறைக்கு மாறுபட்டதாகும். அன்றியும் விலங்கையும் பறவையையும் படைக்கலங்களால் வெல்வது வீரனது கொற்றத்திற் கிழுக்காம் என்பது, 'வீறின்மை யின் விலங்காமென மதவேழமும் எறியான்' என்னும் சிந்தா மணியால் சிறந்து விளங்கும். இதற்குமாறாக இலங்கை வேந்தன் படைக்கல மில்லாப் பறவையைத் தன் படைவலியாற் கொன் றான். படைக்கலமற்ற நிலையிலேயே கழுகின் காவலன் இலங்கை வேந்தனது வில்லையும், கொடியையும் ஒடித்து, ஆடகத் தண்டையும், அரும் கவசத்தையும் சிதைத்து அவ்வரசனையும் தன் சிறகால் அறைந்து தரையிடைச் சாய்த்தான். அவன்மீது இலங்கை வேந்தன் ஏவிய அம்பும் எறிந்த வேலும் வலிய சிற கின் வழியாகச் செல்ல வலியற்றுக் குழைந்து விழுந்தன. பின் னொருகால் இலங்கை வேந்தன் வேலைச் சுழற்றி எறிந்தபோது, அவ்வேல் இலக்குவனது பணைத்த மார்பைத் துளைத்து அப்பாற் சென்றதென்றறியப் படுகின்றது. இவ்வாறு இளைய வீரனது மலைபோன்ற மார்பையும் பிளக்க வல்ல இலங்கை வேந்தனது வேல், பறவை யரசனது சிறகையும் துணிக்க வலியற்றிருந்த பான்மையே, கழுகின் காவலனது வலிமைக்கு என்று மழியாத சான்றாகும். ஆகவே வலிமையாலும் வீரத்தாலும் இலங்கை வேந்தனுக்கு எவ்வாற்றானும் குறைபடாத கழுகரசன், ஈசனது வாள்வலிக்காற்றாது இறந்தானேயாயினும், உண்மையில் வெற்றி பெற்றவனே யாவான். (தொடரும்)

# காஞ்சிப்புராண இன்கவித்திரட்டு

[ராவ் சாஹிப் வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள் G.B.V.C]

(௬௰ - ம் பக்கத் தொடர்ச்சி)

## நாட்டுப்படலம்

௧. கடல்க டைந்திடச் செல்லுறூஉம் வெள்ளைமால் கடுப்பப்
படலை வெண்முகில் பரவைநீர் உழக்கிவாய் மடுத்து
விடம்எ ழுந்தென மீண்டஅம் மாயனை விழைய
உடல்க றுத்துவிண் ணெறிபடர்ந் தொய்யென மீண்டு.

இ - ள்:—(முன்னாளில் அமுதம் உண்டாகும்படி) கடலைக் கடைதற்குச் சென்ற (அக்காலத்தில்) வெண்ணிறமாயிருந்த விட்டுணுபோல, (காஞ்சிபுரத்தைத் தன் அகத்தே கொண்ட பாலிநாட்டின்கண் உள்ள நந்தி மலையினின்றும் புறப்பட்டுக் கடலைநோக்கிச் சென்ற) வெண்ணிறமேகம், (அவர் கடைதலால் கடலைக் கலக்கியதுபோல,) கடல் நீரை (உண்ணும் முயற்சியால்) கலக்கி உண்டு, (அமுதம் எழுமுன் விடம் எழ, அதனால் தாக்குண்டதனால் வெண்ணிறம் கருநிறமாக மாறிக் கடலினின்று) திரும்பின விட்டுணுபோல (வெண்ணிறமா யிருந்த) உடல் (கடல் நீருண்டதனால்) கருநிறமாகி (எழுந்து) ஆகாயமார்க்கமாகப் பரவி (முன் புறப்பட்ட மலைநோக்கி) விரைவாக மீண்டு (அடைந்தது) எ - று.

செல்லுறூஉம் - செல்லும்; இன்னிசை யளபெடை. மால் - திருமால். கடுப்ப - ஒப்ப. படலை - பரந்த வடிவு. பரவை-கடல், உழக்கி - கலக்கி. வாய் மடுத்து - உண்டு. எழுந்தென, எழுந்ததென வென்பதன் விகாரம். இப்படலம் ௰ - ம் பாட்டில் படைத்தது படைத்து என வருதல் காண்க. விழைய - ஒப்ப. ஒய்யென - கடுக. இப்பாட்டில் உள்ள 'மீண்டு' என்ற வினையெச்சம் பின்வரும 'தனது கீர்த்தியும்' என்ற பாட்டில் 'படைத்தன்றே' யென்ற வினைமுற்றைக்கொண்டு முடிந்தது. கடலென்னும் பொதுமைபற்றிப் பாற்கடல் கடைந்திட வெனற்பாலது கடல் கடைந்திடவெனப்பட்டது. மால், விட்டுணுவுக்கும் மேகத்துக்கும் பொதுப்பெயராதலால், அந்த வெள்ளை மால் (-விட்டுணு) போல இந்த வெள்ளை மால் (-மேகம்) கடலுக்குச் சென்றதென ஒரு நயம் தோன்றுதல் காண்க.

வெண்மேகம் கடலுக்குச் சென்று நீருண்டு கருமேகமாய் மீளுமென்பது கவிமரபு. கடல் முதலிய எங்கெங்கும் உள்ள

நீரும், சூரியவெப்பம் தீவெப்பம் முதலிய வெப்பங்களால், ஆவியாக மாறிய நீர்வடிவமே மேகமென்பது கலைஞர் (Scientists) சோதித் தாராய்ந்து துணிந்த உண்மை.

கடலுக்குச் செல்லும் வெண்மேகத்துக்குக் கலைமகள் நீறு பூசிய சிவபெருமான் முதலிய உவமையும் நீருண்ட கருமேகத்துக்கு உமாதேவி திருமால் முதலிய உவமையுமாக வெவ்வேறுவமைகளை ஏனைய நூலாசிரியர்கள் கூறியுளராக, இந்நூலாசிரியர் இருவேறு காலங்களில் இருவேறு நிறமுள்ள ஒருமேகத்துக்கு இருவேறு காலங்களில் இருவேறு நிறமுள்ள ஒரு திருமாலை உவமித்த நயம் பாராட்டற்பாலது.

எ.　மலைநகைத் தனைய காட்சி வயின்வயின் அருவித் தாரை
சிலையினின் றிழிந்து மண்மேற் றிரண்டுசென் றணையும் தோற்றம்
உலவையோ டிகலிச் சேடன் உயர்வரைக் குடுமி யெல்லாம்
பலதலை விரித்துப் பொத்திக் கிடந்தஅப் பான்மை போலும்.

இ - ள்:—மலை (யாகிய இராக்கதன் வெண்பல் வரிசை வெளிப்பட மிக்க ஒலி உண்டாக அட்டகாசமாகச்) சிரித்தாற் போன்ற (மலையின் உச்சியில்) பல பல இடங்களினுமுள்ள அருவி யொழுக்குகள் மலையினின்றும் இறங்கிப் பூமிமீது (ஒன்றுய்த்) திரண்டு (ஓர் ஆறுகிச்) சென்று (கடலில்) சேரும்தோற்றமானது, ஆதிசேடன் ("யான் மேருமலையின் ஆயிரங்கொடுமுடிகளையும் என் ஆயிரம் படங்களாற் பொத்தி அழுத்துவேன், நீ வல்லையேல், ஒரு கொடுமுடியையேனும் பெயர்ப்பாயாக" என்று) வாயுதேவனோடு வாக்குவாதஞ் செய்து மேருமலையின் சிகரங்க ளெல்லாவற்றையும் தன் பலதலை (ப்படங்) களையும் விரித்துப் பொத்தி (த் தலைகள் மேருமலைச் சிகரங்கள் மீதும் உடம்பு பூமிமீதும் படிய) க் கிடந்த தன்மையொக்கும் எ - று.

நகைத்தனைய, நகைத்தாலனைய அல்லது நகைத்தது அனைய என்பதன் விகாரம்; சிரித்தாற்போன்ற என்னும் பொருளுடையது. வயின் - இடம்; அடுக்கிப் பல இடங்களை யுணர்த்தியது. தாரை - நீரொழுக்கு (இலக்கியச் சொல்லகராதி). சிலை - மலை. இழிந்து - இறங்கி. அணையும் - சேரும். உலவை-காற்று, இகலி-வாக்குவாதஞ் செய்து (தமிழ்ச்சொல்லகராதி). சேடன்-ஆதிசேடன். வரை - மலை; இங்கே மேருமலையைக் குறித்தது. பான்மை - தன்மை.

இப்பாட்டின் முதலடிக்கருத்து, மகாகவிகளின் மனோபாவனையில் உதயமாகும் சிறந்த கருத்துக்களுள்ளே சிறந்த தொன்றும் ஊன்றி உணர்ந்து உவத்தற் குரியது.

மேருமலை நந்திமலைக்கும் மேருவின் சிகரங்களைப் பொத்திய ஆதிசேடனது பல படங்கள் நந்திமலை யுச்சியிடங்களிற் பரவிய பல அருவிகளுக்கும் பூமியிற்கிடந்த ஆதிசேடனது நீண்ட உடம்பு அப்படங்களோடு தொடர்புடையதாய் அவ் வருவிகளோடு பூமிமீதோடிய பாலியாற்றுக்கும் உவமை.

இப்பாட்டுப் பின்வரும் திருக்குற்றாலத்தலபுராணப் பாட்டை நினைவுகூரச் செய்கின்றது.

மொய்யலைத்தெண் டிரைக்கடல்மேல் வால்நீட்டி
முதுதரைமேற் படிவங் காட்டிச்
சையமுடி தொடுத்தனந்த மணிமுடிகள்
கவித்ததலை அருவி மேனாள்
வையகம்தாங் கியசேடன் வானகம்தாங்
குறுநிமிர்ந்த வகையாம் அன்றி
வெய்யமருத் துடன்இகலி மேருவின்மேல்
முடிகவித்த விசயம் ஆமால்.

## குறிஞ்சி

அ. என்னை யூர்ந்தருள் சுடர்வடி இலையவேற் பெருமான்
தன்னை நன்மரு கெனப்படைத் தவன்தன தூர்தி
அன்ன தாமெனும் கேண்மையான் அளிமுகிற் குலத்தைக்
கன்னி மாமயில் காண்தொறும் களிசிறந் தகவும்.

இ - ள்:—அதோ! காணப்படுவது 'என்னை வாகனமாகக் கொண்டருளிய முருகவேளை மருகனைக உடைய இந்திரனது வாகனமாம்' என்று நினையும் உரிமை காரணமாக, மயில் மேகத்தைப் பார்க்கும்போதெல்லாம் களிப்பு மிகுந்து (சிறகுவிரித்து) ஆடாநிற்கும் எ - று.

என்னை யென்பது மயில் தன்னுள்ளத்தே தன்னைச் சுட்டியது. சுடர்வடி சிலைவேல் - ஒளியையும் கூர்மையையும் (முனையில்) தகட்டு வடிவையும் உடைய வேலாயுதம். மருகு-மருகன்-மருமகன். ஊர்தி - வாகனம். அன்னது - அது. கேண்மை - உறவு; உரிமை. அளிமுகில் - (மழைநீரை) அளிக்கின்ற மேகம், வினைத்தொகை. அளியை (-அருளை) உடைய மேகமெனலுமாம். முகிற்குலம் - மேகக்கூட்டம். கன்னி - இளமை. காண்தொறும்-காணுந்தோறும். களி - களிப்பு. சிறந்து - மிகுந்து, அகவும் - கூத்தாடும்.

மாமனைக்காண மருமகன் உவத்தல்போல, மாமன் வாகனத்தைக் காண மருமகன் வாகனம் உவந்ததென நயம்பட உரைத்தார்.

கொங்கை ஏந்திய ஆண்களும் அவணகொம் புடைய
துங்க வேங்கையின் குலமெலாம் அவணபால் சுரந்து
பொங்கு நீடுசே வினங்களும் அவணவான் புனலை
அங்கண் வேட்டுணும் ஒற்றைத்தாள் எகினமும் அவண.

இ - ள்:—கொங்கை யேந்தின ஆண்கள் அவ்விடத்தன: கொம்புகளையுடைய வேங்கைக் கூட்டங்களெல்லாம் அவ்விடத்தன: பால் சுரந்து பொலிகின்ற நீண்ட (உடலையுடைய) சேவினங்களும் அவ்விடத்தன : மேகநீரை விரும்பி உண்ணுகின்றனவும் ஒருகால் உடையனவுமான எகினங்களும் அவ்விடத்தன:

இப்பாட்டும் இதற்கடுத்ததும் இயற்கைக்கு மாறாய் அதிசயமும் விநோதமுமான வெளிப்பொருளும் இயல்பான உட்பொருளும் உடையவை.

கொங்கை-மங்கையர் கொங்கை; மரக்கனு. ஆண்கள்-ஆண் மக்கள்; ஆணென்னும் பெயருடைய மரங்கள். அவண் - அவ்விடம். அவண - அவ்விடத்தன. துங்கம் - உயர்ச்சி. வேங்கை - புலி; வேங்கைமரம். பால் - பசுப்பால்; மரப்பால். சே - எருது; ஒரு மரவிசேடம். வான் - மேகம். புனல் - நீர். அங்கண் - அவ்விடம். எகினம் - அன்னம்; ஒரு மரவிசேடம்.

எகினங்கள் ( - அன்னங்கள்) பாலைவிரும்பி உண்ணுவன, நீர்பாலொடு கலந்திருப்பின் அதனை வெறுத்துப் பாலினின்றும் பிரித்தகற்றிப் பால்மட்டும் விரும்பி உண்ணுவனவென்பது ஐதிகம். அப்படிப்பட்ட எகினங்களுக்கு மாறாய் இங்கே கூறிய எகினங்கள் (-ஒருவகை மரங்கள்) நீரை விரும்பி யுண்ணுவனவாயிருத்தலன்றி ஓரடியே யுடையனவென்றார்.

ஆணெ லாம்ஒரு கன்னியை மணப்பவான் அணையும்
கோணை வேங்கைகள் யாட்டினோ டுறவுகொண் டோங்கும்
பேணு சேவினம் சிங்கமே லேறிடும் பிழையா
தேணி னுற்பொலி எகினங்கள் இடபத்தை விழுங்கும்.

இ - ள்:—ஆண்களெல்லாம் ஒரு கன்னியைச் சேர ஆகாயத்தை அடையும்; வேங்கைகள் ஆட்டினோடு உறவுகொண்டு வளரும்; சேவினங்கள் சிங்கத்தின்மேலேறும்; எகினங்கள் இடபத்தை விழுங்கும் எ - று.

ஆண்கள் - ஆண்மக்கள்; ஆண் என்னும் பெயருடைய மரங்கள். கன்னி - பெண்; கன்னிராசி. கோணை - கொடுமை;

அழிவின்மை. பாடு - ஆடு; மேடராசி. சே - எருது; ஒருவகை மரம். சிங்கம் - சிங்கம்; சிங்கராசி. பிழையாது - தப்பாமல். ஏன் - வலி. எகினம் - அன்னம்; ஒருவகை மரம். மரம் இடபத்தை விழுங்குதலாவது, மரம் இடபராசியைக் கடந்து மேலோங்கி வளர்தலென்க.

---

# மணம்

[திரு. க. ப. சந்தோஷ மவர்கள் B. A., L. T.]

(உ௩௭-ம் பக்கத் தொடர்ச்சி)

மணமென்பது எங்குத் தோன்றினும், அதாவது, நன் ஞற்றமெங்கு வீசினும் அது காதலின் குறியாகுமென்பதைக் காட்டுவாம். வையகத்துள்ள உயிர்களில் தலைமை பெற்றிலங்கும் மக்களின் நன்மைக் கென்று மலர் காய் கனி கிழங்கு முதலியவை தோன்றுகின்றன வென்று எண்ணுவது பெரும்பாலோரது வழக்கம். இது தவறென்பதை மாங்கனியினுதவியைக் கொண்டு விளக்கி அதன் பின் மணத்தைக் குறித்து ஆராய்வாம். நானிலத்திலுள்ள உயிர் வகைகள் தமது இனம் அழியாதிருக்கும் பொருட்டு, எல்லாவகையிலும் தம்மைப்போன்ற உருவங்கள் பதிந்துள்ள முளைகளை விதையிலும் வேரிலும் தருகின்றன வென்று முன் கண்டோம். தன்னைப்போன்ற ஒரு மரம் வளர்வதைக் கருதி மாமரங் கொட்டைகளை உண்டாக்குகின்றது. இவை பிறவுயிர்களுக்குப் பயன்படாத தன்மையில் வெறுங் கொட்டைகளாக மாத்திரம் தோன்றினுல் பறவை, விலங்கு, மக்கள் இவற்றை நாடியெடுத்துக் கொண்டு போவதற்கு இடமில்லை. அக்கொட்டைகள் தாய் மரத்தடியிலே விழுந்துகிடக்கும். அப்போது அவை முளைத்தாலும் ஓங்கி வளரா. ஒரு பெரிய மரத்தடியில் மற்ருெரு மரம் வளர்வதற்குப்போதிய காற்றும் வெளிச்சமுமில்லை. ஆதலின் மாங்கொட்டை தன் தாய் மரம் இருக்குமிடத்தை விட்டு வேறிடஞ் செல்வது இன்றியமையாததாகின்றது. பிற மரஞ்செடிகளும் தங்கள் விதைகளை வேறிடஞ் செலுத்த முயல்கின்றன. ஆமணக்கு காட்டாமணி முதலியவற்றின் காய்கள் முதிர்ந்து நெற்றுனவுடன் அவை வெடிக்கின்றன; இங்ஙனம் வெடிப்பதால் விதைகள் நாற்புறமும் சிதறிப்போய் விழுந்து புதிய விடங்களில் முளைக்கின்றன. எருக்கஞ் செடியின் விதைகள் காற்றிற் பறந்துபோவதற்கு வேண்டிய அமைப்புப் பெற்றிருக்கின்றன. இடம்விட்டு இடம் பெயர்தற் கியலாத மாமரம் தனது இனம் பெருகுதற்பொருட்டுத் தன்

கொட்டைகளைத் தருந்த காற்றும் வெளிச்சமுமுள்ள விடத்திற் சேர்ப்பிப்பதற்காக யாது செய்கின்றதெனின் அது தன் கொட்டையை இனிய சாறு நிறைந்த பழத்திலே பொதிந்து வைக்கிறது. அணில் குரங்கு முதலியவை மாம்பழங்களை விரும்பிச் சென்று, அவற்றைத் தின்றுவிட்டுக் கொட்டைகளை வேறிடங்களிலெறிந்து விடுவதால், அவை புதிய விடத்தில் விழுந்து முளைக்கின்றன. வெள்ளரிச் செடியின் விதை பிசின்போன்ற ஒருவகைச்சாறுடன் சேர்ந்திருப்பதால் பழத்தைத் தின்னவரும் காட்டுப்பன்றி, நரி முதலிய விலங்குகளின் வாயிலும் உடலிலும் ஒட்டிக்கொண்டு வேறிடஞ் செல்லும். காக்கையின் உதவியால் வேப்பங் கொட்டை இடம் பெயர்ந்து செல்கின்றது. இதை உற்று நோக்கினல் மாமரம், வெள்ளரி, வேம்பு ஆகிய வற்றிற்காக மக்கள், அணில், குரங்கு, காக்கை ஆகியவை உண்டாக்கப் பட்டனவா ? அல்லது, மக்கள், அணில், குரங்கு, காக்கை முதலியவற்றிற்காக மா, வெள்ளரி, வேம்பு தோன்றினவா என்ற ஐயம் நிகழவுங்கூடும். ஒன்றிற்காக மற்றென்று உண்டாகப் பட்டதென்று சொல்வது கூடாது. ஆனல் வையகத்திலுள்ள ஒவ்வொன்றும் தானய்த் தனியாய் நில்லாது பிறவற்றுடன் சார்ந்து நிற்குமென்பது இதனல் விளக்கமுறுகின்றது. இதை உற்று நோக்கினல் எங்ஙனம் ஒன்றுக்கொன்று பணியாற்றுதலால் அகன்ற இவ்வையகம் நிலைகுலையாது தன் நெறியிற் செல்கின்றதென்பது புலனாகும். மக்கட்குள்ளும் பிறர் நன்மையைக் கருதுபவரே இறுதியில் தமது நன்மையைப் பெற்றவராவர் எனும் உண்மைக்குமேல் நாம் கூறியது ஒரு எடுத்துக் காட்டாகும்.

"எவ்வினையோர்க்கும் இம்மையில் தம்மை
இயக்குதற்கு இன்பம் பயக்கும் ஓரிலக்கு
வேண்டும். உயிர்க்கு அது தூண்டுகோல் போலாம்.
ஈண்டு எப்பொருள்தான் இலக்கு அற்றிருப்பது ?
இதோ, ஓ! இக்கரை முளைத்த இச்சிறு புல்
சதா தன் குறிப்பொடு சாருதல் காண்டி.
அதன் சிறு பூக்குலை யடியொன்று உயர்த்தி
இதமுறத் தேன் துளி தாங்கி ஈக்களை
நலமுற அழைத்து நல்லூண் அருத்திப்
பலமுறத் தனது பூம்பராகம் பரப்பித்து
ஆசிலாச் சிறுகாயாக்கி, இதோ! என்
நாசிடைச்சிக்குந் தோட்டியுங் கொடுத்தே,
"இவ்வயின் யாமெலாம் செவ்விதில் துன்னில்
தழைப்பதற்கு இடமிலை: சிறார் நீர் பிழைப்பதற்கு
எகுமின். புள் ஆ எருது அயத்து ஒருசார்
சிக்கிநீர் சென்மின் !" எனத் தன் சிறுவரைப்

புக்கவிட்டிருக்கும் இப்புல்லின் பரிவும்
பொறுமையும் புலனுங் காண்போர், ஒன்றையும்
சிறுமையாச் சிந்தனை செயாது ஆங்காங்கு
தோற்று பேரழகும் ஆற்றல் சால் அன்பும்
போற்றுதங் குறிப்பிற்கு ஏற்றதோர் முயற்சியும்
பார்த்துப் பார்த்துத் தம் கண் பனிப்ப,
ஆர்த்தெழும் அன்பினுல் அனைத்தையும் கலந்து தம்
என்பெலாங் கரைக்கும் நல்லின்பந் திளைப்பர்".

(மனோன்மணீயம்: அங். ௩; களம். ௨.)

இதில் புல்லின் விதைகள் எருது, பசு முதலியவற்றில் ஒட்டிக்கொண்டு வேறிடஞ் செல்வது கூறப்பட்டது. நாயுருவிச் செடியின் விதைகளும் இவ்வாறே செல்கின்றன.

மரங்களின் கனிகள் அவற்றின் பயனைக் கருதியே தோற்றுவிக்கப்படுவதுபோல் பூக்களின் மணமும் செடியின் பயனைக் கருதிக் கருதி வருவதேயாகும். பூக்களிலும் ஆண் பெண் உண்டென்பது செடி நூலோர் நிறுவிய உண்மை. ஆண் பெண் பூக்களின் தாது ஒன்றோடொன்று கலந்தாலன்றி அவற்றிற் கருவுண்டாவதில்லை. இனத்தின் வளர்ச்சியின் பொருட்டு ஆண் பூவும் பெண்பூவுங் கூடவேண்டும். ஆனால் அவை தங்கள் விருப்பப்படி செய்ய இயலாதனவாயிருக்கின்றன. கலவி நிகழவேண்டும்; என் செய்வது ? தாமே செய்யக்கூடாத இப்புணர்ச்சியை மலர்கள் பிறர் உயிர்களின் துணைகொண்டு நடத்துகின்றன. இத்துணைவர்கள் தான் தேனீ, வண்டு முதலியவைகள். ஒருவரை யொருவர் பார்த்துப்பேசக் கூடாதிருக்கும் நிலைமையிலுள்ள காதலர்களைச் சேர்ப்பதற்கு ஊதியத்தின் பொருட்டுச் செய்திகொண்டு செல்லும் சில மக்களைப்போல் ஒன்றையொன்று கூடவிழையும் பூக்களிடமிருந்து தேனுகிய ஊதியத்தைப் பெற்று ஈக்களும் வண்டுகளும் கூட்டம் நிகழ்விக்கின்றன. தேனுக்காக வண்டுகள் ஒரு மலரிலிருந்து மற்றொரு மலருக்குச் செல்லுங்கால் பூவின் தாது அவற்றின் கால்களிலும் உடம்பிலும் அப்பிக்கொள்கின்றது. இதனுல் ஆண்பூவின் தாது பெண்பூவின் தாதோடும், பெண்பூவின் தாது ஆண்பூவின் தாதோடும் கலக்க இடமுண்டாகின்றது. இலைகளிடையே தாமிருப்பதை எளிதாக அறிந்து தம்மிடம் விரும்பிவரும் பொருட்டு அழகிய பல நிறங்களை யுடையனவாய்ப் பூக்கள் மிளிர்கின்றன. பகலில் மலரும் பூக்களுக்குக் கண்ணைப் பறிக்கும் நல்ல நிறங்கள் வாய்ந்திருப்பது எதற்காக வென்பதை இதனுலறிந்து கொள்க. ஆனுல் எல்லா மலர்களும் பகற்பொழுதில் மலர்வனவல்ல. கதிரவன் மறைந்து இருள் வந்து நிறைந்தபின் விரியும் மலர்களுமுள. இருளில் எல்லா நிறங்களும் மறைந்து போகின்றன.

ஆதலின் இரவில் மலரும் பூக்களுக்கு நிறத்தாற் பயனொன்று மில்லை. இவை யிருக்குமிடத்தை வண்டுகளறிவதற்கு ஒரு வழி வேண்டுமன்றோ? அது யாது? இதுவே மணம் பொதுவாக இருளில் மலரும் பூக்கள் வெண்ணிறமும் சாலச்சிறந்த மணமு முடையனவா யிருக்கின்றன.

"பாரி சாதாதிப் பனிமலர் அந்தியின்
அலர்தலே அன்னவை விளர் நிறங் கிளர
நறுமணங் கமழ்தற்கு உறுகாரணம் என
நேற்றிரா நடேசர் சாற்றிடும் முன்னர்
நினைத்தோம் சொல்லோ? உரைத்தபின் மற்றுஅதன்
உசிதம் யார் உணரார்? நிசியலர் மலர்க்கு
வெண்மையும் நன்மணம் உண்மையும் இலவேல்
எவ்வணம் அவற்றின் இஷ்ட நாயகராம்
ஈயினம் அறிந்துவந்து எய்திடும்? அங்ஙனம்
மேயிடில் அன்றோ காய்தருங் கருவாம்?
இவ்விதம் நோக்கிடில் எவ்வித தோற்றமும்
செவ்விதிற் பற்பல காரணச் செறிவால்
அவ் வவற்றுள் நிறையன்பே ஆக்கும்
சிற்றறிவு ஆதலால் முற்றும்நாம் உணரோம்.
அந்தியில் அம்மலர் அலர்வது என் என்பதிங்கு
அறிகிலோ மாயினும்-அதற்கும் ஓர் காரணம்
உள தென நம்பலே யூகம்."
(மனோன்மணீயம்: அங், உ: களம், ச, வரி, ௱எக - ௱கடு.)

இங்கெடுத்துக் காட்டிய செய்யுளில் ஈயினத்தைப் பூக்களின் நாயகராய்க் குறித்திருக்கிறது. ஈயாகிய மகன் பூவாகிய மகளைச் சேர்வதற்கு மணமென்னும் துணை வேண்டியதாயிற்று. ஆதலின் மணமென்பது காதலின் அறிகுறியாய் விளங்குவதை யறிக. (தொடரும்.)

## பிழை திருத்தம்

| சிலம்பு | பரல் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| ரு | உ | கய | உரு | சிவந்தநிறம் | சிவந்தநிறம்) |
| ,, | ,, | கஉ | கக,கஉ | இலக்கணங்களுக்கு | இலக்கண வழுக்களுக்கு |
| ,, | ,, | ,, | உச | சிலகதை | சிவகதை |
| ,, | ,, | ,, | க | சிலகதை | சிவகதை |
| ,, | ,, | ,, | ச | நான் | நாண் |
| ,, | ,, | ,, | கூ | காப்பியம்பனுவல் | காப்பியப்பனுவல் |
| ,, | ,, | ,, | கக | நியமமாம் | நியாயமாம் |

# இராமாயண உள்ளுறைபொருளும் தென்னிந்திய சாதிவரலாறும்

[திரு வே. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

(உஉகூ-ம் பக்கத்தொடர்ச்சி)

சற்று முன்னே ஆரியர் திராவிடரை ஆரியர் ஆக்கியதாகச் சொன்னேன். பிற சாதியார் பிராமணராகுவது சிலகாலத்துக்கு முன் வரை நடந்தது. இன்னும் பூரணமாக நின்று விட்டதாகச் சொல்ல இடமில்லை. வைணவ மதாசாரியராகிய ராமாநுஜரும் அவருடைய சீடர்களும் தம்மிடம் தீட்சை பெற்றுத் தங் கொள்கைகளை யநுசரித்த பல சாதியினரையும் பிராமணராகச் செய்திருப்பது சரித்திராசிரியர்களால் நிலை நாட்டப் பட்ட விஷயம். சாத்தானிக ளென்றும் தாதர்க ளென்றும் வழங்கப் படும் சாதியார், மேற்கூறியபடி பிராமணராக்கப் பட்டுக் கொண்டிருக்கும் மத்தியில் ஷெ சிஷ்யர்களுள் உண்டாகிய ஒற்றுமைக் குறைவாலோ வேறு காரணத்தாலோ தேவ லோகத்துக்குப் போய்க் கொண்டிருந்த திரிசங்கு மத்தியாந்தரத்தில் நிறுத்தப்பட்டது போல, நிறுத்தப்பட்டிருக்கின்றனர். நாடகப் புரையிலே திரைக்குப் பின்னே வேடந் தரித்துக்கொண்டிருந்தோர், அவ்வேடம் அரை குறையாகத் தரித்து முற்றப் பெறுமவிருக்கையில் நாடகப்புரையில் கலக முண்டாகித் திரைச் சீலை நீக்கி எறியப்பட்ட போது தோன்றுவது போலச் சாத்தானிகள் அபூரண பிராமணராகக் காணப்படுகின்றனர். இஃது அவர்கள் வஸ்திரம் தரிக்கும் மாதிரி ஐயரென்ற சாதிப் பட்டம், பலவகை யாசாரங்கள் முதலியவற்றை உற்றுநோக்குவோர்க்குப் புலப் படாதிராது. தென் கன்னட ஜில்லாவில் இப்போது பிராமணரா யிருப்பவர் ஐந்நூறு வருடத்துக்கு முன் வேறு சாதியா யிருந்தவரென்பது சிலாசாசன சோதனையால் வெளிப் பட்டிருக்கிறதென்று டாக்டர் பர்னல் கூறுகிறார். "வட தேசத்திலும் நூதனமாகப் பிராமணராக்கப் பட்ட சாதிகளுண்டு. நமது கண் முன்னேயே பிறசாதித் தலைவர்களும் குடிகளும் முறையே ஆரிய (ரஜபுத்திர) சாதித் தலைவரும் குடிகளும் ஆகின்றார்கள்" என்று ஹண்டர் துரை சொல்லுகிறார். நமது தென்னிந்தியாவில் விசுவ குலப் பிராமணரென்ற கம்மாளர் தாங்கள் பிராமணருக்கு மேற்பட்ட சாதியென்று வழக்காடியதும், சௌராஷ்டிரரென்ற பட்டு நூற்காரர் பிராமணராகச், சாணார் க்ஷத்திரியராகப் பாத்தியங் கொண்டாடுவதும் தற்கால வர்த்தமானங்கள்.

வடக்கேயுள்ள ஆரியருக்கும் தெற்கேயுள்ள ஆரியருக்கும் உள்ள பேதத்தைக் கூறி, ஆரியர் நிலைமையை முடித்து விடுகிறேன். வடதேசத்து ஆரியர் தங்கள் சொர்தஜாதிச்சேனையைக் கொண்டு வட தேசத்தைச் செயித்தனர். தெற்கேயுள்ள ஆரியர் ஒரு பக்கத்துத் திராவிட சேனையைக் கொண்டு (மற்றொரு பக்கத்துத் திராவிட சேனையோடு போர்செய்து) தென் தேசத்தை செயித்தனர். வட ஆரியர் பூர்வ குடிகளைத் தண்டித்து அடக்கி அடிமைக ளாக்கினார்கள். தென்னாரியர் புராதன பிரஜைகளைப் போதனை சாதுரியத்தால் வசப்படுத்தினார்கள். இருதிறத்தாரும் அநாரியருக்கு ஏவலாளென்று பொருள் படும் சூத்திரரென்ற பெயர் கொடுத்தாலும், வட ஆரியர் அச் சூத்திரரை யிழிவாகவும் கடினமாகவும் நடத்தினார்; தென்னாரியர் அப்படி நடத்தவில்லை. வட தேசத்தார் (பிற சாதிமாதரை அதிகமாக மணந்து கலவாமையால்) பெரும்பாலும் கலப்பற்றவர். தென் தேசத்தவர் (மற்றைச் சாதி கலப்பு மிகுதியால்) அதிகக் கலப்புற்றவர். முன்னையவர் சமஸ்கிருத பாஷையின் சிதைவான பாஷைகளைத் தாய்ப்பாஷைகளாக வுடையார். பின்னையவர் அப்படிப்பட்ட சம்பந்த மில்லாத தமிழ் தெலுங்கு முதலிய பாஷைகளைச் சென்ம பாஷைகளாக வுடையார். முன்னவர் ஆசாரக் குறைவுடையவர்கள். பின்னவர் ஆசார மிகுதி யுடையவர்கள். வேதகாலத்தில் சர்வ ஆரியரும் மாட்டு மாமிசம் புசித்தவர்களே யாயினும், இக்காலத்தில் முந்தியவருள் சில வகுப்பாரே மாமிசம் புசிப்போர்; பிந்தியவருள் எவ்வகுப்பாரும் யாக வாயிலாகவன்றி மாமிசம் புசியார். வட தேசத்தில் பிராமணர் மிகுந்த திரளா யிருந்ததனால், தாங்கள் மாமிசம் தின்னும் பூர்வ வழக்கத்தை மற்றச் சாதிகளின் அவமதிப்புக்கு அஞ்சிக் கைவிட வில்லை. தென் தேசத்திலோ பிராமணர் தொகை குறைவாயிருந்ததனால் மற்றைச் சாதி ஜனங்களின் பழிப்புக்குப் பயப்பட்டுப் புலாலுணவைக் கையகல விட்டனர். ஆயினும் "பழக்கங் கொடியது". ஆதலால் மாமிச பக்ஷணத்தை மறுக்க வலியற்றவர்களாய் அவர்கள், புலால் உண்ணாமையை இன்றியமையா உயர்குல வொழுக்க மாகக் கொண்ட மேற்சாதித் திராவிடரது இகழ்ச்சியினின்று தப்பும் உபாயத்தை நாடி, யாகமென்னும் வியாசத்தால் ஏகதேசமாக மாமிசம் புசிப்பாராயினர். இது போலவே, தமது "கோரான்" என்ற வேதத்தினால்மட்டும் மாமிசம் புசித்தற்கு அநுமதி யடைந்திருக்கின்ற மகமதியருள் வட தேசத்தவர், தொகை மிகுந்தோ ராதலால், அந்த மாமிசம் புசித்து வருகின்றார்கள். தென் தேசத்து மகம்மதியர் தொகை குறைந்தோ ராதலால், மாட்டிறைச்சி தின்னும் பறையர் முதலியோரோடு தம்மையும்சேர்த்துப் பிறசாதியார் நீசரென்று இகழ்

வார்களென்ற பயத்தாலும் அப்பயங் காரணமாக ஏற்பட்டு விட்ட வழக்கத்தாலும் மாட்டுமாமிசத்தைத் தொடாதிருக்கின்றனர்.

## II. திராவிடர் நிலைமை

முன்னமே சொல்லியபடி ஆரியர் வருமுன் திராவிடருள் சாதிபேதமென்பது இருந்ததில்லை. நிலம் பற்றி வகுக்கப்பட்ட குறவர், இடையர், மறவர், உழவர், பரவர் என்ற வகுப்பினர்களே யல்லாமல், தொழில் பற்றிப் பிரிக்கப்பட்ட கொல்லர், தச்சர், வண்ணார், அம்பட்டர், முதலிய பிரிவினரு மிருந்தனர். எல்லாத் தேசங்களிலும் குருமார், போர்வீரர், வர்த்தகர், கிருஷிகர், பல தொழிலாளிகள், ஏவலர், வேலையாட்கள் என்ற வகுப்பார் இருப்பது போலவே தென்னிந்தியாவிலும் இருந்தனர். இவர்கள் ஆரியர் வழக்கத்தை அநுசரித்து, ஆதிசைவ அந்தணர் முதலிய பலசாதிகளாகத், தங்களுடைய பல வகுப்புக்களையும் பெயரிட்டு வழங்க லுற்றார்கள். அவ்வாறு வழங்கலுற்ற போது, வகுப்புக்கள் நான்கு சாதிகளுக்குள் அடங்காமல் நாலாயிரஞ் சாதிகளாயின வென்று சொல்லும்படியாக எண்ணிறந்த பல சாதிக ளாயின.

ஐரோப்பிய பாதிரிமார் கிறிஸ்து மதத்தினால் இந்தியாவுக்கு உண்டாகக் கூடிய நன்மைகளில் அதை அநுசரித்தவர்கள் ஜாதி வித்தியாசக் கொடுமையிலிருந்து நீங்கி விடுவதொன்றென்று வற்புறுத்திக் கூறுவது பிரசித்தமானது. கிறிஸ்துமதம் அவ்வாறு ஜாதி வித்தியாசங்களை யொழிக்கப் புகுந்த முயற்சியில், அது முன்னிருந்த ஜாதி வகுப்புக்களை இரண்டு மடங்காக்கியிருக்கிறது. முன் பிராமணர் வேளாளர் மறவர் முதலிய பல ஜாதிகளா யிருந்தவர், கிறிஸ்து மதத்தினால் ஹிந்து பிராமணர் கிறிஸ்தவ பிராமணர், ஹிந்து வேளாளர் கிறிஸ்தவ வேளாளரென்றாக, ஜாதிகளின் தொகை முன்னிருந்ததற்கு இப்போது இரட்டியாயிருக்கிறது.

மேற் கூறியதனால் ஆதிசைவ அந்தணரான பட்டர் குருக்க ளென்ற திராவிடப் பிராமணர்கள் தங்களுக்குக் குறை வேற்பட்டதாகக் கருத வேண்டிய தில்லை. அவர்கள் ஜாதியால் ஆரியப் பிராமணருக்குக் கீழ்ப்பட்டிருக்கவு மில்லை, மேற்பட்டிருக்கவு மில்லை. இவ்விரு வகுப்பாரும் சாதியால் ஒருவருக்கொருவர் உயர்வு தாழ்வு இல்லாராயினும், வேறு வகையால் உயர்வு தாழ்வு உடையரல்லரோ வென்றால், இருதிறத்தாருக்குமுள்ள சில முக்கிய சாதியாசார *பேதாபேதங்களைக் கூறுகின்றேன். அவற்றைக் கொண்டும் பிறவற்றைக் கொண்டும் நீங்களே

# கருவூர்த்தேவர்

[திரு C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

(உ௨௰ - ம் பக்கத் தொடர்ச்சி)

அடை அடுக்கு

கனம்விரி குடுமிச்செம்மணிக் கவைநாக்
கறையனற் கடசெவிப் பகுவாய்ப்
பணம்விரி துத்திப் பொறிகொள்வெள் ளெயிற்றுப்
பாம்பணி பரமர்தங் கோயில் (கோயில்-௧)

இப்பாட்டிலே பரமர்க்குப் பாம்பணிதல் அடையாகவும் அப் பாம்பிற்குக் குடுமி - மணி-நா-கண்-செவி-துத்தி-பொறி-எயிறு- இவைகள் அடைபாகவும் அவ்வவ்வங்கமாகிய ஒவ்வொரு அடைகளுக்கும் கணமேரி குடுமி-செம்மணி - கவைநா-கறை யனற் கட்செவிப்-பணம் விரி துத்தி - வெள் ளெயிறு-என்று ஒவ் வோர் பொருட்கு ஒவ்வோர் அடைகளுமாகத் தந்து உள்ள அடை அடுக்குகளின் சுவை மிக இனிமை தருவது குறிக்கத் தக்கதாம்.

தன்மை நவிற்சி

கேதகைமலரைக் குருகென மருவிக்
கெண்டைகள் வெருவுகீழ்க் கோட்டூர்—
(கீழ்க்கோட்டூர்—௧)

என்பது போன்ற திருவாக்குக்கள் இயற்கையை இயல்பாகவே வருணித்து எடுத்துக்காட்டும் தன்மை ஆராய்ந்து அனுபவிக்கற் பாலன.

பொருளுக்கு ஏற்ற வர்ணனை

ஒவ்வோர் பாசுரங்களிலே பின்னிரண்டடி களில் அவ்வத்தலத்திற்குக் கூறும் வர்ணனை கள் முன்னிரண்டடிகளிலே அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானையும் அவனது அருள் விசே டங்களையும் பற்றி அருளியிருக்கும் பாட்டுக் கருத்துக்கு ஏற்ற னவாக அமைந்திருப்பது காணத்தக்கது. பார்த்த விடமெல் லாம் பரவெளியாய்த் தோன்றும்படியாகப் பாசங்கழித்த தமது கண்களால் உலகமெங்கும் அரனுருவே கண்டு களிக்கிறது பெரி யோரியல்பாகும். ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகளாகிய நமது பர மாசாரிய மூர்த்திகளுக்குச் சாதாரணமான உலகப்பெண்கள் விளையாட்டுகள் எல்லாம் பரமேசுவரனைநோக்கி எழுந்த செயல்க ளாகத் தோன்றவே, திருச்சாழல் - திருப்பூவல்லி - திருவுந்தி யார் - திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல் - முதலிய திரு வாசகங்கள் கட்டளையிட்டருளினாரன்றோ ? ஏன் ? சேதனராகிய பெண்கள் விளையாட்டுமட்டுமா? அசேதனமாய்ப் பகுத்தறி வற்ற தும்பி - கிளி - குயில் என்பவற்றின் ஓசைகளும் கூடச் சிவபெருமானை அவை பாடுவதாக அம்மூர்த்திகள் காண்பார்

களாயினர் என்பதற்குக் குயிற்பத்து - திருத்தசாங்கம் - திருக் கோத் தும்பி என்ற திருவாசகங்கள் சான்று பகர்கின்றனவன்றோ? அதுபோலவே நமது தேவருக்கும் உலகப்பொருள்களின் தோற்றங்கள் சிவத்தோற்றப் பொலிவினையுடையனவாகவே காணப்பட்டன.

உதாரணமாக ஒன்றிரண்டு பார்ப்போம் :—

தாயினே ரிரங்குந் தலைவவோ என்றும்
தமியனேன் றுணைவவோ வென்றும்
நாயினே னிருந்து புலம்பினு லிரங்கி
நலம்புரி பரமர்தங் கோயில்
வாயினே ரரும்பு மணிமுருக் கலர
வளரிளஞ் சோலைமாந் தளிர்செந்
தீயினே ரரும்பு பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே (கோயில்—கூ)

என்ற திருப்பாட்டிலே பின் இரண்டடிகளிலே கண்ட கருத்து முன்னிரண்டடிகளிலே போந்த பொருளுடன் ஒத்து இயைவது காணலாம். அழகிய சிவந்த முருக்கமலர்கள் வாய்போல மலரவும் அதன் அருகே இளமாந்தளிர் தீப்போல அவிழ்ந்து சிவபெருமான் திருமேனிப் பொலிவுடன் விளங்கும் காட்சியை நோக்க, அடியார்கள் ;பரமசிவனை நோக்கிக் குறையிரந்து புலம்பின இடத்தே அவன் இரங்கிக்காட்டித் தன் திருமேனி வெளிப்பட்டு நலம்புரியும் அருட் செயல் ஞாபகத்துக்கு வருவதுபோல இவ்விரண்டு பொருள்களையும் சேர்த்து அருளிச் செய்யப்பெற்ற இத்திருப்பாட்டின் இயைபு அனுபவிக்கத் தக்கதொன்றாம்.

சந்தன களபந் துதைந்த நன்மேனித்
தவளவெண் பொடி முழுதாடுஞ்
செந்தழ லுருவிற் பொலிந்துநோக் குடைய
திருநுத லவர்க்கிடம் போலும்
இந்தநல் விலங்க லெரிபுனந் தீப்பட்
டெரிவதொத் தெழுகிலை மாடம்
அந்தண ரழலோம் பலைபுனற் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே.
(களந்தைஆதித்தேச்சரம்—உ)

என்ற திருப்பாட்டிலேயும் இவ்வாறே எடுத்த பொருளுக்கேற்ற வர்ணனை இயைந்து நிற்கும் அழகு காணத் தக்கது.

மோதலைப் பட்ட கடல்வயி றுதித்த
முழுமணித் திரளமு தாங்கே
தாய்தலைப் பட்டாங் குருகியொன் றாய
தன்மையில் என்னைமுன் னீன்ற
நீதலைப் பட்டா லியானுமவ் வகையே........

பண்ணிய தழல்காய் பாலளா நீர்போற்
பாவமுன் பறைந்துபா லனைய
புண்ணியம் பின்சென்று அறிவினுக் கறியப்
புகுந்ததோர் யோகினிற் பொலிந்து......
(கங்கைகொண்டசோளேச்சரம்—எ, க)

எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பி
லின்றளி படஙனைந் துருகி
அழலையாழ் புருவம் புனலொடுங் கிடந்தாங்
காதனேன் மாதரார் கலவித்
தொழிலையாழ் நெஞ்ச மிடர்படா வண்ணம்......
(திருவிடைமருதூர்—எ)

என்ற இத்திருப்பாட்டுக்களிலே உவம விசேடங்களும் அவற்றின் நயமும் ஆழ்ந்த கருத்துப் பொலிவும் நம் உள்ளத்தைக் கவருந் திறத்தனவாம்.

"தனக்குவமையில்லாதான்" என்று திருவள்ளுவனார் அருளியபடி சிவபெருமானது திருவருளின்பெருமைக்கு அதுவே ஒப்பாகுமன்றி வேறொன்றையும் உவமித்துச் சொல்ல இயலாது என்ற கருத்தைத் தேவர் அழகாக ஒரு உவமை முகத்தால் வினவிப் பாராட்டி விளக்குகின்றார்.

திருவருள் புரிந்தா ளாண்டுகொண் டிங்ஙன்
சிறியனுக் கினியது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்
பெருமையிற் பெரியதொன் றுளதே... (திருப்பூவணம்-க)

அவன் பெருமையிற் பெரியதொன்றில்லை என்று கூறும் வகையால் அதற்கு அதுவே உவமிக்கத்தக்கதென்ற கருத்துப் போதருதல் காணலாகும்.

**திருவடையாளங்களின் அடுக்கு**

சிவபெருமானது திருவடையாளங்களை வரிசை வரிசையாக அடுக்கிக் கூறி அவனது திருவுருவம் நமது அகக்கண்ணுக்கு இலகுவில் வெளிப்பாடாகுமாறு சொல்லிப் புகட்டும் அழகும் நம்மை அவனில் ஈடுபடுத்தும் எளிமையும் தேவர் திருவாக்கில் பரக்கக் காணலாம்.

பவளமே மகுடம் பவளமே திருவாய்
பவளமே திருவுடம் பதனிற்
றவளமே களபம் தவளமே புரிநூல்
தவளமே முறுவலா டரவந்
துவளுமே கலையுந் துகிலுமே யொருபாற்
றுடியிடை யிடமருங் கொருத்தி
யவளுமே யாகில் அவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (இ)

நீலமே கண்டம் பவளமே திருவாய்
நித்தில நிரைத்திலங் கினவே
போலுமே முறுவல் நிறைய வானந்தம்
பொழியுமே திருமுக மொருவர்
கோலமே யச்சோ வழகிதே யென்று
குழைவரே கண்டவ ருண்ட
தாலமே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (கூ)

(களந்தையாதித்தேச்சரம் கு, கூ)

இந்தத் திருப்பாட்டுகளிலும் இன்னும் இப்பதிகம் (ரு) (ச) (அ) (கூ)ம் திருப்பாட்டுகளிலும் இவ்வழகு விளங்குகின்றது. இப்பாட்டுக்களின் அழகையும் அமைப்பையும்,

செய்யனே கரியனே கண்டம் பைங்கண்
வெள்ளெயிற்று டரவனே வினைகள் போக
வெய்யனே தண்கொன்றை மிலைத்த சென்னிச்
சடையனே விளங்குமழுச் சூல மேந்துங்
கையனே காலங்கண் மூன்று ளனே
கருப்புவிற் றனிக்கொடும்பூண் காமற் காய்ந்த
வையனே பருத்துயர்ந்த வானேற் றானே
யவனுகில் அதிகைவீ ரட்ட ளுமே

என்பதாதிய திருநாவுக்கரசு சுவாமிகளருளிய திருவடையாளத் திருத்தாண்டகப் பாசுரங்களோடு ஒப்புநோக்கிக் காணும்போது மிகவும் இனிமையும் ஆனந்தமும் விளைகின்றன.

சுவைகள் இரக்கம், பெருமிதம், நகை என்பனவாதி சுவைப்பொலிவுகள் அங்கங்கே தேவர் திருவிசைப்பாப் பாட்டுக்களிலே பொலிந்து நிற்கக் காணலாம்.

நையாத மனத்தினனை நைவிப்பா னித்தெருவே
ஐயாநீ யுலாப்போந்த வன்றுமுத லின்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணூரச் சொரிந்தாலுஞ்
செய்யாயோ வருள்கோடைத் திரிலோக்கிய சுந்தரனே.

(திரிலோக்கியசுந்தரர் உ)

நீவாரா தொழிந்தாலும் நின்பாலே விழுந்தேழை
கோவாத மணிமுத்துங் குவளைமலர் சொரிந்தனவால்
ஆவாவென் றருள்புரியா யமரர்கணந் தொழுதேத்தும்
தேவாதென் பொழிற்கோடைத் திரிலோக்கிய சுந்தரனே

(திரிலோக்கியசுந்தரர் கு)

என்பன இரக்கச்சுவையை இனிது தெரிப்பனவாய்ப் பொலிகின்றன.

மைஞ்ஞின்ற குழலாடன் மனந்தரவும் வளைதாரா
திஞ்ஞின்ற கோவணவ னிவன்செய்த தியார்செய்தார்
மெய்ஞ்ஞின்ற தமர்க்கெல்லாம் மெய்ஞ்ஞிற்கும் பண்பின்று
செய்ந்நன்றி யிலன்கோடைத் திரிலோக்கிய சுந்தரனே.

(திரிலோக்கிய சுந்தரர் ௪)

இத் திருப்பாட்டிலே இரங்குதலும் நகையும் கலந்த ஓர் இன்சுவை வெளிப்படுதல் காணலாம்.

சொன்னவின் முறைநான் காரண முணராச்
சூழல்புக் கொளித்தநீ யின்று
கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்
கருணையிற் பெரியதொன் றுளதே......

(திருப்பூவணம் எ)

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
பதம்பல ரேம்பலித் திருக்க
வென்னெடுங் கோயி னெஞ்சுவீற் றிருந்த
வெளிமையை என்றும்நான் மறக்கேன்......

(இராசராசேச்சரம் அ)

அற்புதத் தெய்வ மிதனின்மற் றுண்டே
யன்பொடு தன்னையஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளமன் றூறுந்
தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே.

(சோளேச்சரம் ௯)

இப்பாட்டுகளிலே பெருமிதமாகிய பாராட்டற் பொலிவும் அற்புதச் சுவையும் பரக்கக் காணலாம்.

சொல்லும்
பொருளும்
ஒத்து நடத்தல்

சொல்லும் பொருளும் ஒத்து நடத்தல் என்பது பெரியோர் திருவாக்குகளிலே காணப்பெறும் சிறந்த அழகுகளில்ஒன்றாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரிலே பரமசிவனது திருவிளையாட்டினாலே தாம் எதிர்பார்த்திருந்ததற்கு மாறாகத் திருமகிழின் கீழே சங்கிலிநாச்சியாருக்குச் சபதம் செய்துகொடுக்கும்படி நேர்ந்துவிட்டது. அந்தச் சமயம்,

மாதரவர் மகிழ்க்கீழே யமையுமென மனமருள்வார்
ஈதலரா கிலுமாகு மிவர் சொன்ன படிமறுக்கில்
ஆதலினா லுடன்படவே யமையுமெனத் துணிந்து

மனமருட்சியோடு எண்ணமிட்டுக் கொண்டே திருமகிழை வலம்வந்து சபதஞ் செய்கின்றார். அச்செய்தியைச் சேக்கிழார் சுவாமிகள்,

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
மேவாதிங் கியானகலே னெனநின்று விளம்பினார்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார்.

என்று சொல்லியருளிய திருப்பாட்டிலே முழுமையும் அதிலும் முக்கியமாய் ஈற்றடியும் சுந்தரமூர்த்திகளுடைய மனத்திலே நிகழ்ந்த மருட்சியினாலே விளைந்து புறத்தாமதத்தைக் குறிக்குமாறு விரைந்து வாசிக்க இயலாதவண்ணம் அமைத்திருக்கும் அழகு காணத்தக்கது. இதுபோலவே திருநாவுக்கரசர்போவார் நாயனார் திருப்புன்கூரை அடைந்து திருப்பணி செய்து பின் அருமையாக இரங்கி அதனைப் பிரிந்து தம்மூர்க்குத் திரும்புகின்றார். அதனைக் குறிக்கும்,

வடங்கொண்ட பொன்னிதழி
மணிமுடியார் திருவருளாற்
றடங்கொண்ட குளத்தளவு
சமைத்ததற்பின் றம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம்
வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு
தம்பதியி னண்ணினார்.

என்ற இத்திருப்பாட்டிலே பின்னிரண்டடிகளிலே நாயனார் மனத்திலே நிகழ்ந்த தாமதக் குறிப்பானது பாட்டின் யாப்பிசை யமைதியிலே காணப்பெறுதல் குறிக்கற்பாலதாகும்.

இவ்வாறே நமது தேவர் திருவாக்கிலும் காணலாம்.

சரிந்ததுகில் தளர்ந்தவிடை யவிழ்ந்தகுழ லிளந்தெரிவை
யிருந்தபரி சொருநாள்கண் டிரங்காயெம் பெருமானே
முரிந்தநடை மடந்தையர்த முழங்கொலியும் வழங்கொலியுந்
திருந்துவிழ வணிகோடைத் திரிலோக்கிய சுந்தரனே.

என்ற திருவிசைப்பாவிலே தோழி கூற்றிலே வைத்துச்சொல்லியருளிய அகத்துறையிலே இரங்கற் குறிப்பும் சொற்போக்கும் ஒத்து இயல்வது பாராட்டற்குரிய பண்பாகும்.

ஆற்றாமை மிகுந்த காலத்துச் சொற்கள் எழா. அந்நிலைமைக் காரணமாயிருந்த பொருளைக் கண்டபோது ஆற்றாமை முன்னிலும் அதிகம் நிகழும். அதனிடத்துத் தன்னிலைமையைச்

சொல்ல முயலும்போது சொற்கள் தடுமாறும். தடைபடும். விரைவின் வாரா. இஃது உலகியல்பு.

அரும்பேதைக் கருள்புரியா தொழிந்தாய்நின் னவர்சடை
நிரம்பாத பிறைதுவு நெருப்பொடுநின் கையிலியாழ் [மேல்
நரம்பாலு முயிரீர்ந்தாய் நளிர்புரிசைக் குளிர்வனம்பா
திரம்போது சொரிகோணத் திரிலோக்கிய சுந்தரனே.

இப்பாட்டு மேலே காட்டிய இயல்பைத் தனது இசைப்போக்கிலே மிக அழகின் அமைத்துக் காட்டியிருத்தல் காணலாம்.

அகப்பொருள் துறைகள்

அகப்பொருட்டுறைகள் தேவர் திருவிசைப்பாவிலே பற்பல பாட்டுக்களில் அழகு பெற அமைக்கப்பட்டிருக்கின்றன. இத்துறைகளின் அமைதி மிக இனிமையாயும் மனத்தை ஊடுருவிச் சென்று உருக்குவதாயும் உள்ளன.

தூது

திருநுதல் விழியும் பவளவா யிதழும்
திலதமு முடையவன் சடைமேற்
புரிதரு மலரின் றாதுநின் றூதப்
போய்வருந் தும்பிகா ளிங்கே
கிரிதவழ் முகிலின் கீழ்த்தவழ் மாடக்
கெழுவுகம் பலஞ்செய்கீழ்க் கோட்டூர்
வருதிறன் மணியம் பலவனைக் கண்டென்
மனத்தையுங் கொண்டு போதுமினே.
(திருப்பூவணம்—க)

இது தூது என்னும் துறை யழகுபெற அமைந்துள்ளது.

நெஞ்சொடு புலத்தல்

தெள்ளுநீ றவனீ றென்னுடல் விரும்புஞ்
செவியவ னறிவுநூல் கேட்கும்
மெள்ளவே யவன்பேர் விளம்பும்வாய் கண்கள்
விமானமே நோக்கிவெய் துயிர்க்கும்
கிள்ளைபூம் பொதும்பிற் கொஞ்சிமாம் பொழிற்கே
கெழுவுகம் பலம்செய் கீழ்க்கோட்டூர்
வள்ளலே மணியம் பலத்துணின் றாடு
மைந்தனே யென்னுமென் மனனே.
(திருப்பூவணம்—உ)

இது நெஞ்சொடு புலத்தல் என்னும் கருத்துட் கொண்டு விளங்குகின்றது

தோழிக் குரைத்தல்

தோழியாஞ் செய்த தொழிலென்எம் பெருமான்
றுணைமலர்ச் சேவடி காண்பான்
ஊழிதோ றூழி யுணர்ந்துளங் கசிந்து
நெக்குநைந் துளங்கரைந் துருக்குங்
கேழலும் புள்ளு மாகிநின் றிருவர்
கெழுவுகம் பலஞ்செய்கீழ்க் கோட்டூர்
வாழிய மணியம் பலவனைக் காண்பான்
மயங்கவு மாலொழி யோமே. (திருப்பூவணம் ௬)

தோழியோ டிரங்கல்

என்செய்கோர் தோழி தோழிநீ துணையா
 யிரவுபோம் பகல்வரு மாகில்
அஞ்சலோ வென்னு ஞழியுந் திரையு
 மலமரு மாறுகண் டயர்வன்
கிஞ்சுக மணிவா யரிவையர் தெருவிற்
 கெழுவுகம் பலஞ்செய்கீழ்க் கோட்டூர்
மஞ்சணி மணியம் பலவவோ வென்று
 மயங்குவன் மாலையம் பொழுதே

(திருப்பூவணம் சு)

தோழி கூற்று

தன்சோதி யெழுமேனித்
 தபனிப்பூஞ் சாய்க்காட்டா
புன்சோதி எழில்சாண்பா
 ஞேலிடவு முருக்காட்டாய்
துஞ்சாகண் ணிவளுடைய
 துயர்திரு மாறுரையாய்
செஞ்சாலி வயற்கோடைத்
 திரிலோக்கிய சுந்தரனே

(திரிலோக்கிய சுந்தரர் எ)

நற்ருயிரங் கல்

அருளுமா றருளி லாளுமா றுள
 வடிகட மழகிய விழியும்
குருளும்வார் காதும் காட்டியான் பெற்ற
 குயிலினை மயல்செய்வ தழகோ...

(இராசராசேச்சரம் சு)

இவைபோல இன்னும் பற்பல துறைகள் அங்கங்கே பற்பல பாட்டுக்களிற் பொலிவுற விளங்குகின்றன. திரிலோக்கிய சுந்தரர் என்ற பதிக முழுமையும் மேலே காட்டியனவே யன்றிக் கீழ்க்கோட்டூர் மணியம்பலம் என்ற பதிகத்தில் ஏனைத் திருப்பாட்டுக்களும் அகப்பொருட்டுறைகளாக அமைத்திருத்தல் காணத்தக்கது.

பிற அருமைப் பாடுகள்

தேவர் திருவாக்கிலே அறிஞர் அறிந்து அநுபவிக்கும் அருமைப்பாடுகள் பல. அவை முழுதும் அறியவோ எளியேனுக்கு அறிவும் ஆற்றலும் இல்லை. ஆயினும் எனது சிற்றறிவிற்பட்ட சிலவற்றை மேலே வகைப்படுத்தி எழுதலானேன். இன்னும் சிலவற்றை இதன்கீழ்க் குறிக்க முயல்கின்றேன்.

அடியேன் வினைபடுமுடல் நீபுகுந்து நின்றமையால்
விழுமிய விமானமா யினதே (முகத்தலை சு)

இதில் உருவக அணியில் வைத்து இறைவன் உயிர்த்தொகைகட்குச் செய்யும் இணையில்லாத பேரருளை விளக்கிய அருமை விளங்குகின்றது. மிகக் கீழ்ப்பட்ட எனது வஞ்சவினைக்

கொள்கலனு முடம்பை மிக மேலாகிய உனது தூய விமான மேயாகும்படி நீ அதில் எழுந்தருளினுய் என்றது கருத்து.

செம்மனக் கிழவோர் அன்புதா வென்னச்
சேவடிபார்த்திருந் தலச......

(பூவணம் ௬)

இஃது அடியாரிலக்கணத்தினையும் ; அவர் தன்மையையும் இன்னவென முடித்துக் காட்டுகின்றது.

மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை......
(கங்கைகொண்ட சோளேச்சரம் கக)

இஃது முரண் அணி என்னும் வகையில் வைத்துக்காட்டிப் பரமசிவனுடைய அருட்டிறத்தினையும் தன்மையினையும் நம்மனத்திலூன்றி நிலைக்குமாறு அழகுபெறச் சுருக்கி விரிக்கின்றது.

அந்திபோ லுருவும் அந்தியிற் பிறைசேர்
அழகிய சடையம்வெண் ணீறஞ்
சிந்தையா லினையிற் சிந்தையுங் காணான்... (கீழ்க்கோட்டூர் ய)

இஃது இறைவழிபாட்டிலே அவனைச் சந்தித்திருக்கின்ற நிலையின் தன்மையைத் தலைவி கூற்றாக வைத்துக் காட்டுகின்றது. "தன்னைமறந்தாள்" என்ற வாகீசப் பெருந்தகையாரின் திருவாக்கும்

உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச் சிற்றம்பலத் தொருத்தன்

என்ற திருவாதவூரடிகளின் திருக்கோவைத் திருவாக்கும் இங்கே ஒப்பு நோக்கிக் காணத்தக்கனவாம்.

பரமேசுவரனது திருவுருவத்தினை எண்ணும்போது மனம் அதிலேயே ஈடுபட்டு நிற்கும். நிற்கவே அவனது பெருங்கருணையும் நமக்குச் செய்யும் பேருதவிகளும் தோன்றும். தோன்றவே மனம் அவசமாகித் தன்னையும் மறந்து நிற்கும். எனவே தன்னை மறந்தநிலை கைவரப்பெறுமாறு நினைத்தலேபயன்தரும். அதுவே எண்ணுதலின் தன்மையுபாம். அந்நிலையிலே இறைவன் நமது மனத்தில் முழுதும் குடிகொண்டு ஆட்கொள்வான் என்பதுமுடிபு. இதை மேற்குறித்த பாட்டிலே இறுதியடியிலே

வந்த நாண்மணி யம்பலத்து ணின்றாடு
மைந்தனே யறியுமென் மனனே—

என வைத்துத் தேவர் முடித்துக் காட்டி யருளுகின்றார். இறைவனை உள்ளபடி உணரும்போது உள்ளம் தன்வசமழிந்து

அவன் வசப்பட்டு நிற்கின்றது. அப்போது அவ்வுள்ள முழு தும் அவனேயாகி நிற்கிறபடியால் அது போழ்து 'என் சிந்தையை நான் காணேன் அவனே என்மனத்தினை அறியும்' என்றருளினர்.

"பாசங், கழித்தகண் களாலரனுருக்கண்டு கொண்டுலகில், விழித்தகண் குருடாத்திரி வீர"ர்க ளாகிய பெரியோர் பரமே பார்த்திருப்பார்கள். உலகபதார்த்தங்கள் பாரார். அவர்களது சொற்செயல்களைத் தம்முடைய சொற்செயல்களாகவே வைத்து இறைவன் நிகழ்த்துவன். அவர்கள் பதித்துவத்தை அதாவது சிவமாந்தன்மையை யடைகின்றார்கள்.

அவனே தானே யாகிய வந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே

என்ற சிவஞானபோதப் பதினோராஞ் சூத்திரத்திற் கூறப் பெற்ற இலக்கணமும் இதுவேயாம். இவ்வாறு பாசம்போகப் பெற்று அவனையே உணர்கின்றதாகிய சிவஞானத்தாலே சிவப் பேற்றை யடைந்தார்க்கு அரன் தான் செய்யும் செயல்களைச் செய்யவல்ல தன்மையைக் கொடுப்பன். அவன் செயல்களை அவர்கள் செய்வார்கள். அவர்கள் மூலம் அரனே செய்வன்.

துரியங் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும்
ஆக்கியிடு மன்பர்க் கரன்

(திருக்களிற்றுப்படியார் கூஉ)

என்ற ஞானநூலுடையார் திருவாக்கின் பிரமாணமும் இங்கே காணத்தக்கதாம்.

இக்கருத்துப்பற்றியே திருஞானசம்பந்தமூர்த்திகளும்,

எனதுரை தனதுரையாக

என்று திருவிலம்பையங் கோட்டூர்த் தேவாரத்திலே அருளிச் செய்தனர் என்று அறியக் கிடக்கின்றது.

நஞ்செய லற்று நாமற்ற பின்னாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற.

(திருவுந்தியார் கூ).

என்ற இலக்கணத்தின்படி இங்கே,

(தொடரும்)

# தமிழ் இலக்கியம்
# TAMIL LITERATURE

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M. A., B. L.]

## (க) ஆத்திசூடி ATHI - CHUDI. *

(Wearing a garland of *Athi.*)

ஆத்தி சூடி அமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே.

Praise we now and worship God Ganesha, the beloved son of Him, who wears a garland of Athi (*Euphorbia Tirucalli.*).

க. அறஞ்செய விரும்பு
Love righteousness.

உ. ஆறுவது சினம்
Subdue wrath.

ந. இயல்வது கரவேல்
Refrain not from giving.

ச. ஈவது விலக்கேல்
Hinder not another's gift.

ரு. உடையது விளம்பேல்
Proclaim not your worth.

சு. ஊக்கமது கைவிடேல்
Give not up perseverance.

எ. எண்ணெழுத் திகழேல்
Despise not science nor letters.

அ. ஏற்ப திகழ்ச்சி
Begging is contemptible.

கூ. ஐய மிட்டுண்
Give before you eat.

ω. ஒப்புர வொழுகு
Conform to accepted practice.

கக. ஓதுவ தொழியேல்
Never cease learning.

---

* The title is derived from the opening words of the poem.

௧௨. ஔவியம் பேசேல்
Speak not words of envy.

௧௩. அஃகம் சுருக்கேல்
Beware of giving short measure (of grains.)

௧௪. கண்டொன்று சொல்லேல்
Speak not differently from what you have seen.

௧௫. ஙப்போல் வளை
Even as the letter ங, support all your kindred.

௧௬. சனிநீர் ஆடு
Bathe in cool waters.

௧௭. ஞயம்பட வுரை
Speak sweetly.

௧௮. இடம்பட வீடெடேல்
Build not too big.

௧௯. இணக்கமறிந் திணங்கு
Know before you befriend.

௨௰. தந்தைதாய்ப் பேண்
Protect your parents.

௨௧. நன்றி மறவேல்
Forget not good done.

௨௨. பருவத்தே பயிர்செய்
Cultivate in season.

௨௩. * மண்பறித் துண்ணேல்
Live not by encroaching on others' lands.

௨௪. இயல்பலா தனசெயேல்
Avoid the unnatural.

௨௫. அரவ மாட்டேல்
Refrain from snake-charming.

௨௬. இலவம்பஞ் சிற்றுயில்
Sleep on a pallet of silk cotton.

---

* மன்றுபறித் துண்ணேல்.

* The alternative reading is *Live not by perverting Justice.*

உஎ. வஞ்சகம் பேசேல்

Speak not words of deceit.

உஅ. அழகலா தனசெயேல்

Do not unlovely things.

உகூ. இளமையிற் கல்

Learn while young.

௩௰. அறனை மறவேல்

Forget not to be righteous.

௩௧. அனந்த லாடேல்

Sleep not too much.

௩௨. கடிவது மற

Desire not the forbidden.

௩௩. காப்பது விரதம்

Protection is the best penance.

௩௪. கிழமைப் படவாழ்

Live for others.

௩௫. கீழ்மை யகற்று

Refrain from what is low and mean.

௩௬. குணமது கைவிடேல்

Hold fast that which is good.

௩௭. கூடிப் பிரியேல்

Part not from friends.

௩௮. கெடுப்ப தொழி

Refrain from evil-doing.

௩௯. கேள்வி முயல்

Study hard and live up thereto.

௪௰. கைவினை கரவேல்

Conceal not your skill in manual-work (as being ashamed of it).

௪௧. கொள்ளை விரும்பேல்

Love not plunder.

௪௨. கோதாட் டொழி

Give up offensive sport.

௪௩. கௌவை யகற்று

Avoid reproach.

௪௪. சக்கர நெறிநில்
Obey the law of the land.

௪௫. சான்றோ ரினத்திரு
Be of the company of the good and the wise.

௪௬. சித்திரம் பேசேல்
Speak not words of deception.

௪௭. சீர்மை மறவேல்
Forget not a noble tradition.

௪௮. சுளிக்கச் சொல்லேல்
Speak not to provoke anger.

௪௯. சூது விரும்பேல்
Love not gambling.

௫௰. செய்வன திருந்தச்செய்
Do your best in everything.

௫௧. சேரிட மறிந்துசேர்
Associate with the worthy after proper inquiry.

௫௨. சையெனத் திரியேல்
Do not that for which you might be chid.

௫௩. சொற்சோர்வு படேல்
Be not careless in your speech.

௫௪. சோம்பித் திரியேல்
Go not about lazing.

௫௫. தக்கோ னெனத்திரி
May the wise esteem you a proper man.

௫௬. தானமது விரும்பு
Love to give gifts.

௫௭. திருமாலுக் கடிமைசெய்
Worship Vishnu.

௫௮. தீவினை யகற்று
Refrain from evil doing.

௫௯. துன்பத்திற் கிடங்கொடேல்
Lay not yourself open to suffering.

௬௰. தூக்கி வினைசெய்
Ponder ere your act.

௬௧. தெய்வ மிகழேல்
Despise not God.

௬௨. தேசத்தோ டொத்துவாழ்
Be at peace with your neighbours.

௬௩. தையற்சொற் கேளேல்
Be not led by your wife.

௬௪. தொன்மை மறவேல்
Forget not the past.

௬௫. தோற்பன தொடரேல்
Engage not in a failing cause.

௬௬. நன்மை கடைப்பிடி
Hold fast that which is good.

௬௭. நாடொப் பனசெய்
Do as the rest of the world does.

௬௮. நிலையிற் பிரியேல்
Quit not your status.

௬௯. நீர்விளை யாடேல்
Sport not in deep waters.

௭௰. நுண்மை நுகரேல்
Indulge not in delicacies.

௭௧. நூல்பல கல்
Study many sciences.

௭௨. நெற்பயிர் விளை
Cultivate paddy.

௭௩. நேர்பட வொழுகு
Be thy ways straight.

௭௪. நைவினை நணுகேல்
Set not about what pains others.

௭௫. நொய்ய வுரையேல்
Speak not trivialities.

௭௬. நோய்க்கிடங் கொடேல்
Lay not yourself open to illness.

௭௭. பழிப்பன பகரேல்
Speak not to be despised.

எஅ. பாம்பொடு பழகேல்
Be not familiar with the snake.

எகூ. பிழைபடச் சொல்லேல்
Be your speech faultless!

அ௦. பீடு பெறநில்
Act worthily and according to your dignity.

அக. புகழ்ந்தாரைப் போற்றிவாழ்
Protect your dependants, who propitiate you.

அ௨. பூமி திருத்தியுண்
Live by cultivating the soil.

அ௩. பெரியாரைத் துணைக்கொள்
Seek the help of the Great.

அச. பேதைமை யகற்று
Wipe out ignorance.

அ௫. பையலோ டிணங்கேல்
Do not associate with boys.

அகூ. பொருடனைப் போற்றிவாழ்
Husband your resources and prosper.

அஎ. போர்த்தொழில் புரியேல்
Provoke not a quarrel.

அஅ. மனந்தடு மாறேல்
Give not up courage.

அகூ. மாற்றானுக் கிடங்கொடேல்
Do not put yourself in the power of your enemy.

கூ௦. மிகைபடச் சொல்லேல்
Be not tedious in your speech.

கூக. மீதூண் விரும்பேல்
Love not too much food.

கூ௨. முனைமுகத்து நில்லேல்
Stand not in the forefront of battle.

கூ௩. மூர்க்கரோ டிணங்கேல்
Associate not with the wicked.

௬௰௪. மெல்லினல்லா டோள்சேர்
* Live with your own sweet wife.

௬௰௫. மேன்மக்கள் சொற்கேள்
Listen to the words of the Wise.

௬௰௬. மைவிழியார் மனையகல்
Avoid the houses of prostitutes †

௬௰௭. மொழிவதற மொழி
Speak clear.

௬௰௮. மோகத்தை முனி
Give up passion.

௬௰௯. வல்லமை பேசேல்
Proclaim not your prowess.

௭௰. வாதுமுற் கூறேல்
Be not the first to disclose your hand.

௭௰௧. வித்தை விரும்பு
Love learning.

௭௰௨. வீடுபெற நில்
Strive for salvation.

௭௰௩. உத்தமனாய் இரு
Be thou noble.

௭௰௪. ஊருடன் கூடிவாழ்
Be at peace with the world.

௭௰௫. வெட்டெனப் பேசேல்
Speak not bluntly.

௭௰௬. வேண்டி வினைசெயேல்
Act not with an eye to the return.

௭௰௭. வைகறைத் துயிலெழு
Wake up before sunrise.

௭௰௮. ஒன்னாரைச் சேரேல்
Associate not with enemies.

௭௰௯. ஓரஞ் சொல்லேல்
Be not partial and unjust.

---

* (Go not after strange women.)

† (Those that paint their eye-lashes.)

# வாக்கிய பஞ்சாங்கவழு

[திரு. பிறைசூடும்பெருமாள் பிள்ளையவர்கள்.]

சீர்பூத்த மறைமுதல்வ னருளாற் றந்த
சிவம்பூத்த பிரணவச்சே யடிசிந் தித்தும்
பார்பூத்த தமிழ் நாட்டிற் சிறிதுயர்ந்த
பயன்பூத்த வரருசிவாக் கியத்தா லென்றுங்
கார்பூத்த நெஞ்சகத் தாரியர்க ளெண்ணுங்
கறைபூத்த வாக்கியபஞ் சாங்கத் துள்ள
நேர்பூத்த வழுக்கடனை யாய்ந் துணர்ந்து
நெறிபூத்த தமிழர்கட்கு நிகழ்த்த லுற்றேன்.

நெடியகடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தின்கண் இலெளகிக, வைதிக, சைவ கன்மங்களைச் செய்யக் காலமுதலிய விவகாரங்களை அறிதற்கு அவசியம் வேண்டற்பாலவாயிருக்கின்ற பூகோள ககோள கணிதங்களைக் குறித்து ஆதியில் நூல்செய்தவர் பிரமன், சூரியன், வசிஷ்டர், வியாசர், உரோமகர் முதலிய எண்மர்கள். இவர்கள்செய்த நூல்கள் அவரவர் பெயரைக் கொண்ட சித்தாந்தங்களென வழங்கப்படுகின்றன. அவைகளில் பிரம சித்தாந்தம் கிருதயுகத்தின் முதலிலே செய்யப்பட்டது. கர்க்கரென்பவர் அந்நூலைப் பிரமனிடத்திற் படித்துக்கொண்டு தாம் ஒரு சித்தாந்தஞ் செய்தனர். இன்னும் இம்முதல் நூலின் வழியே சந்திரன், குரு, நாரதர், பைலர், பராசரர் முதலோரும் பல நூல்கள் செய்திருக்கின்றனர். அன்றியும், இக்காலத்தே ஆரியபட்ட ரென்பவர் வடதேசத்திலே பாடலி புரத்திலே கலியுகவருடம் ௩௬00-குச் சரியான வெகுதானிய வருடத்திலே அவதரித்து, உ௩-ஆம் வயதிலே பிரம சித்தாந்தத்தையும் அதன் வழிநூலாகிய கர்க்க சித்தாந்தத்தையும் தழுவித் தம் பெயரால் ஆரியபட சித்தாந்த மென்றொரு நூல் செய்தனர்; இது சார்பு நூலெனப்படும். இந்நூலுக்குச் சூரியதேவ எச்சுவா வென்பவர் ஒரு வியாக்கியானஞ் செய்திருக்கின்றனர். இந்நூலையே கிரேக்கர் முதலிய ஊணர்கள் தங்கள் தங்கள் மொழியிற் பெயர்த்தெழுதிக் கொண்டனர்; இது நிற்க.

இற்றைக்கு-௬௩௫-வருடங்கட்கு முன்னர் வரருசி யென்பார் தோன்றி ஆரியபட சித்தாந்த வழியே வரருசி வாக்கிய மென்றொரு நூல் செய்தனர். அங்ஙனம் செய்யப்பட்ட நூலில் திதி, நட்சத்திரம், யோகம், கரணம் ஆகியவைகள் கணித்தற்கு-

உ௪அ-சந்திரசாரபுடங்களும், செவ்வாய் முதலிய கிரகங்களின் சாரகணிதத்திற்கு சோத்தியம், துருவம், பரிவிருத்தி, அவைகளின் இலக்கங்கள், அவைகளின் ஸ்புடங்கள். வர்ணுட்சர முதலியவைகளும், இரவிசாரங் கணித்தற்கு இரவியின் ஸ்புட கெதிக்கும்-௬௰-நாழிகைக்குமுள்ள வித்தியாசம்யோக்கியாதியும், அவ்வரருசியார் இருக்குமிடத்தின் தேசாந்தரம் மானியாதியும் ஆகிய இவைகளை வாக்கிய ரூபத்திலும் அமைத்து அவைகளாற் கணிக்குங் கிரமங்களைக் கிரகசாரவிதியென்றொரு வழியுங்காட்டியிருக்கின்றனர். இங்ஙனமாகியவைகளை ஆய்ந்து நோக்குமிடத்து கணிதம் எளிதின் முடியுமாறு கணிதமார்க்கங்களைச் சுருக்கித் தூலமாய்க் கூறப்பட்டிருக்கின்றதெனை வெள்ளிடைமலைபோல் விளங்கும். மேற்கூறியவாறு ஏற்படுத்திய வரருசியார் தாம் ஏற்படுத்திய வழிகளை யாவருமுணருமாறு கூறுது போயினர்.

அவ்வாறுன வரருசி வாக்கிய நூல் உண்டான காலமுதல் இதுகாறும், வடமொழி தென்மொழிகளில் கையெழுத்திலும் அச்சிலும் அளவிறந்த பிரதிகளுண்டாகி, அவைகளுள் ஒரு பிரதிபோல் மற்றொரு பிரதியில்லாது, வாக்கியங்களிலும் இலக்கங்களிலும், கிரியைகளிலும் சிற்சில பேதங்களுண்டாகிப் பிழைபட்டிருக்கின்றன. ஆகலின் அப்பிழைகளை வாக்கிய கணிதர்களில் சிலர் அறிந்தும் பிழையறப் பரிசோதித்துத் திருத்தல் செய்துகொள்ளும் வழியறியாது, ஒவ்வொரு கணிதரும் தம்மிடமிருக்கும் வாக்கியங்களும் இலக்கங்களும் கிரியைகளும் சரியானவைகளென்றும், ஏனையோர்களிடமிருக்கும் வாக்கிய முதலியவைகள் தப்பென்றுங் கூறிக்கொண்டு கணித்துவரும் தப்பறைப் பஞ்சாங்கங்களே வாக்கிய பஞ்சாங்கங்களென உலாவித்திரிகின்றன (வைதிக கன்மங்களென்பன இங்கே ஆரியவேத கன்மங்கள்.)

மானியாதி வாக்கியங்கள் அவைகளுண்டான தேசத்துக்கன்றி ஏனைய தேசங்களுக்கு உபயோகமாகா தெனல்.

வரருசியார், கலியுகாதி - க௬00௬அ௪-ஆவது தினத்தில் சந்திரத் துருவத்துக்குக் கண்டங்கட்டியிருக்கிறதைக்கொண்டு, அவர் கணித நூலெழுதிய காலம்-௬௩அ௪-ஆவது வருடத்திலென நிர்ணயிக்கலாம்; அன்றியும் அவர், இன்ன தேசத்திற்குத் தேசாந்தரமாகிய மானியாதி வாக்கியங்களேற்படுத்தியிருக்கின்றனரென்று அவ்வாக்கியங்களால் எளிதிலறிய யாராலுமுடியாது. அஃதெதனுலெனின்:—நிரட்ச தேசமான இலங்கைக்கு

உத்தரத்தேருணமும், இலங்காமேருசம சூத்திரத்துக்குக் கிழக்கே தனமும் மேற்கே ருணமுமாயிருக்கிறதினுலே இவ் விடங்களின் தேசாந்திரங்கள் எப்போதும் ஸ்திரமாயும், இரவி புஜா பலமும் சரமும்-௩-௪-தினங்கட்கு ஒரொரு விதங்களாகப் பேதப்பட்டு சில தினம் ருணமாகவும் சில தினம் தனமாகவும் மாறிக்கொண்டே வருவதால் இவ்விரண்டும் எப்போதும் சலன மாயு மிருக்கிறதினுலேயே யெனவறிக. அம்மானியாதி வாக்கி யங்களேற்பட்டிருக்கிற தேசத்தை அவ்வாக்கியங்களைக்கொண்டு அதிக வருத்தத்தினுல் அறியினும் அறியலாம்; அங்ஙனம் அறி யினும் வருபயன் யாதுமின்ரும். சூரிய, ஆரியபட, திருக்கு, பரகித முதலிய சித்தாந்தங்களொன்றிலேனும் மானியாதி என் னும் சொல்லும் அதன் பொருளும் வரக் காண்கிலேம். வீமேசுர உள்ளமுடையானில் சந்திர ஸ்புடத்திலே தேசாந்தரக்கலை சம்ஸ் கரிக்க வேண்டு மென்று கூறியிருக்கிறது; அக்கலைகள் இன்ன இடத்தின் தேசாந்தர மென்று அந்நூலினும் கூறப்படவில்லை.

சூரிய சித்தாந்தம், பரகித சித்தாந்தம், திருக்சித்தாந்த மென்னும் சித்தாந்தங்களின்படி பஞ்சாங்கங் கணித்து வரு கின்றவர்கள் தம் தம் தேசம், இஷ்ட தேசம் இவைகளில் ஓர் தேசத்தைக் குறித்து தேசாந்தர மேற்படுத்தி அதைச் சந்திர ஸ்புடத்தில் சம்ஸ்கரித்து அப்புடத்தால் திதி, நட்சத்திரம் யோக முதலியவைகளின் நாழிகை கணித்து வருகின்றனர். அன்றியும், கருங்குளம் கிருஷ்ண ஜோதிஷரும், அவர் சிஷ்யர் களும், கேரளதேச கணிதர்களும், அரிமளம் காமாக்ஷிநாத சாஸ்திரிகளும் கணித்துவரும் வாக்கிய பஞ்சாங்கங்களில் சந்திர ஸ்புடத்தில் மானியாதி வாக்கிய சம்ஸ்காரமின்றி, அவ்வவ்விடங் களின் தேசாந்தர சம்ஸ்கார மட்டும் செய்து திதி முதலியவை களின் நாழிகை கணித்து வருகின்றனர். இவர்கள் அல்லாத ஏனைய வாக்கிய கணிதர்கள் தேச பேதம், கால பேதம், கிரியா பேதங்களைச் சிறிது முணராது "எல்லு செட்டிலக்கா ஏக லக்கா" என்னும் தெலுங்கின் பழமொழிபோல் வரருசியார் ஓர் தேசத்தைக்குறித்து ஏற்படுத்தியிருக்கிறதேசாந்தரமென்னு மானியாதி வாக்கியங்களை எல்லாத்தேசங்கட்கும் உபயோகித்து வருகிறது ஜோதிஷ சித்தாந்த நூற்கருத்துக்கும் அந்நூலறி வுடையோரது அனுபவங்கட்கும் முழுதும் முரண்படுகின்றன. ஒவ்வோர் தேசத்துக்கும் பலச்சாயை, பூர்வ பச்சிம இரேகாம் சம், சரம் ஆகியவைகள் வேறுவேருயும், இவைகளால் சூரியன் சந்திரன் துங்கனது தேசாந்தரமும் வேறு வேருயுமிருக்கிற தினுலே ஓர் தேசத்துக் கேற்பட்ட தேசாந்தரம் மற்ருெரு தேயத்துக்காகா.

## யோக்கியாதி வாக்கியங்கள் உபயோகமாயினும் அவைகள் தூலமாயும் பற்பல பேதங்களாயுமிருத்தலால் சூட்சும கணிதத்துக்கு உபயோகமாகாதெனல்

சூரியஸ்புடம் சுலபமாய்க் கணிக்கும்பொருட்டு சூரியஸ்புட கெதிக்கும்-சுய-நாழிகைக்குமுள்ள வித்தியாசத்தை யோக்கி யாதி வாக்கியங்களாக அமைத்திருக்கின்றனர். அவைகள் எல் லாத்தேயங்கட்கும் பொருந்துமாயினும், பற்பல பேதங்களாயும் தூலமாயுமிருக்கிறது. இங்ஙனமாய வாக்கியங்களால் ஏற்பட்ட சூரிய ஸ்புடத்தாலும் மானியாதி வாக்கியங்கள் சேர்ந்துள்ள சந்திர ஸ்புடத்தாலும் திதி, நட்சத்திரம், யோகம், கரணம், தியாஜ்யங்கட்கு நாழிகை கணிக்குமிடத்து தினந்தோறும் ஒன்றேகால் நாழிகை முதல் இரண்டு நாழிகை வரையும் குறைந்து கொண்டே வருகிறது; இப்படி வருகிறதினாலே சிரார்த்தம், விரதம், பூசை, உத்ஸவ முதலிய புண்ணிய காலங் களும், சுபா சுப காலங்களும் மாறுபடுகின்றன. ஆகவே, மாறு பட்ட காலங்களிற் செய்யும் கன்மங்கள் மாறுபட்ட பயனையே கொடுக்குமன்றி நேரான பயனைக்கொடா. (தொடரும்)

---

# திரு இடைவாய்

[திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளை யவர்கள் B. A.]

திரு இடைவாய் என்பது ஓர் புண்ணிய சிவத்தலம். அது சோழநாட்டிலுள்ள ஓர் தலம். அது தஞ்சாவூர் ஜில்லாவில் மாயூரம்-திருவாரூர் (மாயவரம் - திருவாலூர்) இருப்புப்பாதை வழியிலுள்ள கொரடாச்சேரி என்னும் இருப்புப்பாதை நிலயத்தி லிருந்து (Railway Station) ஏறக்குறைய ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது. அத்தலத்தில் ஓர் தொன்மையான சிவா லயம் புதர் செடிகளால் மூடப்பட்டுப் பூசையில்லாமல் இருந் தது. 1917-ம் வருடத்தில் சைவசமயப் பற்றுடைய ஓர் புண்ணிய சீலர் அதனைக் கண்டுபிடித்துச் செடிபுதர்களை வெட்டியும் திருத் தியும் அவ்வாலயத்தைத் திறந்து வெளியாக்கினார்கள். அப் பொழுது விநாயகர், மகாலிங்கம், தேவியார், தாண்டவகணபதி, பைரவர், சூரியன், ஆதிசேடன், திருஞானசம்பந்தர் ஆகிய திரு வுருவம் மாத்திரம் இருந்தன. நடராஜர் முதலிய திருவுருவங்க ளெல்லாம் வேறு ஆலயங்களுக்குக் கொண்டுபோய் வைக்கப்பட் டிருந்தன. ஒருவரா லெடுத்துக்கொண்டு போகப்பட்டதாகத் தெரிந்த சுப்பிரமணியர், வள்ளியம்மை, தெய்வயானை உற்சவ

உருவங்கள், சிவில் வழக்குத் தொடுத்து அவரிட மிருந்து மீட்பு செய்யப்பெற்று இப்பொழுது ஆலயத்தில் வைக்கப்பட் டிருக் கின்றன.

ஆலயத்தின் அர்த்த மண்டபம் தென்புறம் வெளிச்சுவரிலும் மகா மண்டபம் மேல்புறம் வெளிச்சுவரிலும் உள்ள கற்களில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிய அத் தலத் தேவாரப் பதிகம் பதினொரு பாட்டுக்களும், வெட்டப்பட் டிருந்தன. அவற்றில் எழுத்துச் சிதைவுகளும் சில இருந்தன. அப் பாட்டுக்களை மேற்சொல்லிய புண்ணிய சீலர் சில அறிஞர் உதவியைக்கொண்டு எடுத்து எழுதி புத்தகரூபமாக அவை களை வெளியிட் டிருக்கிறார்கள்.

பின்னாலே சர்க்கார் தொன்மை விளக்கத்துறை (Archaeological Department) அதிகாரிகள் இந்த ஆலயத்தைப் பார்த் துத் தொன்மைப் பாதுகாப்பின் பொருட்டு சுமார் எழுநூறு ரூபா செலவுசெய்து சில வேலைகள் செய்ததாக அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

நான் கொரடாச்சேரிக்குப் போயிருந்த பொழுது ஸ்ரீல ஸ்ரீ வாலையானந்த சுவாமிகள் இவ்வாலயத்தைப் பற்றியுள்ள செய்தியை எனக்குச் சொன்னார்கள். அதனைப் பார்க்கவேண்டு மென்ற ஆவல் எனக்கு உண்டாயிற்று. சுவாமியவர்கள், என்னை நடக்கிற வைகாசித் திங்கள் ௧௯-உ (1-6-1927) இவ்வாலயத் துக்குக் கூட்டிக்கொண்டு போய்க் காண்பித்தார்கள்.

ஆலயம் கிலமா யிருக்கிறது. கர்ப்பக் கிருகத்தின்மேல், மரங்களும் செடிகளும் உண்டாயிருக்கின்றன. ஆனால் பிரகார மெல்லாம் இப்பொழுது யாவரும் நடந்து போம்படியா யிருக் கின்றது. சுவாமி சந்நிதி கிழக்கே பார்க்க இருக்கிறது. அம்பாள் சந்நிதி தெற்கே பார்க்க இருக்கிறது. சில ஆண்டுகளாக ஆல யத்தில் ஒரு நேரப்பூசை நடந்து வருகிறது. மாசிமாதம் சிவ ராத்திரியில் ஸ்ரீலஸ்ரீ வாலையானந்த சுவாமிகள் தாங்களாகவும் நகரத்துச் செட்டியார் ஒருவர் உதவியினாலும் விசேட பூசை நடத்துவிக்கிறார்கள். கோயிலுக்கு முன் புறத்தில் ஒரு திருக் குளமும் வடபுறத்தில் ஒரு திருக்குளமும் இருக்கின்றன. வட புறத்திலுள்ள திருக்குளம் ஊற்று உடையதாயும் குடிக்கும்படி யான நல்ல தீர்த்தத்தை யுடையதாயும் இருக்கின்றது.

கற்சுவர்களில் வெட்டப்பட்டுள்ள தேவாரப் பதிகப்பாட் டுக்களை நான் பார்த்து வாசித்தேன். முன்னே வெளியிட்டுள்ள புத்தகத்தை ஸ்ரீலஸ்ரீ வாலையானந்த சுவாமிகள் வைத்துக் கொண்டு சிறிது சிறிதாய் வாசித்துவர நான் கல்வெட்டு எழுத்

துக்களை ஒப்பிட்டுப் பார்த்து வாசித்தேன். சில இடங்களில் மாத்திரம் கற்களில் சிதள்கள் எழும்பி விழுந்திருக்கின்றன. அந்த இடங்களில் மாத்திரம் எழுத்துச் சிதைவுகள் இருக்கின்றன. எழுத்துச் சிதைவுகள்கண்ட இடங்கள் தவிர கல்வெட்டுப் பாட்டுக்களும் புத்தகத்தில் அச்சிட்ட பாட்டுக்களும் முழுமையும் ஒத்திருக்கின்றன.

ஆலயக்கற்சுவர் எங்கும் எழுத்துக்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. அவற்றைத் தொன்மை விளக்கத்துறை அதிகாரிகள் பார்த்து எடுத்துத் தங்கள் புத்தகங்களில் வெளியிட்டிருக்கிற விவரம் தெரியவில்லை.

ஆலயச்சுவர்க் கற்களில் சிதள்கள் எழும்பியிருப்பதனுல் இந்த ஆலயம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் உள்ளதாயிருக்கலாமென்று ஊகிக்கத் தக்கதாயிருக்கிறது. திருஞானசம்பந்த சுவாமிகள் இவ்வாலயம் வந்து தரிசித்துப் போயினபின் ஆலயச் சுவர்கள் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். அப்படிக் கட்டப்படும் பொழுது திருஇடைவாய் ஊரில் அப்பொழுது இருந்த தொண்டர்கள் அல்லது அப்பொழுது இருந்த சோழ அரசர்கள் தேவாரப் பதிகப்பாட்டுக்களைச் சுவர்க்கற்களில் வெட்டுவித் திருத்தல் வேண்டும். பின்னுல் அபயகுலசோழ மகாராஜா சிதம்பரத்தில் கனகசபைக்கு மேற்றிசையிலுள்ள ஓர் அறையிலிருந்து தேவாரத்திருமுறைகளைக் கண்டு எடுத்த பொழுது இத்தலப்பதிகம் முழுவதும் செல்லுமண்ணுல் மூடப்பட்டுப் பழுதான திருமுறைகளில் சேர்ந்திருக்க வேண்டும். அப்படிப் பழுதுபட்டதனுல் இப்பதிகம் இப்பொழுதுள்ள ஏழு திருமுறைகளில் சேர்க்கப் படவில்லை.

இப்பதிகப் பதினெரு பாட்டுக்களும் தென்னிந்தியா சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் புதிதாய் அச்சிடப் பெற்ற திருஞான சம்பந்தர் தேவாரத்தின் கடைசியில் அச்சிடப்பட்டிருக்கின்றன. இவ் ஆலயம் இன்னும் சில ஆண்டுகளில் புதுப்பித்துக் கட்டப்படாவிட்டால் அது பழுதாய்விடும் ஆகையால் அது கூடிய சீக்கிரம் சீரணெத்தாரணம் செய்யப்பட வேண்டிய நிலையிலிருக்கின்றது. புதிதாய் ஒரு ஆலயம் கட்டிப் பிரதிட்டை செய்கிறதைப் பார்க்கிலும் பாடல் பெற்றுள்ள பழைய ஆலயம் ஒன்றைப் புதுப்பித்துக் கட்டுதல் மேலான சிவபுண்ணியமாகும். சைவசமயப்பற்று உடைய நகரத்துச்செட்டிச் செல்வர்களாவது பிறசெல்வர்களாவது முன்வந்து இச் சிவபுண்ணியத் தொண்டைச் செய்து முடிப்பார்களானுல் அவர்கள் புகழும் புண்ணியமும் அடைவதுடன் சைவவுலகத்தாரை எல்லாம் தங்களுக்குக் கடமைப்பட்டவர்களாக ஆக்கிவிடுவார்

கள். இப்புண்ணியத் தொண்டு நடைபெற்று முடியும்படி எல்லாம் வல்ல சிவபெருமான் திருவருள் செய்வாராக.

---

## காதற் சிறப்பு

உ. செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.

(குறள் - ககடுக)



(இது பிரிந்து கடிதில் வருவலென்ற தலைமகனுக்குத் தோழி சொல்லியது)

(இ - ள்.) நீ எம்மைப் பிரியாமை உண்டாயின் அதனை எனக்குச் சொல்; அஃதில்லாமல் பிரிந்து விரைவில் வந்துவிடுவேன் என்பதாயின் அதனை அப்பொழுது உனது வரவு காணும்படி உயிர்வைத்துக் கொண்டிருப்பவர்க்குச் சொல்.

[மக்கட்குறுதி பயப்பதுகல்வியே என்பதை நன்குணர்ந்த தலைமகன் ஒருவன் அதன் பொருட்டு அயனாட்டுக்குச செல்ல வெண்ணினான். எண்ணி, தலைமகளிடம் தனதவாவினைச் சொல்லி விடைபெறலாமெனின், அவள் எங்ஙனந் தடைசெய்து விடுவாளோவென அஞ்சினான். ஆகவே தனது பிரிவைத் தோழியைக்கொண்டு உணர்த்திப்போவதே தக்கதெனத் துணிந்து அங்ஙனமே தோழியைப் பொழிலகத்தே கண்டு, கல்வியினருமை பெருமை யனைத்தையும் அவளுக்கு எடுத்துக் கூறினான். அதன் பொருட்டு அயனாட்டுக்குச் செல்லவேண்டு மெனவும் தெரிவித்தான. 'நங்காய்! உன் தலைவியைப் பிரிந்த ஒவ்வொரு நாழிகையும் ஒவ்வொரு ஊழிபோல எனக்குத் துயர் மிகும். அங்கே நெடுநாள் நில்லேன். இவளை அதுவரை ஆற்றியிரு. விரைந்து திரும்பி வருகின்றேன்' என்றான்.]

இதனால் நமது பண்டைத் தமிழ்மக்கள் காதலொழுக்கத்தில் தனிசிறந்து விளங்கினர் என்பதும் கணவனும் மனைவியும் மணியும் ஒளியும் போன்றும், ஈருடலும் ஓருயிருமாகவும் தோன்றித் திகழ்ந்தனர் என்பதும் அறியக்கிடக்கின்றன.

---

## வீரச் சிறப்பு

என்னைமுன் னில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர். (குறள் - எஎக)

(இ - ள்.) பகைவர்காள், எனது தலைவனோடு போர் நிகழ்த்தி அவன் வேல்வாய் வீழ்ந்து பின் கல்லின்கண்ணே நின்றவீரர் பலர் என்பது அறிந்ததே. ஆகலின் நீவிர் கல்லின்கண் நிற்கவேண்டினால் என் தலைவனோடு போர்நிகழ்த்த வம்மின்; அதன்கணில்லாமல் உம்முடலோடு உயிர்வாழ வேண்டின் அவனோடு போர்செய்தலை யொழித்துச் சென்மின்.

இப்பாட்டு நெடுமொழிவஞ்சி. இதனிலக்கணம்,

'ஒன்னாதார் படைகெழுமித்
தன்னாண்மை எடுத்துரைத்தன்று'

என்ற புறப்பொருள் வெண்பா மாலை வஞ்சிப்படலம் 12ஆஞ் சூத்திரத்திற் கூறப்பட்டிருத்தல் காண்க. கல்-நடுகல். நடுகல் இலக்கணம் தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியல் 5-ம் சூத்திரத்தின்கண் கூறப்பட்டிருக்கின்றது. தோல்வியுற்று உயிரிழந்த பகைவர் பெயரினைக் கல்

லின்கண் பொறித்துத் தனது வெற்றிக் கறிகுறியாக அதனை நட்டு வைப்பது. இஃது அக்காலத்து வழக்கம்.



ஒரு வீரன் போர்க்களத்தின்கண் தனது தலைவன் பெருமையையும் வன்மையையும் பற்றிப் பகைவர்தஞ் சேனையைக்கிட்டிச் சொல்வது.

இக்குறளடியால், அக்காலத்துத் தமிழ் மக்கள் போரிலக்கணம் நன்குகற்ற பெருவீரர்களாய்த் திகழ்ந்திருந்தனரென்பது நன்கு விளங்குகிறது.

---

# தமிழ்வேத வோத்தின் முன்னர் திருவெண்ணீற்றுப் பேற்று மறுப்பு

[ஸ்ரீமத் செப்பறைச் சிதம்பரசுவாமிகள்]

ஸ்ரீ தமிழ்வேதமோது முன்னர் திருவெண்ணீறிதலு மேற்றலும் வேதவிலக்கேயாம். அஃதங்ஙனமாமோ, அன்றோவென்னும் ஐயப்பாட்டின்கண் அது விதியின் பாலதேயாமென முதற்கட்பிறர் கூறும் பக்கம் பெறப்படுகின்றது. அஃதாமாறு வடமொழி வேதம், சுயம்புவாய், அநாதியதாகலானும், அதனுள், ஆண்டை விதியின் பின்முறையானே ஆண்டு விதிக்கப்பட்ட ஆலயவழிபாடு முதலியவெல்லாம் ஈண்டுளவாயினவாகலானும் எனைத்தமிழ் வேதமவ்வாறன்றி ஆண்டு விதிக்கப்பட்டவற்றின் பின்னையதாகலானும் அதனுன் அது சுயம்புவாகாது. ஒருவரான் ஆக்கப்பட்டுடையதாகலானும் அல்லதூஉம், தமிழ்மறை, அந்தணர்க்கு வேண்டப்படாது எனையர்க்கே வேண்டப்பட்டு நிற்றலானும் அன்றி அஃதோதுவோர் அஃதாக்கியோ ரவரென்னும் இவ்வுலக முறைபற்றி அவ்வோத்தின் முடிபினீயும் அத்திருவெண்ணீறு அஃதோதுவோர்க்கே என முடிந்து கிடத்தலின் அந்தணர் எவரினும் உயர்ந்தோராகலின் ஆண்டை அந்தணர் அஃதோதுவோர் பின்னர் அஃதேற்றல் ஆகாமையானும் இன்னுமின்னோரன்ன பிறவாற்றானும் அது வேதவிதியே யாமெனப் பெறப்பட்டவழி அது வேதவிலக்கே யாமெனச் சித்தாந்தங் கூறுதும். அது வருமாறு.

வேதம் சுயம்பு வென்பதற்குப் பிரமாண மின்மையானும் அது படைப்புக்காலத்துப் பரமசிவனுலாக்கப் பட்டதெனப் பிரமாண முண்மையானும் வேதத்துள் ஒரோவோருழி வேதஞ் சுயம்புவென்பதூஉம் உபசாரமே யல்லதுண்மை யன்மையானும் அன்ன பிறவாற்றானும் அஃதனுதியென்பது யாதுஞ்செல்லாமையறிக. அல்லதூஉம் அவ்வேதம் சத்தவடிவிற்றாகலான், அர்த்தப் பிரபஞ்சம் எவ்வாறு அநித்தம் அவ்வாறு சத்தப்பிரபஞ்சமும் அநித்தமாமென்பது அவ்வேத முடிபாகலானும் அன்ன பிறவாற்றானும் அது சுயம்பு அன்றென்பது தெற்றென அறிக.

அற்றேல் அற்றற்றாக, வடமொழி வேதம் இவ்வாலய வழிபாட்டின் முன்னுளதாக, தென்மொழி வேதம் அவற்றின் பின்னுளதாயதாகலான், அதுபற்றி அஃதவ் வழிபாட்டிற்கு வேண்டப்படாது போலுமெனின் அற்றேல் ஈண்டு நின்னை வினவுதும், அதுவே முன்வருமாறு; அவை தாம்வேண்டுதல் வேண்டாமைகட்கு அவை தம்முள் முற்பிற்பாடாமாறு ஏதுவாதற் கேதுவென்னை? முன்றோன்றினு ரொப்பவே பின்றோன்றினர் இது செயற்குரியது இது செயற்குரிய தன்றென்பதறியாமையின் அவர் அவற்றை அவர்க்கறிவுறுத்துமா றெவ்வாறு இதுவும் அவ்வாறே யாமெனின், அற்றேல், பின்றோன்று மொருசாராரொப்ப முன்றோன்று மொருசாரார் இது செயற்குரியது இது செயற்குரிய தன்றென்பதறியாமையின் அவற்றை பின்றோன்றினர் அறிந்து முன்றோன்றினர்க்கறிவுறுத்துமாறு காண்டலின் அம்முற் பிற்பாடு அவற்றிற்கேதுவாமென்பது நியதமாதல் செல்லாது. ஆகலான் அவ் வெடுத்துக்காட்டு

யாதும் பொருந்தாமையின் அவ்வேது, போலியாயொழிந்தவாறு காண்க. ஒழியவே பின்றோன்றினர் முன்றோன்றினரினும் உணர்வுடையராய் அவர்க் குணர்த்துமாறு பெறப்படுதலின் பின்னுக்கப்படும் அத் தமிழ் வேதம் ஆலய வழிபாடு முதலியவற்றிற்கு வேண்டப்படுதல் பற்றி யாது மிழுக்கின்மையு மறிக.

அற்றேல் அஃதற்றாக ஆலயவழிபாடு முதலியவற்றிற்கு வேதவிதி வேண்டப்படுமல்லது அவை நிகழுந்தோறும் அவ்வோத்து வேண்டப்படு தல் எற்றுக்கெனின் புறநெறிப்பட்டுடைய நினக்கு அவ்விதியினுண்மை ஈண்டு உணர்த்தற் பாற்றன்று. ஆயினும் சிவஞானப் பரமாசாரியர் பேருபதேசப் பெரும்பசுப்பு என்னும் நூலுட் காண்க.

அஃதேல் அஃதங்ஙனமாக ஆலய வழிபாடு முதலியன விதிக்கு மாகமங்களுள் வடமொழி வேதவோத்தே யல்லது தென்மொழி வேதவோத்து விதிக்கப்படுமாறு கண்டிலமாலெனின், அற்றன்று. வியாகரணமென்பது பொதுச் சொல்லாய் நின்று வடமொழி வியாகரணம் தென்மொழி வியாகரணம் இரண்டனையும் உணர்த்து மாறெவ்வாறு அவ்வாறே ஆகமங்களுள் ஆண்டாண்டு வேதமோதற் பாற்றென்புழிவரும் வேதமென்பதுவும் வடமொழி வேதம் தென் மொழி வேதமிரண்டற்கும் பொதுமையினிற்றலின் ஆண்டு விதிக் கப்படாமை யாண்டையதென் றொழிக. அற்றேல் தென்மொழி வேதம் வடமொழி வேதத்தின் பின்னெழுந்ததாதலின் அவ்வாறு பின்னெழுந்த தாய அதனை முன்னர்விதிக்குமாறு செல்லாதாலெனின் பின்னிகழ்வன வாய காமரிபு முப்புரதகன முதலியன ஆண்டு முன்னோதக் காண்டலின் அவ்வோத்துச் செல்லாமை யாண்டைய தென்றொழிக. அல்லதூஉம் அவ்வேதப் பொருளையே விரித்தோது மாறெழுந்த புராணநூல்களுள் பின்னிகழும் பரமாசாரியன்மார் வைபவம் எடுத்தோதப்படுதலானும் அவ் வாறே ஆகமங்களுள்ளுங்கேட்கப்படுதலானும் அஃது ஆண்டும் விதிக் கப்பட்டுக் கிடந்தவாறு தெற்றென அறிக. அற்றேல் அத்தமிழ் வேத வோத்து நான்காம் வருணமுடையார் ஆலய வழிபாட்டிற் குரியதாமென வறிதே படைத்துப் புகுத்து வைத்த விதியென்னுமோவெனின் என் னும். என்னை? ஆகம புராணங்கட்கு அஃதுடம்பாடென்பது மேற்காட் டிப் போந்தனமாகலானும் பத்ததியுடையரும் அஃதுடம்பட்டு விதித்த லானும் அன்ன பிறவாற்றானு மென்பது.

அற்றேல் அத்தமிழ் வேதம் அந்தணர்க்கு வேண்டா என்றாற் படு மிழுக்கென்னையெனின், அந்தணர் தெய்வமாய சிவபரம்பொருட்கு இன்றியமையாது வேண்டப் படுவதோர் அரிய பெரிய சீரிய மேம் பாடுடைத்தாய அத்தமிழ் வேதம் அச்சிவபரம்பொருட்கு அடிமையாய அந்தணர்க்கு வேண்டா மென்பது அரசர்க்கு வேண்டப்படும் வணக்கம் குடிகட்கு வேண்டப்படாது என்பதொப்பதோர் நகைமொழியாய் ஒழியு மாறு காண்க.

அஃதேல் அஃதஃதாக, தென்மொழி, வடமொழி யொப்ப சிறந்த தன்மையின் அஃதவ்வழிபாட்டிற்கு வேண்டப்படாது போலுமெனின், அற்றேல் அதற்குப் பிரமாணமென்னை, ஒன்றுங் காண்கிலம். இனி அவ்

விருவேறு மொழியும் தம்முட்டாரதம்மியமின்றி தம்முளொப்பன வென்பதே சுருதி, மிருதி, புராண, இதிகாச மெல்லாவற்றிற்கு மொப்ப முடிதலின் அவ்வோத்துப் பொருந்தாமை யறிக. அற்றேல் அத்தமிழ் வேதம் அந்தணரோதுந் தகுதியுடையதன்று போலுமெனின் அந்தணர் பெருமானுய ஆளுடைய பிள்ளையார் முதலிய பரமாசாரியப் பரம் பொருள்களானுக்கப்பட்டு நின்ற அத்தமிழ் வேதம் அப்பரமாசாரியன் மா ரறிவைநோக்க நெடுஞ்செயராய அந்தணரோதல் தகாதென்பது யாது மேலாமையின் அவ்வோத்துச் செவ்விய தவமிலோத்தே யாமென மறுக்க. அல்லதூஉம் அறுவேறு சாபவேதுப்பற்றி சைவப்பேறெய்தற் குரிய மெய்த்தவமில்ராய அந்தணப் போலிகளோத்தெல்லாம் யாதும் பயனிலோத்தேயாமென மறுக்க. இனி அத்தமிழ் வேதமோதுவோர் அவ்வோதாதார்க்கு வேறாய் முடிதலான் ஆண்டுத் திருவெண்ணீறு முதற்கண் அவர்க்கீயவேண்டு மென்பது பற்றியும் நின்கருத்து நிரம் பாது, என்னே? அஃதற்றேல் அவ்வாறே வடமொழி வேத மோது வோரும் அவ்வேதமாக்கிய பரமசிவனுதல் வேண்டும். வேண்டவே அவ ரும் பரமசிவன் வழிபாடு எற்றற்குரியராதல் வேண்டும். அதற்குப்பிரமாண மின்மையானும் பொருந்து மாற்றிற்கு அஃதேலாமையானும் இதுவும் அதுவே யாமென்றொழிக. அற்றேல் எல்லா நூலினும் உயர்ந்தது வேதம் அவ்வாறே எல்லாமாந்தரினு முயர்ந்தோர் அந்தணராகலான் எனைத் தமிழ்வேதம் அத்துணை உயர்ச்சியுடைத்தன்றும் போலுமெனின் அற்றேல் அதற்குப் பிரமாணமென்னை? ஒன்றங்காண்கிலம் ஆகலானும், இரண்டுந் தம்முளொப்பன வென்பது மேலோதி யொழிந்தனமாக லானும், ஸ்காந்தம், திருமந்திர முதலிய நூல்களுள் அவ்வாறோதப் படுத லானும் அன்னபிறவாற்றானும் அவ்வோத்துத் தமிழ் வேதமோதுந் தவ மிலராய அந்தணப் போலிகள்யாதும் பிரமாணமின்றி வறிதே குழறும் வெறுங் குழறுபடையேயல்லது வேறின்மையின் அவ்வோத்து வெறும் போலியே யாமென்றொழிக. இனி உண்மையானோக்குவோர்க்கு, வட மொழி வேதம் பொருள் பலபடத் தோன்றும் மயக்க நூலாகலான் அவ்வாறாகாத எனைத் தமிழ்வேதம், அதனினு மேம்பட்ட நூலாதல் தெற்றென அறிக. இஃதென்னை பாவம்? பரமசிவனுகியருளிய அப்பரம னூலை அவ்வாறோதின் அவனும் அவ்வாறே மயக்க முடையனெனப்பட்டு அவன் முழுமுதல்வனுகான் போலுமெனின் !அற்றேல் சைவநெறியே முழு முதல் நெறி என யாண்டு முயர்த்தோதப்படும் அவ்வேதத்துள் லோகாயத முதலிய பயனில் நெறியும் உண்மையின் அவையும் அவ்விறை வனோத்தேயாகலான் அதனான் அவனும் பயனில் நெறியும் உடம் பாட்டோதியுடைய னெனப்பட்டு வழுவாய் முடியும். அஃதங்ஙனமன்றி உயிர்களின் பருவவேறுபாடுபற்றி அஃதோதிய தெனப்பட்டு அஃ திழுக்காகாமை யெவ்வாறு அவ்வாறே மேலது பற்றியும் அவன் முழு முதன்மைக்கு யாதும் இழுக்கின்மையுமறிக. அற்றேல் அஃதவ்வாறு யின், தென்மொழி வேதம் வடமொழி வேதத்தின் முன்னோதப்படுக எனின் கன்றே யோதினுய் அதுவே யெங்கருத்து மாகலானென்பது. அற்றேல் அம்முறைமாறி நிகழுமாறென்னையெனின் அந்தணப் போலி கள் அழுக்காற்றாற் புதுவது படைத்துக் கொண்ட மயக்க முறையே யல்லது நூன்முறையன்றென் றொழிக. இனித் தமிழ் வேதம் வட மொழி வேதத்தின் உயர்படைத்தென்பது. 'தொண்டர் நாதனை' என்றற் றொடக்கத்தானும் பிறவாற்றானுமறிக. இன்னும் வடமொழி வேதத்

தினும் தென்மொழி வேதம் உயர்ந்ததென்பது "பெருமறையுடன் மெய்த்தொண்டர்க்கிடையீடு பெரிதாம்" என்பதனானு மறிக.

அற்றேல், அஃதற்றும் ஆயினும் ஆலய வழிபாட்டின்கண் தமிழ் வேத வோத்தின்பின் திருவெண்ணீறீதலே முறையெனக்கோடுமெனின் அது மேலோதியவாற்றான் அந்தணர் முன்னேற்றற்குரிய முறைபிறழும் போலுமெனின் அற்றேல் அந்தணர் முன்னேற்றல் வேண்டுமென்பதற்கு நியாமகமென்னை? யாதுங் காண்கிலம். உண்மையானேக்கப்பெறின் அந்தணப் போலிகள் அவ் வழிபாட்டின் முன்னுதல் பின்னுதல் திருவெண்ணீற்றுப் பேற்றிற்கு யாது முரிய ரல்லரென்பதேவேதாகம விதியெனக் கொள்க. அது சிவாகமத்துள் சிவ நிர்மாலியப்பேறு சிவதீக்கைப் பேற்றானுயர்ந்தோர் அல்லது அதீக்கிதர்க்கு ஆகாதென விதிக்கப்படுதலின் திருவெண்ணீறு மாண்டைச் சிவ நிர்மாலியத்து ளொன்றேயாகலான் அதீக்கிதராய அந்தணர் முன்னுதல் பின்னுதல் எற்றற்குரிய ரன்மை தெற்றென அறிக. இருந்தவாற்றான் அதீக்கிதராய அந்தணப் போலிகள் அழுக்காறு முதலியவற்றான் அது வேண்டுமென அவாவுவதுவுமிகப் பெருங் கொடியதோர் நரகபதன வேதுவாமென்பதொரு தலையாதலறிக. ஆயவாற்றான் திருவெண்ணீற்றுப்பேறு சிவதிக்கா தாரதம்மிய முறையானே எற்குமதுவே ஆண்டைக்குரிய உண்மைமுறையெனக்கொள்க. இஃதென் சொல்லியவாறோவெனின் தமிழ்வேத வோத்தின் முன்னர் அந்தணர் திருவெண்ணீறேற்றலே முறை. ஆலயவழிபாட்டிற்கு வேண்டப்படாமையான், வேண்டப்படுமாயினும் அந்தணர் அஃதேற்றபின் முறையேயோதுக அஃதவர்க்குரியதன்றி ஏனையர்க்குரிமையுடையதாகலான் என இவ்வாறு பூர்வபக்கம் நிகழ்ந்தவழி அவரை மறுத்து அது வேதமுறையாகாது அந்தணப்போலிகள் போலிமுறையேயா மென்பதூஉம் உண்மை முறையாவது அதீக்கிதராய அந்தணர்க்கு சிவநிர்மாலியப்பேறு எவ்வாறு உரியதன்று அவ்வாறே இதுவுஞ் சிவநிர்மாலியமாகலான் அஃதவர்க்கு என்ஞான்றும் யாண்டும் எவ்வாற்றானும் யாது முரியதன்றெனவும் ஓதித் தமிழ்வேத வோத்தின் முன்னர் திருவெண்ணீறீதலும் எற்றலும் வேதாகமமுறையோடும் அதனை யுள்ளவாறுணர்ந்துணர்ந்தும் அடிப்பட்ட சான்றோராசாரத்தோடும் முரணுமாறுகாட்டி அது வேதாகம விலக்கேயாமெனப் பிரமாணமுகத்தான் வலியுறுத்தவாறெனக் கொள்க.

---

## ஸ்ரீ இராமகிருஷ்ணரின் அருள்மொழிகள்

[திரு. M. P. S. வேலாயுதம் பிள்ளையவர்கள்]

### புயல் காற்றின் நடுவில் ஓர் உயர்ந்த இலை

1. எப்படி இருக்குமோ, அப்படியே தன் பெருமை ஒழிந்திருப்பாயாக.

2. குருவே வழி காட்டுபவர். மனிதனையும் கடவுளையும் அவர்தான் ஒன்று சேர்க்கிறார்.

3. கடவுளைத் தொழுவதையும், தொண்டர்களையும் எள்ளி நகையாடுபவர்களினின்றும் நீ கடவுளைத் தொழும்போது விலகி நிற்பாயாக.

4. ஒருவன், எல்லாம் கடவுளின் ஆணைப்படியே நடக்கிறது, நான் கடவுளின் ஆயுதந்தான் என்பதை உணர்ந்து கொண்டால், அவன் இம்மையிலேயே நற்கதி யடைந்து விடுகிருன்.

5. வெள்ளைப் பூண்டின் சாறிருந்த கிண்ணத்தை எத்தனைதரஞ் சுத்தஞ் செய்தாலும் அதன் நாற்றம் ஒழிவதில்லை. அதுபோலவே "நான் என்கிற மமதை" நம்மைவிட்டு எந்நாளும் விலகுவதில்லை.

6. மூங்கில் சிறியதா யிருக்கும்போது இலகுவில் வளைத்துவிடலாம். ஆனால் அளவுக்கு மிஞ்சி வளர்ந்து விட்டால், வளைக்க முயலும்போது முறிந்துவிடும். அவ்வாறே இளம்பருவத்திலேயே கடவுள் பால் பத்தி செலுத்த முற்படுவது இலகுவானது. முதுமையில் முற்படுவது எளிதல்ல.

7. உன்னுடைய எண்ணங்களுக்கும், வார்த்தைகளுக்கும் ஒற்றுமை யிருக்கட்டும். நீ நினைப்பதைச் சொல்லவேண்டும். மனமொன்று நினைக்க நீ யொன்றைச் சொன்னால் அதில் லாபமொன்றுமில்லை.

8. கிழிந்துபோன சாக்கிலிருந்து சிந்திய கடுகுகளை ஒன்று சேர்ப்பது எவ்வளவு கஷ்டமோ அவ்வளவு கஷ்டம் மனதைக் கட்டுப்படுத்துவதிலும் இருக்கிறது.

9. நேர் வடதிக்கை (துருவ நட்சத்திரம்) நோக்கிச்செல்லும் கப்பலானது எப்படி திசை தவறுதோ, அதுபோலவே, வாழ் நாள் என்ற சமுத்திரத்தில் கடவுளையே நோக்கிச் செல்பவன், எந்த ஆபத்திலும் சிக்கமாட்டான்.

10. ஊசித்துவாரத்தில் நூலை விடவேண்டுமானல், நூலை முனையாக்கி, அழுக்குகளை ஒதுக்கிக் கொள்கிறாய். கடவுளையடைய நீ விரும்பினல், சாந்தமாயிரு, தாழ்மையுடனும் பணிவுடனும் நடந்து ஆசைகளெல்லாவற்றையும் அகற்றிவிடு.

11. இரும்பை, உயர்ந்த வாளாக்குமுன், அதைப் பன்முறை தீயில் வாட்டி, சம்மட்டியால் அடிக்கவேண்டி யிருக்கிறது மனிதன் தூயவனும் தாழ்மை யுள்ளவனும் திகழ உலகத்தில் பலமுறை துன்பங்களில் உழன்று அடிபடவேண்டும்.

---

# கோநகர்

இவ்வூர் ஞானசம்பந்த நற்சபை கற்பகவிநாயக கலாசாலை வாணீ மந்திர புத்தகசாலை என்னு மிவற்றின் பதினைந்தாம் ஆண்டு விழா பிரபவஹூ வைகாசிமீ ௧௪ ௨ நடைபெற்றது. ஆண்பாலரும் பெண்பாலருமாக இருநூறுபேர் வந்திருந்தார்கள்.

முற்பகல் மதுரை பிரம்மஸ்ரீ கல்யாணசுந்தர பட்டரவர்கள் தலைமை வீற்றிருந்து அழகிய வடமொழிக் கவிகளைப் பல நூல்களிலிருந்து எடுத்து இன்னிசையோடு இடை மடுத்து முகவுரைப் பிரசங்கம் செய்தார்கள். கலாசாலைத் தலைமையாசிரியர் எஸ். ஆழ்வாரையங்காரவர்கள் வந்தனோபசாரமும் திருவாளர் பி. மு. பி. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் அறிக்கைப் பத்திரமும் படித்தார்கள். பின்னர் உள்ளூர் சு. லெ. வேதசாத்திர பாடசாலை உபாத்தியாயர் பிரம்மஸ்ரீ, பஞ்சாபகேச கனபாடிகள் அவர்களும், க. வி. கலாசாலை மாணவர் கோதண்டபாணி விசுவநாதன் என்னு மிருவரும் ஷை மாணவர் செங்கமலம் கிருஷ்ணன்

என்னு மிருவரும் மேலைச் சிவபுரிகணேச செந்தமிழ்க் கலாசாலைத் தமிழாசிரியர் திருவாளர் அமிர்தலிங்கம் பிள்ளையவர்களும் முறையே "தர்மம்" "ஊழும் முயற்சியும்" (சம்பாஷணை) "திருநீற்றின் பெருமை" (சம்பாஷணை) "அடியார் பெருமை" என்பனபற்றி யாவர் மனமும் மிக மிக உருகும் வண்ணம் எடுத்துரைத்தார்கள். தலைவரவர்கள் நன்கு அபிப்பிராயம் கூறினார்கள்.

பிற்பகல் திரிசிராப்பள்ளி B. H. காலேஜ் தலைமைத் தமிழாசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தலைமை வகித்தார்கள். கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் எஸ் ஆழ்வாரையங்காரவர்கள் இனிய ஆசிரியப்பாவா லமைந்த வந்தனோபசாரத்தை இன்னிசையோடு படித்தார்கள். பின்னர் தலைவரவர்கள் கல்விப்பொருளைப் போற்று முறைபற்றி அழகிய இனிய சொற்களாலமைந்த நீண்டதோர் முன்னுரை நிகழ்த்தினார்கள். க. வி. க. மாணவன் சு. மு. இராம சுப்பிரமணியனும் ஷை மாணவர் பழ. மெய்யப்பனும் சோ. அண்ணாமலையும் ஷை மாணவி சு. வள்ளியம்மையும் ஷை மாணவிகள் லெ. மங்களமும், சு. மு. மீனாட்சியும் பலவான்குடி திருவாளர் ராம. கு. ராம. இராசாமிச் செட்டியாரவர்களும் ஷை யூர் பெரி. குமரப்பனும் க. வி. க. மாணவன் ராமகிருஷ்ணனும் கீழைச்சிவபுரி மீனாட்சி சுந்தரேசர் கலாசாலைத் தலைமையாசிரியர் திருவாளர் பூவராகம் பிள்ளையவர்களும், மகிபாலன்பட்டி திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களும் "பண்டைத் தமிழ் நாடு" "தமிழ்க்கல்வி" (சம்பாஷணை) "பெண் கல்வி" பெண் கல்வி" (சம்பாஷணை) "மாதர் பெருமை" "கற்பு" "பெரியோர்கள்" "கல்வி" "விடா முயற்சி" (ஆங்கிலம்) "பள்ளிக்கூடம்" "உண்மை ஆராய்ச்சி" என்னும் பொருள்கள்பற்றிக் கேட்போர் செவிகளும் மனங்களும் குளிரவும் இன்பசாகரத்தில் மூழ்கவும் இனிதெடுத்துரைத்தார்கள். ஆத்தாங்குடி திருவாளர் நடராஜ தேசிகரவர்கள் யாவரும் பக்திபரவசராகுமாறு தேவார திருவாசகங்களை இடை இடையே எடுத்துக்கூறியும் இன்புறுத்தவும் கலாசாலைத் தலைமையாசிரியர் எஸ். ஆழ்வாரையங்காரவர்கள் யாவர்க்கும் வந்தனோபசாரங்கூறவும், தலைவர்க்கும் சொற்பொழிவு நிகழ்த்தியவர்களுக்கும், பூமாலை புனைந்து சந்தன தாம்பூலாதிகள் வழங்கவும் இரவு எட்டரைமணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது.

---

## மதிப்புரை

### குமரன் ஆண்டுமேடல்

இஃதெமது பார்வைக்கனுப்பிய இதன் ஆசிரியருக்கு நன்றி செலுத்துகின்றேம். இதன்கண் சேர்த்திருக்கும் அறிஞர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும், உலகியற் சீர்திருத்த விளக்கப் படங்களும், நகரப் பிரபுக்களின் அறச்செயல் விளக்கப் படங்களும் கற்பார்க்கும், காண்பார்க்கும் கழிபேரின்பம் பயப்பனவாகும். இதன் விலை ரூ. 1 4

---

கிடைக்குமிடம்: குமரன் ஆபீசு, காரைக்குடி

## பிழைதிருத்தம்

௫-ஆம் சிலம்பு ௬-ஆம் பரல் ௨௨௰-வது பக்கத்திறுதி இரண்டு வரிகளை ௨௧௮-வது பக்கத்திறுதியிற் சேர்த்து வாசிக்கவும்.

2 மு. கா. மு
இராசமாணிக்கம்
யாகசாலை
10. 7. 27

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எாச ஆனித் திங்கள் 1927ஆம் ஜூன்மீ—ஜூலைமீ | பரல் கா |


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## திருவிசைப்பாச் செய்யுள் விளக்கம்

[திரு. J. M. நல்லசாமிப்பிள்ளை யவர்கள் B. A., B. L.,]

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரவென் கண் குளிர்ந் தனவே.

என்னுஞ் சேந்தனர் திருவிசைப்பாவிற்குக் காலஞ்சென்ற J. M. நல்லசாமிப்பிள்ளை அவர்கள் B. A., B. L., எழுதிவைத்திருந்த குறிப்புக்கள்:—

கற்றவர்:—

கற்றவர் இருவகை ஆவர். ஒருவகையினர் சகல கலைகளை யெல்லாம் கற்றும் தத்துவங்களையெல்லா முணர்ந்தும் யாம் எல்லா ஞானங்களேயும் பெற்றேமென்று அகந்தைமேலிட்டுப் பாசபசு ஞானமே முதிர்ந்து தம்மைவிட வேறு பதிப்பொருள் இல்லையென்று அகங்கரித்து நிற்போர். இன்னும் இவர்கள் உற விரைாகவே பதிநூல்களை யோதியும் உணர்ந்தும், தம்மை யுடையார் தம்முடைமையென அடங்காது நானறிந்தேன் என அகங்கரித்து நிற்கு மிவர்களேயுஞ் சேர்க்கவேண்டும்.

இன்னொருவகையினர், பலகலை வேதாகமங்களை ஓதி, முப் பொருளையும் பகுத்தறிந்து சிவம் ஒன்றே யுள்ளது மற்றவை யெல்லாம் ஒழிக்கத் தக்கவையென சரியையாதி நாற்பாதங்க ளிற் புகுந்து அரன் அருளே கண்ணாகக் கண்டு அன்பே சிவ மாய் அமர்ந்திருப்பவர். இவ் வகையினரையே இங்குக் கற்ற வர் என்றது.

மேற்கோள்:—

"எவன் அதை அறிந்தேனல்லை என்கிறானோ
அவனால் அதை அறியப்பட்டது. எவன்
அதை அறிந்தேன் என்பானோ அவனால் அதை
அறியப்படாது." (கேனோபநிஷத் III. ௨-௯.)

விழுங்குங்கனி:—

கனி இனிமைப்பொருளை யுணர்த்தி, அமிர்தம், அமுது, ஆனந்தம், சிவானந்தம், சிவானுபவம் என்பவற்றைக் குறித்து நிற்கிறது. விழுங்கும் என்னும் சொல் அந்தச் சிவானுபவத்தை எவ்விதம் நுகர்வதென்னும் பரமரகசியத்தைக் குறிப்பிக்கின்றது. விழுங்குதல் வாயினால் உட்கொள்ளுதல். தீங்கனியை அருந்தினால் நாவுக்குச் சுவையூறி இன்பம் பிறக்கும். நாவானது கரணங் களில் கீழ் நின்றது. மெய்யினால் காதலித்த ஒன்றைப் பரிசிக்க இன்பம் ஊறும். இவைகளுக்குமேல் நின்ற கரணங்கள் மூக்கும், கண்ணும், செவியும் (கண்ணாரமுதம் செவிக்கமுது) இவைகளா லும் ஆனந்தம் நுகரப்படும். கண்ணும் செவியும் நுண்மையான அறிவை அறியும் கரணங்கள். இவைகளால் எல்லா உலகப் பொருள்களின் இயல்பையும் ஒளியையும் அழகையும் அவை களில் தங்கி நிற்கும் இறைவனுடைய அற்புத அறிவையும்

செயலையும் அறியலாம். ஆகையால் இவைகளால் அடையும் ஆனந்தம் அறிவானந்தம். இவ்வைந்து பேரறிவும் ஒருங்கே இயைந்து ஒரு கரணத்தாலே நுகரும் ஆனந்தம் இன்னும் அதிகமாகும். இதனினும் அதிகம் அகக் கரணங்களால் அடையும் அனுபவம்.

"முகத்துக் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"

இவ்விதம் நுகரப்படும் பொருள் உலகமயமோ மனோமயமோ எல்லாம் புறப்பொருள் சுட்டுப்பொருள் மாயை அல்லது அசத்தினின்றும் தோன்றியது. நுகர்பவன் சீவன். இனிமை பயப்பதாகிய புறப்பொருளை அறிந்து இச்சித்து அதனில் ஆசைப்படுகிறான். நுகரும்போது இன்பம் ஊறுகின்றது. ஆசையில்லாவிடின் எவ்விதத் தேனைப்பாலைத் திங்கரும்பை நுகரினும் "கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததாகும்." அவன் மனம் அந்த இரதத்தின்மேல் பதியவேண்டும். பதிந்ததும் அவ்விரதமேயாய் விடுகிறான். ஐந்துபேரறிவுங் கண்களேயாக ஒரு உலக அற்புதக் காட்சியைப் பார்க்கும்போது அக்காட்சியில் உயிர் அழுந்தி அதன் மயமாய் விடுகின்றது. அதுவாய் விடுகின்றது. தானெனத் தோன்றாது* அதனோடு ஒன்றுகின்றது. இது தான் உயிர் உடலோடு ஒன்றாய் நின்ற அத்துவித நிலை. ஓ! ஓ! என்ன அற்புதக்காட்சி! என்ன இங்கிதமான இசை! என்று சொன்ன மாத்திரை ஆனந்தம் இழந்து வேறாகிறான். நித்திரையிற் சுகம் அநுபவிக்கும் நேரம் விழிக்காத முன்னர் நான் சுகமாய் நித்திரை செய்தேன் என்றது வாய்ச்சொல். தான் அனுபவித்த மட்டும் சுவானுபவம். பொருள் இவனை ஈர்த்து அதன் மயமாய் நிற்கும்போது தான் வேறிலாது அதன் அனுபவமென்றே சொல்லவேண்டும்.

எவ்விதம் தானில்லாத நிலையில்லாத அசத்துப் பொருளை இச்சித்து அதன் மயமாய்ப் பந்தப் படுகிறானோ அதுபோல்

"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ"

---

*யான்படித்த ஆங்கிலேய நாவல் ஒன்றில் ஆகாயக் கப்பலில் ஏறி வட ஆபிரிக்கா தேசத்தில் இதுவரை யாரும் ஏறிப் பார்த்திராத ஒரு மலைச் சிகரத்தை யடைந்து அதன்கீழ்க் கிடக்கும் சாரலின் அற்புதத்தைக் கண்ணுற்றபோது அவர் எழுதுவது "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள" என்னுந் திவ்விய கவியையே மொழி பெயர்த்தாற்போற் காணப்படுகின்றது. "பராக்கற ஆனந்தத் தேனைப் பருகார்" என்றார் திருமூல நாயனாரும்.

"பெற்ற சிற்றின்பமே பேரின்பமா மங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முனையாது மாயை யென்றுந்தீபற"

தானல்லாத நிலைபேறிலாத சத்தாகிய சிவத்தை இச்சித்து "ஊன் கெட்டுயிர் கெட்டுணர்வு கெட்டுஎன் உள்ளமும்போய் நான்கெட்டு" நின்ற காலம், நம்முயிர்க்கு அவன் ஆரமுதாய் நின்ற காலம். சிவன் இன்னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்கினேன் என நின்ற காலம். நாம் அவனை விழுங்கியது சீவனுடைய சிவானுபவம்.

"நெக்குநெக் குள்ளுருகி யுருகிநின்று மிருந்துங் கிடந்து மெழுந்தும்
நக்கு மழுதுந் தொழுதும் வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்து நவிற்றிச்
செக்கர் போலுந்திரு மேனிதிகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்கு"

நின்ற காலம் நம்மைச் சிவன் விழுங்கிக் கொண்டகாலம். எனக்குள் அவனிருப்பது யான் விழுங்குங் கற்பகக்கனி. அவனுள்ளே யானிருப்பது அவன் விழுங்கியது. யானாகிய என்னை விழுங்கி வெறுந்தானாய் நிலைநின்றது தற்பரமாய் நின்ற சிவானுபவம். இவ்விரு அனுபவமும் ஒன்றேயாயினும், சமநிலையின் பேதத்தை நுண்மையாக உய்த்துணர்க.

"உடையாளுன்ற னடுவிருக்கு முடையாணடுவு ணீயிருத்தி
அடியேனடுவு ளிருவீரு மிருப்பதானால்"

என்னுந் திருவாக்கில் விளங்கும் இந்தப் பரம இரகசியத்தைத் திருமூல நாயனார்,

"சத்தனருள் தரிற் சத்தி யருளுண்டாம்
சத்தியருள் தரிற் சத்த னருளுண்டாம்
சத்தி சிவமா யிரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியு மெண்சித்தித் தன்மையு மாமே"

"சத்தி சிவஞானந் தன்னில் தலைப்பட்டு
சத்திய ஞான ஆனந்தத்திற் சார்தலே"

என்னுந் திருமந்திரங்களில் விளக்கி வைத்தார். "இவ்வத்துவித அனுபவத்தை அனந்த மறை இன்ன மின்னம் அறியே மென்னும்" எனப் பெரியாரும் பணித்தார்.

மாணிக்க மலை:—

அயனும் மாலும் தேடியுமறியா 'அழற்பெருஞ்சோதி- மாணிக்கமும் மரகதமும் சார்ந்ததைத் தம் வண்ணமாக்கும்

தன்மையன. வயிரம், பளிங்கு சார்ந்ததன்வண்ணமாகும் தன்மையன. இறைவனுக்கும் உயிருக்கும் முறையே உவமான மாயின.

"சுத்தமார்பளிங்கின் பெருமலையுடனே சுடர்மரகதம் அடுத்தாற்போல்
அத்தனுருமையோ டின்புறுகின்ற ஆலவாயாவது மிதுவே"

என்னுந் தேவார அடிகளையும் நோக்குக.

மனமணி விளக்கு:—

பின்னுவார் சடையான் றன்னைப் பிதற்றிலாப் பேதைமார்கள்
துன்னுவார் நரகந் தன்னுட் டொல்வினை தீரவேண்டின்
மன்னுவான் மறைகளோதி மனத்தினுள் விளக்கொன் றேற்றி
உன்னுவார் உள்ளத் துள்ளான் ஒற்றியூருடையகோவே.

என்னுந் தேவாரத்தை நோக்குக.

கோற்றவன்:—

ஓங்காரத்தின் உள்பொருளாயிருப்பவன். ஓங்காரம் மந்திர ராஜம். இவன் ராஜன்.

கண்டு கண்டு உள்ளங்குளிர என் கண் குளிர்ந்தனவே:—

முதற் குறிப்பிற் காட்டிய அத்துவித அனுபவம் தனக்குப் பேறுகக் கிடைத்த தென்பார் சேந்தனர். ஒருவன் கடும் வெய்யிலில் நெடுந்தூரஞ் சென்று வெப்பினுற் களைத்து, தாகத்தி னுல் நாவறண்டு, முகங்கருகி, கண் எரிந்து வருந்தும் சமயம், வண்டுகள் ஆரும் வெண்டாமரை மலரும் பொய்கையின் கரை யில் இளந்தளிர் அடர்ந்து நெருங்கி நிழலைத்தரும் ஓங்கிய ஆல மரம் ஒன்றை எதிர்த்து அதன் நீழலை அடைந்து இளந்தென்றல் வீசவும் தன்னயர்வும் தாகமும் தீர, தன்னுடலும் உள்ளமும் குளிர, சுகத்தை அடைந்து நிற்கும் அவசரத்தையே சான்ருக, "கண்டு கண்டு உள்ளங்குளிர என் கண் குளிர்ந்தனவே" என் ருர். இவ்வனுபவத்தைப் பேர்போன தத்துவ சாஸ்திரியான பேய்ன் பண்டிதர் (Dr. Bain) சுத்தஞேய பதார்த்த விஷய அனுபவமென்பார் (Pure objective consciousness). ஆயி னும் ஆங்கு உயிர் (ஞாதா) இல்லையேல், அனுபவமின்ருகும். ஆனல் உயிர் விஷயத்தோடு ஒன்றி (ஆணவத்தோடு அத்துவித மாகி) தன்னறிவு கெட, அனுபவ மொன்றினுக்கே உரித்தாகி நிற்கின்றது. இவ்விதமே நம் கரணங்களெல்லாம் சிவ கரணத் தில் அழுந்திச் சிவ கரணங்களாகி நின்ற நிலையும் சுவானுபவம் சிவானுபவமாய் நின்ற நிலை இறைவன் "அடி நீழல்" என்று

அடிக்கடி எடுத்தோதுவதெல்லாம் இக்கருத்தை விளக்கச் செய்வதற்கே.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை இணையடி நீழலே"

செற்றவர் புரங்கள் செற்ற வேஞ்சிவனை:—

இது திரிபுர சங்காரத்தைக் குறிப்பித்தது. இச் சம்பவம் ஆதியில் இருக்கு வேதத்திலே "அக்நே புரோ ரோர் ஜிதே" (அக்கினி * புரங்களை அழித்தது) என்னும் மந்திரத்தினால் குறிப்பிடப்பட்டு, யஜுர் வேதம், 6-ம் காண்டம், 2-ம் பிரஸ்னம். 3-ம் அனுவாதம், 12-ம் மந்திரத்தில் பின்வருமாறு விவரிக்கப் பட்டிருக்கிறது.

மூன்று அசுரர்களுக் குரித்தாகிய, இரும்பு, வெள்ளி, பொன்னாலாகிய மூன்று பெரிய புரங்களிருந்தன. தேவர்கள் அப்புரங்களை நேரே ஜெயிக்க முடியாமல், முற்றுகை போட்டு ஜெயிக்க எண்ணினார்கள். "அந்தணரும், அந்தணரல்லாதாரும் நேரே ஜெயிக்க முடியாதவற்றை முற்றுகை போட்டு பிடிக்க வேண்டும்" என்று பெரியோர் சொல்லுகிறார்கள். பின்னர், தேவர்கள் அக்கினியை அநீகமாகவும், சோமனை சல்விடமாகவும், விண்டுவை தேஜனமாகவும் ஒரு அம்பை உண்டாக்கி, இந்த அம்பை யார் விடுப்பதென யோசனை செய்து ருத்ரனே அருகனென்றார்கள். ருத்ரனும் பசு தனக்கு உரித்தாகி விட்டதென்றான். பசுக்களுக்கெல்லாம் "அக்நியே ருத்ரன்" என்ற இருக்கு மந்திரத்தினால் புரங்களை எரித்தவன் ருத்ரனே என்பது தேற்றம். பசுக்களுக்கெல்லாம் பதி நானே. அப்படியே அம்பை விடுத்து ருத்திரன் மூன்று புரங்களையும் செற்று இந்த உலகங்களினின்றும் துகளாக்கினர். இதிகாச புராணங்களில் பின் வருமாறு காணப்படுகிறது*:—

மூன்று அசுரர்கள் தங்கள் தபோ வலிமையால் மூன்று கோட்டைகளைப்பெற்று அவைகள் மூலமாய்ச் சராசரங்கட்கும், தேவர்கட்கும் முனிவர்கட்கும் மனிதர்கட்கும், பொறுக்க முடியாத துன்பங்களைச் செய்வாராயினர்.

---

* புராணச் சரிதையில், வைதிக கதையின் இரகசியார்த்தத்தை விளக்கச் சில சில விஷயங்களை விரித்தும் சிலவற்றை வேறு படுத்தியும் உள்ளது. புராணங்களில் சிவபெருமான் அம்பை விடுத்ததாகக் கூறப் படவில்லை. வேதத்தில் விடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது.

"ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புர முந்தீபற
ஒன்றும் பெருமிகை யுந்தீபற"

"தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முரிந்த தென்றுந்தீபற
அழிந்தன முப்புர முந்தீபற"

"தச்சு விடுத்தல்" என்பனு "நம் பற்றுக்களை நீத்தல்" என்றும் "அடியிட்டல்", சற்குரு தரிசனமாதல் என்றும் அச்சு முரிதல் முப்புர மழிதல், பசு பாசங்களினின்றும் நீங்குதல் என்றும் பொருள் படுதலும் உய்த்துணரற்பாலன. தேவர்கள் ஒருங்கு கூடிப் பரம் பொருளாகிய பரமசிவனிடஞ் சென்று, தொழுது, இறைஞ்சித் தங்களைக் காத்தருளும்படி ஏத்தினர். தன் பெருமை தானறியாப் பரமனும் அவர்களெல்லாம் ஒன்று கூடி உழைப்பதானல் தாம் அசுரர்களை அழிப்பதாக வாக்களித்தார். பின்னர் தேவர்கள் ஒன்று கூடி ஒரு பெருந்தேரை நிறுவினர். அத்தேரின் ஒவ்வொரு பாகமும் ஒவ்வொரு தேவராக ஏற்பட்டனர். விண்ணும் மண்ணும் அத்தேரின்மேல்; தட்டும் கீழ்த் தட்டும் ஆயின. சூரியனும் சந்திரனும் அதன் சக்கரங்களாக அமைக்கப்பட்டனர். நான்கு வேதங்களும் நான்கு குதிரைகளாயின. அவ்வேதங்களின் தலைவன் சாரதியாயினன். மகா மேருவும் வாசுகியும் வில்லும் நாணுமாயின. அம்பின் நடுப்பாகமாகிய இரும்பு விஷ்ணுவாயும், சிறகுகள் வாயுவாயும் அதன் முனை அக்கினியாயும் அமைந்தார்கள். இறைவன் அம்பை எடுத்துத் தேரில் அடிவைத்த சமயம் அசுரர்கள் இவ் வற்புதக் காட்சியைப் பார்க்க ஒரு மனத்தராய்க் கூடினார்கள். அந்தோ அவ்வமயம் தேவர்கள் "நாம் ஏன் பரமன் உதவியைத் தேடினோம். நாம் இல்லாவிடில் அவர் என்ன செய்வர்" என்று அகந்தை கொண்டார்கள். இறைவன் சிரித்தான்; எரித்தான். தேரின் அச்சு முரிந்தது. ஆழ்ந்தது. முப்புரம் அழிந்தது. அசுரர்கள் இறைவன் சந்நிதானத்தில் நின்றார்கள். நொருங்குண்ட தேவர்கள் வீழ்ந்தெழுந்து நாங்களெல்லாம் பசுக்கள் நீரே பதி எனத் தோத்திரஞ் செய்தனர். அன்று முதல் பரமன் திரிபுராந்தகன் என்றும் பசுபதி என்றும் அழைக்கப் பட்டான். வால்மீகி இராமாயணத்தில் ஒரே சுலோகத்தில் நம் பரமசிவனைத் திரிபுராந்தகன் என்றும் பசுபதி யென்றும் கூறப்பெற்றுள்ளது கருதற்பாலது.

மேலிக்கதையின் உட்பொருளை ஆராய்வாம். கூறப்போகும் பொருள் யுக்திக்கியைந்த கற்பனையன்று. திருமூல நாயனர் பின்வருமாறு அதன் உட்பொருளைக் குறிப்பித்துள்ளார்.

"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே"

இங்குச் சூசிப்பித்துள்ளது முப்புரமாவது மும்மல காரியம் என்பது தான். இதை வைத்துக்கொண்டு கதையை விளக்க லானேன். மும்மல காரியமாவது ஆன்மாவின் தேகம். புருஷ சூக்தத்திலும், சாந்தோக்கியம் முதலிய உபநிடதங்களிலும் புரம் என்பதற்குத் தேகம் என்றே பொருள் காணப்பட்டிருக் கின்றது. தமிழ் அகராதியிலும் இப்பொருளே காண்க. இவ்வசு ரர்கள் மலமற்ற உயிரே. ஆனால் மும்மல பந்தத்தினால் உடலை யெய்தி, வினையைச் செய்து தனக்கும் பிறர்க்கும் துன்பத்தை விளைத்து அதோகதியில் ஆழ்கின்றது. மும்மலங்கள் அற்ற வுடனே பரமன் பாதத்தை அடையலாம். "பாசங்கழன்றால் பசுவுக்கிடம் பதியாம்" இவ்விடு பேற்றை (பாசக்ஷயத்தை) அடைவதற்கு உயிர்கள் படும்பாடும் அதிகம். அநேக தேவர்க ளைக் கும்பிடுகிறார்கள். அனேக நூல்களைக் கற்கிறார்கள். அநேக விதமான தவங்களைச் செய்கின்றார்கள். ஆனால் இவ்வித முயற்சி களினால் ஒன்றுமட்டும் அழியவில்லை. அதாவது அவர்களு டைய அகங்காரமும் மமகாரமுமாகிய ஆணவம் முனைத்துக் கொண்டே யிருக்கிறது. ஞானியாய் நடிப்பவனும் "நான் எவ்வளவு பெரிய ஞானி" என்றும், கற்றவன் "நான் எவ்வளவு கற்றிருக்கிறே" னென்றும்,தவசி "நான் எவ்வளவு அகோரதவஞ் செய்துள்ளே" னென்றும் அகங்கரிக்கின்றனர். ஏழை உயிரின் இவ்வெளிய முயற்சி நமக்குச் சிரிப்புண்டாக்கும். இவ்வித ஞானத்தாலும் பக்தியினாலும் கற்பிக்கப்பட்ட இரதம் அழிவது திண்ணம். ஆயின், இவ்வற்புதக் காட்சியைக் கண்ணுறக் கூடிய போது(ஐந்து பேரறிவுங் கண்களேயாக) தாம்பெற்ற வரத்தின் படி தங்கள் மூன்று கோட்டைகளுடன் ஒன்றுகூடும்போது தங் களுக்கு அழிவுவரும் என்ற அறிவை இழந்தார்கள். முப்புரம் ஒன்றாகியதே மும்மல பரிபாகம். அதே சமயம் தங்கள் கோட்டை நோக்காது நோக்கி நின்றது. இருவினை யொப் படைந்த சமயம் அந்தச் சமயமே சற்குரு தரிசனம் நேர்ந்தது. உடனே இறைவன் அடிசாழல் அடைந்தார்கள்; பரமன் சிரித் தான் எரித்தான். இதில் அவனுடைய அனுக்கிரகமும் நிக்ரக மும் காணப்படுகின்றன.

எரித்தது முப்புரத்தை;அசுரரைத் தன்னடியிற் சேர்த்தது. அவன் முத்தி கொடுத்தமை. இப்போர் பெரும்போர். வீடு பேற்றை அவாவினர் பரமனருளால் என்றும் தம்மை வருத்தும்

பசுபாசங்களோடு போர் புரிகின்றனர். திரிபுரசம்மாரத்தை விதந்து கூறும் மணிவாசகப் பெருமானின் திருவுந்தியாரது உள்ளக்கிடை ஞானவெற்றி என்று குறிக்கப்பட்டதை உய்த்துணரவும். இவ்வெற்றி ஒரு பார்வையில் உக்கிரமான பெரும் போரானதால் சிவபெருமானை உக்கிரமாகவும் அப்போர் நிரதிசயானந்தத்தைத் தருவதால் அவனைச் சிவம் என்றுங் கூறியுள்ளது. அப்பரம சாந்தமான இடத்தை நம்மக மாயைகளையெல்லாம் சுட்டு, மீளா வண்ணம் சாம்பராக்கி நாம் அடையும் போது அது வல்லவோ உண்மையாகிய மயானம், சுடுகாடு* மீண்டும் மீண்டும் பிறந்து உழன்று பின்னும் பின்னும் இறந்து நம்முடல் தகிக்கப்படும் சுடுகாடு சுடுகாடன்று. ஏனெனில் மீண்டும் மீண்டும் பிறக்கநேரிடுதலின்மேல் இச்சரிதை பதிபசுக்களின் தன்மையையும் பாச க்ஷயம், பதிஞானம் அடைதலையும் நன்கு விளக்கும். ஆகலின் தேவர்கள் வேதத்திலேயே தாங்கள் பசுக்களென்றும் பரமசிவத்தைப் பசுபதியென்றும் கூறுதல் மிகையாகுமோ. இதனாலன்றோ இந்த வைதிகத் தேர்விழா அவசியமாயுள்ளது. பிரம்மோத்சவம் என்றும் பேர் விளங்கியது. அத்தேரில் எல்லா தேவதைகளின் உருவங்களும் அடைந்து நான்கு குதிரைகளையும் பூட்டி, நான்கு தலையுடைய பிரமதேவனும் சாரதியாகக் காண்கின்றோம். ஊரெல்லாம் ஒன்றுகூடி மெய் வருத்தம் பாராது, வெப்ப மிகுந்த வெய்யிலை மதியாது, பசி தாகம் நோக்காது, அரகர மகாதேவா அரகர மகாதேவா என்று ஆர்ப்பரித்துத் தேரை இழுத்துச் செல்வோர்கள் தங்களை மறந்து இவ்வற்புதக் காட்சியைக் கண்கண்டு உள்ளங் குளிர்ந்த பரமசாமியார்களன்றோ? ஒரு மதத்தின் உண்மை சொரூபம் மனிதன் தன்னினின்றும் தன்னைப் பிரித்து அவன் மனம் பரம்பொருளினிடத்தே செல்லும்படி செய்வதானால் நம்முடைய அனுபவத்தில் உன்னதமான மாளிகையில் இளந் தென்றலை அதிகரிக்கும் சாந்தவிசிறியின்கீழ் உட்கார்ந்து செபம் செய்வோர்களை விடக் கடும் வெய்யிலில் இத்தேரினை இழுத்துச் செல்வோர்கள் அதிகமான அன்பையும் ஆர்வத்தையும் காட்டுகிறார்களென்று திண்ணமாய்ச் சொல்லலாம்.

இச்சரிதையிலும் இச்சரிதையை அடிக்கடி எடுத்து ஓதப்படும் திருப்பாசுரங்கள் எவற்றிலும் புரங்களைச் செற்றதாகக்

---

*இவ் வுருத்திரபூமி உலகில் காசியாகிய வாரணாசி க்ஷேத்திரத்தைக் குறிக்கும். இதில் யோகிகள் பிரமரந்திர மூலமாகச் சிவலோகத்தை அடைகிறார்கள். அதனாலே யாவரும் காசியில் உயிர்துறக்க ஆசைப்படுவது. உண்மையான வாரணாசியை அவர்கள் அடைவாரேல் இது போலவே யோகிகள் தங்கள் இருதய மத்தியிலே தகரோபாசனை புரியும் க்ஷேத்திரம் சிதம்பரமாகும்.

கூறியுள்ளதே தவிர அசுரர்களைச் செற்றதாகக் கூறப்படவில்லை மும்மலங்களுடன் கூடியிருக்கும் வரை அசுரர்கள். மும்மலம் அற்றதும் அவர்கள் பதியுடன் சேர்ந்து பதி ஆவார்கள். பசுத் துவம் உள்ளவரை பசுக்கள். ஞானத்தீயின் மூழ்கி எழும்போது நந்தி, நந்தன். நந்தி நாமம் நமச்சிவாயவே. இச்சரிதை இப்பா சுரத்தின் முற்பகுதியில் காணப்படும் உட்பொருளை எவ்வித மாய் விளக்கி யுள்ளதையும் உய்த்துணர்க. இப்பாசுரத்தின் கருத்தமைந்த பின்வரும் தேவார, திருமந்திரச் செய்யுள்களை யும் நோக்குக.

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (அப்பர் தேவாரம்)

அன்பு ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருக இராப்பக லேத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே.

ஒன்று கண்டீருல குக்கொரு தெய்வமும்
ஒன்று கண்டீருல குக்குயி ராவது
நன்றுகண் டீரினி நமச்சிவா யப்பழம்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே. (திருமந்திரம்)

---

# கழுகின் காவலன்

[திரு. R. P. சேதுப்பிள்ளையவர்கள் B.A., B.L.,]

(௨௭௧ - ம் பக்கத் தொடர்ச்சி)

கழுகரசன் ஆண்மையிற் சிறந்து விளங்கியவாறே, அருளி லும் தலை சிறந்து விளங்கினான். இலங்கை வேந்தன் சீதையைக் கவர்ந்து செல்லும் தீய செயலைக்கண்ட பறவை மன்னன் அவ் வரக்கனை மறநெறியினின்றும் விலக்கக் கருதி அவன் செவியில் அறநெறியை எடுத்தோதினான். அரக்கர் தலைவனை அருளொடு நோக்கி,'ஐய, கற்பிற் சிறந்த சீதையை விட்டுச்சென்றால் பிழைத்

தாய். இல்லையேல் நின் கிளையோடும் கெட்டாய்; நின் வாழ்வை யெல்லாம் சுட்டாய்; உலக மாதாவாகிய சீதையை நீ யாதாக நினைத்தாய்; இம்மைக்கும் மறுமைக்கும் கேடு சூழ்ந்தாய்; இம் மங்கையின் தலைவனான இராமனே உலகுக் கெல்லாம் தலைவனாவான். அவனது வில்லின் வெம்மைக்கு ஆற்றாது நீ உயிர் துறப்பாய்; இறைவன் அருளால் நீ பெற்ற வரமும் வீரமும் பயனற்றுப் பாழாகும்; ஆதலால் தேவியை விட்டு நின் ஆவியைக் காப்பாயாக என்று அரக்கன்பால் வைத்த அருளால் கழுகரசன் மொழிந்தான். ஆயினும் அரக்கன் கூறிய மாற்றத்தால், 'அவன் ஆவியற்ற போதன்றிச் சீதைபால் வைத்த ஆசையறான்' என்று அறிந்தான். இவ்வாறு அவன் மனநிலையை அறிந்த பின்னரே போர் தொடங்கிய கழுகின் காவலனது ஆண்மை அறநெறியின் பாற்படுவதாகும்.

இன்னும், மாய மானைத் தொடர்ந்து சென்ற வீரன் அம் மானை ஓர் அம்பாற் கொன்று, மீண்டும் சீதையிருந்த இடம் வந்தபோது, அங்கு அம் மங்கையைக் காணாது மயக்கமுற்றான், வீரனது மனம் மயங்கிச் சுழன்ற நிலையில்

'மண் சுழன்றது மால்வரை சுழன்றது மதியோர்
எண் சுழன்றது, சுழன்றது அவ்வெரிகடல் ஏழும்
விண் சுழன்றது வேதமும் சுழன்றது விரிஞ்சன்
கண் சுழன்றது சுழன்றது கதிரொடு மதியும்'

என்று கவி கூறியவாறு மண்ணும் விண்ணும் சுழன்றது; மலையும் கடலும் சுழன்றது; மறையோர் எண்ணமும் மறைப்பொருளும் சுழன்றது. இவ்வாறு உலகெலாம் சுழன்று வருந்தியது. அப்பால் வீரன் அருஞ் சீற்றம் கொண்டு தம்பியோடு திருமகளைத் தேடும் தொழிலை மேற்கொண்டான். சிறிது வழிச்செல்லவும், வீணைக்கொடியும் வெஞ்சிலையும் விழுந்து கிடக்கக்கண்டான்; பின்னும் அவ்வழியே செல்லும் பொழுது நெடும் சூலமும் பெருங்கவசமும், சிதைந்துகிடக்கக்கண்டான். பின்னும் சென்ற போது, குருதி வெள்ளத்தினிடையே மலைபோல விளங்கிய பறவை மன்னனைக் கண்டான். அம் மன்னனது வெள்ளிய திருமேனியில் அஞ்சனமலைபோல் விழுந்தழுதான். மைந்தன் மயங்குவதைக்கண்டு மனம்பொறாத கழுகின்மன்னன், அங்கு நிகழ்ந்த செயல்களை யெல்லாம் முறையாக எடுத்துரைத்தான். இரக்கமற்ற அரக்கன் வஞ்சனையால் திருமங்கையையும் கவர்ந்து கொண்டு, தந்தையையும் மாய்த்தான் என்றறிந்தபோது, வீரன் அளவிறந்த சீற்றம் கொண்டு வானக்கதிர்களை அழிக்கவும்,

பஞ்ச பூதங்களை ஒழிக்கவும், விண்ணையும் மண்ணையும் ஒருங்கே வீழ்த்தவும், எண்ணினான். வீரனது வெம்மையைக் கண்ட இளவலும் அஞ்சி நடுங்கினான். இவ்வாறு தன்னைக் காணாது தலைவன் சீற்றம் கொள்வான் என்பதைச் சிறையிருந்த சீதை அறிந்து அருளால் அஞ்சும் தன்மையை,

"வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சுமென்று
அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்றரோ"

என்று வஞ்சனை இழைத்த வெஞ்சின அரக்கனை நோக்கிக் கூறும் மொழிகளால் காணலாம்.

இவ்வாறு விண்ணையும், மண்ணையும் அழிப்பதாக வீரன் வெகுண்டு நின்றபோது கழுகின் காவலன் உலகின்மேல் வைத்த கருணையால் ஐயனை அருளொடு நோக்கி 'மைந்தனே, அரக்கன் இயற்றிய தீமைக்கு அமரரும் முனிவரும் என் செய்வர்; அவ ரனைவரும் அரக்கனுக்கு அஞ்சி அடிமைகளாய் ஏவல் செய்பவ ரல்லரோ; மற்றும் மண்ணிலும் விண்ணிலுமுள்ள மாதவரும் நல் லோரும் இலங்கை வேந்தனது வலிமையால் நலிந்து வருந்துபவ ரல்லரோ? என்று இனிதாக எடுத்துரைத்து, இராமனது கடுஞ் சினத்தை ஒருவாறு தணித்தான். இன்னும் ஏதிலார் குற்றம் போல் தன் குற்றம் காணாத இராம வீரனை நோக்கி,

"வம்பிழை கொங்கைவஞ்சி வனத்திடைத் தமியள்வைகக்
கொம்பிழைமானின் பின்போய்க் குலப்பழி கூட்டிக் கொண்டீர்
அம்பிழை வரிவிற் செங்கை ஐயன்மீர் ஆயுங்காலை
உம்பிழை எனபதல்லால் உலகம் செய்பிழையும் உண்டோ"

என்று ஒரு தாதை தனயனுக்குச் சொல்லும் அன்பளாவிய முறையில் பறவை மன்னன் வீரனது பிழையை எடுத்துரைத்தான். 'ஐயனே இளமையும் மென்மையும் பொருந்திய மங் கையை வனத்தில் தனிமையாய்விட்டுப் பொன்மானைப் பின் தொடர்ந்து சென்று நமது மறுவற்ற மரபிற்கு என்று மழி யாப் பழியை அளித்தாய்'; இவ்வாறு நீ செய்த பிழையை உண ராது உலகம் செய்த பிழையை நோக்கிப் பிழை யுறுகின்றாய்' என்று அன்பொடளாவிய மொழிகளால் வீரனது சீற்றத்தை அறவே மாற்றினான். இவ்வாறு சீற்றம் மாற்றிய தன்மையை

'புயல்நிற வண்ணன் ஆண்டு அப்புண்ணியன் புகன்ற சொல்லை
தயரதன் பணியிதென்னச் சிந்தையில் தழுவி நின்றான்
அயல் இனி முனிவதென்னே அரக்கரை வருக்கம் தீர்க்கும்
செயல் இனிச் செயல் என்றெண்ணிக் கண்ணிய சீற்றம் தீர்ந்தான்'

என்று கம்பர் பெருமான் இனிதாக எடுத்துரைக்கின்றார். ஆகவே தன் குற்றம் உணராது பிறர் குற்றம் நினைந்து சீற்றம் கொண்ட பெருமானது அருஞ்சினத்தை அருள் நிறைந்த பொருளுரையால் மாற்றி உலகினை அழியாது காத்த பெருமை பறவைமன்னனுக்கே உரியதாகும்.

இத்தகைய கனிந்த மனம் வாய்ந்த கழுகின் மன்னனை இராமன் தந்தையாகவே போற்றி எக்காலும் அவனது அன்பையும் அருளையும் நினைந்து நெஞ்சம் குழைவதைக் காண்கின்றோம். மேகநாதனது படைவலியால் தன் தம்பியும் துணைவரும் போர்க்களத்தில் மயங்கி மாய்ந்து கிடப்பதைக் கண்ட வீரன்,

"தாதையை இழந்தபின் சடாயு இற்றபின்
காதலின் துணைவரும் முடியக் காத்துழல்
கோதறு தம்பியும் விளியக் கோளிலன்
சீதையை உகந்துளன் என்பர் சீரியோர்"

என்று கூறும் மொழிகளில் அப்பெருமான் பறவை மன்னன்பால் வைத்திருந்த அன்பின் திறம் ஒருவாறு அறியப்படும். தசரத மன்னனும், பறவை மன்னனும் தனக்காக உயிரிழந்தாரென்பதை அறிந்தும், தம்பியும் துணைவரும் தனக்காக உயிர் கொடுத்தார் என்பதை உணர்ந்தும், சீதையை விரும்பி இன்னும் உயிர்வாழ்ந்திருக்கின்றேன் என்று பெரியார் என்னைப் பழியாரோ என்று இராமன் வருந்திக் கூறும் மொழிகளில் அவனது மனப்பான்மை விளங்கக் காணலாம். பின்னும் மேகநாதன் சீதையை வாளால் எறிந்து கொன்றான் என்று மாருதியின் வாயிலாக உணர்ந்த இராமவீரன் தன் விதியை நொந்து,

"தாதைக்கும் சடாயுவான தந்தைக்கும் தமியளான
சீதைக்கும் கூற்றம்காட்டித் தவிர்ந்திலது ஒருவன்தீமை"

என்று வருந்தி யுரைக்கும் மொழிகளாலும் அப் பெருமானது மனப்பான்மை நன்கு விளங்குகின்றது. தனக்காக அரக்கனுடன் போர்செய்து ஆவி துறந்த பறவை மன்னன்பால் இறவாத அன்பு செலுத்தியதோடு, அம் முதியோனை இரக்கமின்றிக் கொன்ற அரக்கன்பால் அளவிறந்த சீற்றமும் கொண்டிருந்தான். இம் மனப்பான்மையை இலக்குவன் இனிதறிந்திருந்

தான் என்பது நன்குணரப் படுகின்றது. சிறையிருந்த சீதையைத் தேடியறிந்து, சேதுபந்தனம் செய்து இலங்கைமாநகரம் எய்திய பின்னும் அறநெறி விலகாத ஆரியவீரன், அமர் தொடங்கு முன், 'அரக்கர்கோன் சீதையை விடுகின்றானோ அன்றி அரும்போர் புரிந்து ஆவியை விடுகின்றானோ' என்று அறிந்து வருமாறு பின்னும் ஒருமுறை தூதுபோக்கக் கருதினன். அப்போது அரக்கனது கொடுமையினும், அண்ணலது அருளைக் கண்டு அஞ்சிய இலக்குவன் இலங்கைவேந்தன் இழைத்த தீமைகளை ஒன்றன்பின் ஒன்றாய் எடுத்துரைத்து, இராம வீரனது உள்ளத்தில் சீற்றத்தை எழுப்பி, அருளை அகற்றக் கருதினன். அன்பே உருவாயமைந்த அப்பெருமானை நோக்கி, "ஐயனே, இவ்வரக்கன் தேவியைச் சிறையில் வைத்தான். தேவருக்கு இடுக்கண் செய்தான். நல்லோரை எல்லாம் நலியச் செய்தான்" என்று நினைவூட்டியும் அரக்கன்பால் வைத்த இரக்கம் மாறாமை கண்டு, தந்தையாய கழுகின் காவலனுக்கு அவன் இழைத்த தீங்கை எடுத்துரைப்பின் சீற்றம் கொள்வான் என்றெண்ணி 'ஐயனே உன் மனைவியை மாயத்தால் கவர்ந்து மயங்க வைத்தான். அவ்வேழைபால் இரக்கம் கொண்டு விடுவிக்கப் போந்த தந்தையையும் தயையின்றிக் கொன்றான்' என்று உருக்கமாகக் கூறினன்.

"வாழியாய் நின்னை அன்று வரப்பறு துயரின் வைகச்
சூழ்விலா மாயம் செய்து உன்தேவியைப் பிரிவு சூழ்ந்தான்
ஏழைபால் இரக்கம் நோக்கி ஒருதனி இகல்மேற் சென்ற
ஊழிகாண் கிற்கும் வாழ்நாள் உந்தையை உயிர் உண்டான்"

என்று இலக்குவன் இயம்பினன். துணையின்றித் துயரில் அழுந்திய சிந்தையாய ஏழைக்கு இரங்கி, அம் மங்கையைக் காக்கச் சென்ற கழுகரசனை முதியோன் என்றும் கருதாது இரக்கமற்ற அரக்கன் கொன்றான் என்று இலங்கை வேந்தன்பால் சீற்றம் விளைக்கும் சொற்களை இலக்குவன் மொழிந்தான். கழுகின் காவலனிடம் இராமன் கனிந்த அன்புடையனாய் விளங்கினான் என்னும் உண்மைக்கு இலக்குவனது உரையும் இசைந்த சான்றாகும்.

தம்மை மகன்மை கொண்ட கழுகின் காவலன் இறந்தபோது இராமனும் தம்பியும் ஆற்றொணாத் துயரடைந்து, அவ்வரசனுக்குரிய ஈமக் கடன்களைத் தேவரும் மருளுமாறு ஆற்றினார்கள். மறைகளும் காணாத வீரனது மலர்க் கரங்களால் அறநெறி திறம்பாது வாழ்ந்து ஆவி துறந்த அரசன் எரியில் ஏறும் பெருமை பெற்றான். கருணை நிறைந்த கழுகின் காவலன் மண்

ணுலகை நீத்து விண்ணுலகிற்கும் மேலாய வீடு பெற்றபோது, இயற்கையும் கண்ணீர் சொரிந்து கலங்கித் தொழுது நின்றது.'

"வீடுஅவன் எய்தும் வேலை விரிஞ்சனேமுதல மேலோர்
ஆடவர்க் கரசனோடு தம்பியும் அழுது சோரக்
காடமர் மரமும் மாவும் கற்களும் கரைந்து சாய்ந்த
சேடரும் பாரினோர்க்கும் கரம்சிரம் சேர்ந்தவன்றே"

என்று கம்பர் பெருமான் கூறும் மொழிகளால் இவ்வுண்மை உணரப்படும். இராமன் தன் இருகரங்களாலும் தந்தையின் மேனியைத் தாங்கி, ஈமத்தின் மீதேற்றி, சாந்தொடு மலரும் நீரும் சொரிந்து, காந்தெரி மூட்டிக் கடன்முறை வழுவா வண்ணம் நீர்க்கடம், செய்து முடித்தான். இவ்வாறு ஆதி மன்னனுய தசரதனும் அடையாத பெருமையை, பறவை மன்னன் அடைந்து வீடு பெற்றான் என்றால், அவனது செம்மையைச் சொல்வது எளிதாமோ.

இலங்கை வேந்தன் சீதையை எடுத்துச்செல்வதை, முதன் முதல் கண்டு வீரனிடம் உரைத்தவன் கழுகின் மன்னனே யாவான், சீதையின்மேனி தீண்டாது அவளிருந்த இடத்தை யகழ்ந்து எடுத்து இராவணன் கொண்டு சென்றான் என்னும் கருத்தைக் கழுகின் மன்னன் வாயிலாகக்கம்பர் எடுத்துரைக்கும் நயம் கற்றோர் மனத்தைக் கவர்வதாகும். வடமொழியில் இராம கதை எழுதிய வான்மிக முனிவர் சீதையை அரக்கன் தன் கைகளால் தீண்டி எடுத்துச் சென்றான் என்று எழுதிப் போந்தார். அவ்வாறு, அரக்கன் திருமகள் மேனி தீண்டுதல் கற்பியலோடு முரணும் என்று கருதிய கம்பர் அவ்வரலாற்றை மாற்றிச் சீதையை மண்ணொடும் கொண்டு போனான் என்று முந்நூலொடு மாறுபட்டுரைத்தார். தமிழ் நாட்டின் செம்மைசான்ற கற்புநெறிக் கேற்றவாறு சீதையின் கதையை அமைக்கக் கருதியே இவ்வாறு கம்பர் மாற்றியுரைத்தா ரென்பது அறிஞர் கருத்தாகும். இக்கருத்தை மிகுந்த கவனத்தோடு சிறிதும் மாறுபடாமல் கம்பர் ஆங்காங்கு அமைத்துச் சொல்லும் அழகினை அறிவது நயந்தெரி புலவர்க்கு நல்விருந்தாகும். ஒரு பொருளின் உண்மையை ஆராயும் பொழுது பலவகைச் சான்றுகளால் அது தேறப்படுமாயினும் கண்ணினால் கண்ட சான்றே பிறசான்றுகளினும் சிறந்ததென்று அறநூலறிந்தோர் கூறுவர். இம்முறையில் சீதை இராமனைப் பிரிந்தபின்பு அம்மங்கையை முதன்முதல் கண்டவன் பறவை மன்னனே யாவான். சீதையை இலங்கை வேந்தன் எவ்வாறு கொண்டு சென்றான் என்பதை

அறிதற்கு அம்மன்னன் வாய்மொழியே தலை சிறந்த சான்றாகும். அன்றியும் சீதையை இலங்கைக்குக் கொண்டு செல்லும் வழியில் கழுகின் காவலனேயன்றி வேறு எவரும் கண்டிலர். ஆகவே இப்பறவை மன்னனது சான்று இருவகையில் சிறந்ததாய் இலங்குகின்றது. சீதையின் கோலத்தை முதன்முதல் கண்ட முறையிலும் இலங்கைமாநகர் அடைவதற்கு முன்னமே இடைவழியில் அம்மங்கையின் நிலையைக்கண்ட முறையிலும் கழுகின் மன்னனது சான்று மற்றைய சான்றினும் சிறந்ததாகும். இதனை அறிந்தே,

"வடுக்கண்வார் கூந்தலாளை இராவணன் மண்ணினோடும்
எடுத்தனன் ஏகுவானை எதிர்ந்தனெ னாற்றல் கொண்டு
தடுத்தனன் ஆவதெல்லாம் தவத்து அரன் தந்தவாளால்
படுத்தனன் இங்கு வீழ்ந்தேன் இதுஇன்று பட்டதென்றான்"

என்று கழுகின் வாயிலாகக் கவி கூறுகின்றார்.

இதற்கப்பால் அசோகவனத்தில் சிறையிருந்த சீதையின் கோலத்தைத் தன் கண்களால் கண்ட மாருதி

"வேலையுள் இலங்கைஎன்றும் விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக் கற்பச்
சோலையங் கதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள்ஐய தவம்செய்த தவமாம் தையல்"

என்று இராமனிடம் எடுத்துரைக்கும் முறையால் முன் பறவை மன்னன் கூறிய கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

இராமனது கதையைக் கல்வியிற் பெரியராய கம்பர் ஓர் அரிய நாடகமாகவே அமைத்துள்ளார் என்பது அறிஞர் கருத்தாகும். காவியச் சுவையோடு நாடகச் சுவையும் நன்கு விளங்குதலால் கம்பரது காவியத்தைக் கம்பநாடகம் என்று கருதுவாரும் உளர். நாடகத்தின் நல்லியல்கள் பலவாய் அமைந்து விளங்குகின்றன வாயினும் பறவை மன்னனது வரலாற்றினின்றும் ஒருசான்று தருவது பொருத்தமுடையதாகும். குற்றுயிராய்க் கிடந்த கழுகின் காவலன் இராமனைக் கண்டு அவனிடம் நிகழ்ந்த செயல்களை முறையாகக் கூறினான் என்பதை முன்னரே கண்டோம். இலங்கை வேந்தனது நகரம் எங்குள்ளதென்றும் அவன் வாழும் வலிமையும் எத்தகையவென்றும் கழுகரசன் நன்றாய் அறிந்திருந்தான். ஆயினும் அவ்வரக்கனது நகரம் எங்கே உள்ளது என்று இராமன் வினவியபோது அதற்கு மாற்றம் உரைக்கப்போந்த வேளையில் கழுகின் மன்னன் உயிர்

துறந்தான் என்று கதை கூறுகின்றது. இவ்வாறு இன்றியமை யாத செய்தி கூறுவதன்முன்னம் கழுகின்வேந்தன் இறந்தான் என்பது,

"எவ்வழி யேகியுற்ருன் யாண்டையான் உறையுள்யாது
செவ்வியோய் கூறுகென்னச் செப்புவா னுற்றசெவ்வி
வெவ்வியல் விதியின்கோட்பால் வீடினன் கழுகின்வேந்தன்
எவ்விய வரிவிற்செங்கை இருவரும் இடரின்வீழ்ந்தார்"

என்னும் அநுமனது மொழிகளால் இனிதறியப்படும். இலங் கைமாநகரின் வரலாற்றை யெல்லாம் கழுகின் காவலன் வாயி லாக இராமன் அறிவானேயாகில் பின் அருக்கன் மைந்தனைத் துணைக்கொள்வதும் வாலியை வதைசெய்வதும் அநுமனைத் தூதனுப்பி இலங்கையை அறிதலும் வேண்டாதனவாய் விடும். ஆகவே, இராமகதை இனிது நடை பெறுவதற்கும், வானர மன்னன் வலிமை விளங்குவதற்கும், அநுமன் பெருமை பிறங்கு தற்கும் உரிய பொழுதில் கழுகின் வேந்தன் விதியினுல் உயிர் துறந்தான். இவ்வாறு இறைவனது வாளால் இன்னுயிர் துறந்து அறநெறியாக நின்ற இராமன் கண்ணெதிரே, ஞானத்தால் வீடு பெற்ற கழுகரசன் பெருமை உலகம் உள்ளளவும் அழியாத தாகும்.

முற்றும்

---

# அத்துவிதம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

அத்துவித உண்மையைப்பற்றிச் சித்திரைத்திங்கள் செந் தமிழ்ச்செல்வி (சிலம்பு ௫ பரல் ௪) யில் சிறிது நான் கூறினேன். அதனை உலகவாழ்க்கை அநுபவத்தில் வைத்துக்கூறுதலே இக் கட்டுரையின் கருத்தாகும்.

உலகவாழ்க்கையின் பயன் முடிவில் வீட்டின்பம் அடை தலேயாகும். ஆதலின் அவ்வீட்டின்பம் அடைதலையே குறிக் கோளாகக்கொண்டு உலக வாழ்க்கை அமைந்திருத்தல்வேண் டும். அத்துவிதக் கலப்பு என்பது வீட்டின்பம் அடைதலே யாகும். ஆகையால் உலகவாழ்க்கை நெறியானது அத்துவிதக் கலப்பு அடைதலுக்கு ஏற்றதாயுள்ள நெறியாயிருத்தல்வேண் டும் என்பது வெளிப்படை. சைவசமய நூல்களிற் கூறியவண்

ணம் உலகவாழ்க்கைநெறி இருவகைப்படும்; ஒன்று உலகநெறி, மற்றொன்று வீட்டுநெறி. முன்னையது போகநெறி அல்லது பிரவிருத்தி மார்க்கம் என்றும், பின்னையது முத்திநெறி அல்லது நிவிர்த்திமார்க்கம் என்றும் கூறப்படும். உலகநெறியில் உயிரானது இறைவன் அருளைத் துணையாகக்கொண்டு போகங்களை விரும்பி நெறிக்குட்பட்டு அநுபவிக்கின்றது; இந்நிலையில் அது நான் என்னும் அகப்பற்றும் எனது என்னும் புறப்பற்றும் உடையதாயிருக்கின்றது. வீட்டுநெறியில் அது போகங்களை வெறுத்து அகப்பற்றும் புறப்பற்றும் விட்டு இறைவன் அடியிணையினையே பற்றிச் சிவபுண்ணியம் செய்துவருகிறது.

இறைவனுக்கும் உயிருக்குமுள்ள அத்துவிதத் தொடர்பு நிலையில் இறைவன் உயிர்கண்மாட்டுத் தன் அருளை அவைகளின் தகுதிநோக்கி வழங்குதல் முறையாகின்றது; இம்முறை தவறி உயிர்கள் இறைவன் அருளைப் பெறுதலினால் யாதொரு பயனையும் அடையா. ஆதலின், இம்முறைபற்றி உலகநெறியில் உள்ள மக்களுயிர்களுடன் இறைவனுடைய அத்துவித நிலை மூன்று கூறுகளாயுள்ளது. இறைவன் உயிர்களுடன் உடலுயிர்போலக் கலந்து ஒன்றாய் நிற்றல் ஒரு கூறு; இறைவன் உயிர்களுடன் கண்ணொளியும் சூரியனொளியும்போலக் கலந்து உயிர்களின் வேறாய் நிற்றல் இரண்டாவது கூறு; இறைவன் உயிர்களோடு கண்ணொளியும் ஆன்மபோதமும்போலக் கலந்து உடனாய் நிற்றல் மூன்றாவது கூறு. இறைவன் இந்த மூன்றுகூறு அத்துவித நிலைகளையும் உயிர்களுடன் தன்னருளால் உயிர்கள் பயன்பெறுதற் பொருட்டு நிற்கின்றான். இந்த அருட்சத்தியானது மாயாதத்துவங்களாகிய உலகில் தொழிற்படும்பொழுது இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் மூன்றுவகையாயுள்ள ஆதிசத்தி அல்லது திரோதான சத்தி என்று கூறப்படும். ஆகவே இறைவன் உயிர்களுடன் இச்சாசத்தியால் ஒன்றாயும் ஞானசத்தியால் வேறாயும் கிரியாசத்தியால் உடனாயும் நிற்பன் என்பது பெறப்பட்டது.

உயிர்கள் தங்களிடத்துள்ள அறியாமை நீங்கி இன்பம் அடைதல் வேண்டும் என்ற இச்சை முதலாவது இறைவனிடத்தில் நிகழ்கின்றது; இந்த இச்சை நிகழ்ச்சியின் வழியே உயிர்களுக்குத் தநுகரணபுவன போகங்கள் உண்டாகின்றனவன்றி அவைகளை உபயோகிக்க உயிர்களிடம் ஏகதேச இச்சை நிகழ்ச்சியும் உண்டாகிறது. இறைவனுக்கு இச்சை நிகழ்ந்தால் அன்றி உயிர்களுக்குச் சிறிதும் இச்சை நிகழாது. இவ்வாறு உயிர்களுக்கு இச்சைநிகழ்தல் இறைவன் உயிர்களுடன் ஒன்றாய்

நிற்பதனல் உண்டாகின்றது. திருந்திய இச்சையே அன்பு ஆதலின் உலக வாழ்க்கையில் உயிர்கள் பிற உயிர்களிடத்தில் அன்புசெய்தலும் இறைவனிடத்தில் அன்புசெய்தலும் இச்சை நிகழ்ச்சியின் வழியே ஆகும். உலகவாழ்க்கையில் ஒருயிர் பிறிதோருயிரினிடத்து உண்மை அன்பு செய்தற்கு இரண்டு உயிர்களின் உள்ளமும் ஒத்த உணர்ச்சியால் ஒன்றுகூடிக் கலத்தல் வேண்டப்படுவது என்பது அறிவுடை மக்களெல்லாருமறிந்த உண்மையாம். இக்கருத்தைத் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் "உணர்ச்சிதா னட்பாங் கிழமைதரும்" என்று கூறியருளினர். உயிர்கள் இறைவனிடத்தில் உண்மை அன்பு செய்தலை முதன்மையாகக்கொண்டு வீட்டின்பம் அடையும் நெறி பக்தியோகம் என்று கூறப்படும். ஆகலின் உயிர்களுடன் இறைவன் ஒன்றாய் நிற்றலுக்கு அவன் இச்சாசத்தி அருள்காரணம் ஆகின்றது.

யாதாமொரு காரியஞ்செய்ய இச்சையிருந்தாலும் அதனை எப்படிச் செய்தல்வேண்டும் என்னும் ஞானம் நிகழ்ந்தாலன்றி இச்சை நிறைவேறாது. ஆதலின் இறைவனிடத்தில் இச்சாசத்தியால் இச்சை நிகழ்ந்தபின் ஞானசத்தியால் உயிர்கள் அறியாமையினின்று நீங்கி இன்பமடைவதற்கு யாதுசெய்தல் வேண்டும் என்னும் ஞானம் அல்லது அறிவு நிகழ்கின்றது. உயிர்கள் உலகவாழ்க்கையில் இறைவனுற் கொடுக்கப்பட்ட தனு கரண புவனபோகங்களைப் பயன்படுத்தும்படி எவ்வாறு ஒழுக வேண்டும் என்று இறைவன் உயிர்களுக்கு அறிவிக்கின்றான். உயிர்கள அறிவிக்க அறியும் தன்மையுடையனவாதலின் அப்படி அறிவித்தால் அன்றி உயிர்கள் அறியா. உலகநெறியில் ஒழுகும் பெத்த நிலையில் அவைகள் அறியும்பொருட்டு உயிர்களுக்கு இறைவன் வேறாய் நின்று அறிவிக்கிறான். உயிர்கள் இறைவனை அறிதலை முதன்மையாகக்கொண்டு அவனை அறிந்து வீட்டின்பம் அடையும் நெறி ஞானயோகம் என்று கூறப்படும். ஆகவே உயிர்களுடன் கலந்து இறைவன் வேறாய் நின்று அறிவித்தலுக்கு அவன் ஞானசத்தி அருள் காரணமாகின்றது.

ஒருகாரியத்தைச் செய்து பழக்கமில்லாத ஒருவர் அதனைச்செய்து பழக்கமுள்ள வேறொருவரால் அதனை எப்படிச் செய்தல் வேண்டும் என்று விரிவாய் அறிவிக்கப்பட்டாலும் அறிவித்தபடியே செய்தல் முடியாது. நூலறிவு கற்ற வழக்கறிஞராவது (வக்கீல்) மருத்துவராவது சிற்பராவது அல்லது வேறு எந்தத் தொழிலாளியாவது முதலில் தங்கள் தொழிலை உதவியின்றிச் செய்யத் திறனில்லாதவர்களா யிருக்கிறார்கள் என்பது வெளிப்படையான அநுபவ உண்மை. அதுபோல உயிர்கள்

தனுகரண புவனபோகங்களைப் பயன்படுத்த எப்படி ஒழுகல் வேண்டும் என்று இறைவன் வேறாய் நின்று அவைகளுக்கு அறிவித்தாலும் உயிர்கள் தாங்கள் அறிவிக்கப்பட்ட வண்ணம் உலகில் ஒழுகுதலுக்கு ஆற்றலில்லாதவர்களாயிருக்கின்றன. உயிர்கள் இன்ப துன்பங்களை அநுபவிப்பதற்கு அந்த இன்ப துன்பங்களுக்கு முன்னிலையாகிய விடயங்களில் இறைவன் தன் கிரியா சத்தியால் அவைகளோடு செல்லுதல் செய்து உயிர்களோடு உடனாய் நிற்கின்றான். ஆனால் அப்படியுடனாய் நிற்றலில் இறைவன் விகாரமடைதலில்லை. இவ்வாறு இறைவன் உடனாய் நிற்கவில்லையானால் உயிர்கள் போகங்களைத் தேடி அடைந்து அவைகளால் அடையும் இன்பதுன்பங்களை அநுபவித்து உயிர் வளர்ச்சி (Soul evolution) அடையா. உயிர்கள் இறைவன் உடனாய் நிற்றலை முதன்மையாகக் கொண்டு வீட்டின்பமடையும் நெறி கர்மயோகம் என்று கூறப்படும். ஆகையால் இறைவன் உயிர்களோடு உடனாய் நின்று அவைகள் அவன் அறிவித்த வண்ணம் ஒழுகுதலைச் செய்தலுக்கு அவன் கிரியாசத்தி அருள் காரணமாகின்றது.

மேலே சொல்லியவண்ணம் பெத்தநிலையில் இறைவன் தன்னுடைய இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்திகளால், உயிர்களோடு கலந்து முறையே ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று அவைகளுக்கு அருள்செய்கின்றான். இந்த உண்மை சிவஞான போதம் இரண்டாவது சூத்திரத்திற் கூறப்பட்டுள்ளது. உலக வாழ்க்கையில் உயிர்கள் எத்தொழிலையும் தங்களுடைய இச்சை ஞானம் கிரியைக்காகக்கொண்டுதான் செய்கின்றன. இவைகளின் தொடர்பில்லாமல் யாதொரு தொழிலும் உலகில் இல்லை. இந்த சத்திகளின் ஊடாட்டமும் (Interaction) தொழிற்பாடுமே (activity) உயிர்களின் வளர்ச்சிக்கு (evolution) காரணமாகின்றன. உயிர் வளர்ச்சி முறையினாலே உயிர்கள் முடிவில் வீட்டின்பம் அடைகின்றன. ஆகையினாலே உயிர்கள் வீட்டின்பம் அடைதலுக்கு இறைவன் அருள்செய்கின்ற ஒன்றாய் நிற்கும்நிலை, வேறாய்நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலைஆகிய மூன்றுவித அத்துவிதக் கலப்பு நிலைகளும் இன்றியமையாது வேண்டப்படுவனவாகும். ஸ்மார்த்தர்களும் மாத்துவர்களும் பாஞ்சாத்திரிகளும் கூறுகிறவண்ணம் இந்த மூன்று நிலைகளில் ஒவ்வொரு நிலையே வீட்டின்பத்தை உயிர்களுக்கு உதவவல்லது என்று கூறுவது சிறிதும் பொருந்தாது. மேலும் சைவர்கள் கூறும் 'ஒன்றாய் நிற்றல்' என்னும் அத்துவித நிலைக்கும் ஸ்மார்த்தர்கள் கூறும் கேவலாத்துவித நிலைக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. சைவர்கள் கூறும் அத்துவிதநிலையில் கலக்கும்

பொருள்கள் இரண்டு. கேவலாத்துவித நிலையில் பரமார்த்த மாகிய பரப்பிரமப் பொருள் ஒன்றேயுளது. அப் பரப்பிரமப் பொருள் அஞ்ஞானத்தோடு கூடியதால் அறிபவனாகிய சிவ னெனவும் அறியப்படுவதாகிய பிரமப்பொருள் எனவும் பகுக் கப்படும். சீவன் பிரமப்பொருளை அறியுங்கால் அஞ்ஞானம் நீங்கும். அஞ்ஞானம் நீங்கவே பிரமம் சிவன் என்ற பகுப்பு நீங்கிவிடும். அவ்வண்ணமே சைவர் கூறும் வேறாய் நிற்றல் என் னும் அத்துவித நிலைக்கும் மாத்துவர் கூறும் துவித நிலைக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. மாத்துவர்கள் கூறும் துவிதநிலை யில் இரண்டு பொருள்கள் இருந்தாலும் அவைகள் பெத்த நிலை யிலாவது முத்தி நிலையிலாவது கலப்பு இல்லை. கலப்பு இல்லா மல் இன்பம் எப்படி உண்டாகும் என்பது தெரியவில்லை. சைவர் கள் கூறும் உடனாய் நிற்றல் என்னும் அத்துவிதநிலைக்கும் பாஞ் சராத்திரிகள் கூறும் விசிட்டாத்துவித நிலைக்கும் வேறுபாடு உண்டு. பாஞ்சராத்திரிகள் கூறும் விசிட்டாத்துவித நிலையினும் பிரமப்பொருள் ஒன்றே சீவனாகவும் உலகமாகவும் பரிணமித் திருக்கிறது என்று கூறுதலால் இரண்டு வேறு பொருள்கள் உண்மையாய்க் கலப்பனவில்லை.

ஆகையால் சைவர்கள் கூறும் சுத்தாத்துவித நிலையே உயிர்கள் உலகவாழ்வின் பயனாக வீட்டின்பம் அடைதற்குச் சாதனமாயுள்ள நிலை என்பது துணிபொருளாகின்றது.

மேலே கூறிய சுத்தாத்துவித நிலையானது உலகவாழ்க் கையின் பயனை அடைதலுக்குச் சாதனமாயிருப்பது மல்லாமல் ஒரு பொருள் மூவகை இயல்பினை உடைத்தாதல் யாங்ஙனம் என்னும் வினாவுக்கும் விடையளித்தவாறாயிற்று. மாயாதீத நிலை யில் ஒன்றேயாயுள்ள அருளின் இயல்பு வேறுபாட்டினை (diversity) யுடைய மாயாவுலகில் மூவகையாக விளங்கினாலும் ஒரு கோவையாக விளங்குகிற பலமணிகளில் ஒவ்வொன்றிலும் ஊடுருவிச் செல்லுகின்ற ஒரே கயிறுபோல் “பேதங்களனைத் துமாய்ப் பேதமிலாப் பெருமையன்” ஆகிய இறைவனுடைய கலப்பு ஒவ்வொரு நிலையிலுமுளது என்னும் உண்மை சிறிதும் மறக்கற்பாலதன்று. “அவையே தானேயாய” என்று அத்து வித நிலையை உயிர்களின் பெத்த காலத்தில் உ-வது சூத்திரத் தில் மூவகையாய்க் கூறிய ஆசிரியர் மெய்கண்டதேவர் “அயரா வன்பி னரன்கழல் செலுமே” என உயிர்களின் முத்திநிலையில் 11-வது சூத்திரத்தில் இச்சை அறிவு செயல்கள் மூன்றும் ஒரு ங்கே உடனிகழ்வனவாய்க் கூறியது உற்று நோக்குக.

---

# சித்தாந்தப் படவிளக்கம்

[பஞ்சாட்சரபுரம் ஸ்ரீ வாலையானந்த சுவாமிகள்]

(௨௪௧-ம் பக்கத் தொடர்ச்சி)

## காட்சி

காட்சியானது:—சவிகற்ப காட்சி, நிருவிகற்ப காட்சி என இருவகைப்படும்.

சவிகற்ப காட்சியாவது:—பெயர், சாதி, குணம், தொழில், பொருள் என்ற ஐந்தையும் கூடி அறியும் காட்சியாம். மாமரம் என்பதில் பெயர் மா, சாதி மாவினது தன்மை, குணம் வண்ணம் வடிவு முதலாயின, தொழில் அசைதல் நிற்றல் முதலாயின, பொருள் மரம்.

நிருவிகற்ப காட்சியாவது:—சவிகற்ப காட்சியைப்போல பெயர் முதலியவற்றைக் கூட்டி அறியாமல் பொருளின் உண்மை மாத்திரம் அறியும் காட்சி.

"அவிகற்பஞ் சவிகற்ப மென்றிரண்டா மக்காட்சி
யிவிகற்பங் காட்டுவம்பா ரீண்டு"

"அவிகற்ப மத்தமுள தென்றறிகை பின்பறிகை
சவிகற்ப நாமாதி சார்ந்து"

காட்சியானது இந்திரியக்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சியென நான்கு வகைப்படும்.

இந்திரியக் காட்சியாவது:—ஆன்மாவுடனே விட்டு நீங்காத சிற்சத்தியாலே பிராணவாயுவும், இந்திரியமும், கலாதிகளும் சோம சூரியாக்கினிப் பிரகாசங்களு மாகியவைகளைக் கூடி, உருவம் முதலியவற்றை ஐயம் முதலிய குற்றமின்றி அறிவது.

"வாயிலிடனும் புலனு மாகும்"

என்பதனால், இந்திரியக் காட்சியெனினும் வாயிற் காட்சியெனினும் ஒக்கும்.

இந்த வாயிற்காட்சி சாமானியக் காட்சி, விசேடக் காட்சியென இருவிதமாகும். இதிற் சாமானியமாவது சமுதாயமாயறிவது. அஃதாவது:— குசமவாயணத்தோடு கூடித் தூலகன்மங்

களை அறிதல். விசேடமாவது அதனைப் பிரித்தறிகை, அஃதாவது:—ஆன்மா மனதோடுகூடித் தேசகால அவத்தைகளுடன் இந்திரியத்துக்கேற்ற விடமான பொருளை அறிதல்.

இந்த இந்திரியக் காட்சியில் இந்திரியமானது பொருளோடு பொருந்தும்போது உண்டாகுஞ் சம்பந்தம் ஆறுவகையாகும்.

அவையாவன:—

சையோகம், சையுத்த சமவாயம், சையுத்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடியபாவம் என்பனவாம்.

சையோகமாவது:—கடத்தை அறியுமிடத்து, கடம் விடயமாயிருக்கின்ற ஞானமானது உண்டாகின்ற பொழுது, கண்ணாகிய இந்திரியத்திற்கும் கடமாகிய விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தமாகும். இது பிரிந்திருக்கின்ற பொருள்களினுடைய சம்பந்த மாகையாலே, சையோகமெனப் பெற்றது. சையோகம் சம்யோகம். சம் என்னுஞ்சொல் வடமொழி மதம்பற்றிச் சையெனத் திரிந்தது.

சையுத்த சமவயமாவது:—கடத்திலே யிருக்கிற வடிவமானது கண்ணினாலே அறியப்படுகின்ற பொழுது கண்ணாகிய இந்திரியத்திற்கும் கடத்தைப் பொருந்தி யிருக்கின்ற நீலாதிரூப விடயங்களுக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தமாகும். கண்ணோடு கூடியிருக்கிற கடத்திலே ரூபமானது சமவாயமா யிருக்கையினாலே இதனைச் சையுத்த சமவாயம் என்றது.

சையுத்த சமவேத சமவாயமாவது:—கடத்திலிருக்கிறரூபத்தைப் பொருந்திய ரூபத்துவமானது, கண்ணா லறியப்படுகின்றபோது கண்ணிந்திரியத்திற்கும் உருவத்துவ விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தமாகும்.

சமவாயமாவது:—சோத்தி ரேந்திரியத்தினாலே சத்தமானது அறியப்படுகின்ற பொழுது, ; சோத்தி ரேந்திரியத்திற்கும் சத்தமாகிய விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தமாகும். சோத்திரம் ஆகாசம் இடமாக நின்று அறிகையினாலே, இது சமவாயம் எனப்பட்டது.

சமவேத சமவாயமாவது:—சோத்திரத்திலே சத்தத்தின் தன்மையைக் காண்கின்ற பொழுது, சோத்தி ரேந்திரியத்திற்கும் சத்தத்துவ சாமானிய விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்த

மாகும். சோத்திரத்திலே சமவேதமா யிருக்கிற சத்தத்திலே, சத்தத்துவம் சமவாய சம்பந்தமா யிருத்தலினாலே இது சமவேத சமவாயம் எனப்பட்டது.

விசேடண விசேடிய பாவமாவது:—இந்தப் பூமியில் கடம் இல்லையென்ற பொழுது, கண்ணுடனேகூடி இருக்கிற பூமியிலே கடத்தினுடைய இல்லாமையானது அறியப்படுகின்றது. அப்பொழுது கண்ணுடனே கூடின பூமி விசேடணமும், கடாபாவம் விசேடியமும் ஆகும். கடாபாவத்தை யுடையது பூதலம் என்றபொழுது, கண்ணுடனே கூடின பூமி விசேடியமும் கடாபாவம் விசேடணமுமாகும்.

இவ்வாறு இந்திரியக்காட்சி அறுவிதமாகும் என்பதற்குப் பிரமாணம்:—

"இந்திரியமத்தத் திணங்கும் பொழுதாறு
பந்தமுறும்பா ரறிவிப்பாம்"

"இந்திரியமத்தத் திணங்குதலே சையோக
மிந்தப்பொரு ளுணர்ச்சியாம்"

"சாதிகுணந்தன்னிற்சை யோகசமவாயமாம்
போதமுளார்தாங் காணும்போது"

"சையுத்தசமவேத சமவாதசம்பந்த
மெய்துங் குணதத்துவத்திலே"

"சத்தஞ்சமவேதத் தாலேசெவிப்புலத்துக்
கத்தமா மென்றேயறி"

"சத்தத்திற்சாமா நியத்தைத்தருமதனில்
வைத்தசமவேத சமவாயம்"

"தவாதசமவாய சம்பந்தர்தருங்கா
ணபாவ விசேடணத்துவம்"

மானதக் காட்சியாவது:—குற்றமில்லாத ஞானேந்திரியங்களானவை, சத்தாதி விஷயங்களைப் பொருந்தி யறிந்த பின்னர், சம்சையாதி மயக்கங்களற உண்டான அநுபவத்தை மனசினாலே அநுசந்தானம் பண்ணுவதாம்.

தன்வேதனை காட்சியாவது:—அராகம், வித்தை, கலைகள் ஆகிய தத்துவங்களால் உண்டாகும் இன்ப துன்பங்களை ஆன்ம ஞானத்தாலே புசித்தலாம்.

யோகக் காட்சியாவது:—அறிவைத் தடைசெய்து நின்ற மலசத்திகளை, இயம நியமம் முதலிய அட்டாங்கங்களோடு

கூடிய யோகசமாதியால் ஒருவாறு கெடுத்து, பலகாலும் பழகிய அச்சமாதி பழக்கத்தினாலே விளங்கிய அறிவைக்கொண்டு, ஓரிடத்து ஒருகாலத்து இருந்தாங்கிருந்து, மூவிடத்தும் முக்காலங்களிலும் உளவாகும் பொருள்களைக் காண்கின்ற காட்சியாகும்.

தன் பொருட்டநுமானமாவது:— அநுமானமாவது அநுமிதிக்குக் காரணமாயுள்ளது. அநுமிதியென்பது ஆராய்ச்சியாற்றோன்று ஞானம். அநுமானமானது தன் பொருட்டனுமானம் பிறர் பொருட்டனுமானமென இருதிறப்படும். இயல்பேது, காரியவேது, அநுபலத்தியேது எனும் மூன்றனுள் ஓரேதுவுடைய பொருளை, பக்கம், சபக்கம், விபக்கம் எனும் பக்கங்கள் மூன்றில் வைத்து, அவினாபாவம் பற்றி ஆராய்தற்குரிய ஞானமாம்.

பிறர் பொருட்டநுமானமாவது:—அங்ஙனம் தான் அறிந்ததனை, அவ் வேதுக்களானே பிறர் அறியப் போதித்தலாம். அறியப் போதிக்குஞ் சொல்லும் உடம்பாடு, மறை என இருவகைப்படுவதாம். உடம்பாடு - அன்வயம். மறை - வெதிரேகம். இவ்விரண்டனோடு *உரூடியென ஒன்று கொள்வது முண்டு.

பக்கமாவது :—நிச்சயிக்கப்பட்ட பொருளுக்கு இடமாகும்.

---

* உரூடி யென்பதனை:—

வலியந் நுவய வெதிரே கத்து
மொலிகெழு முரூடி யானுங் கலிகொள
வறிய லாகு மவ்வெளிப் படுத
லொலிகெழு தோற்ற மதனால். (ஞானாமிர்தம் ௪௫)

ஒலிகெழும் அந்நுவய வெதிரேகத்தும் உரூடியானும் சீரிசைவலி ஒலிகெழு தோற்றமதனால் அவ் வெளிப்படுதல் கலிகொள வறியலாகும் எனக் கூட்டுக. கலி - ஈண்டு வெளி.

(இ - ள்.) சீரிசை - அதனால் என்பது அந்நுவய வநுமானமாவது உள்ளது தோற்றுமென்கை அஃதாவது நூலைக்கண்டு புடவை யுண்டென்று நிச்சயிக்கை, வெதிரேக வநுமானமாவது இல்லாதது தோற்றாதென்கை அஃதாவது நூலைக்கண்டு இதிற் கடமில்லையென்று நிச்சயிக்கை. உரூடியாவது புடவையைக் கண்டு இது நூலிலன்றித் தோன்றாதென்று நிச்சயிக்கை. பிரகாசமா யிருக்கிற இம்மூன் றநுமானத்தாலும் நூலிற் கிடந்த புடவையின் புகழுடைத்தாகிய சத்தியைப் பிரகாசமா யிருக்கிற புடவையிற் கண்டு இது தோற்றினது நூலிலே யென்னும்படி எல்லார்க்கும் வெளியாக அறியலாகும் எ - று. என்பதனால் அறியலாம்.

அஃதாவது:—மலையில் புகையைக் கண்டபோது இந்த மலையின்கண் ணெருப்புண்டென்று சுட்டிக்கூறுதல்.

அஃதெக்காரணத்தாலெனின்:—இடையறாது புகை யுண்டாதலினால் என்றறிக.

சபக்கமாவது:—முன் னிச்சயிக்கப்பட்ட பொருளுக்கு ஒத்திருத்தலாகும். அஃதாவது, புகையால் மலையில் அனல் உண்டென அறிந்தது எவ்வாற்றாலெனில், தான் முன்கண்டு அநுபவித்த அடுக்களைப்போலெனக் கூறல்.

விபக்கமாவது:—தனக்கு ஒவ்வாத பக்கமாகும். எனவே, தான் நிச்சயிக்கப்பட்ட ஒரு பொருளைச் சென்று பொருந்தாத இடமாம். அஃதாவது:—எவ்விடத்தில் அக்கினியில்லை அவ்விடத்துப் புகையும் இல்லை. அஃதென்போலவெனில், மடுப்போலென நிச்சயித்தல்.

பக்கம், சபக்கம் இரண்டும் நிச்சயிக்கப்பட்ட பொருளுண்மைக் கிடமாகும்; விபக்கம் அஃதின்மைக் கிடமாகும்.

இயல்பேதாவது :—தர்மத்தினால் தர்மியை அறிவிக்கும் ஏது. அஃதாவது:—மா பூத்த தென்புழி மா மரத்தை யறிவித்தல். மா என்பது இலட்சுமி, யானை, குதிரை, வண்டு முதலிய பல பொருள்களுக்குப் பெயரா யிருந்தும், பூத்தது என்ற சொல்லாலே, மா இயல்பாகவே மரத்தை யுணர்த்தியதாம். அஃதென்போலவெனில்:—பிரபஞ்சந்தோன்றி நிற்கையால், அதற்கொரு பதியுண்டு, பசுவுண்டு, பாசமுண்டு என்று அறிதல் போலவாம்.

காரியவேதாவது:—புகையை முதற்கண் டநுபவித்தவனுக்கு, அவன் மறைய நின்றபோது, அப்புகைதானே தனக்குக் காரணமான அனலை உண்டென்று அநுமித்து அறிவித்தலாகும். அஃதென்போலவெனில், கலாதி காரியங்களைக்கொண்டு அதற்குக் காரணமான மாயை உண்டென்று அறிதல் போலவாம்.

அநுபலத்தியேதாவது:—குளிரில்லாதது கொண்டு பனியின்மையென அநுமித்தறிதல். அஃதென்போலெனில், கர்த்தா இல்லையாயின் பிரபஞ்ச காரியமில்லை; ஆன்மா இல்லையாயின் தேகமில்லை; மாயை யில்லையாயின் தத்து தாத்துவிகங்கள் இல்லையென அறிதல் போல்வதாம்.

உடம்பாடாவது :—புகையுள்ள விடத்து அனலுண்டென உடம்பாடுபற்றி உவமைகூறுஞ் சொல்லாகும். (தொடரும்)

---

# தோலா மொழித்தேவர்

[திரு. S. அக்கினீச்சுவரப்பிள்ளை யவர்கள் B. A.]

(ாக-ம் பக்கத் தொடர்ச்சி)

அவ்வாறே சுயம்பிரபை தன் தாதியரோடு பொழிலில் விளையாடுஞ் சமயத்து திவிட்ட மன்னன் ஓர் யானையை வரச்செய்தான். மங்கையர் வெருவியோட, சுயம்பிரபை அச்சமடைந்து 'நங்காதலர் எங்கே' என்று கூவ, திவிட்டன் 'நங்காய் யான் இங்குளன். அஃதென்? அஞ்சேல்; அஞ்சேல்!' என்று அபயம் தந்து காதலி சமீபத்திற்போய் அங்கேவந்த யானையை விலக்கித் தேவியை மார்போடணைத்து அவள் ஓடும்போது நிலை குலைந்து அலங்கோலமான ஐம்பாலைத் தம்பான்மை பெறச் செம்பாகமாகும்படி திருத்தி, ஆபரணத்தை வரிசைப்படுத்தி அவளைச் சந்தோஷிக்கச் செய்தனன்.

இனி மருமக்கள் மாமிமாரிடம் எவ்வாறு நடந்து கொண்டனர் என்பதைப் பார்ப்போம். சுயம்பிரபையை மணஞ்செய்ய அழைத்து வைத்திருக்குங்காலத்துச் சேடியர் 'நும் மாமியாரிடம் யாது கூறுவதென்ற காலத்து 'நீங்கள் நுந்தலையை நந்தலையாகச் சிந்தித்து மாமியாரை நாங்கள் வணங்கியதாக வணங்குங்கள்' என்று கூறியதைத் தற்கால மருமக்கள் கவனித்து நடப்பாராயின் குடும்பச் சச்சரவுகள் பல நீங்கும்.

## அரசாட்சி

மந்திரசபை—அரசன் எக்காரியம் செயப்புகினும்

'அந்தண ரொழுக்கமும் அரசர் வாழ்க்கையும்
மந்திர மில்லையேன் மலரு மாண்பில'

என்றபடி மந்திரிமாரோடு ஆலோசித்தே செய்தனன். சுவலனசடி யரசன் தன் மகளுக்குத் திருமணம் செய்புமுன்னரும், யுத்தம் நடாத்து முன்னரும எலலா மந்திரிகளுடனும் கலந்து தீர ஆலோசித்தே செய்தனன். வித்தியாதர மன்னரெல்லாம் பெயர் கேட்ட மாத்திரத்தில் அஞ்சும்படியான மன்னர் மன்னன் அச்சுவ கண்டனும், திவிட்டனைக் கணப்பொழுதில் நசித்து விடுவதாகப் புறப்படுங் காலத்து அவன் கூற்றைக்கேட்டால் மந்திராலோசனை சபைக்கு எவ்வளவு மதிப்பிருந்தது என்பது விளங்கும். ஒன்றுக்கும் அஞ்சாத அவன் 'யான் அஞ்சுவதெற்றுக் கெனின் மந்திரி மார்களுடைய சொல்லைக் கேட்டானல்லன்

என்னும் பழிமொழி ஒன்றற்கே. வேறொன்றிற்கும் அஞ்சுகில்லேன்' என்று கூறுகின்றான்.

திறை—வலிய மன்னர் தம்மினும் எளிய மன்னரை வென்று திறைபெற்று வாழ்ந்தனர் என்பது பயாபதி, சுவலன சடி 'முதலிய மன்னர் அச்சுவகண்டனுக்குத் திறைகட்டுவதி லிருந்து வெளிப்படையாகிறது. அரசன் குடிகளிட மிருந்து நாணய வாயிலாக வரிவாங்காது ஆறிலொன்று திறை பெற்றனன்.

திவிட்டனுக்கு முடி சூட்டுங்காலத்துச் சிறையிலிடப்பட்டிருந்த குற்றவாளிகளெல்லாம் மன்னிக்கப் பட்டனர். திரவியம் யாவருக்கும் வழங்கப்பெற்றது. தற்கால ஆங்கில மன்னர் ஜார்ஜ் சக்கரவர்த்தி முடி சூட்டுங்காலத்து, குற்றவாளிகளுக்குச் சிறையிலிருக்கும் காலம் குறைக்கப்பட்டதாலும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளத்தில் ஓர் பாகம் இனாமாக அளிக்கப்பட்டதாலும் அம்முறை தற்காலத்து வழக்கத்திலிருப்பதாகத் தெரிகிறது.

போர்—நாகரிக மிகுந்ததாகக் கூறப்படும் தற்கால யுத்தத்திற்கும், அக்காலப் போர் முறைக்கும் பல வித்தியாசங்களுண்டு. வீரர்கள் கைத்தண்டம், விட்டேறு சக்கிரம், பரிசு, வச்சிர பல்லவம், பூதரம், திகிரிப்படை, சக்கரப்படை, கேடகம், சூலம், வில், வாள், வேல் முதலிய பதினெண்ணாயுதங்களால், ஒருவருக்கொருவர் நேருக்கு நேர்யுத்தம் செய்தனர். ஐரோப்பியயுத்தத்தில் ஜெர்மானியர் விஷக்காற்றுக்களைப் பகைவர் அறியா வண்ணம் உபயோகித்துத் தந்திரமாய் வெல்லுமுறையைப் பண்டைக் கால மன்னர் கையாடவில்லை. அவர் தர்மப்போர் புரிந்தனர். எதிரி தக்க ஆயுதமின்றியிருந்த காலத்தும், வயோதிகனாய் இருந்த காலத்தும் அவனோடு போர் புரிதல் தரும விரோதமென்றும் தம் ஆண்மைக்குப் பங்கமென்றும் போர் செய்யாது விடுத்தனர். கருடத்துவசனும் சுவலனசடியும் எதிர்க்கும் காலத்துச் சடியரசனை நோக்கி, 'நீவிர் வயதினால் முதிர்ந்த குரவராதலின் என்னோடு போர் செய்தல் நுமக்கியலாது. வேறொருவன் வந்து பொருவானாக' என்று வேண்டிக் கொள்கிறான்.

## நம்பிக்கைகள்

நிமித்திகன் வார்த்தையில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தனர். சுயம்பிரபை மானிட மன்னனை மணப்பாள் என்பதையும், திவிட்டன் சியவதை செய்வான் என்பதையும் முன்னரே நிமித்திகர் உணர்த்தினர். மன்னரும், மந்திர சபையில் ஆறு

படாத் கடின காரியங்களை நிமித்திகரிடம் உரைத்து அவர் கூறுமாறு செய்தனர். நிமித்திகர் தக்க மதிப்புப் பெற்றனர் என்பது அச்சுவ கண்டனுடைய பெருமை கூறுங்காலத்து 'திரிகால சம்பவங்களையும் அறியும் சதவிந்து நிமித்திகனும் அவன் வசமுளனாதலால் எல்லா அரசரும் திறையிடத் தான் ஏகசக்கிரவர்த்தியாய் இருக்கின்றான்' எனக் கூறியவாற்றான் விளங்குகிறது. தற்காலத்தும் சோதிடத்தில் நம்மவருக்கு நம்பிக்கை குறைந்து விடவில்லை.

சுயம் பிரபை மாது பிறந்த பின்னர் தான் அவள் தந்தைக்கு அநேக சம்பத்துக்களோடு பிற அரசர் வணங்கும் பெருமையும் உண்டாயிற்று என்பதனால், யோகமுள்ள மக்களைப் பெற்ற தந்தையரும் பெருமை பெறுவர் என்ற நம்பிக்கையிருந்தது. சுயம் பிரபையின் மணத்தைப்பற்றி 'கன்னியர் மணம் ஊழ் வழியே முடியும்' என்றது தற்காலத்து 'மணம் முடிந்து போட்டபடி நடக்கும்' எனப் பாமரரும் கூறுகின்றதை யொக்கும்.

கனவில் நம்பிக்கை வைத்திருந்தனர் என்பது சுயம் பிரபை தன் தம்பி மகனுக்குக் குழந்தை பிறந்ததைக் கனவால் அறிந்தாள்' என்று கூறியதால் தெரிகின்றது.

---

# சொற்பொருள் வேறுபாடு

[திரு. S. அனவரதவிநாயகம் பிள்ளை யவர்கள் M. A., L. T.]

'தீர்த்த' என்னும் ஆரியச்சொல் அம்மொழியில் பெரும்பான்மை நீர்நிலை யென்னும் பொருளில் வரும். ஏகதேசத்தில் புண்ணிய நதியை யடுத்துள்ள புண்ணியஸ்தலம் என்னும் பொருளிலும் வரும். தமிழிலும் திருக்கழுக்குன்றம் பக்ஷிதீர்த்தமெனப்படுதல் நோக்குக. ஆயினும் தமிழ் வழக்கு தீர்த்தத்தை நீரோடு அதிகமாய்த் தொடர்பு படுத்துகின்றது. தீர்த்தயாத்திரை யென்பது புண்ணிய நதிகளில் நீராடச் செல்லுதலையே குறிக்கும். மூர்த்திதலந் தீர்த்தமென்னுந் தொடரில் தலம் தீர்த்தத்தினின்றும் வேறாகவே சுட்டப்பட்டது. இக்காலத்தில் பிராமணர் வழக்கில் 'தீர்த்தம்' குடித்தற்குத் தக்கநீர் என்னும் பொருளில் சாதாரணமாக வருகின்றது. தண்ணீர் என்பது குளித்தல் கழுவலாதிகளுக்கு உபயோகிக்கும் ஜலத்தைக் குறிக்கின்றது. தீர்த்தமே சில சமயங்களில் தேர்த்தமென்றும் தூத்தமென்

றும் உருமாறி வழங்கும். எண்ணெயிட்டுக் குளித்தலைத் தேர்த்தாமாடுகிற தென்றும் தூத்தாமாடுகிற தென்றும் சொல்வர். சென்னை முதலிய இடங்களில் தலை முழுகுதல் என்றும் தலைக்கு ஊற்றிக் கொள்ளுதலென்றும் அதனையே பிராமணரல்லாதார் சிலர் குறிக்கின்றனர். இவற்றிற் கெல்லாம் தமிழ் நீராடுதலே. ஆயினும் நீராடுதல் ஸ்நானஞ் செய்தலையே குறிக்கும், எண்ணெயிடாது குளிக்குங்கால் கழுத்தளவிற் குளிக்கும் வழக்கத்தைக் காட்டவே இவ்வழக்குக்கள் ஏற்பட்டன போலும். இனி, தீர்த்த மென்னும் தமிழ்த்தற்பவம் சுத்தம் என்னும் பொருளிலும் வரும். தீர்த்தர்சுத்தரென்று பொருள் படும். நீரில் குளிப்பதால் சுத்தம் ஏற்படுகின்றது என்பதனை இப்பொருள் காட்டுகின்றது. திருவள்ளுவரும் "புறந்தூய்மை நீரானமையும்" என்றனரே. புண்ணிய நதிகளில் நீராடலால் பாவங் கழுவப்பட்டுப் புண்ணியப்பேறு உண்டாகும் என்னும் கொள்கையால் அப்பொருள் ஏற்பட்டதென்றலும் ஒன்று.

'தண்டபாணி' என்னும் ஆரியச் சொற்றொடர் யமனையும் காசியிலுள்ள சிவனையும் குறிக்கும். தண்டத்தைக் கையிலேந்தியவன் என்பதே சொல்மேற் பொருள். தமிழில் 'தண்டபாணி' பழனி மலையிற் கோயில் கொண்டிருக்கும் ஆண்டிவடிவான முருகனையே குறிக்கும். முருகன் தமிழ்த்தெய்வம். 'தண்டபாணி' சில சமயங்களில் 'தண்டாயுதபாணி' யெனவும் வழங்கும். பொருளில் பேத மொன்றுமில்லை.

'தாஸ' என்னும் ஆரியச்சொல் தமிழில் தாசனென வருங்கால் அதற்குரிய தொண்டன், அடிமை யென்னும் பொருளிலேயே வரும். தாதனென்னும் தற்பவம், நூல்களில் 'தாதமார்க்கம்' என்பது போன்ற சொற்றொடர்களிலே தொண்டனென்னும் பொருளிலேயே வருமாயினும், உலகவழக்கில் பிராமணனல்லாத வைணவத் தொண்டனைக் குறிக்கின்றது. சைவருள் ஆண்டி எப்படியோ அப்படியே வைணவருள் தாதனும் ஆண்டியைக் கண்டால் லிங்கன் என்கிறான். தாதனைக் கண்டால் ரங்கன் என்கிறான். ஏன்காணும் தாதரே ஆண்டி புகுந்தீர்? இதுவும் ஒரு மண்டலம் பார்த்துவிடுவோம்,' 'நாமம் போட்டவனெல்லாம் தாதனா, விபூதி பூசினவனெல்லாம் ஆண்டியா?' 'திருப்பதியில் மொட்டைத் தாதனைக் கண்டாயா?' 'அரி' என்றால் ஆண்டிக்குக் கோபம், அர என்றால் தாதனுக்குக் கோபம்' என்னும் பழமொழிகளையும் நோக்குக. தெலுங்கில் தாதன் என்பது 'தாஸரி' யென்று வழங்கும்.

'தாஸீ' என்னும் ஆரியச்சொல் 'தாஷ' என்பதன் பெண்பாலாதலின், 'தாசி' யெனத் தற்பவமாகுங்கால் தொண்டு செய்பவள், அடிமைப்பெண் என்னும் பொருளிலேயே வரற்பாலது. நூல் வழக்கில் அதற்கு அதுவே பொருள். உலக வழக்கிலோ 'வேசை' என்பது பொருளாகின்றது. அது 'தேவதாசி' யென்பதன் குறுக்கமென்றும், தேவதாசிகளின் தொழில் ஆலயங்களில் தொண்டு புரிவதேயாயினும் அவரெல்லாம் பொது மாதாயிருத்தலால் அதற்கு அப்பொருள் வந்ததென்றுஞ் சொல்வர். கதாசரித்சாகர முதலிய வடநூல்களிலும் தாஸிக்கு இவ்வேசைப் பொருள் காணப்படுகின்றது. தமிழில் 'தாதி என்றொரு சொல் உளது. அதற்குத் தொண்டுபுரிபவள் என்னும் பொருள் உண்டு. செல்வர் வீட்டுப் பெண்கட்குத் தாதியோ தாதியரோ ஏற்படுத்துவது இயல்பு. ஆயினும் இச்சொல் 'தாஸீ' என்பதன் தற்பவமென்று உறுதியாக உரைப்பதில்லை. 'தாத்ரீ' யென்னும் ஆரியச்சொல் அவ்வாறு மருவிற்றென்று கொள்வாருமுண்டு. 'தாத்ரீ' வளர்ப்பவள், பால் கொடுப்பவள் முதலிய பொருள்களில் வருவது.

'நிஷ்டா' என்னும் ஆரியச்சொல் திரம் என்னும் பொருளையுடையது. அது தமிழில் தற்பவமாக நிட்டையென வருங்கால் முத்தியெய்தும் நோக்கத்தோடும் பரம்பொருளிடத்து மனத்தை நிறுத்தித் தியானத் திருத்தலையே குறிக்கும்.

'பண்டித' என்னும் ஆரியச்சொல் ஆரிய மன்றென்று சொல்வாருமுண்டு. அதற்கு ஆரியத்தில் புலவன், தேர்ந்தவன் என்பன பொருள்கள். தமிழிலும் அச்சொற்கு இலக்கியத்தில் அப்பொருள்கள் உண்டு. உலக வழக்கில் 'பண்டிதன்' மருத்துவன் என்னும் பொருளிலும் வருகின்றது. கன்னடத்திலும், அச்சொற்கு அப்பொருள் உண்டு. தமிழ் வழக்கில் அப்பொருளில் 'பண்டிதன், பண்டுதனெனவும் உச்சரிக்கப்படுகின்றது. இவ்வாறு தேர்ச்சி மருத்துவத்தில் தேர்ச்சியைக் குறிக்க வந்தது. மருத்துவரல்லாத நாவிதர் சிலரையும் பண்டிதரென விளிக்கின்றனர். கிராமங்களில் வைத்தியரெல்லாம் பெரும்பான்மை அச்சாதியினரா யிருத்தலே இதற்குக் காரணமாதல் வேண்டும். இக்காலத்தில் நாவிதர் குலமே மருத்துவ குலமெனப்படுகின்றது. ஐரோப்பாவில் வியாதிகள் தீர்தற்கு இரத்தத்தைச் சிந்துதல் சாதாரணமாயிருந்த இடைக்காலங்களில் கத்தித்தொழில் வழக்கமாய்ப் புரிந்துவந்த நாவிதரையே சத்திர வைத்தியராகக் கொண்டனரென்று தெரிகிறது. இந்தியாவிலும் நாவிதர் சத்திர வைத்தியராகக் கொள்ளப்படா விடினும் அவர்கள் மருத்

துவத் தொழில் புரிகின்றனர். ஏகதேசத்தில் அவர்கள் சிறு கட்டி முதலியவைகளைக் களைதற்காகக் கத்திப்பிரயோகஞ் செய்தலுமுண்டு. சிறிது காலத்துக்கு முன்னெல்லாம் மருத்துவிச்சிகள் நாவிதப் பெண்களாகவே யிருந்தனர். தென்னாட்டில் நாவிதனுக்குக் 'குடிமகன்' என்னும் பெயர் உண்டு. அதனால் நாவிதன் ஊரார்க்கு எவ்வளவு உபயோக முள்ளவன் என்பது புலப்படுகின்றது. பண்டிதன் தமிழ் நாட்டில் மருத்துவனைக் குறிக்க வந்ததுபோலவே, கவிராஜன் வடநாட்டில் வைத்தியனைக் குறிக்கும். உதாரணமாக வங்காள தேசத்தில் கவிராஜர்கள் என்னுங்கால் வைத்தியரே கருதப்படுவர். தமிழ் நாட்டிலோ 'கவிராஜர்' கவிகளுக்கு அரசர் என்னும் பொருள் குறுகிக் கவிசெய்வோரைக் குறிக்கின்றது.

'பாடக' என்னும் ஆரியச்சொல் 'பாடம்' என்னுஞ் சொல்லோடு இயைபுடையதாய், உபாத்தியாயர், கற்பிப்பவர் என்னும் பொருளுடையது. தமிழில் 'பாடகன்' என்னும் தற்பவம் நன்றாகப் பாடுபவன் என்னும் பொருளது. நடுவில் அது பாட்டுவாத்தியாயர் என்னும் பொருள் தந்திருக்கவேண்டும். உபாத்தியான் < பாட்டுவாத்தியாயன் > நன்றாகப் பாடுபவன் என்று பொருள் திரிந்த முறையைக் காட்டலாம். ஆயினும் பாடம் என்பதிலிருந்து பாடுபவன் என்னும் பொருள் எவ்வாறு வந்தது? தமிழிலுள்ள 'பாடு,' 'பாட்டு' என்னும் சொற்களோடு 'பாடகன்' தொடர்புடையதெனக் கருதியோரே முதலில் அச்சொல்லை அப்பொருளில் வழங்கி யிருக்கவேண்டும். தமிழில் 'பாடு' என்னும் சொல்லும் பொருள் திரிந்துளது. முதலில் அதற்குச் செய்யுள் செய்தல் என்பதே பொருளாயிருந்து, பின் செய்யுள் வாசித்தற்கு இசை இன்றியமையாதாதலின் இசைபாடுதல் என்னும் பொருள் ஏற்பட்டிருத்தல் வேண்டும். 'பாட' என்னும் ஆரியச் சொல்லிலிருந்தே தமிழ்ப் 'பாடு' என்பதும் வந்தது என்று சொல்லத் துணிவாருமுண்டு. அவர் 'பாடு' என்பது தமிழ்ப் பழஞ் சொற்களுளொன்றென்பதையும், பாடுநர், பாடினி, பாட்டி, பாணர், பாணிச்சி முதலிய பலசொற்கள் அதனோடு இயைபுடையன தமிழில் உண்டென்பதையும் நோக்கக் கடவர். ஆரியத் தற்பவங்களாய 'பாடம்' என்னும் பெயரும் 'படி' என்னும் வினையும் வேறு, தமிழ்ச் சொற்களாகிய 'பாட்டு' என்னும் பெயரும் 'பாடு' என்னும் வினையும் வேறு.

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[தமிழாசிரியர் திரு. T. S. பாலசுந்தரனவர்கள்]

(௩௪௩-ம் பக்கத் தொடர்ச்சி)

"நான்முகர்கள் மிகப்பெரியர் ஆங்கு அவரின் பெரியர்
நாரணர்கள் மற்று அவரின் நாடின்மிகப் பெரியர்
வான் முகத்த உருத்திரர்கள் மற்று அவரின் பெரியர்
மயேச்சுரர்கள் சதாசிவர்கள் மற்று அவரின் பெரியர்
மீன்முகத்த விந்து அதனில் பெரிது அதனில் நாதம்
மிகப்பெரிது பரை அதனில் மிகப் பெரியன் அதனில்
ஆன் முகத்தில் பரம் பரந்தான் பெரிது அதனில் பெரிதாய்
ஆடுகின்ற சேவடியார் அறிவார் காண் தோழி"

(௬, தத்துவமாலை, ௨௧)

"ஆறு கோடியாம் சமயங்கள் அகத்தினும் அவைமேல்
வீறு சேர்ந்த சித்தாந்த வேதாந்த நாதாந்தம்
தேறும் மற்றைய அந்தத்தும் சிவம் ஒன்றே அன்றி
வேறு கண்டிலேன் கண்டிரேல் பெரியர்காள் விளம்பீர்"

(௬, உய்வகை கூறல், ௧)

"திருநெறி ஒன்றே அதுதான் சமரச சன்மார்க்கச் சிவநெறி"

(௬, வாய்ப்பறை யார்த்தல், ௧௨)

"பல்மார்க்கம் எலாம் பசைஅற்று ஒழிந்தனவே
சன்மார்க்கம் ஒன்றே தழைத்ததுவே—சொல்மார்க்கத்து
எல்லா உலகும் இசைந்தனவே எம்பெருமான்
கொல்லா நெறி அருளைக் கொண்டு"

(௬, சுத்த சிவநிலை, ௨௧)

"சேய்போல் உலகத்து உயிரையெல்லாம் எண்ணிச் சேர்ந்துபெற்ற
தாய்போல் உரைப்பர் சன்மார்க்க சங்கத்தவர் சாற்றும் எட்டிக்
காய்போல் பிறர்தமைக் கண்டால் கசந்து உள்கடு கடுத்தே
நாய்போல் குரைப்பர் துன்மார்க்க சங்கத்தவர் நானிலத்தே"

(௬, திருவருட் பேறு)

"கருணை ஒன்றே வடிவாகிஎவ் உயிரும்தம்
உயிர்போல் கண்டுஞானத்
தெருள் நெறியில் சுத்தசிவ சன்மார்க்க
பெருநீதி செலுத்தாநின்ற
பொருள்நெறி சற்குண சாந்தப் புண்ணியர்தம்
திருவாயால் புகன்றவார்த்தை
அருள்நெறிவேத ஆகமத்தின் அடிமுடிசொல் வார்த்தைகள்
என்று அறைவாரலோ"

(௬, தனிப்பாடல்கள்)

"திரு நிலைத்து நல்அருளொடும் அன்பொடும்
சிறப்பொடும் செழித்து ஓங்க
உரு நிலைத்து இவண்மகிழ் வொடும்வாழ்வு
உறவந்துநின் அருள் செய்வாய்" (௬, பிரார்த்தனை விளக்கம்)

"தூக்கமும் துயரும் அச்சமும் இடரும்
தொலைந்தன தொலைந்தன எனைவிட்டு
ஏக்கமும் வினையும் மாயையும் இருளும்
இரிந்தன ஒழிந்தன முழுதும்
ஆக்கமும் அருளும் அறிவும் மெய்அன்பும்
அழிவுஉறா உடம்பும் மெய்இன்ப
ஊக்கமும் எனையே உற்றன உலகீர்
உண்மை இவ்வாசகம் உணர்மின்" (௬, சத்திய வார்த்தை)

"வள்ளல் உன்றனையே மதித்து உன்
சாயையாப் பிறரைப் பார்த்ததே அல்லால்
தலைவ! வேறு எண்ணியது உண்டோ"?
(௬, பிரிவாற்றாமை, ௫)

"தாய்தடை என்றேன் பின்னர்த்தாரமே தடை என்றேன் நான்
சேய்தடை என்றேன் இந்தச்சிறு தடை எல்லாம் தீர்ந்தும்
தோய்தடைச் சிறியேன் இன்னும் துறந்திலேன்"
(௬, தனித்திரு விருத்தம், ௧)

"ஓங்கார அணைமீது நான் இருந்த தருணம்
உவந்து எனது மணவாளர் சிவந்தவடிவு அகன்றே
ஈங்காரப் பளிக்குவடிவு எடுத்து எதிரே நின்றார்
இருந்தருள்க என எழுந்தேன் எழுந்திருப்பது என்நீ
ஆங்காரம் ஒழி என்றார் ஒழிந்திருந்தேன் அப்போது
அவர்நானோ நான் அவரோ அறிந்திலன் முன்குறிப்பை
ஊங்கார இரண்டு உருவும் ஒன்று ஆனோம் ஆங்கே
உறைந்த அநுபவம் தோழி நிறைந்த பெருவெளியே"
(௬, தனிப்பாடல்கள்)

"ஒன்றாகி இரண்டாகி ஒன்று இரண்டின் நடுவே
உற்ற அநுபவ மயமாய் ஒளிர் அடிகள்"
(௪, அருட்பிரகாசமாலை, ௪௬)

என்றருளிய பெறலரும் பாக்களின் தெளிந்த பொருள்கள் எத்துணை நுண்மையவாய் இருக்கின்றன.

இவைகளில் முறையே, 'அன்பே சிவமென்னும் கடவுள்' என்றும், 'கடவுள் ஒருவர், அவர் உருவாயும் அருவாயும் அரு உருவாயும் அருளுருவங்கொண்டு விளங்குவர்' என்றும், 'எங்கும் எவர்க்கும் சிவமே இறைவன், அவனுக்கு அருளே வமையாத

வின் அம்மை அப்பர் என இரண்டுருவாகத் தோன்றுவன், ஆனால் அவ்விரண்டும் ஒருருவேயாகும்' என்றும், 'சிவம்' என்னுஞ்சொல் 'இன்பப்பொருளது' என்றும், 'அவன் அளிக்கும் இன்பமும் இச்சிற்றின்பமும் தன்மையில் ஒன்றும்' என்றும், 'அவரே எல்லா மதங்களுக்குங் கடவுள்' என்றும், 'ஆகவே சிவத்தை வழிபடும் சிவநெறியே எம்மதங்களுக்கும் பொதுவான 'சமரச சன்மார்க்க மென்னும் பொது நெறியாகும்' என்றும், அச்சிவப் பொது நெறியுங் கொல்லா நெறி யென்னும் அருள் நெறியையே கருத்தாகக்கொண்டது என்றும், 'அப்பொது நெறியில் நிற்பார் எவ்வுயிர்க்குந் தாய் போல்வார், நில்லாதவர் நாய்போற் குரைப்பர்' என்றும், 'அவரெல்லாம் அருளே உடம்பாகவும் ஒழுக்கமே பொருளாகவுங் கொண்டுவாழும் இயல்பினர்' என்றும், 'திருவும் உருவும் நிலைத்து அன்பும் அருளும் சிறப்பும் செழித்தோங்க வாழும் அவ்வாழ்வே வாழ்வாகும்' என்றும், மும் மலங்களும் அவற்றின் செயல்களும் ஆகாதன, ஆக்கமும் அறிவும் அன்பும் அருளும் அழிவுறா உடம்பும் மெய்யின்ப ஊக்கமும் ஆகிய இவையே உயிர்கட்கு ஆவன' என்றும், 'இவ்வாழ்வினர்க்கு உலகத்துச் செயல் வேறாய்த் தோன்றாது. அவர் இறைவன் அருளையே இதுவாக் கண்டிருப்பர்' என்றும்,

"இவ்வகையே துறவாமன்றி மனைவி மக்களைத்
துறந்து விடுதல் துறவாகாது"

என்றும், இவ்வாறு துறநத எங்கும் அருட்பார்வை ஒன்றே ஆயினார்க்குச் சிவமே அருளுருவ அறிவாசிரியராய் எழுந்தருளி அவர் மலத்தைத் துடைப்பர், துடைத்தலும் ஆணவ ஆங்காரம் ஒழியும் ஒழியவே சிவமுந்தாமும் வேறாகாதபடி ஒருவரேயெனக்கலப்பர் அக்கலத்தல் என்னும் வீடுபேற்றால் எய்தும் இன்பம் அவர் உணர்வுக்கே தோன்றாத நிலையில் நுகரப்பெறும்' என்றும், 'அங்ஙனம் சிவமும் உயிரும் ஒன்றாயினுங் கலப்பில் ஒன்றாயினுங் கலப்பில் ஒன்றாயும், பொருளில் இரண்டாயும் இவ்விரண்டின் நடுவே நிலைத்த இன்பம் நிகழத் தாம் நீடு வாழ்வார்' என்றும் அடிகள் காட்டியருளிய அரும்பொருட் பகுதிகள், தம்மை உணர்வார்க்கு உலப்பிலா உவப்பும் வியப்பும், அவர்கள் திருவடிக்கண் நெஞ்சம் பொருந்தி நெகிழு நிலையுந் தருகின்றன அல்லவோ!

அடிகள், அகப்பொருண் முறையைத் தழுவித் தலைவி வருந்தல், நற்றாய் செவிலிக்குக் கூறல் முதலியவாகப் பலதுறைப் பொருள்கள்கூறிக் "காமம் மிகுகாதலன்றன் கலவிதனைக் கருது

கின்ற ஏமம் உறுகற்புடையாள் இன்பினும் இன்பு எய்துவது" (௪, ஆளுடைய அடிகள் அருண்மாலை, ௬) அவர்கள் அன்பின் திறத்தையும் பெருக்கையுங் காட்டுகின்றது. அருட்பாவில் உள்ள இவையும், இவைபோல்வனவுங் கற்றோர்கள் கண்டு எனக் கைக் கொள்ளுங் கருத்துகளாம். இனி, எல்லார்க்கும் பயனுகுமாறு தெளிவாகப் பாடியதோடு எல்லாமக்களின் எல்லா நுகர்ச்சிகளை யுந் தமவாக்கொண்டு சிவத்திடம் முறையிடுவதாக அடிகள் நூலருளியிருப்பதால், எல்லாருந் தம் எல்லா நிலைகளையும் இதன் வெளிப்படையான செம்பாகப் பாடல்களால் இறைவனிடம் பலபடியாக முறையிட்டு அருள்பெற அஃது ஏற்றதாயிருக்கின் றது. இதுவே சிவத்தைப் பாடும் மற்ற நூல்களைவிட அருட் பாவுக்குப் பெருமை மிக அருமையின் அளிப்பது.

இனித், "திருவாளன் திருநீறு" என்று ஆசிரியர் சேக்கிழா ரைப்போலவே அடிகளும், "திருவாளன்" என்பதைப் பல இடங்களிலும் ஆண்டிருக்கிறார்கள். தேவார திருவாசகத் திருக் குறண் முதலான அருணூல்களிலிருக்கும் சொற்களும் பொருள் களும் சொற்றொடர்களுங்கூட இதில் ஆங்காங்குத் தோன்று கின்றன. "குற்றஞ்செயினுங் குணமாகக்கொண்டு" (௬, அபய கீர்த்தனை), "முடியேன் பிறவேனென" (௬, முறையீடு, அ); "முன்னைப்பொருட்கு முதற்பொருளே" (ந, செல்வச் சீர்த்தி மாலை, ௪), "கன்னுருரித்துப் பணிகொண்ட" (௬, திருமுதுகுன் றம், குருதரிசனம், அ); "வேண்டுதல் வேண்டாமை யறல் வேண்டும்" (௬, வேண்டுகோள், எ) என்னும் வள்ளலார் திரு மொழிகளை உற்று நோக்குக. சங்க இலக்கியச் சொன்னடைப் பொருளும் இதன்கண் தோன்றுமலில்லை. எல்லாவற்றையும் விட திருவாசகச் சொற்களுந் தொடர்களும் பொருள்களும் பொருண்முறைகளுமே மிக்குப் பெருவரவினவாய் அருட்பாவிற் காணப்படுகின்றன. இது, "ஓதவுலவாவொரு தோழன் தொண் டருளன்", "தம்பெருமை தானறியாத் தன்மையன்", "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த" முதலிய திருவாசகச் சொற்றொடர் களை அப்படியே எடுத்துச் சிறிதுந் திரிக்காமல் தமதருட்பாவில் முறையே, "ஓதவுலவாவொருதோழன் தொண்டருளன் சாத லொழித் தென்னைத் தாளுக்கி" (௬, குறையிரத்தல், ௧௧), தன் பெருமைத் தானறியாத் தன்மையனே" (௬, அருள்விளக்கமாலை, ௧௨),"ஈறிலாப்பதங்கள் யாவையுங்கடந்த பேறளித்தாண்ட பெருந் தகைத் தந்தையே" (௬, அருட்பெருஞ்சோதி அகவல்) முதலி யவாக அடிகள் பொன்னேபோற் போற்றி ஆளுதலால் நன்கு விளங்கும். இதனல், நினைத்தபொழுதெல்லாம் பாடிடும் அருட் பெற்றியரான அடிகள் திருவாசகப் பயிற்சியை எப்பொழுதுங்

கைக்கொண்டு அதன் சுவையை நுகர்ந்தவர்கள் என்று துணிந்து கூறலாம். ஆதலினன்றோ, நான்காந்திருமுறை யிறுதியில் அருளிய நால்வர்மாலையில், மாணிக்கவாசகர் மாலையில்மட்டும் பாடல் பத்துக்கு, மற்றையவற்றிற்போலக் குறைவாக அல்லாமல் ஆறு பாடல்கள் அவர்கள் திருவாசகத்தின் மேலவாய் அடிகள் அருளியதூஉமென்க. இங்ஙனமே, நம்பிகள் அருண்மாலையிலும், பத்துக்கு ஐந்து திருப்பாடல்கள் அவர்கள் தேவாரத்தின் மேற் பாடப்பட்டிருப்பதும், நம்பிகளுடைய தேவாரச் சொற்றொடர் களே அருட்பாவில் மற்றத் தேவாரத்தினும் மிகுந்து காணப் படுவதும் இங்கு நினைவுகூரற்பாலது. பிள்ளையார் அருண் மாலையிலும், அரசுகள் அருண்மாலையிலும் ஒவ்வொன்றே அவ ரவர்கள் தேவாரங்களைக் குறிக்கும். இன்னும், வள்ளலார், "வாய்க்குப் பழத்தொடு சர்க்கரை வாங்கி வழங்குவனே" (க, திருவருண் முறையீடு, கஉஉ), 'விட்டகுறை தொட்டகுறை' (சு, சிவதரிசனம், சு) என்று வழக்குச் சொற்களையுங் "கண்ணுடி கவரிமுதல் உள்நாடியிருக்க" (சு, அனுபவமாலை, உ௰) என்று கண்ணுடி கவரியிட்டுக் கணவனை எதிர்பார்க்கும் மங்கையர் வழக்கத்தையும், இவைபோன்ற பலவும் எடுத்துக் கூறுகின் றார்கள்.

இறைவன் முருகவேளாவும், சிவமாவும், நடனத்தேவாவுந் தமக்கு ஆசிரியராக எழுந்தருளி அருளினமையை, அடிகள், முறையே ஐந்தாந் திருமுறையிலும், ஆறாந் திருமுறையின் அருள்விளக்கமாலை, குருதரிசனம் முதலானவற்றிலும், நடராஜ பதிமாலை, சற்குருமணிமாலை முதலியவற்றிலும் அருளியிருக்கின் றார்கள். அன்றித் திருஞானசம்பந்தப் பெருமானையுந் தாம் வழி பட்டு நிற்ப அவர்களும் அருளாசிரியராய் எழுந்தருளிப் பொருளியல் அறிவுறுத்தமை, ஆளுடைய பிள்ளையார் அருண்மாலையில் மட்டும் அடிகள் அவர்களைச் "சற்குருவே" "சற்குருவே" என்று விளித்தமையாலுந் தாம் பெற்ற பொருளியலை முறைப் படுத்து அங்குக் கூறுகின்றமையாலுந் தெரிகின்றது. இன்னும் "அமையும் அண்டப்பகுதி பலவும் அணுவின் பொடியிலே" (சு, மெய்யருள் வியப்புமாலை, ௫உ), "நெருப்பிலே உருக்கும் நெய்யிலே சிறிதும் நீர் இடாத்தயிரிலே" (சு, அவாவறுப்பு, ௩), "வான்மாறினும் மொழிமாறாத மாறன்" (க, திருவருண் முறையீடு, கூஉ), "என்னை ஆண்டு ஆறுமூன்று ஆண்டில் ஆண்டு கொண்ட அருள்கடலே" (உ, அடிமைப் பதிகம், ௩) என்பன வாக இயற்கைப்பொருள் (Science) உடல்நலம் (Hygiene), வரலாற்றுப்பொருள் (History) முதலியவற்றின் ஆராய்ச்சிகளும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. அருட்பா முழுவதும் நிரம்பி

யிருக்கும் அடிகளின் வரலாறுகள் ஆராய்ச்சியாளர்க்கு ஆர்வந் தரும்.

பொதுவாக நோக்குகையில், முதல் ஐந்து திருமுறைகளும் அடிகள் சிவத்திடம் அருள்பெறு முறையும், ஆறுந்திருமுறை அருள்பெற்ற நிலையுந் தேற்றுவதைச் சற்று நுணித்தாராயவல்லார் கண்டுகொள்வர். இதனை ஆறுந்திருமுறையில் கடவுளியலையே மிக்கெடுத்து விளக்குதலானுந் தேறுதல் கூடும்.

இனி, முதல் திருமுறையில் திருவொற்றியூர் காணப்படுகிறது. இரண்டாந் திருமுறையில் ஒற்றியுந் தில்லையும் இணைந்து தோன்றும். மூன்றாந் திருமுறை முழுவதும் ஒற்றியையே கூறுகின்றது. அங்ஙனமே நான்காந் திருமுறை முழுதுந் தில்லையை வழுத்தும். ஐந்தாவது முழுதுந் திருத்தணிகையின் மேலது. ஆறு தில்லையை உட்கொண்டது. இரண்டாந் திருமுறையில் திருமுல்லைவாயில், வலிதாயம், வேலூர், அண்ணாமலை முதலிய திருக்கோயில்களும், ஐந்தில் சென்னையும், ஆறில் திருமுதுகுன்றம், வேலூர் முதலியவைகளும் அரிதாக ஈரோரிடங்களில் மட்டுந்தான் காணப்படுவவாதலால், அவை நூலின் பொதுநோக்கத்தைப் புலப்படுத்துதற்கு உரியவாகா. ஒற்றியைப் பாவுமிடத்தும் அங்கு நட்டமாடுந் 'தியாக'ப்பெருமானிடமே வள்ளலார் நெஞ்சிருத்தி நெக்குருகுவதால் அருட்பா முழுவதும் ஐந்தாந் திருமுறை நீங்கலாக நட்டப் பெருமானையே வழுத்துகின்றதென்பது தெளிவு. நடனப்பிரானிடமே நெஞ்சம்பிணித்த அடிகளின் உள்ளத்துயர்வை, மலரவன், திருமால், உருத்திரன், சதாசிவன், விந்து, நாதம், பரை, சிவம் ஆக இவர்கட்கு மேலும் உயர்ந்துள்ளது தில்லையாடுந் தேவன் திருவடியென ஓரிடத்தில் (சு, திருவடிநிலை, உ) அவர்கள் அருளுவதாலும் அறியலாம். அப்பெருமானையும் அருஉருவான ஒளிப்பிழம்பு வடிவாகவே வைத்து வள்ளலார் வழிபட்டு வழுத்துவதால், உருவவழிபாட்டுக்காக அந்நடமுதற் கடவுளின் இளநலத்திருவை முருகவேளாகக்கொண்டு ஐந்தாந் திருமுறைப் பாடல்களால் முதலில் வழுத்தினாரென்க. இது முருகவேளை வழுத்துமிடங்களிற் பெரும்பாலாக உருவந்தேற்றியும் நடனத்தேவை வணங்குமிடங்களிற் பெரும்பாலாக அருவந்தேற்றியும் வழுத்துமாற்றால் நுண்ணுணர்ந்து தெளியப்படும். தெளியவே, அருட்பா முழுவதும் நட்டப்பெருமான் வழிபாட்டையே உட்கொண்டது என்பதும் தெளிவாயிற்று. நடனமாவது உலகுயிர்களிடம் நிறைந்து அவை யியங்க இயங்கும் இறைவன் அசைவு. அசைவு அவனருளால் விளைந்து விளங்குவது. அவ் அருளால் அவன்

விளங்குகிறான். உலகமும் விளங்குகிறது. ஆகவே, அருளே எல்லாம் என்பதும், நடனம் என்பதும் பெறப்படுகிறது.

"அருளில் பிறந்திட்டு அருளில் வளர்ந்திட்டு
அருளில் அழிந்து இளைப்பாறி மறைந்திட்டு
அருளான ஆநந்தத்து ஆரமுது ஊட்டி
அருளால் என்நந்தி அகம் புகுந்தானே"

என்பது திருமந்திரம்.

"அருளும் அவனன்றி இல்லை அருள் இன்றி அவன் இல்லை"

என்று சிவத்தியலைச் சிவஞான போதம் நவலுவது போலவே, அடிகளும், "இரக்கம் என் உயிர் என்னவேறு இல்லையே" (சு பின்னைப்பெரு விண்ணப்பம், சுசு) என்று உயிரியலைக் கூறுவதால், உயிர்கள் அவன் குறிப்புவழி நின்று அருளை வளர்த்து அவ்அருள் கொண்டு வழுத்தி இறையருளை விழுங்குவதே நட்டப்பெம்மான் வழி பாட்டின் உட்கருத்தாதலும் எனவே, உயிர் இறை என்னும் இவையிரண்டின் அருளாட்சிகளையும் விளக்குவதே அருட்பா ஆதலுந் தெளிபொருளாம். இதனைத் தேவார திருவாசகங் களிற்போல, நாட்டுவளன், நகரவளன், வான்வளன் முதலிய உலகிய லழகுகளின் வனைந்துரைப் பகுதிகள் அருட்பாவில் மிக்குக் காணப்படாமல், உயிரின் இருண்மையைக் கிளறி 'அவ் உயிர்க்கு அருளொளிதரும் இறைவன் அருண்மையை விளக்குங் கூறுகளே பரந்து காணப்படுவது கொண்டுந் தெளிவது எளிது. ஆகவே, இறைவழி நின்று அருளை வளர்த்துக் கொள்ளுவதே மக்களாவார்க்கு முதற்பெருங் கடமை என்பது அருட்பாவின் அடிப்படையான உட்கருத்து. அவ் அருளும், இறைவன் அருளியல்பு புலப்பட, நெஞ்சு குழம்பும் வண்ணம் இசை குழையு. அறிந்துபாடவே தோன்றுனே வெளிப்படும் என்பதும் அதன் கோள். ஆதலாலன்றோ, ஆராக்காதலி ஒருவனையொப்ப, எவ்வெவ்வகையாகக் கடவுளியலையும் அதைக் கண்டு பெருகிய தம் அன்பருள் நிலையையும் சலிப்பப் பாடலாமோ அவ்வளவும் நம் அருளொளி வள்ளலார் பாடிப்பாடி மகிழ்ந்தார். இது சில தலைப்புகளில், ஒரு வரம்புட்பட்டுத் திட்டமான எண்ணிக்கையில் நில்லாது நெஞ்சம் போனபடி நூற்றுக்கணக்கான செய்யுட்கள் கூட நிற்றலாலும், இப்பொழுது நிலவும் சிவப்பாட்டு நூல்களில் இவர்கள் அருளியதே பெரிதாகத் தெரிதலாலும், ஒத்தும் இசையும் ஒத்தொழுகப் பல செந்தமிழ்ப் பண்களுங் கீர்த்தனங் களும் நாமாவளிகளும், கும்மி கண்ணி முதலிய பல இசையுரி களும் அவர்கண்மாட்டு எழுந்தமையாலும் ...ப்படுகின்றது. இவ் ஏதுவோடு நூலுக்குரிய இலக்கண அமைதி அருட்பாவிற் காணப்படாமையாலும், "இத்தினம் தொட்டு ஆடுகின்றான்

இங்கு" (சு, சுத்தசிவநிலை, ௩௨), "நேற்றைவரையும் வீண்போது போக்கி இருந்தேன்" (சு, அமையங் கூறல், ௬) என்பனவை போன்ற பல குறிப்புகள் ஆங்காங்குக் காண்கின்றமையானும் வள்ளலார் அவ்வப்பொழுது தமக்கு நேர்ந்த நுகரறிவைக் கொண்டு அவ்வப்பொழுது பாடிய பாடற்றொகையே ஒருங்கு சேர்க்கப்பட்டு ஒரு நூலாயிற்றென்க.

எனவே, இத்தென்னாட்டின் தவப்பயனாய் எழுந்து "நான் உரைக்கும் வார்த்தை எலாம் நாயகன் சொல்வார்த்தை" (சு, சுத்த சிவநிலை, கஅ) "நான் உரைக்கும் வார்த்தை எல்லாம் நாயகன்றன் வார்த்தை" (சு, வாய்ப்பறையார்தல், க௬) என்னும் இத்தெய்வத் திரு அருட்பாவை, "நாடாக்கொடிய மனம் அடக்கி நல்ல மனத்தைக் கனிவித்துப் பாடாப்பிழை" (சு, சிற்சத்தி துதி, ௫) யில் அகப்படாமல் தமிழ்ச் சைவர்கள் எவரும் பாராயணத்தில் வைத்து நாள்தோறும் நெஞ்சுருகப் பாடியுய்ந்து சிவபிரான் அருள் பெறக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

(தொடரும்)

---

# இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய சாதிவரலாறும்

[திரு. வே. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

(௨௧௰-ம் பக்கத் தொடர்ச்சி)

ஊகித்து அவர்களது உயர்வு தாழ்வை நிச்சயித்துக் கொள்ளுங்கள். "ஐம்பெரு வேள்வியும் அறுவகைத் தொழிலும் சோடச கிரியையும் ஸ்நானநுஷ்டான ஜெப தப ஹோம தேவதாபூசை முதலிய நித்திய நைமித்திய கருமங்களும் (சிற்சில பாகங்களிற் பேதப்படினும்) பெரும்பாலும் ஆரிய (ப்பிராமண) ருக்கும் ஆதிசைவ (அந்தண) ருக்கும் பொது" ஆசாரங்கள், ஆரியப் பிராமணர், வேதகாலத்தில், மாமிச பட்சணத்தோடு சோம பானமென்ற மதுபானமுஞ் செய்தவர்கள். வட தேசத்தில் அவர் வகுப்புகளுக்குள் சில வகுப்பினர் இன்னும் மாமிசம் புசிக்கின்றனர். அன்றி, அவர்கள் எத்தேசத்தின ராயினும் யாக வாயிலாக மாமிசம் புசிக்கின்றனர். சொல்லவும் கேட்கவுங் கூசும் அசங்கதமான பவுண்டரீக யாக மென்ற துன்மார்க்க கிருத்தியமுஞ் செய்கின்றனர். ஆதி சைவ அந்தணரோ தோன்றிய நாள் தொட்டு மது மாமிசங்களைத் தொடவுஞ் செய்யாதவர். பவுண்டரீக யாகம்போன்ற எவ்வகையான அசப்பிய கிரியைகளையும் செய்தறியாதவர். ஆலயங்களில் இந்த ஆதி சைவ அந்தணர்

தொட்டுப் பூசை செய்யும் மூர்த்திகள் உள்ள கர்ப்பகிரகத்துக் குள்ளே ஆரியப் பிராமணர் இன்றும் பிரவேசிக்கப் பெறு திருப் பதினுல் முன்னவர் பின்னவரைக் கீழ்ச் சாதியாகக் கருதி அவ் வாறே நடத்துகின்றன ரென்பது விளங்கும். அக்காலத்தில் ஆதிசைவ அந்தணர் மற்றைய திராவிட வகுப்பா ரெல்லாரினும் மேற்சாதி யாயினது போல, இக்காலத்தும் ஒரே சாதியுள் ஒரு பாகத்தார் மற்றைப் பாகத்தாரினும் மேற் படுவதைக் காண லாம். செங்கல்பட்டு ஜில்லாவில் சைவ வேளாளருள் ஒரு சிலர் பண்டாரங்க ளென்று சொல்லப்படுகின்றனர். இவர்கள் தென் ஜில்லாக்களில் தொண்டை மண்டல முதலிமார் என்று வழங் கும் சாதியாரின் இனத்தினராய் அந்தச் செங்கல்பட்டு ஜில்லா வில் கொண்டை கட்டி வேளாளர் அல்லது கொண்டை கட்டிக ளென்று கூறப்படும் பரம்பரைச் சைவ வேளாளருக்குப், பரிசார கராகவும் பூசைத் தவசிப் பிள்ளைக ளாகவும் இருக்கின்றனர். இப் பண்டாரங்கள் தாம் சமைத்து ஷை கொண்டை கட்டிப் பிரபுக்களை உண்ணச் செய்வதே யல்லாமல் தாங்கள் அப் பிரபுக் கள் வீட்டில் சாப்பிடுவ தில்லை. சைவ வேளாளருள்ளே ஒரு சிலர் தாம் மேற்கொண்ட பரிசாரகத் தொழில், பூசைக் கிடம் பண்ணல் முதலிய தொழில்களுக் குரிய ஆசாரத்தை மேற் கொண்டு, வர வர, அவ்வாசாரங் காரணமாக மற்றைய தம்மினச் சைவரோடு உடனுண்ணல் முதலியவற்றை நீக்கி யிருப்பது போலவே, ஆதிசைவ அந்தணர் தாம் மேற்கொண்ட தேவார்ச் சனை முதலிய வைதிக கிரியைகளின் நிமித்தம் மற்றைய திரா விடரினும் விசேஷ ஆசார முடையராய்க் காலக் கிரமத்தில் உயர்சாதி யாயினர். சைவ வேளாளருள் பண்டாரங்கள் ஓது வார் குருக்கள் என்போர் உண்டு. ஆதி சைவ அந்தணர் தென் ஜில்லாக்களில் பட்டரென்றும் வட ஜில்லாக்களில் குருக்களென் றும் கூறப்படுகின்றனர். இருவகைக் குருக்களும் பூணூ லணி தல் தீக்ஷை செய்தல் முதலிய பல ஒற்றுமையான ஆசார முடையார். சைவ குருக்களே ஆதிசைவ குருக்க ளானார்கள் போலும். செங்கற்பட்டு ஜில்லாவிற்போலல்லாமல் தென் ஜில் லாக்களி லுள்ள சைவ வேளாளப் பண்டாரங்கள் மற்றைய சைவ வேளாளர் வீட்டில் புசிக்கும் வழக்கத்தைக் கைவிடா திருக்கின்றனர்.

ஒரே சாதியார், தென்னிந்தியாவில், ஒரு பாகத்தில் கீழ்ச் சாதிகளாக மதிக்கப்பட்டும் மற்றைப்பாகத்தில் அவ்வாறு மதிக் கப்படாமலும் இருக்கின்றனர். திருநெல்வேலி ஜில்லாவிலும் மதுரை ஜில்லாவிலு முள்ள சாணர், மறவர் இடையரினுந் தாழ்

---

*பேத+அபேதம்=வேற்றுமை ஒற்றுமை.

வாக மதிக்கப்படுகின்றனர். அங்கே கோவில்களில் சைவ வேளாளர் எவ்வளவு தூரம் உள்ளே போகலாமோ அவ்வளவு தூரம் மறவர் இடையர் முதலிய அநேக சாதிகள் போகின்றனர். சாணார்களோ அவ்வளவு தூரம் போகும் வழக்க மில்லை. வட ஜில்லாக்களிலோ சாணார் மேற் கூறியபடி கீழ்ச்சாதியாராக மதிக்கப்படுகிறதில்லை. கோவில்களுள் மற்றைய சாதிகளோடு சமமாகப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்கின்றனர். தென் ஜில்லாச் சாணாரே வட ஜில்லாக்களுக்குச் சென்றால் அங்குள்ள கோவில்களுள் தடை படாது சென்று சுவாமி தரிசனஞ் செய்கின்றனர். மேற்கூறிய மறவர் இடையரினும் கீழ்ப்படாத சாதி ஜனங்களுடன் வடஜில்லாச்சாணார்கூட இருந்து விருந்து அருந்துகின்றனர். இதனைச் சேலம்ஜில்லா, திருச்செங்கோடு தாலூக்கா, புன்செய்ப் புதுப்பாளயம் முதலிய இடங்களில் விசாரித் தறியலாம். தென்ஜில்லாக்களிலுள்ள மறவர் இடையர் முதலியசாதிகள் ஒழுக்கத்துக்கு அச்சில்லாக்களிலுள்ள சாணாரொழுக்கம் குறைவு பட்டதாகத் தோன்றவில்லை. உயர்ந்த சாதிகளுக்குரிய ஒழுக்கங்களுள் மாமிசம் புசியாமையும் விதவைகள் கலியாணஞ் செய்யாமையும் முக்கியமானவை. இவ்விரு வழக்கங்களும் நல்லவையோ தீயவையோ வென்பதைப்பற்றி நான் இங்கே பேசவில்லை. அவைகளை ஆராய்வதற்கு இஃது இடமு மன்று. இவ்வழக்கங்கள் தற்காலம் வரை இந்தியாவில் சாதி யாசாரங்களுள் மேற்பட்டவைகளாகக் கருதப்படுகின்றன வென்பது, நான் விவகரிக்கப்புகுந்த விஷயத்திற்கு அவசியமாதலால், நான் அவ்வழக்கங்களை இங்கெடுத்துக்கூறினேன். கள்ளுண்ணாமை, விதவாவிவாகஞ் செய்யாமை முதலிய உயர்குல வழக்கங்களுடைய சாணார் பலசிறந்த நல்லொழுக்கங்களுடையவர்கள். ஆச்சரியப் படத்தக்க விடாமுயற்சியுடையவர்கள். இப்படிப்பட்ட குணங்கள் உடைய சாதி, மெலியாரைவலியார்வருத்த இடங்கொடாத ஆங்கிலேய இராசாங்கத்தில், மேன்மையடைய ஆரம்பித்திருப்பது இயல்பே. இச்சாதியாருள் சில காலமாகக் கல்வியும் செல்வமும் பெருகி வருகின்றன. இவர்கள் தங்களைப்போன்ற வடஜில்லாச் சாணார்களை அங்குள்ள பிறசாதியார் நடத்தும் முறைகளுக்குக் குறைவாகத் தங்களைத் தங்கள் ஜில்லாக்களில் உள்ள பிறசாதியார் நடத்துவதை நோக்கி மனங்கசந்து தங்கள் சாதி நிலைமையை மேன்மைப் படுத்த முயல்கின்றனர். முன்காலத்தில் திராவிட சாதி வகுப்பாருள் சில வகுப்பார் கல்வி அறிவு ஒழுக்கங்களில் உயர்ந்து மற்றைய தம்மோடொத்த வகுப்பாரினும் உயர்வுற்றது போலவே இவர்களும் காலக் கிரமத்தில் உயர் வடைவார்களென்பது நிச்சயமானதேயன்றித் தடுக்க முடியாது. சிலகாலத்தில் இவர்கள் பிராமணரினும் உயர்வடைந்தாலும் ஆச்சரியப்படக் காரண மிராது.

ஏனெனில் ஒருசாதியின் உயர்வை அச்சாதி மாதர்களின் நிலைமையைக்கொண்டு அளக்கலாமென்ற விதிப்படி, இவர்கள் உயர்வடைதற்பாலராயிருக்கின்றனர். எவ்வாறெனில் ஒவ்வொரு சாதியிலும் படிக்கின்ற பிள்ளைகளில் ஆண்பிள்ளைகள் தொகையோடு பெண்பிள்ளைகள் தொகையை ஒப்பிடுங்கால் உள்ள பிராமணப் பெண்கள் தொகையினும் சாணாரப்பெண்கள் தொகை மிக அதிகமாக இருக்கின்றது. மேற் கூறியவாறு தென்ஜில்லாச் சாணார் நிச்சயமாகவும் தடுக்க முடியாதபடியாகவும் உயர்வடையு முண்மையை மனத்தில் ஊன்றவைத்துப், பிறசாதியாருள் அறிவாளிகள் மேற்கூறிய முயற்சிக்கு உதவி செய்யாராயினும் தடையேனுஞ் செய்யாதிருத்தல் தகுதி. சாணாருள்ளும் விவேகிகள் "அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா" என்பதை ஞாபகத்தில் நீங்காமல் வைத்து அம்முயற்சியை இடை விடாது செய்யுங் கடமைப் பாடுடையார். இதற்கு விரோதமாக இருதிறத்தாருள்ளும் அவிவேகிகளின் ஆதிக்கம் மிகுந்திருக்கின்றது என்பது "சாண் சத்திரியப் பிரசண்ட மாருதம்", "........ஐயருக்கு........அடி" என்று வெளிப்பட்ட புத்தகங்களாலும் பிறவற்றாலும் புலப்படுகின்றது. மேற் சாதிக்காரர் தங்களைக் கிட்ட நெருங்கவொட்டாமல் தடுப்பதனால் சாணார் மனம் புழுங்கினவராய் சத்திரியரென்று தங்களுக்குத் தாங்களே பெயரிட்டுக் கொள்ளுகின்றனர். இதன் உட்பொருள் யாதென்று தெரியின், மேற்சாதிகள் என்பார்க்குந் தாங்கள் மேற்பட்டவரென்று வாதிப்பது அவர்கள் தங்களைச் சமமாக நடத்தவேண்டுமென்பதே. இது, பத்துகேட்டால் எட்டாவது கொடார்களா வென்றதை யொத்திருக்கின்றது.

அந்தோ! இவர்கள் பேதைமையை என்னென்று கூறுவது. இவர்கள் தங்களையும் வேளாளர் மறவர் இடையர் முதலிய பிற திராவிடவகுப்பினரையும் "நாங்கள் மேற்சாதி" "நாங்கள் மேற்சாதி" என்று சண்டையிடும்படி செய்வது பிராமணராலேற்படுத்தப்பட்ட சாதி வித்தியாச மென்று தெரியாராய்ச், சத்திரியரென்று பெயர் பூண்டு, உண்மையாக அந்தப் பிராமணருக்குக் கீழும் ஆகாமல் மேலும் ஆகாமல் உள்ள தங்குலமேன்மைக்குக் குறைவாகத், தங்களுக்கு அந்தப் பிராமணரை மேலானவர்களாக்கவும் தம்போலவே திராவிடப் பெருஞ் சன சமூகத்தில் சேர்ந்தவர்களாகிய வேளாளர்,மறவர், இடையர் முதலியோரைக் கீழானவர்களாக்கவும் ஏக காலத்தில் முயன்ற இரட்டி அநியாயத்துக்கு இணை எதாயினும் எங்காயினும் உண்டோ? அன்றியும், இவர்களது அறியா முயற்சி எய்வானை விட்டு அம்பை நோவதுபோலவும், வேரை விட்டுக் கொப்புக் குழைகளைத்

தறிப்பது போலவு மிருக்கின்றது. சாணர் தாம் வேளாளர், மறவர், இடையர் முதலிய சாதிகட்குக் கீழ்ச் சாதியா ரல்லர். சாணர் தம்மை க்ஷத்திரிய சாதி யென்றும், கம்மாளர் தாம் விசுவகுல பிராமணரென்றும் எழுதிப் பிரசுரம் செய்யும் நூல் போன்ற நூல்கள் யாதொரு நற்பிரயோசனமும் பயவாதன வாய்க் கேவலந் தீங்குகளையே விளைக்கத் தக்கன. சாதி யென்பது வடக்கேயிருந்து வந்த அந்நியரால் ஏற்படுத்தப்பட்டு இத்தேசத்து ஜனங்களை அடிமைகளாகக் காட்டும்படி இடப்பட்ட அடையாள மென்றும் அதற்கு உண்மையான ஆதார மொன்று மில்லை யென்றும் அஃது அநீதமான தென்றும் சரித்திர பூர்வமாக நிரூபித்தலும், "உயர்ந்தசாதி" "தாழ்ந்த சாதி" என்னும் பேதத்தைச் சிறிதும் பாராட்டாமல் எல்லாச சனங்கள் விஷயத்திலும் ஒரே விதமாக பாரபக்ஷ மின்றி நீதி செலுத்தும் ஆங்கிலேய அரசாட்சியில், ஆண்டவன் அடிமை என்பவற்றைக் குறிப்பிக்கும் சாதி ஏற்பாடுகள் சிறிதும் இடம் பெறுவதில்லை யென்பதை நன்கு விளக்குதலுமே, சாதிக் கொடுமைகளை நீக்குதற்குத் தக்க வழிகள். "தன்னைத் தலைபாகச் செய்வானுந்தான்" என்பது சாதிகள் விஷயத்திலும் பொருந்தும். கீழ்ச்சாதி ஜனங்களுள் ஆடவரே யன்றிப் பெண்டிரும் மேன்மேலும் அதிகமாகக் கற்றலும், விவசாயம் வியாபாரம் கைத்தொழில் உத்தியோக முதலிய ஜீவன முயற்சிகளில் மேன்மை யடையும்படி ஊக்கத்தோடு விடாமுயற்சி செய்தலும், தங்கள் தேகம், வஸ்திரம், வீடு, ஊர் முதலானவைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளலும், சன்மார்க்கத்திலும் நாகரிக நடையிலும் விருத்தி யடைதலும், "பொறுத்தார் பூமி யாள்வார்" என்பதை நீங்காமல் மனத்தில் வைத்துப் பொறுமையோடு இருத்தலுமே அவர்கள் "மேற்" சாதிகளின் நிலைமை யடைவதற் குரிய உபாயங்கள். உண்மையாக இல்லாத பாத்தியதையைக் கொண்டாடுவது ஓர் அரசனிடத்தில் பெரிய உத்தியோகம் பெற்ற ஒரு தாசி புத்திரன் நான் தாசி புத்திரன் அல்லன் என்று ஊர்சுற்றி முரசறைவித்துப் பிரசித்தப்படுத்தும்படி அவ்வரசனை வேண்டினனென்ற கதையை ஞாபகப் படுத்துகின்றது. ஒவ்வொரு பிரதேசத்திலும் வேசியர்களின் மக்களும் சரியான சம்பந்தமல்லாத சம்பந்தத்தாற் பிறந்த பிள்ளைகளும், அவ்வப் பிரதேசத்தில் பெருமிதமாயுள்ள சாதிகளோடு இரண்டு மூன்று தலை முறைகளில் கலந்து விடுவது வழக்கமா யிருக்கின்றது. உத்தம குலாசாரந் தவறாத சாணர்கள் இவ்வாறு கலப்பவர்களிலும் எவ்வளவோ மேம்பட்டவர்க ளென்பது சொல்லாமலே விளங்கும். மேற் கூறிய சங்கர சாதியாருக்கு இடங் கொடுப்போர்கள், அச் சங்கர சாதிகளும் சாணருக்குச் சற்று உயர்ந்தும் தாழ்ந்தும் ஒத்தும் உள்ள

வேறு சாதியார்களும் போல, அச் சாணாரும் கோவில்களில் சுவாமி தரிசனஞ் செய்தற்கு ஏனோ இணங்குகின்றார்க ளில்லை!

ஆழ்ந்து ஆராயுங்கால், அவ்வாறு இணங்காததற்கு, மேலே விளக்கியபடி. குலாசாரக் குறைவு காரணமாகவுமில்லை. வேதகாலத்தில் மாடு தின்பதை உத்தம குலாசாரமாக்கி இப்போது சிலகாலமாக அதையே நீசச் சாதி வழக்கமாகச்செய்து விட்டுத் தானென்றும் தெரியாததுபோலிருக்கும் வழக்கமே காரணமாக இருக்கிறது. வழக்கங்கள் நல்லவைகளாயின் அவைகளைப் போற்றுதலும், தீயவைகளாயின் அவைகளை நீக்கலும் விவேகிகள் கடமை. குழந்தைப் பலிகொடுத்தல், உடன்கட்டையேறல் முதலிய சில கொடிய வழக்கங்கள் சிலகாலத்துக்குமுன் வரை நிகழ்ந்தது. இராஜாங்கத்தாரால் நிறுத்தப்பட்டொழிந்துவிட்டன. பெண்களைப்படிப்பித்தல் சிலகாலத்திற்குமுன் இல்லாதிருந்தும் இப்போது வழக்கமாகிவிட்டது. இவ்வாறே இன்னும் எஞ்சியுள்ள தீய வழக்கங்கள் நிறுத்தப்படுதற்கும் நல்ல வழக்கங்கள் அநுசரித்து நிலைநாட்டப் பெறுதற்கும்உரியன. அவ்வாறு நூதனமாக அநுசரிக்கவேண்டிய நல்ல வழக்கங்கள் பலவுள. அவற்றுட் பின்வருவன இரண்டும் நம் தேசாபிவிருத்திக்கு இன்றியமையாதன:—(1) கல்வி, செல்வம், உத்தியோகம், வியாபாரம், தொழில் முதலியவற்றின் பொருட்டு கடல் கடந்து இங்கிலாந்து முதலிய தேசங்களுக்குச்சென்று திரும்புவோரை, வழிப்பறி, கொலையாதிப் பெருங்குற்றங்கள் செய்து நியாய தண்டனைக்குட்பட்டுக் காராக்கிரகப் பிரவேசஞ்செய்த மாபாதகர்களினும் இழிந்தவர்களாகச் சாதிப்பிரேட்டராக்காமல், சாதிசிரேட்டராக உபசரித்து கௌரவப்படுத்தல். (2) மேற்குல ஒழுக்கங்களிலும் சர்வதேச சர்வமத சம்மதமான சன்மார்க்காநுட்டானத்திலும் நாளடைவிலுயர்ந்து கல்வி, செல்வம், நாகரிகம் ஆகியவைகளில் கால அளவில் முற்பட்டுவரும் எந்தச் சாதியாரையும் அவர் விரும்பும் வண்ணம் ஆலயசேவை முதலியவற்றிற்கு அருகராக்கி முன்வர விருத்தல். (தொடரும்)

---

# *பூவும் மணமும்

இவ்வுலக மாதினிடத்துச் சிறந்து விளங்கும் பொருள்களுள் பூவினைப்போலப் பொலிவுடையதும், நம்முள்ளத்தின் (இருதய கமலத்தின்) தூய்மை, அன்பு, இன்பமாதியவற்றை இனிது விளக்குவதும் எதுவுண்டு? இதைப்போல நமது தனிப்பெருங் கடவுளுடைய அளப்பரிய சிறப்பையும் பேரருளையும் செம்மை

---

*இஃது உண்மை விளக்க மென்னும் பத்திரிகையினின்றும் எடுக்கப்பட்டது.

மையும் விளக்கிக் காட்டுவது எது? அப்பூவின் புதுமையும்,இயை பும், அழகிய அரிபரந்த இதழின் மென்மையும் எவ்வளவோ நம் மனத்தைக் கவர்ந்து உள்ளக்கிளர்ச்சியை யெழுப்புகின்றது. ஆதலின், நம்மவர்களும் அதன்மேல் மிகவும் விருப்புடையவர் களாய் அதனைத் தாங்கள் அணிந்தும் கடவுட்குச் சாத்தியும் தத்துவ உண்மைகளில் காட்டாக எடுத்து வழங்கியும் வருகிறார் கள். அன்றியும் நம்மவர்கட்குத் திருவிழாக்களிலும் நித்திய நைமித்தியாதிகளிலும் இன்றியமையாதனவாயுள்ளன பூக்களே யாம். அவர்கள் இறைவனுக்கிவற்றை மிக உவப்போடும் அணி கிறார்கள்.

"சித்தந் தெளிவீர்காள்
அத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி யாகுமே."

என்று ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானும் பத்தியாகிய மலரைக் கொண்டு நமதப்பனை அருச்சிக்க விளித்தவாறுங் காண்க. அஃ தல்லாமலும் பூவின் முக்கூறாகிய பூ, பூவின் நிறம், பூவின் மணம், சத்துச் சித்தானந்தமாகிய பரம்பொருளினது அருள் வெளி நிலைக்கு உவமிக்கப் பட்டிருக்கின்றது.

"பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போதவின்ப
மாவண்ண மெய்கொண் டவன்"

என்றார், பேரணியும் இனிய நடையும் அமைந்துள்ள திருவிளை யாடற் புராணம் செய்த பரஞ்சோதி மாமுனிவர். இத்திரு வுருவை நமதப்பரும்,

"ஆவாகி ஆவினி லைந்துமாகி அறிவாகி
அழலாகி யவியுமாகி
நாவாகி நாவுக்கோ ருரையுமாகி நாதனாய்
வேதத்தி னுள்ளோனாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்றமாகிப் புக்குளால்
வாசமாய் நின்றானாகித்
தேவாதித் தேவர் முதலுமாகிச் செழுஞ்சுடராய்ச்
சென்றடிக ணின்றவாறே"

என்று சிறப்பித்து அதன் கலப்பு நிலைமை கூறியவாறுங் காண்க. தத்துவவுண்மை தெளிந்து நமதிறைவன்பால்பேரன்பு தழைத் துருகிய ஸ்ரீ மாணிக்க வாசகப் பெருமானுக்கு பூவுக்கும் அதன் மணத்திற்கு முள்ள மிக நுண்ணிய இயைபு வேறோர் விதமாக விளங்கி,

"பூவினாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை"

என்றெடுத்துப் பாடியருளினார்கள். மற்றோரிடத்தும் இவ்வொற்றுமை நயத்தையே உடலுயிர்க்கு ஒப்பிட்டு, அவ்வாறொப்பிட்ட உவமான உவமேயங்களாகிய இரண்டையுமே பரம்பொருளினதியையிற் கொப்பிட்டு அவற்றின் வேற்றுமையை (பூமணம் உடலுயிரின் பேதத்தை) விளக்கியருளினார்கள். அது,

"உற்ற வாக்கையி னுறுபொரு ணறுமல ரெழுதரு நாற்றம் போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருளப் பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும்பித்தர் சொற் றெளியாமே
யத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே"

என்பதாம்.

உலகுயிரோ டிறைவன் பெற்றிருக்கும் அத்துவித சம்பந்தம் உடலுமுயிரும் ஒற்றுமையுற இயைந்திருக்கும் சம்பந்தத்திற்கு உவமிக்கப்படினும், உடலெங்கணும் நிறைவுற்றிருக்கும் உயிர் உடல் வரம்புக்குட்படுதலானும், அவ்வொற்றுமையால் உயிர் பெறுவது நிலையாவின்பமே யாதலானும், தன்னியல்பறிய வல்ல அன்பர்கட்குத் தனது பேரருளையும் நிலையுள்ள பேரின்பத்தையும் விரைந்தளிக்க முந்தும் பரம்பொருள் எவற்றினும் நிறைந்து அவற்றையும் கடந்து, கருணையும் பேரின்பமுமே யுருவாய் நிற்குந் தனது பெருந்தன்மையை உண்மையாகவும் நிலையாகவும் அவற்றினின்றும் பிரித்துப் பொருள் விளக்காமையானும் அதினின்றும் வேறு படுத்திக் கூறுவர்; ஆக இறைவன்பால் அயரா அன்பு இன்றுண்டேல் அன்றே.

"சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது"

என்று திருமூலருங் கூறுவாராயினர்.

மேலும், மகாயோகிகளாகிய திருமூல தேவர் அநேக இடங்களில் இப்பூமண உவமானங்களைத் தெளித்துரைத்திருப்பதில், இறைவனது பரிபூரணத் தன்மையை விளக்கி இப்பூக்களை ஒன்றின் மேலொன்றாக அடுக்கித் தொடுத்துக் காட்டியிருக்கும் ஒன்றை வரைவாம்.

"காலினி லூறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுண் ணெய்யும் பழத்து ளிரதமும்
பூவினு ணாற்றமும் போன்றுள னெம்மிறை
காவல னெங்குங் கலந்து நின்றானே."

தாயுமான சுவாமிகள் (இவர்கள் அடைமொழித் தொடையினலமையும், இனிய மொழிப் புணர்ப்பையும் வேறோர்கால் எடுத்துப் பேசுவாம்) அன்பு நிலையாயுள்ள அசலப்பொருளை விளித்துக் கூறுமிடத்து இவ்வுவமானத்தை மிகவும் அழகாக உரைக்கின்றார்.

"ஆகார புவனமின்பா காரமாக அங்ஙனே
யொரு மொழியா லகண்டாகார
யோகானு பூதிபெற்ற அன்பராவிக் குறுதுணையே
யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசை கிண்கிணிவா யென்ன மலர்ந்த
மலரிடைவாச மருவு மாபோற்
றேகாதி புலகமெங்குங் கலந்துதானே திகழனந்தா
னந்தமயத் தெய்வக் குன்றே"

தேறுந் தொறு மினிமைதரும் அருந்தமிழ் மொழியாகிய செல்வக் குழவியைச் சங்கப்பலகையாம் தொட்டிலிற் கிடத்தி வளர்த்த தாயாராகிய சங்கப் புலவருட் டிலகம்போன்றவரும், சேக்கிழார் பெருந்தகையாலும் சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் புகழ்ந்து துதிக்கப்பட்ட பொய்யடிமையில்லாப் புலவர்களுட் டலைமையுடையவரும், மாதேரவனருளிய பொருட்கு உரைகண்டவருமாகிய நக்கீரதேவர் கைலைபாதி காளத்திபாதியந்தாதியில்,

"உரையும் பொருளும் உடலு முயிரும்
விரையு மலரும் போன்விம்மிப் - புரையின்றிச்
சென்றவா றேங்குந் திருக்கயிலை யெம்பெருமா
னின்றவா றெங்கு நிறைந்து"

என்று ஏனைய உவமானங்களோடு பூமண உவமானத்தையும் தந்தருளினார்கள்.

தருமபுர ஆதீன ஆதிமூர்த்தியின் "சிவபோக சார" பூங்காவினின்றும் அத்துவித இலக்கணத்தை அருமையாக விளக்கும் ஓர் பூவையெடுத்து நம்மாலையில் தொடுப்பாம்.

"இந்தனத் திலங்கி யெரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் - சந்ததமும்
அத்துவித மாவதுபோ லான்மாவு மீசனுமாய்
முத்தியிலே நிற்கு முறை."

நிற்க,பெருங்கருணைத் தடங்கடலாகிய எம்பெருமானது திருவருளின்றியும், அவனது திருவடி நீழலை யெய்திப் பேரின்பக் கடலிற்றிளைத்து விளையாடும் பேரன்பர்களது கடைக்கண் நோக்கமின்றியும் ஒரு காரியமும் முற்றுப்பெறுதென்பது உறுதியாதலின், அவ்வன்பர்கள் நாவாகிய இளமரக்காவில் மலர்ந்து கமழும் நறுமலர்களை எடுத்து ஒரு மாலிகையாகத் தொடுத்து, தன்னை யணைந்தோர், வேண்டுவனவற்றை விரும்பி யளித்து ஆதரிக்கும் எப்பொருட்கும் இறைவனும் பரமேசுரனது செந்தாமரை மலர்போன்ற திருவடியில் அதை யணிந்து அவனை முழுவன்போடு காத்தழு தழுக்க வழுத்தி நாம் எடுத்த காரியம் இனிது நிறைவேறுமாறு பிரார்த்திப்போமாக.

---

# மணம்

[திரு. க. ப. சந்தோஷமவர்கள் B. A., L. T.]

(உஅஎ-ம் பக்கத்தொடர்ச்சி)

பூவின்மணம் புணர்ச்சியின் பொருட்டுப் பிறந்து மூகர்தற் புலனைச் சார்ந்து நிற்கும் ஒருணர்ச்சி என்பதை விளக்கினேம். பூவோடு சேராதவையாயினும் மணம் நிறைந்தனவாகிய புனுகு, கஸ்தூரி இவற்றைப்பற்றி ஒன்றுங் கூறாதுவிடுத்தோம். இவையுங் காதலால் தோன்றுவனவேயாம். ஆண் மயில் அழகுடைய நிறங்களாகின்ற தனது தோகையால் பெண் மயிலுக்குக் காதலூட்டுவதுபோல் புனுகுப் பூனையுங் கஸ்தூரி மானும் தம்மிடத்துள்ள வாசனையால் அன்பைப் பெருக்குகின்றன. இக்காலத்து மக்களால் மிகுதியும் வழங்கப்படுகின்ற பூவின்சாரமாகிய எல்லா வகை வாசனைச் சரக்குகளிலும் கஸ்தூரி கலந்திருக்கிறதென்று சொல்லுகின்றனர். ஆதலின், மணம் என்பது எங்குதோன்றினும் அது காதலுடன் தொடர்புடையதாய் நிற்குமென்பது தெளிகின்றது. இதுபற்றியே, கரும்பு வில்லில் மலர்வாளி தொடுத்துக் காமவேள் மக்களுக்குக் காதலூட்டுகின்றான் என்ற வழக்கு உலகிலுளது. மலர்களால் காதலுண்டாகுமென்பது பண்டைதொட்டுவரும் வழக்காயினும், மணத்தைப் புணர்ச்சியுடன் பொருத்தி இரண்டையும் ஒருபொருளில் வழங்கிய சிறப்பு தமிழருக்கே யுரியது. ஆடவர் மகளிர் கூட்டமாகிய மங்கலச் செய்தியை மணம் என்று கூறியது எத்துணை இயைபுடையது என்பதை எண்ணுந்தோறும் மகிழ்ச்சி பெருகுகின்றது. நமது சொற்களின் அமைப்பை நினைத்துப் பார்ப்போர்க்குத் தமிழ்மொழியை வளர்த்த மூதாதையரின் பேரறிவு புலனாகாமற் போகாது. தமிழின் இனிமையை அதன் சொற்களின் சிறப்பே தெளிவாக்கும். மணம் என்பதோடு ஒரு பொருளவாகிய கடி, மன்றல், வேட்டல் எனுங் கிளவிகளையும் ஆராய்க.

தொன்னாளில் தமிழர் மேற்கூறிய கருத்தைக்கொண்டுதான் புணர்ச்சியை மணம் என்று சொன்னார்களென்பதற்கு வேறு சான்றுமுண்டு. பூவும் பூவின் மணமும் ஆண்பெண் இருபாலர்க்கும் இன்பந்தருவனவாயினும் பெரும்பாலும் இவை மகளிரையே சார்ந்து நிற்கும். மலர்கொய்தல், பூமுடித்தல் ஆகிய தொழில்கள் மங்கையர்க்குக் கூறப்படுவனபோல் ஆடவர்க்குக் கூறப்படா. மென்மை எனும் பண்பு பெண்களிடம் சிறந்து விளங்குவதால் அவர்களுக்கும் மலர்களுக்கும் ஒற்றுமை

தோன்றுகின்றது. அனிச்சம், தாமரை, குவளை, நீலம் முதலிய பூக்களின் பெயர்கள் பெண்டிரைக் குறித்த நவிற்சி நிகழுங்கால் பெரிதும் வழங்கப்படுகின்றன. பெண்டிரின் நலமும் பூவின் மணமும் மிகவும் ஒத்திருக்கின்றன.

"கூடினர்புரிந்து குணனுணப்பட்டோர்
சூடினரிட்ட பூவோரன்னர்" (பாலைக்கலி-23.)

அன்றியும் எந்நாட்டிலும் மலர்களின் பெயர்கள் பெண் களுக்கே பெயர்களாய் இடப்படுகின்றன. பெண்களுக்கும் பூவிற்குமுள்ள ஒற்றுமையைக் காட்ட இவை கூறினம். இது பற்றி மகளிர் பருவமடைதலைப் பூத்தல் என்பர் தமிழர். 'புஷ் பவதியாதல்' என்று வடமொழியில் இதைத் திரித்துக் கூறுவ தும் உண்டு. ஆனல், முன்னுளிலேயே இதைப் 'பூப்பு' என்று தொல்காப்பியத்திற் கூறியுளது. பெண்கள் திரள்வதைப் பூத் தல் என்று சொன்ன தமிழர் அவர்கள் பயன்படுதலை மணம் என்று சொல்லாது வேறென்ன சொல்வர்?

மணம் என்பது பூவுடன் பிறந்து அதனினின்றும் வேறுபடுத் துக் கூறெணுதாகிய ஒருணர்ச்சி யாவதுபோல், காதலும் அதை நுகருபவரை விட்டுப் பிரித்துரைக்கக்கூடாததொன்ருகும். ஆத லின், இதைத் தமிழ்ப் பெரியோர் அகப்பொருள் என்று வகுத் தனர். கூடுதலின் இன்பமும், பிரிதலின் துன்பமும் ஆகிய உணர்ச்சிகளை உளத்தில் தோன்றி மறைகின்ற புல்லிய உணர்ச் சிகளாகக் கருதாத ஆன்ருேர் அவற்றைப் பெரிதும் போற்றி யாவரும் படித்து மகிழும்படி செய்யுளில் அமைத்துப்போனர். அகப்பொருளை யுணர்ந்து உவகை கொள்ளாதவர் ஈரமில்லா நெஞ்சத்தினரும், ஆண்மையில்லா மாக்களுமேயாவர். ஆள் வினையும், ஆண்மையும் நிறைந்தவர்களாய்த் தமிழர் திகழ்ந்த காலத்தில், கற்ருேரேத்துங் கலித்தொகை முதலிய அகப் பொருள்நூல்கள் வெளிவந்துலாவின. இற்றைக்கிருக்கும் நிலை யாது? காதல் என்ற சொல் காதிற்பட்ட மாத்திரத்தில் முகத் தைச் சுளிப்பவர்சிலர், பல்லைத் திறப்பவர் பலர், சீறிவிழுபவர் சிலர், கண்ணைச் சிமிட்டுபவர் பலர்; காதல் என்பது வெட்கத் திற் கிடமானதென்ற கருத்து எப்பொழுது தோன்றிற்ருே, அப்பொழுதே படிற்ருெழுக்கம் பெருகி வளரலாயிற்று. பூப்ப தற்குமுன் மணஞ்செய்யாவிடில் மகளிர் நிறை தவறி விடுமென்று ஒரு சாரார் காமஞ் சாலாச் சிறுமிகளுக்கு மணம்புரிய ஒழுங் குகள் செய்துளர். அங்ஙனஞ் செய்வதே உயர்பிறப்பிற் கறிகுறி என்று வேறு சில மக்களும் அதைப் பின்பற்றுகின்ருர். இவர் கள் மணம் என்பதன் பொருளை அறியாதவரேயாம்.

"சிறைகாக்குங் காப் பெவன்செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை"

என்று வள்ளுவர் கூறியிருக்கவும் பெண்டிரை இகழ்ந்து நோக்கி "அவர் எதற்கும் உரியவரல்லர், அவர்கடன் அடுப் பேற்றி அடிசிலாக்கி அடிமைசெய்வதே" என்று நினைப்போர் எத்தனையோ பேருளர். ஈகை, பொறுமை, ஊக்கம், ஆண்மை, ஆள்வினை, திண்மை முதலியவை நிரம்பப்பெற்ற ஒரு மக னுடைய மனைவி அவனுக்கிணங்காமல் மீறி நடப்பாளென்பது கனவிலும் நிகழக்கூடியதன்று. ஆடவர் ஆடவராயிருந்தால் மக ளிர் மகளிராய் நிற்பர். ஆடவருக்கு ஆண்மைகுன்றின், மக ளிர்க்கு ஆண்மை தோன்றும். ஆதலின், பூப்பிற்குமுன் பெண் களை ஆடவருடன் இணைத்தாலன்றி அவர்கள் நிறைகுறையும் என்போர் கூற்று எதன்பொருட்டு எழுந்ததென்பதை எடுத் துக் கூறவேண்டுவதில்லை "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று தமது பிள்ளைகட்குப் பெருமையுடன் சொல் லும் சில பெற்றோர், தாங்கள் தெய்வமாகப் போற்றப்பட வேண்டுமாயின், அப்பிள்ளைகள் தம்மிடம் பார்த்துப் பழகக் கூடிய நல்லொழுக்கமுடையோரா யிருத்தல் வேண்டுமென்பதை மறந்துவிடுவதுபோல், பெண்டிர் தம் கணவரையே தெய்வமா கக் கொண்டொழுக வேண்டுமென்று அறிவுறுத்தும் சில ஆட வர், அந்த நல்ல பயனைக் கருதித் தாமெவ்வாறு நடந்துகொள்ள வேண்டு மென்பதை மறந்துவிடுகின்றனர். இவ்வாறு தமது கடனை மறந்து, பிறர்கடனைப் பேசப்புகும் உளப்பான்மை பெரு கியதால் நகைப்பிற் கிடமான செய்திகள் நமது நாட்டில் நிகழலாயின. ஆடவரது ஆண்மை குன்றுவதால், மகளிரது பெண்மை குறைகிறது; மகளிரது பெண்மை குறைவதால் ஆட வர் விலங்குகளாகின்றனர். மணமென்பது இனிமையாயிருக்க வேண்டின் இருபுறமும் வாசனை வீசவேண்டும்.

இனி, அகப்பொருள் என்று கூறப்படும் காதல் இன்பம் இயற்கையாய்ச் சொல்லவேண்டிய நெறியிற்பெருகி வளரு மாயின் அதுவே பேரின்பமாய் முடியுமென்பது முன்னோர் கண்ட உண்மை. ஒருத்திபாலெழுந்த காதல் மக்களில் விரிந்து தோன்றி அதனோடமையாது, தன்னைச்சுற்றி யிருப்பவர்க்குப் பரவி, அருளாக மாறி, எவ்வுயிர்க்கும் பெருகி, யாவற்றையுங் கடந்துநின்ற ஒருவன்பாற் போய்ச்சேரும். அகங்குழைந்த அடியார்கள் இறைவனோடு பழகுவதிலும் கூடல், ஊடல், இருத் தல், இரங்கல், பிரிதல் ஆகிய அகப்பொருள் பகுதிகள் தோன்றுமென்பதை அறிதல்வேண்டும். இதைத் திருவாசகப்

பகுதிகளிலும் ஏனையவற்றிலுங் காண்க. பூக்கள் ஒன்றோ டொன்று புணரும்பொருட்டுப் பிறந்த மணம், பூக்களுள் ஆணும், பெண்ணும் கூடுவதை யுணர்த்தி உயிருங் கடவுளும் ஒன்றுவதைக் குறிப்பாற் சுட்டிற்று. மணம்.

முற்றும்

---

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

[திரு. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்]

காழிக் கண்ணுடைய வள்ளலார் சீகாழிப்பதியிலே திரு வவதாரஞ் செய்து, திருஞானசம்பந்தப் பெருமானது திவ்யியா னுக்கிரகத்தால் உண்மை ஞானம்பெற்று, சைவசமயத்தைச் செவ்விதாக வளர்த்து, ஞானசாரிய பரம்பரை யொன்றனையும் ஞானபத்தி யொன்றனையும் நாட்டிய சிவஞானச் செல்வர் ஆவர். அம்மஹா நுபாவரது பெருமையைச் 'செந்தமிழ்ச்செல்வி' வாயிலாக ஒருவாறு என் புல்லறிவிற் கெட்டியவரை வெளிப் படுத்தற்குப் பேரவாவால் துணிந்தேன். இதனை நோக்கும் பெரி யார் யாவரும் குற்றங்களைந்து குணமொன்றனையே கொள்வார் என்பது என் வேண்டுகோள்.

ஸ்துதி

காழிப் பெருமானென் கண்ணுடைய வள்ளலொலி
யாழிப் புவிக்கரசர் மாண்டகை—யூழி
முடியினு மாறு மொழியுரைத்தான் பாதங்
கடியினும் விட்டிடேன் காண்.

கண்ணுடைய வள்ளலாரது கருணைத் திறத்தை இங்கு யான் துதித்துக் கூறும்முறை பதினொரு படித்தாகும். (க) ஆளுடைய பிள்ளையாரது திவ்யியானுக்கிரகம் அவனியின்கண் அனைத்து யிர்க்கும் அவற்றின் பரிபாகங்கட் கேற்ப அமைந்தபகுதியும், (உ) அப்பிள்ளையார் அவ்வக்காலத்துச் சிவஞானச்செல்வத்தை யருளக்கொண்ட திருமேனி வைபவ முரைத்தபகுதியும், அத் திருமேனியைப் பெரியோர் தூல நிலையினும் சூக்கும நிலையினும் உபாசிக்கும் ஆற்றலும், (௩) கண்ணுடைய பிரான் அவதரித்த காலத்துத் தமிழ் மண்டலத்துச் சமய நிலையும், வேதாந்த சித் தாந்த வீரசைவ மடங்களும், அவற்றது ஒவ்வாப் போராட்ட மும் வாதமும், உண்மைச் சிவஞானம் இஃது என்பதும், அதன்

சமரச சுபாவம் இன்ன படித்தாம் என்பதும், சமயாதீதச் சிவப் பொருளைப் போதித்தற்கு ஆவசியகமும், அதனைப் போதித்தற்குக் கண்ணுடையார் அவதரித்ததும், அக்காலத்துக் காழியின் கண் இருந்த கிரியாசாரிய பரம்பரை யொன்றும் கூறும் பகுதியும், (௪) பொகுட்டெழினி மரபின் வரலாறும் சரித்திரமும் ராஜ்ய விஸ்தீரணமும் அம் மரபினர் சமய நிலையும் அவர் திருவதிகையிற் றங்கி வசித்ததும் பின்னர்க்காழியிற் பிரவேசித்ததும் அம் மரபின் வள்ளலார் திருவவதாரஞ் செய்ததும் அவதார காலத்துத் தென்னாட்டின்கண் வழங்கிவந்த வேதாகமக் கொள்கையும் சைவ பத்ததிகளும், (௫) கண்ணுடையார் அவதார மகிமையும் அன்னாரைப் பற்றிக் கர்ண பரம்பரையில் வழங்கிவரும் சில கதைகளும், (௬) அவரது ஞானநுபவ விலாசப் பிரகாசமும் (௭) அவ் வள்ளலார் போக சங்கிரகமும் தீக்ஷாக் கிரமமும். (௮) ஞான நூல்களைத் திருவாய் மலர்ந்தருளி ஞானசாரிய பரம்பரைக்குத் தாயனுசாரியராக வீற்றிருந்தருளியதும், (௯) அந் நூல்களின் ஆராய்ச்சியும் விமரிசனமும் அவற்றிற் குறைவந்த வரலாறும், (௰) பெருமானர் திக்குவிஜயஞ் செய்தருளிக் கேரள பாண்டிய ராஜ்யங்களில் சிஷ்ய கோடிகளுக்கு அநுக்கிரகித்த திறலும், (௧௧) காழியில் பரிபூர்ண மடைந்ததும் அன்னாரது காழித்திருமட வரலாறும், ஆங்கு அவரைப் பூசிக்கும் கிரமமும் அன்னாரை வழிபடும் முறையும் அதனல் எய்தும் பயனும் ஆவன அப்பதினெரு படிகள். (தொடரும்)

---

# தேடு, உனக்குக் கிடைக்கும்

[திரு. M. P. S. வேலாயுதம் பிள்ளை யவர்கள்]

நாம் நமது வாழ்நாளில் வெற்றியடையும் இரகசியம் இதுவே. "தேடு, உனக்குக் கிடைக்கும்" என்ற மொழியின் உண்மையை நாம் நாடோறும் உணர்ந்து வருகிறோம்.

அது நமது பரமாத்திக வாழ்க்கை சம்பந்தப்பட்ட மட்டிலுமல்ல, வாழ் நாளின் எல்லாப் பகுதிகளுக்கும் பொருந்தும்.

முதலில் நமக்குச் சிரத்தை வேண்டும். உங்களிடம் நம்பிக்கை கொள்க. சில முறைகளைப் பின்பற்றி வெற்றியடைந்தவர்களின் அறிவுரைகளிலும் நம்பிக்கை கொள்க. தன்னம்பிக்கையில்லா விட்டால் ஒரு காரியத்திலும் சித்தியடைய முடியாது. உங்களுடைய மனதில் ஊறிப்போய்க் கிடக்கும் பலஹீனத்தை வேருடன் அழியுங்கள். நாம் பயனற்றவர்கள், ஒன்றுக்கு முதவாதவர்கள் என்ற நினைப்பை ஒரு க்ஷண மேனும் நினையாதீர்கள். ஒரு காரியத்தைச் செய்து முடிக்க ஆற்றல்

நம்மிடமே யிருக்கிறது என்ற நினைப்பை மனதில் கொள்ளுங்கள். அவ்வாற்றல் தற்காலம் மறைந்திருக்கிறது. நாம் பெருஞ்செயலைச் செய்து முடிக்கப் பிறந்திருக்கிறோம் என்ற நினைப்பு எப்போதும் உங்களுக்கிருக்க வேண்டும். நாம் பெரிய மனிதர் என்ற தற்பெருமை கொண்டிருக்க வேண்டுமென்பதல்ல, ஆனால் உங்களிடம் நிறைந்த நம்பிக்கையுடையவர்களாயிருக்க வேண்டுமென்பதே. வாழ்க்கையில் வெற்றியடைய விரும்புபவனுக்கு முதன் முதலாய் வேண்டுவது அதுதான்.

அடுத்தாற்போல், வழியைக்கண்டு, சித்தியடைந்தவர்களின் அறிவுரைகளை நம்ப வேண்டும். கர்வங்கொண்டிராமல், உண்மையையறிந்து கொள்ளத் தயாராயிருக்க வேண்டும். நமது முன்னேற்றத்திற்கு நாம் தான் முயற்சி செய்ய வேண்டும். ஆனால் தூய்மையுடையவர்களிடமிருந்து ஒழுங்கான உதவியைப் பெற்றோமாயின், நமது கோரிக்கையைச் சீக்கிரமாயடைவோம். ஊக்கமும் வீணாய்ச் சிதறிப்போகாது.

நம்பால் ஆர்வமிருந்தாலன்றி, எப்படித் தேடமுடியும். ஆகவே ஆர்வமிகவேண்டும். எந்தத் துறையில் நாம் முயற்சி செய்ய முற்பட்டாலும், நமக்கு மிகுதியான ஊக்கம் வேண்டும். பொதுவாய் முயற்சியில் தவறுகிறவர்கள் காலஞ் சரியாயில்லையென்றும், துரதிர்ஷ்டமென்றும், இன்னும் பல காரணங்களைச் சொல்லுகிறார்கள். போதிய ஆர்வமும், ஊக்கமும் அவர்கள் பால் இருந்தனவாவென்பதை அவர்கள் ஆராய்வதில்லை. ஆர்வத்திற்கும் ஊக்கத்திற்கும் முன்பாக எத்துணைத்தடையும் நில்லா. ஆர்வமும் ஊக்கமும் நம்மைப் படிப்படியாய் முன் செலுத்தி வெற்றியடையச் செய்கின்றன.

முயற்சி செய்தோம், ஆனால் தவறிவிட்டோம் என்று குறை கூறுபவர்கள், சிரத்தையுடன் முயற்சியில் ஈடுபட்டார்களாவென்பதை அறிய வேண்டும். நினைப்பின் வன்மை அனைவரும் அறிந்ததேயாயினும், நினைப்பினால் மட்டும், நாம் காரிய சித்தியடைந்துவிட முடியாது. நாம் ஆலோசனை செய்து, ஆராய்ச்சி பண்ணி, நமது நினைப்பை எப்படி காரியத்தில் காட்டுவது என்பதை அறிந்து கொள்ள வேண்டும். முக்கியமாய், நமது முயற்சிகளை, நேர் வழியில் செலுத்த வேண்டும். சரியாய் அறியாத படிக்கும், உண்மையையுணராமலும், நாம் நமது முயற்சிகளில் பல தடவை தவறி விடுகிறோம்.

நாம் நமது சோம்பேறித் தனத்தை விட்டொழித்து, ஊக்கம் நிரம்பியவர்களாய்த் திகழ வேண்டும். ஆனால் ஒவ்வொருபடியிலும் ஜாக்கிரதையாய் ஏறிச்சென்றால் தான் நாம் உச்சியை யடைவோம்.

நமது முயற்சிகளில் ஊக்கமுடையவர்களாயிருக்க வேண்டும். பலர் வாழ் நாளை வீணாளாக்கி, பல வழிகளிலும் அவர்களுடைய ஊக்கத்தைச் சிதைத்து விடுகிறார்கள். அதனால் நாம் கடுமையாயும், முணுமுணுத்துக் கொண்டு மிருக்க வேண்டுமென்பதல்ல. ஆனால், நமது கடமைகளைச் சிரத்தையுடனும், உற்சாகத்துடனும் ஆற்றவேண்டுமென்பதே. அப்படியானால்தான் நாம் வெற்றி பெறுவோம்.

---

# ஸ்ரீசோமசுந்தர நாயகர்

ஸ்ரீ ராமநாத சுவாமி சகாயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் திருவடிவாழ்க.

ஸ்ரீலஸ்ரீ நமது சோமசுந்தர நாயகரவர்கள் பாஹ்ய சமய நிராகரணமும், வைதிக சைவசித்தாந்த ஸ்தாபநமுமாகிய சிவபுண்ணியத்தை அதிக வூக்கத்துடன் செய்து வரும் நன்மையை யாம் பல பத்திரிகை வாயிலாகவும், பல நூல்களின் வழியாகவும், பிரசங்க மூலமாகவும் அறிந்து இன்புற்றதற்கு அறிகுறியாக ஷை நாயகரவர்களுக்கு நமது சேது சமஸ்தானத்தின் கௌரவ பூஷணமாயுள்ளதும், விஜய சூசகமானதுமாகிய (அச்சமஸ்தான நாமம் விளங்கப்பெற்ற) தங்கத் தோடா வொன்றும், 'வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்' என்னும் பட்டப் பெயரும் இப் பத்திரிகை வாயிலாகக் கொடுக்கலாயினோம்.

விஜய நாம சம்வற்சரம்
இடபரவி-62
திருவாலவாய்.
} விஜய ரகுநாத பாஸ்கர சேதுபதி.

குறிப்பு:— ஷை சோமசுந்தர நாயகரவர்கள் நூல்கள் எளியேனைச் சிவத்தொண்டு புரியுமாறு தூண்டியபடியால் அதனை நினைவு கூர்தற்கு அறிகுறியாக அவர்கள் சரித்திரத்தைச் செம்மையான முறையில் எழுதி வெளியிடத் திருவருளை முன்னிட்டுத் தீர்மானித்திருக்கிறேன். ஆதலால் அவர்கள் மாணவர்களும், அவர்களிடத்தில் அபிமானமுள்ள அன்பர்களும், அவர்கள் பிரசங்கங்களைக் கேட்டு இன்புற்ற பெரியார்களும், அவர்கள் எழுதிய புத்தகங்கள் வைத்திருப்பவர்களும் தங்களிடத்தில் இன்னின்ன புத்தகங்களிருக்கிறதென்ற விபரக் குறிப்பையும், இன்னின்ன காலங்களில் இன்னின்ன இடங்களில் இன்னின்ன பொருள்களைப்பற்றிப் பிரசங்கித்தார்களென்ற குறிப்பையும் அன்புகூர்ந்து விரைந்து எழுதி யனுப்பும்படி வேண்டுகிறேன். குறிப்பு எழுதியனுப்பியவர்களின் பெயர்களெல்லாம் அச்சரித்திரத்தின் இறுதியில் இணைக்கப்படும். முன்னமே அவர்கள் சரித்திரத்திற்குச் சில குறிப்புக்கள் யெழுதியனுப்பிய மெய்யன்பர்களுக்கு என் வணக்கத்தை உரிமைப் படுத்துகின்றேன்.

அன்பன்

வ. திருவரங்கம்,

அமைச்சர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.

# பாரி வள்ளல்

௧. "......பூத்தலையறாப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினுங்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி" (புறம் - ௨௱, ௧ - ௧௨)

௨. "ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி" (புறம்-௨௱௧, ௨ - ௫)



கொழுகொம்பில்லா முல்லைக் கொடிக்குப்
பாரிவள்ளல் தேர் ஈந்தது

(இவற்றின் பொருள்) க. எந்நேரமும் மாறாதுபூத்துச் செழுமை யுற்றிருக்கும் முல்லைக்கொடி யொன்று நாத்தழும் பேறப் பாடாதாயி னும் ஒலிக்கு மணியையுடைய நெடியதேரைக் கொள்கவென்று சொல் லிக் கொடுத்த பரந்து மேம்பட்ட தலைமையினையுடைய பாரி என்பது.

உ. தமது ஊரெல்லாவற்றையும் இரப்போர்க்கு வழங்கித் தேரை ஏறுதற்கேற்பச் சமைத்த அணியோடும் புரவியோடும்கூட முல்லைக்கு வழங்கிய தொலையாத நல்ல புகழையும் ஒலிக்கு மணியையுடைய யானை யையுமுடைய பறம்பு நாட்டுக்குத் தலைவனாகிய மிக்க பெரியா பாரி என் பது.

வரலாற்றுச் சுருக்கம்

பாண்டி வளநாட்டில் உலக முழுதும் வரினும் வழங்கக் கொழுமை யுடைய பறம்பு நாட்டில் முடியுடை வேந்தர்க்கு மகட் கொடுத்தற்கு உரி யவராய உழுவித்துண்ணும் வேளாளர் மரபில் வள்ளற்றன்மை மிக்க வேள்பாரி என்பார் இருந்தார். அவர் போர்த்தொழில் நன்குகற்றுத் தமக்கு ஒப்பாவாரின்றித் திகழும் வலிமை மிக்கவராய், கல்வி கேள்வி களிற் சிறந்தவராய், கபிலர் என்னும் பெரும்புலவரைத் தமக்கு உயிர்த் தோழராய்க் கொண்டவராய், இரவலர்க்கும் பாவலர்க்கும் இன்முகங் காட்டி வரையாது கொடுக்கும் புகழ் படைத்தவராய், அந்நாளையிற் கொடைச் சிறப்பின் மிக்கார் பலர் இருக்கவும் "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பாரிலை" எனச் சுந்தரமூர்த்தி சுவாமி களால் கொடைக்கு எல்லையாகத், 'தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்' என்ற தலைப்பமைந்த தேவாரப் பதிகத்தின்கண் எடுத்துக் கூறப்படும் என்றும் அழியாப் பேறு பெற்றவராய் விளங்கினார்.

இவர் ஒருநாள் மாலைப் பொழுதில் செங்கதிர்ச் செல்வன் ஆண்டுள்ள மலைச்சிகரத்தையும், புற்பூண்டுகளையும் பொன் மயமாக்க, தென்றல் காற்று மெல்லென வீச, வேனில் வெம்மைக்கு ஆற்றாது அம்மெல்லிய பூங்காற்றை நுகர்ந்தின்பமுற ஒரு பொற்றேர்மீது வெளியே புறப்பட் டார். அங்கே புறத்தே காணப்பட்ட அழகுகனிந்தொழுகும் இயற் கைத் தோற்றங்களெல்லாம் எல்லாம்வல்ல இறைவன் பேரருளின்கண் மன்னிக்கிடப்பக் கண்டு கழிபேருவகை மீதூர்ந்து ஓர் இளமரக்காப் புகுந்தனர். புகுந்து செல்லும் வழியில் ஒரு வெள்ளிடையில் மரகதம் போலப் பச்செனத் தழைத்து, முத்துப்போன்ற வெண்முகை யரும்பிய ஓர் முல்லைக்கொடி கொழுகொம்பில்லாமையால் தென்றற் காற்றாற் றுவண்டு வீழக்கண்டனன். 'அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ்', 'அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு', என்னுங் குறளடிகளுக் கிலக் காகியவராய், அதன்றயக்கங் கண்டாற்றாது உள்ளந்தாள் நின்றுச்சியள வும் நெஞ்சாயுருகி அதனருகே கடிதிற்சென்று, ஆ என்ன பாவம்! புவியிற் பிறந்தாருள் துன்புறாதார் எவருமேயில்லை, இஃது ஓர் கொடி யெனினும் இதற்கும் ஒரு குறையுண்டு போலும்! இதன் குறையை உடனே போக்குதல் வேண்டுமெனச் சிந்தித்து, "ஏ முல்லையே! நின் குறையை எமக்குணர்த்தும் பெற்றி யில்லாவிடினும், நேரிற்கண்ட யாம் இப்போதே நினது குறையினை யொழிக்கின்றேம்; நாத்தழும் பேறப் படாத நீயும் இதனைப்பெற்று நின்கவலை தவிர்ந்து செழிப்புறுக" எனக்

கூறியவன்போலத் தந்தேரை அதன்கணுள்ள அணிகளோடும் புரவிகளோடும் அக்கொடியினருகே நிறுத்திவிட்டுக் கட்டழகுடைய காமனைப் போலக் கழலடி சிவப்ப நடந்து சென்றனர்.

## இவரைப்பற்றிக் கூறும் பிற இடங்கள்

௧. "கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினர் செலினே" (புறம் - ௧௧௧)

௨. "சுரும்புண,
நறவுவா யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்
பறம்பிற் கோமான் பாரியும் (சிறுபாண்-அஎ - ௯௧)

௩. "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையுந்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்" (பழமொழி - ௩௬௧)

௪. "கொடுக்கிலா தானைப் பாரியே என்று கூறினுங்
கொடுப்பாரில்லை" (சுந்தரர் தேவாரம்)

---

வ. சு.

## தமிழ்ப்பல்கலைக் கழகம்

### [தமிழ் நலம் விழைவோன்]

(முன் ௨௯௮ - ம் பக்கத் தொடர்ச்சி)

தமிழ் நூல்களிற் புலாலுண்ணாமையை வற்புறுத்திக் கூறியிருப்பதன் காரண மென்னவென்று ஒருவர் ஆராய்ந்து சொல்லியிருக்கிறார். தமிழர்கள் இழிவான பழக்க முடையவர்கள் என்பது இவருடைய கொள்கை. தமிழில் தாம் அறிந்தவற்றைத் தொகுத்து Tamil Studies என்று இவர் இயற்றிய நூலில்; புலாலுண்ணாமையைத் தமிழ்ப்புலவர் இடித்துக் கூறியிருப்பதற்கு இவர் காரணங் காட்டுகிறார். அஃதென்னை யெனின், புலாலுண்டு பல் தேய்ந்துபோன தமிழருக்கு இவ்வாறு புலாலுண்ணாமையின் சிறப்பைப் பலவாறு எடுத்துரைப்பது இயற்கை தான் என்பதே. இவருடைய கூரிய அறிவு மிக வியக்கத்தக்கது. புலாலுண்டு ஆரியப் பல் தேய்ந்ததா, தமிழ்ப் பல் தேய்ந்ததா என்பது இருக்கு முதலிய வேதங்களையும் மனு முதலியோரியற்றிய ஸ்மிருதிகளையும் படிப்போருக்குத் தெற்றெனத் தெரியும். முழுப்பூசினிக் காயைச் சோற்றில் மறைக்க முயல்வதற்கு இதைவிடப் பொருத்தமான உதாரணங் கிடைத்தலரிது. பாம்புக்குப் பல்லிலும், தேளுக்கு வாலிலும் நஞ்சுண்டு; ஆனால் தமிழைப்

பேசித் தமிழை இகழும் வகுப்பினருக்கு உடலெல்லாம் நஞ்சு பரவி யிருக்கிறது. பாம்பு கடித்தவனுக்கு மிளகாய்க்காரம் தோன்றாதது போல், ஆரிய விஷமேறிய சில தமிழருக்குப் பார்ப்பனச் சூழ்ச்சியின் கொடுமை விளங்கவில்லை. புலாலுண்டு தமிழ்ப் பல் தேய்ந்ததாம்; விரி வின்மையால் தமிழ்ப் பல்கலைக் கழகம் தேய்ந்து போகுமாம். குறுக்க மான தமிழ் மொழிக்கு ஒரு பல்கலைக் கழகம் வேண்டியதில்லையாம்.

இது வரையில் தமிழுக்கும் தமிழருக்கும் நேர்ந்திருக்கும் இடை யூறுகளை ஊன்றி நோக்கினால் தமிழ் என்று ஒரு மொழி இந்நாள்வரை உலகிலிருப்பது ஒரு விந்தை யென்றே சொல்ல வேண்டும். கடலே, கடலே, நீ எங்களுக்குச் செய்த தீங்கு பெரிது, பெரிது. தலைச் சங் கத்து நூல்களை நீ உன் வயிற்றிலடக்கிக் கொண்டு ஏப்பமிட்டாய்; இடைச் சங்கத்து நூல்களையும் விழுங்கி விட்டாய்; அந்நூல்களைக் கற் றுணர்ந்த பெரியார் பலரையு முண்டுவிட்டாய். எத்தனை முறை, சென் னைக் கரையில் நின்று, உன் வயிற்றைக் கிழித்துக்கொண்டு உள்ளே சென்று பார்க்கும் வல்லமை எனக்கிருந்தால் இனிதாயிருக்குமென்று ஏங்கியுளேன்? ஒன்று மறியாதவர்போல் நீ ஓலமிடுகின்றனை. நீ செய்த தீங்கு ஒருபுறமிருக்க, சிலப்பதிகார வுரையில் கண்ட இசை நூல் நாடக நூல் முதலியவை போனவிட.மெங்கே? இவற்றை யழித்த பாதகர் யார்? காவிரிப்பூம்பட்டின மழிந்தபோது அஃதுடன் எத்தனை அரிய நூல் களும் பொருட்களு மொழிந்தனவோ? வேற்று நாட்டார் படை யெடுத்து வந்ததால் மாண்டன எத்தனையோ? அரிய நூல்களை வைத் திருந்து அவற்றின் பெருமையறியாமல் அவற்றைச் செல்லுக்கிரையாக் கின முழுமக்களுமிருந்தனரே. ஐயோ, தமிழன்னையே, உன்னை நினைக் தால் உளம் உருகுகின்றது. இப்பொழுது ஆற்றலிழந்து, அறிவு குன்றிய யாங்கள் ஒரு பல்கலைக் கழகம் உன் பெயரால் நிறுவமுயன்றால் அதற் கும் இடையூறுகள் உண்டாகின்றன. தொடங்கு முன்னரே யதை யழித்துவிட வேண்டுமென்று சூழ்ச்சிகள் பல நடக்கின்றன.

(தொடரும்)

---

# தத்துவ ரத்தினகரம்

[திரு. S. அனவரதவிநாயகம் பிள்ளை யவர்கள் M. A., L. T.]

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் அருளிய வைராக்கிய தீபவுரை யில் வரும் உதாரணச் செய்யுள்களுள் ஒன்று தத்துவ ரத்தினகரத்தில் உள்ளதாகக் காட்டப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:

வாக்கொடு மனமுமிறந்ததி மதுரவாரியா யொழிவற நிறைந்து
போக்கொடு வரவதின்றிய வமுதைப் பூரணமாகவுண் டவர்தாம்
வீக்கிய கானனீரெனும் விடயமேவுற முயல்வரோ முயலி
னேக்குற மந்தஞானியு நாயுமொத்திடும் வாசியொன் றிலதே.

எனவே இந்நூல் சிறந்த சாத்திரங்களுள் ஒன்றாக மதிக்கப்பட்டிருந்ததென்பதற் கையமில்லை: ஆயினும் சிதம்பர சுவாமிகள் காட்டிய வேறு பல சாத்திரங்களைப் போலவே இதுவும் வழக்கற்று மறைந்தது.

திருநெல்வேலியைச் சார்ந்த தச்சநல்லூரிலிருந்து சின்னாள் முன்னர்க் காலஞ்சென்ற பெயர் விழையாராகிய சொர்ணம் பிள்ளையவர்கள் இப்பெயர் கொண்ட நூலைச் சில ஆண்டுகட்குமுன் எனது பார்வைக்கு அனுப்பியிருந்தனர். பல காரணங்களால் அஃது அவர்களிடத்து மீண்டு மடைந்து, பின்னர் அவர்களுடைய மற்றச் சுவடிகளோடு திருவாளர் கா. நமச்சிவாய முதலியாரவர்கள் பால் வந்தது. அது தெரிந்து முதலியாரவர்களைக் கேட்டு நூலினை வாங்கி அதனை எவ்வகையானுவது பயன்படுத்த முடியுமா என்று ஆராய்ந்து பார்த்தேன். ஏட்டுப்பிரதி யொன்றும் அதனைப்பார்த்து எழுதிய காகிதப்பிரதி யொன்றும் ஆக இரண்டு பிரதிகள் உள்ளன. ஏட்டுப்பிரதி எழுதி முடித்த காலம் 876-ம் ஆண்டென்று குறிக்கப்பட்டுளது. பிரதி திருநெல்வேலியையடுத்த ஊரொன்றிற் செய்யப்பட்டதென்று கொண்டு ஆண்டைக் கொல்லமாண்டென்று வைத்து நோக்கினால் ஏட்டுப் பிரதியின் காலம் கி. பி. 1701 ஆகலா மென்று தோன்றுகிறது. எழுத்துக்கள் சுத்தமாயிருக்கின்றன. ஆயினும் பாட்டுக்கள் மிகச் சிதைந்திருக்கின்றன. நூலில் 1043 செய்யுள்கள் காணப்படுமாயினும் இடையில் பன்னிரண்டு இதழ்கள் இல்லையாதலால் 851-ஞ்செய்யுள் முதல் 890 ம் செய்யுள் வரை காணப்படவில்லை. நான் ஆராய்ந்தவரை மேற்காட்டிய உதாரணச் செய்யுள் நூலில் இல்லை. அது மறைந்த செய்யுள்களுள் ஒன்றாயிருத்தல் கூடும். அன்றி, இப்பெயர் கொண்ட வேறு நூலைச் சார்ந்ததாயிருத்தலுங் கூடும்.

நூல் செய்தார் கோகழியடிகள் என்னும் மறைஞான தேசிகர் என்றெழுதப்பட்டுளது. காப்புச் செய்யுளாகத் திருமந்திர மாலைக் காப்பாகிய "ஐந்துகரத்தனை" என்பதே காணப்படுகின்றது. நூற்போக்கைக் கவனித்தால் ஆசிரியர் திருமூலதேவர் பரம்பரையோடு சம்பந்த முடையவரென்பது விளங்கும்.

நூலுள் திரிபதார்த்த இலக்கணங்களும், சமயபேத சங்கற்ப நிறை கரணங்களும், அவத்தை பேதங்களும், யோக பேதங்களும், சித்திபேதங்களும், ஞானத்தின் வகைகளும், முத்தி நிலைகளும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

வேறு பிரதிகள் அகப்படுமாயின் இந்நூல் ஆராய்ந்து வெளியிடத்தக்க சிறந்த நூல் என்று உறுதியாக உரைக்கலாம்.

---

# செய்யுளியற்றல்

[திரு.: சாமிகாந்த னவர்கள்]

செய்யுள் இயற்றல் எத்துணையளவில் சிறந்ததும் பயன் தருவது மாகும் என்பதைச் சிறிது கவனிப்பதே இத்தலைப்பின் நோக்கமாகக் கொள்ளப்பட்டது:

செய்யுளியற்றலும், சங்கீதப் பயிற்சியும், சித்திரம் வரைவதும் ஓராற்றல், பிறவி தொட்டே ஒருவர்க்கு ஏற்படும் பிறப்புரிமைச் செல்வங்களாகும். ஆயினும், அவை ஒருவனுக்கு இளமையிலேயே முதிர்ந்து கனிந்து பழுத்துத் தேன்பிலிற்றும் தன்மை வாய்ந்தன அன்று. அஃது அருட்புலமையாளர்க்குக்கூடும். இங்கு நம்போன்றோர் நிலையே கருத நின்றது. பொருட்பித்து மேலிடுங்காறும் நாம் அருட் செல்வத்திற்கு வெகு தூரத்திலிருப்பவர்களே யாவோம். எனவே, அருட் புலமை நமக்கு வாய்ப்பதென்பது சற்று யோசிக்க வேண்டிய விஷயம். அது கிடக்க.

எனக்கு இளமை தொட்டே செய்யுள் இயற்றுவதில் பெரும் பித்து உண்டு. எனது சொந்த இளம்பருவப் பாக்களால், என்னைச் சூழ்ந்துள்ள அத்துணைப் பேரையும், அரை நொடியில், பிரமிக்கும்படி செய்து விடுவேன். இந்த ஒரு சொக்குப்பொடி எனக்கு அப்போதே எங்கிருந்தோ கிடைத்து விட்டது! ஒவ்வொரு சமயத்தில் நானே அச்சொக்குப் பொடியால் மயங்கிப் போனதும் உண்டு.

சென்னையிலுள்ள தக்கவரான ஒருவர் "ஐயா, தங்கள் கவிகள் கம்பனை நினைவூட்டுகின்றன" என்று எழுதுகிறார். மற்றும் ஒருவர்: "கம்பன் கவி கம்பஞ்சோறாயின், இவர் கவி நெல்லஞ்சோறு" என்று பாராட்டிப் பேசுகின்றார். எனின் எனது புலமை குறித்த பெருமைக்குச் சான்று வேறு என்ன வேண்டும்? அந்நிலையில் யானெழுதிய செய்யுட்டொகுதிகள் பலவுள. அவை எனது ஒன்பதாம் பருவந் தொடங்கிப் பதினாறும் வயது வரையில் உருப்பெற்றவை.

அவ்வெனது இளம் பாடல்களை மெச்சிச் சிறப்புப்பாயிர மளித்தவர்கள் பலப்பலர். பலர் எனின், சாமானியரல்லர்; யாழ்ப்பாணத்து நல்லூர் மஹா வித்துவான்கள் முதல் மதுரைச் சங்கப்பாவல ரீறாகவுள்ள பெருஞ் சிரோன்மணிகளே யாவர். அவர்கள் அளித்த சிறப்புக் கவிகளைவிட எனது கவிகளே எனக்கு இனிமை தருவனவாயிருந்தன. அவர்கள் பாராட்டியிருப்பது மங்கனமே.

அவ்வாறு எனது இளமையில் செய்யுட்பித்து மேலிட்டலைந்து என்னையே நான் மகிழ்ந்துவந்த தன்றிப் பெரியார் செய்யுட்களிலோ நூற்களிலோ சிறிதும் மனந்திரும்பினேனில்லை. திரும்பினும் அவர்கள் பாட்டுக்களினும் மேம்பட வரைதலின் முயன்றுழல்வேன். அதனால், அவர்களின் தெய்வவளம் கெழுமிய அருட் கவி யமுதம்பருகி அப்

போதே பக்குவமடையாமல் இது போழ்தே அவற்றைக் காணநேர்ந்த-இதுகாறும் காலத்தை விணக்கிக் கழித்த-அதிர்ஷ்டவானனேன். அவ் விளமையிலேயே எனக்கறிவுறுத்திய சிலரை இங்கு நான் நினைவு கூர் கின்றேன். ஆயினும், அவர்கள் தடுத்து மடக்கியதன் நோக்கம் இங்கு நான்காணும் உண்மைக்கு ஒத்ததாயிருந்திருப்பின், இன்றைய எனது பெருநன்றி-மனமார்ந்த வணக்கம் - அவர்கட்கு முற்றிலும் உரியதாகும். அஃதங்ஙனமாக.

எனது சுயப்புலமையிலிருந்து, ஏதோ நற்காலப் பயனுல், மெல்ல நழுவி, அருணசலப் புராணத்தைப் பிடித்துக் கொண்டேன். பிறகு, அதிவீர ராமபாண்டியனருளிய நைடதம் எனது புலமைக்கு ஒளடதமா மருந்தது. அது காலே எனது இளங்காளைப் பருவமும் வந்து ஒத்துக் கொண்டதெனின், விஷய ஞானத்திற்கும் புலமை (புலவி) நுணுக்கத் திற்கும் ஆசானொருவன் வேண்டுமேயோ? அந்நிலையிற் சின்னுள் கழிந் தே. கம்ப ராமாயணம் அதற்கு மேலதாகச் சுவைதர முந்திற்று! மேலே, சிந்தாமணி எனும் ஒரு நூலின் அருமையினைப் பெரியா ரொரு வரின் பிரசங்க வாயிலாகவுணர்ந்து அதனிற்பற்று மீதூரலானேன். உரை கலந்திராவிடின் அவ்வரிய தமிழ்ச் செய்யுட்போக்கு இளங்காளைப் புலமையிற் சிறந்த எனக்குப் பேரிருட்குகையாகவேதா னிருந்திருக்கும். அதன் முழு அழகினை-முழுச்சுவையினை-இன்னும் நுகர்ந்து கொண்டே னில்லை. அஃதொருபுறம் நிற்க.

சற்று அதற்குப் பக்கத்தே பார்க்கும் பொழுது - என்னவோ, சங்க இலக்கியங்களாம். அம்மம்மா! அவை நிச்சயமாய் நானறிந்த தமிழ்ப்பாஷை அல்லவே அல்ல. வேறு பாஷையினைத் தமிழெழுத்தில் எழுதியுள்ளார்கள் என்று கண்டேன்! பிறகு அவற்றுட் பழகப்பழக அந்நூற் ஞெருகுதிக்க முன்னர் நானறிந்தவைதாம் தமிழல்லவாயின என்ற துணிவு எழும்பிற்று. சொற்செட்டும், பொருட் செட்டும், இயற்கையுண்மைப் பொலிவும், பழந்தமிழுலகின் நிலையும் ஆற்றலும் இன்னோரன்ன பிறவும் கண்முன் கண்ணுடியென இவற்றுள்தான் கண் டேன் கண்டேன் என்று, தமிழ் நிலையின் உச்சிச் சிகரத்தின் மீதேறி அப்புறம் ஓரெல்லையுமில்லாத தமிழ்ப் பெரும் பதவி கண்டு விட்டவ னென இறுமாந்தேன். அந்தோ! அம் மனக்கோட்டையும் இன்றோடே இடிந்து போயிற்று! (தொடரும்)

---

# சரசுவதி தோத்திரம்

[ஆற்றூர். திரு. ஆ. தி. இராமலிங்கம் பிள்ளையவர்கள்]

நேரிசை வெண்பா.

திருமகளுங் கைகூப்பிச் சேவித்துப் பின்றொடரு
மொருமகளு நீயென்றே யோதும்—மருமகடா
னென்றூலும் வெண்கமலத் தேந்திழையே! நின்வாழ்க்கை
பொன்றூதோர் நாளுமவள் போல். ௧

நாடெல்லாஞ் செங்கோ னடாத்துபவ ரானாலும்
நீடுபுகழ் நின்றமர்க்கு நேராகார்—தோடவிழும்
வெண்டா மரையனமே! மேவலருந் தான்வியக்கக்
கண்டா வுன்சேய்க்குக் கனிந்து. ௨

வாயாரப் பாட வரமளிக்குங் கற்பகமே!
தாயே!நின் பூங்கமலச் சார்பிலே—தோயாத
வுள்ளத்தே னாகி யுனைமறந்திங் குற்றாலும்
பிள்ளையெனக் காததாள் பெரிது. ௩

பாடும் புலவோர்க்குப் பங்கமிலாப் பாக்கியமே!
நாடுமெந்த வித்தைக்கும் நாயகமே!—யா டறருஞ்
சாதனமெற் கெவ்விடமுஞ் சாதிப்பாய் வெண்கமலப்
போதமருந் தாயே! புகுந்து. ௪

பூணும் பணிதவளம்; போர்த்துகலை யங்கனமே;
பேணு மனைதவளம்; பேசுகின்றார்—மாணுறவே
ஏறுகின்ற வாகனமு மேந்திழைக்கு வெள்ளையதாற்
கூறுகின்றேன் வெண்பாக் குறித்து. ௫

முகத்திற்கண் பெற்றிருந்தும் மூடரென யாரு
நகைத்துக் கைகொட்டாதே நாடி—மிகுத்திடுமுன்
அன்போடு நின்பூசை யாற்றுகிலே னாயினுமெற்
கின்பருளிங் கம்மா! விதம். ௬

பெண்ணாய்ப் பிறந்தாலும் பேருளுன் பாற்படைத்தா
லெண்ணாரோ வாடவரி லேற்றமதாய்—மண்மேற்
பிரமன் படைப்புக்கும் பின்னமுண்டாந் தாயே!
வரகவிக் கிங்குண்டோ அவ்வாறு. ௭

கல்லுங் கரையக் கவிபாட வேண்டுமே
சொல்லும் பொருளுஞ் சுவையாக—வில்லையே
லென்செய்வே நாமகளே; இன்னருளுண், டாமாயின்
பொன்மலரு நாறும் புறம். ௮

பல்லா. யிரங்கோடி பாக்கியங்கள் பெற்றாலும்
கல்லாதார் வாழ்க்கை கடையென்பார்—சொல்லாலே
தோத்திரிக்க நாவடங்காச் சொன்மடந்தை;மின்னே!யான்
பாத்திரிக்கச் செய்வாய் பரிந்து. ௯

தண்டமிழ்ப்பா கேட்போர் தமைமறந்து மெய்புலிங்கங்
கொண்டருளச் செய்வாய் குணநிதியே!—யெண்டிசைவாழ்
பாவலரு மெச்சவே பாடவர மெற்கருளாய்
நாவலனாய்ச் செய்வாய் நலம். ௰

---

## சைவப்பெரியார் பிரிவாற்ருமை

திருநெல்வேலி ஜில்லாவிற்குத் துறைமுகமாய் விளங்கும் தூத்துக்குடி என்னுஞ் சீரிய நகரில் நாற்பத்து மூன்று ஆண்டுகட்கு முன்னர் சைவசித்தாந்த சபையொன்றை நிறுவியவரும், பல ஆண்டுகள் அச் சபையின் அமைச்சராகவும், பின்னர் உதவித் தலைவராகவும் அமர்ந்து அதனைக் கண்ணுங் கருத்துமாய்ப் போற்றி வந்தவரும், அது சைவவுலகின்கண் முதற்கண் தோன்றிப் பழமை மீக்கூர்ந்தும் இளமை குன்ருது வாழையிளங் குருத்துப் போலவும், பிறைமதி போலவும் மேன்மேலும் வளம் பெருக்கி வருகின்றதென்ற புகழ் படைத்தவரும், தாம் படைத்த தொன்று தாம் துறக்கம் புகுமளவும் நிலைபெற்றிருக்கின்றதென்ற புகழிற்றேய்ந்தின்ப மெய்தியவரும், நுண்மாண் நுழைபுலங்கொள சைவசித்தாந்தம், தமிழிலக்கியம், சரித்திரம் முதலியவற்றை யாராய்ச்சி செய்தவரும், சைவ மக்கள் உளத்திடையில் நெடுநாளாக மாற்ருராற் புகுத்தி விளைவிக்கப்பட்ட களைகளாம் மயக்க வுணர்ச்சிகளை ஆராய்ச்சி முறையான் சிக்கறுத்து அறிந்து தெளிந்து, தாங்குநரின்றியும் உளவலிமை யிழவாமல் 'வேளாண் மரபுண்மை விளக்கம்' என்னும் அருமருந்தன்ன செம்மைசான்ற நூலை எழுதி வெளியிட்டுச் சைவமக்களிற் பலர் நேர்மையான வழியை உணர்ந்துய்யுமாறு செய்த பேரறிவுப் பெருந்தகையாளரும், ஒழுக்கம், வாய்மை, அடக்கம் முதலிய நல்லியல்புகள் வாய்ந்தவரும், சிவனன்பு அடியாரன்பு முதலியவற்றில் திளைத்தவரும், இன்னோரன்ன சிறப்புக்களான் 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்ற திருவள்ளுவர் அருண்மொழிக் கிலக்காகியவருமாகிய உயர்சைவத் திருவாளர் தே. ச. சு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் நிகழ் மெய்கண்டான் யாண்டு 704, வைகாசித் திங்கள் 26-ஆம் நாள் (8—6—27) புதன்கிழமையன்று 69-ஆம் வயதில் தமது பருவுடம்பு நீக்கி நுண்ணுடம்பில் இறைவன் திருவடி நீழல் நண்ணி யெய்தினர்கள் என்பது கேட்டு அவர்கள் பிரிவாற்ருது பெரிதும் துன்புழக்கின்ருேம். அவர்கள் குடும்பத்தவர்களுக்கு ஆறுதல் கூறுகின்ருேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



திருவாளர்
கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள்
எம். ஏ. எம். எல்., அட்வகேட்
தாகூர் சட்ட விரிவுரையாளர்.

16·8·27

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எாசு ஆடித் திங்கள்<br>1927ஞு ஜூலைமீ—ஆகஸ்டுமீ | பரல் எ |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

## ஆராய்ச்சி முறை

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.,]

(உகசு-ம் பக்கத் தொடர்ச்சி)

உரைப் பிரமாணத்தை முற்றிலும் பகுத்தறிவின்றி நம்புகின்றவர்கள் நிலை இவ்வாறிருப்ப அதனை ஆயுமுறையால் ஆய்ந்து தழுவிக் கொள்ளாமையால் வந்த இழுக்குப் பல. ஆசிரியர் திருவள்ளுவனார் "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாராநெறி" என்ற விடத்து மெய்ப்பொருளைக் காண்பதற்கு உரிய கல்வி வேண்டுமென்று குறிப்பித்தார். கல்வியென்பது நூற்படிப்பினை. ஐம்புலனாலறியத் தக்கதை அறிவது

கல்வியாகாது. ஐம்புலனாற் காணப்படாத கடவுளைக் காண்ப தற்கு ஐம்புலக்காட்சி பயன்படாது. ஆதலால் மெய்ப்பொருளை அறிந்தவர்கள் சொல்லிய உரையே மெய்ப்பொருளை அறிய விரும்புகின்றவர் கற்றற்குரியதாகும். மெய்ப்பொருளை அறிதல் யாவராலும் இயலாதெனின் மெய்ப்பொருள் உண்டென்பதும் நிலைபெறாது. உலகத்துள் ஒருவரும் அறியாத பொருளினை உண்டென்று கூறுதல் யாங்ஙனம்? ஆதலால் மெய்ப்பொருளொன்றிருக்குமாயின் அஃது அறியத்தக்கதாகவே இருத்தல்வேண்டும். அறிவில்லாத பொருள்கள் அறிவுள்ள பொருள்களாலே இயக்கப்படுவன. அவைதாமே இயங்குந் தன்மை யுடையனவல்ல. இதனை அனுபவத்திற் கண்டவர்கள் அறிவில் பொருட் பிண்டமாகிய இஞ்ஞாலத்தை ஒழுங்குபெற இயக்குவதற்குப் பேரறிவுப் பரம்பொருள் ஒன்று வேண்டு மென்பதனையே யூகித்தறிவர். அதனையே ஆசிரியர் திருவள்ளுவனார் சார்பென்றும் மெய்ப்பொருளென்றும் செம்பொருளென்றும் கூறினர். அப் பரம்பொருள் யாதொரு குறிக்கோளும் நோக்கமுமின்றி ஞாலத்தை இயக்காதென்பது அஃது அறிவுடைப் பொருளென்பதால் தெளியப்படும். சிற்றறிவுடைய மக்கள் பயன் கருதாது எதனையும் செய்வதில்லை. பயன் கருதாது ஒன்றைச் செய்வதும் வீணே. சிற்றறிவுடைய நாம் பயனில் தொழில் செய்யமாட்டேமாயின் பேரறிவுடைய கடவுளும் ஞாலத்தை ஓர் பயனுங் கருதாது இயக்கமாட்டா னென்பது திண்ணம். பயன் குறியாது ஒன்றைச் செய்தல் அறிவினியல்புக்கு மாறாகும். ஞாலத்தை இயக்குதல் முதல்வன் தன்பொருட்டுச் செய்கின்றானென்றால் அவன் ஞாலவசப்பட்டவனாய்த் தன் வய மிழந்தவனாவான். அறிவுடைய பொருள் அறிவில்லாத பொருளுக்கு அடிமையா மெனின் அறிவில் பொருளே அறிவுள் பொருளினுஞ் சிறந்ததாய் அதனை நடத்துவதாகும். நமது அனுபவத்தில் அறிவுடைப் பொருளே அறிவில் பொருளை இயக்க வல்லதென்பதை அறிந்துள்ளோம். ஆதலால் இது காட்சிக்கு மாறாகும். ஆதலால் பேரறிவுப் பரம்பொருள் உலகத்தைத் தன் பொருட்டு இயக்குவான் அல்லன் என்பதே தெளியப்படும். அறிவில் பொருளாகிய ஞாலத்தின் பொருட்டு அதனை இயக்குவதாற் பயனில்லை. ஆதலால் ஞாலத்துட் போந்த சிற்றறிவுடைய உயிர்களின் பொருட்டே ஞாலத்தை முதல்வன் இயக்குகின்றானென் பது பெறப்படும். உயிர் அறிவுப் பொருள். ஞாலம் சடப் பொருள். ஆதலின் உயிரின் அறிவுத் தன்மைக்கேற்ற நிலைத்த நன்மை சடத்தினால் ஏற்படாது. ஆதல் பற்றியே உயிர் சடப் பற்றை யொழித்துத் தனது இயற்கைக்கு ஒத்த பேரறிவுடைய முதல்வனை அடைய வேண்டுமென்று நூலோர் கூறுவாராயினர்.

ஞாலத்தின் வயப்படாத முதல்வனை உயிர் நாடி யடைந்தால் அதுவும் ஞாலத்தின் வசப்படா தொழியும். ஆதலால் சிற்றறி வுடைய உயிர்களை உலகப் பற்றொழித்துத் தம்பால் இழுத்து நலந் தருவதற்கே முதல்வன் ஞாலத்தை இயக்குகின்றானென்று யூகிக்கவேண்டும். உயிரின் பொருட்டு ஞாலத்தை இயக்கு மிடத்து ஞாலத்திலேயே அவ் வுயிர்க்கு நன்மை கிடைக்கு மாயின் அது பற்றினை ஒழிக்க வேண்டியதில்லை. ஞாலத்தின் பகுதியாகிய உடலோ நிலைபெறாது ஒழிகின்றது. "நில்லாதன வற்றை நிலையின வென்றுணரும், புல்லறிவாண்மை கடை" என் றதும் அது. ஆதலால் ஞாலத்தில் உயிர்க்கு நிலைத்த நன்மை யில்லை என்பதே தெளியப்படும். ஆகவே நிலைத்த நன்மையை நாடும் உயிர் முதல்வனையே யடையவேண்டு மென்பது யூகிக்கப் படும். உயிர் தன்னில்தானே நிலைத்த இன்பத்தை உடையதா மெனின் அது ஞாலத்தில் பிறந்திறந் துழன்று துன்பப்பட வேண்டியதில்லை. ஆதலால் அங்ஙனம் ஞாலவசப்படாத முதல் வன் மாட்டே நிலைத்த நன்மையை நாடிச்செல்லுதற் குரியதென் பது பெறப்படும். அதனாலேயே அம் முதல்வனைக் காண்டல் இன்றியமையாத தென்பதும் பெறப்படும். இக்கருத்துப் பற் றியே "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ், செம்பொருள் காண்பதறிவு" என்றார் திருவள்ளுவனார். முதல் வன் சிற்றுயிர்க்கு இன்பந் தருதலைத் தனது திருவுள்ளக் குறிப் பாகக் கொண்டு ஞாலத்தை நடத்துவதால் அவனும், உயிர் பற் றற்றுத் தன்னை அறியவிரும்புங் காலத்து முதற்கண் அதை அறி யக் கூடிய வடிவத்தோடு தோன்றி அதனை ஆட்கொள்வனென் பது யூகிக்கற் பாலது.

ஆட்கொள்ளப்பட்ட தமது அநுபவத்தை மொழிந்தரு ளிய நூலே மெய்ப்பொருள் காண விரும்புவார் கற்றற் குரியன. அத்தகைய நூல்கள் தேவார திருவாசகம் திருமூலர் திருமந்திர மென்பது அந்நூலை வாசிப்பார்க்கு இனிது விளங்கும். அவை போன்ற நூல்களையே ஆசிரியர் திருவள்ளுவனாரும் ஈண்டுக் கற்று மெய்ப்பொருள் காணவேண்டு மென்று குறிப்பிட்டார். இந் நூல்களை வாசிக்கப் புகுவோர் மேற்காட்டிய காரணங்க ளால் கடவுள் ஒருவர் உண்டென்பதையும் அவர் பக்குவப்பட்ட உயிர்கட்கு அவர் நினைத்த வடிவோடு தோன்றி யருளுவரென் பதையும் தமது கொள்கையாகக் கைக்கொள்ள வேண்டும். எந் நூலினையும் அதனைக் கற்றற்குரிய மன நிலையில்லாதார் கற்கப் புகின் அவர்க்கு அந் நூலின்கணுள்ள வெறுப்புக் காரணமாக உண்மை தோன்றா தொழியும். ஒரு நூலினைக் கற்கப்புகுவார் அதன்கண் உவப்பும் வெறுப்பு மில்லா திருத்தல் வேண்டுமென்

பது முன்னே கூறப்பட்டது. காட்சியினு லறியக்கூடாததை நூலினுல் அறியப் புகுங்கால் அளவுக்கதிகமாக ஐயங்திரிபுகளைப் பெருக்கிக் கொள்ளுதல் உண்மையறியா விதத்தை நாடிக் கொள்ளுதலாகும். திருஞானசம்பந்தர் தேவாரம் என்று கூறிய அளவில் இது திருஞான சம்பந்தர் செய்ததோ வேறொருவர் செய்து வைத்ததோ என்றவோர் ஐயத்தைக் கிளப்புதல் வீண் முயற்சியாகும். ஒரு நூலை ஒரு ஆசிரியர் செய்திருத்தல் வேண்டும். அந்நூல் அவ்வாசிரியர் பெயரால் வழங்குதல் இயல்பு. அங்ஙனம் இயற்கையா யுள்ளவற்றைப் பற்றிக் காரணமின்றித் தடை யெழுப்புதலால் போந்த பயன் யாதுமில்லை. திருவள்ளுவர் செய்த நூலை திருவள்ளுவருடைய 'தன்றென்ற கொள்கைக் குப் போதிய ஆதாரங்கிடைத்த பின்னரே அந்நூலை அவர் செய்தாரோ செய்திலரோ என்ற ஐயப்பாடு எழற்பாலது. ஒரு கொள்கைக்கு மாறுபட்ட கொள்கை நிலவாத விடத்து ஐய மெழுப்புதல் காரணமின்றிச் செய்யும் வினையாகும். அங்ஙனம் ஐயமெழுப்பின் ஒரு நூலையும் அதனைச் செய்ததாகக் கூறப்படும் ஆசிரியர் இயற்றினுரென்று துணிய இடமில்லாது போம். போகவே அதனைப்பற்றிய உண்மை யெதுவும் அறியப்படா தொழியும். ஆதலால் காரணமின்றி ஐயமெழுப்புதல் உண்மை யாராய்ச்சிக்கு ஓர் தடையாகும். அங்ஙனம் ஐயமெழுப்புவது ஆராய்ச்சிமுறை யறியாதார் மரபாமென்க. ஆதலினுல் திருஞான சம்பந்தர் தேவாரம் என்ற விடத்து அந்நூலை அவ்வாசிரியர் இயற்றினுரென்பதை மறுத்தல் கூடாது.

இனித் திருஞானசம்பந்தரது தேவாரத்தை யாராய்கின்றவன் அந் நூல்வாயிலாகவாதல் அவர் சரித்திரவாயிலாகவாதல் அவர் பெருந்தகையாரென்பதைத் தெரிந்து கொள்ளாத விடத்து அந் நூலாராய்ச்சியால் பயனில்லை. அவர் பெருந்தகையரல்லரென்றுவது அவர் நூலாலும் சரித்திரத்தாலும் தர்க்கமுறைக்கு மாறின்றி முடிவு கட்ட இயலாதவர்கள் அந்நூலைப் பழிப்பது பெருந்தவறுகும். தர்க்க நூலாசிரியர்கள் தந்நூலுட் கூறுவதை ஆராய்ச்சிவல்லார் அகச்சான்றெனப் பெரிதும் போற்றுவர். கடவுளைத் திருஞானசம்பந்தர் 'தமதுள் ளங்கவர் கள்வனெனவும்' 'போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத், தாதையார் முனிவுறத் தானெனையாண்டவ' னென்றும் அருளிச் செய்திருப்பதால் சிவபெருமான் அவரை நேரே ஆட்கொண்டனரென்பது அவரது அமுத வாக்கினுலே பெறப்படுகின்றது. மதுரையிலே சமணர்கள் அவரை எதிர்த்த காலை மங்கையர்க்கரசியாருக்கு உறுதி யளித்தற்பொருட்டு அருளிய திருப்பதிகத்தில் 'மானினேர்விழி மாதராய் வழுதிக்கு மா

பெருந் தேவிகேள், பானல்வாயொரு பாலனீங்கிவ னென்றுநீ பரிவெய்திடேல்' என்றமையால் அப்பொழுது அவர் பாலராயிருந் தாரென்று தெரிகிறது. சமணரோடு வாது செய்தற்கு நெடுநாட் கட்கு முன்னரே அவர் திருவருள் பெற்றமையால் மூவாண் டிலே அவர் திருவருள் பெற்றாரென்று நம்புதற்கு இடமுண்டு. கடவுள் உயிர்கட்கு அருள் புரிதற்கு வயதெல்லே வேண்டு மென் பதில்லை. எந்த ஆண்டிலும் பக்குவம் அடைதல் கூடும். மிக இளஞ்சிறாரிடம் உயர்ந்த கணக்கு நூற்புலமையைக் காணு மிடத்து அது முன்னைப் பிறப்பின் முயற்சி வன்மையென்று கொள்வதுபோல முன்னைத்தவத்தால் இளமையிலேயே திரு வருள் எய்தும் பான்மை அமைதல்கூடும். ஆகவே திருஞான சம்பந்தருடைய அகச்சான்றினுற் போந்த சரித்திரத்தை நம்பு வதற்குப் போதிய காரணங்களுள்ளன. கடவுள் உயிர்க்குத் தோன்றி அருள் செய்வார் என்னுங் கொள்கையுடையாரே அதனை நம்பாதிருக்கலாம். கடவுள் உயிர்க்குத்தோன்றி அருள் செய்வது இன்றியமையாதென மேலே விளக்கினுமாகலின் அதனைத் தக்கவாறு மறுப்பவர்களே இச்சரித்திரத்தை நம்ப இடமில்லையென்று நாட்டுதற்கும் உரியராவர். அதனைக் கரு தாதவிடத்துத் திருஞானசம்பந்தர் சரித்திரத்தை ஆராய்கின்ற வர் அவர் திருவருள் பெற்றதை நம்பாதிருத்தற்கு வேறு கார ணங் காட்டமுடியாது.

இனித் திருஞானசம்பந்தர் பெரியராயிருந்தாலும் அவர் தோத்திரத்துட் போந்த கதைகள் நம்பத்தக்கனவல்ல என் பாருமுளர். கதைகளால் நிலை நாட்டப்படும் உண்மைகள் உயிர்க்குறுதி பயப்பனவென்றால் அக்கதைகளையும் அறவே ஒதுக்கவேண்டியதில்லை. கடவுள் நன்மை செய்வார்க்குப் பெரு நலமும் தீயவர்க்குத் தண்டனையும் விதிப்பதாகக்கூறுங் கதை களுள்ளும் குற்றம் செய்யினும் அடைக்கலம் புகுந்தாரை ஆட் கொள்ளும் பேரருளாளர் கடவுள் என்பதை வற்புறுத்துங் கதை களுள்ளும் உயர்வு நவிற்சியின்பாற்படும் பகுதிகளை யொழித்து ஏனையவற்றைக் கைக்கொள்ளுதல் தவறாகாது. பா நயங்கள் மிக்க தோத்திரவாயிலாகத் திருஞானசம்பந்தர் உண்மைபோதித் தலின் பா நயங்கட்குத் தக்கவாறு கூறப்பட்ட பகுதிகளை அத் தன்மையனவாகவே கொள்ள வேண்டும். வானளாவிய சோலை யென்றால் ஆகாயத்தைத்தொடுகின்ற பொழில் என்று பொருள் கொள்ளுதல் தவறு. மிகவும் உயர்ந்த சோலை யென்பதே அச் சொற்றொடரின் பொருளாகும். பிறவும் அன்ன. இலங்கை மன்னன் கதையினை நோக்குங்கால் குற்றஞ்செய்ததற்காக மிக வும் பெருந்துயரம் எய்திப் பின்பு மனந்திருந்தி உள்ளன்பு

செலுத்தியதன் காரணமாக அவன் உய்தி பெற்றானென்றறிகின்றோம். ஆதலால் குற்றஞ் செய்தவர்க்குத் தண்டனை உண்டென்பதும் கடவுள் பேரருளாளராதலால் அத்தண்டனையி னின்றும் உய்தி பெறலாமென்பதும் அறியக்கிடக்கின்றன. ஆதலால் திருஞானசம்பந்தர் பெருங்குற்றஞ் செய்தவர்கள் வருத்தமின்றி உய்யலாமென்று குறிக்கவில்லை. அங்ஙனம் குறிக்கும் புராணக் கதைகள் போல அவர் மொழிந்தருளியவற்றைக் கொள்ளுதல் தவறாகும்.

திருநீறு உருத்திராக்கம் திருவைந்தெழுத்து முதலியன கடவுள் வழிபாட்டுக்கும், சமய உண்மையினை நினைவு கூர்தற்கும் சிறந்த சாதனங்களாகப் பெரியோர் கைக்கொண்டமையால் அவற்றை அவ்வாறு பயன்படுத்த வேண்டுமென்பதையே தமது வாழ்க்கையாலும் சொல்லாலும் நமது பரமாசாரியர் வற்புறுத்தியுள்ளார். அங்ஙனமவற்றைப் பயன் படுத்தாது வெளி வேடத்தின் பொருட்டு அவற்றைக் கைப்பற்றுகின்றவர் அரச தண்டனைக்கு உரியார் என்று திருமூலமா முனிவர் முதலியோர் அறுதி யிட்டுரைத்தனர். (1661—1665) இவ்வுண்மை யுணராது சாதனைங்களைத் தாங்கிய அளவிலே வீடு பெறலாமென்று நமது பரமாசாரியர்கள் செப்பியதாகக் கொள்ளுதல் தவறாகும். இவ்வாறே வேதம் முதலிய நூல்களைப் பற்றியும் வேள்விகளைப் பற்றியும் திருஞான சம்பந்தர் இயம்பி யருளியவற்றை இனி தாராய்ந்து உண்மைப் பொருளைக் கடைப்பிடித்தல் வேண்டும். அவர் அருள்நூலை இனிதாராய்ச்சி செய்யாது புராணக்கதை கட்டுவாரும் அவ நம்பிக்கை விளைப்பாரும் ஆராய்ச்சிக் குறைவுடையாரென்றே மதிக்கப்படுதற் குரியர்.

இனி திருஞான சம்பந்தர் முதலிய சைவசமயாசாரியர் தமது புகழ் நாட்டுதற் பொருட்டு அற்புதங்கள் யாதும் செய்திற்றிலர். பெருங்கருணையானே பிறவுயிர்கட்குப் பேருதவி செய்யக்கருதிய காலை அவர்கள் கருதிய வண்ணமே கடவுளுடைய திருவருள் அவர்கட்குத் துணை நின்று அற்புதங்களை நிகழ்த்தியது. அற்புதங்களை இயற்கை விரோதம் என்பார் ஒடுங்கிய ஆராய்ச்சியையுடையராவர். உலகத்தையும் உயிர்களையும் ஆண்டருளும் முதல்வனது திருவருளினாலே நிகழக்கூடாத செய்தியாதுளது? பேரன்பினால் வழிபடும் அறிஞர்க்கு அவர்கள் வேண்டியவாறே கடவுள் வேண்டியதை ஈவர். உடலில் உயிர் நிற்பதும் அதனை நீத்துப் பிறிதோரிடத்திற்குச் செல்வதும் அங்கு நின்று மீள்வதும் இறைவனது கட்டளைப்படியேயாமென்று கருதுவோர் சென்ற உயிரை அவனது திருவருளால் மீட்பித்தல் முடியாத காரியமென்று கொள்ளமாட்டார்.

பேரன்பில்லாதவர்க்கு அவர்கள் விரும்பிய வண்ணம் இறைவன் அருள்செய்யாத காரணத்தின் வைத்துப் பேரன்பரது திருவருட் பேற்றினை மறுத்தல் தவறாகும். "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகில் அளவில்லை" என்ற வண்ணம் அவரவர் அன்பிற்குத் தக்கவாறே இறைவர் வெளிப்பட்டருள் செய்வார். பல மக்கட்குத் தந்தையாகிய ஒருவர் தம் மக்கள் எல்லாரிடத்தும் ஒத்த கருணையை யுடையாரெனினும் அவரவர் வயதிற்கும் அறிவிற்கும் ஆற்றலுக்கும் ஏற்ப அவர்கட்கு வேண்டியவற்றை உதவுதல் போல இறைவனும் எல்லாவுயிர்களிடத்தும் ஒத்த கருணை யுடையவராயினும் பக்குவத்திற் கேற்றவாறு வெவ்வேறு உயிர்கட்கு வெவ்வேறு முறையாக அருள் செய்வர். உலகத்திலேயே செல்வம் ஆயுள் உடல்வலி முதலியன வெவ்வேறு விதமாக அளிக்கப்பட்டுள்ளன. இவ்வுண்மையுணராது திருஞான சம்பந்தர்க்கு நேர் நின்றருளின கடவுள் நமக்கும் அவ்வாறே அருள் செய்ய வேண்டுமென்று கூறுதல் நுணுகி ஆராய்வார் கூற்றன்றாம் என்க. இயற்கைச் சட்டங்கள் அனைத்தையும் தாம் அறிந்து விட்டதாக எண்ணி அச்சட்டங்கட்கு மாறாக அற்புதம் நிகழ முடியாதென்று கூறுதல் ஆராய்ச்சிக் குறையால் எழுவதே. தீ எந்த இடத்திலிருந்தாலும் புகைவேண்டுமென்றால் மின்சார விளக்குப் புகையாமை கண்டு அவ்வொளி தீயின் ஒளியன்றென்று கொள்ளுதல் எவ்வாறு தவறிய கொள்கையாகுமோ அவ்வாறே இறந்த உயிர் மீள்வதில்லையென்ற அநுபவத்தைக் கைப்பற்றிக் கடவுள் திருவருளாலும் இறந்த உயிரை மீட்பித்தல் கூடாதென்று கூறுதல் பிழைபட்ட கூற்றாகும். இக்காரணங்களால் திருஞான சம்பந்தர் முதலியோர் அற்புதங்கள் இயற்றவில்லையென்று பகர்தலும் ஆராய்ச்சிக்குறையேயாகும்.

இவ்வாறே அவர் சரித்திர ஆராய்ச்சியாலெழும் தடைகட்கெல்லாம் விடைதேடிக்கொள்ள முயலாது சரித்திரத்தை வாசித்த அளவிலேயே தமக்குத் தவறென்று தோன்றுவதை உண்மைத் தவறென்றே கொள்ளுதல் ஆராய்ச்சி முறையன்றாம். தற்காலத்திலே ஆராய்ச்சி யென்ற பெயரால் பலர் தத்தமக்குக் குற்றமாகத் தோன்றுவதை யெல்லாம் உண்மையாகக் குற்றமென்றே சாதிக்க முயலுகின்றனர். உள்ளத்தெளிவோடு நுணுகி ஆராயும் முறையானது நாளடைவில் வளர்ந்தோங்குமாயின் இவ்வாராய்ச்சிக் குற்றங்கள் இலவாகி யொழியும். ஆராய்ச்சிக் குறையினால் ஏற்படும் சமயப் பழிப்பும் பெரியாரைப் பிழைத்தலும் ஆராய்ச்சி யின்மையால் வரும் மூட நம்பிக்கையும் சரித்திரக் கண்ணின்றித் தவறாகக் கொள்ளப்படும் பொருள் கோண்

முறையும் மெய்ம்மையான நடுநிலை பற்றிய நுணுக்க ஆராய்ச்சி தலையெடுத்து வளர வளர அறவே ஒழிந்து மெய்ம்மையான நடுவுநிலைபற்றிய உண்மையான ஆராய்ச்சி நிலைபெறுமாயின் நாம் நம்முடைய சமய நூற்பயனைச் செவ்விதிற் பெறுதல் கூடும்.

---

# பரதர்

[திரு. மு. நல்லதம்பி அவர்கள்]

செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு ௫, பரல் ௧, பக்கம் முப்பதில் செந்தமிழ்ப்புலமை வாய்ந்த திருவாளர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை அவர்கள் B. A., L. T. பரதர் என்னும் பொருள் கொண்டு, தம் நுணுகிய ஆராய்ச்சியால் தமிழுலகிற்குச் சில வற்றை உரைத்துப் போந்தார்கள். அவர்கள் நடுவுநிலைமை குன் றாது உலகத்து மக்கட் கூட்டத்தின் வரலாறுகளை யெடுத்து விரித்துரைக்கும் ஒள்ளிய புலவரைப்போன் றுரைக்கின்றார் களோ வென்பதை, அவர்கடங் கட்டுரையாற் கண்டறிவான் இதனை எழுதப் புகுந்தனம்.

திரு. மு. சி. பூ. புலவரவர்கள், நிகண்டுகளில் பரதர் என் றொரு சொல் நெய்தனிலத்தவர் பெயர்களி லொன்றாகத் தரப் படவில்லை; செட்டிகளைக் குறிக்கின்றது; அதனால் பரதர் நெய்த னிலத்தவராகார் என்பன முதலிய கூற்றுக்களை விரித்துரையா நின்றார்கள். அவர்கள் தங் கூற்றிற்கு உறுதுணையாக, மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் என்னும் நூல்களிற் சில அடிகளை எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

சங்க காலத்துச் சான்றோர் நூல்களினும், பிறநூல்களி னும், நல்லறிஞர் ஆராய்ச்சிகளினும் பரதர் என்னுஞ் சொல் நெய்தனிலத்தவரையுங் குறித்திருத்தலை இவர் காணாராய், அது செட்டிகளைமட்டுமே குறிக்குமென இரண்டோ ரெடுத்துக் காட்டுக்களால் நிலைநாட்ட வந்தது, பெரிதும் இறும்பூதைத் தந்து நிற்கின்றது.

பரதர் என்னுஞ்சொல் நெய்தனிலத்தாரைத் தெளிவாகக் குறிக்குமிடங்கள்:—

(க) இறையனாரகப்பொருள் நக்கீரனாருரை. நெய்தற் கருப்பொருள்; "மக்கள் பெயர் பரதர் பரத்தியர் நுளையர் நுளைச்சியர்". (உ௫-ம் பக். ப. பி. பதிப்பு)

(௨) சிலப்பதிகாரம் (இரண்டாம்பதிப்பு)

(அ) கானல்வரி, ௩அ-ம் பாடல் (பக்கம் ௨௧௬)

"வாரித்தரள நகைசெய்து வண்செம் பவள வாய்மலர்ந்து
சேரிப்பரதர் வலைமுன்றிற் றிரையுலாவு கடற் சேர்ப்ப
மாரிப்பீரத் தலர்வண்ண மடவாள் கொள்ளக் கடவுள்வரைந்
தாரிக் கொடுமை செய்தாரென் றன்னையறியி னென்செய்கோ"

(ஆ) மனையறம்படுத்தகாதை அடிகள், ௧-எ. (பக். ௬௨)

௧. உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்
..........................................

எ. கலத்தினுங் காலினுந் தருவன ரீட்ட"

(இதனுரையில் பரதர் என்பதற்கு அரும்பதவுரை யாசிரியர் "கடலோடிகள்" என்றும், அடியார்க்கு நல்லார், பாத ரென்றே கூறிக் குறிப்பானே வணிகரென்றுங் குறித்துப் போந்தனர்.)

அரும்பதவுரையாசிரியர் உரை:—(எ) கலத்தினுங் காலினுந் தருவனரீட்டுதலால் (௫) விருந்திற்றே எம் (௬) ஒருங்கு தொக்கன்னபண்டம் (௪) வழங்கத்தவா அப் பெருக்கத்ததாகி (௧) அரசுவிழை திருவினையுடைய (௩) கடலோடிகள் மலிந்த நகர்"

(இ) கானல்வரி, ௨௬-ம் பாடல். (பக். ௨௧௩)

"மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார் செங்கை
யிறைவளைக ளூற்றவதை யேழைய மெங்ஙனம்யாங் கறிகோ மைய
நிறைமதியு மீனு மெனவன்ன நீள்புன்னை யரும்பிப் பூத்த
பொறைமலிபூங் கொம்பேற வண்டாம்ப லூதும் புகாரே யெம்மூர்"

(௩) பெரும்பாணாற்றுப்படை,

௩௧௬ - ம் அடி... ... ...பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉ
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பில்

நச்சினார்க்கினியர் உரை :—"பால்போலும் வெள்ளிய நிறத்தினையும் வெள்ளிதாகிய தலையாட்டத்தினையுமுடைய மேற்றிசைக்கணுள்ளவாகிய குதிரைகளுடனே வடதிசைக்கணுள்ளவா

கிய நுகரப்படும் பொருள்களைக் கொண்டுவந்து தரும் மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கப்பட்ட பெருமையையுடைய கடற்பக்கத்தினையும், மணல் மிக்க தெருவுகளில் தொழில்செய்வார் (கம்மகாரர்) காக்கப்படும் மிகவுமுயர்ந்த பண்டசாலைகளையும், பரதவர் மிக்க மாடங்களுயர்ந்த பலவாய் வேறுபட்ட தெருக்களையும்" .........("உடையபட்டினம்") "இது திமிலர் முதலியோர் இருப்புக் கூறியவாறு".

௪. நம்பியகப்பொருள், ௨௪-ம் சூத்திரம், நெய்தற் கருப்பொருள்: "பரதர் பரத்தியர்"

(௫) திருவிளையாடற்புராணம்; வலைவீசுபடலம்:—

௪௧-ம் பாடல். "ஏவ லாளரோ டின்னவா றின்னமீன் படுத்தற்
காவ தாந்தொழி லியற்றவு மகப்படா தாக
யாவ ரேயிது படுப்பவ ரென்றிருங் கானற்
காவ லாளரும் பரதருங் கலங்கலு ருழந்தார்"

௫௫-ம் பாடல். "மாசறு கேளிரன்பின் வலைப்படும் வலைஞர் கோன்றன்
வீசிய வலையிற்பட்ட மீனினைச் சுருக்கி வாங்கிக்
காசெறி தரங்க முந்நீர்க் கரையிடை யிட்டான் கள்வாய்
மூசுதே னென்ன வார்த்து மொய்த்தன பரதச்சாதி"

(௬) செந்தமிழ். பக்கம். ௨௮௬ "தமிழ்ப் பழஞ்சரிதம்" (திரு. பாண்டித்துரைத் தேவரவர்கள்* "இனி நெய்தனிலத்து ஆண்மக்களுக்குப் பரதர், நுளையர், உமணர் என்றும், பெண் மக்களுக்குப் பரத்தியர், நுளைச்சியர், உமண்டியர் என்றும் பெயர்.

(௭) Tamilian antiquary No. 5. page 14.

பரதர். Inhabitants of Maritime Districts. என்பனவும் பிறவுமாம். விரிப்பிற் பெருகும்.

இவ்வளவுங் கூறியவாற்றால், பரதர் என்னுஞ் சொல், நெய்தனிலத்தவரையுங் குறித்து நிற்றலைத் திரு. பூரணலிங்கம்பிள்ளை அவர்களும், அவர்கள் கட்சியினருங் கண்டு தெளிவாராக. இங்ஙனம் உண்மையொன்றிருக்க அதனை மறைத்துத் தங்கட்சியினை நிலைநாட்டுதல் பொருத்தமாகுமா ?

இனி, நிகண்டுகளும், உவின்சிலோ, ராட்லர், வீரமாமுனிவர் என்பார் அகராதிகளும் பிறவும், தமிழின் இயற்சொல் திரிசொல் என்பவற்றையும், தமிழில் வந்து வழங்கும் திசைச்சொல் வடசொல் என்பவற்றையும் ஆராய எழுந்த சொற்பொருணூல்களேயென்றும்; உவின்சிலோ என்பார் முப்பதினாயிரத்

தின் மேற்பட்ட சொற்களை யாராய்ந்து அகராதி யெழுதுங் காலத்துத் தமிழ் நாட்டுப் புலவோரிற் செப்பமுடையார் பலரைத் தமக்குத் துணையாகக் கொண்டமை, அவர் தம் முகவுரையாலினிது பெறப்படுகின்றதென்றும்; ஆதலின் அவர் பிழை பரப்பினரென் றிங்ஙனமிழித் தொதுக்கற்பால ரல்லவென்றும்; அகராதிகளெல்லாம் நிகண்டுகளோடு வைத்தெண்ணப்படுங்கால் வயதிற் பிற்பட்டனவாதல்போன்று, நிகண்டுகளுண் முன்னதான திவாகரமும் சங்க காலத்துச் சான்றோர் நூல்களோடு வைத்தெண்ணப்படுங்கால், வயதினுற் பிற்பட்டதேயென்றும்; வேண்டுமேல் தஞ்சைப்புலவர் திரு. K. S. ஸ்ரீநிவாசபிள்ளை முதலாயினர் கூறிப்போந்த ஆராய்ச்சி நூல்களாற் காலத்தைக் கண்டு தெளியலாமென்றும்; பழைய நூல்களிலிருந்தே நிகண்டில் ஒருசொற் பல்பொருள்களும் பலசொல் லொருபொருள்களும் எடுத்துத் தொகுக்கப்பட்டனவென்றும்; நிகண்டுகளிற் காணப்படாத அரும்பொருள்கள் பல சங்க காலத்துச் சான்றோர் நூல்களுட் காணக்கிடக்கின்றன என்றும், ஒரு சொற் பலபொருள் நிரம்பியுள்ள தமிழ்மொழிக் கண்ணே செட்டிகளைக் குறித்து நிற்கும் பரதரென்னுஞ்சொல், நெய்தனிலத்தாரையுங் குறித்துநிற்றல் ஒருதலையே யென்றும் புலவரவர்கள் ஓர்ந்துணர்வார்களாக.

---

# சித்தாந்தப் படவிளக்கம்

[பஞ்சாட்சரபுரம் ஸ்ரீவாலையானந்த சுவாமிகள்]

(௩௪௮-ம் பக்கத் தொடர்ச்சி)

மறையாவது:—நெருப்பில்லாத விடத்துப் புகையில்லை யென, மறுதலைபற்றித் தாமரை யோடையை உவமை கூறுஞ் சொல்லாகும்.

உருடியாவது:—புகையைக் கண்டு இது நெருப்பிலன்றித் தோன்று தென்பதாகும்.

பிரதிஞ்ஞை - மேற்கோள். ஏது - காரணம். திட்டாந்தம் - உதாரணம். உபநயம் - திட்டாந்தத்தைச் சார்த்திக்கூறுவது. நிகமனம் - முடிந்தது முடித்தல். உடம்பாடு, மறை எனும் இந்த இரண்டு அநுமானங்களையும், பிரதிக்ஞை, ஏது, திட்டாந்தம், உபநயம், நிகமனம் எனும் ஐந்து அவயவங்களைக் கொண்டு பிறர் அறியப் போதிப்பதுண்டு.

"மேற்கோளேது வுதாரண முபநயம்
நிகமன மெனமுறை நிகழப் பெறுமே."

(தர்க்கபரிபாஷை காலிங்கராயரியற்றியது)

இந்த மலை அக்கினியை உடைத்து—இது பிரதிக்ஞை.

புகையுடைத்தாதலால்—இஃது ஏது

எங்கெங்கே புகையுண்டு அங்கங்கே அக்கினியுண்டு. எதைப் போல? அடுக்களைபோல—இஃது உதாரணம்.

அப்படி இந்த மலையும் புகையுடைத்து—இஃது உபநயம்

ஆகையால் அப்படி அக்கினியையுடைத்து—இது நிகமனம்.

இவ்வாறு உடம்பாட்டில் ஐந்துறுப்புக்களையும் காண்க.

இந்த மலை அக்கினியையுடைத்து—இது பிரதிக்ஞை

புகையுடைத்தாதலால்—இஃது ஏது.

எங்கெங்கே அக்கினியில்லை அங்கங்கே புகையில்லை. எதைப் போல? மடுப்போல—இஃது உதாரணம்.

அல்ல அப்படியிது—இஃது உபநயம்.

ஆகையாலல்ல அப்படியிது—இது நிகமனம்.

இவ்வாறு மறைச்சொல்லில் ஐந்துறுப்புக்களையும் காண்க மறை யெனினும், வெதிரேக மெனினும், விபக்க மெனினும், ஒவ்வாத பக்க மெனினும், மீட்சி மொழி யெனினும் ஒக்கும்.

"பூபூத ராதி யோவற வுளுற்று
மொருவனை யுடைத்துப், பொருவிரி காரிய
மாதலிற், கடம்போ, லென்னிற் கோதின்,
றிருங்கட மதனை டியற்றிய வொருவனை
யொருங்குடன் கண்டோ னெழிந்திக லிரிகடங்
கண்டா லிவையு மவனெனக் கொண்டாங்
குண்டோ வுலக முளுற்றுட னொருவற்
கண்டு மற்றது முண்டிவ னென,வெனிற்
கண்டதின் மான முனக்குக், கொண்டல்கொள்
கிரிவளர் தும மதனி லெரிவள
ரட்டி லொண்புகை யயலென வுணர்ந்து
மொட்டினை பிறங்க லொள்ளழ லொட்டிய
தென்னை, விசேட சமனியத் தியாதிற்
பன்னெனில், விசேட மென்னி னன்னோ
காட்சிய தலதிலைச், சமனிய மாட்சிய
தென்றேற், செயலொடு செய்வோற் கண்டோன்
மன்ற மாண்வினை காணி னென்றுங்

கோதுவ னொருவன் றீதகு செயலென்,
றற்றேன் மாக மாதிய வினையா
கெற்றேற் பாக மியைதலிற் கடவற்
றின்னு மொண்குண மன்னலிற் புவிபோ,
லாதிய வழியு மழிபவை செயலென்
ரேதுறு வஃதுர் தீதறு செயலே." (ஞானமிர்தம் - ௫௰)

இது, பதியையறியு முபாயம் அருளிச்செய்ய வேண்டு மென்று விண்ணப்பஞ்செய்த சீடனுக்குக் கேவலாந்நுவயவநு மானப் பிரமாணத்தாற் பதியுண்மை கூறியது.

(இ - ள்) பூபூதராதி - உடைத்து எ-து பிருதிவி முதலிய தத்துவ சமூகங்களும் மலை முதலிய பொருள்களுமாகிய பிரபஞ் சம் ஒழியாதே செய்வானொருவனை யுடைத்து இது பிரதிஞ்ஞை.

பொருவிரி - ஆதலில் என்பது அதற்கு ஏது வென்னெனில் உவமையில்லாத காரியமாயிருத்தலால் இஃது ஏது,

கடம்போல் எ-து என்போல வென்னிற் கடத்தைப்போல இது திட்டாந்தம் இவை மூன்றுங் கேவலாந்நுவய வநுமானம் என்னிற் கோதின்று எ-து இங்ஙனங் கூறியதற்கிசைந்தாற் குற்ற மின்று.

இருங்கடம் - இவனென எ-து பெரிய கடமான வதனையுஞ் செய்வா னொருவனையும் ஓரிடத்திலே கூடக்கண்டான் ஒரு வன், இவ்விட மொழிந்து வேறோரிடத்திலே அளவிறந்த கடங்களைக் கண்டால், இவையும் அங்ஙனம் இயற்றப்பட்டன வென்று நிச்சயித்தாற்போல, வேறோருலகத்தைச் செய்வா னொருவனை யுடன்கண்டு, இவ்வுலகமும் அங்ஙனம்போல ஒருவ னாலே செய்யப்பட்டுளதென்று நிச்சயித்தற்கு உண்டோ (என்று விண்ணப்பஞ்செய்ய),

எனில் - உனக்கு எ-து அங்ஙனங் கூறுவாயேற் பிரத்தி யக்ஷத்தில் உனக்குக் காட்டற்குப் பிரமாணமுண்டு,

கொண்டல் - என்னை - எ-து மேகத்தைக்கிட்டிய மலையி லுண்டான (மூங்கிலிழைந்து தானேபட்ட) மிக்க தூமத்துக்கு, (நெருப்பும் புகையுங் கூடக் காணப்பட்ட)அடுக்களையில் எரியில் வருகின்ற அழகிய புகை (அற்பமாதலாலே இதனை உவமை யாகக் கூறுதல் ஒவ்வாதென்றறிந்தும் பருவதத்திலே ஒளி யுடைத்தான நெருப்புண்டென் றிசைந்தாய் இசைய வேண்டுவா னேன்,

விசேட - பன்னெனில் எ-து (விசேட சாமானியத்தினு லிசைந்ததென்று சீடன்கூற) அங்ஙனமேயாகில் விசேடத்திலும்

சாமானியத்திலும் நீ கொள்ளுமது யாது சொல்வாய் என்று வினவில்,

விசேடம் - இலை எ-து கடத்தைச்செய்த செயலுக்கு உலகத்தைப் பண்ணுஞ்செயல் பெரிதாகையால், விசேடந்தான் நீ கொள்வதென்று விடை கூறுவாயாகில், ஐயோ! நீ பிரத்தியட்சப் பிரமாணம் கொள்ளுவாயன்றி அநுமானங் கொண்டதில்லையே,

சமனியம் - என்றேல் எ-து புகையென்னுஞ் சாதிசாமானியத்தால் நெருப்புண்டென்று அழகிதாகக் கொள்வேன் என்பாயாகில்,

செயலொடு - செயலென்று எ-து கடத்தைப் பண்ணுகிற செயலோடே செய்பவனையுங் கண்டாரொருவன், ஒரு பதார்த்தம் மாட்சிமையுடைய காரியமாகிய உருவமாயிருப்பது கண்டால், அவ்விடத்து (அநுமானத்தானே சிறிதாயிருப்பினும் பெரிதாயிருப்பினும்) நிச்சயமாக ஒருவனாலே குற்றமறச் செய்யப்பட்டதென்று சொல்லுவன்காண் (என்றருளிச் செய்ய),

அற்றேல் எ-து அங்ஙனமே யாகில்,

மாகம் எற்றேல் எ-து ஆகாய முதலாக மேலுள்ள தத்துவங்கள் அருவமாதலால் அவை தொழிற்பட்டமை எவ்வண்ணமென்று விண்ணப்பஞ் செய்ய,

பாகம் - கடவற்று எ - து ஆகாயம் பங்கிக்கப்படுதலானும் அது பாகமாகிய நான்கு தத்துவமும் உருவமாதற்கியைதலானும் கடம்போலக் காரியமாயேயிருக்கும்,

இன்னும் - புவிபோல் எ - து இன்னமும் அஃது அழகிய சத்தமாகிய குணமுடைத்தாகலானும் பிருதிவி தத்துவம்போல உருவமுடைத்தாங்காண்,

ஆதிய - செயலே எ-து இத்தத்துவங்கள் ஆதியான படியாலே யழியும். அழியும் பதார்த்தம் ஒருவனாலே யாக்கப்பட்டிருத்தல்வேண்டும். உருவமாயிருக்குமாதலால் அந்தப்பிரபஞ்சமும் (பரமசிவனாலே) குற்றமறச் செய்யப்பட்டது என்று கொண்டு சொல்வாயாக எ - று.

அநுமானுநுமானமாவது:—ஒருவன் உரைத்த வார்த்தையைக் கொண்டே : அவனது அறிவினளவு இத்தன்மைத்தென அறிதலாம்.

ஆகமாநுமானமாவது:—இப்போதறியப் படுகின்ற சுக துக்க அநுபவங்களை, பூருவ சன்மங்களில் நீதியாலும் அநீதியாலும் பண்ணப்பட்ட புண்ணிய பாவங்களின் பலனென்று அறிவது. இன்ன புண்ணியத்திற்கு இன்ன சுகமென்றும், இன்ன பாவத்திற்கு இன்ன துக்கமென்றும், இவ்வுலகத்தில் பிரத்தியக்ஷமாகக் காணுதபடியால், சிருஷ்டியாதிகளிற் சொல்லிய ஆகமங்களில் புண்ணிய பாபங்களுக்கிவ்வாறு பலன் வருமென்று கூறியதைக் கொண்டு, அவைகளை அநுமிக்கின்றமையாலே இதனை ஆகமாநுமானம் என்றது.

---

# வள்ளல்கள் சரித்திரம்

[திரு. M. S. பூரணலிங்கம்பிள்ளை அவர்கள் B. A., L. T.]

வரையாது கொடுப்போன் வள்ளல் என்ப? வள்ளல்கள் தலை, இடை, கடையென மூவகையாவர். சகரன், செம்பியன், நளன், துந்துமாரி, நிருதி முதலான எழுவர் தலையெழுவள்ளலெனப்படுவர். அரிச்சந்திரன், கன்னன் உட்பட்ட எழுவர் இடையெழுவள்ளலாவர். கடையெழு வள்ளல்கள் பாரி, ஓரி, காரி (மலையன்), அதியன் (எழினி), பேகன், ஆய், நள்ளி யென்பவர்களாம்.

கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும், பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வில் ஓரியும்,
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனும்,
ஊரா தேந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்,
ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை
அருந்திறல் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகனும், திருந்துமொழி
மோசி பாடிய ஆயும், ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவுநனி தீரத்
தள்ளாது ஈயுந் தகைசால் வண்மை
கொள்ளா ரோட்டிய நள்ளியும் எனவாங்கு
எழுவர் மாய்ந்த பின்றை அழிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
இரந்தோர் அற்றந் தீர்க்கென விரைந்திவண்
உள்ளி வந்தனென் யானே......முதிரத்துக்கிழவ
இவண்விளங்கு சிறப்பின இயல்தேர்க் குமண

—(புறநானூறு கசஅ)

இதனுல் குமணன் இவர்கட்குப் பின்னர்வந்த வள்ள லென்று விளங்குகின்றது.

ஆயினும் நட்டோர் நட்ட நல்லிசைக் குமண வள்ளலை முதலெழுவரிற் சேர்ப்பாருமுளர். இவன் முதிரமலை மன்னன் மட்டார் 'மறுகின் முதிரத்தோனே' 160 'கொடைக்குக் கர்ண னுங் குமணனும்' என்பது பழமொழி. இவன் வேட்டையாடச் சென்றுழி இவனிளைஞன் இவன் தலையைக் கொண்டு வருபவ னுக்குப் பெருவெகுமதியளிக்கப்படும் என்று பறை சாற்றின தைக் கேட்டுப் பார்தாங்கிய பாரம் இன்றொழிந்தது இனி ஈண்டுறைவேன், என்று மலங்காட்டில் வசித்தனன், அவன் அப்பரிதாபமான நிலையிலிருந்த பொழுது அவனிட மன்பு மிகுந்த அமைச்சர் பாவலர் பலரும்வந்து தரிசித்துப் போதல் வழக்கம். ஒருநாள் வறுமை மிக்குற்ற புலவர் பெருந்தலைச்சாத்த ஞர் தன் நல்குரவு ஒழிய இவனிருந்த காட்டிற்கு ஏகித் தன் துயரத்தைப்பின் வருமாறு கூறினர்.

1ஆடுநனி மறந்த கோடு 2 யரடுப்பில்
ஆம்பிபூப்பத் தேம்பு பசி 3 யழவாப்
பா அலின்மையிற் றோலொடு திரங்கி
4 இல்லி தூர்ந்த பொல்லா 5 வறுமுலை
சுவைதோ றழூஉந் 6 மகத்து முகநோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் 7 மழைக்கண்என்
மனையோள் எவ்வ8 நோக்கி நினைஇ
நிற்9படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந்தனையாயின் இந்நிலைத்
10 தொடுத்துங் கொள்ளா தமையலென் அடுக்கியு
பண்ணமை நரம்பின்11 பச்சைநல் யாழ்
மண்ணார் முழவின் 12 வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே. (புறம் ககூச)

இதனைக்கேட்ட வள்ளல் தன்னிடமொன்று மில்லாததனுல் வாளை யுருவி அவரிடங் கொடுத்து, என் தலையைத் துணித்துத் தம்பியிடங் கொடுமின், உம் வறுமை நீங்கும், என்றனர்.

"13கொன்னே
14பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
னாடிழந்த தனினு நனியின் னாதென
வாள்தந் தனனே தலையெனக்கு ஈயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்"

---

1 அடுதலை
2 புடை
3 வருந்திய
4 துளை
5 வறிய
6 பிள்ளை
7 குளிர்ந்த
8 வருத்தம்
9 நின்னிடம் வந்தேன்
10 பற்றியும்
11 தோலாற் போர்க்கப் [பட்ட
12 கூத்தன்
13 பயனின்றி
14 பெருமை

கவிவாணவர் அங்ஙனந் தம்பியிடம் வந்து தெரிவிக்க அவன் தன் கொடுமையை யுன்னிக் கதறிக் காடடைந்து தமையன் தாளில் வீழ்ந்து மதியிலியாகிய தன்னை மன்னிக்க வேண்டினன். 'பொறுத்தார் பூமியாள்வார்' என்றவாறு குமணன் மீளவும் அரசு பெற்றனன். கவிவாணரும் பரிசுபெற்று நல்வாழ் வெய்தினர்.

க. பாரி

இக்குறுநில மன்னன் பெருந்தியாகி. 'கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப்பாரிலை' என்று திருப்புகலூர்ப் பதிகத்தில் பாடினர் சுந்தரரும். இம் மன்னனுக்கு வளம்பெருகிய முந்நூறு கிராமங்களும் பறம்பு மலையும் இருந்தன. சிறுபாணாற்றுப்படையில் (90-91) "பிறங்கு வெள்ளருவி வீழுஞ் சாரற் பறம்பிற் கோமான் பாரி" என்று தரப்பட்டிருக்கின்றது. இவன் பெரிய வீரன். இவன் கீர்த்தி தமிழகமெங்கும் பரவியது. புலமை மதித்துள்ள இவன்மீது பொறாமைகொண்ட மூத்தமிழ் வேந்தரும் இவன் நாட்டின்மீது படையெடுத்து இடையறுப் போர்புரிந்து வெற்றிபெறாது வேளாண் பாரியை வஞ்சித்துக் கொன்றனர். அவன் மகளிருவரும் அவன் அவைக்களப் புலவராகிய கபிலர் வசமிருந்தனர். இவரை மணக்க விச்சிக்கோன் இருங்கோவேள் இருவரும் இணங்காததனால் இவர் அந்தணருக்கு அளிக்கப்பட்டனர்.

களங்கொண்டு கனலுங் கடுங்கண் யானை
விளங்கு மணிக்கொடும் பூண்விச்சிக் கோவே
இவரே, பூத்தலையறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்......
நினக்கு யான் கொடுப்பக் கொண்மதி. (புறம் உ௱)

இவர்யா ரென்குவை யாயின் இவரே
ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழன், இவர் என்மகளிர்,
அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே.

நீயே, வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்பு புனைந்து இயற்றிய சேணெடும், புரிசை
உவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த

வேளிருள் வேளே, விறல்போ ரண்ணல்
தாரணி யானைச் சேட்டிருங் கோவே
ஆண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
யான்தர இவரைக் கொண்மதி. (புறம் ௨௱௧)

பறம்பு நாட்டில் மழை யென்று முளது.

பாரி பாரியென்று பலவேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டு ஈண்டுலகு புரப்பதுவே. (புறம் ௱௭)

மூவேந்தரும் முற்றுகை போடினும் நாட்டின் வளம் நாட்டைக் காக்கும்,

உழவர் உழாதன நான்கு பயனுடைத்தே
ஒன்றே, சிறியிலை *வெதிரின் நெல்விளையும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே, அணிநிற †வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன் சொரியும்மே
வான்க ‡ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே. (புறம் ௱௯)

மூவேந்தரும் இந்நாட்டைக் கொள்ளவியலாது, ஏனெனில்,

முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர். (புறம் ௱௰)

பாரி யிறந்தபின்னர் அவன் மகளிர் பரிந்து கூறியது.

அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவில்
எந்தையு முடையேம் எங்குன்றும் பிறர் கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவில்
வென்று எறிமுரசின் வேந்தர் எம்
குன்றுங் கொண்டார் யாம் எந்தையும் இலமே. (புறம் ௧௱௧௨)

கபிலர் பாரிமகளிருடன் அன்னார்க்குக் கொழுநரைத் தேடக்கருதிப் பறம்புநாட்டை விட் டேகுங்காலத்துக் கூறியது.

---

* மூங்கில். † குரங்கு. ‡ ஒக்கும்.

பாரிமாய்ந் தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் [1]பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர் பறம்பே
கோல்திரண் முன்கைக் [2]குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே. (புறம் கக௩)

அக்குன்றம் எத்தகைத்தெனின்,

ஒருசா ரருவி யார்ப்ப ஒருசார்
பாணர் மண்டை நிறையப் [3]பெய்ம்மார்
வாக்க வுக்க [4]தேக்கள் தேறல்
கல்லலைத்து ஒழுகுமன்னே, பலவேல்
அண்ணல் யானை வேந்தர்க்கு
இன்னுனாகிய இனியோன் குன்றே. (புறம் கக௫)

பாரி எத்தன்மையனெனின்,

நிழலில் நீள்இடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை [5]மிறந்தும்
இரவலர்க் கீயும் வள்ளியோன். (புறம் ககக)

இரவலர்க்கு மட்டுமன்றி இயற்கைப் பொருள்கட்கும் ஈந்த தியாகி இவனென்பதற்குப் பின்வரும் அடிகள் சான்றும்.

சுரும்புண
நறுவீ[6] யுறைக்கு[7] நாக[8] நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய." (சிறுபா அஎ, அகூ)

இதனையே,

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத்து இசைவிளங்கத்—தொல்லை
இரவாமல் ஈந்த இறைவர்போல் நீயும்
கரவாமல் ஈகை கடன்"

என்ற வெண்பா வலியுறுத்தும்.

பாரிமாவேள் எவ்வியின் இனத்தானாதலின் வேளாளனெனப்படுவான். கபிலர் இருங்கோவேளுக்குப் பாரிமகளிரின்னுரென்று கூறுமிடத்து எவ்வியின் கிளை விளங்குகின்றது.

எவ்வி தொல்குடிப் படீஇயர் மற்றிவர்
கைவண் பாரி மகளிர்

---

1 வாழ்த்தி.
2 வளையல்.
3 வாக்கவேண்டி வடிக்கச் சிந்தின.
4 இனிய கள்ளாகிய.
5 மிகுத்தும்.
6 பூ 7 துளிக்கும்.
8 சுரபுன்னை

மன்னனுக்கும் மாசறக்கற்ற மாகபிலருக்குமுள்ள அன்பை விளக்கும் இவண் வரும் பாவே.

மாவண் பாரி
கலந்த கேண்மைக்கு ஒவ்வாய், நீயென்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே;
பெருந்தகு சிறப்பின் நட்பிற்கு *ஒல்லாது
ஒருங்குவரல் விடாஅது ஒழிகெனக் கூறி
இனையை ஆதலின், நினக்கு மற்றுயான்
மேயினேன் அன்மை யானே, ஆயினும்
இம்மை போலக் காட்டி உம்மை
இடையில் காட்சி நின்னோடு
உடனுறை வாக்குக உயர்ந்த †பாலே.

இவண் கொடைக்கு மேலது மாரியொன்றே தவிர வேறில்லை என்பதைப் பின்வரும் செய்யுள் நிந்தாஸ்துதி முறையில் நன்கு விளக்கும்.

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவன புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே.

## உ. காரி

மலாட்டின் மன்னர்களுக்குச் சிறப்புப் பெயர் மலையமான். இவன் நாட்டிற்குத் தலையூர் கோவல். இது தற்காலம் திருக்கோயிலூ ரென்றழைக்கப் படுகின்றது. வளம் பொருந்திய பரந்த முள்ளூர் மலை இவன் நாட்டைச் சேர்ந்தது. குடியேறி வந்த பார்ப்பா ரனேகர்கட்கு மாகரிமனையும் நிலமும் அளித்தனனுதலின் ஆரியக் கூட்டம் முள்ளூரில் வந்து நிறைந்தது. 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்' இம் மன்னனுடைய வள்ளற் றன்மையை வியந்து கூறியவர் கபிலராவர்.

கடல்கொளப் படாது உடலுந ரூக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
அழல்புறந் தரூஉம் அந்தண ரதுவே...
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழாது ஈத்த இழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி உறையினும் பலவே.

மாறோக்கத்து நப்பசலையார்.

---

*பொருந்தாமல். †விதி.

ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை உரவோன் மருக......
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந,
தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் பிறந்த மக்கட் கெல்லாம்
புலன் அழுக்கற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிட மின்றிப்
பரந்து இசை நிற்கப் பாடினன்

என்று வாழ்த்தியுளார்.

இம்மலையமான் கொல்லிமலைக் குறுநில மன்னனுடன் போர்புரிந்து அவனை வென்று கொன்று, அவன் மலையைச்சேர நாட்டுடன் சேர்த்தனன். இவன் அக்கம்பக்கத்திலுள்ள சிற்றரசர்களை முறியடித்த நிமித்தம் திருமுடிக்காரி என்ற பட்டம் பெற்றனன். இவ்வாறு பெருமை வாய்ந்தபின் நாமார்க்கும் குடியல்லோமென்று இறுமாப்புக் கொண்டனனென்று சோழவரசன் சினந்து காரியைக் குருதியாறு வோடிய களத்தில் அவனுடன் போர்புரிந்து அவனை மாய்த்து அவன் குடும்பத்தை வேரறச்செய்ய உன்னினன். அத்தருணம் கோடூர்க்கிழார் பரிந்திரங்கி வளவனை வேண்டக் காரிமகன் கண்ணன் உயிர் தங்கிற்று. கண்ணனும் சோழவரசன் பகைவரால் தாக்கப்பெற்று முள்ளூருக்கு ஓடிவந்து ஒளித்தபொழுது கைம்மாறு கருதாக் கருணைக்கீடாக வளவனுக்கு அடைக்கலங்கொடுத்து அவன் ஆருயிரைக் காப்பாற்றினன். அந்நன்றி மறவாத வளவன் கண்ணனைச்சோழ ஏனாதி யென்ற தலைமை மந்திரியாக அமைத்தனன்.

அரசு இழந்திருந்த அல்லற் காலை
முரசுஎழுந்து இரங்கும் முற்றமொடு கரைபொருது
இரங்குபுனல் நெரிதரு மிகுபெரும் காவிரி
மல்லல் நன்னாட்டு அல்லல் தீர...
நீ தோன்றி னையே.

என்று நப்பசலையார் இவனைப் புகழ்ந்து பாடினர்.

## ரு. ஓரி

இம்மன்னன் வில்வித்தையில் தேர்ந்தவன். புறநானூற்றில் 'கொல்லிபாண்ட வல்வில ஓரி' என்று அழைக்கப்பட்டுளான். இவன் காரியுடன் சமர் புரிந்தனன், இவனைக் கழைதின் யானையார் 'விசும்பில் கருவி வானம்போல வரையாது சுரக்கும் வள்ளியோய்' என்று வாழ்த்தியிருக்கின்றனர்.

## ச. ஆய்

மாவேள் ஆய் சிறந்த வீரன், வேளாள மரபினன், அரசரால் அளிக்கப்படும் வேள் என்னும் உரிமை பெற்றவன். பொதியைமலைத் தலைவன். ஆய்க்குடி என்பது அவனூர். இது தென்காசிப் பக்கமுளது. ஆய் ஆண்டிரனென்ற பெயர் பெற்றவன். இவன் யானைகளைப் பரிசில் கொடுப்பதில் இளையாதவன்.

இம்மை செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வாணிகன் ஆய் அல்லன்,
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்கு பட்டன்று அவன்கை வண்மையே.

இவன் சேரவரசன் தானைகளைத் தோற்கடித்தனன். இவன், ஆலின் கீழ் வீற்றிருந்த எம்பெருமானுக்கு நாக நீலவுடையினைக் கொடுத்தனன் என்பது இக்கொய் மலரால் புலப்படும்.

நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆல்அமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திண்தோள்
ஆர்வ நன்மொழி ஆயும்.

## ரு. பேகன்

இக் குறுநில மன்னனவையாவிக் கோப்பெரும் பேகன் என்றும் ஆவியர் பெருமகனென்றும் பெயர் வழங்கி வருபவன். இவனைக் கலிமான் பேகன், கழல்கால் பேகன், கைவள் ஈகைக் கடுமான் பேகன், அடுபோர்ப் பேகன், பெருங்கடல்நாடன் பேகன் எனப் பலவாறு பலர் புகழ்ந்துளர். இவனால் ஆதரிக்கப்பெற்ற கவிவாணர் கபிலர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் என்ற மதுரைத் தமிழ்க கடைச்சங்கத்தினராவர். இவன் 'பங்கமில் செய்கையராகிப் பரிந்து யார்க்கும் அன்புடையராதல் இனிது' என்ற ஆன்றோர் மொழிககு இலககாயிருந்தனன். குளிர் தாங்காத தோகையையுடைய மயிலுக்கு ஆடை அளித்தவன் வயங்கு புகழ்ப் பேகன்.

கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
படாமஞ் ஞைக்கு ஈத்த எங்கோ

முல்லை வேலி நல்லூர் இவன் இருப்பிடமாகும். இத்தகைய பெருவள்ளல் கண்ணகி என்ற மாண்ட மனையுடன் முரணி அம்மாதர் மணியைத் தனிமனை இருத்திய ஞான்று பரணர் முதலான பாவலர் பலர் பாவையர் பக்கம் மன்றாடினர்.

இன்னாது
இருத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
மூலயகம் நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோல் அழுதனள் பெரிதே.

பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி அன்னக் கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந்து உறைநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியாம் இரந்த பரிசில் அஃது இருளில்
இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னாது உறைவி அரும்படர் களைமே.

பேகன் இணங்கிய விவரம், எங்கணுங் கண்டிலம்.

## கூ. அதியமான்

இப்பெயர் தரித்தவர் மூவராவர். தகடூர் எறிந்து வீழ்ந்த எழினி ஒருவன். இப்பெருங் கொடையாளனைப் பிரிய நேர்ந்த அரிசில் கிழார் 'ஈன்றோள் நீத்த குழவிபோல'த் துயருற்றனர். அவனாட்சிப் பெருமையை இவர் பின் வருமாறு வியந்துளர்.

கன்றமர் ஆயம் கானத்து அல்கவும்*
வெங்கால் வம்பலர் †வேண்டுபுலத்து உறையவும்
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த வயங்குவினை ஒள்வாள்
பொய்யா எழினி,

இரண்டாம் அதியமான் கடைபெழுவள்ளலில் ஒருவன். இவ்வீரன் மழவர் தலைவன், தகடூர்க்கோமான், கோவலூர் எறிந்தவன், ஔவைக்குக் கருநெல்லிக் கனி ஈந்தவன், சேரமன்னனுக்கு நண்பன், சேர, சோழ, பாண்டியர், இருங்கோவேள் எருமையூரன், பொருநன் ஆய எழு அரசரையும் வென்றவன், பனைமாலையை அணிந்தவன், குதிரை மலை மன்னன், நெடுமானஞ்சி யென்றும் அஞ்சி யென்றும் அழைக்கப் படுபவன், பெருஞ் சித்திரனார், ஔவை, பொன்முடியார், பரணரால் புகழப் பட்டவன், கரும்புப் பயிர் ஆக்கிப் பரப்பிய காவலன் வழியோன், தகடூர் முற்றுகையில் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையால் களத்தில் காயப்பட்டு வீழ்ந்தவன், கபிலர் கூறிய வாறு 'அரும்பார் சோலைச் சுரும்பார்வஞ்சி அதிகன் இல்லிடை' வளர்ந்தவன், இவன் நீடூழி வாழ்க என்று வாழ்த்தி ஔவைக்குக் கருநெல்லிக் கனியைக் கொடுத்தனன் என்பது

---

*தங்கவும் †வழிபோவார்.

சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதன் நின் அகத்தடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈந்தனையே

என்ற ஒளவையின் கூற்றால் புலப்படும். அன்றியும்,

வழுவில் வண்கை மழவர் பெரும,
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே

என்று மூதாட்டி இவ்வள்ளலின் வீரத்தைப் புகழ்ந்துளார். இவன் இறந்தமையால்

"இனிப் பாடுநரு மில்லைப் பாடுநர்க்கு
ஒன்று ஈகுநரும் இல்லை"

என்றும் பிரிவாற்றாத அம்மை புலம்பியுளாள்.

இவன் மகன் பொருட்டெழினி. வாழையடி வாழை என்றாங்கு வள்ளல் மகன் வள்ளல். கொடையில் மட்டு மன்றி இன்ப நுகர்தலிலும் வெற்றி கொள்ளலிலும் கீர்த்தி பெற்றவன்.

திங்கள்
நாள்நிறை மதியத்து அனையை, இருள்
யாவணதோ நின்னிழல் வாழ்வோர்க்கே

என்று ஒளவையார் இவன் மேம்பாட்டைப் புகழ்ந்துளார்.

இவன் அழகனாதலின் இவனை நோக்கிய மாதர்கள் இவனுடன் பகை கொள்வர்.

பூப்போல் உண்கண் பசந்துதோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றென்றே.

## எ. நள்ளி

இவ்வள்ளல் இரவலர்க்கு ஈவோன். தற்புகழ்ச்சி நாடாத நாயகன். இவன் கண்டீரக் கோப்பெருநள்ளி என்றும், பிறங்கு மலை நள்ளி யென்றும் பெருஞ்சொல் பெற்றவன். புறநானூற்றில்

ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவு நனிதீரத்
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளி

என்றும்,

சரவாது
நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கை
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை மாட நள்ளி"

என்று சிறுபாணாற்றுப்படையிலும் இவன் சிறப்புக் கூறப்பட்டுளதாதலின் இவன் வண்மைத்திறன் நன்கு விளங்கும். வன்பரணரும், பெருந்தலைச் சாத்தனாரும் இவன் பெருமையை வியந்தோதியுளர். இவன் மலை தோட்டி யென்பதாம். இவனுக்குச் சொந்தமானவை மலை நாடும் காடுமாம். பின்னர் வரும் பா வன்பரணர் பாடியது.

நள்ளி வாழியோ, நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கில் செல்வழி பண்ணி
வரஎமர் மறந்தனர், அது நீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யாலே.

இதுகாறும் எடுத்துக்கூறியது கடைபெழு வள்ளல்களின் வண்மை மாட்சியாம். இவ்வெழுவரும் சேர, சோழ பாண்டியருக்குக் கீழ்ப்பட்ட குறுநில மன்னராவர். பற்பல அமயங்களில் இவர்கள் தமிழ் மூவேந்தருடன் தனித்தும் சேர்ந்தும் சமர் புரிந்த சிற்றரசர்கள். இவர்களுடைய பெயர் வரையாது ஈந்த பெருமையாலே எங்கணும் பரவியது. இட்டாரை புத்தேள் உலகும் புகழுமாதலின் ஈதலின் சிறப்புப் பிறங்கும். வறியார்க்கு ஒன்று ஈதலே ஈகை யாதலானும், வரைவின்றி வழங்குதல் வண்மை யாதலாலும் மனிதப்பிறவி எய்திய யாம் அனைவரும் இயன்றவாறு 'ஈதலே நன்று' என்பதைக் கடைப்பிடித்து நடப்போமாக.

---

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

(கஎ௬-ம் பக்கத் தொடர்ச்சி)

[திரு. ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை யவர்கள்]

## க. ஆளுடைய பிள்ளையார் அநுக்கிரகம்

அரும்பவிழுந் துடவைசெறிந் தாழிவாய்ப் பல்லூழி
விரும்புவண மிதந்தபதி வேணுபுரத் தந்தணனார்
தரும்பரம சிற்சுகத்தைத் தானுகர்ந்து களித்தருளுங்
கரும்பனவன் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே. (க)

வேதநெறி தழைத்தோங்கவும், அவ்வோக்கத்தால் அந்நெறியும் அதன் முடிந்த முடிபும் ஆகிய சைவத்துறை விளங்கவும், அவ்விளக்கத்தாலன்றிப் பிறிதொரு முயல்வாய் பொலிவினை யடையாத பூதபரம்பரை பொலியவும், அப்பொலிவிற்குக் காரணமாயது சிவகுரவன் திருவாய் மலர்தல் ஒன்றேயாதலின் அத்திருவாய் மலர்தலாகிய பரமகருணைகாரணோபதேசத்தை யருளிய ஆளுடையபிள்ளையார் ஆன்மாக்களுக்குப் பரமானுக்கிரகம் புரிய எழுந்தருளுவது மன்றிக் குருசந்தானத்திற்குப் பரமாசாரியராகவும் விளங்கி யருளுகின்றனர். இச்சந்தான குரவர்பால் அவரது விளக்கம் சத்தாய் பூர்த்தியாகவும் தம் தன்மையைக் கொடுப்பதாகவும் உளது. பிள்ளையார் சத்தினிடத்துச் சத்தாகவும், சித்தினிடத்துச் சித்தாகவும் வேறுபடாது நின்று, பொருட்டன்மையின் வேறுபடாத இவ்விரண்டினும் தாதான்மியமாக ஆனந்தமாகின்றார். மற்றொருசாரின், சத்தாகிய சிவமும், சித்தாகிய சத்தியும் அபின்னமாகத் தாதான்மியப்பட்டிருத்தலும், சத்தாகிய சிவத்தையும் சதசத்தாகிய ஆன்மாவையும் தாதான்மியப் படுப்பித்தலும் ஆனந்தம் அல்லது பிறிதொன்று இன்மையாலும், அவ்வானந்தந்தானும் அநர்த்த நிவிர்த்தியின்கண் அநுபவமாக நுகரும் பரமப்பிராப்தி யாகலானும், அவ்வநுபவ நுகர்வே சிவஞானப்பேறு ஆகலானும் பிள்ளையார் தாம் ஞானசம்பந்தராயினர். ஞானசம்பந்தமின்றி யநுபவாதீத முற்றுதென்பது உபய வேதாகமங்கட்குத் துணிபு. எங்கே சிவாநுபவங் காணப்படுமோ எங்கே அச்சிவாநுபவத்தின் இலேசம் காணப்படுமோ, அங்கே ஞானசம்பந்தப் பெருமானது சூக்குமவருளும், தூலவருளும் உதித்தனவென்பது திண்ணம். எவ்வாயிலாகச் சிவாநுபவம் வெளிப்படினும் அவ்வாயிலில் அப்பெருமான் அதிட்டித்தோ ஆவேசித்தோ நிற்பர் என்பது பெரியார் நிச்சயித்து அறிந்ததொன்று. 'கவுணியர் தலைவன்.........விரும்பினர்க் கல்லது கடுந்துயருட்புகக் கைவிளிக்குமிந் நெடும்பிறவிக்கடல் நீந்துவதரிதே! முடிந்த முத்தியின்கண் முடிந்த பொருளாவாரும், அம்முத்திநிலையைக் காரணகுருவாக நின்று காட்டுவாருட் கலந்து நிற்பாரும், ஞானசித்தியை யளிப்பாரும் ஞானசம்பந்த வள்ளலே. இதனால் ஞானசம்பந்தவள்ளல் என்னும் பெயர்க் காரணமும் பெறுதும். ஞானசம்பந்த னந்தாமரையின், தாருந்தருகிலன் எம்மனமியான் சங்கு தாங்குவதே! 'நின்னெண்ணமொன்றும், பிழைக்கின்றதில்லை நற்றேர்வந்து தோன்றிற்றுப் பெய்வளையே!

ஞானாநுபவப் பேற்றிற்குச் சிறந்த சாதனம் சிவதருமம். சிவதருமத்துட் சிறந்தது திருத்தொண்டு. திருத்தொண்டைப்

பரவுதலே சிவஞானிகட்கு இடையீடுபடாத பேரின்பம் நுகர் தற்கு ஏது. இங்ஙனம் சிறப்புற்ற திருத்தொண்டின் நெறிவாழத் (திருநாவுக். க), திருத்தொண்டை யாம் பரவுதற் பொருட்டுத் (திருஞா. ௺௱௪) திருத்தொண்டைத் தாம் பாலராய அப் பரு வத்துப் பண்டும் இன்றும் பரவிக் காட்டினர் பிள்ளையார். (திருஞா. ௺௱௨). இத் தொண்டின் நெறியை வேத சிவாகமத் துட் போலத் தமது திருப்பாசுரங்களினும் விளங்க உரைத்தார். புனிதவாய் மலர்ந்தருளிய இப்பாசுரத் திருவுருவும், ஆனந்த சொரூபியாகச் சிவசிவைகளின் இடையே தாமென்றும் விளங்கி யிருக்கும் சிவசுதந் திருவுருவும், வேதாகமப் பவுரிவீசுங் களாச னிலையும் ஆதார வெற்பி லபிடேகமும் ஆக விளங்குதற் பொருட் டுச் சுட்டிக்காட்டிய திருவிரலையுடைய மூவாட்டைத் திருவுருவும், அன்றிச் சிலர் கருதுமாறு உரோமச விருடியை யதிட்டித்துநின்ற திருவுருவும், பகவதியார் மாட்டுக் கருணைகொண்ட திருவுருவும், பிரம தீர்த்தக் கரையில் மூவாட்டையதாக அவசரங்கொண்ட திருவுருவும், பல அற்புதத் திருவுருவும், ஆன்ம வர்க்கங்களின் பரிபாகங்கட் கேற்ப ஆங்காங்கு வெளிப்பட்ட திருவுருவும், தேவர் பிரதிஷ்டை செய்த திருவுருவும், தூல சூக்கும வுபா சனைகளில் உபாசகர் திருவுளப் பாங்கிற்குத் தக அவ் வக்காலை கொண்டருளும் திருவுருவும், ஞானுனுபவத்திருவுருவும், பிற வும் அவ் வள்ளலாரது திருமேனிகளாம்.இத் திருமேனிகள் நம் மாலும் பிறராலும் கற்பித்த திருமேனிகள் அல்ல, அன்னார்க்கு அன்றும் இன்றும் என்றும் உள்ள அருட் டிருமேனிகள். இத் திருமேனி யழகர் சிவமாய்ப் பதியாய் இறையாய் உருவாய் அரு வாய் உருவருவாய் நித்தியமாய்ச் சத்துவமாய்த் தத்துவமாய்ச் சத்தியமாய் ஒன்ருய்ப் பலவாய் உயிர்க்குயிராய் நாயகமாய்ப் பரஞ்சோதியாய்ச் சின்மயமாய்ப் பொன்மயமாய் இன்பங்கொடுப் பதாய்ப் போகமாய் ஞானமாய் அதுவதுவாய் நம்மவர்க்குத் தீர்த்தராய் விநோதராய்ச் சித்தராய்ச் சதுரராய்த் தேவராய்ச் சாமியாய்ப் பரமார்த்தராய்த் தயாளராய் முத்தராய் வள்ள லாய்த் தேசிகராய் அம்மையாய் அப்பராய் நேசராய்ச் செல்வ ராய் விளங்குவர். அவரது திருமுடி முதல் திருவடிகாறுமுள்ள சீரழகை (திருஞா. ௨லாமாலை ௬௰௱) நோக்கின், நோக்குவார் அல்லல் எல்லாம் கட்டறும்; அவர்க்குச் சச்சிதானந்த அகண்ட ஏகாச சிவசாக்ஷாத்கார சிவைக்கிய சுகாதீதம் உறும். அன்றி யும் சைவ வேடமே சந்நியாசமே சிவயோகமே போகமே பர விந்துவே நாதமே ஓதலே கேட்டலே தெளிதலே கூடலே ஆற் றலே அநுபவமே சுகமெனக் கொள்வார்க்கும் வேண்டும் உருக் கொண்டு நின்று விமலபோதர் அருளுவர். 'வழிதரு பிறவிபி

னுறு, தொழிலமர் துயர்கெடுமிது, பொழிலணிதரு புகலிய, னெழிலிணையடி யிறைமினே!

பிரகாராந்தரமாக, ஆளுடையபிள்ளையார் உத்தமசத்திநி பாதத்தவர்க்கு அவர்தம் முன்னிலையும், பின்னிலையும் எண்ணி முயன்றாலும் எய்தற்கரியனவாயும், கற்பங்கள் பல செல்லினும் வருதற்கரியனவாயும் உள்ள அடிநிலையும் முடிநிலையுந் தெரித்து ஆன்மாநுபவமும் கிருபாநுபவமும் அப்பால் சுத்தசிவாநுபவ மும் வைத்தருளி உயிரநுபவத்தில ஆன்மா தத்துவநிலை கடந்து பரநாத தலத்துத் தன்மயமாயுள்ளதென்றும், அருளநுபவம் அப்புரநாத வெளியின்மேல் அத்தன்மயத்தைச் சார்ந்த தன் மயமாக்கிப் பரம்பரத்து உட்புறமாகி யுயிர் இனிப்புறத் திரு வருளியல்பாய் இருத்துதலேயென்றும், சிவாநுபவமாவது அவ் வுயிர் பெருவெளிமேலுள்ளதாய் விளங்கும் சச்சிதானந்த ரூபமாகிய சிவத்தொடு சுத்தாத்துவித நிலையிற் பொருந்துத லென்றும் விளக்கி அலகிலாவுணர்வு தந்து, அச்சைவ உணர்ச்சி யைப் பெற்ற பெரியார்க்கு ஆன்மகோடிகளை இரட்சித்தருளும் அதிகாரரூபமான குருத்துவ சிவசத்தியையும் பதிப்பர். அவ் வாறு பதிக்கப்பெற்றார், சிவஞானக்கண் பெற்றுப் பிறர்க்குக் கண்ணாகிக் காட்டாகிக் காட்சியாய்க் காண்பானாய்க் காணப்படுவ தாய் உடனின்று கண்டு காட்டியருளுவராதலின் ஞானக்கண் ணுடைய வள்ளலாராவர். இப்பெற்றித்தாக அருளும் விளக்க முற்றார் காழிக்கண்ணுடைய வள்ளலார். 'கயறுடைப்புனல் வயல்வளத்தகு கழுமலப்பதிநாதன், இயல்புடைக்கழல் தொழ நினைப்பவர் இருவினைத்துயர் போமே'. அந்நாதன் அருள்பெற்ற வள்ளலை 'அணிமின் துயரொடு மயலுங் கெடுவது சரதம்மே'.

(தொடரும்)

---

# சொற்பொருள் வேறுபாடு

[திரு. S. அனவரதவிநாயகம்பிள்ளை யவர்கள், M.A., L.T.,]

'பசு' என்னும் ஆரியச்சொல் பொதுவாக மாடுகளையும், யாகப் பசுவையும், மிருகத்தையும், சிவ கணத்தையும், ஆன்மா வையுங் குறிக்கும். பசு பாலனம் இடையன் தொழில். பசு மேதம் ஆடு முதலியவற்றைக் கொன்று புரியும் யாகம். பசு ராஜன் மிருக ராஜனாகிய சிங்கத்திற்கு ஒரு பெயர். பசு நாதன் பசுபதி சிவன் பெயர்கள். பசு பாசம் யாகப்பசுவைக்கட்டுங் கயிற்றிற்கும் ஆன்மாவைக் கட்டும் மலத்திற்கும் பெயராம்.

தமிழ் வழக்கிலே பசு எருதிற்குப் பெண் பாலாய் நிற்கின்றது. இலக்கியத்தில் 'பசு வேறு எங்கள் பரமன்' முதலிய இடங்களில் எருதையுங் குறிக்கும். பதி பசு பாசம் என்னும் தொடரில் பசு ஆன்மாவைக் குறிக்கின்றது. இது சைவ சாத்திர வழக்கு.

'ப்ரயோஜந' என்னும் ஆரியச்சொல் உபயோகம், பயன் முதலிய பொருள்களையுடையது. தமிழ்த் தற்பவமாகிய பிரயோசனத்திற்கும் அப்பொருள்கள் உண்டு. ஆயினும் அது சென்னை முதலிய ஊர்களில் சுபா சுப கருமங்களைக் குறிக்க வழங்குகின்றது. கலியாணத்தையும் கருமாந்தரத்தையும் குறிக்க அச்சொற்களோ அல்லது கண்ணாலம் காரியம் என்பனவோ வழங்குமாயினும் அவற்றிற் குறைந்த சிறு கருமங்களெல்லாம் பிரயோசனமென்றே சொல்லப்படுகின்றன. பயனைக் கருதிச் செய்யும் கருமத்தைப் பயனென்பார் அதனைப் பிரயோசன மென்றனர் போலும். 'இன்று அவர் வீட்டில் ஒரு பிரயோசனம்' என்பது சாதாரணமாகக் கேட்கப்படும் வசனம். தெலுங்கில் 'ப்ரஜோஜநமு' என்னும் சொல்லுக்குத் தொழில், வேலை என்னும் பொருள் காணப்படுகின்றது. வீட்டில் சாதாரணமாக நிகழும் வேலையினும் சுபா சுப கருமங்கள் விசேஷ வேலை கொள்ளுமாகலின் அதனைப் பிரயோசனமென்றனரெனலுமொன்று.

'பாஷா' என்னும் ஆரியச்சொல் மொழி, பிராகிருதமொழி என்னும் பொருள்களையுடையது. தமிழில் அது பாடையெனத் தற்பவமாய் வருங்கால் மொழி யென்னும் பொருளிலேயே வருகின்றது; பதினெண் பாடை யென்ற விடத்துப்போல. வடநாட்டில் 'பாஷாக்ரந்தங்கள்' என்பது ஸம்ஸ்க்ருதத்தோடு தொடர்புடைய நாட்டு மொழிகளிற் செய்த நூல்களைக் குறிக்கும். 'பாஷாடீகா' என்பது வட நூலுக்கு நாட்டு மொழியிற் செய்த சிற்றுரையைக் குறிக்கும் தமிழில் 'பாசை' என்றொரு சொல் வழக்கிலுள்ளது; சிலர் 'பாஷை' என்றும் வழங்குவர். அது வசை யென்னும் பொருளது. 'இன்ன காரியம் செய்தேனாயின் அல்லது செய்யேனாயின் இப்பழிச்சொல பூண்பேனாக' என்று பிரதிஞ்ஞை செய்து கொள்ளுதலையே 'பாசை வைத்தல்' என்பர். 'பாஷை' என்பதற்குப் பேச்சு என்னும் பொருள் உளதாகலின் அப்பொருள் திரிந்து இவ் வசைப்பொருள் வந்திருக்க வேண்டும்.

'மத' என்னும் ஆரியச்சொல் கருத்து, அபிப்பிராயம், கொள்கை யென்னும் பொருள்களினும் சமயக்கொள்கை யென்னும் பொருளிலும் வரும். தமிழர் அது மதமெனத் தற்பவ

மாய் வருங்கால் சமயக்கொள்கையே சாமானிய வழக்கிற் காணும் பொருள். இலக்கியத்தில் 'பிறர் தம்மத மேற்கொண்டு களைவே' என்னும் நன்னூலிற் போலக் கொள்கை யென்னும் பொருள் காணப்படுகிறது. வெறியென்று பொருள்படும் 'மதம்' வேறு. ஆரியத்தில் இரண்டற்கும் எழுத்துப் பேதமுண்டு.

'வணிஜ்' என்னும் சொல்லோடு இயைபுடைய 'வாணிஜ' என்னும் ஆரியச்சொல் வர்த்தகன் என்னும் பொருளது. அது தமிழில் வாணியன் எனத் தற்பவமாய் வருங்கால் எண்ணெய் விற்பவனைக் குறிக்கின்றது. தமிழருள் அவனை யன்றி வேறு வர்த்தகனில்லை போலும். மலையாளச் சொல்லுக்கும் அதுவே பொருள். வட இந்தியாவில் 'பனிய' என்னும் தற்பவம் வர்த்தக னென்னும் பொதுப் பொருளுடையதாயினும் தானிய விற்கிர யஞ் செய்பவனையே அடிக்கடி குறிக்கின்றது' தானியங்கள் உணவுப் பொருள்களா யிருத்தலால் சொற்பொருள் மாறுதல் ஒருவாறு விளங்குகின்றது. தமிழில் 'வணிகன்' என்னும் தற் பவம் வர்த்தகன் என்னும் பொதுப் பொருளைக் குறிக்கவே வழங்குகின்றது. அஃது இலக்கியச்சொல். பழந் தமிழில் வாணி யன், வாணிகன் பொதுப் பொருளையே குறித்து வந்திருக்க வேண்டும்; கூல வாணிகன் சாத்தனார் என்னும் பிரயோகத்தினால் அது தெளிவாகும்.

'வாதிந்' என்னும் ஆரியச்சொல் தமிழில் வாதியெனத் தற் பவமாய் வருங்கால் அதற்குரிய 'வழக்கில் வாதி' என்னும் பொருளொன்றையே கொள்ளும். பிரம வாதி, மதவாதி முத லிய தொடர்களில் உரைப்பவன், வாதம் புரிபவன் என்னும் பொருளில் வரும். இரச வாதம் புரிபவனை வாதியென்றலு முண்டு. அஃது அருகிய வழக்கு. அவ்வாறே இரசவாதத்தை வாதமென்றுஞ் சொல்வர்.

'விசார' என்னும் ஆரியச்சொல் ஆலோசனை, ஆராய்ச்சி, தேர்தல் முதலிய பொருள்களை யுடையது. தமிழில் அது விசார மென வருங்கால் சாதாரணமாகக் கவலை யென்னும் பொருளில் வழங்குகின்றது. 'அன்ன விசாரமதுவே விசாரம்' என்னும் பட் டினத்துப் பிள்ளையார் வாக்கையும் நோக்குக. ஆராய்ச்சி யென் னும் பொருளில் அம்மொழி நூல் வழக்கில் வருமென்பது 'வேதாந்தமத விசாரம்', 'விசாரக்கிரந்தம்' முதலிய பிரயோகங் களால் விளங்கும், விசாரித்தல் என்றவினை ஆராய்தலையே குறிக் கும். விசாரணை யென்ற சொல்லுக்கும் ஆராய்ச்சியே பொரு ளாம். மலையாளத்தில் விசாரம் என்பது எண்ணம் என்னும் பொருளிலும் விசாரித்தல நினைத்தல், எண்ணுதல் என்னும் பொருளிலும் சாதாரணமாக வருகின்றது.

'வேஷ்டி' என்பது 'வேஷ்ட்' என்னும் ஆரியத்தாதுவினின் றும் உண்டாயசொல், அத்தாதுவிற்கு மூடுதல் உடுத்தல் என்பன பொருள்கள். தமிழில் அஃது அரையைச் சுற்றிக் கட்டப்படும் துணியை முதலிற் குறித்துப்பின் அங்கவஸ்திரமாக மேல் அணியும் துணியையும் குறிக்கலாயிற்று. வேட்டி யென்பது தற்பவம்.

'வ்யாபார' என்னும் ஆரியச்சொல் தொழில், உத்தியோகம் என்னும் பொருள்களில் வழங்குகிறது. தமிழில் அது வியாபாரமெனத் தற்பவமாக வர்த்தகமென்னும் பொருளில் வரும். வர்த்தகம் ஒருவகைத் தொழில்தானே. வடநூற் பயிற்சியுடையார் 'அவ்யாகிருத வியாபாரம்' முதலிய தொடர்களில் தொழில் என்னும் பொதுப் பொருளிலேயே அதனை வழங்குவர். ஆயினும் அது பெருவழக்கன்று.

'ஸம்ஸார' என்னும் ஆரியச்சொல் உலக நடை யென்னும் பொருள்களில் வழங்கும். தமிழில் அது சமுசாரமெனத் தற்பவமாய்க் குடித்தனம் முதலிய பொருள்களில் வந்து மனைவியையும் குறிப்பதாயிற்று. உலக நடை அவனவனுக்கு அவனுடைய குடியைப் பொறுத்ததே யாகலானும் மனையாளில்லாது மனையில்லை யாதலால் மனையாளே இல்லத்துக்குச் சிறந்தாளாயிருத்தலானும் சமுசாரத்துக்கு அப்பொருள்கள் ஏற்பட்டன. கன்னட பாஷையில் 'குடும்பம்' என்பது இவ்வாறே மனையாளைக் குறிக்கின்றது.

'ஸாதந' என்னும் ஆரியச்சொல் கருவி யென்னும் பொருளில் வரும். சாதனமென்னுந் தமிழ்த் தற்பவத்திற்கும் அதுவே பொருள். 'சாதனமின்றி யொன்றைச் சாதிப்பாருலகி லில்லை' யென்பதை நோக்குக. சாதனமே சாதனை யென்றும் உருமாறி வரும். 'யோக சாதனை' என்பது யோகஞ் சாதித்தலைக் குறிக்கும். 'சாதனை' பிடிவாதம் என்னும் பொருளிலும் வரும். ஒன்றிற் சித்திபெற வேண்டி ஒரு சாதனத்தை எடுத்துச் சாதிக்கப் புகின் அதில் மனவொருமைப் பாட்டோடு முயலல் வேண்டுமன்றோ? அப்பொருளிலிருந்து நற்பயன் கருதாமல் ஏற்படும் வெறும் பிடிவாதத்துக்கும் அச்சொல் வழங்குவதாயிற்று.

'ஸ்தல' என்னும் ஆரியச்சொல் 'தீர்த்த' போன்றதொன்று. அதற்கு இடம், நிலம் என்பதே பொருள். தமிழில் தற்பவமாய் வரும் தலமென்னும் சொல் இலக்கியத்தில் அப்பொருளில் வருவதுண்டாயினும், வழக்கில் புண்ணியஸ்தலம் என்னும் பொருளிலேயே வருகின்றது. 'மூர்த்தி தலந்தீர்த்தம்' என்னுஞ் சொற்றொடரையும் நோக்குக.

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[திரு. தி. சு. பாலசுந்தரனவர்கள்]

(௩சுஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வகையான அருட்பெருஞ் சிறப்புக்களமைந்த செந்தமிழ்ச் சைவத் திருவருட் பனுவலை இனித் திருமுறை திருமுறையாக வகுத்தெடுத்துக்கொண்டு, அங்கங்குங் காணப்படுஞ் சிறப்பியல்புகளை ஆராய்வோம். இங்ஙன் ஆராய்வதன் முன்னர், அதற்குப் பொருந்திய மட்டில் பொருந்து வழியாக அத் திருமுறைகளை அருளிய வள்ளற் பெருமானின் வரலாற்றைச் சுருக்கிக் காண்பது நன்று.

இவர்கள், தவத்திரு உடைய இராமையபிள்ளை சின்னம்மை என்பார்பால் சுபானு ஆண்டு புரட்டாசித் திங்களில், அருளொழுக்கங் கொழுந்துவிட்டுத் தழையுமாறு தில்லைக்கு அடுத்த மருதூரில் தோன்றியருளினார்கள். இராமலிங்கம் என்னும் பிள்ளைப் பெயர் அணிந்து இளந்திங்களின் வளர் நிலவெனத் திகழ்ந்து அவர்கள் வளர்ந்து வருதலும், பிறந்த ஐந்தாந் திங்களிலேயே தம் அருமைத் தாயாரின் கையமர்ந்து அம்மையப்பரின் அருளொழுகுந் திருநடத்தைத் தில்லைக்கோயிலிற் காணப்பெற்றுக் கண்ணுங் கருத்தும் மகிழ் தூங்குங் குறிப்பனவாய்க் குறுநகை கொண்டு தம வினை நலம் விளக்கிய அருமை இங்கிருந்தே குறிக்கொளக்கூடியது.

"தாய்முதலோ ரொடுசிறிய பருவத்தில் தில்லைத்
 தலத்திடையே திரை தூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேற் காட்டாதே என்றனக்கே எல்லாம்
 வெளியாகக் காட்டியவென் மெய்யுறவாம் பொருளே"
(ச, அருள் விளக்கமாலை, சச)

என்று அடிகள் அதனைப் பின் நினைந்து பாடுகின்றார்கள். ஆறுந் திங்களில் தம் தந்தையார் மண்ணுலகை நீத்தலும், பின்னர்ச் சில திங்களுக்கெல்லாம் தம தமையனாரோடு சென்னைப் பட்டினத்தைச் சேர்ந்து ஐந்தாண்டு நிரம்பினார்கள். எண்ணெழுத்துப் படிப்புகள் தேர்ந்த பின்னர்த் தமையனார் சபாபதி பிள்ளை என்பார், தம்பி இராமலிங்கத்தை இலக்கண இலக்கியப் பொருட் கல்விகள் பயிற்ற வெண்ணிச் செந்தமிழ்ப் புலமை மிக்க அறிஞர் ஒருவர்பால் விட்ட பொழுது, அவ் வறிஞர் பிள்ளைப் பெருமானின் திவிர மெய்யறிவை உணர்ந்து அவர்க்குக் கற்பிக்குங்

தொழிலை நெகிழ விடுவாராயினர். அக்காலங்களில் ஒன்பதாம் ஆண்டினரான நம் வள்ளலார் அருகிருந்த கந்தப் பெருமான் திருக்கோயிலுக்குச் சென்று சில வணக்கப் பாடல்கள் கூறி, அப் பெருமானிடம் நெஞ்சங் கரைவது வழக்கம். இவைகளை அறிந்து கொள்ளாத அண்ணனார், தாம் ஏற்படுத்திய ஆசிரியர் பாற் கல்வி பயிலாது வீணே காலங் கழிக்கின்றது பிள்ளை யென்று புறங்கூறி வந்தனர்.

அவர் நெஞ்சத்துக்கு அமைதி தருவான் கருதி, அன்று முதற் படிப்பதாக உறுதிகூறி முருகப் பெருமான் திருவுருவத்தில் அழுந்திய நெஞ்சம் உடையராய் அவ்வண்ணம் விளங்கிய வள்ளலார், ஒருநாள் மாலைப் பொழுதில் தன் வீட்டுத் தனியறை யொன்றிற் சென்று சுவரில் தொங்கிய ஒரு நிலைக் கண்ணாடிக்கு முன் திருவிளக்கும், பூ பழம் தேங்காய் முதலியனவும் இட்டுக் கர்ப்பூரம் ஏற்றித் தம் அறிவையும் ஒருமுகப்படுத்தித் திருவருளில் தோய்ந்து நின்றார்கள். ஒரு நெறிய மனம் வைத்த பெருமானுக்கு அப்பொழுது தணிகை முருகன் அருளுருவந் தோன்றுதலும், அதனருளால் துறைசேர்ந்த கல்வியறிவும், மெய்யுணர்ச்சியும், சைவச் செந்தமிழ்த் தீஞ்சுவை ததும்ப ஊறிப் பாடும் உண்மைத் திறனும் அவர்களுக்கு உண்டாவதாயிற்று. சென்னையின் கந்தப் பெருமானை வழிபட்டுவந்த பொழுதே பிள்ளையார், திருத்தணிகையைக் கேள்விப்பட்டு அதனை அவாவி நின்றதாற் போலும் தணிகை முருகன் திருவுருவம் அக் கண்ணாடியில் தோன்றலாயினது. அன்றே அக் கண்ணாடியில் விளங்கிய அண்ணல் அறுமுக முருகனைச்,

"சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும்நல் கோழிக் கொடியும்அருள்
கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும்என் கண்ணுற்றதே"

என்பது முதலாக முப்பது பாட்டுகளால் தாம் கண்ணுற்ற உண்மையை உள்ளபடி கூறி வழுத்தினர்கள். திருஞான சம்பந்தப் பெருமான்பால் தோன்றிய முதற்பாட்டுத் "தோடுடைய செவியன்" ஆவதுபோல, இராமலிங்க அடிகள்பால் எழுந்த முதற்பாட்டு இஃதாயிற்று.

அன்று முதல் வள்ளற் பெம்மான் தணிகை முருகன் தண்ணாருளால் இழுக்கப்பட்டுக் குழைந்த நெஞ்சுடையராய், அடிக்கடி வாய் குளிரப்பாடி அக் கடவுளைப் பரசி வருவார்கள். அப்பொழுது பாடியவை யெல்லாம், இப்பொழுது திருவருட்பாவில் ஐந்தாந் திருமுறையின் திருத்தணிகைப் பதிகங்களாகத் திகழு

கின்றன. அப் பெருமானை ஐந்நூற்று ஐம்பத்தோன்பது அருட்பாடல்களாற் பாடி வழுத்துங் கால அளவை வரையில் தணிகை மலையைச் சார்தற்கு அளவுபடாத பேரவா பலப்பல முறையாகப் பெருகியிர்த்தும், ஒருமுறைகூட அவண் எய்தப்பெறுமை அவர் இளந்தைப் பருவத்தராய்த் தம் தமையனார்க்கு உட்பட்டிருந்தமை போலும்! வள்ளலார் திருத்தணிகையைச் சார்ந்திலர் என்பதற்கு அவ் வைந்தாந் திருமுறைப் பாடல்கள் முழுவதும்,

"நணியே தணிகைக்கு வாவென ஓர்மொழி நல்குவையே"

"நண்ணேனோ மகிழ்வினொடும் திருத்தணிகை மலையதனை"

"தணிகை மலையைச் சாரேனோ"

"தன் நாயகனார் தணிகாசலனார் தனிவந்து இவண் மாறந்தாரே"

என்பவைகளோடு "எண்ணப்பத்து" "நாளெண்ணி வருந்தல்" முதலான அதன் தலைப் பெயர்கள் காணப்படுவதும், தணிகையை அடைந்ததாகக் காட்டும் சிறு குறிப்பும் அதன்கண் எங்குங் காணப்படாததுமே தக்க சான்றுகளாம். தணிகையைச் சாராமையால் பின்னும் பின்னுங் காதல்மிகப் பெறுவாராகிப் பிள்ளையார், அந்தோ ஆற்றாது வருந்திப் பிரிவு தேற்றி அவ்வப்பொழுதும் நெக்குருகுவர். அப்பொழுதே அவர்கள் நின்ற உண்மை நெறியின் உள்ளப் பெருமையை,

"அன்றோர் வடிவ மேருவிற்கொண்டு அருளுந்தூய அற்புதமே"
(ரு, செல்வச் சீர்த்தி மாலை, அ)

"நீயும் நானும் ஓர்பாலும் நீருமாய் நிற்க வேண்டினேன்"
(ரு, ஆற்றாமுறை, அ)

என்னும் அவர்தம் தணிகைப்பிரான் பாட்டுகளாலேயே நன்கு விளங்கும். அருளாசிரியரின் அருளாட்சித் தமக்கு ஒன்பதாம் ஆண்டிலேயே கிடைக்கப் பெற்றதாக அடிகள்,

"தூண்டாவிளக்கே திருப்பொதுவிற் சோதிமணியே ஆறெருமூன்று
ஆண்டாவதிலே முன்னென்னை ஆண்டாய்கருணை அளித்தருளே"
(சு, வாதனைக் கழிவு, எ)

எனவும், அப்போதே பாடுந்திறனும் உடன் எய்தியதாக

"உருவத்திலே சிறியேனாகி யுகத்தில் ஒன்றும் இன்றித்
தெருவத்திலே சிறுகால்வீசி ஆடிடச் சென்ற அந்தப்
பருவத்திலே நல்லறிவு அளித்தே உனைப்பாடச் செய்தாய்
அருவத்திலே உருவானோய் நின்தண்ணளி யார்க்குளதே"
(க, திருவருண் முறையீடு, சஅ)

எனவுங் குறித்திடுகின்றார்கள்.

இங்ஙனம் தம் ஒன்பதாம் ஆண்டிலேயே திருவருட்பொலிவு பெற்றுப் பண்ணிறைந்து பொருள் பொதிந்த இனிய செந்தமிழ்ப் பாடல்களைத் தெள்ளிப்பாடிவரும் நம் இராமலிங்க வள்ளலாரின் அருளொழுக்கம், யாவர்க்குந் தெரியாத நிலைமையிலிருந்தது. இவ்வாறு இரண்டாண்டுகள் கழிந்தன. சென்னையின் கந்தகோட்டத்துத் "தெய்வ மணிமாலையும், கந்தர் சரணப்பத்து, சண்முகர் கொம்மி, சண்முகர் மாலைப்பாட்டு" முதலியனவும், பாடியது இக் காலந்தான். ஒருநாள் தம் தமையனார் செய்யவேண்டிய தமிழ்ஞான சம்பந்தரின் வரலாற்று விரிவுரையைப் பிள்ளையவர்கள், சொல்வலிவும் பொருள் வளமுந் துறுமச் செவியின்பம் மிகுத்துக் "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்பத்" தக்காங்கு உரைதருவாரானார்கள். இவ்வருள் நிகழ்ச்சியிலிருந்துதான் சென்னையிலுள்ளார்க்குந், தம் தமையனார் அண்ணியார் முதலானவர்க்கும் பிள்ளைப் பெருமானது தெய்வத்திறம் விளங்கிற்று. விளங்கவே, அவர் தமையனாரும் அண்ணியாரும் தம் உறவினராக அவரை எண்ணாமல், தெய்வக் குழந்தையே இவண் வந்ததென வெண்ணிப் பேரன்புகொண்டு அவருள்ளம் வியந்திடுமாறு பணிசெய்து வந்தார்கள். அறிஞர் பலரும் அவர்க்குத் தொண்டுசெய் தொழுதும் நீராய்ச் சூழ்ந்து கிடப்பர். இதனிலிருந்து வள்ளற்பெம்மான் காலையிலெழூஉங் கதிரவனைப்போல எல்லார்க்குந் தெரிவாராயினர். கதிரொளிபோல் இவரொளியும் எங்கும் பரம்பிப் பயன் தந்தது. எனவே இதன் பின் பாடிய பாட்டுகளெல்லாம் யாவர்க்குந் தெரிந்தனவாகும். ஆதலால்தான் திருவருட்பா நான்கு திருமுறைகளாக அச்சேறி வெளிப்பட்ட பொழுது இத்தெரிந்த பாடல்களே முதலிலிருந்து நான்கு திருமுறைகளாக வகுக்கப்பட, மற்று இதற்கு முன் இரண்டாண்டுகளாக மறைந்த நிலையில் பாடிவைக்கப்பட்ட திருத்தணிகைப் பாடல்கள் முதல் திருமுறையாக அமைதற்கு இடமில்லாது போயிற்று. அதன் பின்னரே மறைந்து கிடந்த அவைகள் வெளிப்பட்டு ஐந்தாந் திருமுறையாகச் சேர்க்கப் படுதலும், திருவருட்பா ஐந்து திருமுறையாகவும் பின்னொன்றுஞ் சேர்க்கப்பட ஆறு திருமுறையாகவும் வெளிப்பட்டதென்க.

இவ்வாறு எல்லார்க்குந் தெரிந்தவராய்த் தம் குடும்பத்தவரால் அளவுக் கடங்காப் பணிசெயப்பெற்று விளங்கிய பொழுது தம்மினும் மூத்தார் செய்யும் அப்பணியைப் பெறப் பிள்ளையவர்களின் அருள் நெஞ்சம் ஒருப்பட்டிலது. உடனே அவர்கள் அக் குடும்பத்தினின்றும் நீங்கத் தலைப்பட்டனர்கள். அப்

பொழுது அவர்கட்குப் பன்னிரண்டாம் ஆண்டு நடைபெற்றது. அவ்வாண்டு முதல் மேல் நிகழ்ந்த நிலைகளை யெல்லாம் அடிகள்,

"பனிரண்டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
படியிற்பட்ட பாட்டை நினைக்கின் மலையுங் கரையுமே"

என்றும்,

"ஈறாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
எளியேன் பட்டபாட்டை நினைக்கில் இரும்புங் கரையுமே"
(ச, மெய்யருள் வியப்புமாலை எஅ, எக)

என்றும் நெஞ்சங் கரைந்து அருளுகின்றார்கள். வள்ளலார் வடலூர்க்குப் போனபிறகு, தாம் பாடிய பிள்ளைப் பெருவிண்ணப்பத்தின் முதலிலிருந்து, இப் பன்னிரண்டாண்டுக்குமேல் அடைந்த தம் நிலைகளை யெல்லாங்கூறி அதன் இறுதியில்,

"பன்னிரண்டாண்டு தொடங்கி நான் இற்றைப் பகல்வரை நடந்தவை யெல்லாம் முன்னி நின்று உரைத்தால் உலப்புறாது அதனால் ஒரு சில உரைத்தனன்" (கஉஉ) என்கின்றார்கள். பின்பு தம் பதின்மூன்றாம் ஆண்டிலிருந்தே அக் குடும்பத்திற் கலப்பதை முற்றிலும் விட்டு விட்டார்கள். அவ்விளந்தைப் பருவத்திலேயே, அழுகொழுக்கித் துவண்டொசியும் தம் அருளுடம்பு பிறர்க்குத் தெரியாதபடி, தூயவெள்ளைத் துணிகொண்டு முழங்கால் அளவில் நிற்குமாறு இடை யுடுத்தலோடு முக்காடிட்டு மேற் போர்த்து மறைத்து வந்ததும், கால் மேற்கால் போடுதல் உயர்ந்த இடத்தில் உட்காருதல் பிறருடன் வீண் பேசிக் காலங் கழித்தல் முதலான வன்செய்கைகளே இலராய் எங்கும் எப்பொழுதும் மக்கட் செய்கைகள் சிறிதுமே விளங்காது போகத் தெய்வ நினைவையே எழுப்பிவிடும் காடு மலை வெளி முதலான இயற்கைத் தனி யிடங்களையே விரும்பி அங்குச் சென்று இறை நலத்திற் படிந்திருந்ததும் ஆகிய இவை யெல்லாம் ஆன்றடங்கிய வள்ளற் பிரானின் மல அடக்கத்தைத் தெளிவிக்கும் அரிய அடையாளங்களாம். இவைகள்,

"மெய்யுறக் காட்ட வெருவிவெண் துகிலால்
மெய்யெலாம் ஐயகா மறைத்தேன்"
(ச, பிள்ளைப் பெருவிண்ணப்பம், சஅ)

"காலின்மேல் கால்வைக்கப் பயந்தேன்" ,, சங

"காட்டுஉயர் அணைமேல் இருக்கவும் பயந்தேன்" ,, கங

"நீட்டிப் பேசுதலை நினைக்கவும் பயந்தேன்" ,, கங

"தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்
சிலுகுறும் என்று உளம்பயந்தே
நாட்டிலே சிறிய ஊர்ப்புறங் களிலே
நண்ணினேன் ஊர்ப்புறம் அடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்
களத்திலே திரிந்துஉற்ற இளைப்பை
எட்டிலே எழுத முடியுமோ இவைகள்
எந்தைநீ அறிந்தது தானே" ,, ௫௪

என்னும் அருட்பா மொழிகளால் விளங்கும்.

அருள் வழிப்பட்ட பேரறிவக்கதிர் நாற்புறமும் வீசப் பிள்ளைப் பெருமான் சென்னையில் விளங்கிய பொழுது செந்தமிழறிஞர், சிவநூற் புலவர், பிறமத வல்லுநர், வடமொழியாளர், மெய்யுரை கொள்வோர் முதலிய பல்வகை யறிவின் பல திறப்பட்டோர் பலப்பலரும் தத்தமக் கெழுந்த ஐயப்பசியை அவர்கள் அருளுணர்ச்சியின் அறிவு உணவால் தணிவுசெய்து கொள்ளுங் கருத்துடையராய், அவர்மாட்டு அடிக்கடி நெருங்கிக் கூட்டமாய்ப் பெருகி விடுவார்கள். வாய்மதங் கொண்டோரும் அணுகி வாதிட்டு அடங்கி யொழிவர். அவையெல்லாம் தமது அருள் நினைவின் ஒருமைப் பாட்டுக்குப் பேரிடையூறாய் நிற்பது கண்ட வள்ளலார் சென்னை நகரை விட்டு வேறிடஞ்செல்ல வேண்டினர்கள். சென்னைக்கு அடுத்துச் சிவபிரான் திருக்கோயில்கள் அமைந்த சிறப்பான இரண்டு ஊர்களில் திருவொற்றியூர் ஒன்று மற்றொன்றாகிய மயிலாப்பூர், வேறு பிரித்தறியக் கூடாதபடி சென்னையொடு சேர்ந்து அதன் அருகில் அதையொத்தே எல்லா வகையிலும் இலகுவதால் சென்னைக்கு வேறாகித் தனித்து இயற்கை யழகுகள் மிக்கு விளங்குந் திருவொற்றியூரே பிள்ளையவர்கட்குப் பெரிது பிடிப்பதாயிற்று. ஆகவே குடும்பத்தை முனிந்த தம் பன்னிரண்டாம் ஆண்டு முதல் அடிகள் திருவொற்றியூர்க்குச் சென்று திருக்கோயில் வழிபாடு ஆற்றி அங்குள்ள நம்பிரானை நெஞ்சார வழுத்திப் பல அருட் பாடல்கள் பாடத் தொடங்கினர்கள். பிள்ளையார் இச்சிறு பருவத்துக்குள் தமிழ்மறை முதலியன நன்கு கற்றவராய் விளங்கினமை,

"ஓதல் அறிவித்து உணர்வு அறிவித்து ஒற்றியூர்ச்சென்று உனைப்பாடக்
காதல் அறிவித்து" (௨, ஆனந்தப் பதிகம், ௨)

என்றமையின் விளங்கும்.

"பலர்பால் பகல்இரவும் படித்தசமயச் சாத்திரமும்"
(௬, அமையக் கூறல், ௮)

என்றதுங் காண்க. திருமுல்லைவாயில், திருவலிதாயம் முதலிய திருக்கோயில்களுக்குச் சென்றதும் இக்காலந்தான். அவர்கள் பாடிய பாடல்களெல்லாம் பலாச்சுளை போல்வன. "நவில்தொறு நூல்நயம்போலும்" என்னுந் திருவள்ளுவரின் திருவாய்மொழிக்குப் பேரிலக்கியமாவன. "விண்ணப்பக் கலிவெண்பா" முதல் "இங்கித மாலை" ஈறாக உள்ள முதல் திருமுறைப் பாடல்கள் முழுதும் இரண்டாந் திருமுறையில் "புண்ணிய விளக்கம்" முதல் "விண்ணப்பப் பதிகம்" வரையிலும் உள்ள எண்பது திருப்பதிகங்களும் வள்ளலார் சென்னையிலிருந்து திருவொற்றியூர்க்குச் சென்று மீளும் இக்காலத்தில் எழுந்தன வென்றும், மேல் "தரிசனப் பதிக"த்திலிருந்து இரண்டாந் திருமுறை முடிவு காறும் உள்ளன அவர்கள் தில்லைநகரைச் சேர்ந்த பின்பு அருளப்பட்டன வென்றும் அறிதல்வேண்டும். "விண்ணப்பக் கலிவெண்பா" "நெஞ்சறி வுறுத்தல்," "சிவநேச வெண்பா," "மகாதேவ மாலை" "திருவருண் முறையீடு," "வடிவுடை மாணிக்கமாலை," "இங்கித மாலை" என்னும் ஏழும் அப்பொழுது பாடப்பட்டவைகளில் நூறுபாட்டுச் சிறுமையும் எழுநூற்று மூன்று பாட்டுப் பெருமையும் உடைய நூல் வடிவினவா யிருத்தலால், அந்நூல்களை மட்டும் ஒருங்கு தொகுத்து ஒரு திருமுறையாக்கி, மற்றவையெல்லாம் பெரும்பாலும் பதிகங்களாக நிற்றல்கொண்டு வள்ளலார் தில்லைநகர் அண்மி அங்குப் பாடிய அருட் பாடல்கள் வரையில் எழுந்த எல்லாவற்றையும் மற்றும் ஒரு திருமுறையாக வகுத்தனர் பெரியார் என்க.

---

# தமிழ் இலக்கியம்
# TAMIL LITERATURE

## கொன்றைவேந்தன்
## KONRAI - VENDAN*

### காப்பு
(Wearing the cassia)

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.

Worship we the sacred feet of Him, who is the son of the Lord, adorned with garlands of Cassia!

---

* From the opening words of the poem.

க. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

One's parents are to one the earliest known Gods. *

உ. ஆலயந் தொழுவது சாலவும் நன்று

Very good it is to worship at a temple.

ங. இல்லற மல்லது நல்லற மன்று

No life like a house-holder's.

ச. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்

The wicked shall possess the fortune of the Miser

ரு. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு

Moderation in food means grace to women.

சு. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்

Who quarrels with townsmen, he shall perish root and branch.

எ. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்

Science and letters may be spoken of as the two eyes.

அ. ஏவா மக்கள் மூவா மருந்து

Intelligent children are as ambrosia to their parents.

கூ. ஐயம் புகினும் செய்வன செய்

Even by begging, do that which ought to be one.

ய. ஒருவனைப் பற்றி ஒரகத் திரு

Secure a good friend and settle down somewhere.

கக. ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்

More than even study is good conduct, essential to Brahmans.

---

* (fit to be worshipped).

கஉ. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு

Envy is the source of sure ruin.

கங. அஃகமும் காசும் சிக்கெனத் தேடு

Seek and earn early, grains and money.

கச. கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை

Chastity in man or woman is integrity of speech.

கரு. காவல்தானே பாவையர்க் கழகு

Protection is the best of loveliness to women.

கசு. கிட்டாதாயின் வெட்டென மற

Forget quickly the unattainable.

கஎ. கீழோராயினும் தாழ வுரை

Talk humbly even to the lowly.

கஅ. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை

The censorious have no kinsmen

க௯. கூரம்பாயினும் வீரியம் பேசேல்

Boasting is idle even for the wielder of a sharp spear.

உ௰. கெடுவது செய்யின் விடுவது கருமம்

Forget the evil that men have done to you.

உக. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை

Firmness of mind in loss, is the means of recouping the lost fortune.

உஉ. கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி

Better than wealth is learning.

உங. கொற்றவன் அறிதல் உற்றிடத் துதவி

To be known to the King may be of help in an emergency.

உச. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு

To listen to tales is to help fire with wind.

உரு. கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை
Who speaks ill of others shall be hated by all.

உசா. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை
Praise not your children in their presence.

உஎ. சான்றோர் என்கை ஈன்றோர்க் கழகு
To be known to be wise is a credit to one's parents.

உஅ. சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு
To worship Siva beautifies penance.

உகூ. சீரைத்தேடின் ஏரைத் தேடு
Seek honour, seek the plough.

௩0. சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்
To live amidst one's kin is credit to kinship.

௩க. சூதும் வாதும் வேதனை செய்யும்
Gambling and litigation are sources of trouble.

௩உ. செய்தவம் மறந்தால் கைதவம் மாளும்
Forgetting one's daily duties is fast sinking oneself in ignorance.

௩௩. சேமம் புகினும் சாமத் துறங்கு
Even watchmen should sleep a while ($2\frac{1}{2}$ hrs.)

௩ச. சையொத்திருந்தால் ஐயமிட்டுண்
If you are prosperous, give alms before you eat.

௩ரு. சொக்கர் என்பவர் அத்தம் பெறுவர்
The wealthy shall inherit, shall enjoy the world.

௩சா. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்
The idle shall ever wander in distress.

௩௭. தந்தை சொன்மிக்க மந்திரமில்லை

No sacred verse is holier than one's father's words.

௩௮. தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை

No temple nobler than one's own mother.

௩௯. திரைகட லோடியும் திரவியந் தேடு

Earn wealth even by crossing the seas.

௪௰. தீராக்கோபம் போராய் முடியும்

Unappeasable anger will end in frightful warfare.

௪௧. துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு

Unfeeling women are as fire in one's loin cloth.

௪௨. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்

Accusing wives are the death of their husbands.

௪௩. தெய்வம் சீறின் கைதவ மாளும்

When the Gods are enraged, all a man's virtue will fail him.

௪௪. தேடா தழிக்கின் பாடாய் முடியும்

Spending without earning will end in disaster.

௪௫. தையும் மாசியும் வையகத் துறங்கு

During the chill weather (January 15—March 15) sleep under a thatch of straw

௪௬. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது

The cultivator's living is sweeter than the courtier's.

௪௭. தோழனோடும் ஏழைமை பேசேல்

Speak not of your defects even to your own friend.

௪௮. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்

All but good associations will bring in trouble.

௪௯. நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை

When all the land is happy, there can be no danger.

௫௰. நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை

Purity of speech is the mark of sound and abiding scholarship.

௫௧. நீரகம் பொருந்திய ஊரகத் திரு

Live in a town with plenty of water convenience.

௫௨. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி

Even the smallest act should be deliberated on.

௫௩. நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு

Learn well, and act wisely.

௫௪. நெஞ்சை யொளித்தொரு வஞ்சகம் இல்லை

You cannot cheat your own conscience.

௫௫. நேரா நோன்பு சீரா காது.

What is not done with a whole mind, can never be well done.

௫௬. நைபவர் எனினும் நொய்ய உரையேல்

Even to the meanest, speak not words of pain.

௫௭. நொய்யவர் என்பவர் வெய்யவர் ஆவர்

The weakest turn the worst enemies.

௫௮. நோன் பென்பது கொன்று தின்னாமை

The best penance is not to kill.

௫௯. பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்

From the yield of grain, the cultivator's merit can be known.

௬௰. பாலோ டாயினும் காலம் அறிந்துண்

Take all things timely, even milk.

௬௧. பிறன்மனை புகாமை அறமெனத் தகும்

Avoidance of adultery is a noble virtue.

௬௨. பீரம் பேணி பாரந் தாங்கும்

Who preserves his strength, he can sustain any weight.

௬௩. புலையும் கொலையும் களவும் தவிர்

Meat-eating, murder and theft should be avoided.

௬௪. பூரியோர்க் கில்லை சீரிய ஒழுக்கம்

A noble act is impossible to the low.

௬௫. பெற்றோர்க் கில்லை சுற்றமும் சினமும்

The wise man transcends love and hate.

௬௬. பேதைமை என்பது மாதர்க் கணிகலம்

It is gracious in a woman not to seem to know everything.

௬௭. பையச் சென்றால் வையம் தாங்கும்

Deliberation wins dignity.

௬௮. பொல்லாங் சென்பவை எல்லாம் தவிர்

Refrain from all manner of evil.

௬௯. போனகம் என்பது தானுழந் துண்டல்

The sweetest food is the fruit of labour.

௭௰. மருந்தே யாயினும் விருந்தோ டுண்

Whatever you eat, eat with your guest.

௭௧. மாரி யல்லது காரிய மில்லை

No rain. no gain.

௭௨. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை

More of lightning, more of rain.

௭௩. மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது

Ships sail not by themselves.

௭௪. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்

Actions have their reactions.

௭௫. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்

The words of the wise are as nectar.*

௭௬. மெத்தையில் படுத்தல் நித்திரைக் கழகு

Sweet sleep, on a soft bed.

௭௭. மேழிச் செல்வம் கோழை படாது

A farmer's fortune shall never wane.

௭௮. மைவிழி யார்தம் மனையகன் றொழுகு

Avoid houses of ill fame†

௭௯. மொழிவது மறுக்கின் அழிவது கருமம்

Neglect of good counsel spells ruin.

௮௰. மோனமென்பது ஞானவரம்பு

Silence is the real Index of wisdom.

௮௧. வளவனாயினும் அளவறிந் தழித்துண்

A measure to everything even when thy possessions overflow

௮௨. வானஞ் சுருங்கின் தானம் சுருங்கும்

When the rains fail, good deeds also fail.

௮௩. விருந்திலோர்க்கில்லை பொருந்திய வொழுக்கம்

Without hospitality, there is no domestic virtue.

௮௪. வீரன் கேண்மை கூரம் பாகும்.

The very friendship of a hero will be as a sharp spear to one's enemies.

௮௫ உரவோர் என்கை இரவா திருத்தல்

The strong shall never beg.

---

*protection against death.

†of those that paint their eyelids

அரு. ஊக்கமுடைமை ஆக்கத்திற் கழகு
Earnestness ensures success.

அஎ. வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை
Unto the pure all things are pure.

அஅ. வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை
Against the king's wrath, there is no help.

அகூ. வையந்தோறும் தெய்வந் தொழு
At each sacred spot, propitiate the deity.

கூ0. ஒத்த இடத்து நித்திரை கொள்
Sleep on level ground.

கூக. ஓதாதார்க் கில்லை உணர்வொடு ஒழுக்கம்
Good feeling and conduct are impossible to the illiterate.

---

## அப்பூதியடிகள்

[திரு. C. K. இராமச்சந்திர செட்டியாரவர்கள் B. A., B. L.]

"தனமா வதுதிரு நாவுக் கரசின் சரணமென்னு
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்டமிழ்க்கே
இனமாத் தனது பெயரிடப் பெற்றவன் எங்கள்பிரான்
அனமார் வயற்றிங்க ளூரினில் வேதியன் அப்பூதியே"

திங்களூரிலே பார்ப்பன குலத்திலே அப்பூதியடிகள் என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் இல்லற வாழ்க்கை பூண்டு பொய், களவு, காமம், கோபம் முதலிய குற்றங்களை நீக்கிச் சிவத்தொண்டில் சிறந்து விளங்கினார். அவர் சிவப்பெரும் பேற்றையுடைய திருநாவுக்கரசு நாயனாருடைய பெருமைகளைக் கேள்வியுற்று அவர்மேல் மிகுந்த அன்பு பூண்டு அவரையே தம் குருவாகக் கொண்டு பணிந்து வந்தார். திருநாவுக்கரசு நாயனாரைத் தாம் நேரில் கண்டு வணங்கப் பெறாதவராயிருந்தும் அவர் மேல் தாம் வைத்த அளவிறந்த அன்பினால் தம் வீட்டு அளவை, நிறை கோல் முதலிய சாமான்கள், தம் மக்கள் மாடுகள் முதலியவைகளுக்கும் அவரது பெயரையே இட்டிருந்தார்.

இவ்விதமாய் ஆழ்ந்த குருபத்தியுடன் அப்பூதியடிகள் அறங்கள் புரிந்துவரும் காலத்தில் ஒரு நாள் திருநாவுக்கரசு நாயனார் சிவப்பதிகடோறுஞ் சென்று வணங்கி வரும்போது திருப்பழனம் என்ற பதியை விட்டுத் திங்களூரை அணுகினார். அங்கே 'திருநாவுக்கரசு நாயனார் தண்ணீர்ப் பந்தல்' என்று ஒன்று தம் பெயரினால் அமைக்கப்பட்டிருந்ததைக்கண்டு, வியந்து அங்கிருந்தவர்களை, "யார் இப்பெயரிட்டு நடத்துபவர்" எனக் கேட்டார். அதற்கவர்கள், "இத்தண்ணீர்ப் பந்தல் மாத்திர மன்று, மற்றுமுள்ள குளம், மடம், பூங்கா முதலிய எல்லா அற நிலையங்களும் இப்பெயராலேயே அப்பூதியடிகள் என்ற ஒரு பெரியவர் நடத்தி வருகிறார்" என்றார்கள். அதற்கவர், "இதற்குக் காரணம்என்னவோ, அவர் எங்கு உள்ளார்?" என வினவ, அவர்கள் "அவர் இப்போதுதான் சென்றார்; அவர் வீடு அண்மையில் இருக்கிறது" என்று சொன்னார்கள். அதைக்கேட்ட நாயனார் அப்பூதியடிகளைக் காணவேண்டி அவர் வீட்டுக்குச் சென்றார்.

திருநாவுக்கரசு நாயனார் அப்பூதியடிகளின் வீட்டு வாயிலுக்குச் செல்லவே, உள்ளிருந்த அடிகள் சிவனடியார் வரவை நோக்கி ஆவலுடன் எதிர்கொண்டு வணங்கினார். அப்போது நாயனாரை அப்பூதியடிகள் தம் வீட்டுக்கு எழுந்தருளியதைப் பற்றிக் கேட்கவே, அவர் "திருப்பழனம் விட்டு இவ்வூர் வழியாக வருகையில் நீர் வைத்துள்ள அறநிலையங்களைக் கண்டும் கேட்டும் உம்மைக் காணவந்தோம்" என்று சொல்லிப், பின்னும் "சிவனடியார்களுக்காகச் செய்துள்ள அவ்வறங்களுக்கு உம்முடைய பெயரைக் குறிக்காமல், வேறு ஒருவர் பெயரைக் குறிக்க என்ன காரணம்?" என்று கேட்டார். அச்சொற்களைக் கேட்ட அப்பூதியடிகள் உளம் நைந்தவராய் "நன்றாய் அருளினீர்! கொடியவர்களாகிய சமணர்களுடன் சேர்ந்த பல்லவ வரசன் செய்த கொடுமைகளைச் சிவனருளினால் வென்ற பெருந் தொண்டரது பெயரையா வேறொருவர் பெயர் என்றீர்" என்று சினந்து, "சிவபிரானுக்குத் தொண்டு செய்தால் இம்மையிலேயும் பிழைக்கலாம் என்று கற்பித்த அப்பெரியார் பெயரை நான் எழுத, அதற்கு இக்கடுஞ்சொல்லைச் சொன்னீர். கல்தோணியால் கடல் கடந்த அப்பெரியாருடைய பெருமையை அறியாதார் யார் உளர்? அப்படியிருக்கச் சிவவடிவங் கொண்டும் அவரை அறியாத நீர் எவ்விடத்தவர்? நீர் யார்?" எனக்கேட்டார். அப்போது அப்பூதியடிகளின் அளவிறந்த அன்பை அறிந்த நமது நாயனார், "தீவினையினின்றும் ஈடேறும்படி இறைவனால் சூலை நோய் தந்து ஆட்கொள்ளப் பெற்ற அச்சிறியன் நானே"

என்றனர். அச்சொற்களைக் கேட்கவே அப்பூதியடிகள் மகிழ்வினால் இன்பக்கண்ணீர் பொழிய, உடல் சிலு சிலுத்து, வாய் தடுமாறி, தலையின்மேல் கை குவித்து அடிகள் திருவடிகளில் விழுந்து வணங்கினார். பிறகு இன்னது செய்வது என்பது அறியாமல் வீடு புகுந்து தம் பெண்டு, பிள்ளைகள், சுற்றத்தார் இவர்களை அழைத்துவந்து அடிகளை வணங்கச் செய்து உள் அழைத்துச் சென்று திருவடி வணக்கஞ் செய்து தம் விருந்துக்கு இசையும்படி வேண்டினார்.

அப்பூதியடிகள் மனைவியார் விருந்துக்கு வேண்டிய சமையல் செய்யவே, இலையறுத்து வரும்படி தம்பிள்ளைகளில் மூத்த திருநாவுக்கரசு என்னும் பிள்ளையை அனுப்பினார். அவரும் நமக்குச் செயற்கருஞ் செய்கை வாய்ந்தது நாம் செய்த நல்லறம் என்று எண்ணி விரைவில் பின்புறம் சென்று வாழையிலை அறுக்கும்போது அங்கிருந்த ஒரு நச்சுப்பாம்பு சீறித் தீண்டிற்று. அதைச் சிறிதும் எண்ணாமல் உடனே தன் அன்னையாரிடம் ஓடி வாழையிலையைக் கொடுத்துவிட்டுக் கீழே விழுந்து இறந்துவிட்டார். தந்தைதாயர் அதைக்கண்டு உளம்பதைத்து குறிகளால் அவன் நஞ்சால் இறந்தான் என்று தெரிந்து கொண்டு இந்நிகழ்ச்சி வெளியானால் அடிகள் விருந்துக்கு இடையூறு வருமே என்று எண்ணி அப்பிணத்தை ஒரு பாயில் மூடி மறைத்து வைத்துவிட்டுத் திருநாவுக்கரசு நாயனாருக்குத் திருவமுது செய்விக்க வந்தார்கள். நாயனாரும் ஓர் இருக்கையில் வீற்றிருந்து திருநீறு அணிந்து கொண்டு அப்பூதியடிகள், அவர் மனைவியார், பிள்ளைகள் முதலியவர்களுக்குத் திருநீறு வழங்கும்போது மூத்த பிள்ளை வராதது கண்டு 'அவர் எங்கே?' என்று கேட்டார். அதற்கு அடிகள் "அவன் இங்கே உதவான்" எனவே உள்ளத்தில் தோன்றிய ஒரு தடுமாற்றத்தை உணர்ந்து நாயனார், "அவன் எங்கே? உண்மையைச் சொல்லுங்கள்" என்று வற்புறுத்தவே, அடிகளும் நடந்த செய்தி முழுவதுஞ் சொன்னார். "இப்படியும் செய்வார் உண்டோ?" என்று சொல்லி அரசர் அப்பிணத்தைத் தருவித்து, நஞ்சை நீக்கும் பொருட்டுச் சிவபிரான் மீது "ஒன்று கொலாம்" என்று தொடங்கும் நஞ்சகற்றும் திருப்பதிகம் அருளிச் செய்தார். உடனே பிள்ளை நஞ்சு நீங்கி, உயிர் பெற்று, எழுந்து தம்மை வணங்கவே அவருக்குத் திருநீறு அளித்தார். தம் புதல்வன் உயிர் பெற்றதைக் கண்டு மகிழ்ச்சி அடையாமல் நாயனார் விருந்துக்குத் தடை நேரிட்டதே என்று அடிகள் பெருந்துன்பம் அடைந்திருந்ததைக் கண்ட அரசுகள் அடிகளோடு அவர் வீட்டிற்குள் விருந்துண்ணச் சென்றார். அங்கே அப்பூதியடிகள், அவர் புதல்வர்கள்

இவர்களோடு ஒருங்குடன் இருந்து விருந்துண்டார். பிறகு பலநாள் அவ்வடியவரோடு கலந்திருந்து, அரசுகள் திருப் பழனம் சென்று அப்பதியில் தம் திருப்பதிகத்தில் அடிகளைச் சிறப்பித்துப் பாடியருளி யிருக்கின்றனர். பின்பு, அப்பூதியடிக ளும், தம் ஆசிரியரான திருநாவுக்கரசு நாயனர் திருவடிவங்களை வணங்கலே தமக்குப் பெருஞ்செல்வம் என்று எண்ணிப் பல நாள் வாழ்ந்திருந்து அம்மெய்யன்போடே சிவனுடன் இரண் டறக் கலந்தார்.

இப்பெரியார் வரலாற்றால் கிடைக்கக்கூடிய படிப்பினை களைச் சிறிது ஆராய்வாம்.

க. திருநாவுக்கரசு நாயனரை அப்பூதியடிகள் தாம் முன்பு நேரில் பார்த்திராதிருந்தும் அவர் தாம் தம் சிந்தைக்கு ஏற்ற வர் என்றும் தம் வாழ்நாளின் பயனுக்கு அவரே இலக்கானவர் என்றும் அறிந்தபோதே, அவரை ஆசிரியராகக் கொண்டார். அவரிடம ஆழ்ந்த அன்பு பூண்டார். அன்பு மேலீட்டினுல் அவ ரது சிறந்த பெயர்தான் யாவற்றினும் சிறந்ததென்று எண்ணித் தம் எல்லாப் பொருள்களுக்கும் அப்பெயரையே இட்டு அவை களை யெல்லாம் அவருக்கே உரித்தாக்கினர். தம்புதல்வர்களுக் கும் அவர் பெயரே இட்டார். தாம் செய்யும் அறங்களும் தம் பெயரால் அல்லாமல் அவர் பெயராலேயே செய்து அவர்க்கே உரிமை யாக்கினர். அவரிடம் குருபத்தி சிறந்திருந்தது. ஆகை யால் தான் தம் குருவான திருநாவுக்கரசர் பெயரை வேறொரு வர் பெயர் என்ற சொல் தம் காதில் விழவே அவர் வெகுண்டு, இவ்விதம இகழ்வாரு முண்டோ என்று சினந்தார். பின்பும் தம் புதல்வன் இறந்தான் என்பதையும் ஒரு பொருட்டாய் எண்ணு மல் தம் குருவை அமுது செய்விக்க வேண்டும் என்ற எண்ணமே அவர் மேலிட்டிருந்தார். புதல்வன் உயிர்பெற் றெழுந்ததும் கூட அவர்க்கு ஒரு மகிழ்ச்சியன்று. குருவின் விருந்துக்கு ஒரு தடை நேரிட்டதென்றல்லவோ அவர் உளம் நொந்தார். இவ் வருங்குணம் யாரிடம் உண்டு.

உ. குருபத்தியில் சிறந்தவன் எனக் கொள்ளும் ஏகலை வன் வரலாற்றையும் நம் அப்பூதியடிகள் வரலாற்றையும் ஒரு மிக்க வைத்து ஆராய்வதினல் பயன் கிடைக்கும். தான் எவ் வளவு வேண்டிக் கொண்டும் தனக்குக் குருவாக இருக்கமாட் டேன் என்று மறுதலித்த துரோணசாரியரைப்போல் ஒரு உரு வம் அமைத்து அதன் மூலம் அன்பு பாராட்டி அப்பெருமையி ஞல் ஏகலைவன் தன்குருவுக்குத் தெரிந்த எல்லா வில் வித்தை

களையும் கற்றுக்கொண்டான். நம் அடிகளோ, தாம் முன்னர் என்றும் பார்த்திராத திருநாவுக்கரசருடைய பெருமைகளைக் கேட்டமாத்திரம் அவரே தமக்குத் தகுந்த குருவென்று கொண்டு பத்தி மேலிட்டு அன்பு மயமே பெருகியிருந்தார். துரோணாசாரியர் வில்வித்தையில் வல்லவர்; அவ்வித்தை கற்றுக் கொள்ள ஏகலைவன் குருவை யுபாசித்தான்; அவர் மறுத்தும் யாதொன்றும் அவனுக்குக் கற்றுக் கொடாதிருந்தும் குரு காணிக்கை கேட்டார். தன் ஒப்புமையில்லாமல் வித்தை கற்றுக்கொண்ட மாணாக்கனைக் கெடுக்க எண்ணங்கொண்டு பெரு விரல் அறுத்துக் கொடுக்கப்பெற்றார். ஆனால் திருநாவுக்கரசரோ அன்பு மயமபூண்டு சிவப்பேறு அடைநதவர்; சிவனுடனிரண் டறக் கலத்தற்கு வழி தேடுபவர்; அதனையேயடைய அப்பூதியடி களும் அவரைக் குருவாக ஏற்றுக் கொண்டவர். குருவுக்குத் தெரியாமலேயே தம் நிலையியல் இயங்கியற் பொருள்களை யெல் லாம் அவர்க்கே உரிமையாக்கினர்; குருவும் தம் மாணாக்கர் மேன்மையடையவேண்டும் என்ற மேலான எண்ணங் கொண் டவர்; ஏகலைவன் வரலாறு உலகவயத்தது. ஆனல் அப்பூதியடி கள் வரலாறு பரதத்வமானது.

ரு. தமக்கு எவ்வளவு இடையூறு நேர்ந்த போதிலும் சிவனடியார்களை வணங்கி வேண்டுவன கொடுப்பது சைவ வறம். நாயனரை அப்பூதியடிகள் முதலில் சிந்தித்தபோது இன்னர் என்று அறியாதிருந்தும் சிவனடியார் என்ற மாத்திரத்தாலே அவரைப் பாராட்டிய சிறப்பு நோக்கத்தக்கது. பின்னர், தம் வீட்டில் மரணம் உண்டாகியும் அதை மறைத்துவைத்து விருந் தளிக்க எண்ணி அவ்வாறே செய்தது என்ன உளத்திட்பம் வாய்ந்தது!

சு. ஒரு குடும்பத்தில் தலைவர் நோக்கப்படி மற்றவர்கள் ஒழுகுவது நமது சமய அறம். அடிகள் விருந்தினர்க்கு திருவமுது செய்விப்பதற்கு மனைவியும் மக்களும் எவ்வளவு இடையூறு நேர்ந்தும் உடன் உழைத்தார்கள். மூத்த திருநாவுக்கரசு தனக்கு இலைகொணர வாய்ந்த சமயத்தைக் கண்டு ஆவல் பூண்டு இலையறுக்க விரைந்தார் பாம்பு தீண்டவும், தன் உயிரைக் காப் பாற்ற வேண்டுமென்பதையும் எண்ணமல் இலைகொடுக்க ஓடி வந்தார். அவர் உளவலிமை எத் தன்மையது! அப்பூதியடிகளின் மனைவியோ மகன் நஞ்சால் இறந்தான் என்று கண்டும் அதைப் பொருட் படுத்தாமலும நஞ்சை நீக்கவகை தேடாமலும், பிணத் தைப் பாயினல் மூடிவிட்டு விருந்தினரையே கவனித்தார். இஃது

எத்தன்மையது! குடும்ப முழுதும் ஒரே மனத்தன்மை கொண்டிருந்தது என்ன ஒழுங்கு!

ரு. சிவனடியார்கள் சாதி வேற்றுமையில்லாமல் சமரசம் வாய்ந்தவர்கள். திருநாவுக்கரசர் வேளாளர், அப்பூதி யடிகள் பார்ப்பனர். எல்லாரும் ஒருங்கே இருந்து உண்டார்கள். இதனால் அவர்கள் உளத்தூய்மை விளங்குகிறது.

சு. நாயனர் ஒரு பிள்ளை இறந்தான் எனக் கேட்கவே அவனை உயிர்ப்பிக்கப் பதிகம் பாடினது அவர் சீவகாருணியத்தை விளக்குகிறது. பெரியார்களின் இயல்புகளில் பெருங்கருணைத் திறம் ஒன்று ஆகவே அப்பூதி யடிகள் பத்திச் சிறப்பை ஒன்றும் மறவாமல் உலகம் நினைவில் வைத்துக்கொள்ளட்டும் என்ற பேரன்பினால் தம் திருப்பழனத் திருப்பதிகத்தில் "அஞ்சிப் போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற வேடியாய் கோடியையே" என்று அவரை அப்பர் பெருமான் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

---

# இதழிற்பிறக்கும் தமிழ் எழுத்துக்களைப்பற்றிய குறிப்பு

[திரு. க. ப. சந்தோஷமவர்கள் B. A., L. T.,]

எழுத்துக்கள் பிறப்பதற்குத் தொண்டை உள்வரம்பும் உதடுகள் வெளி வரம்புமாயிருக்கின்றன. தொண்டைக்குக் கீழும் உதட்டுக்கு வெளியும் ஒசைகள் பிறவா. தொல்காப்பிய காலத்திற்கு முன்னதாகவே ஒழுங்கு செய்யப்பட்ட தமிழ் எழுத்துக்கள் எவ்வாறு அமைந்திருக்கின்றனவென்று நோக்கப்புகின் மேற்குறித்த இருவரம்புகளைக் கருதி அவை வகுக்கப்பட்டன வென்பது தெரியும். உயிர் எழுத்துக்களை முதலில் எடுத்துக் கொள்வோம். நெஞ்சிலிருந்து புறப்படும் உயிர்ப்பு அடைபடாமல் வெளிவருவதால் உயிரெழுத்துக்கள் தோன்றுகின்றன. இவ்வுயிர்ப்பு அல்லது காற்று வாய் திறந்த அளவிலே வெளிப்படுமாயின் அகரமாகும், ஆகாரமும் அத்தன்மைத்தே. இங்ஙனம் வெளிப்படுங் காற்றை நாக்கினுற் சிறிது வேறு படுத்த இகர, ஈகாரங்கள் தோன்றும். அவ்வுயிர்ப்பையே இதழ்களைக் குவித்து வெளியே செலுத்த உகர ஊகாரங்களாகும். இவ்வாறு நெடுங்கணக்கில் முதலிலுள்ள மூன்று உயிர்களும் வாய்க்கு

உள்ளே தொடங்கி உதட்டில் முடிவு பெற்றமை காண்க. இவற்றுக்குப்பின் வருவனவாகிய எ, ஏ, ஐ என்பன, இகரத்துடன் ஒருவாறு ஒற்றுமையுடையனவாய் நாக்கைப்பற்றி நிற்பன. இவற்றை அடுத்துவரும் ஒ, ஓ, ஔ இதழ் குவிவதால் பிறப்பன. ஆதலின், அ, ஆ; இ, ஈ; உ, ஊ என்று உள்ளிருந்து உதட்டில் வந்து நின்று, எ, ஏ, ஐ என நாவை ஒட்டி நவிற்சி பெற்று, ஒ, ஓ, ஔ என இதழில் முடிந்தன. இவ்வொழுங்கு இயற்கைக்கும் வாயுறுப்புக்களின் அமைப்புக்கும் ஒத்திருக்கின்றதென்பது எளிதில் உணரப்படும். உயிரெழுத்துக்களின் ஈற்றிலிருக்கும் ஆய்தம் உயிருமின்றி மெய்யுமின்றித் தனித்தியங்கும் தன்மைத்தாதலின், உயிர்கட்குப் பின்னும் மெய்கட்கு முன்னும் இடம்பெற்றது.

இனி, மெய்யெழுத்துக்களிலும் மேற்கண்டமுறை அமைந்துளதாவென்று பார்ப்போம். மெய்யெழுத்துக்கள் என்று கூறப்படுவன, வாயின் உறுப்புக்கள் ஒன்றோடொன்று பொருந்துவதால் பிறக்கின்றவைகள். நாவின் அடி, நடு, நுனி முதலியவை வாய்க்குக் கூரைபோலிருக்கின்ற அண்ணத்தின் முதல, இடை, கடைகளில், பொருந்துவதாலும், இதழ்கள் ஒன்றோடொன்று சேர்வதாலும், மேற்பல் கீழ் உதட்டில் பதிவதாலும் இவைகள் தோன்றும். இவற்றில், அடிநாவும் முதலண்ணமும் சேரப்பிறப்பன, ககர, ஙகரங்களாகும்; நடு நா இடையண்ணம், சகர, ஞகரம், நுனி நா கடையண்ணம், டகர, ணகரம்; மேற்பல்லின் அடியில் நுனி நாவை ஒற்றுவதால், தகர, நகரங்களுண்டாகும். இதழ்கள் ஒன்றோடொன்று சேர்வதால், பகர, மகரங்களாகும. இது மெய்களுள் ஒரு பகுதி. இப்பகுதியில் அடிநாக்கில் பிறக்கும் ககரம் முதலாகவும், இதழில் தோன்றும் மகரம இறுதியாகவும் நிற்கின்றன. உயிர்களுள் அகரத்திலிருந்து ஊகாரம மட்டும் ஒரு பகுதியாய் நின்று, எகரத்திலிருந்து மற்றொருபகுதி தொடங்குவதுபோல், ககரத்தில் தோன்றிய மெய்கள் மகரத்தில் முடிவு பெற்றபின், எகரத்தோடு ஒற்றுமையுடைய யகரத்திலிருந்து அடுத்த பகுதி தொடங்குகின்றது. எகரத்திற்கும் யகரத்திற்கும் உள்ள ஒற்றுமை எவன், யாவன்; எது, யாது என்ற சொற்களை உற்று நோக்க வெளியாகும். யகரத்திலிருந்து தொடரும் மெய்கள் முறைப்படியே, ய, ர, ல, வ என நிற்கின்றன. நாக்கு நடுவே உயர்வதால் பிறந்த யகரத்திற்குப்பின் நுனி நா அண்ணத்தைத் தடவுவதால் தோன்றும் ரகரமும், நுனிநா அண்ணத்தைத் தீண்டவரும் லகரமும. மேற்பல் கீழ் உதட்டோடு இயைவதால் பிறக்கும வகரமும் வந்தன. இவ்வாறு யகரத்திலிருந்து வகரம் வரையில் ஒரு பகுதி இதழில்

முடிவு பெற்றபின், மறுபடியும் நாக்கு உள்ளே செல்வதால் பிறக்கும் எழுத்துக்கள் வருகின்றன. இவ்வெழுத்துக்கள் நுனி நா பின்னால் மிக வளைந்து அண்ணத்தைத் தடவுவதாலும், நுனி நா சிறிது வளைந்து அண்ணத்தைத் தடவுவதாலும், நுனி நா மேல்நோக்கிச் சென்று அண்ணத்தை ஒற்றுவதாலும் தோன்றுகின்றன. இவை ழ, ள, ற, ன ஆகும். இப்பகுதியில் இதழ் வரைக்கும்வரும் எழுத்துக்கள் இல்லை; கடையண்ணமும் நாவும் பொருந்துவதோடு எழுத்துக்கள் முற்றுப் பெறுகின்றன. ஈண்டு கண்ட முறையின்படி எழுத்துக்கள் அமைந்துள்ளதைப் பின்வருமாறு நிரற்படுத்தலாம்:—

(1) அ, ஆ, இ, ஈ, உ, ஊ

(2) எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ

(3) ஃ

(4) க, ங; ச, ஞ; ட, ண; த, ந; ப, ம.

(5) ய, ர, ல, வ.

(6) ழ, ள, ற, ன.

இவற்றுள் ஆய்தத்தை நீக்க ஐந்து பகுதிகளாகும். ஐந்தில் நாலு பகுதிகள் இதழில் முற்றுப் பெறுகின்றன. மற்றொன்று நுனி நாவும் அண்ணமும் பொருந்துவதோடு நிற்கின்றது. எனினும், அதுவும் உள்ளிருந்து உதட்டிற்குவரும் ஒழுங்கைப் பின்பற்றியே அமைந்தது.

"உ, ஊ, ஒ, ஓ, ஔ வென விசைக்கு
மப்பா லைந்து மிதழ் குவிந்தியலும்
(தொல்காப்பியம், எழுத்து, அள)

"இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்" (எழுத்து கஎ)

"பல்லிதழியைய வகாரம் பிறக்கும்" (கஅ)

என்று தொல்காப்பியங் கூறுவதை நோக்குக.

(தொடரும்)

---

# வள்ளுவர் மனைமாட்சி

[திரு. வ. சுப்பையாபிள்ளை]

அடிசிற் கினியாளை அன்புடை யாளைப்
படிசொற் பழிநாணு வாளை—அடிவருடிப்
பின்தூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என்தூங்கும் கண்க ளெனக்கு.

(தொல்காப்பியம்-நச்சினார்க்கினியர் உரை மேற்கோள்)

(இதன்பொருள்.) இனி உணவு ஆக்குபவளும், அன்புள்ளவளும், உலகப் பழிப்பிற்கு நாணுபவளும், நான் உறங்குகாறும் காற்பிடித்துப் பின் உறங்கி முன்னெழும் பேதையுமாகிய இல்லக்கிழத்தியை யான் பிரிந்தால் என்னுடைய கண்கள் இனி எங்ஙனே அயரும்!

இது திருவள்ளுவநாயனாரால் தமது மனைக்கிழத்தியாராய வாசுகி என்னுங் கற்புக் கரசியார் துஞ்சியபோது அவளது பிரிவாற்றாமையை நினைந்து நினைந்து உருகி உருகிப் பாடப்பெற்றது.



வள்ளுவர் பழஞ்சோறு சுடுகிறதென்று கூற வாசுகி யம்மையார் விசிறி கொண்டு விசிறலும்; அவள் கிணற்றில் நீர் முகக்குங்கால் அழைக்கத் தூக்கிய குடத்தை விட்டு வர அஃது அவ்வளவிலேயே நிற்றலும்.

## வரலாறு

உலகப் பெருநூலும், பொதுநூலுமான திருக்குறளை யருளிச்செய்த திருவள்ளுவநாயனார் தமது இல்லக்கிழத்தியாய வாசுகியம்மையாரோடு மனையறம் புரிந்து வருகையில் ஒரு பெரியவர் அவர் இல்லிற்கு வந்து நாயனாரை நோக்கி, "இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? என்பதைத் தமியேனுக்குத் திருவுளங் கனிந்தருள வேண்டு"மென்று பல நாள் பணிசெய்து காத்திருந்தனர். அதற்கு நாயனார் அவருக்குப் பதில் ஒன்றுஞ் சொல்லாமல் அவரே அறிந்து போகட்டும் எனத் தமது வாழ்க்கையினை இனிது நடாத்துவாராயினர்.

ஒரு நாள் தமது மனைவியார் கிணற்றில் நீர் முகந்து கொண்டிருக்கையில் அழைக்க அவ் வம்மையார் பாதி கிணற்றளவில் தூக்கிய குடத்தை விட்டுக் கணவனிடம் ஓடி வந்தபொழுது அக்குடம் அவ்வளவிலேயே நின்றது.

பின்பு நாயனார் பழஞ்சோறு உண்கையில் இது சுடுகின்றதே என்ன, அம்மாதினியார் விரைந்து விசிறி கொண்டுவந்து விசிறலும் சோற்றிலிருந்து புகை கிளம்பியது.

பின்பு ஒருநாள் நல்ல பகற்பொழுதில் தறியின்கண் நெய்து கொண்டிருக்கும்பொழுது கையிலிருந்த குழல் தவறிக்கீழேவிழ விளக்கெடுத்து வா என்று தம்மாண்புடை மனைவியாரை அழைக்க அவள் மிகு விரைவாக விளக்கேற்றிக் கொண்டு வந்தாள். இவ்வரும்பெருங் குறிப்பறிந்த செயல்களைக் கண்டு இப்படிப்பட்ட மனையாள் இல்லக்கிழத்தியாக ஒருவர்க்கு வாய்ப்பளேல் இல்லறமே பெரியதென்றும் இல்லையேல் துறவறமே பெரியதென்றும் உள்ளத்தே தெளிந்து நாயனாரிடம் ஒன்றுங் கேளாமல் அடிபணிந்து வணங்கிப் போயினர்.

கற்புடை நங்கைக்குக் கணவனே கடவுள். கணவன் சொற் பிழையாத மனைவி எது நினைப்பினுங் கைகூடும் என்பது இவ் வாசுகியம்மையார் வரலாற்றானும் ஏனைத் தமிழ்நாட்டுக் கற்புடை நங்கைமார் வரலாற்றானும் உணரக் கிடக்கின்றது. இது பற்றியே நமது நாயனார்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்றருளிச் செய்தனர். நல்லியல்பும், நற்செய்கையுமுடைய மனையாள் ஒருவனுக்கு வாய்ப்பளேல் அவனுக்கு உலகின்கண் இல்லையாவது ஒன்றுமிலது. அங்ஙன மமையப்பெறாத மனையாளுடையானுக்கு எது இருப்பினும் ஒரு பொருளும் உள்ளதாகாது. ஒருவனுக்கு மனக்குத் தகுந்த மனையாள் வாய்க்கவில்லையாயின் வேறு எத்துணைப் பெருமையிருப்பினும் அஃதில்லாததாகவே கருதப்படும். பொருந்தா மனைவியரோடு இருந்து வாழ்வதினுங் காடு நன்றே என்று ஔவைப்பிராட்டியார் பின் வரும் வெண்பாக்களிற் கூறியவற்றை உற்று நோக்குக.

"பத்தரவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாஞ்—சற்றேனும்
ஏறுமா றாக விருப்பாளே யாமாயிற்
கூறாமற் சந்நியாசங் கொள்"

"மையாடு கண்ணுடைய மாணர்தம் மன்னவர்க்குப்
பொய்யான வுள்ளம் புரிவாரேற்—செய்யாத
தண்டமதா மில்லைமறு தார்குழலைச் சேரதில்லை
அண்டரைச்சேர் சந்நியாசி யாய்"

கணவனும் மனைவியும் அன்பாற் கெழீஇ ஒத்த கருத்தினராய், ஓருயிரும் ஈருடலுமாய், அறவோர்க்கு அளித்தும் அந்தணரை ஓம்பியும், துறவோரை எதிரேற்று வணங்கி வேண்டுவன கொடுத்தும், விருந்தெதிர் கொண்டும் வாழ்வதே சிறந்த வாழ்க்கையாமென்பது,

"காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமஞ் செய்பவே"

என்ற சிவப்பிரகாச் சுவாமிகள் திருவாக்காற் றெளிக.

---

# அறிவுரைகள்*

[திரு. எம். பி. எஸ். வேலாயுதம் பிள்ளையவர்கள்.]

"நான் எவ்வளவு அதிகம் கொடுக்கிறேனே, அவ்வளவு அதிகமாய் எனக்குக் கிடைக்கிறது. அதற்கு முடிவேயில்லை" மனிதனிடையே நிலவும் அன்பினைக் குறித்து இதை ஷேக்ஸ்பியர் சொன்னார். ஓர் பெண் மீது ஆடவனுக்குள்ள அன்பும், ஓர் ஆடவன்பால் பெண்ணுக்குள்ள அன்புமே இம் மொழியைச் சொல்லத்தூண்டிற்று. இந்த அன்புக்கே முடிவில்லை என்று சொல்லப்படுமானல், மனிதன் மீது கடவுள் வைத்துள்ள அன்பைப்பற்றி நாம் யாது சொல்வது? மனிதவர்க்கத்தில் இருவரிடையேயுள்ள அன்பைவிட, அவ்வன்பு அதிக மல்லவா? மனிதவர்க்கத்தார் ஒருவரையொருவர் நேசித்துக் கொள்வதுபோல, கடவுள்பால் அன்பு செலுத்தினல், அவ்வன்பு வளர்ந்தோங்குமல்லவா? மனிதருடைய நெஞ்சில் சமாதானமும், மகிழ்ச்சியும், தூய்மையும் நிலவச் செய்யுமல்லவா? வாழ்க்கையின் கொள்கையே ஈதல்லவா? மனிதனுக்கு வாழ்வில் இதைவிட வேறு எது தூய்மையை நல்கும்?

* * *

கடவுளே, என் தந்தையே, உன்பால் எப்படி அன்பு செலுத்துவது உன் மக்கள்பால் எப்படி அன்பு செலுத்துவது, என்பதை எனக்குக் காட்டுவாயாக. உனதன்பால் பிறரிடையேயுள்ள உயர்ந்த தன்மை எனக்கு வெளிப்படட்டும். அவ்வன்பால் நான் உனது மேன்மையையுணரட்டும். அவ்வன்பால் நான் நன்னெறியில் செல்லட்டும். எல்லாரையும் நீ காப்பாற்றுவாயாக, ஏனெனில் உன் அன்புக்கு எல்லையில்லை.

* * *

---

*காலஞ்சென்ற சர் நாராயண சந்திர வர்க்கர் என்ற பெரியார் தம் ஞாபகக் குறிப்பில் வரைந்துள்ள மொழிகளிற் சில ஜூலை மாதத்திய "மாடர்ன் ரெவியூ" வில் வெளியிடப் பட்டிருக்கின்றன. அவை "செல்வி" யின் வாசகர்களுக்காக மொழி பெயர்க்கப் பட்டிருக்கின்றன.

நான் படுக்கையைவிட்டு எழுந்தவுடனே, முதலில் நான் செய்ய விரும்பியது, நல்லவனுயிருக்கவும், நன்மை செய்யவுமே. இதைவிட உன்னதமானதும், தூய்மையானதும், வேறு என்ன உண்டு? 'நல்லவனு யிருக்க'' நன்னெறி எது வென்று தெரிந்து கொள்ளாமல் நான் எப்படி நல்லவனுயிருக்க முடியும்? கடவுள் நல்லவர் எத்துணை அடக்கமாயும், உறுதியாயும் அவர் வேலை செய்கிறூர். எத்துணை அன்புடையவராயிருக் கிறூர் என் ஆன்மாவே, உன் தொண்டில் அன்பு நிலவட்டும். உன்னைப் போலொத்தவர்கள்பால் நீ பெருந்தன்மையுடனும், இரக்கத்துடனும் நடந்துகொள். எண்ணத்திலும், செயலிலும் தூய்மையுடையவனு யிருப்பாயாக. துன்பப்படுகிறவர்களுக்கு ஒரு சில நன்மையாவது புரியா மல் ஒருநாளாவது கழிய வேண்டாம். நீ எது செய்தாலும் தாழ்மை யுடன் செய். மமதை வேண்டாம். உன்னிடம் குறைகளிருக்கின்றன வென்பதை உணர். நீ பலஹீனன்.

* * *

கடவுளே, நல்லவனுயிருக்கவும். நன்மை செய்யவும் எனக்குக் கற்பிப்பாயாக. எனது மேன்மையை நான் கருத நினைத்தால், உன தன்புக்கு அருகனல்லாத ஓர் பிச்சைக்காரனுவேன். கடவுளே, என் னிடம் மேன்மை யொன்றுமில்லை. இதை என்றைக்கும் நான் உணர்ந்து கொள்வேனுக இதை எனக்குக் கற்பிப்பாயாக. என்னிடம் என்ன மேன்மையிருக்கிறது? என்ன திறமையிருக்கிறது? தாழ்மையுடன் செய் யும் நற்செய்கைகளே, மனிதனின் மேன்மைக்குக் காரணமாயிருக்கின் றன. நான் இதனை அறிந்து கொள்ளட்டும்.

* * *

பிறர் குற்றஞ்செய்யும்போது, நான் வெகுண்டு, கோபியாமல், சாந் தத்துடன் அவர்களைத் திருத்தவே நான் முயல வேண்டும். நானும் தவ றிழைக்கிறேன் என்பதை நான் மறந்து விடுகிறேன். நான் ஏன் பிற ருடைய குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளலாகாது? ஊக்கமும்,சாந்த மும் உடையவனுயிருக்க மீண்டும் முயலுகிறேன். கர்வமில்லாமல் வெகுளாமல் அவர்களைத் திருத்தவும் நான் முயலுகிறேன். அன்பால் பிறரை வசப்படுத்த வேண்டும். வாழவும், தொண்டு புரியவும், கடவுளுக்கு உகந்தவனுயிருக்கவும் அது தான்வழி.

* * *

எப்போதும், முக்கியமாக ஐயப்பாடுகளும், துன்பங்களும் உன்னைச் சஞ்சலப் படுத்துங்கால், கடவுளைத் துதிப்பாயாக. நீ போராடுவது ஊக் கத்துடனிருந்தால், மனது தூய்மையாயிருந்தால், கடவுள் உனக்கு அருள் புரிவார்.

* * *

என் கடவுளே. தந்தையே, நீயே உண்மை. நீயே அன்பு. நான் உண்மையுடையவனுயிருக்க, உன்னையே நம்பியிருக்க எனக்கு அருள் புரிவாயாக. உன்பால் நான் உறுதி கொண்டிருக்க வேண்டும். எவரை யும் நான் வெறுக்காமலிருக்கவும். ஒவ்வொன்றிலும், ஒவ்வொருவரிடை யும், நன்மையையே நான் காணவும், நெறிதவருமல் என் கடமையை யாற்றவும், உன்னையே நம்பியிருக்கவும் எனக்கு அருள் புரிவாயாக.''

# திருவாசக வாக்கியங்கள்

[திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை யவர்கள் M. A.]

[சிலம்பு ௫-பரல் ௪-பக்கம் ௨௫௭ - தொடர்ச்சி]

## ௨௨. கோயிற்றிருப்பதிகம் (தொடர்ச்சி)

௭. தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்

## ௨௩. செத்திலாப் பத்து

௧. வன்பராய் முருடொக்கு மென் சிந்தை
மரக்கணென் செவி யிரப்பினும் வலிது.

## ௨௪. அடைக்கலப் பத்து

௧. 'இடர்க் கடல்வாய்ச் சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுறவெறிய அழிகின்றனன்'

௨. 'மத்திட உடைந்து தாழியைப் பாவு தயிர்போல்'

௩. 'மாவடு வகிரன்ன கண்ணி'

௪. 'பாவிடையாடு குழல் போல்'

## ௨௫. ஆசைப் பத்து

௧. யாக்கை புளியம் பழமொத் திருந்தேன்

## ௨௬. அதிசயப் பத்து

௧. ஒப்பிலாதன உவமனி லிறந்தன ஒண்மலர்த் திருப்பாதம்

௨. பொன்னை வென்றதோர் புரிசடை

௩. பொத்தை யூன் சுவர்

௪. புழுப்பொதிந் தொழுத்தசும் பொழுகிய பொய்க்கூரை

௫. உற்ற ஆக்கையி னுறுபொருள் நறுமல ரெழுதரு
நாற்றம்போல் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்.

## ௨௭. புணர்ச்சிப் பத்து

௧. தோளா முத்து.

௨. ஊற்று மணற்போல் நெக்குநெக் குள்ளே யுருகி

௩. தாதாய் மூவே ழுலகுக்குந் தாயே.

௪. பிறவிப் பிணிக்கோர் மருந்தே

## ௨௯. வாழாப் பத்து

௧. யாரொடு நோகேன் யார்க்கெடுத் துரைக்கேன்

௨. ஊடுவ துன்னோ டுவப்பது முன்னை

௩. தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ

## ௨௯. அருட் பத்து

௧. சோதியே சுடரே சூழொளி விளக்கே

௨. அடியேன் ஆதரித்தழைத்தால் அதெந்துவே என்றருளாயே.

## ௩௧. கண்ட பத்து

௧. வினைப் பிறவி யென்கின்ற வேதனையி லகப்பட்டு

௨. சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்

௩. சித்த மெனுந் திண்கயிற்றாற் றிருப்பாதங் கட்டுவித்த

௪. அளவிலாப் பாவகத்தால் அமுக் குண்டு

## ௩௨. பிரார்த்தனைப் பத்து

௧. முடையார் பிணத்தின்

௨. இருளாராக்கை யிது பொறுத்தே

௩. தூண்டா விளக்கின் சுடரனையாய்

௪. திணியார் மூங்கிற் சிந்தையேன்

௫. நானோர் தோளாச் சுரை யொத்தால்

௬. வற்றன் மரம்போல் நிற்பேனோ

## ௩௩. குழைத்த பத்து

௧. பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ

௨. வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ

௩. வேண்டிநீ யாதருள் செய்தாய்
யானு மதுவே வேண்டி னல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னி
லதுவு முன்றன் விருப்பன்றே

௪. மாயப் பிறவி யுன்வசமே
வைத்திட் டிருக்கு மதுவன்றி
யாயக் கடவேன் நானேதான்
என்னதோ இங் கதிகாரம்

## ௬௪. உயிருண்ணிப் பத்து

க. நாய்க்குத் தவிசிட்டு

உ. மனவாசகங் கடந்தான்

௩. கடலின்திரை யதுபோல் வருகலக்க மலம்

௪. வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம்

௫ சிவம் வேண்டார் தமைநாளுர் தீண்டேன்

## ௬௫. அச்சப் பத்து

க. வெண்ணீ றணிகிலாதவரைக் கண்டால்
அம்ம நாம் அஞ்சுமாறே.

## ௬௬. திருப்பாண்டிப் பதிகம்

க. எங்கள் பாண்டிப்பிரான் தன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே.

## ௬௭. பிடித்த பத்து

க. அன்பினில் விளைந்த ஆரமுதே

உ. பாலினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து

௩. ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி.

(தொடரும்)

---

# மக்கள்யாக்கை நிலைமை*

[திரு. வேலாயுத தேசிகரவர்கள்]

வினா:—உயிருள்ள பொருள்களுள் மக்கட்கு மாத்திரம் உருவம் மேல் நோக்கியதா யிருக்கவேண்டிய தென்னை?

விடை:—1. அவ்வாறிருப்பது இறைவனுக்கு விருப்பமுள்ளதா யிருக்கலாம் என்னும் இவ்விடையினால் வினாக்களனைத்தும் எளிதில் விடுக்கப்படுவனவாய் இருத்தலின், இஃது இயைபுடைத்தாயினும், இதனினும் வலிய விடைகூறுதல் இன்றியமையாதது; ஆதலால், 2. உலகில் பெரும்பாலும் ஒரு வினைசெய்வோர் அவ்வினையை முதன்முறை திறமற்றதாகவும் அதன் பின்னர்த் திறமுடையதாகவும் செய்தல் கண்கூடா யறிதுமன்றே. அதுபோல இறைவனும் முதலிற் படைத்த விலங்கினத்திற்குக் கீழ்நோக்கும் உருவையும், அஃதொழிந்த மக்களினத்திற்கு மேல்நோக்கும் உருவையும் அமைத்தருளினன் என்றறிக. விருக இனம் மறிந்த உருவுடையவா யிருத்

---

* இஃது உண்மை விளக்கம் என்னும் பத்திரிகையினின்றும் எடுக்கப்பட்டது.

தலின் 'விலங்கு' எனப்பெயர் போந்ததுமறிக. 3. இவ்வாறன்றி, உலக வின்பங்களையெல்லாம் நிலைபேறில வெனக் கழித்து, நிலையுள்ள வீட்டின்பத்தை யெய்தற்குக் கருவியா யமைவது மக்கட் பிறப்பேயாதலினாலும், அத்தகைய மேலான வின்பத்தை அடைதற்கு மேல்நோக்கிய பார்வையே வேண்டுதலினாலும் அப்பிறப்புடைய உயிர்கட்கு மேல்நோக்கிய உருவையும், இவ்வாறன்றி அறியாமையின் வயப்பட்டு மேற்செல்லா அறிவுடைய விலங்கினத்திற்கு இவை இத்தன்மையவாதலை விளக்குதற் பொருட்டுக் கீழ்நோக்கு உருவையும் இறைவன் படைத்தானென்று கோடலுமாம். 4. அறிவுடைய மக்கள் விண்ணவரை யொத்து இறைவன் அடிசேரும் பருவமெய்தலின் அங்ஙனம் மேல்நோக்கும் உருவைப் படைத்தார் என்றலுமாம். 5 மக்கள் யாக்கை உலக அமைப்பிலக்கணத்தை யுடையவா யிருத்தலின் அவ்வாக்கையையுடைய மக்கள் பிற உயிர்களை ஏவ, அவ்வேவலுக்கு அவ்வுயிர்களும் உள்ளாகின்றன. 6. ஒவ்வொரு பொருட்கும் அவற்றின் இயக்கத்திற்கு ஏற்க உருவம் வடிவம் முதலியவை அமைந்திருக்கின்றன. விசும்பிற்கு வட்டவடிவும், நீப்பிழம்பிற்குக் கூம்பிய உருவும், அமைந்திருப்பதுபோல மக்களும் இறைவனுடைய வியத்தகு தொழில்களை யெல்லாம் அறிந்து உய்யுமாறு அவர்களுக்குச் செவ்விய உருவம் அமைந்ததென்று அறிக.

வினா:—மக்களின் தலைகள் மயிருள்ளனவா யிருத்தலென்னை?

விடை:—மக்கட்கு அழகு செய்வன குஞ்சியேயாம். இக்குஞ்சி அங்ஙனம் அழகு செய்வதுஉமன்றி தூய்மை செய்யப்படும் மூளையின் கழிவுகளாய் அம்மூளைக்குப் புறத்திலுள்ள தசையின் நுண்ணிய துளைகளின் வழியாக வெளிவந்து காய்ந்து கரிய நிறத்தொடு தோன்றுகின்றது. மக்கள் யாக்கையிலுள்ள உலர்ந்த உறுப்புக்கள் யாவற்றினும் மயிரொன்றே மிகவுமுலர்ந்ததென்பது என்பை யுண்ணும் நாய்க்கும், கல்லை யுண்ணும் தாதுணம் பறவைக்கும் முறையே அவ்வென்பும், கல்லும் செரிப்பனவாக, மயிர் இறகு முதலியன செரிக்காமையின்கண் வைத்துக் கண்டுகொள்க. அங்ஙனஞ் செரிக்காமை யென்னையெனின்? அவற்றின் அகட்டில் உள்ள தீ அம்மயிரை அழிக்குமாற்றலிலாவாறு அவை யுலர்ந்திருத்தலின் என்க. 2, மூளை மூன்று வழியில் தூய்மை செய்யப்படுகின்றது. அவை கண்ணிற் பீளையாகவும் நீராகவும், மூக்கில் சளியாகவும், தலையில் மயிராகவுமாம்.

வினா.—ஏனைய உயிர் வருக்கங்களினும் மக்களுக்கு மாத்திரம் நீண்ட தலைமயிர் இருத்தலென்னை?

விடை:—மற்றைய உயிர் வருக்கங்களினும் மக்களுக்கு நொய்ய மூளையிருத்தலால் அதனினின்றும் மயிர் மூளைதோன்றி நீண்ட மயிராக மாறுகின்றது. 2. அதுவல்லாமலும், மக்களுக்குள்ள மூளைக்கழிவுகள் கொழுமையுள்ளனவா யிருத்தலின் அவை யெளிதில் உலர்தலின்றி நீண்டமயிர் வளர்தற்கு உதவியாயிருக்கின்றது. விலங்குகளுக்குள்ள மூளைக்கழிவுகள் எளிதில் உலர்தற் றன்மையுடையவா யிருத்தலின் அவற்றின் மயிர் நீட்சியாக வளர்கின்றில.

வினா:—ஏனைய உயிர்வருக்கங்களின் தோலில் மயிர் ஆழ்ந்து வேரூன்றா தனவாகவும், மக்களின் தோலில் மாத்திரம் அஃது ஆழ்ந்து வேரோடுதல் என்னை?

விடை:—மக்கள் ஆக்கையில் அது வளர்தற்கேற்ற பொருள் மிகுதியாயிருத்தலின் அவ்வாக்கையில் ஆழ்ந்து வேரோடி வளர்கின்றது. இதுபற்றியே மற்ற உயிர்களின் தோலின் றன்மைக்கேற்ப மயிர் வளர்ச்சியும் அமைந்திருக்கிறது. மக்கள் ஆக்கையில் வடு அல்லது தழும்பினால் அன்றி மயிரின் தன்மை வேறுபடுத லிலதென்பது கண்கூடா யறியப்படும்.

வினா:—ஆண்பிள்ளைகளினும் பெண்பிள்ளைகளுக்கு மயிர் நிகளமாயிருத்தலென்னை?

விடை:—ஆண் மக்களினும் பெண் பிள்ளைகள் தண்ணிய யாக்கை உடையரா யிருத்தலினாலும், கோழைப்பொருள் மிகுதியுடையரா யிருத்தலினாலும், மயிர் வளர்ச்சிக்கு அது (கோழை) கருவியாயிருத்தலானும் அவர்களுக்கு மயிர் நீண்டு வளர்கின்றது. அஃதன்றியும் கோழைப்பொருள் மகளிர்க்கு ஆண்மக்களினும் அதிகமாக அவர்கள் உள்ளுறுப்புக்களில் பெரும்பாலும் மாதவிடாய்க் காலங்களில் சுரந்து மேலேறி மயிர் வளர்தற்குதவி செய்கின்றது. 2. மகளிர்க்கு மோவாய் மயிர் இல்லாமையால் அது வளர்தற்குரிய கோழைப் பொருளும் தலைமயிர் வளருமிடத்திற் சென்று அது வளர்தற் குதவியாகின்றது.

வினா:—மகளிரிற் சிலர்க்கு மெல்லிய மயிரும் மற்றுஞ் சிலர்க்கு வற்கென்ற மயிரும் இருத்தலென்னை?

விடை:—மயிரினியல்பு தோலினியல்பை யொட்டி இருக்குமென்பது பெரிதும் அறியற்பாலது; தோல் வலியவாயின் மயிரும் வலியவாதலும், பரியவாயின் பரியவாதலும், நுண்ணியவாயின் நுண்ணியவாதலும் மெல்லியவாயின் மெல்லியவாதலும் இருத்தல் யாக்கையினியல்பறிந்தார் வாய்க்கேட்டுணர்க. அல்லதூஉம், மயிர்த்துளை பெரிதாயின் அதன் வழித்தாக வெளிப்போதுங் கோழைப்பொருள் மிகுந்து வற்கென்ற மயிராக மாறுதலும், குறுகிய துளையாயின் கோழைப் பொருளுங் குறைந்து மெல்லிய மயிராகத் திரிதலும் உண்மையால், குறுகிய மயிர்த்துளையுடைய மகளிர்க்கு மெல்லிய மயிரும் ஏனையோர்க்கு வற்கென்ற மயிரும் உளவாகு மென்பதறிக. ஆண் மக்கட்கு வற்சென்ற மயிரிருத்தல் அவர்கட்கு மயிர்த்துளை அகற்சியுடையவா யிருத்தலினென்க. மகளிர்க்கு மயிர்த்துளை குறுகியவா யிருத்தலென்னையோவெனின், அவர்களது யாக்கை தண்ணியவா யிருத்தலின் அத்தண்மையால் மயிர்த்துளை சுருக்க முறுவனவா மென்றறிக. 2. பித்த யாக்கையுடைய ஆண் மக்களுக்கு வலியவும் பரியவுமான மயிர்வளர்தல், யாக்கை வெம்மையால் அவர்களது மயிர்த்துளை அகற்சியுடையவாயிருத்தலின் என்க. இது பற்றியே ஆண்மக்களுக்கு மோவாய் மயிர் விரைவில் முளைப்பதூஉமென்க. இதுபோலவே, வலியவும் பரியவுமான மயிருடைய விலங்குகள் மிகவுந் தறுகண்மையுடையவா யிருத்தலும், அத் தறுகண்மையை விளைக்கும் பித்தும் வெம்மையும் அவற்

றின் யாக்கையில் மிகுந்திருத்தலாலென்க; கரடியும் கேழலொருத்தலுமே அதற்குச் சான்றும். இதற்கு மாறாக; மெல்லிய மயிருடைய விலங்குகள் மிகவும் அச்சமுடையவென்பது மானினும் முயலினும் வைத்துக் கண்டுகொள்க. 3. அல்லதூஉம், நாட்டியல்பினாலும் வலியவும் மெலியவுமான மயிர் முளைத்தலுண்டு; வெய்தான நாட்டிலிருப்போர்க்கு எகுபதி நாட்டிற்குத் தெற்கேயுள்ள நிகிரோவர்க்கு இருத்தல்போல வலியவும் பரியவுமான மயிர் முளைக்குமென்றறிக. இதற்கு மறுதலையாகக் குளிர்ந்த நாட்டிலுள்ளோர்க்கு, வடகடல் சார்ந்த நிலத்திலிருப்போர்க்குப்போல நுண்ணியவும் மெல்லியவுமான மயிர் முளைத்தலும் அறிந்துகொள்க.

வினா:—சிலர்க்குச் சுருண்ட மயிரும் வேறு சிலர்க்கு நேரொழுகிய வழுவழுப்பான மயிரும் முளைத்தலென்னை?

விடை:—சிலர் யாக்கையிலுள்ள வெம்மை மிகுதியால் மயிர் சுருளுமென்றறிக; இது, நேரொழுகிய மயிருடையான் ஒருவன் வெந்நீரில் முழுகிய பிறகு அவன் மயிர் சுரிந்துபோதற்கண் வைத்துக் கண்டுகொள்ளப்படும். அதுவன்றியும் மஞ்சனச்சாலை ஏவலாளர் நிகிரோவரைப்போலவும் பித்தயாக்கையினர் போலவும் சுரிந்தமயிருடையராயிருக்கின்றனர். ஆயினும், மயிர் வழுவழுப்பா யிருத்தல் தண்ணிய கோழைப்பொருள் மிகுதியினாலேயே யென்றறியற்பாலது.

வினா:—மகளிர்க்கு மோவாய் மயிர் இல்லாததென்னை?

விடை:—அவரது யாக்கையில் வெம்மையின்மையினால். இங்ஙனமே பெண்டன்மையுடைய ஆடவர் சிலர்க்கு மோவாய் மயிரில்லாமையும் மகளிரைப்போல எழில் நலம் உண்மையும் நிகழ்கின்றதென்பது கண்டுகொள்க.

வினா:—கழுவேற்றப்பட்டார்க்கு மயிர் முளைத்தல் என்னை?

விடை:—அவர்களது யாக்கையிலுள்ள ஈரமெல்லாம் ஞாயிற்றின் வெம்மையால் ஆவியாக மாறி மயிராக வெளிப்படுகிறது.

வினா:—ஏனைய மயிரினும் மோவாய் மயிர் திண்மையாயும் பருமையாயும் பெரும்பாலும் மோவாய் மயிரைக் களைந்து கொள்வோர்க்கு அது மிகவும் திண்மையாயும் பருமையாயு மிருத்தலென்னை?

விடை:—நெகிழ்ச்சிப் பொருளில் எத்துணைக் கோழையாகவும் ஆவியாகவும் மாறி முளைத்த மயிர் களையப்பட்டுப் போகின்றனவோ அத்துணை எஞ்சிய கோழைப்பொருள் களையப்பட்ட விடத்தை நிரப்புகின்றது; ஆதலால் எத்துணை மயிர் களையப்படுகின்றதோ அத்துணை கோழைப்பொருள் ஒருங்கு திரண்டு திண்ணிய மயிராக மாறி முளைக்கின்றது.

வினா:—மகளிர் யாக்கை மாத்திரம் ஊற்றினிமையுடையவாயும் வனப்புடையவாயும் இருத்தலென்னை?

விடை—மகளிர்க்கு யாக்கையிலுள்ள ஈரக்கழிவுகளனைத்தும் மாதவிடாய்க் காலங்களில் கழிந்துபோகின்றன; ஆண் மக்களுக்கு அவையெல்லாம் மயிராக வெளிப்படுகின்றன.

யாழ்ப்பாணம் பிறக்டர் (வழக்கறிஞர்)

## திரு. K. தம்பையாபிள்ளை யவர்கள் பிரிவாற்றுமை

இவர்கள் நிகழ் மெய்கண்டான் ஆண்டு 704, ஆடித் திங்கள் 16-ஆம் நாள் (31-7-27) ஞாயிற்றுக்கிழமை யன்று எல்லாம் வல்ல இறைவன் றிருவடி நீழலடைந்ததாக இவர்கள் நன்மருகன் பிறக்டர் திரு K. S. கனகராயரவர்கள் வழி அறிந்து பெரிதும் உளம் நைந்து வருந்துகின்றோம். இவர்களின் பிரிவால் அருமணி யிழந்த அரவுபோலத் துடிதுடிக்கும் இவர்கள் சுற்றத்தார்க்கும், யாழ்ப்பாண அறிஞர்களுக்கும் ஆறுதல் கூறுகின்றோம். இவர்கள் தமது சட்ட நூற்புலமைக் கேற்பப் பொதுவாகத் தமிழ் இலக்கிய நூல்களையும் சிறப்பாகத் திருககுறள், சைவசித்தாந்த சாத்திரம் முதலிய நூல்களையும் நடு நிலைவழாது நுண்ணிதாக அளந்து ஆராய்ந்து உளங்கொளப் பயின்று உண்மை தெளிந்து, 'கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக' என்ற பொய்யாமொழியின்படி தமது நுட்ப ஆராய்ச்சிகளைப் பிறர்க்கு எடுத்துரைத்தும், உண்மையாராய்ச்சியாளர்களைத் தம் நாட்டிற்கு வரவழைத்து விரிவுரை நிகழ்த்துமாறு வேண்டு முதவி புரிந்தும் வந்த பெரியார். யாழ்ப்பாணத்து கல்விளைஞர்களெல்லாம் நீண்ட காலமாகத் தங்களை அடிமைப்படுத்தி வந்த குருட்டு நம்பிக்கைகளிற் புக்குண்டுழலாது உண்மை யாராய்ச்சிக்கண் சென்று அறிவு திருந்தி வருவதற்கு இவர்களே அடிப்படையாவர் என்பது யாவரு மறிந்ததே. இவர்கள் அன்பும் அறமும்; வாய்மையுந் தூய்மையும்; கண்பும் நலனுமுடைவர்கள். இவர்கள் இறைவனிணையடியில் இறவாத இன்ப அன்பிற் றிளைத்திருப்பாராக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்





R. P. சேதுப்பிள்ளையவர்கள், பி. ஏ., பி. எல்.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ௫ | மெய்கண்டான் யாண்டு-௭௱௪ ஆவணித் திங்கள் 1927௵ ஆகஸ்டு௴—செப்டம்பர்௴ | பரல் ௮ |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இலங்கை இந்திய வாலிபர் சங்க ஆறுவது ஆண்டு விழா

### முன்னுரைச் சொற்பொழிவு

[திரு. கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் M. A., M. L.]

*மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில் நல்லகதிக்கி யாதுமோர் குறையில*
*கண்ணில் நல்லஃதுறுங் கழுமல வளநகர்ப்*
*பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே.*

இலங்கைப் பெருந்தீவின் தலைநகராகிய கொழும்பின்கண் நிலையுறும் இவ்விந்திய வாலிபர் சங்கமானது எல்லாவற்றானுஞ்

சிறந்த அறிவு நிலைய மென்பது அதன் பெயராலே நேர் இனிது விளங்குகிறது. தன்னகத்துள்ள மணிகளால் யாண்டும் ஒளி வீசி இலங்குவதால் இலங்கை எனப் பெயர் பெற்ற இந்நாடா னது ஆதி யூழியில் மகேந்திரமலையின் அடிவாரத்தில் பொன்மய மாய்ப் பரந்து கிடந்ததோர் நிலப்பகுதி யென்று சிவாகமஞ் செப்புகின்றது. அக்காலத்தில் தலைச்சங்கமிருந்த தமிழ்ப்பெரு நாட்டின் ஒரு பகுதியாக அஃது இலங்கியதுபோலும். இடை யூழியிற் கடற்பெரு வெள்ளத்திலே நீருள் மூழ்காது நிவந்த இந்நாடானது மகேந்திரத்தினின்றுங் கடலினூற் பிரிக்கப்பட்டுத் தீவாயிற்று. ஆகலினுற்றான் மகேந்திரமலையினின்று அனுமார் இலங்கைக்குத் தாவவேண்டியதாயிற்றென்று இராமாயணங் கூறிற்று. இத்தீவானது நாகர் மரபின் பெருவேந்தனுகிய இரா வணனல் ஆளப்பட்ட காலத்தும் அதற்கு முன்னும் பின்னும் இந்நாள்வரையும் தமிழ்மொழியை வளர்த்துப் போற்றிய பெரு மாண்புடைத்தாயும், தமிழ்ப் பெருங்கடவுளாகிய முருகப்பெரு மானது ஒப்புயர்வற்ற திருவிடமாகிய கதிர்காமத்தையுந் தேவா ரத் திருவருட்பா பாடப்பெற்ற திருக்கோணமலை, திருக்கேதீச் சரமெனும் நற்றளிகளையும் தமிழ்மணங் கமழும் யாழ்ப்பாணமுத லிய பெரும்பதிகளையுமுடையதாய் இயற்கை மாதின் அழகிய இருக்கையாக விளங்கா நிற்கின்றது. செழிப்பு என்னும் பொரு ளுடைய கொழும்பு என்னும் பெயரானது நிலவளம் நீர்வளஞ் செறிந்து,

> "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
> காலின் வந்த கருங்கறி மூடையும்
> வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
> குடமலைப் பிறந்த வாரமு மகிலும்
> தென்கடன் முத்துங் குணகடற் றுகிரும்
> கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
> ஈழத் துணவுங் காழகத் தாக்கமும்
> அரியவும் பெரியவு நெளிய வீண்டி
> வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு" (பட்டினப்பாலை.)

என்றவண்ணம் வணிகம் மிகுந்து திருமகளின் கவினுறும் நிலைய மாகத் திகழும் இம்மாநகரத்திற்குப் பொருந்திய பெயரே. கொழும்பூ என்பது கொழும்பு என மரீஇயிற்று என்பார்க்கு இப்பெரும்பதி கொழுமலர் நிறைந்ததோர் பூஞ்சோலையாகத் தோன்றும். இதன்கணுள்ள இவ்வாலிபர் சங்கமானது மழ விளங்களிறனைய அறிவுசான்ற தமிழ் இளைஞரின் பேரவையாக விளங்கும். வாலிபர் என்ற சொற்றொடர், வால் + இபர் = தூய + யானை போன்றவர் என்று பொருள்படும். யானை முக வடிவே ஓங்கார வடிவம். ஓங்காரமே மக்களறிவிற்குமூலம்.

ஒங்காரப்பொருளை யுணர்ந்து உண்மை தெளிபவரே யானை போன்ற மக்களாவர். இதனல் இக்கழகமானது பேரறிஞர் அவை என்பது திண்ணம்.

ஒங்காரத்தைப்பற்றிய வோர் பழந்தமிழ்ப் பாட்டின் பொருளை விளக்கு முகத்தாலே தமிழின் பெருமையையும் தமிழரின் சீர்மையையும் அன்னவர் கடமையையும் ஆராய்ந்தறிவதே இம்முன்னுரையின் நோக்கமாகும்.

ஒத்தாகமங்க ளுபநிடத மாதியுண்மை வித்தாக
முத்தமி ழுதித்துங்
காத்தலெனும் பொருள்படைத்துந் தனிகிடந்தும் கருத்துருக்கும்
கதியளிக்குந் தமிழாகாரம்
பூத்துமேலாரிய மற்றுள கிடைக்கண் பொலிந்தணி யெழுந்த
மனுதியுமாய் நாத
மூத்துவா தலமாய் இபாசியத்தாம் முதல்வற்ருய்
சேய்க்கனுதஞ் சொல்வேதம்.

நாததத்துவமானது வேதம் ஆகமம் உபநிடதம் முதலிய எல்லாப் பெருநூல்கட்கும் மூலமாகிய முத்தமிழென்னும் பிரணவமானது நுட்பமாகத் தோன்றுவதற்கு அடிப்படையாக உள்ளது. அம்முத்தமிழானது ஒலி உலகம் முழுவதுந் தன்னுள் ஒடுங்கியகாலை தனித்திலங்கியும் வெளிப்பட்டகாலைத் தானும் ஓர் உயர்ந்ததோர் தமிழ் மொழியாகத் தோன்றிக் காத்தல் என்னும் பொருளுடையதாய்த் திகழ்ந்தும் உயிர்களெல்லாம் உள்ளம் உருகுவதற்கு ஏதுவாகிய அன்பினையும் நற்கதியாகிய வீடடைதற்கேதுவாகிய அறிவினையும் விளக்கும். தமிழ் அருள் நூல்களாய் வடிவெடுத்தும் பின் ஆரியம் முதலிய பிறமொழிகளிலுள்ள வேதங்களிலும் பயின்றும் வகை வகையாகக் கூறப்படும் மனம் முதலிய தத்துவங்களாயுமிளிர்ந்து யானைமுகக் கடவுளின் திருவடிவுமாய்த் திகழ்ந்ததென்று இச்செய்யுளாலறிகின்றோம். பிரணவத்தினின்றே அபரஞானம் உதிக்கின்றதென்பதைக் குறித்தற்பொருட்டுத் திருமூலமாமுனிவர் அதனை 'முத்தமிழ்வேதம்' என்றார். வேதாகம மனைத்திற்கு மூலம் பிரணவமே யென்று வடநூல்கள் யாவுங் கூறுகின்றன. அம் மந்திரமானது தமிழிலே தான் எழுத்தாகவும் சொல்லாகவும் வெளிப்பட்டுள்ளது. ஓம் என்பதன் வரிவடிவம் பிள்ளையாரது திருமுகம்போன் றிருத்தற்பாலது. பிள்ளையார் ஓங்கார தெய்வமாதலால் பிள்ளையார் முகம் போன்ற ஓகாரம் தமிழ் எழுத்திலேதானுள்ளது. பிறமொழிகளிலே யானை முகம்போல ஓகாரம் எழுதப்படுவதில்லை. பல்வேறுவகை உயிர்களின் கருவனைத்தும் முதலில் ஓங்கார வடிவமாகவே காணப்பெறுவதைக் கண்டறிந்த தமிழ்ப் பெரியோர்

அக்கருவின் வடிவே பிரணவ ஒலியின் வடிவமாக அமைந்து அவ் வடிவத்தினின்றே தமிழ் நெடுங்கணக்கிலுள்ள எல்லா எழுத் தொலிகட்கும் வடிவமைத்தனரென்று ஒலிநூற் பயிற்சியில் தலை சிறந்த திருவாளர் பா. வே. மாணிக்கநாய்க்க ரவர்கள் தமது தமிழ்மறை என்னும் நூலுள் விளக்கிப் போந்தனர். அஃது ஈண்டு விரிப்பிற் பெருகும்.

தமிழ்ப் பெருமக்கள் ஒலியின் சிறப்பியல்புகளையும் வன்மை மென்மைகளையும் நன்கறிந்து தாமே இயங்கவல்ல ஒலிகளையே உயிரெழுத்தெனவும் உயிரின் உதவிகொண்டு ஒலிக்கும் ஒலிகளை மெய்யெழுத்தெனவும் எழுத்தோசையாகத் தனித் தியங்கா தவைகளைச் சார்பு எனவும் பகுத்தனர் போலும். எழுத்தோசை பிறத்தற் கேதுவாகிய வாயின் முயற்சிகளனைத்தையும் எல்லை கண்டு முடிவு செய்தனர். உயிரெழுத்துள், குறில் ஐந்தும் ஒரு வகை ஐந்தெழுத்து மந்திரமென்றும் நெடில் எழிசைமந்திரமென் றும் அறிஞர்கூறுவர். அம்மட்டோ, மெய்யெழுத்துள் வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் மூன்றினுள் ஒவ்வொன்றிற்கும் அவ் ஆறு எழுத்தே அமைந்திருப்பதுங்காண்க. உயிர்களின் முக் குணங்களுக்கேற்றவாறே அவை அங்ஙனம் அமைந்தன. இனைய எழுத்தியல் நுட்பம் பிற எம்மொழியினுங் காண்டல் அரிது. ஒலியின் இயல்பறிந்தவர்களே மந்திரத்தின் இயல்பறிந்தவராவர், ஒலியின் நன்மை நயத்தால் உயிர்களின்புறுதலும் அதன் வன் மையால் உயிர்கள் மடிதலும் அசுணமாவினாலே நம்முடைய முன்னோர் நமக்குக் காட்டியுள்ளார்கள். அவ்விலங்கானது யாழ் கேட்டின்புறும்; உடனே பறைகேட்பின் மடியும். நமது முன் னோர் மந்திரவொலியின் தன்மையினைத் தெரிந்தவர்களென் பதற்கு இஃதோர் சான்றுதல் காண்க.

உண்மை மந்திரமென்று சொல்லப்படுகின்ற வித்தெழுத்து அல்லது பீஜமந்திர மென்பவை தமது ஒலி நயத்தினாலே குறித்த பயனைத் தருவன. அத்தகைய வித்தெழுத்துக்கள் மிகுதியும் பயில்வது தமிழ் மக்களது சமய நூல்களிலே தான். வடமொழி வேதத்தில் வித்தெழுத்துக்கள் கிடையா என்று கல்கத்தா உயர்தாமன்ற நீதிபதி உட்ராவ் (Woodroffe) என்பவர் தந்திர தத்துவமென்னும் நூலுட் கூறியுள்ளார். ஆனால் தமிழ் மொழியிலே பண்டைத்தமிழ்ப் பெரியோர் கருதி யதைப் பயக்கவல்ல மறைமொழிகளை வகுத்தனரென்று ஆசிரி யர் தொல்காப்பியனாரும் திருவள்ளுவனாரும் குறித்துப் போந் தனர். ஆதலால் மந்திரங்களை ஆதியில் வகுத்தவர்கள் தமிழ் அறிவரே என்பது தெளியப்படும். இதனால் எழுத்துலகத்தின் இயல்பனைத்து மறிந்து பிரணவ முதலிய மந்திர ஒலிகள் பல

வற்றையும் பண்டைத் தமிழர் வகுத்துரைத்தன ரென்பது போதரும். பிரணவ ஒலியின் வரிவடிவத்தை யாராயப்புகுந்து அதன்கணின்றெழுந்த தமிழெழுத்தின் வடிவையும் பிரணவ ஒலியினின்றெழும் மந்திர ஒலியினியல்பையும் ஒருவாறு காட்டினும்.

இனிப் பிரணவச் சொல்லின் பொருளை ஆராய்வாம். வடமொழிக் கூர்மபுராணத்திலுள்ள ஓர் சுலோகம் கடவுளுக்கு ஈசன் என்ற பெயர் முதன்மை பற்றியும், விஷ்ணு என்ற பெயர் வியாபகம் பற்றியும், ஓம் என்ற பெயர் உயிர்களைப் பாதுகாத்தல்பற்றியும் ஏற்பட்டன என்றியம்புகின்றது. இப்பொருளில் ஓம் என்றது தமிழிலேதான் ஓர் மூலச்சொல்லாக (Root) வழங்குகின்றது. மூலச்சொல்லை ஆரியர் 'தாது' என்பர். அது பகுதியின் பகுதியே. ஓம்பு என்ற சொல்லின் தாது ஓம் என்பதே. அச்சொல்லிற்குரிய பொருளே அத்தாதிற்குமாகும். ஓம்பு என்பதற்குப் பொருள் பாதுகாத்தல். ஆதலால் ஓம் என்பதற்கும் அதுவே பொருள். இப்பொருளில் ஓம் என்பதினடியாகப் பிறந்த வடசொற்கள் கிடையா. ஆதலால் ஓம் என்பது தமிழ்ச் சொல்லேயாகும். 'ஓமென்று மறை பயில்வார்' என்ற ஞானசம்பந்தர் தேவாரமுங் காண்க. இதனை அருணகிரிநாதரும் 'கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே' என்றவிடத்துங் குறிப்பித்தார். இங்ஙனம் பெரியோரால் தமிழ்ச்சொல்லென்று கருதப்பட்ட ஓம் என்பதைத் தமிழென்றுகூற மனம் வாராத பண்டைப் பார்ப்பனர் சிலர் பாதுகாத்தல் என்னும் பொருளுடைய வடசொல்லாகிய 'அவ' என்பதினின்று ஓம் என்பது வந்ததென்று கட்டினர். அச்சொல் ஓம் என்று வந்ததற்கு இயைபு யாது மின்மை தெளிக. மேலும் ஓமென்னும் மூலச் சொல்லானது அவச்சொல்லினின்று தோன்றியதென்றல் உண்மைக்கு முற்றிலும் மாறானதே. எல்லா அறிவு நூல்கட்கும் வித்தாகிய ஓங்காரந் தமிழிலேயே முதற்கண் வடிவொடும் பொருளொடுந் தோன்றித் திகழ்ந்த நயம் பெரிதும் பாராட்டற்பாலது.

பிரணவம் தமிழிலேயுள்ளதெனவே அதன்கணின்று பிறந்த வேதாகமங்களும் தமிழிலேதான் இருந்திருக்கவேண்டும். பிரணவத்திலிருந்து வேதாகமங்கள் எப்படித் தோன்றியனவென்றால் 'உய்யவென்னுள்ளத்துளோங்காரமாய் நின்ற மெய்யா,' 'ஓங்காரத்துட் பொருளை ஐயனெனக் கருளியவாறு' என்னும் மணிவாசகனார் திருவாய்மலர்ந்தருளியவண்ணமே எல்லா நுண்பொருளையும் உயிர்கள் அறிதற் கேதுவாகிய ஓங்காரத்தின் வாயிலாக இறைவன் தனதன்பர்கட்கு உண்மையை உணர்த்த அவ்வுண்மையை உலகத்திற்கு அவர்கள் வேதாகம வாயிலாக

அறிவித்தருளினராதலினென்க. வேதாகமங்களாகிய கலை ஞானம் உண்டாவதற்கு நாததத்துவத்திற் பிறக்கும் ஓங்காரம் நுண்ணிய மூலகாரணமாதலானும் அவ்வாறு கூறினரென்றலும் பொருத்த முடையதே.

வேதம் ஆகமம் இப்பொழுது வடமொழியிலே யுள்ளன வல்லவா ? தமிழிலே அப்பெயருடைய நூல்களில்லையே என்ப தற்குக் கூறுவதாவது இச்சொற்கள் வடமொழியாக விருப்பி னும் அவற்றிற்கிணையான தமிழ்ச் சொற்கள் வேறுள்ளன. அவை குறிக்கும் நூல்களும் வேறே. அந்நூல்கள் மறைந்த பிற்காலத்தே இச்சொற்கள் வழங்குவதாயின் தமிழிலே முதனூ லென்பது 'வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன்கண்டது' என்றனர் ஆசிரியர் தொல்காப்பியனார். அவைகள் இப்பொழுது காணப்படாமைக்குக் காரணம் தொல்காப்பியத்திற்குமுந்தியுள்ள இலக்கியத் தொகுதி முழுவதும் இப்பொழுது காணாமைக் குரிய காரணமேயாகும். தமிழிலே முதல் நூல்களிருந்திரா விடில் இயல்நூலாசிரியர் முதல்நூலிலக்கணமே கூறவேண்டிய தில்லை. மேற்செய்யுளில் 'தமிழாகாரம் பூத்து மேலாரியமற்றுள கிடைக்கண் பொலிந்து' என்றபடி பண்டைத் தமிழருணூல்கள் மறைந்தபின் ஆரியவேதங்கள் தலையெடுக்கலாயின. அவை நமது சமயக் கொள்கைகளைச் செவ்விதிற் கூறு நூல்கள் இவை என்ற தெளிவு இன்னும் ஏற்படவில்லை. அஃது ஏற்படாத விடத்துக் காரணமில்லாத சமயக் கட்டுப்பாடுகளும் மூடநம்பிக்கையு மிகுந்து உண்மையறிதல் இயலாத தொன்றாகும். அங்ஙனம் ஏலாத நிலையே இப்போது நம்மவர்களின் பரிதாப நிலையாக இருக்கின்றது.

ஒவ்வொரு நாட்டிலுள்ளவர்களுக்கும் அவரவர்களுக்குரிய மொழியிலே அவரவர்கள் சமயநூல்கள் ஏற்பட்டிருக்கக் காண் கின்றோம். அதுபோலத் தமிழ்மக்கட்குந் தமிழிலேயே கடவு ளது திருவருளால் சமயநூல்கள் ஏற்பட்டிருந்தன. தேவார திருவாசகங்கட்கு முன்னேயே தமிழில் வேதங்களிருந்தன என்று சிவரகசியங் கூறுவதாகச் சுவாமிநாதபண்டிதர் தம் முடைய தேவாரப் பதிப்புரையில் இயம்பினர். அறம் பொரு ளின்பம் வீடென்னும் நான்கினையு முணர்த்தும் நான் மறைகள் பண்டைத் தமிழிலிருந்தனவென்பது தொல்காப்பியப் பாயிரம் தேவாரம் முதலியவற்றா லறியக்கிடக்கின்றது. திருவிளையாடற் புராணமும் ஆதியிலிருந்த மறைகள் கடல்வாய்ப்பட்டொழிந்த என்றியம்புகின்றன. நால்வர்க் கியம்பின நான்மறைகள்போலவே மகேந்திரமலையிற் கடவுள் அகத்தியர்முதலான ஐந்துமுனிவர்களு க்குத் தோற்றுவித்த அருள்நூல்களும் தமிழுருவமிழந்து ஆகம மென்னும் வடமொழிவடிவம் பெறலாயின. ஆகமமென்ற சொல்

விற்கு வந்ததென்று பொருள். ஆரியருக்குத் தமிழரிடமிருந்து கிடைத்த நூல்களே ஆகமமெனப்பட்டன.

---

# திணைமயக்கம்

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

"திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே"

"உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே"

"எந்நிலை மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்"

என்னும் தொல்காப்பிய அகத்திணையியற் சூத்திரங்கள் திணைமயக்கம் உணர்த்த எழுந்தன.

"முத்திறப் பொருளுந் தத்தந் திணையொடு
மரபின் வாராது மயங்கலு முரிய"

என்னும் அகப்பொருள் விளக்கச் சூத்திரமும் அது. இவை ஒரு நிலத்தில் வேறு திணைக்குரிய உரிப்பொருளாகிய ஒழுக்கமும் கருப்பொருள்களும் மயங்கிவருதலையே பெரும்பான்மை உணர்த்துவன என்பது இவற்றின் உரையால் அறியலாகும். அங்ஙனம் மயங்கி வருதற்குச் சங்கத்துச் சான்றோர் செய்யுட்களிலிருந்து உரையாளர்கள் பல உதாரணங் காட்டியுள்ளார்கள். கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டினுள் வேறு திணைக்குரிய பூக்கள் மயங்கி வந்தவாறுங் காண்க.

இப்பொழுது திணைமயக்கமென்று பலரால் அறியப்படுவது அகப்பொருள் கூறும் இத்திணைமயக்கமன்று; ஒருநிலம் மற்றொரு நிலத்துடன் நெருங்கியிருத்தலால் ஒன்றற்குரிய கருப்பொருள்கள் முதலியன மற்றொன்றிற் சென்று பொருந்துதல் என்பதே.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கற்கால்கொண்டு நீர்ப்படைசெய்து மீளுமுன் அவன் மனைவி வஞ்சிநகரத்தின் அரண்மனையில் பள்ளிக்கட்டிலின்மீது துயிலின்றி யிருத்தலை வருணிக்கும் இளங்கோவடிகள்,

'குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலைவா லுகத்து
அஞ்சொற் கிளவிய ரந்தீம் பாணியும்
ஓர்த்துடனிருந்த கோப்பெருந் தேவி'

என்று கூறி, நால்வகை நிலமும் வஞ்சிக்கு அணிமையில் இருத்தலை விளக்கினர். அரும்பதவுரைகாரரும் 'ஓர்த்து உறங்காத தேவி யென்றது நாலுநில அணிமையுங்கூறிற்று' என்றார். இங்ஙனம் ஒரு நாட்டின்கண் நிலங்கள் ஒன்றோடொன்று நெருங்கி அவற்றின் கருப்பொருள் முதலியன மயங்கியிருத்தலை அந் நாட்டிற்கு ஓர் சிறப்பாகக்கொண்டு புலவர்கள் அழகுறப் புனைந்து கூறி வந்திருக்கின்றனர். சங்கச் செய்யுளாகிய பொருநராற்றுப்படையில் கசுஎ-முதல் உஉரு முடியவுள்ள அடிகளில் இத்திணைமயக்கம் கூறப்பட்டிருக்கிறது. அதில் ஒருபகுதி பின்வருவது :

"தேனெய்யொடு கிழங்குமாறியோர்
மீனெய்யொடு நறவுமறுகவும்
தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவும்,
குறிஞ்சி பரதவர் பாட, நெய்தல்
நறும்பூங் கண்ணி குறவர் சூடக்,
கானவர் மருதம் பாட, அகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவலக்,
கானக்கோழி கதிர் குத்த,
மனைக்கோழி தினைக்கவர,
வரைமந்தி கழிமூழ்கக்,
கழிநாரை வரையிறுப்பத்,
தண்வைப்பின் நாணுடுகுழீஇ"

குறிஞ்சி நிலத்துக் குறவர் தேனையும் கிழங்கையும் நெய்தனிலத்திலே விற்று அங்குள்ள மீனின் நெய்யும் மதுவும் வாங்குதலும், மருதநிலத்துக் களமர் கரும்பையும் அவலையும் குறிஞ்சி நிலத்தில் விற்று அங்குள்ள மான்றசையும் தேனும் கொள்ளுதலும், நெய்தனிலத்துப் பரதவர் குறிஞ்சிப் பண் பாடுதலும், குறிஞ்சி நிலத்துக் குறவர் நெய்தற்பூச் சூடுதலும், முல்லைநிலத்து ஆயர் மருதப் பண்ணும் மருதநிலத்தாராகிய அகவர் முல்லைப்பண்ணும் பாடுதலும், முல்லையிலுள்ள கோழி மருதத்தில் நெற்கதிரையும், மருதத்திலுள்ள மனைக்கோழி குறிஞ்சி சார்ந்த முல்லையிலுள்ள தினையையும் கவர்ந்துண்டலும், குறிஞ்சியிலுள்ள மந்தி நெய்தலின் கழியில் மூழ்குதலும், நெய்தலின் கழியிலுள்ள

நாரை குறிஞ்சியிடத்து மலையிற்சென்று தங்குதலும் இயற்கை நெறிபிறழாமல் இதிற் கூறியிருப்பது கற்பார்க்குப் பெரியதோர் இன்பம் பயப்பதாகும்.

"கொடிச்சியர் புனத்தயற் குறிஞ்சி நெய்பகர்
இடைச்சியர் கதுப்பயற் கமழும்; எழையங்
கடைச்சியர் களையெறி குவளை கானல்வாய்த்
தொடுத்தலர் பிணையலார் குழலுட்டோன்றமே"

"கலவர்தஞ் சிறுபறை யிசையிற் கைவினைப்
புலவர்தேம் பிழிமகிழ் குரவை பொங்குமே;
குலவுகாற் கோவலர் கொன்றைத் தீங்குழல்
உலவுநீ ளசுணமா வுறங்கு மென்பவே"

இவ்விரண்டும் சூளாமணிச் செய்யுட்கள். முல்லை நிலத்து ஆய்ச்சியர் குறிஞ்சிப்பூவையும் நெய்தனிலத்து நுளைச்சியர் மருதத்துப் பூவையும் சூடிக்கொள்வர் என்றும், நெய்தனிலத்து நுளையர் பறையோசையால் மருத நிலத்து உழவர் குரவை விளக்கமுறும் என்றும், முல்லைநிலத்துக் கோவலர் குழலிசையால் குறிஞ்சி நிலத்து அசுணமா உறங்கும் என்றும் இவற்றிற் கூறப்பட்டமை காண்க.

இனி, தெய்வமணக்குஞ் செய்யுளியற்றவல்ல சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தே தொண்டைநாட்டின் வளமுரைக்குமிடத்து ஆறுசெய்யுட்களில் திணைமயக்கங்கூறி யுள்ளார். அவற்றுள் ஒன்று பின்வருவது:

"கவரு மீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலுஞ் சேவலு மாறியுஞ் சிறுகழிச் சியர்கள்
அவரை யேனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரி நெய்தலுங் கானமுங் கலந்துள வொழுக்கம்"

நெய்தனிலமாக்கள் மீனினங்களைப் பாலைமாக்களுக்கு விற்று அவரிடமிருந்து சிவலும் சேவலும் வாங்குவர் என்றும், பாலைநிலமகளிர் அவரை தினைகளை நெய்தல் மகளிர்க்கு விற்று அவரிடமிருந்து பவளமும் முத்தும் வாங்குவர் என்றும் இதிற் கூறப்பட்டுளது. இப்பாட்டில் அமைந்துள்ள சிலநுண்பொருள் கள் அறியற்பாலன. ஈண்டுக் கானவரென்பார் பாலைமாக்கள். பாலையாவது முல்லையும் குறிஞ்சியும் கலந்து திரிந்ததென்பது.

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலையென்பதோர் படிவங் கொள்ளும்"

என்னும் சிலப்பதிகார அடிகளால் அறியலாகும். சேக்கிழார் குரிசிலே

"கோல முல்லையுங் குறிஞ்சியு மடுத்தசில் லிடங்கள்
நீல வாட்படை நீலிகோட் டங்களு நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன வுளபரன் முரம்பு"

என்று கூறிவைத்துள்ளார். இங்ஙனம் முல்லையும் குறிஞ்சியும் பாலையாயினமையின் அவ்விரு திணைக்கு முரிய கருப்பொருள்கள் பாலைக்குரியவாதல் சாலும். இக்கருத்தானே முல்லைக்குரிய சிவலும் அவரையும், குறிஞ்சிக்குரிய குயிற்சேவலும் தினையும் இதிற் பாலைக் குரியவாகக் கூறப்பட்டனவென்க. இச்செய்யுளிலுள்ள மற்றொருநயம் திணைமயக்கமுணர்த்தும் இதனில் சொற்களையும் மயங்கவைத்திருப்பதாகும். எயிற்றியர் அவரையேனலுக்குச் சிறுகழிச்சியர்கள் பவளமுத்தளந்தும் என நிற்கற்பாலவாகிய சொற்கள் மாறி மயங்கி நிற்றல் காண்க.

இனி, பரஞ்சோதிமுனிவர், சிவஞானமுனிவர், கச்சியப்பமுனிவர், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் முதலானோர் பாடிய திணைமயக்கங்களுக்கு அளவில்லை. அவற்றையெல்லாம் இங்கு எடுத்துக் காட்டப்புகின் இவ்வுரை மிகவிரியுமாகலின், அணிமைக் காலத்திருந்த அறிஞர் சுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றிய மனோன்மணீயத்திலுள்ள திணைமயக்கப் பகுதியொன்றை மாத்திரம் காட்டி இதனை முடிக்குதும்.

"வஞ்சிநா டதனில் நன்செய் நாடெனச்
செந்தமிழ் வழங்கும் தேயமொன் றுளது; அதன்
அந்தமில் பெருவளம் அறிவசர் யாரோ
மருதமும் நெய்தலும் மயங்கி அங்கெங்கும்
புரையறு செலவம நிலைபெற வளரும்;
மழலை வண்டானம் புலர்மீன் கவர
ஓம்புபு நுளைச்சியர் எறிகுழை, தேன்பொழி
புன்னை நுண் டாதாற் பொன்னிறம் பெற்ற
எருமையின் புறத்திருந் திருஞ்சிறை புலர்த்தும்
அலைகடற் காக்கைக்கு அலக்கண் விளைக்கும்;
கேதகை மலர்நிழல் இனமெனக் கருதித்
தாராத் தழுவிடச் சார்தரச் சிரித்த
ஆம்பல்வாய் கொட்டிடும் கோங்கு அலர்த்தாதே;
வால்வளை சூல் உளைந்து ஈன்றவெண் முத்தம்
ஓதிமக் குடம்பையென்று உன்னுபு காலாற்
பருந்தினம் கவர்ந்து சென்று அடம்பிடைப் புதைக்கும்;
கரும்படு சாலையின் பெரும்புகை மண்டக்

கூம்பிய நெய்தற் பூந்தளிர்க் குளிர
மேய்ந்தகல் காரா தீம்பால் துளிக்கும்;
அலமுகம தாக்குறி அலமரும் ஆமை
றுளைச்சியர் கணவரோ டிழைத்திடும் ஊடலில்
வழித்தெறி குங்குமச் சேற்றிடை ஒளிக்கும்;
பூஞ்சினை மருதிடை வாழ்ந்திடும் அன்றில்
களிமீன் கோட்பறை விளிகேட் டுறங்கா;
வேயென வளர்ந்த சாய்குலைச் சாலியில்
உப்பார் பஃறி யொருநிறை பிணிப்பர்;
.........................................
நன்னீர்ப் பெருக்கும் முந்நீர் நீத்தமும்
எய்யா தென்றும் எதிர்த்திடும் பிணக்கில்
நடுக்கடல் நன்னீர் சுவைத்திடும் ஒருமால்;
மரக்கலம் வந்திடும் வயற்கரை ஒருகால்"

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[திரு. தி. சு. பாலசுந்தரனவர்கள்]

(சஉச-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வருட்பெருந் திவ்விய செந்தமிழ்ப்பா மாலைகளை அருளிய அருளொளி வள்ளலார் இப்பாமாலைகள் மட்டில் அமையாமல், பலப்பல தனிப்பாடல்கள் அருளியதுமன்றி "மனுமுறை கண்ட வாசகம்", "தொண்டமண்டல சதக இலக்கணம்", "ஒழிவிலொடுக்கப் பாயிரவிருத்தி" முதலான பொருட்செறிவு வாய்ந்த வளவிய உரை நூல்களையும் அவ்வப்பொழுதும் அருளி வந்தனர்கள். வள்ளலார் திருவொற்றியில் இருந்தபோதே இவைகள் அருளப்பட்டனவாகும். அப்பொழுதே அவர்கள், பேய்களை வெருட்டுவது, இறைவனே ஓர் உருக்கொண்டு வந்து சோறு தரப்பெறுவது, அதனைப் பிறர்க்கும் பெறுவிப்பது, பணத்திற் பற்றற்றுக் கைப்பட்ட அதனை எறிந்து விடுவது, உலகத்துப் பொருள்களைச் சிவலிங்கங்களாகக் காண்பது, பாம்பு முதலான நச்சுயிர்களைச் சொல்லளவில் விலக்குவது, திருவருளால் அருள் நூலும் அந்நூற் பொருளும் எய்துவது. அருளாளர் 'மனிதரில் மனிதர்' என்று பாராட்டுமாறு ஒழுகுவது, சிறப்பப்பாடித் திருக்கோயில்களைச் செல்வத்திலும் ஒழுங்கிலும் மேம்படுத்துவது, உயிர்க்கொலை நிறுத்துவது, திருநீறளித்துப் பலவகை நோய்களையும் ஒழிப்பது, தக்கார்க்கு அறிவு நூற் பெரும் பொருளை அறிவுறுப்பது முதலான அருட்செய்கைகளைச் செய்து கொண்டு, 'பிள்ளைப் பருவத்திலேயே அருள்

பெற்றுப் பற்றற்ற உள்ளத் துறவியாகிய இவர் 'நிலை அரிது அரிது' என்று தம்மை அறிந்தாரெல்லாரும் சொல்லி வியந்து பயந்து நெருங்கிப் பணிந்து ஒழுகி அடங்கிவளர, தலையாய பெரியாராய் விளங்கினர்கள். வள்ளலார் வடலூரில் இருந்தபோது அன்பரொருவர் தம் சொத்துக்கள் முழுமையும் வள்ளலார் பேருக்கு எழுதி வைத்துவிட அவர்களைக் கேட்டுக்கொண்ட போது பிள்ளையவர்கள் அதை மறுத்து ஒரு திருக்கோயிலுக்கு எழுதிவைக்கச் சொன்னமையால் அவர்கள் மண்ணாசையைத் துறந்தார்கள் என்பதும், திருமணம் செய்துகொள்ள முதலி லேயே மறுத்தமையாலும் ஒரேதுவால் அதனைச் செய்து கொண்ட பின்னரும் அதன்கண் பற்று வையாது உடனே விட்டு நீங்கினமையாலும் பெண்ணாசையைத் துறந்தார்கள் என்பதும், அன்பர்கள் வலிந்து தரும் பணத்தையெல்லாம்.

"பொருளினை வாங்கிப் போனபோ தெல்லாம்
புழுங்கிய புழுக்கம் நீஅறிவாய்
மருளும் அப்பொருளைச் சாலகத்து எறிந்து
மனம்மிக இளைத்ததும் பொருளால்
இருளுறும் எனநான் உளம்நடுங் கியதும்
எந்தைநின் திருவுளம் அறியும்"

(சு, பிள்ளைப்பெருவிண்ணப்பம்-சக)

"ஒருவும் அப்பொருளை நினைத்தபோ தெல்லாம்
உவட்டினேன் இதுவும் நீஅறிவாய்" " சஉ

என்றபடி எறிந்து விட்டமையால் பொன்னாசையைத் துறந்தார்கள் என்பதும் தெளிவு. அடிகள் மூவாசையையும் முற்றிலும் விட்ட பற்றற்ற முழுத்துறவிகள் என்பதற்கு இவையே போது மான சான்றுகள். இம்மூவாசையுள்ளும் மண்ணாசையும் பெண் ணாசையுங் காளைப் பருவத்தோடு அடங்கிப் போகமற்றுக் கிழப் பருவத்திலும் விட்டு நீங்காத பொன்னாசையைப் பிள்ளையார், சென்னையிலிருந்தபோதே தம் இளந்தைப் பருவத்தில் விட்டுத் துறந்தமை அவர் பெருநிலையைக் காட்டுகின்றது. அடிகளே தம் இளந்துறவைப்,

"பால்மறுத்து விளையாடும் சிறுபருவத் திடையே
பகரும்உல கிச்சையொன்றும் பதியாதுஎன் உளத்தே
மால்மறுத்து விளங்கும்திரு ஐந்தெழுத்தே பதிய
வைத்தபெரு வாழ்வே"

(சு, அருள்விளக்கமாலை, எஅ)

என்று பின்பொருகால் நினைந்து பாடுகின்றார்கள்.

இளந்துறவு பின்னும் பின்னும் முற்றித் "திண்ணியன் என்று ஏனை உலகம் செப்பவைத்த தெய்வம்" (சு, பரசிவ நிலை, ரு) என்றபடி ஒருதலை உணர்வினராய்க் காளைப்பருவம் எய்தலும், பிள்ளையவர் நெஞ்சப் பான்மையைக் கவனிக்காது போன அவர் உறவினர் அவர்க்கு மணவினை நிகழ்த்துங் கருத்தினராய்த் தங்கருத்தை அப்பிள்ளைத் துறவிக்குத் தெரிவித்தார்கள். இராமலிங்கமோ அதனை அவாவும்! பெரிது மறுத்துச்சில ஆண்டுகள் கழித்தும் மீண்டும் மீண்டும் அவர்கள்செய்த பெருந் தொந்தரவால் அதனைப் பொறுக்கமுடியாமைப் பொருட்டே அவர் கொள் கருத்துக் கிசைந்து பின் அதினின்றும் விடுபடலாம் என்றெண்ணித் திருமணத்துக்கு ஒருவாறு இசைந்தார்கள். சுற்றத்தார் மடங்கா மகிழ்ச்சி மீதூர்ந்து அவர் தம் அக்கையார் மகளாகிய தனம்மாள் என்பாரை அவர்க்கு மணம் பொருத்துவிப்பத், திருமணத் தொந்தரவினின்றும் பிழைத்த பிள்ளையார் அவ் அம்மையாரோடு உடனிகழ்விலராய் அன்றே விட்டு நீங்கினர். கண்டு கருத்திழந்தார் சுற்றத்தார்! என் செய்வர், மடைதிறந்த வெள்ளம்போற் சிவக்கடல் வீழும் வள்ளற் பெம்மான் நெஞ்சோட்டத்தை அவா பற்றி இழுக்க வல்லுநர்!

பின்பும் தாம் நின்ற நிலையினின்றும் பெயராது திருவொற்றிக் கடவுள் வழிபாட்டில் திளைத்திருந்தார் பிள்ளையார். இங்ஙனம் இருக்கும் பொழுது, ஒற்றியில தியாகராயப் பெருமான் திருநடங்கண்டு காதல் கூர்ந்து கூர்ந்து அதனால் அவர் நெஞ்சம் அதன்கண் அழுந்தத் தொடங்கிற்று. அழுந்தி அத்திரு நடத்தின் நினைவாகவே முழுதும் அவர் நெஞ்சம் மாறிவிட்டதால், அம்முறையே தில்லைத்தேவன் திருநடங்காண வேண்டுமென்னும் தடுக்கொணுப் பேரவா அவர்பாற் பெருகித் திரண்டுவிட்டது. இரண்டாந் திருமுறையில் உள்ள தியாகவண்ணப் பதிகத்துக்கு அடுத்தது திருவொற்றியூரையும் திருத்தில்லையையுங் கலந்து பாடப்பட்ட ஆடலமுதப்பத்தாய் இருப்பதே அவர் தியாக நடத்தின் வழியாகவே தில்லை நடத்தின் நினைவு எய்தப்பெற்ருர் என்பதைத் தெளிவாக்கும். பிள்ளையார் அதிலிருந்து தில்லை சேரும் அவா மிகுந்து திருவொற்றியூரையுந் திருத்தில்லையையும் இணைத்தும், ஒரோ வொருகால் அக்காதல் மீறி மிகுந்தபோது தில்லையையே நினைந்து தனித்தும் பாடுவார். திருவொற்றியைத் தனித்துப்பாடிய பாட்டுக்களினும் தில்லைப் பெயரும் அங்கு நடிக்கும் தேவின் பெயருங் காணப்படுகின்றன. இன்னும், திருமுல்லைவாயின் "திருவிண்ணப்பப் பதிக"த்து இரண்டாம் பாட்டினும் அங்ஙனங் காணப்படுவது காண்க. திருவொற்றியூர்த்தியாக நடங்கண்ட பின்னரே அதிலிருந்து தில்லை நடத்தின் நினைவு

பிறந்ததென்று மேலே காட்டியதால்; தியாக நடங்கண்டுபாடிய "தியாகவண்ணப் பதிக"த்தின் பின்னரன்றோ திருமுல்லைவாயி லின் "திருவிண்ணப்பப் பதிகம்" நிற்றல் வேண்டும்? மற்று அங் ஙன மன்றி அஃது அத் "தியாகவண்ணப் பதிக"த்தின் முன்னே நிற்றலால் அது பொருந்தாதெனின், அற்றன்று, திருவருட்பா வின் எல்லாப் பதிக அடைவுகளும் வள்ளலாரடிகள் பாடிய முறையே இப்பொழுது பொருந்தி யுள்ளனவென்று கூறுதற் கில்லை. முதல் திருமுறையாக அமையக்கூடிய திருத்தணிகை யின் பெருந்தொகைப் பதிகங்களே ஐந்தாந் திருமுறையாக எழுந்தனவென்றால்; ஒரு திருமுறையின் நடுவில் ஒன்றிரண்டு பதிகங்கள் முன் பின்னாக மாறியிருக்கும் என்பதில் ஐயமு முண்டோ? பிள்ளைப்பெருமான் தில்லை நகரைச் சேர்ந்த உடனே பாடியவாகச் சொல்லப்பட்ட "நடராச பதிமாலை" "அம்மை திருப்பதிகம்" என்னும் இரண்டனுள் முன்னது வடலூரிற் போய்ப் பாடிய ஆறுந் திருமுறையின் நடுவுக்கு மேல் ஓரிடத் திலும் பின்னது இரண்டாந் திருமுறையிலும் அடக்கப்பட்டிருத் தல் இங்கு நினைவுகூரற்பாலது. இங்ஙனமே, எத்தனையோ பல. திருவொற்றியூர்ப் பதிகங்களும் "தியாகவண்ணப் பதிக"மும் பாடியதன் பின்னர்ப் பாடப்பட்ட "இங்கித மாலை" என்பது, முதல் திருமுறையின் ஈற்றில் நிற்றலுங் காண்க. ஆதலாலன்றோ அவ் இங்கிதமாலையில் திருவொற்றிப் பெயரோடு தில்லைப் பெய ரும் எழுந்தது! அடிகள் கருங்குழியை அடைவதற்கு முன், வேளூரிலிருந்து பாடிய எதுவால் முறைப்படி இரண்டாந் திரு முறையின் ஈற்றில் நிற்கவேண்டிய "வைத்தியநாதர் பதிகம்" ஒன்றும், தண்ணீர் விளக்கெரித்தது பற்றிக் கருங்குழியிலிருந்து பாடிய ஒரு தனிப்பாட்டும், ஆறுந் திருமுறையின் இடையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு முன்பின்னாக மாறிக் கிடைப்பவைகளெல்லாம், திருவருட்பாவைத் திருமுறை திரு முறையாக எடுத்து ஆராயுமிடத்திற் காட்டப்படும் பாடல் தலைப்புகளின் முன்பின் இயைபும் ஆன்முறையும் ஒரு சிறிதும் இன்றி, ஒரு காலத்தே யல்லாமல் நாற்பத்திரண்டு ஆண்டுகளாக நினைத்தது நினைத்தபடி அவ் வப்பொழுதும் பலப்பல இடங்க ளிற் பாடப் பட்டுப் பற்பலராலும் பலபல இடங்களிற் சேமிக்கப் பட்டுப் பின்னர் வெளிப்பட்டனவாதலால், அப்பாட்டுத்தலையங் கங்களிற் சில பல முன் பின்னாக மாறிப்போதல் இயல்பேயாம். ஆகவே, "தியாகவண்ணப்பதிக"த்துக்குப் பின்னால் பல பதிகங் கள் தள்ளி அப்பால் அமைந்திருக்கவேண்டிய திருமுல்லைவாயிற் பதிகங்கள் இரண்டும் அதனோடு ஒட்டிய திருவலிதாயப் பதிகம் ஒன்றும் ஆகமூன்றும் எவ்வாறோ தவறி முன்னால் அமைந்து விட்டன என்பதே உண்மையாவதாம் என்க.

இன்னும் ஒன்று, பிள்ளையவர்களுக்கு அவர்கள் சென்னையி லிருந்த பொழுதே திருமணம் நிறைவேறினமையால் அவர் திரு மணப் பேச்சு இக்காலத்திய வழக்கப்படி பதினாறாண்டுக்கு மேற்பட்டே நிகழ்ந்திருக்க வேண்டும். அப்பேச்சுக்கு முதலில் இசைய மாட்டாமல் பின் இசைவதற்கே நம்பெருமானுக்குச் சில ஆண்டுகள் கழிந்தன வாதலின், அம் மணவினை அவர் தம் இருபஃதாண்டுக்கு மேலேதான் முடிந்ததாகலும் வேண்டும். திருமணத்துக்குப் பின்னரும் சில ஆண்டுகள் திருவொற்றி வாழ்க்கையில் வள்ளலார் திளைத்திருப்பதால், அவ்விடம் விட்டுத் தில்லைசேரப் புறப்படும் பொழுது அவர்கட்கு ஆண்டு இருபத்து நான்குக்குக் குறையாதென்பது திண்ணம். எனவே தம் பன்னி ரண்டாம் ஆண்டிலிருந்து ஒற்றியூருடையாரைப் பாடத் தொடங் கிய அடிகள், பன்னிரண்டாண்டுகளாக அப் பெருமானைப் பர சினர்கள் என்று தெரிகின்றது. தெரியவே, சென்னையிலிருந்து தில்லை எய்தப் புறப்படுவதற்குச் சில திங்கட்கு முன் திருமுல்லை வாயிற்கும் திருவலிதாயத்துக்கும் சென்று திருப்பதிகங்கள் அருளி யிருத்தலால், அப் பதிகங்கட்கு முன்னிடங்களில் கடந்த பன்னிரண்டாண்டுகளாகப் பாடிய திருவொற்றிப் பதிகங்கள் காணப்பட வேண்டுமன்றே! திருமுல்லைவாயில் திருவலிதாயப் பதிகங்கட்கு முன்னாய் இப்பொழுது பதினொரு திருப்பதிகங்களே காணப்படுகின்றன. இவ்வளவு குறைவான பதிகங்கள் தாமா பன்னிரண்டாண்டுகளாகப் பாடப்பட்டிருக்கும்? அற்றன்று, பிள்ளையவர்கள் திருவொற்றியூருடையாரை இரண்டாந் திரு முறையின் முதலிலுள்ள "புண்ணிய விளக்கம்" என்பதிலிருந்து பாடத்துவங்கியதன் பின்னும் திருமுல்லைவாயில் திருவலிதாயப் பதிகங்கள் பாடுதற்கு முன்னும் பாடப் பெற்றனவாகிய முதல் திருமுறைப் பாடல்களெல்லாம் நூல் வடிவாக இருப்பது பற்றி அவையெல்லாம் பொறுக்கி வேறு பிரிக்கப்படுதலும், அவை கழிய எஞ்சியவை பதினொரு திருப்பதிகங்களாகக் குறைந்து நின்றனவாதலின். அதனால் வரும் இழுக்கென்னை யெனின், மேல்கூற்று உண்மையே யாதல் பற்றிப் "புண்ணிய விளக்க"த் துக்கும் வலிதாயப் பதிகத்துக்கும் இடையில் அம்முதல் திரு முறைப் பாடல்களைச் சேர்த்துக் கொண்டாலும் அப்பொழுது, வலிதாயப் பதிகத்துக்கு முன்னுள்ள பாடல்கள் எவ்வளவோ அவ்வளவே ஏறக்குறைய அதற்குப் பின்னும் இருத்தலால், ஒற் றியை வழுத்திய பன்னிரண்டாண்டுகளின் நடுக்கூத்தாகிய ஆறா வது ஏழாவது ஆண்டுகளிலேயே திருமுல்லைவாயிலுக்குச் சென் றார் அடிகள் என்று சொல்ல நேருமாதலின், திருமுல்லைவாயி லுக்கு அப் பன்னீராண்டுகளின் நடுவிலன்றிக் கடைசியிலே சென்றார் பிள்ளையார் என்னும் உண்மை வரலாற்றோடு முரண்பட்

டுப் பொருந்தாது போதல் ஓர்ந்து கொள்க. கொள்ளவே, திருமுல்லைவாயில் திருவலிதாயப் பதிகங்கள் "தியாகவண்ணப் பதிக"த்துக்கு அப்பால் "தரிசனப் பதிக"த்துக்கு முன் அமைவதே பொருத்தமாகின்ற தன்றோ? ஆதலும், "தியாகவண்ணப் பதிகம்" பாடியதற்குப் பின்னர்த்தான் வள்ளலார் தில்லையை நினைத்துக்கொண்டு அங்கங்கும் பாடுவாராயினர் என்பதும், அம்முறையாகத் தியாகநடக் காட்சியே தில்லை நடத்தேவைப் பிள்ளையார்க்கு நினைப் பூட்டிற்று என்பதும் பெறப்பட்டு அவை ஐயுறவுக் கிடனில்லாத உண்மைக் கருத்துகளாமாறும் விளங்குதல் அறிக!

தில்லை நடத்துக்கு எழுந்த போவாவுடன் திருவொற்றித் தியாகரொடு பிள்ளையார் குலவி வருகையில், அவர்கள் அருமைத் தாயார் சின்னம்மையார் சிவபிரான் திருவடி நீழல் எய்தினர்கள். அவ்வினைக்கு வேண்டுவன வெல்லாம் தக்காங்கு ஆற்றிவிட்டு மீண்டுந் தில்லைப் போவாவில் ஊசலாடி யிருந்தபிள்ளை, அக்கால், தமது தம்பியார் பரசுராமபிள்ளை என்பார் பெரும்பிணியால் பிடிக்கப்பட்டிருக்கிறார் என்று கேள்வியுற்றார். இதுவே தில்லை சேறற்குத் தகுந்த வாய்ப்பு என்று நினைத்துத், தம் தம்பிக்கும் திருநீறு கொடுத்துத் தில்லைக் காட்சியைக் காட்டுவான் கருதியவராய் உள்ளன்பு வெள்ளத்தில் துள்ளிக் குதிக்கும் தக்கார் சிலருடன் ஒற்றி வணங்கிச் சென்னை விட்டுத் தில்லைக்குப் புறப்பட்டருளினார் பெருமான்!

மேல் "தரிசனப் பதிக"த்திலிருந்தே மற்றவையெல்லாம் தில்லைச்சேறிய பின்பு பாடப்பட்டனவாதலின், அத் தரிசனப் பதிகத்துக்கு முன்னுள்ள புள்ளிருக்கும்வேளூர்ப் பதிகங்களும், திருவண்ணாமலை திருவாரூர்ப் பதிகங்களும் திருவொற்றிக்கண் அவ்வவ்வூர்ப் பெருமானை நினைந்து பாடப்பட்டவை என்று அறிதல் வேண்டும். ஒற்றிப்பிரானை வழுத்தி யிருந்தபோது, தம் தம்பியார் உடல்நலங் குறைந்து நிற்கின்றார் என்று கேள்வியுற்ற காலத்தில் வைத்தியநாதரை நினைந்து வேளூரைப் பாடினார்கள். இதனுண்மை, அடிகள் வேளூரைப் பற்றி இரண்டாவதாகப் பாடிய "பிரசாதப் பதிக"த்தில ஒவ்வொரு பாட்டிலும் குறிப்பிடப்பட் டிருக்கின்றது.

"வருந்தி நாடவரும் பிணிநின் அருள்
மருந்தினால் அன்றி மற்றொன்றில் தீருமோ" ௧

"ஓவுறாத உடல்பிணி தன்னையே" ௫

"உய்யநின் அருள் ஒன்றுவ தில்லையேல்
வெய்ய நோய்கள் விலகுவ தில்லையே" ௬

"தொல்லை நோயின் தொடக்கது நீங்கவே" எ

முதலிய அப்பதிகத்தின் அடிகளைக் காண்க. இதற்கு முன்பு பாடியவேளூர் "சிகாமணி மாலை"யில், மலத்தின் பழந்தொடக்கையும் அதனால் வரும் அளவுபடாத் துன்பங்களையும் பிணியாக உருவகப்படுத்தி அதைத் தீர்த்தருளுமாறு அப் புள்ளிருக்கும் வேளூர் வைத்தியநாதரை நினைந்து வழுத்துகின்றார்கள். இனித் திருவண்ணமலையைப் பாடியருளிய "திருவருட் பதிக"த்தில்,

"அறையும் நற்புகழ்சேர் அருணையை விழைந்தேன்
அங்குளனை அடைகுவித் தருளே" ௬

"அருணையங் கோயில் சந்நிதிக்கு யான்வர அருளே" ௰

என்பனவாக எல்லாப் பாட்டுகளிலும் தம்மைத் திருவண்ணமலையிற் சேர்ப்பிக்கும்படி சிவத்தை வழுத்துதலால், அப் பதிகமும் அங்குப்போய்ப் பாடப்பட்டதன்றென்பது வெளிப்படை. எஞ்சியது திருவாரூர்ப் பதிகம். தில்லைக்குப் புறப்படுவதற்கு முன் கடைசியாகப் பாடப்பட்டது இப் பதிகந்தான். இதற்கு அடுத்தது தில்லையிற் போய்ப்பாடிய "தரிசனப் பதிகம்" என்பது. சங்கிலியாரை மணந்த பின் "எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே" என்று திருவாரூர் இறைவனை நினைத்துக்கொண்டு திருவொற்றியைப் பிரிந்த நம்பியாரூரரின் அருஞ்செய்கை தில்லையை நினைத்துக்கொண்டு அத் திருவொற்றியைப் பிரியும் தம் செய்கையோடு ஒத்து நிற்றலின் அதை நினைத்த அடிகட்கு அந் நினைவின் வழியே திருவாரூர் தோன்றிற்று. தியாகநடம் அங்கும் உண்மையால் அதைப் பாடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆதலால், தியாகநடத்தில் உள்ளம் இழுப்புண்டிருந்த வள்ளலார் திருவாரூரைப் பாடிப் பின் ஒற்றியைப் பிரிந்தனர் என்க.

பிரிந்து, திருமயிலையின் விடையூர்தி விழாச் சேவித்துக்கொண்டு வழியிடைச் சில திருக்கோயிற் சேவையுடன் அச்சிறுபாக்கம் அமர்ந்து புதுவைதங்கிப் பின் தில்லையை அண்மி அகமுருகினர். பன்னெடு நாட்களாகப் பேரவாக் கொண்டிருந்த பிள்ளையவர்களின் மெல்லிய அருள் நெஞ்சம் நட்டப்பிரானைக் கண்ட அவ்வளவில் என்ன நிலையை அடைந்திருக்கும் !

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணம்ஒரு மூன்றும் திருந்து சாத்துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறுஇலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

திருவாதவூர்ப் பெருமான் எப்படியாயினும் சிவத்தைக் கண்டு விடல் வேண்டும் என்னும் தம்மை யறியாத பேரன்பின் வழிப் பிறந்த பேரவாவால் மதுரையினின்றும் புறப்பட்டுக் கீழ்க்கடற் புறத்தை நணுகும் பொழுது, குருந்து நிழற்கொண்டு அடியார் சூழ எதிர் முகமாய் அமர்ந்தருளிய சிவத்தின் அறிவருளாசிரியர் திருக்கோலத்தை அவர் கண்டமுத அந் நிலைக்கே அருள் நடங்கண்ட நம் வள்ளலின் அரு நிலையை ஒப்புத் தரத்தகும்! தில்லைத் தேவனைக் கண்டுகொண்ட அடிகள், நீர் ஊற ஊறச் சரிந்து உகும் ஊற்று மணல்போல ஆராத பேரன்பு கொப்புளித்து ஊற ஊற நெஞ்சுடைந்து நெக்குருகினர்! மடைதிறந்த வெள்ளத்தை விடவிரைவும் ஆற்றலும் பொருந்தித் தம்பேரவா அங்கு விளங்கிய நடத்தின்கண் பாய்ந்து விடுதலும், அப்பாயும் விரைவு அப்பொழுதே தம் பற்றற்ற உள்ளத்தையும் உடன் அடித்துச் சென்றமையின் அவர்கள் உடனே தம்மை மறந்தவரானார்கள். (தொடரும்)

---

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

[சீயாழி. திரு. அ. ப. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்]

(௪கச-ம் பக்கத் தொடர்ச்சி)

## உ. ஆளுடைய பிள்ளையார் திருமேனி

ஒருத்தனென மறையுரைக்கு மும்பரார் பெருந்தலைவன்
திருத்தமுறுந் திருவடியைச் சென்னிமிசை வைத்தோங்கிப்
பருத்தவுடற் பெரும்பாரப் பற்றறுப்பார் மனத்தன்றுங்
கருத்தனவன் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

நன்மக்களாவார் தாம் எடுத்த உடலின் சிறுமையையும் பிறந்த குலத்தினூனத்தையும் அநுபவிக்கும் போகத்தின் குறைவையும் ஐம்புல நுகர்விற்குக் காரணராகிய மகளிரிழிவையும் ஆர்ச்சிக்கும் பொருளின் துன்பத்தையும் அரச வாழ்வாயினும் அதன் அற்பத்தையும் சொர்க்க போகத்தின் நொய்மையையும் ஜராமரண ஜன்ம வல்லல்களையும் கருநாள் முதல் கவலையுற்றழியும் அசேஷ துக்கத்தையும் அநித்திய தரிசனத்தையும் உணர்ந்து, விடுபற்றுவது விடுவதும் தொடுவதுமாகிய ஜீவ நிலையெனக் கண்டு தேறுவர். முன்னர் எடுத்துக்கூறிய உடலின் சிறுமை,

"செறியுமயிர் தோலுதிர மிறைச்சி மேதை
திரணரம்பு குடரெலும்பு சீழ்புண் கோழை
முறியுமுதிர் புழுமலநீர் மூளை மச்சை
முழுவழும்பு பீளையிவை முதலா யுள்ள
மறியு முடல்"

என்று சிந்தித்த அளவாலே விளங்கும். இவ் வுடலின் மேற்றோ லொன்றே மேல்வருணம் கீழ்வருணம் மன்மதன் குரூபி என மதிக்கச் செய்வது, இதில் ஈச்சிறகு அளவு கழலுமாயின் பழி தொழிலும் இழிகுலமும் ஆகக் கணிக்கப்படுதல் திண்ணம். இத் தேகம் மாய்ந்து கீழே விழுமாயின் இதன் நாற்றத்தை எவரும் ஒரு கணமும் பொறார். இது மிக்க அருவருப்பைத் தருவ தொரு மாமிச பிண்டம், நாய் நரிகள் நமது என்னத் தக்கது. இங்ஙனமே ஏனைய குடும்பாதிகளின் இழிவும் நோக்கின் புலனு கும். இவ் வநித்திய சரீரத்தின் அழிவைப் போக்கி நித்திய சரீரமாக்கிக் கொள்ளவும், ஜராமரண தோஷங்களைக் களைந்து போடவும், வியாதி தரித்திரங்களை நிவிர்த்திசெய்து கொள்ள வும், பல பெரியோர் பிருதுவி பூதவாதிகளாகவும் அப்பு பூதவா திகளாகவும் அக்கினி பூதவாதிகளாகவும் வாயு பூதவாதிகளாக வும் ஆகாச பூதவாதிகளாகவும் பஞ்ச கோசவாதிகளாகவும் நவக் கிரகவாதிகளாகவும் சூரிய சந்திரவாதிகளாகவும் ஊழ்வாதிகளா கவும் காலவாதிகளாகவும் மந்திரவாதிகளாகவும் அந்திரவாதிக ளாகவும் அவிழ்த வாதிகளாகவும் காய கற்பவாதிகளாகவும் ரசவாதிகளாகவும் நின்று, கணக்கற்ற காலம் அவ்வத் துறைக ளின் உழன்று நெஞ்சு புண்ணாகி, அன்புருவம் பெறுமலும் அதன்பின் அருளுருவம் பெறுமலும் அதன்மேல் இன்புருவம் எய்தாமலும், காயத்தைக் கழுகுக்கு இரையாக்கியே கழிந்து போயினர். அங்ஙனம் அநர்த்தப்படுத்திக் கொள்ளாது உண் மைச் சிவானுபவமுற்றிய பல பெரியார் காலாதீதமாகிய மெய்ப் பொருள் கண்டே கலந்துள்ளார். இவ்வாறு மெய்ப்பொருளை உள்ளவாறு கண்டு உணரும் வண்ணம் உணர்த்தும் மார்க்கமே சன்மார்க்கம். இஃது நான்கு மார்க்கங்களுட் சிறந்தது.

இச் சன்மார்க்க நெறிநின்றார் ஊனசம்பந்தம் அற்று ஞான சம்பந்தராவர், கன்ம சம்பந்தம் அற்றுச் சிவதன்ம சம்பந்த ராவர், மலசம்பந்த மற்று ஞான பல சம்பந்தராவர், மாயேயம் தாயே யாகாது ஞானபோதசம்பந்தராவர். திரோதான சம்பந்த ராகாது பரோதய சம்பந்தராவர், சார்ந்ததன்வண்ணமாக நிற்றற் குரியதாம் சார்ந்த மலத்தின் நிறத்தைக்காட்டாது, ஞான சம் பந்தப்பட்டுச் சிவஞான சம்பந்தராவர். இற்றைவரைத் தாம்

இருப்பது மும்மல சம்பந்தப்பட்டு ஆதலின், அம்மலம் இழி வைத்தரும் என்பது கருதி ஞானசம்பந்த முறப்பார்ப்பர். ஞான சம்பந்த நிலைதான் யாது?

வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்புகா ணாத மூர்த்தி
புருவெனுந் துயரக் கூட்டி லுணர்வின்றி மயங்கு வார்க
டிருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே
மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட் புக்கார்.

பெற்ற பெருநிலையாகிய சிவாநந்திய சாக்ஷாத்கார சொரூபந் தானே. இந்நிலையைப் பெற்றோர் பக்குவரும் எம்முதலிகளாகிய அபக்குவருமே. எம்பெருமானது திருமணத் திருமேனியின் திருக்காட்சியே அபக்குவரையும் உழுந்துருள்போழ்திற் பக்கு வப்படுத்தி மெய்ப்பேற்றை யருளுவதொன்றாம். இவ்வைபவம் பரமேதிகாசத்துள்ளும் (திருஞா, கஉசகூ-ரு௩) மஹாபுராணங்க ளுள்ளும் (பவுடிகம், பிரமாண்டம், காந்தம்) கூறப்படுவன.

இப்பேறு பெற்றோர்க்கு நீங்கியவை மும்மலகாரியங்கள், மூலமலத்தான் ஆகிய மோகமாதிய ஏழு. இருவினையின் இன்பத் துன்பநுகர்வு, மந்திரமுதலிய அத்துவாக்களிற் கட்டுண்டிருத் தல், மாயையால் தனுகரண புவனபோகங்களின் மறைப்புண்டு மயக்கமெய்தி நிற்றல். இம்மலங்களும் புதியன அல்ல.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

இம்மலகாரியங்களைத் தோன்றாதொழித்தற்கு இறைவன் ஞானாசாரிய கோலங்கொள்ளுதல் வேண்டும் என்பது எல்லா உண்மை நூல்களும் துணிந்ததுணிபு. பரமஞானத்தை உணர்த் தற்குப் பரமஞானாசாரியன் தக்கவன். 'புகலிமன்னர், பாயின வொளியானீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி, மாயிரு ஞால முய்ய வழியினை யருளிச் செய்வார்' ஆவர். அப்புகலிமன்னர் திருமேனியே இவ்வுலகத்து நன்மக்களை யீடேற்றுதற் கெழுந்த திருவுருவம். இத்திருவுருவமே இறைவன் ஆணையால் இந்திராதி யர் அரிதின் அமைத்துப் பிரதிஷ்டை செய்வித்த திருமேனி. இஃது பொன்னுருவாயமைந்த தொன்றும், இரத்தின வுருவா யமைந்தததொன்றும் ஆம். இப்பொன்னுருவத் திருமேனி பரார்த்த பூசைக்கென்றும், இரத்தினத் திருமேனி ஆன்மார்த்த பூசைக்கென்றும் அமைந்தவை. இவையே முறையே ஆதி சைவர்களாலும், கிரியா சாரிய பரமபரையின் வரும் சைவ குர வர்களாலும் இற்றைவரை பூஜிக்கப்பெற்று வருகின்றன.

இத்திருமேனிகளைத் தூல நிலையினும் சூக்கும நிலையினும் உபாசிப்பதற்கு அநேக ஆம்நாயங்கள் ஏற்பட்டு அந்தக்கிரமத்திலே பக்குவிகள் அனைவரும் பகிர் முகத்தினும் அந்தர் முகத்தினும் போற்றி உண்மைப் பேற்றை அடைந்து வருகின்றனர். இவற்றை உபாசிக்கும் ஆற்றல் அவ்வவர் பக்குவங்கட் கேற்றவை: தூல உபாசனை செய்வார் வேதோக்தமாகச் சுப்பிரதீப ஆகமப்படி புறத்தும் அகத்துந் தூயராய் நித்திய கர்மானுஷ்டான பரராய்ப் பெருமான் திருவடிக்கண் வைத்த அன்பே உருவாய் அருளே உயிராய் இன்பே உணவாய் கண்டிகையே பூணாய் வெண்ணீறே கலவையாய் வாய் மலரால் மாலை வகுப்பதனோடு தூய் மலரால் மாலை தொடுத்து அம் மலரின் பொருட்டு நந்தனவனப் பணிசெய்து சிந்தை கசிந்துருகிக் கோயில்மெழுகித் திருவிளக்கிட்டுச் சிவ புண்ணியம் இயற்றிச் சிவமே சிவசுதனே சண்பைப் பெருமானே என உள்ளங்களித்துப் பாடிக் கழுமல முதுபதிக் கவுணியனார் மான்மியங்களைச்சாற்றி வேதாகமங்கள் விரித்துச் சிவமே இப்பொருள் எனத்தேர்ந்து சிவபூசை செய்து சிவநேயராய் அஞ்செழுத்தா லர்ச்சித்துப் பொறிகளின் விஷய மெல்லாம் காழிப் புண்ணியர் கழற்பதத்திற் சேர்த்துத் தம் முயிரை நைவேதனமாக்கி அன்னாது ஆடல் அடித்தியானஞ்செய்து நனவிற் சுழுத்தியெய்தித் தம்வய நீக்கித் தாமற்றுத் தாமதுவாய் நின்று மேகத்தைக்கண்ட மஞ்ஞை போலச் சிவ குமாரரது திருமுடி முதல் திருவடிகாறும் கண்டேத்திப் பூத காரியங்களற்றுச் சைதன்ய தியானமாகவே ஆராதனை செய்வர்.

இனிச் சூக்கும வுபாசனை செய்வார் ஈசம் கேனம்.......... அதர்வசிகையாதியாம் பரசுருதிகளினும் காமிகாதி திவ்வியாகமங்களினும் கூறிய வண்ணமே சிவம்பரை ஆகாயம் வியோமம் ககனம் ஆனந்தம் சுவர்க்கஸ் தேவ லோகம் சோம லோகம் பிரம லோகம் அவ்வௌகிகம் தகரம் சத்து இரண்மய கோசம் குகை சிதம்பரம் திருச்சிற்றம்பலம் பிரமலோகம் கார்க்கிலோகம் இத்தியாதி வாச்சியப் பொருள்களின் முக்கியார்த்தத்தை நால்வகை நிஷ்டையினும் தெளிந்து: நிர்க்குணாதீதராகிய காழி முதல்வரை அப்பரம் பொருளாகக் கணித்து, பத்மம் முதலிய அங்காதனமும் உத்பிலாவம் முதலிய அங்கப் பிராணாயாமமும் உபாயம் முதலிய அங்கப்பிரத்தியாகாரமும் ஆதாரம் முதலிய அங்கதாரணமும் சகளம் முதலிய அங்கத்தியானமும் பேதம் முதலிய அங்க சமாதியும் இயமும் நியமும் பிரதிஷ்டையும் வித்தையும் சாந்தியும் சாந்தியாதீதமும் விந்து நிரோசாதம் நாதம் நாதாந்தம் சத்தி வியாபினி சமனை உன்மனை வியோக ரூபி முதல் அசபை ஈருகவும் அவற்றிற்குமேல் மந்திர யோகம்

முதலியனவாகக் கூறப்பட்டுள்ள யோக நெறியிலே நின்று, யோகக் காட்சிகளைத் தரிசித்து, ஞானத்திற் சரியை முதலிய பாதங்களின் நின்று, உண்மை ஞான நிஷ்டாபரராய், பரமானந்த பூரிதராய்த் திருஞான சம்பந்தப் பெருமான் திருவடிக்கண் தாடலைபோற் கலந்து நிற்பர்.

எண்டலைக் குந்தலை வன்கழல் சூடியென் னுள்ளவெள்ளங்
கண்டலைப் பத்தன் கழறந்த வாகதிர் முத்தநத்தம்
விண்டலைப் பத்தியி லோடும் விரவி மிளிர்பவளந்
தண்டலைக் குங்கடற் சண்பையர் காவலன் சம்பந்தனே.

இவ்வாறு உபாசித்து ஞான நிஷ்டரா யுள்ளவர்களே தாமும் மெய்ப்பொருளுணர்ந்து தம்பாற் சார்ந்தார்க்கு அம் மெய்ப் பொருளை வல்லுநர் ஆவர். அவ்வாறு காழி ஞானகரரை உள்ளவாறுணர்ந்து உணர்த்தும் மெய்யருள் பெற்றார் காழிக் கண்ணுடைய வள்ளலார். இது பற்றியே காழித் திருஞான சம்பந்தரது வள்ளல் சந்தானத்தார் இக்கண்ணுடைய வள்ளலார் எனப் பெறுவர்.

(தொடரும்.)

---

# சொற்பொருள் வேறுபாடு

திரு. S. அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் M. A., L. T.

இனி, வடசொற்கள் பொருள் வேறுபடுங்கால் ஆரிய மொழியில் தமக்குள்ள பொருள் விரிதலுமுண்டு. 'சிறப்புப் படை நியமம்' என முன்னர்க் குறிக்கப்பட்டதும் இதுவே.

'அம்ருத' என்னும் ஆரியச்சொல் மரணத்தையொழிக்கும் தேவருணவை முன்னர்க் குறித்துப் பின் அதனைப்போலவே மதிக்கப்படும் உணவு வகைகளையெல்லாம் குறிக்க வந்தது. இவ்வொருசொல்லே தமிழ் மொழியில் அமிர்தம், அமிருதம், அமிழ்தம், அமிழ்து, அமுதம், அமுது முதலிய பல உருவங்களை யடைந்தது. பாலையும் சோற்றையும் குறிக்க இவை சாதாரணமாக வழங்கப்படுகின்றன.

'தண்டிகா' என்னும் ஆரியச்சொல் 'தண்ட' என்பதனோடியைபுடையது, தடியென்னும் பொருளது. தமிழில் 'தண்டிகை' என்னுந் தற்பவத்திற்குப் பல்லக்கு என்பது பொருள்.

இப்பொருள் வருதற்கு முன் அச்சொல் பல்லக்குச் செய்வதில் அவசியம் வேண்டப்படுவதாய மூங்கிற்றடியைக் குறித்திருக்க வேண்டும். இப்பொருள் 'தண்டயம்' என்னும் சொல்லில் இன்னும் காணப்படுகிறது. பல்லக்கைச் சுமந்து செல்லுங்கால் அதனைத் தாங்குவனவாய்ச் சுமப்போர் தோளில் வைப்பனவா யுள்ள பெருமூங்கிற்றடிகளே தண்டயமெனப்படுவன.

'பரிதி' என்னும் ஆரியச்சொல் அம்மொழியில் சூரியனைச் சுற்றிக் காணும் பரிவேஷத்தைக் குறிக்கும். தமிழில் அது சூரியனையே குறிப்பதாயிற்று. பரிவேஷத்தைப் பரிவேடமென்று வழங்குகின்றனர். ஊர்கோள் என்பதும் அது. பழந்தமிழில் 'பருதி' யென்றொருசொல் காணப்படுகின்றது. உதாரணமாக, புறநானூற்றில், 'இருள் கண்கெடுத்த பருதி ஞாலத், திடும்பை கொள் பருவரறீர' என்றும், 'பருதியுருவிற் பல்படைப் புரிசை' என்றும் வரும் அடிகளில் பழைய உரைகாரரால் 'வட்டம்' என்று பொருள் செய்யப்படும் 'பருதி' யென்னுஞ்சொல் 'பரிதி' யென்பதன் தற்பவமென்பதிலையமில்லை.

'பவித்ர' என்னும் ஆரியச்சொல் அம்மொழியில், குசையால் செய்து மோதிர விரலில் அணியும் மோதிரத்தைக் குறிக்கும். தமிழில் அது பவித்திரமெனத் தற்பவமாய் வருங்கால் பொன் முதலியவற்றால் செய்த மோதிரத்தையுங் குறிக்கின்றது.

'யோஜந' என்னும் ஆரியச்சொல் சேர்க்கை, கூட்டமென்னும் பொருளை யுடையது. தமிழில் இச்சொல் யோஜனை, யோசனையென இரண்டு உருவங்களை யடையும். இரண்டும் ஆலோசனை, உபாயம் என்னும் பொருள்களில் வழங்கும். 'எண்' என்று பொருள்படும் 'யோசி' என்னுந் தமிழ்வினை இதினின்றுந் தோன்றியதே. சாமானிய வழக்கில் யோசனைக்கும் ஆலோசனைக்கும் பேதமில்லை. ஆலோசனை சிறிது கவுரவமுடைய வழக்காகக் கருதப்படுகின்றது. ஆலோசனை 'ஆலோசந' என்னும் ஆரியச்சொல்லின் தற்பவம். இனி 'யோஜந' என்னும் ஆரியச்சொல்போலவே யோஜனை என்னுந் தமிழ்த் தற்பவமும் எட்டு ஒன்பது மைல் தூரத்தைக் குறிக்கும். 'ஜ'வுள்ள உருவத்தை இதற்கு வேறாக வைத்துவிட்டு, யோசனையை எண்ணத்தைக் குறிக்க உபயோகிக்க வேண்டுமென்பது சிலர் கொள்கை. 'ச' வுள்ளசொல் ஆரிய மன்று; அது தமிழ்த் தற்பவமே. சொல் நடுவில் வரும் 'ச' பெரும்பான்மை 'ஜ' என்றே உச்சரிக்கப்படுமென்பது தமிழொலி யாராய்ச்சி செய்தார் அறிந்தது.

---

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்

## ௩௰ - ௩௧-ம் ஆண்டு விழா

தலைவர் :

[பல்லாவரம், உயர்திரு. மறைமலையடிகள்]

தஞ்சையைச் சார்ந்த கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின், ௩௰, ௩௧-வது ஆண்டு விழா, ஆடித் திங்கள், அ, ௯-ஆம் நாட்களில் உயர்திரு. வேதாசல சுவாமிகள் தலைமையில் இனிது நடைபெற்றது. சுமார் ௧000 – மக்கள் வரை கூடியிருந்தனர். தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் அறிஞரும் ஆராய்ச்சியாளரும் அன்பரும் திரளாகப் போந்திருந்தனர். தனவணிகர் நாட்டிலிருந்து சுமார் நாற்பது நல்லன்பர் வந்திருந்தனர்.

அவர்களில் முக்கியமானவர்கள், திருவாளர்களான ஈ. வெ. ராமசாமி நாயக்கர், சொ. முருகப்ப செட்டியார், அரு. சோமசுந்தரச் செட்டியார், கருமுத்து. சிவலிங்கச் செட்டியார், ந. ச. கிருஷ்ணன், ராவ்பகதூர் சு. அ. சு. ராமநாதன் செட்டியார், பிச்சப்பா. சுப்பிரமணியன், ராய. சொக்கலிங்கன், மு. காசி விசுவநாதன் செட்டியார், ஆ. சொக்கலிங்கச்செட்டியார், நா. வ. மெ. நாகப்ப செட்டியார், அ. ராம. சேதுச் செட்டியார், ராம. ப. மெ. காசிச் செட்டியார், வெ. சித. சுப்பிரமணியன் செட்டியார், சித. வெ. லெ. லெட்சுமணன் செட்டியார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், சொ. பழனியப்ப செட்டியார், நா. சோமசுந்தரச் செட்டியார், பி. மு. பி. சுப்பிரமணியன் செட்டியார், வ. பழ. சா. சாமிநாதன் செட்டியார், சிதம்பரஞ் செட்டியார், பழ. அ. மெய்யப்ப செட்டியார் ஆகியவர்கள் ஆவர்.

வரவேற்பு, அறிக்கை வாசித்த பின்னர் தலைவரவர்கள் தேனை வடித்துச் சொரிந்ததுபோல் இனித்த தனித்தமிழ் நடையில் குயில் ஓசை யெனவே மெல்லிய திங்குரலில், 'பண்டைத் தமிழர் நாகரிகம்' எனும் பொருள்பற்றித் தொல்காப்பிய ஆராய்ச்சியைத் துணையாக்கொண்டு ஒரு பெருஞ் சொற்பொழிவியற்றினர்.

பின்னர் சி. எஸ். இராசுப்பிள்ளை யவர்கள் 'தொண்டர் பெருமை' எனும் பொருள்பற்றிப் பேசினார்கள். பின்னர் பண்டிதர் ந. மு. வேங்கடசாமிநாட்டாரவர்கள் 'பழைய உரையாளர்'

எனுந் தலைப்பெயரின்கீழ் ஒரு ஆராய்ச்சியுரையினை நிகழ்த்தினார்கள்.

நச்சினார்க்கினியர், பரிமேலழகர், பேராசிரியர் ஆகியவர்கள் உரைச்சிறப்பையும் ஒரோ விடங்களில் வரும் இழுக்குகளையும் எடுத்துரைத்து, உரையாசிரியரைப் பாராட்ட வேண்டிய இடத்தில் பாராட்டி, மறுக்கவேண்டிய இடத்தில் துணிவாக மறுக்கவேண்டுமென்றும், அதுவே அறிவு ஆராய்ச்சி விளக்கத்திற் கேற்றதென்றும் விரித்துரைத்தார்கள். முடிவாக மூதறிஞர் எழுதியன என்று அஞ்சி எதனையும் ஆராயாது இருத்தல் தகாதென்றும், அவ்வறிஞரை மதித்துத் தவற்றைத் திருத்துதல் தமிழறிஞர் கடனென்றும், அறிவு வளர்ச்சிக்கு ஆராய்ச்சி இன்றியமையாததென்றும், தமிழ் நலன் நாடுவோர் ஆராய்ச்சியை நாடுதல் வேண்டுமென்றும் மிக அழகாகப் பேசினார்கள். பின்னர், சங்கக்கலாசாலை மாணவர் சிலப்பதிகாரத்தின் ஒரு பகுதியை மிகச் செவ்வையாக நாடகமாகச் செவ்விய தீந்தமிழ் நடையில் தக்க உணர்ச்சியுடனும் நடிப்புத் திறனுடனும் பல வகைச் சுவையுடனும் நிகழ்த்தினர்.

பின்னர் தலைவரவர்கள் முடிப்புரை கூறினார்கள். தமிழ் ஆராய்ச்சியின் அவசியத்தையும், புலவர், உரையாளர் ஆகியவரைப் பாராட்டுமிடத்துப் பாராட்டல், மறுக்கவேண்டிய இடத்து மறுத்தல் பற்றியும் இனிது எடுத்து உரைத்தார்கள். சிலப்பதிகாரச் சிறப்புப் பற்றியும் கண்ணகி காதல் மாண்பு குறித்தும், கோவலனது காமநிலை குறித்தும் நன்கு எடுத்து உரைத்தார்கள். சபை ௯-மணிக்கு நன்கு நிறைவெய்தியது.

அடுத்தநாட் காலை ௯-மணிக்குக் கூட்டம் கூடியது. டி. எஸ். பாலசுந்தரம் பிள்ளையவர்கள் "இளங்கோவடிகளும் அடியார்க்கு நல்லாரும்" எனும் பொருள்பற்றிப் பேசினார்கள். பின்னர் "திருவள்ளுவரும் சேக்கிழாரும்" எனும் பொருள்பற்றி மேலைச்சிவபுரி, அமிர்தலிங்கம் பிள்ளையவர்கள் அருமையாகப் பேசினார்கள். தலைவரவர்கள், முடிப்புரையில் சிலப்பதிகாரச் செய்யுளின்பம் பற்றியும், அப்பெருங் காப்பியத்தின் ஒழுங்கு குறித்தும், காதல் நலன் குறித்தும் சபையோரனைவரும் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கும்படி தண்டமிழ்ப்பெருங் கொண்டலெனவும் அறிவுக்கடன் மடைதிறந்த இன்ப வெள்ளமெனவும் இன்சொற்பொழி வியற்றினர்.

மாலை மூன்றரை மணிக்கு மறுபடியும் சபை கூடியது. மாணவர்க்குப் பரிசுகள் அளிக்கப்பெற்றன.

பின்னர், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் பி. ஏ., எல். டி. 'தமிழர் சமய வாழ்க்கை' யெனுந் தலைப்பின்கீழ் ஒரு சொற்பொழிவியற்றினார்கள். உண்மைச் சமய வாழ்க்கையின் நிலை குறித்தும், தமிழர் வழிபாட்டின் வரலாறு குறித்தும், சமய சீர்திருத்தத்தைப் பற்றியும் விரிவாக உரைத்தார்கள். பொய்த் தலபுராணங்களின் சீர்கேட்டை இனிது எடுத்துக்காட்டினார்கள்.

பின்னர், பண்டிதமணி, திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் "திருவள்ளுவரும் பரிமேலழகரும்" எனும் பொருள் பற்றி அரியதொரு விரிவுரை நிகழ்த்தினார்கள். திருக்குறளின் சிறப்பியல்புகளைத் தெள்ளிதின் எடுத்துக் காட்டினார்கள். அப் பெருஞ் சொற்பொழிவின் சாரம் வருமாறு:—திருக்குறள், நூல் அமைப்பாலும் உரைச்சிறப்பாலும் மிகவும் உயர்வுடன் விளங்குகின்றது. காவியம், சரித்திரம், நீதிநூல் எனும் நூற்பகுதிகளில் நீதி நூலியற்றல் அருமையாகும். பழைய நூல்கள் சிறப்பியல்புடன் பொலிகின்றன. தற்கால ஸ்தல புராணக் குப்பைகள் ஒரு வகை அமைப்புமின்றித் தமிழ் நலனுமின்றி, ஒழுக்க நெறிக்கு மாறுபாடு செய்யும் வகையில் வழுப்பட மாறுபட்ட முறையில் தெளிவின்றி எழுதப்பட்டிருக்கின்றன. வழுமிகுதியுமுள்ள நூல்களைக் கேட்டகாலத்துச் சீத்தலைச் சாத்தனார் பெரு வருத்தமுற்றுத் தலையில் எழுத்தாணி கொண்டு குத்திக் கொள்வாராம். தலையில் சீழ்வடியுமாம். அதனால் அவருக்கு அப்பெயர் வாய்த்தது. அவர் குறளைக் கேட்டுத் தலைக்குத்துத் தீர்ந்து, பொய்யாமொழியைப் பெரிதும் போற்றிப் பாடுவாராயினர். காமந்தகன், கௌடல்யர் ஆகியவரின் சமஸ்கிருத அர்த்த சாஸ்திரங்களினும் குறள் மிகச் சிறப்புடையதாக விளங்குகின்றது. அவை விஷயங்களை மிகைபடக் கூறுகின்றன. ஆனால் குறள் வரையறை செய்து எழுதப்பட்டிருக்கின்றது. நூலின் ஒழுங்கு பெரிதும் பாராட்டற்பாலது. ஆசிரியர், ஒவ்வொரு குணத்தையும் அழகாக வருணிக்கின்றார். இலக்ஷணங்களை இனிது எடுத்துக் காட்டுகின்றார். பயனை விளக்குகின்றார். எதிர் மறையாகத் தீங்கினை எடுத்துரைக்கின்றார். உவமவணி, தன்மை நவிற்சியணி இரண்டினையும் திறம்படப் பல இடங்களில் விளக்குகின்றார். அகப்பொருட் சுவையில் திருக்குறள் மிகவும் மேம்பட்டு விளங்குகின்றது.

இனித் திருக்குறளில் ஓர் முக்கியமான பொருளை ஆராய்வோம். அது குறளில் ஆரியர் ஆசாரம், வேதவழக்கு ஆகியவை உண்டா இல்லையா என்பதே. தமிழில் வடசொற்கள் தொல்காப்பியர் காலத்திலேயே கலந்துவிட்டன. அப்பொழுதே வடசொற் கலப்பிற்கு இலக்கணமுஞ் செய்யப்பட்டிருக்கிறது. பழைய

நூலான கலித்தொகையில் "சடை" என்ற வடசொல் வழங்கப் பட்டிருக்கிறது. ஆரியர் ஆசாரங்களையும் வேதவழக்கினையும் சில நூல்கள் நீண்ட நாளாக ஏற்றே வந்திருக்கின்றன. பிற் காலத்து நூலாகிய திருக்குறளில் வள்ளுவனார் தமிழர்க்கு ஒத்த ஆரியக் கொள்கைகளை எடுத்து ஆண்டிருக்கின்றார். திருக்குறள் ஆரிய வழக்கொடு உடன்பட்ட நூலே. தனித் தமிழர் கொள்கை களைக் குறிப்பது மட்டுமன்றி, ஆரிய வழக்குகளையும் எடுத் தாளப் பின் வாங்கவில்லை. உதாரணமாகப் பல குறள்களை எடுத் துக் காட்டலாம். "அவிசொரிந்தாயிரம் வேட்டல்" எனுங் குற ளில் அவ்வாரிய வழக்கின் பெருமையினை நினைவு கூர்கின்றார். "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன் மறப்பர்" எனுங் குற ளில் ஆரியர் பெருமை கூறப்பட்டிருக்கின்றது. "மறப்பினும் வேதங் கோளலாகும்" எனுங் குறளில் பார்ப்பனர் நிலை குறிக் கப்படுகிறது. "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்" எனுங் குறளில் ஆரியரது இறுதிக்கடன் குறிக்கப்படுகிறது. வாழ்நாளின் பின் மறு பிறப்பு உண்டென்பதையும், இறந்தார்க்குச் செய் கடன் குறித்தும் இக்குறள் எடுத்துரைக்கின்றது. வள்ளுவனார் ஆரியரையும், அன்னோர் கொள்கைகளையும், வேத வழக்குகளை யும் பல இடங்களில் சிறப்பித்துப் பாராட்டிக் கூறுகின்றார். உரையாசிரியராகிய பரிமேலழகர் ஆசிரியரைத் தழுவி, விரிவாக வடமொழிச் சான்றுகளை எடுத்தாளுகின்றார். அவருரை மிகச் சிறந்து விளங்குகின்றது. பின்னர் சொற்பொழிவாளர் சிறிது நேரம் ஆராய்ச்சி முறை, குறளின் பெருமை ஆகியவை குறித் துரையாடிவிட்டு அமர்ந்தார்கள். பின்னர் சிலப்பதிகார நாட கத்தின் பிற்பகுதி செவ்வனே நடைபெற்றது.

இரவு எட்டுமணிக்குத் தலைவர் அவர்கள் முடிவுரை கூறி னார்கள். முதலில் சங்கத்தார்க்கு நன்றி யுரைத்தார்கள். 'திரு வள்ளுவரும் சேக்கிழாரும்' எனும் பொருள்பற்றித் தக்கவாறு முடிவுரை வழங்கினார்கள். அதில் ஒரு சிறு பகுதி வருமாறு:— ஆக்கள் என்பது சிலருக்கு விளங்காது. பசு வென்றால் விளங் கும். ஆ என்பது தனித்தமிழ்ச் சொல். தண்ணீர் என்றுரை யாது நம்மக்களிற் பலர் ஜலம் என்கின்றனர். ஐயகோ! மலை யாளிகள்கூட வெள்ளம் எனும் தனித்தமிழை வழங்குகின்ற னர். (இடையில், *கதி அவர்கள், "ஜலம் பூவொடு தூப மறந் தறியேன்" என்று அப்பர் கூடக் கூறியிருக்கின்றார்.) ஆ! ஆ! என் செய்வது? தனித்தமிழை இழிவென்று நினைப்பது முறை யாகுமோ? தமிழினாலே கடவுளை வணங்கக் கூடாது என்று

* 'கதி' என்ற இடங்களிலெல்லாம் மகிபாலன்பட்டி பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் ஆவர்.

கூறும் பார்ப்பனரும் உளர். பெரியார் தமிழைப் பழித்துப் பாழ் செய்தால் அது குற்றமில்லையோ. இப்படிப் புலவர் பலர் தனித் தமிழுணர்ச்சி தகுதி யற்றதென்று மொழிந்து தமிழைப் பாழாக்கினல் ஐயகோ! (ஆவேச உணர்ச்சியுடன்) என் செய்வது! (பழம் புலவர்களால் தமிழ் பாழாகவா போய்விட்டது என்று கதி. கேட்டனர்.) இடைக்காலத்துப் புலவர் பலர் பழைய தனித்தமிழுணர்வை மறந்து வடசொற்களை மிகுதியும் புகுத்தித் தமிழைக் கெடுத்துத்தான் விட்டனர். அவர்களை நாம் ஏன் பின்பற்றவேண்டும்? வடசொற்களைக் கலத்தல் குற்றமில்லையாயின், ஆங்கிலத்தையும் தாராளமாக வழங்கலாமே. பிறமொழிகளைத் தாராளமாக வழங்கித் தனித்தமிழ் உணர்ச்சியைக் கெடுத்தால் நற்றமிழ் எவ்வாறு உயிர்வாழும்! அந்தோ! குமர குருபரர் 'சலாம்' எனுஞ் சொல்லை வழங்கினர் என்று நாமும் பல கொடுந் துலுக்குச் சொற்களை வழங்கித் தமிழைப் பாழ் படுத்தலாமா? (கைகொட்டுதல்.) யானை வழுக்கி விழுந்தால் அஃது அதற்குப் பெருமையாக முடியலாம். நாங்களோ சிறியோம். எங்களுக்கு இடர் மிகுதியும் உண்டு.

பின்னர் தமிழர் சமய வாழ்க்கை எனும் பொருள் குறித்துப் பல அரிய உரைகளை வழங்கினர்கள். சமய உணர்வு, சீர்திருத்தம், தமிழர் நாகரிகம், வாணிபம் ஆகியவைபற்றி விரிவாகப் பேசினர்கள். நூறுண்டு வாழ்வு, காப்பி தேநீர் மது வகைகளை நீக்குதல், புலால் மறுத்தல் ஆகியவை குறித்துப் பேசினர்கள். பின்னர் மு. கதி, வின் சொற்பொழிவாகிய 'வள்ளுவரும் பரிமேலழகரும்' எனும் விரிவுரைக்கு அபிப்பிராயம் வழங்கினர்கள். சபையினர் ஆவலோடு கேட்டனர்.

தலைவர் கூறிய ஆராய்ச்சி விளக்கமும், ஆவேசவுரையும் வருமாறு:—

நமது செட்டியார் அவர்கள் திருக்குறளின் சிறப்புக் குறித்துப் பல நுணுக்கமான பொருள்களைச் செவ்விய முறையில் எடுத்துக் காட்டினர்கள். சித்தலைச் சாத்தனர் கதையை நினைவூட்டினர்கள். அவர்கள் கூறிய பொருள் பிடித்த முடையதன்று. சித்தலை என்பது ஓர் ஊரின்பெயர். பண்டைப்புலவர் பலர் தமது பிறப்பிடத்தின் பெயரைச் சூட்டிக்கொண்டனர். மாங்குடி மருதனர், ஆவூர் மூலங்கிழார் ஆகிய பெயர்கள் சான்றும். சிழ், தலை என்பது சித்தலை என்று வராது. சீத்தலைச் சாத்தனர் தலைக்குத்துத் தீர்ந்ததென்பதற்குப் பயனில்மொழி கேட்டதனுலுண்டாய மண்டைக்குத்துத் தீர்ந்ததென்பதே பொருள். அறிவொளியி னின்றெழும் மின்னுற்றல் (Electric Pow-

ன) தலைநோவைத் தீர்க்கும்; நல்லறிவுரையே மருந்து. திருக்குறள் அவ்வாறு அவருக்குத் தணிவு செய்தது. இதுவே எனக்குப் பொருத்தமாகத் தோன்றுகிறது. திருக்குறட் சிறப்புப்பற்றி அரிய உரைகளை வழங்கி, ஆவேசத்துடன் வள்ளுவனுரைப் போற்றவேண்டுமென்று கூறியது வருமாறு:—

அன்பர்களே! உருவங்களை நாட்டுகிறீர்கள்! கோயில் கட்டுகிறீர்கள்! விழா எடுக்கிறீர்கள்! சத்திரம் சாவடிகள் அமைக்கிறீர்கள். பணத்தைவாரி யிறைக்கிறீர்கள்! பலவிண் செலவு செய்கிறீர்கள். கடவுள் இயல்பும் அன்பும் நீங்கள் அறியாமையினல், இந்நாளில் கோயிலிலே கடவுளைக் காண்கின்றீர்களா? இல்லையே! குறளில் கடவுளைக் காணலாம். (கரகோஷம்) ஆங்கிலப் புலவராகிய ஷேக்ஸ்பியரை ஐந்து கண்டங்களிலும் போற்றுகின்றார்கள். அதில் ஆயிரத்தில் ஒரு கூறு வள்ளுவனுர்க்குண்டோ? வள்ளுவரை மறந்திருக்கிறீர்கள்! தெள்ளுதமிழ்ப் பெரும்புலவரை மறக்கலாமா? உங்கள் வருங்கால நிலைகுறித்து என் நெஞ்சம் நடுங்குகிறது! தமிழ்த்தாயையும், புலவர்களையும் மறந்து உயிர்வாழ்தல் யாங்ஙனம்? வள்ளுவரைப் போற்றுங்கள்! அவர் பெயரால் நினைவுக்குறிகள் நாட்டுங்கள்! கல்லூரிகளையமையுங்கள்! குறளைப் படியுங்கள்! புலவர்களைப் போற்றுங்கள்!

ஆரியர் தமிழர் சச்சரவு இன்னும் நம்மை விட்டகன்றபாடில்லை. இப்பொழுதுள்ள ஆரியரெனும் பார்ப்பனரில் பலர் தமிழரே யாவர். வடக்கே யிருந்து வந்தவர் ஒரு சிலரே. பழைய ஆரியரது நாகரிகம் மேம்பாடுடைய தன்று. இருக்கு வேதத்தில் ஆரியரைப் பற்றிய குறிப்புகள் பல உண்டு. அவர்கள் ஆ! எருமை, குதிரை முதலானவற்றைக் கொன்று தின்றனர். கட் குடித்தனர். விருந்துகளில் ஆன் கன்றறுத்துக் கறிசமைத்தனர் என்று சதபதப் பிராமணம் சொல்கிறது. தைத்ரீய சங்கிதையில் மாட்டுக்கறி யுணவு கூறப்பட்டிருக்கிறது. ஆவைக் கொன்றோர் இழிந்தாரல்லரோ? கொல்லா அறத்தில் நின்ற நம் முன்னோராகிய தமிழ் நன்மக்கள் அவர்களோடு எளிதிற் கலந்திருக்கமாட்டார்கள். அவர்கள் சீர்திருந்தி நல்ல நிலையை அடைந்த பின்னரே கலந்திருக்கக்கூடும். இருக்கு வேதத்தில் ஆரியருக்கு வெள்ளை நிறமும் நீலக்கண்ணும் சொல்லப்பட்டிருக்கின்றன. தமிழருக்குச் சிவப்பு நிறமும் கருங்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளன. நாகரிகமில்லா அவ்வாரியர் இப்பொழுது இலர்; எனவே யாரும் வருத்தப்பட வேண்டுவதில்லை. ஆரியர் வாழ்வும் தமிழர் வாழ்வும் இருக்குவேதத்தில் இருந்து அறியலாகின்றன. விஸ்வாமித்திரர் பாடிய பதிகங்கள் தமிழர்க்குரியவை. வசிட்டர் பாடியன ஆரியர்க் குரியவை. இதனை எமது 'மாணிக்கவாசகர் வர

லாற்' றில் விரிவாய்க்காண்க! தமிழர் இருக்குவேதத்தில் முக்காலவாசிப் பதிகம் பாடியிருக்கின்றனர். தமிழர், உபநிடதம், பிராமணம், புராணம் முதலியவற்றில் பலவற்றை எழுதினர். ஆங்கிலத்திலும் நான் நூல்கள் எழுதி வருகிறேன். அதனால் யான் ஆங்கிலன் ஆவேனோ? அதனால் ஆரியத்தில் நூல்களியற்றிய தமிழரும் ஆரியர் ஆகார். ஆங்கிலர் எழுதும் இந்திய சரிதங்களில் தமிழரது நாகரிகம் அங்காங்கு எழுதப்படுகின்றது. ராப்சன் கேம்ப்ரிட்ஜ் சரித்திரத்தில் தமிழரின் நாகரிக நிலையினையும், அதனை ஆரியர் சீர்திருத்தினமையுங் குறித்திருக்கின்றார். ஆரியரைப்போல் தமிழரும் ஆரிய மொழிவழக்கை ஒரோவிடங்களில் எடுத்தாண்டிருக்கின்றனர். சடை எனுஞ்சொல் தமிழேயாம். தமிழிலிருந்தே வடமொழி பெற்றது. உஉ00 - ஆண்டுகளுக்கு முன்னரேயே பரிபாடலில் சடையன் எனுஞ்சொல் வந்துளது. இருக்குவேதத்தில் ஜடை எனுஞ்சொல் இல்லை. தொல்காப்பியம் முற்றிலும் பத்து வடசொற்களே உள்ளன. உ000-சொல்லுக்கு ஒரு வடசொல்லே உண்டு. மணிப்பிரவாள நடை பிற்காலத்ததே. (இடையிடையே கதி. அவர்கள் சில விஷயங்கள் சொல்லிக்கொண்டிருந்தது. நல்வருக்குப் பெருணர்ச்சியையும் ஆர்வத்தையும் உண்டாக்கிவிட்டது.) இப்பொழுது தமிழுக்குப் பரிந்து பேசுவோர் பலரிலர். தமிழராய்ப் பிறந்த பாவிகளே தமிழைப் பாழ்படுத்தி விட்டார்கள்! பாழ் படுத்துகிறார்கள். (பழம் புலவர்களால் தமிழ் பாழாகவா போய்விட்டது-கதி.) அவர்களினும் சிலர் பாழ்செய்தற்கு இடங்காட்டி விட்டார்கள். (தொல்காப்பியர்? கதி.) அம்முறையில் அவரும் ஓர் இழையளவு வழிவிட்டே விட்டார். அஃது ஒண்டவந்த பிடாரிக்கு ஊர்ப் பிடாரி இடங்கொடுத்த கதையாகவே முடிந்தது. அன்பர்களே! நாம் தமிழை உயிரோடு வைக்கப் பாடுபடவேண்டும். ஐயோ! தமிழைக் கொல்ல மடிகட்டி நிற்கலாமா? நூற்றுக்கு எண்பது வடசொல்லும் இருபது தமிழ்ச் சொல்லுமாக எழுதினால், பேசினால் தமிழ் எப்படி பிழைக்கக்கூடும்? வடமொழி பயிலவேண்டாமென்று நான் கூறவில்லை. மகிழ்வுடன் பயிலுங்கள். நானும் பயிலுகின்றேன். ஆனால் அன்பர்களே! தமிழ்த்தாயைக் கொல்லாதீர்கள்! தமிழ் நன்மங்கையின் அழகிய மேனியில் அம்மைத் தழும்புபோல் வடசொற்களைப் புகுத்தாதீர்கள்! அடியனேன் உங்களைப் பெரிதும் கெஞ்சுகின்றேன், ஆண்டவர்களே! தமிழைக் கெடாதீர்கள்! தனித் தமிழுக்குப் பாடுபடுங்கள். (கரகோஷம்) பண்டைப் புலவராயினும், இக்காலத்தவராயினும், மற்று எவராயினும் தமிழுக்குக் கேடு விளைத்தோரை விளைப்போரை நான் ஒருபொருளாகக் கருதமாட்டேன். பழம்பெரும் புலவர் ஒருவர் ஒரு வடசொல் வழங்கியிருந்தால் பிற்காலத்தவர்

நூறு சொற்களை வழங்குகின்றார். நாம் லக்ஷம் சொற்களை வழங்குகின்றோம். பெரிய கடன்காரராகின்றோம். (பெருஞ் சிரிப்பு) சங்கத் தமிழ் வழக்கை இடைக்காலத்தவர் பின்பற்றி யிருந்தால் அவர்களுக்குப் புகழுண்டு. இடையில் வந்து தமிழைக் கெடுத்தவர்களை நான் ஒருநாளும் பொருட்படுத்தேன்! தமிழிற் பிறமொழிக் கலப்பை வெறுத்துத் தள்ளுங்கள். தமிழின் சுவையை மாற்றாதீர்கள். வல்லோசைகளைப் பெருக்காதீர்கள். தமிழர் ஆரியத்திற் கடிமைப்பட்டு அச்சொற்களைக் கலத்தல் தீங்கே! இவ்வடிமைத்தனத்தி னின்றும் முதலில் விடுபடுங்கள். இது முதலில் பெறவேண்டிய சுயராஜ்யம். (நீண்ட கரகோஷம்) தமிழ் பெயரளவிலே விளங்குகிறது. எங்கும் ஆரியமொழி கூத்தாடுகிறது. உண்மைத் தமிழராயின் உங்களுக்கு உறுதிப்பாடுவேண்டும். தமிழைத் தமிழாகவே வழங்கவேண்டும். தாய்க்குத் தகுந்த பிள்ளைகள் தோன்றல்வேண்டும். தமிழில் அயற் சொற்களைக் கலக்க விரும்புவோரை எவ்வளவு கற்றவராயினும் (பேராவேசத்துடன் மேஜையில் ஒரு குத்துக் குத்தினர்) அவரை யான் மதியேன்! மதியேன்! அரைமணிநேரம் இவ்வாறு பேருணர்ச்சியுடன் பேசினார்கள். ஆரிய வழக்குகளை எடுத்துக் காட்டும்பொழுது சமஸ்கிருத சுலோகங்கள் பலவற்றையும், ஆங்கில மேற்கோள்களையும், பிறமொழிகளிலுள்ள சொற்கள் பலவற்றையும் எடுத்துக்காட்டிப் பன்மொழிப் புலவராகிய சுவாமிகள் இருமொழிப் புலவரது சொற்பொழிவில் எழுந்த ஐயப்பாடுகளுக்குப் பதிலிறுத்தார்கள். விரிவாகப் பதிலிறுப்பதற்கும் வேறு பொருள்களை உரைப்பதற்கும் நேரம் கிடைத்திலது. ஆவேசந் தணிந்தபின் சுவாமிகள், தனித்தமிழுணர்ச்சி பரவவேண்டுமென்றும், பழநூல்களில் ஒன்றிரண்டு சொற்களிருந்தால் கடன் வாங்கியதென முடிவு கட்டிவிடக் கூடாதென்றும், அது பெருந்தவறென்றும் வற்புறுத்தினார்கள். (கதி. அவர்களும் தனித்தமிழுணர்ச்சி கூடாதென்று தாம் கூறவில்லை என்றுரைத்தார்கள்) சுவாமிகள் இந்நாட்டுப் பார்ப்பனர் தம்மை ஆரியர் எனத் தப்பாக எண்ணி இடர்ப்படாது தமிழைப் போற்றும்படி வேண்டினார்கள். தமிழ்த் தொண்டுபுரிவார் யாவராயினும் அவருக்குப் பெரிதும் நன்றி செலுத்துவதாகப் பேருணர்ச்சியுடன் கூறிப் பெருமகிழ்வுடன் சபையை இனிது நிறைவேறச் செய்தார்கள். திரு. ஆர். வேங்கடாசலம் பிள்ளையவர்கள் யாவருக்கும் வந்தனங் கூறினார்கள். அவர்கள் அடிகள் தனித்தமிழ் உணர்ச்சியைப் பரப்பியது குறித்துச் சிறப்பித்துத் தமிழ் மக்கள் உள்ளவரையில் தனித்தமிழைப் போற்றுவார்களென எல்லையில் உவகையுடன் நன்றி தெரிவித்தார்கள். (சபையில் பேராரவாரம். அடிகள் அப்பொழுது அவ்வொரு மொழிக்

குப் பெரு நன்றி என்று கூறி இன்பக் கண்ணீர் உகுத்தார்கள்.) கூட்டத்தில் தமிழுணர்ச்சி வலுத்துவிட்டது. அடிகளின் அளவிலாத் தமிழ்க்காதலை நினைந்து நினைந்து உருகினர். தமிழ்த் தாய் வாழ்க! மறைமலையடிகள் வாழ்க! கரந்தைத் தமிழ்ச்சங்கம் வாழ்க எனும் பெருவாழ்த்துடன் சபை நிறைவெய்தியது.

தனித்தமிழ்த் தொண்டன்,
திருநெல்வேலி.

---

# தாரை

[திரு R. P. சேதுப்பிள்ளையவர்கள் பி. ஏ., பி. எல்.]

"பார்குலா முழு வெண்திங்கள் பகல் வந்த படிவம் போலும்
ஏர்குலா முகத்தினள் ... ... ... ... (கம்பர்)

தாரை என்னும் பெண்மணி வானர நாட்டுத் தலைவனான வாலியின் மனைவியாக விளங்கினள். அவ்வீரனது அளப்பரும் பெருமைக் கேற்ற அறிவும் நிறையும் அம் மங்கையிடம் மாண்புற அமைந்திருந்தன. தலைவன் உயிரும் தாரை உடலுமாக இருவரும் இனிது வாழ்ந்து இல்லறமாகிய நல்லறத்தை இசை பெற நடத்தினார்கள். இவ்வாறு இருவரும் மலரும் மணமும் போலவும் மணியும் ஒளியும் போலவும் வாழ்ந்து வருகையில் வாலி இராமனது அம்பால் இறந்து வீடுபெற்றான். தலைவனை இழந்த தாரை கற்பு நெறி வழுவாமல் கைம்மைக்கோலம் பூண்டு அறநெறியில் தலை நின்றாள். மங்கல அணியையும் மற்றைய அணிகளையும் களைந்தாள். வண்ணமும் சுண்ணமும் துறந்தாள். மணங்கமழும் மலர்களை மறந்தாள். மார்பையும் கழுத்தையும் ஆடையால் மறையப் போர்த்தாள். இவ்வாறு புனையா ஓவியம் போல் அப்பாவை விளங்கினள். கண்டோர் வணங்கும் கைம்மைக்கோலம பூண்டிருந்த தாரையை அரசனாய அருக்கன் மைந்தன் தன் தாயாகக் கருதி வணங்கி அம்மாதின் சொல்வழி நின்று அரசு செய்தான்.

*தாரையின் கைம்மைக் கோலம்*

ஆயினும் சுக்கிரீவன் செல்வச் சிறப்பால் செம்மாந்து மதுவுண்டு மயங்கி இன்பத் துறையில் எளியனாய் அமைந்தான். கார்காலம் முடிந்தவுடன் திருமகளைத் தேடித் தருவதாக இராமனிடம் வாக்களித்த மாற்றத்தை அறவே மறந்தான். குறித்த காலவரை கடந்தும வானர மன்னனும் சேனையும் வாராதது

கண்டு வருந்திய இராமன் அம் மன்னனது மனப்பான்மை அறியுமாறு இலக்குவனை அனுப்பினான். இளையவீரன் சீற்றங்கொண்டு சுக்கிரீவனது அரண்மனையை நோக்கிச் சென்றான். அவனது வேகத்தையுங் கோபத்தையுங்கண்ட வானரங்கள் மலைகளை அடுக்கி மாளிகை வாயிலை அடைத்தன. இதைக்கண்ட இலக்குவன் அளவிறந்த சீற்றத்தோடு அம்மலைகளைத் தன்காலால் உதைத்தான். மாளிகை வாயிலை மறைத்து நின்ற மலைகள் சின்ன பின்னமாய்ச் சிதறி வாயில் திறந்தது. வீரன் விரைவாக உள்ளே சென்றான். வானரங்கள் எல்லாம் அஞ்சி நடுங்கிப் பல திசைகளிலும் பரந்து ஓடின. இதைக் கண்ட அறிவிற் சிறந்த அனுமன் இலக்குவனது வெம்மையை எவ்வாறு மாற்றலாமென்று எண்ணிப் பார்த்துத் தாரையே அதற்குத் தகுதி வாய்ந்தவள் என்று துணிந்தான். உடனே அம்மாதினிடம் சென்று அடிபணிந்து அம்மையே அரசன் மதுவுண்ட மயக்கத்தால் அயர்ந்து கிடக்கின்றான். இளையவீரன் சீறிய முகத்தோடு இங்கே வந்துள்ளான். அரண்மனையைக் காவல் செய்த வானரங்கள் எல்லாம் வாயு வேகமாக ஓடி ஒளித்துக் கொண்டன. அவ்வீரனது வெம்மையை நீரே வினய மொழிகளால் மாற்றவேண்டுமென்று அன்போடு மொழிந்தான். தாரையும் அவ்வாறே செய்ய இசைந்து தன் தோழியரை அழைத்துக்கொண்டு இளையவன் வரும் வழியை நோக்கிச் சென்றாள். மதிபோன்ற முகமும் மயில்போன்ற சாயலும் அமைந்த மெல்லியல் நல்லாரைக் கண்டபோது இலக்குவன் சிறிது சீற்றம்மாறித் திகைத்து மாமியர் இடையே வந்த மருகன்போல நாணத்தால் தலை கவிழ்ந்து நின்றான். அப்போது தெய்வக் கற்பு வாய்ந்த தாரை பெண்மையால் மெய் நடுங்க வீரனை நோக்கி, "ஐயனே, தேவரும் அறிய ஒண்ணுத் திருவடிகள் வருந்த இங்கு நீர் வருதற்கு என்ன தவம் செய்தோமோ? உமது வருகையால் எமது இருவினையும் தீர்ந்து இன்ப வாழ்வு எய்தினோம். அஞ்சன வண்ணனது இணைபிரியா இயல்பு வாய்ந்த நீர் இப்போது அவரைப் பிரிந்து தனியாக வந்த தன்மை என்னை" என்று இசையினும் இனிய மொழிகளால் வினவினாள்.

*தாரை இலக்குவனது வெம்மையை மாற்றல்*

அவ்வுரையை அமையக் கேட்ட இளையவன் உள்ளத்தில் அருள் நிரம்பியது. சீற்றம் அகன்றது. இவ்வாறு இனிமையாய் உரை செய்த மங்கை யாரென அறிய ஆர்வங் கொண்டு சிறிது முகமெடுத்துப் பார்த்தான். மாரிக்கால மதிபோல் ஒளி மழுங்கி நின்ற தாரையைக் கண்டான். அவளது கைம்மைக்கோலத்தை அமர்ந்து நோக்கினான். அவன் கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

தசரத மன்னனை இழந்த தன் தாயரை நினைந்து நெஞ்சங் குழைந்து நெடிது நின்றான். அப்பால் தாய்போல நின்ற தாரையை நோக்கி அம்மையே சேனையுந் தானும் சென்று சீதையைத் தேடித் தருவதாக வாக்களித்த மன்னவன் அதனை அறவே மறந்தான். அவன் நிலையை அறிந்து வருமாறு இராமனது ஆணையால் இங்கு வந்தேன் என்றான்.

தாரையின் சொல்நயம்

அதைக்கேட்ட தாரை, "ஐயனே சீற்றங் கொள்ளேல். சிறியோர் தவறு செய்தால் பெரியோர் பொறுப்பது முறை அன்றோ? மன்னனும் உமது பணியை மறந்தான் அல்லன். படை திரட்டுமாறு நாடெங்கும் தூதரை அனுப்பியுள்ளான். அப்படைகள் பல வழியாலும் வந்து சேரும் காலத்தை எதிர் நோக்கி இருக்கின்றான். மன்னவன் நீங்கள் செய்த நன்றியை மறக்க வல்லனோ? ஆதரவற்று அச்சமுற்று வாழ்ந்த வானரத் தலைவருக்கு அபயம் அளித்து அரசுரிமையும் அளித்தீர்கள். இத்தகைய பேருதவி செய்த பெருமக்கள் பொருட்டு உயிரைக் கொடுத்தலும் உரியதன்றோ? பெருமை சான்ற உமது நன்றியை மறந்தோர் இருமைப்பயனையும் இழந்து இன்னல் உழப்பர் அன்றோ?" என்று இனிய சொற்களால் எடுத்துரைத்தாள். இதைக்கேட்ட இலக்குவன் அருளும் நாணமும் அடைந்தான். மன்னவன் மீது கொண்ட சீற்றத்தை மாற்றினான். இவ்வாறு வீரன் வெம்மை தணிந்த பின்னரே சொல்லின் செல்வனாகிய அனுமன் அவன் மருங்கு செல்லும் மனத்திறல்பெற்றான். இவ்வரலாற்றால் தாரையின் பெருமை இனிது விளங்குகிறது. தான் செல்லும் வழியில் மாறாக நின்ற மரங்களும் மலைகளும் நீறாகுமாறு கடுஞ்சினத்தோடு சென்ற இளைய வீரனது வெம்மையை மாற்றிச் சீதமார் சாந்தம் போன்ற தண்மையும் மென்மையும் எய்துவிக்கும் சொல்நயம் தாரையிடம் அமைந்திருந்த தென்றால் அம்மாதின் பெருமையை விரித்துரைத்தலும் வேண்டுமோ? "சொல்லும் முறையே உலகினை வெல்லும் முறையாம்" என்பது அறிஞர் கருத்தாகும். ஆக்கமும் அழிவும் சொல்லால் வருவனவாம். மாற்றாரது மனப்பான்மையை எளிதாய் அறிந்து ஏற்ற முறையில் இன்னுரை வழங்கிய தன்மையாலேயே இலக்குவனது இறுகிய உள்ளம் நெகிழ்ந்து வானர மன்னன் பிழைத்தான். சொல்லில் வல்லனாய அனுமனே இலக்குவனது சீற்றம் பெரிதென்று உணர்ந்து தாரையை முன் அனுப்பித் தான் செவ்வி பார்த்துச் சென்ற தன்மையை அறிவோமாயின் தாரையின் சொல் நலச் செம்மை சொல்லாமலே விளங்கும். இத்தகைய செம்மை வாய்ந்த தாரையை வானர மன்னன் தாயென வணங்கிய தன்மை சாலவும் அமைந்ததேயாகும்.

இம் மங்கை ஆழிவாய்த் தோன்றிய அமுதிற் பிறந்தவள் என்று கதை கூறுகின்றது. மற்றைய மக்களைப்போல் புன்புலால் உடலில் தங்கி நின்று பிறவாது கடலிடை எழுந்த அமுதில் தோன்றிய நங்கை பிறப்பாலும் உயர்ந்தவளேயாகின்றாள். வாலியார் கடல் கடைந்தபோது அவ்வாழிவாய்த் தோன்றிய அமுதச் செல்வியை அமரர் அவ் வீரனுக்கே உரியபொருளாய் அளித்தார் என்றும் அம்மங்கை தன் பிறப்புக்கேற்ற மெல்லியல் வாய்ந்து வாலியின் மனைவியாய் வாழ்ந்தாள் என்றும் அவள் வரலாறு வழங்குகின்றது.

தாரையின் பெருமை

இம் மங்கையைக் கண்டபோது இலக்குவன் "இனையராமென்னையீன்ற இருவரும்" என்று தன் தாயரை நினைந்து நைந்தான் என்றால் தாரையின் முகத்தின் தன்மையும் அகத்தின் தன்மையும் ஒருவாறு உய்த்துணரப்படும். செம்மையால் உலகளித்த செங்கோல் மன்னனது தேவியராய்த் திகழ்ந்த கோசலையும் சுமித்திரையும் அம் மன்னன் ஆவி அகன்ற பின்னர் எக்கோலத்தில் விளங்கினார்களோ அக்கோலமே தலைவனையிழந்த தாரையிடமும் விளங்கிற்று என்பதற்கு இலக்குவனது மொழிகளே இசைந்த சான்றாம். கங்கை யாற்றங் கரையில் தன்னை ஈன்ற தாயர் மூவரையுங்கண்டு அவர் தன்மையை அறிந்திருந்த இலக்குவன் தாரையைக் கண்டபோது அத்தாயரில் இருவரை நினைத்தல் இயல்பேயாகும். மயில் போன்ற சாயலமைந்த மங்கையர் குழுவினடுவே இலங்கிய தாரையைக் கண்டபோது சுற்றத்தார் தேவரொடுந் தொழ நின்ற கோசலா தேவியை நினைந்தான். மாசற்ற மனத்தளாய தாரையைக் கண்டபோது "அறந்தானே என நின்ற தனது அன்னையை' நினைந்தான். தசரதன் இறந்த துயரம் பொறாது உலகிலுள்ள உடலெல்லாம் உயிரிழந்தாற்போல வருந்தவும் இடரிலா முகத்தோடு இனிதிருந்த கேகயமாதின் கோலத்தைத் தாரையின் முகத்தில் இலக்குவன் காணாமைபால் அவளை நீத்து எஞ்சிய தாயர் இருவரையும் நினைந்தான் என்று கருதுவது பொருந்தும்.

இத்தகைய நலங்களும் பெருமையும் வாய்ந்த தாரையார் பஞ்ச கன்னியருள் ஒருவராகப் பாராட்டப்படுவது பெரிதும் பொருத்த முடையதேயாகும். ஒரு தாய் வயிற்றில் அடங்கி நின்று பிறவாத பேறு பெற்ற மாதரில் தாரையார் ஒருவராய்த் திகழ்வதாலும் வலிமையில் ஒப்புயர்வற்ற வாலியின் மனைவியாய் அமைந்து அப்பெருமா

பஞ்சகன்னியரும் தாரையும்

---

* அநுபந்தம். 1. தாரையின் இன்னுரை.—கம்பர்.

னுடன் இல்லறத்தை இனிது நடத்திய பெருமை வாய்ந்தவராத லாலும், அப்பெருமான் இறந்த பின்னர், மன்னனுக்கும் மன் னுயிர்க்கும் தாயாகிச் செம்மை சான்ற கைம்மை நெறியை மேற் கொண்டு மனத்தின்கண் மாசின்றி வாழ்ந்த மாண்புடையராத லாலும், நாள் தோறும் அறிஞரால் நினைக்கப்பெறும் ஐம்பெருங் கன்னியரில் தாரையார் ஒருவராய்த் திகழ்வது அமைவுடையதே யாகும்.

---

# வாக்கிய பஞ்சாங்க வழு

[திரு. பிறைசூடும் பெருமாள் பிள்ளையவர்கள்]

(ҧகக-ம் பக்கத் தொடர்ச்சி)

## 'சங்கிரமகால கணிதம் சரியன்றெனல்

வரருசியார் "ஸ்ரீகோணமித்ரம்" என்பதாதியான கஉ - வாக்கியங்களால் பன்னிரண்டு மாதப்பிறப்புகள் அறியுமாறு செய்திருக்கின்றனர். அவ்வாக்கியங்களோ அவரிருந்த இடத் தின் தேசாந்தரத்தை நிரக்ஷதேச இரவிஸ்புடத்தில் சம்ஸ்கரித் தே ஏற்படுத்தப்பட்டதாயிருக்கிறது. இவ்வுண்மையை வாக்கிய கணிதருள் பலருணராது அவ்வாக்கியங்களைக் கொண்டே எல் லாத் தேசங்கட்கும் சங்கிரமகாலங் கணித்து வருகின்றனர்; அங் ஙனம் கணித்து வருதல் கூடாது; கூடுமெனின், அங்ஙனங் கணிக்கப்பட்ட பஞ்சாங்கங்களிற் கண்ட ஓர் மாத சங்கிரமநாடி விநாடியளவும் விகலையந்தம் அவ்வத் தேசாந்தர சம்ஸ்காரசூரிய ஸ்புடம் வருத்தி, அதில் பாகை, கலை, விகலையில்லாது காட்ட வேண்டும். இன்றெனின் தப்பென்றேற்கவேண்டும். மேற்கண்ட "ஸ்ரீகோணமித்ரம்" ஆதியான வாக்கியங்களாற் கணிக்கப்பட்ட சங்கிரமகாலத்துக்கும் இவ்வூர்த் தேசாந்தர சம்ஸ்கார சூரிய ஸ்புடத்தாற் கணிக்கப்பட்ட சங்கிரமகாலத்துக்கும் ஏழுவிநாடி முதல் சங-விநாடிவரையும் வித்தியாசப்படுகிறது. இதனாலே திதியும் புண்ணியகாலங்களும் சில வருட மாதங்களில் மாறு படுகின்றன.

கருங்குளம் கிருஷ்ணஜோதிஷரவர்கள், அவர்களின் சிஷ் யர்கள், அரிமழம் காமாக்ஷிநாத சாஸ்திரிகளவர்கள், கேரள தேச கணிதர்கள் ஆகிய வாக்கிய கணிதர்களும், சூரியசித்தாந் தம் திருக் சித்தாந்தமென்னும் சித்தாந்த கணிதர்களும் அவ்வவ் விடங்களின் தேசாந்தர சம்ஸ்கார சூரியஸ்புடத்தாலேயே சங்

கிரமகாலங்கணித்து வருகின்றதை ஏனைய வாக்கிய கணிதர்கள் ஆய்ந்துணர்வார்களாக. அங்ஙனம் உணருமிடத்துத் தேசாந்தர சம்ஸ்காரஞ்செய்யப்பட்ட இரவிமத்தியத்தை ஏகபாகவிகலாந்த இரவிமந்தஜ்யாபலத்தில் சம்ஸ்கரித்தால்தான் சங்கிரமகாலம் சரிவரும்; அன்றி மூன்றேமுக்கால் பாகத்துக்கு ஏற்பட்டிருக்கிற கலாந்த இரவி மந்தஜ்யாபலத்தில் சம்ஸ்கரித்தால் சங்கிரம காலம் ஒர்போதும் சரிவராது. வாக்கியகணிதரிற் பலர்க்குத் தேசாந்தர சம்ஸ்காரமும் ஏகபாகைக்கு விகலாந்த இரவி மந்தஜ்யாபலமும் தெரியாது; அதனை உண்டுபண்ணும் வழியும் அவர்கள் அறியார்கள். மந்தஜ்யாபலமெனினும், மந்தபலபதக மெனினும் ஒக்கும்.

## இராசிப் பிரமாணங்கள் சரியல்லவெனல்

எக்காலத்தினும் நாள் ஒன்றுக்கு ஒவ்வோர்தேச ராசிப் பிரமாணப்படி நாழிகை அறுபது; அதில் ஆறு ராசிப்பிரமாணம் பகலும், ஆறுராசிப் பிரமாணம் இரவுமாம். எங்ஙனமெனின், அந்தந்தத்தேசத்தின் இராசிப்பிரமாணங்களின்படி ஒரு இஷ்ட தினத்தின் மாதோதய ராசியில் உதயாத் பரமுதல் அதற்கேழா மிராசியான அஸ்தமனராசியில் அஸ்தமயாத் பூர்வம் வரையும் ஆறுராசிகளின் அளவு பகலெனவும், அஸ்தமனராசியில் அஸ்தமயாத் பரமுதல் மாதோதய ராசியில் உதயாத் பூர்வம் வரையும் ஆறுராசிகளின் அளவு இரவெனவுங் கொள்ளப்படும். இவ்வளவுகளின்படியே அந்தந்தத் தேசத்தின் சாயன சூரியஸ்புடத்தை அவ்வத்தேசத்தின் சரஜ்யாபல பதகத்தில் சம்ஸ்கரித்து வரும் பகலிரவுகளின் அளவுகளுமிருக்கும். இவ்வொழுங்குகளின்படியே, கருங்குளம் கிருஷ்ணஜோதிஷரவர்கள், அவர்களது சிஷ்யர்கள், அரிமழம் காமாக்ஷிநாதசாஸ்திரிகளவர்கள், கேரளதேச கணிதர்கள் ஆகிய இவர்களது பஞ்சாங்கங்களிற் கண்டிருக்கிற இராசிப் பிரமாணங்களும் பகலிரவின் பிரமாணங்களும் ஒக்கும். இராமநாதபுரம் இராமசுவாமி ஜோதிஷரவர்களுடைய பஞ்சாங்கங்களில் "சேதுராஜ்யத்துக்கு மேஷாதிராசிப் பிரமாணம்" என்ற தலைப்பின்கீழ்க் கண்டிருக்கிற இராசிமானங்களும், ஒரொரு மாதந் தேதிகளுக்கு முன்னே உதயாத்பரத்திற்கு உபயோகித்திருக்கிற ராசிமானங்களும் தப்பாயும் ஒன்றற்கொன்று முரணியும், இவைகட்கு அகசு வித்தியாசமாயுமிருக்கிறது. இதுபோலவே யாழ்ப்பாணம் இரகுநாதையரவர்களது பஞ்சாங்கங்களிலும், சிவராமலிங்கையரவர்களது துந்துபிவரைப் பஞ்சாங்கங்களினு மிருக்கிறது. மேற்கண்ட சிவராமலிங்கையரவர்களது உருத்திரோற்காரி வருஷமுதலுள்ள பஞ்சாங்

கங்களில் "அயனசம்ஸ்காரஞ் செய்த இராசிமானம்" என்னுந் தலைப்பின் கீழ்க் கண்டிருக்கிற ஒவ்வோர் தேசங்கட்கும் இராசிமானங்களின் மொத்தம் அறுபதுநாடியில் பத்துவிநாடி குறைந்திருக்கிறது. "நிரக்ஷம்" "யாழ்ப்பாணம்" என்னுந் தலைப்பின் கீழ் "மேற்கண்ட ராசிமானங்கள் நிரயனசாவனநாடி விநாடி தற்பரைகளாம்" என்றிருப்பதிலும் பத்துவிநாடி குறைந்திருக்கிறது அயனசம்ஸ்காரமுள்ளது சாயனமும், அஃதில்லாதது நிரயனமுமாம். மேற்சொல்லிய இரண்டிடங்களினுமிருக்கிற இராசிமானங்கள் சாயனமாயிருப்ப ஓரிடத்தில் அயன சம்ஸ்காரம் (சாயனம்) என்றும், பிறிதோரிடத்தில் "நிரயனம்" என்றும் ஐயரவர்கள் கூறுகின்றது மிகையாம். மேற்கண்ட சபாபதி ஐயரவர்களது சார்வரிவருடப் பஞ்சாங்கம் ௬-வது பக்கத்தில் "மத்தியரேகைக்கு" என்னும் "சுயதேசத்துக்கு" என்னுந் தலைப்புகளின் கீழிருக்கிற இராசிமானங்களின் மொத்தம் ௬ய, ௬ய-நாடிகளாயிருப்பதை நோக்குவாராக. இவர்கள் இராசிமானமும் பகலிரா மானமும் வேறுவேறென்றும், சாயனமும் நிரயனமும் வேறுவேறன்றென்றும் நினைத்தனர்போலும். இவர்கள் பஞ்சாங்கங்களிற் கண்டிருக்கிற இராசிமானம் பெரும்பான்மையினும் அகசு சிறுபான்மையினும் பிழைபடுகின்றது.

மேற்கண்ட சபாபதிஐயரவர்கள் பஞ்சாங்கங்களிற் கண்டிருக்கிற இராசிமானம் சரியே ஆயினும் "சூரிய சித்தாந்தத்தில் சொல்லியபடி" என்று சொல்லுகிறது மட்டும் சரியல்ல. சூரியசித்தாந்தத்தின் இராசிமானம் நிரயனம், ஐயரவர்களது பஞ்சாங்கங்களிலிருக்கிற இராசிமானம் சாயனம் அயனம் சேர்ந்துள்ள அகசின் அளவே ஆறுராசிகளின் அளவாயிருத்தல்பற்றி சாயனராசிமானமே வேண்டற்பாலது. ஆரியபட சித்தாந்தத்தின் வழிநூலாகிய வரருசிவாக்கியத்தாற் கணிக்கப்பட்ட வாக்கிய பஞ்சாங்கத்தில் அவ்விருநூற்களுக்கும் பிரமாணங்களினும் கிரியைகளினும் பெரும்பாலு முரண்படுகின்ற சூரியசித்தாந்தப் பிரமாணங்களை எடுத்தாள்வது வழு. முரணின்றிய பிரமாணங்களையும் கிரியைகளையு மெடுத்தாள்வதே முறை.

## நவநாயகரில் இராஜாவையும் மந்திரியையும் மாறுபாடாய் நிர்ணயித்திருக்கின்றனர்

ஒருவருடத்துக்கு ஒன்பது விதமான அதிபதிகளே நவநாயகரெனப்படுவார்; அவர்களில் சௌர வருஷாரம்பமான சித்திரைமாதப் பிறப்பின் வாராதிபன் இராஜா; வைகாசிமாதப் பிறப்பின் வாராதிபன் மந்திரி; சிங்கசங்கிரம வாராதிபன் சேனாதிபதி; கடக சங்கிரம வாராதிபன் சஸ்யாதிபதி; தனுசு

சங்கிரம வாராதிபன் தானியாதிபதி; மிதுனசங்கிரம வாராதிபன் அர்க்காதிபதி; திருவாதிரையில் சூரியன் பிரவேசித்த வாராதிபன் மேகாதிபதி; துலாசங்கிரம வாராதிபன் இராசாதிபதி; மகரசங்கிரமவாராதிபன் நிரசாதிபதி என்று காலப்பிரகாசிகை கூறும். இங்ஙனங் கூறப்பட்டவைகளில், இராஜாவும் மந்திரியும் முன்னர்க்கூறியபடி இதுகாறும் வாக்கியபஞ்சாங்கமுதலிய ஓர் பஞ்சாங்கங்களினும் நடைபெற்றுவரக் காண்கிலேன். சாந்திரவருஷாரம்பமெனவழங்கிவரும் சைத்திர சுத்தவாராதிபன் இராஜாவென்றும், மேஷசங்கிரம வாராதிபன் மந்திரியென்றும், ஏனைய அதிபதிகளை முன்னர்க்கூறியபடியும் காலவிதானம், வீமேசுர உள்ள முடையான் முதலிய பல நூல்கள் கூறும். அவ்வாறே இதுகாறும் எல்லாப் பஞ்சாங்கங்களினும் நடைபெறுகின்றன.

காலப் பிரகாசிகையில் நவநாயகரைக் குறித்துக் கூறுமிடத்து, "சைத்ரே ராஜாபமௌள மந்திரி" என்று கூறிப் போந்த சுலோகத்துக்குத் திருவனந்தபுரம் சம்ஸ்கிருதகலாசாலை உதவிப் பண்டிதர் மஹோபாத்தியாயர் அரிஹரசாஸ்திரிகள் "சித்திரை மாதப் பிறப்பின் வாராதிபன் இராஜா, வைகாசிமாதப் பிறப்பின் வாராதிபன் மந்திரி" என்று உரை வகுத்திருக்கின்றனர். அந்நூலாசிரியரான நரசிம்மாசாரியர் இடபராசியின் பரியாயநாமங்களில் ஒன்றான "பமௌள" என்று கூறுது மேடராசியின் பரியாய நாமங்களில் ஒன்றைக்குறித்து "மந்திரி" என்று கூறியிருப்பாராயின் சாஸ்திரிகளும் "சைத்ரேராஜா" என்பதற்குச் சாந்திர வருஷாரம்பமான சைத்திரசுத்தவாராதிபன் இராஜாவென்றும், சித்திரைமாதப் பிறப்பின் வாராதிபன் மந்திரி என்றும் உரை கூறியிருப்பார். நூலாசிரியர் அவ்வாறு கூறுமையாலே அவர் சௌரமானமே பிரபலமான மானமெனவும், சித்திரையென்னும் தமிழ்ச்சொல்லே சம்ஸ்கிருதத்தில் சைத்திரம் என்று வந்ததெனவும் உணர்ந்தோரென்பது தெளியப்படுகின்றது.

பண்டைக்காலத்தே இமயமலைக்குத் தென்னாட்டில் தமிழரும், அவர் வசிப்பதனால் அந்நாடு தமிழ்நாடும், அவர்வழங்கி வந்தது சௌரமானமும், அவ்விமயமலைக்கு வடநாட்டில ஆரியரும், அவர் வசிப்பதனால் அந்நாடு ஆரியநாடும், அவர்வழங்கி வந்தது சாந்திரமானமுமாயிருந்தன. பின்னர், அவ்வாரியர் இத்தமிழ்நாட்டின்கண் வந்து தமிழ்நூல்கள் கற்றுப் பொருள் நன்குணராது அந்நூல்களிலுள்ள விஷயங்களை அவர் கருத்துக்கிணங்குமாறு அவர் பாஷையில் பெயர்த்தெழுதி வந்தனர்; அங்ஙனம் எழுதி வருங்கால், அத்தமிழ் நூல்களிலே சௌரமாதங்களிலே நட்சத்திரங்களில் ஏற்பட்டிருந்த பற்பல விஷயங்

களைச் சாந்திரமாதங்களிலே சாந்திர தினங்களான திதிகளில் மாற்றிக்கொண்டு வரும்போது நவநாயகரையும் அவ்வாறுமாற்ற முயன்றனர்; அம்முயற்சி மேகாதிபதியால் பயன்படாதுபோயிற்று. எங்ஙனமெனின், தமிழ்நூல்களில் "திருவாதிரையில் சூரியன் பிரவேசித்த வாராதிபன் மேகாதிபதி" என்றிருப்பதற்குச் சாந்திரமானத்தில் வேறுபெயர் கற்பிக்க இயலாமையாலென்க. பின்னர், நவநாயகரில் தலைமை நாயகரான இராஜாவையேனும் சாந்திரமானத்தில் ஏற்படுத்திவிட்டால் அம்மானம் கனம்பெறுமென்னும் நினைப்பால் சித்திரைமாதப் பிறப்பின் வாராதிபன் இராஜாவென்றிருந்ததை சைத்திரசுத்தவாராதிபன் இராஜாவென்றும், இராஜாதிபத்தியத்துக்குரிய சித்திரைமாதப்பிறப்பின் வாராதிபனை மந்திரியென்றும் ஏற்படுத்தி, மந்திரிதன்மைக்குரிய வைகாசிமாதப் பிறப்பின் வாராதிபனுக்கு யாதொரு அதிகாரமுங் கொடாது அநியாயமாய் விலக்கி, ஏனைய அதிபதிகளை மாற்றுமலும் விலக்காமலும் வைத்துக்கொண்டனர். இதனாலே, சிவப்பிரேதம்போலுள்ள சாந்திரமானம் மிக்க பெருமைபெற்றது என்றும், அதினும் பாழூரில் பாழ்ங்கிணற்றில் எடுப்பாரற்றுமுடமாய்க்கிடந்த சைத்திர சுத்தவாராதிபன் சாம்பிராஜ்யபட்டாபிஷேகம் பெற்றனனென்றும் ஆரியர் மனப்பால் குடித்தனர் போலும். (தொடரும்)

---

# பழந்தமிழ்

[திரு. மாகறல், கார்த்திகேய முதலியார் அவர்கள்]

## சந்தம்

பழந்தமிழிலிருந்த சந்தம் இயற்கைச் சந்தமேயாம். இயற்கைச் சந்தமாவது செயற்கையிற் செயற்கை யெழுத்துகளாகிய ஒத்தெழுத்துகள் இல்லாத சந்தமாம். தேன் வண்டினிசை இயற்கைச் சந்தம். ஆரிய மொழியில் ஒத்தெழுத்துகளும் விசர்க்க முதலியனவும் மிகுதியாதலால் ஆரிய சந்தம் செயற்கைச் சந்தமாகும். ஆரியத்துக்கு முதனிலையாகிய கிரந்தத்தில் ஒத்தெழுத்துகளும் விசர்க்க முதலியனவும் சிறுபான்மையவாகலின் அச்சந்தம் தமிழ்ச் சந்தம் போல்வதே யாம். கிரந்தம் தமிழ் போல்வதாகலின் அதனை வட தமிழென்றனர்.

செந்தமிழ்ச் சந்தம் பெரும்பான்மையும் இயற்கைச் சந்தமாகவும், சிறுபான்மை செயற்கைச் சந்தமாகவும் நடைபெறும்.

மணிப்பிரவாள நடை இவ்விருவகைச் சந்தங்களையு முடையது. முதல் முதலுண்டாயது செய்யுளாகலின் மணிப்பிரவாளம் செய்யுளுக்கே யுரியது. மணிப்பிரவாளச் செய்யுளில் முன்னிரண்டடி தமிழ்ச் சந்தமும் பின்னிரண்டடி ஆரிய சந்தமும் வரப்பெறும். செயற்கைச் சந்தமெல்லாம் பிற் காலத்தனவாம். தமிழ்ச் சந்தமே பண்முறையிற் சிறந்ததென்பர்.

## இசைக்கல்வி

வேனிற் காலமாகிய வசந்த காலத்தில் குறிஞ்சி முதலிய வற்றில் அவ்வந்நிலத்துப் பறவைகளும், வண்டினங்களும், இசைப்பதியற்கையாகலின் மக்களும் அங்ஙனமே இசைத்து வந்தமையின் இசைக் கல்விதான் முதல் முதலுண்டாயது. இவ்விசைக் கல்வியினின்றே செய்யுள்நடை யுண்டாயது. இச்செய்யுள் நடையே முற்பட்டதாகும். கலவிங்கம்=இசைப்புள். கலம்=இசை. வெண்கலம் இசை மிகுந்ததென்பது.

பிறகு இசைக்கல்வி வளர்ச்சிபெற வளர்ச்சிபெற யாழ் முதலிய இசைக் கருவிகளும் பெருகின.

ஏழ் யாழாயிற்று. ஏழ் நரம்புடையதென்பது.

தண்டென்பது முதல் மூங்கிலையும் பிறகு மூங்கிலாலாய வீணையையும் உணர்த்தி நிற்கும்.

குற்றியலுகரம் பிற் காலத்ததாகலின் தண்டம் தண்டாயிற் றெனல் வேண்டும். விதண்டா வாதமெனின் கல்லாதார் கூறும் வாதமென்பது பொருள். வி+தண்டம். வி எதிர்மறை யுபசர்க்கம். விதண்டம் விதண்டையாயிற்று.

கல்வியை யுணர்த்தும் தந்தென்பது தண்டென்பதன் திரிபு. தண்டு—தந்து.

கலம்—கலா=இசையறிந்து கற்பது.

கலம்=இசை, கலா—கலை

மாணவனென்பதற்கும் இசையறிந்து கற்போனென்பது பொருள். மாணி=வழிபடு வாழ்க்கையோன். ஆவது பிரமசாரி. இசையறிந்து கற்போன்.

மண்—மாணவன். மண்=இசை. மண் மார்ச்சனையுமாம். இசைப்பதென்பது. மண்—மாணி. மண்—மணி=இசைப்பது. பள்ளிக்கூடம். பள்—பள்ளி. பள்=இசை.

சந்தம் வசந்த மென்பதன் கடைக்குறை. சந்தம்=இசை. வசந்த காலத்தில் உண்டாவது. இவை, இசைக் கல்விதான் முதல் முதலுண்டாய தென்பதை வலியுறுத்துகின்றன.

புணர்ச்சி

மராடி, குளாம்பல், குடாகாயம், காளாணம், கழுகாசலம், திருப்புலீசன், ஆட்சீசன், அஃகேனம், முருகேசன் முதலியன பழந்தமிழ்ச் சந்தியாம்.

மர + அடி=மராடி. குள + ஆம்பல்=குளாம்பல்.

குட + ஆகாயம்=குடாகாயம். காள + ஆணம்=காளாணம். காளன் குழம்பென்பது.

கழுக + அசலம்=கழுகாசலம். திருப்புலி + ஈசன்=திருப்புலீசன்.

ஆட்சி + ஈசன்=ஆட்சீசன். அஃக + இனம்=அஃகேனம்.

முருக + ஈசன்=முருகேசன்.

மராடி முதலிய தீர்க்க சந்திகள் நாவிற்கு எளியனவாக இருத்தலின் இவையே முதல் முதலுண்டான சந்தி; பிறகாலத்தில் இத்தீர்க்க சந்தி முதலியன வடமொழிச் சந்தியெனப் பிரிக்கப்பட்டன.

"அகர ஆகாரம் வருஉங்காலை
ஈற்றுமிசை அகரம் நீடலு முரித்தே"

(தொல்—புள்ளி மயங்கியல்)

எனத் தொல்காப்பியர் கால வியற்கையால் வேறுபடச் செயற்கை செய்தனர். வழக்குடைமைபற்றிக் கூறினாராவர். ஏரிகரை, மலைகிழவோன், திரிகண், பசுபதி, தனபதி, ஆதி பகவன், பூபாலன் முதலியன இயல்புப் புணர்ச்சிகளும் பழந்தமிழ்ச் சந்தியாம்.

திரிகண்=மூங்கில். திரி=மூன்று. (பிங்-நி)

டகர முதலிய மெய்ச்சந்தி யெழுத்துகள் உண்டாய பிறகே தறுகட்களிறு முதலிய திரிபுப் புணர்ச்சிகளுண்டாயின. திரிபுப் புணர்ச்சி=விகாரப் புணர்ச்சி. உடம்படு மெய்களும் பழந் தமிழிலில்லை. அவை பிற்காலத்தி லுண்டாயின.

"எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்"

(தொல்—எழு - புணர் - கூ - கடு)

என்பதில் நச்சினார்க்கினியர் வரையா ரென்றதனால் உடம்படு மெய்கோடல் ஒரு தலையன்றெனக் கூறிக் கிளி அரிது, மூங்கா இல்லை என உதாரணம் காட்டுவதால் உடம்படு மெய்கள் பிற் காலத்திலுண்டாயின என்பது துணிபு. உரையாசிரியரும் கூறு வர். கிளி யரிது, மூங்காவில்லை, யென உடம்படு மெய் கொள் ளின்; கிளி அரிது, மூங்கா இல்லை. என்பனபோல நாவிற்கெளி தாதலில்லை. ஐ, ஒள என்னும் உயிர்ச்சந்தி யெழுத்து உண்டாய பிறகே உடம்படு மெய்யு முண்டாயின. யகர வகர மெய்களுண் டாய பிறகே ஐகார ஔகாரங்க ளுண்டாயின.

---

## இதழிற் பிறக்கும் தமிழ் எழுத்துக்களைப்பற்றிய குறிப்பு

[திரு. க. ப. சந்தோஷமவர்கள் B A, L.T..]

இதழோடு தொடர்புடைய எழுத்துக்கள் உ, ஊ, ஒ, ஓ. ஔ, ப, ம, வ ஆகிய இவை என்பதை முன் கண்டோம். இவற்றுள் உ, ஊ, ப, ம, வ எனும் ஐந்தும் தமக்குள் மிக ஒற் றுமையுடையன. இவைகளுடைய வடிவத்தில் தோன்றும் ஒற் றுமை முதலில் நோக்கத்தக்கது. உ, ஊ என்பவை ஒத்திருப் பது சொல்லாமலே விளங்கும். ஊகாரத்தில் ளகரத்தைப் போன்றிருப்பது நெட்டெழுத்தின் குறியேயன்றி வேறன்று. பகர, மகர, வகரங்களின் வடிவு உகரத்தோடு ஒற்றுமையுடை யது. முன்னளில் மகரம் எங்ஙனம் எழுதப்பட்ட தென்பதை

"உட்பெறு புள்ளி யுருவா கும்மே"

என்ற தொல்காப்பிய கட்டளையாலறிக. ஒ, ஓ, ஔ என்பன தனியாய் நிற்கின்றன. ஒகரம் மூளை எழுத்தாதலின், மற்றவற்றி னின்றும் அது வேறுபட்டிருப்பது இயற்கையே. வடிவத்தில் இதழிற் பிறக்கும் எழுத்துக்கள் இருகூறுய்ப் பிரிந்து நிற்கினும் வழக்கில் அவை ஒன்றோடொன்று விரவும். மக்கள் பொதுவா கப் பேசுகின்ற பேச்சை உற்று நோக்குவோமாயின், ஒரு சொல்லின் முதலிலே வருகின்ற உகரம், ஒகரமாக மாறுவது விளங்கும். 'உயரம' என்ற சொல்லைப் பெரும்பாலான மக்கள் 'ஒயரம்' என்று தான் சொல்லுகின்றார்கள். இவ்வாறே.

உடம்பு> ஒடம்பு
உடைந்த> ஒடஞ்ச

குடை > கொடை
குடம் > கொடம்
குரங்கு > கொரங்கு
நுங்கு > நொங்கு

என்று உகரத்தை ஒகரமாக்கியுரைத்தல் வழக்கில் காணக்கிடக்கிறது. இது நூலறிவில்லாதார் வழக்கென்று எள்ளற்பாற்றன்று. கல்வியறிவுடையோரும், ஒரு கழகத்தின் முன் அல்லது மாணவர் முன் பேசும்போது குடை, குடம் என்று திருத்தமாகப் பேசலாம். ஆனால், மனைவி மக்களிடமும் பிறருடனும், இயற்கையாய் உரையாடுங்கால் மேற்காட்டிய சொற்களை ஒகரத்துடன் உரைக்கின்றனர். எல்லா மொழிகளும் முதலில் பேசப்பட்டுப் பின் எழுதப்படும். அங்ஙனம் எழுதப்படும்போது உயர்ந்தோர் என்று கருதப்படுவோருடைய பேச்சு முறையைத் தழுவி மொழிகள் அமைப்புப்பெறும். ஒரு குடியைச் சேர்ந்த மொழிகள் பலவற்றுள் பேச்சு முறை வேறுபடுவது இயற்கையே. ஒரு மொழியில் வழுவாகக் கருதப்படுவது மற்றொரு மொழியில் திருத்தமாக இருக்கலாம். தமிழில் உகரத்திற்குப் பதிலாக ஒகரத்தை ஏற்றுவரும் சில சொற்கள் தெலுங்கிலும் அவ்வாறே வருகின்றன.

(தமிழ்) உடல் =(தெலுங்கு) ஒள்ளு
,, உவர்ப்பு = ,, ஒகரு
,, குடை = ,, கொடுகு

என்று வருவனவற்றை நோக்க மேற்கூறியது தெளியப்படும். தமிழோடு பொருத்தமுடைய வேறு மொழிகளை ஆராய்வோருக்கு இவ்வுண்மை இன்னும் தெளிவாகத் தோன்றும். ஆதலின், பொது மக்கள் பேசும் பேச்சு இழிவானதென்று ஆராய்ச்சியாளர் விலக்கமாட்டார். நூல் வழக்கில் உகரம், ஒகரமாய்த் திரிவதற்குச் சான்று கிடைத்திலது. ஆனால், உகரம் ஒகாரமாக வருவதற்குச் சான்றுண்டு.

உவகை > ஓகை
முகப்பம் > மோப்பம்

"ஓகை வாளிராவணற் குரைத்தலும்"
(கம்பராமாயணக் கருப்பொருள்)

"மோப்பக் குழையு மனிச்சம்"
(திருக்குறள்)

இவற்றில் வகரமும், ககரமும் முறையே மறைய முதல் நின்ற உகரம் ஒகாரமாயிற்று. முகர்>மோர், புகட்டு>போட்டு, துவைத்தல்>தோய்த்தல், முகடு>மோடு, என வருவதையுங் காண்க.

இங்ஙனம், மொழி முதலிலுள்ள உகரம், ஒகரமாகவும் ஓகாரமாகவும் நிலைமைக்கேற்பத் திரியினும், ஒற்றிற்கு முன் வரும் உகரம் பொது மக்களுடைய பேச்சிலுங்கூட ஒகரமாய் மாறுவதில்லை. உக்கு, உச்சி, உண்டு, உப்பு ஆகிய இவை போல்வன இதை நன்கெடுத்துக்காட்டும். இவ்வாறே மொழிக்கு முதலாகிய உகரத்திற்குப்பின், உகர மேறிய உயிர்மெய் வரினும் முதல் நின்ற உகரம் ஒகரமாகாது. உடுப்பு, உடும்பு, உழுதான், உறுப்பு என்பவற்றால் அறிக. ஆனால், இஃது உகரத்திற்கு மாத்திரம் சிறப்பாகிய ஒரு ஒலி முறையன்று. உகரம் ஒகரமாவது போல், இகரம் எகரமாகும் :—

பிரம்பூர்>பெரம்பூர்

இழை>எழை

கிளை>கெளை

இடையன்>எடையன்

இளையவன்>எளையவன்

ஆனால் இகரத்திற்குப்பின் மெய்யெழுத்து வருமாயின், இகரம் எகரமாகாது. 'இஞ்சி' என்பதை 'எஞ்சி' என்று ஒருவனும் சொல்லான். இங்ஙனமே, சிப்பி, கிள்ளு, மிச்சம், பிச்சு, திட்டு, விட்டு என்பவற்றிலுள்ள இகரம் மாறுவதில்லை. அன்றியும், இகரத்திற்குப்பின் இகர மேறிய உயிர்மெய் வரினும், தலை இகரம் மாறாது. இடித்தான், பிடித்தான், இதில், இழிவு, கிளி என்பவற்றால் இஃது அறியப்படும். நூலறிவு இல்லாத மாந்தர் குழந்தைகளுக்கு இணையானவராதலால், தங்களுக்கு வருத்தத்தைத்தரும் ஒலிகளை நீக்கி எளிதான ஓசைகளையே எழுப்புகின்றனர். ஒற்று அடுத்து வரும்போதும் தமக்கு இனமான உயிர்மெய் அடுத்து வரும்போதும் தவிர மற்ற விடங்களில் இகர, உகரங்கள், எகர ஒகரங்களாகத்திரியும் என்பது மேற்காட்டியவற்றால் விளங்குகின்றது. ஆதலின், பொதுவாக இகர உகரங்களை விட எகர ஒகரங்கள் எளிதான ஓசைகளென்பது பெறப்படும். என்றாலும், இந்த எளிதான ஓசைகள் வடமொழியில் இல்லை.

(தொடரும்)

# தமிழ்மாதரும் சிறுதேவதைகளும்

[திருவளர் செல்வி நாகை நீலாம்பிகையம்மையாரவர்கள்]

நம் தமிழ்நாட்டில் நூறுபிரக்கணக்கான பெண்மக்கள் இருக்கின்றார்கள். இவர்கள் எதற்காக உலகத்தில் படைக்கப்பட்டிருக்கின்றார்கள்? தமக்கும் உலகத்தார்க்கும் எவ்வாறு பயன்படுகின்றார்கள்? என்பவைகளை நாம் ஆராய்ந்து பார்ப்போம்.

இப்போதிருக்கும் நிலையில், இவர்கள் தாம் பிறவி எடுத்த நோக்கத்தை யுணராமல் உண்பதும், உடுப்பதும், உறங்குவதுமாய் வீணே காலங்கழித்து வருகின்றார்கள். இப்பெண்மக்களின் மனநிலைமையும், பேச்சு முறையும், செய்கையின் வேறுபாடுகளும் அறிவுடைய பிறநாட்டுப் பெண்மக்களால் இகழப்படும் நிலைமையில் இருக்கின்றன.

நம் நாட்டிலுள்ள தமிழ்ப் பெண்மக்கள் ஏழைகளும், நடுத்தரத்தாரும், செல்வரும் என மூவகைப்படுவர். இம்மூவகைப் பிரிவினருள் ஏழைப் பெண்மக்களின் தொகையே எங்குப்பார்த்தாலும் மிகுதியாயிருக்கின்றது. மிகுந்த செல்வத்திலும், மிகுந்த வறுமையிலும் இல்லாமல் நடுத்தரமான நிலையிலிருப்பவர் தொகை அவ் ஏழைகளை விடச் சிறிது குறைந்ததாகும். பெருஞ் செல்வர்களின் கூட்டமோ மிகவும் அருகிக் காணப்படுவதாகும்.

ஏழைப் பெண்கள் வயிறார உண்பதற்குப் போதுமான உணவும், துப்புரவாக உடுப்பதற்குப் போதுமான உடைகளும் இல்லாமல் மிக்க வறுமையில் காலங்கழித்து வருகின்றனர். இவ் ஏழைப் பெண்கள் தம் உடம்பு வருந்தப் பல துறைகளிலும் உழைத்துத் தம்மினும் மேற்பட்டவராகக் கருதும் நடுத்தரத்தார்க்கும், செல்வர்களுக்குப் பெரிதும் பயன்பட்டு அவர்கள் நல்ல நிலைமையில் மகிழ்வோடிருக்கச் செய்கின்றார்கள். இவ்வாறு தம் மகிழ்ச்சிக்கும், மேன்மையான நிலைமைக்கும் ஏதுவாக நிற்கும் இவ் ஏழைப்பெண்களின் நிலைமையினை மேற்கூறிய இருதிறத்தாரும் ஒரு சிறிதாயினும் உற்று நோக்குகின்றார்களோவென்றால் சிறிதும் இல்லை. செல்வத்திலும், குலத்திலும் உயர்ந்தவராக எண்ணிச் செருக்கித் தலைகொழுத்து இறுமாந்திருக்கும் பெண்மக்கள், தம் கழனிகளிலும், தோட்டங்களிலும் உடம்பு வருந்த வேலை பார்த்துவிட்டு, நடுப்பகலில் இளைத்து வந்து, புறக்கடையில் வெயிலில் நின்றுகொண்டு கூழுக்காகக் காத்திருக்கும் தம் ஏழை வேலைக்காரப்பெண்கள் சிறிதுநேரம்

களைப்பாறத் தம் வீட்டிற்கு முன்னுள்ள தாழ்வார நிழலிற்சிறிது தங்கவந்தால் அதற்குக்கூட இடந்தராமல் அவர்களைத் துரத்து கின்றனர். தமக்காக வேலை பார்க்கும் இவ் ஏழைப் பெண்கள் ஒரோவொருகால் மழையில் நனைந்து நடுக்குற்றுச் சாவதாயிருந் தாலுங்கூடத் தம் தாழ்வாரத்தில் ஒதுங்க இடந்தரமாட்டார் கள். இன்னும், தம் வீடுகளில், மணமாயினும், தலைநாளாயினும் வந்தால், நம் பெண்மக்கள் நூற்றுக்கணக்காகப் பொருட் செலவுசெய்து, சமையற்காரர்களாற் பற்பல இனிய உணவுப் பண்டங்களைச் செய்வித்துத் தம்மவரெல்லாம் ஒன்று கூடித் தின்று மகிழ்கின்றார்கள். இதுவுமல்லாமல், தமக்கு ஒருவகை யிலும் உதவிசெய்யாத பார்ப்பனர்களை அழைத்து, அவர்தம் கால்களில் விழுந்து வணங்கிப் பொருள், அரிசி, காய்கறி முதலியவைகளை ஏராளமாகக் கொடுக்கின்றார்கள்! ஆனால், இவர் களுக்கு இவ்வளவு மகிழ்ச்சியும் ஆடம்பரமும் தம் ஏழை வேலைக்கார மக்களின் உழைப்பால் அல்லவா கிடைத்தன என் பதை உணராமல் தாம் சிறப்பு நாட்களிற் செய்யும் சுவைமிகுந்த உணவு தம்மவர் உண்டு மிஞ்சிப் போனாலுங்கூடத் தம்பிள்ளைக ளோடு பசியால் வருந்தி வயிறெரிந்து நிற்கும் தம் வேலைக் காரர்களுக்கு இட்டால் தமக்குத் -'தீட்டுப்பட்டுப்போம், பாவம் வந்துவிடும்" எனறு கூறி வீணாக அவ்வுணவைப் பள்ளம்வெட் டிப் போட்டுப் புதைத்து விடுகின்றார்கள். ஐயோ! இவ்வாறு செய்யும் நம் பெண்மக்களின் அன்பற்ற இரக்கமற்ற நெஞ்சக் கொடுமையினுங் கொடியது வேறுண்டோ. இன்னும் தம்மகிழ்ச் சிக்கும் ஆடம்பர வாழ்க்கைக்கும் உதவியாக இருப்பதுமட்டு மல்லாமல், இவர்கள் துன்புறும்போதுங்கூட அவ்வேழைப் பெண்கள் இவர்களுக்கு உடனாய் நின்று உதவிசெய்கின்றார்கள். இவ்வாறெல்லாம், தமக்காகப் பாடுபட்டு உழைக்கும் ஏழைப் பெண்களைக் கண்ணெடுத்தும்பாராமல் கொடுமையாக நடத்தும் இப்பெண்கள் கடவுளால் ஒறுக்கப்பட்டுக் கொடியநோய் கொண்டு மருத்துவக் கழகங்களிற் (Hospitals) போய் மருத்து வம் பார்த்துக்கொள்ளுகிறார்களே! அப்போது அங்கே, தம்மால் இழிந்த குலத்தாரென்று புறக்கணித்து ஒதுக்கப்பட்ட ஏழைப் பெண்களே அங்கு மருத்துவம் பார்த்தலும் பிற உதவிகளும் செய்பவர்களாய் இருத்தலால், அப்போது மட்டும் அம்மா என்று கெஞ்சிக்கூவி, அவர்கள் கை காலைப் பிடித்துக்கொண்டு தமக்கு உதவி செய்யும்படி கேட்டுக் கொள்ளுகின்றார்கள்! இங் ஙனம் இவ் ஏழைப் பெண்களின் பேருதவியால் நலமடைந்து வீடுவந்த பிறகோ, தமக்கு உதவிசெய்த அவ் ஏழைப் பெண் களைக் கண்டாலுங்கூடத் தெரியாதவர்கள்போற் போய்விடுகின் றார்கள். வெயிலில் வறண்டுவந்து 'உயிர்போகின்றது சிறிதுதண்

ணீர் கொடுங்கள்' என்று கெஞ்சினாலுந் தண்ணீர்கொடுக்கமாட்டார்கள். இவ்வாறு மேற்குலத்தினராகத் தம்மைத் தாமே உயர்த்திச் சொல்லும் பெண்மக்கள், ஏழைப் பெண்மக்களைப் புறக்கணித்தே தள்ளிவிடுதலால் இவர்கள் அவ்வேழைகளை உயர்த்துவதற்குச் சிறிதும் உதவிசெய்வதில்லை.

அதனால் பெருந்தொகையினரான ஏழைப்பெண்கள் கல்வி மணம் இன்னதென்றே யறியாமல் இருக்கின்றார்கள். தாமே கற்கச் செல்வமும் இல்லை; அதனால் அறிவில்லா நம்பிக்கையில் அகப்பட்டுப் பெருந்துன்பத்தை அடைகின்றார்கள்! முழுமுதற் கடவுளைப்பற்றி அறியும் வழி தெரியாமல் சிறு தேவதைகளையே வணங்கி அதனாற் பல தீங்குகளை அடைந்து வருகின்றார்கள்.

இனி, நடுத்தரமான நிலையிலுள்ளவர்களில், ஆண்பாலார்க்கே மிகுந்த உழைப்பு; பெண்மக்கட்கு உழைப்பு போதாது. இவர்கள் உணவு சமைத்த நேரம்போக, வேண்டுமானால் கல்வி கற்கலாம். ஆனால் இவர்கள் கல்விகற்பதற்கு விரும்புவதில்லை. சிலர் கல்வி கற்க விரும்பினாலும் உயர்ந்த நூல்களைக் கற்றறிய விருப்பமில்லாமல், தம் அறிவை மயக்கி உலக நினைவில் மிகுதியாக இழுப்பனவும், கொச்சைத் தமிழில் எழுதப்பட்டனவுமான 'விக்கிரமாதித்தன்கதை' அல்லிஅரசாணிமாலை முதலியவைகளைப் படித்துக்கொண்டு ஒருபயனுமில்லாமற் காலம் போக்குகின்றனர். இன்னும் பலர், தம்மோடொத்தவருடன் கூடி வீண் பேச்சுப் பேசிக் கழிப்பதிலும், சொக்கட்டான் ஆடுவதிலும் காலங்கழிக்கின்றனர். இவ்வாறு வீண்காலம்போக்கும் இப்பெண்மக்கள் தம் இன்பத்திற்காகவும், துன்பத்திற்காகவும் வணங்குந் தெய்வங்கள் தம்மைப்போல் பிறந்து இறந்தொழியும் சிறுதேவதைகளேயாகும். இப்பெண்களின் கணவன்மார்களிற் பலர் கற்றறிவுடையவர்களாய் உயர்ந்த வேலைகளில் அமர்ந்து இருக்கின்றார்கள். இவர்கள் தம் மனைவிமார்கட்குக் கல்வியைப் பற்றியேனும், முழுமுதற்கடவுளைப் பற்றியேனும், சீர்திருத்த முறைகளைப் பற்றியேனும் அறிவிக்க முயன்றால், உடனே இவர்கள் கணவன்மார்களை நோக்கி "நீங்க இதெல்லாம் சொன்னதிருக்கட்டும்; நீங்க சொல்லும் கலைஞானங்களெல்லாம் எங்களுக்கு வாணாம்; நாங்கள் படிச்சு எந்த ஆபீசிலேபோய் உத்தியம் செய்யப்போறோம்; நாம் தவமா தவமிருந்து பெத்த நம்மகொழந்தங்களுக்குக் காதுகுத்தி மயிர் வாங்கணும், அதுக்கு நம்மகொலதெய்வம் படவட்டம்மாளுக்கும், வேம்புலி அம்மாளுக்கும், அஞ்சு ஆட்டுக்கடாவும், பத்துக் கோழியும் வெட்டிப் பலிகொடுக்கணும்; இதுக்கெல்லாம் சிறப்பாச் செய்யக் கொறை

யாமல் முந்நூறு நானூறு ரூபா வேணும்; நீ நான் சொன்ன படி செய்யாட்டால் நாம் ஏழையாய்ப் போயிடுவோம்; உன் வேலை போயிடும்'' என்று இவ்வாறெல்லாம் கூறித் தம் அறிவுள்ள கணவன்மார்களைக் கூடத் தம் தீய வழிக்கு இசையச் செய்து விடுகின்றார்கள். (தொடரும்)

---

# தோலாமொழித் தேவர்

[திரு. அக்கினீஸ்வரம் பிள்ளையவர்கள், B.A.,]

(௩௰௪-ம் பக்கத் தொடர்ச்சி)

## பிற வழக்கங்கள்

ஆடவர் பல பெண்களை மணந்தனர். சுவலனசடிமன்னன் மிகாபதிதேவியை முதன்மனையாளாகவும், சசிதேவியை இரண்டாம் மனையாளாகவும் பின்னுஞ் சில சுகுண சௌந்தரிய மாதரைக் காமக்கிழத்தியாக அமைத்து வாழ்ந்தான். அச்சுவகண்டன் அநேக மங்கைமார்களை வதுவை செய்தனன்.

வித்தியாரம்பத்தை ஒரு விழாவாகக் கொண்டாடி ஊர் வலம் ஊர்ச்சாப்பாடு முதலிய இயற்றினர். காலவரையறை யாவரும் அறியும்படி தற்காலத்துக் கோரிகளிலும் கச்சேரிகளிலும் மணி அடிப்பதுபோல நாழிகைப் பறை யடித்தனர். உலகைத் துறந்து தவமியற்றுமுறை வாகுவலிமன்னன் தவமியற்றியதிலிருந்து தெரிகின்றது. அவன் திண்ணிய தியானுக்கினி சுடர் விட்டுத் திகழப் பாதத்திற் பற்றி யெழுந்த புற்றுகளிற் கரும் பெரும் பாம்புகள் பயில, வல்லிகள் பொழின் மரக்கட் கோழரையென அவன்மீது படரக் குஞ்சியிலே குருவிக் குழாங்கள் குடியேறத் தவமியற்றினனும்.

தற்காலத்தில் அரிய கடிதங்களைப் பிறர் உடைத்து அறியாதவண்ணம் அரக்கு முத்திரை யிடுகிற வழக்கம் தொன்று தொட்டே இருப்பதாகத் தெரிகின்றது. மரீசி என்னும் தூதுவன் யயாபதிமன்னனிடம் 'அரக்குமுத்திரையிட்ட' ஒரு திருமுகத்தை நீட்டியது.

'விஞ்சைய னெழுந்து தங்கோன் வெள்ளிவேதண்ட நோக்கி
யஞ்சலித் தடக்கை கூப்பி யரக்கிலச் சினையின் வைத்த.
வெஞ்சலி லோலை காட்ட...........'

என்றற் றொடக்கத்துச் செய்யுளால் தெரிகின்றது.

32

பாரிசாதகாமவல்லிமணம்—சுயம்பிரபை தாம் கொணர்ந்து வந்து வைத்த பாரிசாதம் அரும்புதலைக் கண்டு அப்பாரிசாத புத்திரற்குக் காமவல்லி என்னும் மங்கையை மணமியற்ற ஒரு விழா நடத்தினள். இவ்விதம் தாவரங்களுக்கு மணமியற்றும் வழக்கம் தற்காலத்திலும் இருந்து வருகின்றது. பெரும்பாலும் அரசுக்கும் வேம்பிற்கும் மணமியற்றுவது சர்வசாதாரணமாய் இருக்கின்றது.

கற்பு - கைம்பெண் அச்சுவகண்டன் போரில் மாண்டதைத் தான் கண்டமாத்திரத்திற்றனே பட்டத்துத்தேவி கண்ணீருள் ஆழ்ந்து மூழ்கி மண்மீது வீழ்ந்து மாழ்கி வெற்றுடலமாயினள். அவனது பிறமனைவிகள் தங் காதலனைக் கண்டு கூந்தல் அவிழப் பூமியில் வீழ்ந்து புலம்பினார்கள். பின்னர் தம் ஊரையடைந்து தங்கள் திருமங்கலியங்களைக் களைந்து காமன் பவனி வரும் தம் மனமாகிய வீதியை அவன் வாராதொழியக் கற்பாகிய வேலியால் அடைத்து நிறையென்னும் தாட் பாளினாற் பொறிகளாகிய கபாடங்களை மூடினார்கள். இது கைம்பெண்கள் பின் பற்றற் குரியது.

சகுனம்—முரசம் முதலிய பறைகளில் அரவ முதலிய விஷசெந்துகள் குடி கொள்வதும், தேர்க்கூம்புகளிற் காக்கை கள் தேக்குவதும், ஆடவர் இடத்தோளும், இடக்கண்ணும் துடித்தலும், வான்மீன்கள் வீழ்தலும் துர்ச்சகுனங்களாகக் கரு தப்பட்டன. தற்காலத்தும் காகம் இடம் பாய்தல், விதவை, பூனை, ஒற்றைப் பார்ப்பான் குறுக்கிடல் முதலியவை துர்ச்சகுன மாகக் கருதப்படுகின்றது.

## மதக்கோட்பாடுகள்

துறவும் சருக்கத்து முனிவர்கள் பயாபதிக்குக் கூறும் வாயான் அருகமதக் கோட்பாடுகள் மிகவிரிவாக எடுத்தோதப் படுகிறது. அருகனே அவர் வழிபடுந் தெய்வம். இந்நூலின் பல இடங்களில் பொழிலிலும் களத்திலும் அருகனுக்கு ஆல யம் அமைப்பது கூறப்படுகின்றது. ஆன்மாக்களை நரககதி, விலங்குகதி, மானுடகதி, தேவகதியென நான்கு பெரும் பிரிவுக ளாகப் பிரித்து ஒவ்வொன்றன் தன்மையும் உணர்த்தப்படுகிறது. நரக வேதனையைப் பற்றிக் கூறும்பாக்களை வாசிப்பாருக்கும் கூட மனவேதனையுண்டாகும். பாவஞ்செய்த ஆன்மாக்களைச் செப்புக்கடார நெய்யிலிட்டுப் பொரிப்பராம்; நெருப்புச்சொலிக் கும் இருப்புப் பாவையைத் தழுவச் செய்வராம்; தாமிரத்தை உருக்கி வாயில் வார்ப்பராம்; இப்பாடு படுபவர்கள் தம் மனை

யானை விடுத்துப் பிறர் மனையாளிடஞ் சென்றோரும், உயிர்க் கொலை விரும்பினோரும், பாவவழியால் பொருள் ஈட்டினோரும் போன்ற பாவிகளேயாம். மனிதன் உலகில் அநுபவிக்கும் இன்பமானது 'ஒருவனை ஒரு மதயானை துரத்த அவன் ஓடி வந்து ஓர் பாழ்ங்கிணற்றில் மறைய, அக்கூவத்தினுட் பாம்பு வதிய வெளியே ஆம்பலும் நிற்க இரண்டனுக்கும் நடுவே அவன் ஒரு புல்லைப் பற்றித்தொங்கும்போது அப்புல்லை எலி அறுக்க, இதன் நடுவில் தனக்குமேல் இருக்கும் தேன் கூண்டினின்று ஒழுகும் மதுவில் ஒரோ வொரு துளியை நாக்கினால் நக்கித் துன்பம் மறந்து இன்பமெய்துவதை யொக்கும்.

செல்வத்தை ஓர் விலை மாதிற்கு ஒப்பிடப்படுகிறது. செல்வி தன்னோடு கூடியிருந்தவனை இகந்து வேறோர் புத்தானை விரும்புவாள். பரத்தையரைக் காமுற்றவன் பொருள் அழிவதுபோல் திருமகளை விரும்பினாற் குணங்களும் அழியும் பூமடந்தையும் இவ்வாறே தன்னை நெடுங்காலம் ஆண்டுவந்த வேந்தன் இவன் என்று ஒருவனிடத்தாயினும் பற்றுவையாள். யாவன் ஒருவன் வந்து தன் கையிற் பிடிப்பானோ அவனிடத்து அளாவுவள். இவளிடத்து ஒருபோதாயினும் அந்தரங்கப்பற்று வையன்மின், எனப் பலப்பட யாக்கை நிலையாமை, செல்வநிலையாமை வனப்பு நிலையாமை முதலியவற்றைப் பற்றிக் கூறப்படுகின்றது.

## Literary Value of Chulamani

பெரும்பான்மையும் சமணநூல்கள் எல்லாம் துறவு, முத்தி முதலியவற்றைக் கூறி முடித்தல்போலச் சூளாமணியும் துறவுச்சருக்கம் முத்திச் சருக்கத்தோடு முடிவு பெறுகின்றது. இந்நூலில் தற்காலத்து வழக்கிலில்லாப் பல சொற்கள் காணப்படுகின்றன.

இதில் ஒரு பொருளைப்பற்றிச் சிந்தாமணியிலுள்ளதுபோல் இரண்டு மூன்றடுக்கிய பாடல்கள் வந்துள்ளன. தேவபாணிக் கொச்சகம் எனப்படும். இது, இரதநூபுரச் சருக்கம் அருகனைப் பற்றிக் கூறிய பாக்களால் தெரியவரும். இன்னும் சொற்போக்கு பொருட்போக்கை ஒத்திருப்பது பின்வருமடிகளால் தெரியவரும்.

> 'துளை படு குழலிசை துடியொடு சிறுபறை
> இளை யொடு படலிகை கிளையொடு கிளர்தர
> வளை யொடு வயிரிசை மருவின மழையென'

இன்னும் பல அணிகளும் பெற்று, சொற்பொலிவு, பொருளமைதி, கதை முடிவு, சிறந்தநடை பெற்றுள்ளது இக்காவியம்.

இன்னும் இந்நூலில் யாவருக்கும் நகைப்புண்டாக்கத்தக்க வாறு விதூஷகன் அமைக்கப் பெற்றிருக்கிறன். காதிலே குண்டலங்கள் ஒளிவீச, குடுமியினடுவிலே பூமாலை இறுகக்கட்டி, இடையிலே ஒரு கையை ஊன்றி, மற்ற அத்தத்தில் அத்த வாளம் பிடித்து வெண்ணகை தோன்ற நகைத்துக்கொண்டு நின்று, பாடும் பாட்டும், இராகமும் தாளமும் ஒற்றுமைப்படக் காலால் நடித்து ஆடி ஆடி நகைச் சொற்களை இடையிடையே உகுக்கும் விதூடகப் பார்ப்பானைக் கண்டார் எவர்தாம் நகையடக்க வல்லார். அவன் திவிட்டனுடன் சென்று 'சோலையில் ஈதோ கள்வர் ! கள்வர் !!' என்று கதறி மாம்பழம் கொறிக்கும் அணில்களைக் காட்டிலும் தன் நிழலைக் கண்டு தானேவெருண்டு 'பூதம் பூதம் இனி இங்கே இருப்பது ஏதம்' என அலறி ஓடுவதும் கனிவகைகளிலே தன் மனம் ஏறுகிறதை

'ஓடுமே மன மோடுமே
........................
காடுசேர் பனி காண்டொறும்
ஓடுமே மன மோடுமே
ஊறுமே யெயி றூறுமே
........................
வேண்டுமே மனம் வேண்டுமே'

எனத் தெள்ளிய நடையில் வசனம்போற் பாடுவதும் ஆங்கில மகாகவியாம் ஷேக்ஸ்பியருடைய (Touchstone Fool) டச்ஸ்டோன் விதூடகன் இவர்களை ஒத்திருக்கின்றது.

சிந்தாமணி இதையொத்த ஓர் அரிய சமணகாவியமாதலால் அதனோடு ஒப்பிட்டு வியாசத்தை முடிப்பாம். இரண்டிற்கும் கீழ்க்கண்ட ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

1. அரசர் மந்திரிகளை ஆலோசித்தபின்னர் பிறகாரியம் செய்தல்.

2. ஆருகதசமயம் கோட்பாடுகள்—நரககதி முதலியவை.

3. முக்கிய புருஷர்களைச் சிந்தாமணியே சூளாமணியே என்று அழைத்தல்.

4. வெள்ளிமலையையும் வித்தியாதரர்களையும் பற்றிக்குறிப்பிடல்.

5. சோதிடத்தால் மண நிகழுமுறை கூறல், கனவில் நம்புதல்.

6. ஆடவர் பல பெண்டிரை மணத்தல்.

7, போர்செய்யு முறை.

8. செல்வ நிலையாமை யாக்கை நிலையாமைகூறி துறவு முத்திச் சருக்கத்தோடு நூல்முடித்தல்.

இனி இவ்வளவு சிறந்த இந்நூல் பிறநூல்களைப்போல் தமிழ்மக்களாற் பெரும்பாலும் பயிலப் படாததன் காரணம் நன்கு புலப்படவில்லை. அந்நூலைத் தாமோதரம்பிள்ளையவர்கள் முதன்முதலாக அச்சிட்டுத் தமிழுலகிற்கோர் பேருபகாரம் புரிந்துவிட்டார்களெனினும், இப்பதிப்பு உரையின்றி இருப்பதால் மகாமகோபாத்தியாயர்போன்ற ஆசிரியர்கள் இதை மிகத் தெளிவாகவும் உரையுடனும் அச்சிடுவார்களாயின் தமிழுலகிற்கோர் பெரும்பயன் செய்தவராவர். சூளாமணியும் யாவராலும் பயிலப்பெற்றுச் சிறந்து விளங்கும்.

முற்றும்

---

# திருமண வினைக் குறிப்பு

க. மணமகனும் அவர் பெற்றோரும் மணவறைக்கு வருதல்.

(அ) ஆசிரியர் வழிபாடு.

திருமணத்தை நடத்திவைக்கிற ஆசிரியத்தன்மை பூண்டு அருள் புரியும்படித் தங்களை வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன்.

(ஆ) வேண்டுவென கருதல்.

பிள்ளையாரே போற்றி சிவ சிவ சிவபெருமானுடைய அருளினாலே பாண்டிவளநாட்டில் (ஊர்)　　　　ல்) மெய்கண்டான் யாண்டு ௫௱௪ (　　　　திங்கள்　　　　ஆம் நாள்　　　　கிழமை நன்னாளில்　　　　நற்பொழுதில் சிவாகம விதிப்படி என்னுடைய மகன் அல்லது மகள்　　　　க்குக் கற்பியல் மணம் செய்விக்கும் பொருட்டுப் பிள்ளையாரையும் திருவிளக்கு, நிறைநாழி, நிறைகுடம் ஆவினிலைந்து செந்தீ இவற்றினிடமாக நின்று அருள்செய்யும் இறைவன் இறைவியையும் வழிபடுகிறேன்.

## (இ) பிள்ளையார் வழிபாடு.

" ஐந்துகரத்தனை ஆனைமுகத்தனை
இந்து இளம்பிறைபோலும் எயிற்றனை
நந்திமகன்றனை ஞானக்கொழுந்தினை
புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே "

என்னும் திருமந்திரச் செய்யுளைப் பாடிப்பிள்ளையார் உருவத்தை மனத்தில் எண்ணி,

"பிள்ளையார் அப்பனே!" இவ்வணைமீது எழுந்தருள்க' என்று சொல்லி இருக்கை கொடுத்து, 'நறுமண நீராடியருள்க' என்று நீராட்டி, 'இவ்வாடையை அணிந்தருள்க' என்று ஆடை அணிந்து, 'திருநீறுசாத்தி அருள்க' என்று திருநீறுசாத்தி, 'நறுமணச்சாந்து பூசிஅருள்க' என்று சந்தனம்பூசி, 'நறுமலர்மாலை சூடிஅருள்க' என்று மலர்மாலைசூடிப்,

போற்றி மலரிடுக

உலகிற் கலப்பால் ஒன்றுனாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி.

## (ஈ) திருவிளக்கு வழிபாடு.

போற்றி மலரிடல்.

உலகம் அறிவுற ஒளிர்வாய் போற்றி
எண்வகைச் செல்வம் இணைப்பாய் போற்றி
இறைவன் உருவாய் இசைந்தாய் போற்றி.

## (உ) நிறைநாழி வழிபாடு.

போற்றி மலரிடல்.

(அடியில்) நான்முக போற்றி
(நடுவில்) திருமால் போற்றி
(முடியில்) அரனே போற்றி

(இடப்பக்கம்) பற்றருள் பவனேபோற்றி
(வலப்பக்கம்) வீடருள் பவனேபோற்றி

உள்ளே கங்கை யமுனை நருமதை கோதாவரி பாலாறு காவிரி பொருனை ஆகிய இவற்றுள் நின்று மாசு போக்கித் தூய்மை ஆக்கும் அருள் அம்மையே போற்றி.

(எ) ஆவினிலைந்து வழிபாடு.

ஆனிடத்தைந்தும் ஆடும் ஐம்முகக் கடவுள் போற்றி.

(ஏ) நறும்புகை இடுதல்.

தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு சர்க்கரை உண்பித்தல் சூடன் பணிமாறல்;

(ஐ) வேண்டுகோள். (பிள்ளையாரிடத்தில்).

பிள்ளையாரே என்னுடைய மகன் அல்லது மகள் ( க்கு உமது அருளால் மணம் நடத்தப்போகிறபடியால் இதற்கு யாதொரு இடையூறும் நேரிடாமல் காப்பாற்றி யருள்க.

(ஒ) இறைவன் இறைவி வழிபாடு.

திருச்சிற்றம்பலம்.

மண்ணின் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணின் நல்லஃ துறும் கழுமல வளநகர்ப்
பெண்ணி னல்லா ளொடும் பெருந்தகை யிருந்ததே.

எண்ணிலா கமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனையென உரைத்தருள
அண்ண லார்தமை அர்ச்சனைபுரிய ஆதரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

திருச்சிற்றம்பலம்.

(இறைவற்கு) என்று பாடிப் போற்றி மலரிடுக
(உச்சிமுகம்) ஓம் வினை தீர்த்தாளும் விருப்பனேபோற்றி
(கிழக்குமுகம்) வினைப்பயனூட்டும் வெய்யோன் போற்றி
(தெற்குமுகம்) அகத்தை யொடுக்கும் அந்தணன் போற்றி
(வடக்குமுகம்) அகத்தை யெழுப்பும் அண்ணலே போற்றி
(மேற்குமுகம்) கான்முளை யருளும் காதல போற்றி

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.
இறைவிக்கு உமையொரு பாகம் உடையாய் போற்றி
மன்னுபே ரறம்வளர்த்த மாதே போற்றி
தன்னிகரில் இன்பருளும் தாயே போற்றி.

## (ஒ) செந்தீ வழிபாடு.

'சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள் வெண்ணீற்றாய்
பங்கயத் தயனு மாலறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்த மேவியசீர்
ஆதியே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே'

என்று ஓதிப் போற்றுதல்.

## அவி சொரிதல்.

உமையொருபாகம் உடையானுக்கு உவகையாக
வினை தீர்த்தாளும் விருப்பனுக்கு உவகையாக
வினைப்பயனூட்டும் வெய்யோனுக்கு உவகையாக
அகத்தையொடுக்கும் அந்தணனுக்கு உவகையாக
அகத்தையெழுப்பும் அண்ணலுக்கு உவகையாக
கான் முளையருளும் காதலற்கு உவகையாக
மாதொரு கூறுடை மணாளற்கு உவகையாக.

## (ஔ) நறும் புகையிடல்.

தேங்காய் பழம் முதலிய உண்பித்தல்.

சூடன் பணிமாறல்.

## வேண்டுகோள் :—முக்கண் (அப்பரிடம்)

அருள்வளர் முக்கண் அப்பநின் திருமுன்பு
நின்னருள்நோக்கால் நிகழ்மணம் நடைபெற
ஊறுதீர்த்தருளி உறுதுணையாய் நின்று
நன்குநடாத்தி நலனெலாம் புரிந்து
பிள்ளையும் பெண்ணும் பிரிவிலன் பார்ந்தே

இல்லறம்பேணி இன்பம்திளைத்து
நன்மக்கட்பெற்று நயப்படவாழ்ந்து
தமிழ்மணங்கமழும் சைவந்தழீஇநல்
ஆல்போற்றளிர்த்தே அறுகுபோல் வேரூன்றி
மூங்கிலன்னசுற்றம் முசியாமல்வாழ்வோங்கிப்
பல்லாண்டு வாழக்கண் பார்த்தருள்க.

உ. மாப்பிள்ளையும் அவர் மாமனும் வந்து மேற்கூறிய வழிபாடு செய்தபின் கன்னிப்பெண் வருதல்.

### (அ) முளை தெளித்தல்

உலகினுக்கு அம்மையப்பரே! ஞாயிறு திங்கள் முதலியவற்றின் இடமாக நின்று இம்முளைகளை எங்ஙனம் வளர்த்து வருகின்றீரோ அங்ஙனமே எங்கள் நல்ல கருத்துக்களையும் நிறைவேற்றுகின்றீர். ஆதலால் என் மருமகன் அல்லது மருமகள் தொடங்க எண்ணியிருக்கும் மனைவாழ்க்கை வளர்ச்சியடைய அருள்செய்க.

### (ஆ) காப்புக் கட்டுதல்

'பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே'

என்று ஓதி வழிபாடு செய்தபின் திருமணம் முட்டின்றி நடைபெறும் பொருட்டுத் திருவருட் காப்பாக இந்நாணைக் கையிற் கட்டுகின்றேன் என்று சொல்லிக் காப்புக் கட்டுதல்.

### (இ) பூணூல் அணிதல்

### (ஈ) ஐந்தெழுத் தோதல்

### (உ) மண ஆடை கொடுத்தல்

ங. பெண் அவள் பெற்றோர் மேற்கூறிய வழிபாடு செய்தல்.

ச. பெண் அவள் மாமனர் மேற்கூறிய வழிபாடு செய்தபின் கன்னிப்பெண் வந்து முளை தெளித்தல், காப்புக்கட்டுதல், ஐந்தெழுத்து ஓதல், மணச்சீலை கொடுத்தல், வீட்டினுள் நாட்பானை ஏறவைத்தல், கலப்பருப்பிடுதல் முதலியன.

ரு. நாட்கால் நடல் ஊஞ்சல்.

௬. மகட்கொடை. (தந்தை மணமகள் கையை மண மகன் கைமேல்வைத்து (ஊர்)
மகன்
ஆகிய நானும் என் மனைவி ம்
இறைவன் திருவுள்ளப்படி எங்கள் மகள் திருவளர் செல்வி
ஆகிய
இவளை ஊர்
அவர்களுடைய பேரனும்
அவர்களுடைய மகனுமாகிய திருவளர்
செல்வன் உங்கட்கு இல்வாழ்க்கைத் துணையாக இறைவன் இறைவி ஆன்றோர் முன்னிலையில் உள்ளும் புறமும் ஒத்துக் கொடுக்கின்றோம் (நீர் வார்த்தல்). நீங்கள் இருவரும் அன்பும் அறனும் உடையவர்களாய் மனையற வாழ்க்கையைச் செம்மைபெற நடத்தி விருந்தோம்பி வேளாண்மைசெய்து நன்மககட்பேறு உடையவர்களாய் நீடூழி வாழ இறைவன் அருள் செய்யுமாறு வேண்டுகின்றோம்.

## (ஆ) மணமகள் மாலையிடுதல்

இறைவன் அருளால் நாம் நடத்தப்போகும் இல்லறவாழ்க்கைக்கு அரிய துணையாக உங்களைப் பெறுகின்றேன். உங்களைப் பேறுவதில் உங்கள் அருமையான தாய் தந்தையர் போலவும் பெரியோர் ஒழுகியவாறு இல்லறத்தை நடத்துவதில் உங்களுக்கு உண்மையான அமைச்சாகவும் அருமைத் தோழியாகவும் இருந்து வரவும் என் மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் உங்கள் மனம் நோவ யான் எச்செயலையும் செய்யாதிருக்கவும் இது முதல் உங்களை அல்லாத பிற ஆடவரை எல்லாம் எனக்கு எந்தையும் உடன் றோன்றினரும் மக்களுமாகக் கருதி நடக்கவும் நாம் இருவரும் உடலும் உயிரும் போலவும் கண்ணும் இமையும் போலவும ஒருவர்க்கொருவர் உதவியாய் இருக்கவும் எம்பெருமான் அருள் செய்யுமாறு வணங்கி இம்மாலையை இடுகின்றேன்.

## (இ) மணமகன் திருநாண் பூட்டல்

இறைவன் அருளால் நாம் நடத்தப்போகும் இல்லறவாழ்க்கைக்கு அரிய துணையாக உன்னைப் பெறுகின்றேன். உன்னைப் பேறுவதில் உன் அருமையாகிய தாய் தந்தையர் போலவும் பெரியோர் ஒழுகியவாறு இல்லறத்தை நடத்துவதில் உனக்கு உண்மையான அமைச்சாகவும் அருமைத் தோழனாகவும் இரு

ந்து வரவும் என் மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் உன் மனம் நோவ யான் எச்செயலையும் செய்யாதிருக்கவும் இது முதல் உன்னை அல்லாத பிற மாதரையெல்லாம் எனக்கு ஈன்ருளும் உடன் ருேன்றினரும் மக்களுமாகக் கருதி நடக்கவும் நாம் இருவரும் உடலும் உயிரும் போலவும் கண்ணும் இமையும் போலவும் ஒருவர்க்கொருவர் உதவியாய் இருக்கவும் எம்பெருமான் அருள் செய்யுமாறு வணங்கி இத் திருநாணைப் பூட்டுகின்றேன்.

(ஈ) மாலை மாற்றுதல்

(உ) கண்ணேறு கழித்தல்

(ஊ) கைப் பிடித்தல்

உமையொருபாகன் முன்னிலையில் நான் இல்லற ஒழுக்கத்தைச் செம்மையாய் நடத்தவும் நன்மக்கட் பேற்றை யடையவும் உன்னைக் கைப்பிடிக்கிறேன்.

(எ) பெரியோர் வாழ்த்துகூறி திருநீறு பூசுதல்

(ஏ) மணவறையை மும்முறை வலம் வருதல்

அம்மி மிதித்து வடமீன் பார்த்தல் பொரியிடல்

அருள்வழி நின்று யாங்கள் அறத்துப் பால்பற்றிச் செய்வன எல்லாம் அம்மையப்பருக்கு உவகையாக. அருள்வழி நின்று யாங்கள் பொருட்பால் பற்றிச் செய்வன எல்லாம் உமையொரு பாகனுக்கு உவகையாக. அருள்வழி நின்று யாங்கள் இன்பத்துப் பால்பற்றிச் செய்வன எல்லாம் ஏழை பங்காளனுக்கு உவகையாக என்று சொல்லிப் பொரியிடுக.

(ஐ) மனை புகுதல்.

மங்கலப் பெண் வாழ்த்தல்.

பால் பழம் வழங்கல்· (மணமக்கட்கு.)

---

## தலைவி தலைவன் பெயரைக் கிளிவாயாற் சொல்லக்கேட் டின்புறுதல்

[திரு. வ. சுப்பையாபிள்ளை]

சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவேன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக் கொருகால் பேசாயே.

(சம்பந்தர் தேவாரம்)



தலைவி தலைவன் திருப்பெயரைக் கிளிவாயாற் சொல்லக்கேட்டுக் கழிபேரின்பம் எய்துவது

(இதன்பொருள்) அழகிய சிறகினையுடைய இளங்கிளியே இங்கே வா, உனக்குப் பாலும் தேனும் எவ் அளவில் கலந்து தரின் இனிமை பயக்குமோ அவ் அளவில் கலந்து நீ உண்ணத் தருகின்றேன். முத்தும் பவளமும் நிறைந்த கடற்றுறையினை யுடைய தோணிபுரத்தின்கண் எழுந்தருளியிராநிற்கும் இளம் பிறை சூடிய இறைவனுடைய திருப்பெயரை எனக்கு ஒருமுறை சொல்லுவாயாக.

இது குயில் விடுதூது, வண்டுவிடு தூது முதலிய கோவைத் துறைகளைப் போன்றது. இம்முறை செந்தமிழ் மொழிக்கே சிறப்புடையது. இவ்வழக்கு மணிமொழிப் பெருமான் காலந் துவங்கித் தமிழ் மொழியின்கண் மிக்குப் பரவிற்று. தமிழ் நாட்டின்கண் தலைவன் திருப்பெயரைத் தலைவி சொல்லுகிற வழக்க மில்லை. ஆகலான் பிறர் வாயாற் சொல்லக்கேட் டின்புறுவள். அம்முறையில் தலைவன் முதலியோர் பெயரைச் சொல்லும் பழக்கமுடைய வீட்டில் வளர்க்கப்படுங் கிளிக்கு நல்லுணவு கொடுத்துத் தலைவன் பெயரைச் சொல்லுமாறு கேட்க அது சொல்லுவதைப் பாலுந் தெளிதேனுங் கலந்து பருகினாற்போலக் கேட்டு இன்பம் எய்துவள். இனி,

உலகியலிலுள்ள தலைவன் தலைவி முறையினை எல்லா உலகங் களையும் படைத்துக் காத்து அழித்துவரும் முழுமுதற் செம் பொருள் மேலேற்றி அவரைத் தலைவராகவும், அவரையடைய விரும்பும் அடியார்கள் தங்களைத் தலைவிகளாகவும் வைத்துப் பாடுகிற வழக்கு நந்தமிழ்நாட்டுக்கே உரித்து.

உலகத்தில் மிக்க இனிமைதருஞ் சொல் மழலையேயாகும். அம்மழலை பயில்வது கிளியினிடமே யாகலான் ஈண்டுக் கிளி யினை எடுத்துக்கொண்டது வீடுகளிலும் திருக்கோயில்களிலும் கிளிகளை வளர்ப்பது இக்கருத்துப்பற்றியே. திருக்கோயில் களில் இறைவன் திருவடிவத்திற்கு முன்னும் கொடிமரத்திற் கருகிலும் கூடுகள் கட்டிக் கிளிகளை வளர்ப்பது இன்றும் காணப் பெறுகின்றது. இறைவழிபாடாற்றச் செல்வோர் இறைவன் பெயரைச் சொல்லும் பழக்கமுடைய அக்கிளிகளிடம் பெரு மான் திருப்பெயரைச் சொல்லுமாறு கேட்டு உள்ளம்நெக்குருகி இன்பமடைவார்கள். 'சொன்னதைச் சொல்லுங்கிளிப்பிள்ளை' என்றபடி அன்பால் உளமுருகி இறைவன் திருப்பெயரை அடிய வர்கள் சொல்வதைக் கேட்டு அப்படியே ஆண்டு வளர்க்கப்படும் கிளிகள் சொல்லும். வேறு எந்தப் பறவைகளுக்கும் பேசுமாற் றல் கிடையாது. ஆகலாற்றான் கிளியினை ஈண்டு எடுத்துக்கொண் டது.

அப்படியே 'வா' என்று கூறும் ஆற்றல் குயிலுக்கே மிகுதி யாதலால் தலைவனைத் தன்னிடம் வரும்படி அழைப்பதற்குத் தக்க வாயிலாகிய குயில்களைத் தூதாக விடுமுறையினை அடியிற் காணும் செய்யுளாற் காண்க.

"பானுறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியுமெழி லிளங்குயிலே
தேனோரும் பொழில் புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடைக்கே வரவொருகாற் கூவாயே"

பாட்டின் நுண்பொருள் விளக்கம்

தலைமகன் திருப்பெயரைச் சொல்லுமாறு ஊக்கங் கொடுத்தற்பொருட்டு அழகிய சிறகும் இளமையுமுடையதாகத் தலைவி கிளியினை வியந்து புகழ்ந்துரைக்கின்றாள். தலைவன் திருப்பெயரைச் சொல்லுகிற நாவிற்கு இனிய உணவு அளிக்குங் கருத்தினால் தேனும் பாலும் சுவைமிகப் பயக்கும் அளவாகக் கலந்து தருவதாகக் கூறப்பட்டது. தலைவனது திருப்பெயரும் அவ்வாறு இனிமை பயக்குமென்பதுங் கருதற்பாலது.

நெய்தல் நிலமாகிய கடற்றுறை பரிவுறுதற்கு இடமாதலின் அப்பரிவு தீரும் வண்ணம் தலைவனது பெயர் கேட்டு அக மகிழ்தல் விரும்பப்பட்டது. இளம்பிறையினைக் காணுந்தோறும் பிரிவுற்றோரது உள்ளம் கலக்கமுறுதலின் 'துளங்கு மிளம் பிறையாளன்' என்று கூறப்பட்டது. இறைவனது திருமேனி செம்பவளம் போலவும், அவரின் திருநீற்றின் ஒளி வெண்முத்தின் ஒளி போலவுமிருப்பதால் நிறைந்த பவளமும் முத்துங் கலந்துவருங் காட்சி இறைவனை நினைவூட்டுந் தன்மையது. தலைவிக்குத் தலைவன் திருப்பெயரை ஒருமுறை கேட்டாலும் அளப்பிலா மகிழ்ச்சி தருவதாதலால் 'திருநாமம் எனக் கொருகால் பேசாயே' என்று கூறும் நயம் மிகவும் பாராட்டற்பாலது. கிளி காமக் கடவுளுக்கு இருக்கையாதலால் அது தலைவிக்கு இன்பம் பயக்க வல்லதென்பதுஞ் சொல்லாமே யமையும்.

அடியில்வரும் மணிமொழிப் பெருமான் திருவாசகத் தேமொழியும் ஈண்டு நினைவுகூரற்பாலது.

"ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமந் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவ
எம்பெருமான் தேவர்பிரா னென்று" [போல்

பெண்கள் பக்கம்

# இரு பெண்மணிகளின் உரையாடல்

[திருவாளர். மூலத்துறை குமரநாயகம்பிள்ளை அவர்கள்]

(வழக்கம்போல் மாலையில் விளையாடவாராத தோழியை அவள் வீட்டில் சென்று வினவப் பார்வதி என்னும் பெண்மணி செல்கின்றாள்).

பார்வதி—மகா லட்சுமி! ஏன் நேற்று மாலை விளையாட வரவில்லை?

திலகவதி—பார்வதி! தயவு செய்து என்னை அவ்விதம் அழையாதே.

பார்வதி—பேரைச் சொல்லி அழைப்பது பிழையாயின் வேறு எவ்விதம் அழைக்கவேண்டு மென்பதைத் தெரிவித்தால் அங்ஙனமே செய்வேன். சிநேகிதத்தால் அவ்விதம் கூப்பிட்டேனே ஒழிய என்னிடத்தில் சூது இல்லை.

தில—பார்வதி! கோபித்துக் கொள்ளுகிறாயே. நான் பெயரைச்சொல்லி விளித்ததற்கல்லவே அவ்வித மொழிந்தது உண்மையில் எனது பெயரைச் சொல்லி அழைத்திருப்பின் அதைப்போல் உவகையை ஊட்டவல்லது வேறு யாது உளது.

பா—நீ சொல்லுகிற தொன்றும் எனக்குக் குருடன் கையில் விளக்குப்போல் விளங்குகின்ற தில்லையே. உண்மைப் பெயரென்ன? பொய்ப்பெயரென்ன. உன்னிடத்தில் தான் இவ்விதம் கேட்டேன்.

தில—தோழீ, நீயும் இவ்விதம் உரையாடலாமா; தெரிவிக்கின்றேன் கேள். எனது தாயார் மகா லட்சுமி என்றும் தந்தையார் திலகவதி என்றும் என்னைக் கூப்பிடுவார்கள். நேற்றைக்கு, தாயாரைப்போல் என்னை விளிக்க வேண்டுமென்று என் தந்தையிடம் கேட்டேன். விடையாக நாம் சைவசித்தாந்திகள் என்றும் வைணவப் பெயராகிய மகா லட்சுமி என்று அழைப்பது உசிதமல்லவென்றும் ஒப்புயர்வற்ற திருவாதவூரடிகள்.

கொள்ளேன் புரந்தரன்மால் அயன்வாழ்வு குடிகெடினும்
நள்ளேனு னதடியாரோடல்லால் நரகம் புகினும்
எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா
உள்ளேன்பிறதெய்வம் உன்னை அல்லால் எங்கள்உத்தமனே.

என்றும்; மாசி மகத்தன்று நெல்லையில் தெப்போற்சவம் கொண்டு எழுந்தருளும் வாகீசப் பெருந்தகையாரும் தமது தேவாரத்தில், "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம். சிவபெருமான் சேவடியே சேரப்பெற்றோம்" என்று அருளிச் செய்துள்ளார்களென்றும், பல கனிகள் நிறைந்த தோட்டத்தில் செல்லும் காகம் வேப்பங்கனியை நாடுவது அதன் குற்றமானாற்போல், சிவநாமமிருக்க வேறு நாமந்தரிப்பது இழுக்காமென்றும் இப்பிழை வாராதிருக்க வேண்டியே சொல்லரையர் "முன்னம் அவனுடைய நாமம் கேட்டாளென்று" முதற்கண்ணே நாமத்தை வைத்தருளினர் என்றும் கூறி முடிவில் திலகவதி என்னும் நாமமே சிறந்ததெனப் பல்லாற்றானும் நன்கு விளக்கிக்காட்டினார்கள்: அது முதல் எனது சிந்தனை முழுவதும் திலகவதியாருடைய தூய்மைத் தன்மையிலும் அத்திரு நாமத்திலும் சென்றமையால் நீ மகாலட்சுமி என்றழைத்த பொழுது எனக்குச் சலிப்புத் தோன்றியதன்றி வேறன்று.

பா—நல்லது, நீ ஏதோ சிறிது கதைகளைக்கேட்டு ஏமாந்துவிட்டனை. தாய் சிறந்தவளா, தந்தை சிறந்தவனா, என்று ஆலோசிக்காமல் தாயிட்ட பெயரை வெறுக்கின்றனையே அஃது முறையா?

தில—என்னை அப்படி நினைக்க வேண்டாம்: நான் வெகு நேரம் வழக்காடிக் கடைசியில் தான் தந்தையார் சொல்லை அங்கீகாரம் செய்தேன். நீ மட்டும் திலகவதியாருடைய சரிதத்தை ஓர் முறை கேட்டிருப்பாயாயின் நிச்சயமாய் இங்ஙனம் பிதற்றுதல் செய்யாய் என்பது உறுதி.

பா—ஏ தோழி! நான் வாசித்ததில்லை என்று நினைத்திருந்தாய் அநேக முறை பயின்றுளேன். நான் சொல்லுவதெல்லாம் திலகவதி என்ற பெயர் உனக்குப் பொருந்தாதென்றல்ல [அந் நாமம் புனைந்த உன்னைத் தோழியாகப்பெற நான் என்ன புண்ணியம் செய்தேனோ யறியேன்] தந்தையைக் காட்டிலும் தாய் நம்மிடம் அன்புடையவளன்றோ: தாய் புனைந்த நாமத்தைச் சுவீகரிப்பதல்லவா நமக்கழகு.

தில—நீ சொல்வதை நான் தடுக்க முடியாது ஆனால் ஆன்றோர்கள் எல்லாம் எனது இனிய தந்தை சொல்லியுள்ளவாறே கூறியுள்ளார்கள். அதனாற் சம்மதித்தேனே ஒழியத் தாயை அவமதித்து அவளிட்டபெயர் கூடாதென்று நீக்கியிருப்பின் நீ கூறிய குற்றத்திற்கு நான் பாத்திரம் தான். (தொடரும்)

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டான் யாண்டு-எ௱ச புரட்டாசித் திங்கள் 1927ஆ செப்டம்பர்மீ—அக்டோபர் | பரல் க |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இலங்கை இந்திய வாலிபர் தமிழ்ச்சங்க

### ஆருவது ஆண்டு விழா முன்னுரைச் சொற்பொழிவு

(சகுக-ம் பக்கத் தொடர்ச்சி)

[திரு. கா. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., எம். எல்]

தமிழ் மறைகள் மறைந்த பின்பு அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கினையும் உணர்த்தும் பொதுமறையாகத் திருவள்ளுவநூலும் தமிழாது பண்டை வழக்கங்களை யறிதற்குத் தொல்காப்பிய முதலிய சங்கநூல்களும் கடவுளை இன்னிசைப்

பாடல்களால் அன்போடு வழிபடுதற்குத் தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளும் மந்திரம் யோகம் மருத்துவம் முதலியவற்றைப் பயில்வதற்குப் பதினெண்சித்தர் நூல்களும் ஒப்புயர்வற்ற சிவஞானத்தை யடைவதற்குக் கருவியாக சிவஞானபோத முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களும் எழுந்து நிலவலாயின. தமிழர் தமது வீட்டிற் செய்யும் சடங்குகளையும் கோயிலி லாற்றும் பூசனைகளையும் ஒழுங்கு படுத்துவதற்குச் சிவாகம விதிகளைக் கையாளுகின்றார்கள். அவையுட் சில சிவாகமங்களினும் பத்ததிகளினும் வடமொழியி லிருப்பனவாதலால் அவற்றைத் தமிழில் தழுவி அமைத்துக் கொள்வதொன்றே செய்யக் கிடப்பது.

அது முடிவுபெற்றால் சைவர்களுக்குத் தமிழிலேயே சமய நூல்கள் யாவும் அமைந்துவிடும். வடமொழியிலுள்ள வேதம் ஆகமம் ஸ்மிருதி இதிகாசம் புராணம் ஆறங்கம் உபவேதம் உபாங்கம் முதலிய நூல்கள் தமிழர்க்கு வேண்டுவனவல்ல. வேண்டுமானால் அவற்றைத் தமிழில்மொழிபெயர்த்துத் தகாதனவற்றை விலக்கித் தக்கவற்றைத் தழுவிக்கொள்ளலாம். புலாலுண்ணல், வருணம் என்பவற்றை வற்புறுத்தும் பகுதிகளையொழிக்கவேண்டும். இப்பொழுது சமயநூல்களைப்பற்றிப் பேசுகின்றவர்கள் பலரும் மேற்கூறிய வடமொழி நூல்களையே நமது சமய சாத்திரமென்றும் அவை இல்லாமற்போனால் நமது சமயம் இல்லையென்றுங் கூறி முழக்கஞ் செய்வதால் அவற்றின் இயல்பினை ஈண்டுச் சுருக்கமாக ஆராய்வாம்.

வடமொழியில் வேதமென்பது இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு தொகை நூல்களையே சிறப்பாகக் குறிப்பது. பொதுப் பொருளில் வேதம் என்றசொல், அறிவுதரும் நூல்களைக் குறிக்கும். எச்சமயத்தாரும் தஞ் சமயநூல்களை வேதமாகக் கூறுவது வழக்கமாகிவிட்டது. கிறித்துவர் தமது விவிலியநூலைச் சத்தியவேதமென்கின்றார்கள். கிறித்து மதத்தில் ஒருவன் புகுந்தால் அவன் வேதக்காரனாகிவிட்டான் என்று சொல்வது சில இடங்களில் உலகவழக்காகக் கேட்கப்படுகின்றது. இங்ஙனமே மகம்மதியர்களில் கொரானைத் தங்கள் வேதமென்கின்றார்கள்.

ஆதியில் புத்தரும் சமணரும் தங்கள் சமயநூல்களை வேதமென்றே அழைத்தனர். சிவாகமத்தை நீலகண்ட சிவாச்சாரியார் நான்கு வருணத்தார்க்குமுரிய வேதமென்று கூறினர். வடமொழி மருத்துவநூலை ஆயுள்வேதமென்று சொல்வது வழக்கமா யிருக்கின்றது. ஆயுள் வேதமென்று தனிநூல் ஒன்று

வடமொழியில் இல்லை. இசைநூலினைக் காந்தருவ வேதமென்றும் பொருள்நூலினை அருத்தவேதமென்றும் படைக்கல நூலைத் தனுர்வேதமென்றுங் கூறுப. தமிழிலுள்ள சிறந்த தேவார திருவாசகங்களையும் நாலாயிரப் பிரபந்தங்களையும் சைவரும் வைணவரும் முறையே தத்தமது வேதமென்பர். இதுகாறுங் கூறியவாற்றால் சமய நூலினையாவது உயர்ந்த பிறநூலினையாவது குறிப்பதற்கு வேதமென்ற சொல்லை வடமொழியாளரும் பிறரும் வழங்கி வந்திருக்கிறார்கள். வேதமென்பது உறுதிமொழி கட்டளையென்ற பொருளிலும் உலகவழக்கில் பயில்கின்றது. அவன் சொல்வதுவேதமா? என்றும் இவர் சொல்வது அவருக்கு வேதம் என்றும் வழங்கும் வாக்கியங்களின் பொருளை உற்று நோக்குக. இதனால் நாம் தெரிந்துகொள்வது யாதெனில் வேதமென்ற சொல் அதன் பொதுப்பொருளிலேயே பெருவழக்கிற்றாய் வழங்குதலின் வடமொழியிலுள்ள நான்கு வேதங்களிருந்த மூலையையும் அறியாத யாவரும் வேதமென்ற சொல்லைக் கையாளுகிறார்களென்பதே.

இதனை யறியாது வேதமென்ற சொல்லைக் கேட்டவுடனேயே அது சிறந்ததோர் கடவுள் வாக்காமென்று நம்மவர்கள் நம்பிவிடுகிறார்கள். வேத நிந்தனை கூடாதென்றால் அறிவு தரும் நூல்களை இகழக்கூடாதென்பதே பொருளாகும். அங்ஙனமின்றி வடமொழி வேதங்களை இகழக்கூடாதென்பதே. அதன் பொருளென்றால் வடமொழி வேதங்களில் சைவர்கள் புறக்கணிக்கக் கூடிய பகுதிகள் பல விருக்கின்றனவென்று சைவ சித்தாந்த நூல்களே கூறுகின்றன.

வேதம் திகழ் பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்தமாகும் என்ற விடத்து அக்கருத்துக் குறிக்கப்பட்டமை காண்க.

'வேதம் பசு அதன்பால் மெய்யாகமம்' என்றால் பசுவில் கொள்ளத்தக்க பால் ஒழிந்த உதிரம் எலும்பு. மேதை முதலிய பிற பகுதிகள் தள்ளத் தக்கனவேயாமன்றோ? வடமொழி வேதங்களை நடுவுநிலையாகப் பார்க்குமிடத்துப் பலிகொள்ளும் பல வேறு தெய்வங்களைப் பற்றிய பாடல்களையும் சோமபானம் முதலிய இழிந்த வழக்கங்களையும் வேள்வி விதிகளையும் கூறும் பகுதிகளையுமே அவை தம்முட் கொண்டுள்ளனவென்பது நன்கு விளங்கும். சில இடங்களில் சில நல்ல கருத்துக்கள் அவற்றுட் காணப்படினும் அக்கருத்துக்கள் பிறநூல்களினும் உண்மையால் அவற்றினால் வந்த பெருமை யொன்றும் வேதத்தைக் கடவுள் வாக்காக மாற்றமாட்டாது. வேதப் பாடல்களைச் செய்த

முனிவர்கள் இன்னாரென்று ஆண்டே சுட்டப்பட்டிருப்பதாலும் வேதப்பாடல்களெல்லாம் கடவுள் வாக்கென்று வேதத்துள் யாண்டுங் கூறப்படாமையாலும் அவை நம்மால் பெரிதும் போற்றத்தக்கனவல்ல. ஊன்பயில் வேள்வியும் பல தெய்வ வழிபாடும் விரும்பாதவர்கள் வேதத்தைப் படித்துப் பெரும்பயன் அடைவதில்லை. ஆதலால் சைவர்க்கு வடமொழி வேதம் வேண்டப்படுவதில்லை என்பது முடிந்தது.

இனி உபநிடதம் 108-ம் வேதாந்தமென்றும் வேதத்தின் ஞானகாண்டமென்றும் கூறப்படும். சிலர் உபநிடதங்களையே வேதமென்று கூறுவார்கள்; உபநிடதங்களிலே பலவகையான தத்துவ ஆராய்ச்சிகள் தொகுக்கப்பட்டுள்ளன. தெளிவாக சைவக்கொள்கைகளை எடுத்துக்கூறும் உபநிடதங்கள் சுவேதாச்சுவரம் அதர்வசிரசு முதலிய சிலவே. ஆண்டுக் கூறப்பட்டுள்ள கருத்துக்களையும் அவற்றினுஞ் சிறந்த உண்மைகளையும் நமது சைவத் திருநெறித்தலைவர்களாகிய பெரியோர்கள் தமது சிவாநுபவப் பயனாய திருவருட்பாடல்களிலே செவ்விதிற் றெரித்திருப்பதால் சைவ உபநிடதங்கள் நமக்கு இன்றியமையாதனவென்று கருதவேண்டியதில்லை அவற்றை நாம் தள்ளவேண்டியதுமில்லை. 'அந்நிய நூலின்விதி. அவிரோதமேல் உன்னேல் பழுதென்று உளத்து' என்றபடி உபநிடதங்களிற் சைவத்தோடு ஒத்த கருத்துக்களை நாம் ஏற்றுக்கொள்ளலாம்.

உபநிடதக் கருத்துக்கள் பலவும் பண்டைத்தமிழ்ப் பேரறிஞரின் உயர்கொள்கையைத் தெரிப்பனவென்பது சாந்தோக்கிய உபநிடதத்திலே ஓரரசன்பால் நான்கு பிராமணர் முதன் முதல் உயர் ஞானம் பெற்ற சரித்திரத்தால் இனிது விளங்கும். உபநிடதமொன்றில் வேதம் புராணம் மிருதிகள் யாவும்பரம்பொருளின் சுவாசமென்பது உபசார வழக்காதல் காண்க. வான்மீகரும் வியாசரும் செய்த இதிகாசங்களும் சூத முனிவன் உரைத்த புராணங்களும் எவ்வாறு பரம் பொருளின் சுவாசமோ அவ்வாறே வேதம் முதலியனவும் பரம் பொருளின் சுவாசமென்றுணர்க.

இனி ஆறங்கமென்பது இலக்கணம், நிகண்டு, சோதிடம், யாப்பு, எழுத்தொலிநூல், செயன்முறை என்பன. இவை மந்திர நூல் யாவற்றிற்கும் பொதுவான உறுப்புக்கள். தமிழிலேயுள்ள மந்திரங்களைத் தமிழ் முறையிலே பயில வேண்டுமாதலால் வடமொழியிலேயுள்ள ஆறங்க நூல்கள் நமக்கு வேண்டுவனவல்ல. அவைகள் சிவபெருமானாலே இயற்றப்பட்டனவல்ல. சிட்சையும் வியாகரணமும் பாணினியாலும் நிருத்தம் யஸ்க முனிவ

ராலும் சோதிடம் ஆதித்தியர் முதலியவர்களாலும் சந்த நூல் பிங்கல முனிவராலும் கல்ப சூத்திரங்கள் ஆசுவலாயனர் முதலிய பதினெண்மராலும் இயற்றப்பட்டன வென்பது வெளிப்படை. வடமொழி வேதத்தை வியாசர் தொகுத்தது நாலாயிரம் ஐயாயிரம் ஆண்டுகளுக்குள்ளாக. அங்க நூல்கள் இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்குள்ளேயே இயற்றப்பட்டன. வியாகரணம் இந்திரன் முதலியோர்களால் பாணினிக்கு முன் இயற்றப்பட்டன வென்ப. இந்திர வியாகரணமும் தொல்காப்பிய காலத்ததே.

இனி உபாங்கமாவது புராணம் நியாயம் மீமாம்சை ஸ்மிருதி என்பன. புராணங்களில் தள்ளத்தக்கன பல. அவை பலவுங் காமியப்பயன் கருதித் தவங்கிடந்தவர்களுடைய சரித்திரத்தையும் அரசர் முனிவர் முதலியோர் வரலாற்றையும் கூறுவன. அவை யாவும் பெரியபுராணத்தைப்போல அத்துணைச் சிறந்தனவல்ல. தமிழிலே புராணம் வேண்டுபவர்களுக்கு அளவற்ற புராணங்கள் உள்ளன.

புராணத்துள் பொய்ம்மையும் மெய்ம்மையும் பகுத்தறிதல் கடின மாதலாலும் அதனுட் போந்த பொய்ம்மையால் நம்மவர்கள் கடவுள் திருவருளையும் வீட்டின்பத்தையும் எளிதாக விலைக்கு வாங்கலாம் என்றெண்ணி நல்லொழுக்கத்தைத் தளர விடுவதாலும் புராணங்களைச் செவ்வை செய்து கொள்ளவேண்டியது இன்றியமையாததொன்றே. இக்கூற்று இதிகாசங்களுக்கும் பொருந்தும். சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய நூல்களிற் போந்த தமிழ் நாட்டுக்கதைகளை நம்மவர்கள் அறிய முயலாது வடநாட்டு ராமன் கதை கண்ணன் கதைகளைத் தமிழ் மக்களெல்லோரும் நன்கு அறிந்திருப்பது ஒரு வியப்பே. மேலும் இதிகாசம் முதலியன தமிழ் மக்கட் கேற்றவாறு கம்பர் முதலிய பெரும் புலவர்களால் இனிது வகுக்கப்பட்டுள்ளனவாதலால் வடமொழி இதிகாசப் பயிற்சி தமிழ் மக்களுக்கு இன்றியமையாததன்று.

நியாய மென்னும் நூலானது சில முனிவர்களால் இயற்றப்பட்ட தருக்க நூல்களேயாம். அக்கபாதமுனிவனும், கணாத முனிவனும் இயற்றியவை. அவற்றுள் உலகம் அணுக்களின் புணர்ப்பால் உண்டானதென்றும் மனமென்பது உயிரோடு கூடாத விடத்து உயிர்க்கு அறிவில்லை யென்றுங் கூறுதலால் சைவசித்தாந்தக் கொள்கைகளுக்கு இவை புறமாவனவே.

மீமாம்சை யென்பது சைமினி முனிவராற் செய்யப்பட்டு வேதத்தைச் சுயம்பு என்றும் விரதமே பரமென்றும் வேதக்

கருமங்களைச் செய்வதே நமது முடிந்த கடமை யென்றும் கூறும் நாத்திக நூல். ஆதலால் நமக்கு அது வேண்டாத தொன்றே. மீமாம்சை நியாய மென்பவைகளிலே பயின்றுள்ள சில தருக்க முறைகள் நமக்குப் பயன்படலாம். உத்தர மீமாம்சை என்பது வியாசர் செய்த பிரமசூத்திரமாகிய வேதாந்த சூத்திரத்தை. அதற்குச் சங்கரர் இராமாநுஜர் முதலிய பலரும் பலவாறு உரை செய்து மயல் விளைத்தனராதலின் அதனாற் போந்த பயன் பெரிதல்ல என்க. சிலர் வியாசர் இயற்றிய ஏகான்ம வாதநூல் அஃதென்ப. அங்ஙனமாயின் ஏகான்ம வாத நூல் சைவ சித்தாந்திகட்கு வேண்டியதில்லை என்பது நன்கு தெளிக.

இனி ஸ்மிருதி என்பது ஒரு குலத்துக்கொரு நீதி கூறுகின்ற ஓரமிக்க மனுமுதலிய பதினெட்டு நூற்றொகை. பிராமணர்களின் வருணப் பெருமையையும் வருணாச்சிரமத்தையும் உலகத்தில் நிலைப்படுத்துவதற்கே இந்நூல்கள் எழுந்தன போலும். மனுநீதி என்னுஞ் சொற்றொடர் சிறந்த நியாய முறையைக் குறிப்பதற்கு ஒரு பழமொழியாக வழங்குகின்றது. மனு தருமநூலிற் கூறிய நீதி அஃதன்று. வசிட்டமிருதி முதலியன சிவ வழிபாட்டை இகழ்ந்து பிராமணர்கள் விஷ்ணுமூர்த்தியையே வழிபடவேண்டுமென்று வற்புறுத்துகின்றன. பிராமணர் ஒழிந்த குலத்தார்க்குச் சிறிய குற்றத்திற்குப் பெரிய தண்டனை விதிக்கு நூல்கள் இவைகளே. பிராமணரல்லாதாரை விலங்கினோடு ஒப்பக் கருதும் விதிகளை விதிக்கும் நூல்கள் நம்மால் விரும்பத் தக்கனவல்ல. இதுகாறுங் கூறியவாற்றால் வடமொழி உபாங்க நூல்களால் தமிழர்க்கு வரும்பயன் தக்கதாய் யாதுமில்லை யென்றுணர்க.

வேதபுராண இதிகாச முதலியவற்றைத் தமிழிலே மொழிபெயர்த்து அவற்றை நன்கு ஆராய்ந்து வைத்துக்கொள்ளுதலே போதுமானது.

இனித் தமிழர்க்கு இன்றியமையாது வேண்டப்படுவன வென்று முன்னர்க் குறித்த நூல்களெல்லாம் செவ்வையாகத் தமிழ்மக்கள் யாவர்க்கும் பயன்படுதற்குரிய முயற்சிகள் நம்மவர்களில் தக்க கல்விமான்களும் செல்வவான்களும கலந்து விரைவில் நடத்தவேண்டும்.

தமிழில் இப்பொழுதுள்ள ஆதி இலக்கணமாகிய தொல்காப்பியத்தைப் பாவலரும் நாவலரும் போற்றிப் புகழ்ந்தாலும் மாணவர் பலரும் எளிதாய் வாசித்துப் பொருள் அறிந்துகொள்ளும் வண்ணம் தெளிவான உரையோடு அச்சிடப்படவில்லை,

திருக்குறள் நூலுக்கு உள்ள பல உரைகளில் ஒன்றே முழுவதும் வெளியாயிருக்கின்றது. இன்னும் அந்நூலுக்கு அகலவுரை யாதுமில்லை. பத்துப்பாட்டு எட்டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்கென்னும் சங்கநூல்களுக்குத் தெளிவான உரை யாதுமில்லை. பன்னிருதிருமுறைகளுக்கும் பொருள் விளக்கம் இன்னும் ஏற்படவில்லை. அவ்வாறே பதினன்கு சித்தாந்த சாத்திரங்களுக்கும் பதினன்கு பண்டார சாத்திரங்களுக்கும் தெளிவான உரை யாதுமில்லை.

வைணவ வேதமாகிய நாலாயிரப் பிரபந்தங்களுக்கு விரிந்த வியாக்கியானங்கள் ஏற்பட்டிருந்தாலும் அவை எல்லாம் வடமொழிச் சொற்களும் கொச்சைத் தமிழுங் கலந்து ஆபாசமான மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டிருப்பதால் தமிழ்வாணர்க்கு அவை ஒரு சிறிதும பயன்படாதொழிகின்றன. இப்பொழுதுதான் அவற்றைத் தெள்ளிய தமிழில் எழுதி வெளியிடச் சில அறிஞர் முயல்வதாகக் கேள்வி.

சித்தர்கள் நூல் மலைமலையாக ஏடுகளில் குவிந்து கிடக்கின்றன. அவைகளைத் தாங்கும் ஏடுகள் கறையானுக்கும் இராமபாணத்துக்கும் இரையாய்க் கழிகின்றன. அவற்றை ஒழுங்குபடுத்தி அச்சிடுவதற்கு நூற்கழகம் ஒன்று தென்னடு முழுவதிலும் நிறுவப்படவில்லை தமிழ் மருத்துவத்தையாவது மந்திரநூலையாவது யோகநூலையாவது திட்ப நுட்பத்தோடு கற்பிப்பாருமில்லை; கற்றுப் பயன்பெறுவாறும் இல்லை. சோதிடமும் இசைநூலும் மிகச்சுருங்கியே வழங்குகின்றன. நாடக நூல்களும் நாவல்களென்னும் புதுமாதிரிக் கதைகளும் அளவற்று விரிந்து கிடப்பினும் அவற்றுள் தக்கன இன்னவென்றும் தகாதன இன்னவென்றும் பகுத்துவைக்கு முயற்சி நடைபெறுமையால் திருந்திய கல்வி இல்லாதார் பலரும் அவற்றைத் தமக்குத் தோன்றியவாறே பிழைகள் மலிய எழுதி வெளிப்படுத்தித் தமிழ் உரைநடையைப் பாழாக்குகின்றூர்கள். செவ்விய வளமான உரைநடை தமிழில் அமைய வேண்டுமானல் இவைகளில் திருத்தமானவைகளையும் பொருத்தமானவைகளையும் தெரிந்தெடுத்துக் கொண்டு ஏனையவற்றைத் தொலைத்தல்வேண்டும். இன்னும தமிழில் விரிந்த நயமிக்க அகராதி ஏற்படவில்லை. ஆங்கில நுண்நூல்களின் மொழி பெயர்ப்பும் இனித்தான் ஏற்படவேண்டும். இப்படிப்பட்ட குறைகள் பலப்பல. இவற்றை நீக்குவதற்குரிய நன்னெறிகளில் நம்மவர்களின் பொருள் பயன்படுவதில்லை. அது பெரும்பயன் தரத்தக்க அறிவு வளர்ச்சி முறைகளுக்குப் பயன்படாது போதலினற்றன் நமது நாடும் நமது மொழியும நமது சமயமும் தாழ்ந்த நிலையிலிருக்கின்றன.

நம்மவர்கள் கைத்தொழிலையும் இயந்திரத் தொழிலையும் பயின்று பெருஞ்செல்வம் ஈட்டாமையால் பிற நாடுகளிலும் நம்முடைய நாடு செல்வத்திற் குறைவுற்றிருக்கின்றது.

அஃதொரு புறமிருப்ப நமது நாட்டுச் செல்வர்கள் ஒருங்கு கூடி நாட்டிலுள்ள ஏழைகளின் வறுமையைத் தொலைக்க முயலுவதில்லை. வறியார்க்கு ஒன்றீவதே ஈகையென்று திருவள்ளுவ நாயனார் கூறியிருப்பவும் தொழில் செய்யச் சக்தியுள்ளவர்களுக்கே மேலும் மேலும் பணம் கொடுக்கப்படுகின்றது. நமது நாடுகளிலுள்ள சத்திரங்கள் பலவற்றிலும் ஒரு வகைச் சோம்பேறி மாபினருக்கே விலாப்புடைக்க அன்னங்கிடைக்கின்றது. இங்ஙனம் வீண்விரையம் ஆகின்ற பணம் எளிய மாணவர்க்கும், ஏழைப் பண்டிதர்கட்கும் பயன்படுமானால் தமிழ்க் கல்வி எங்கும் தழைத்தோங்குமென்பதற் கையமில்லை. வேண்டுவார்க்கு வேண்டியதே ஈயற்பாலது. வேலையில்லாதவர்கட்கு வேலை கொடுக்க வேண்டும். வீடு இல்லாதவர்கட்கு வீடுகொடுக்க வேண்டும். உணவில்லாதவர்கட்கு உணவு கொடுக்க வேண்டும். இவை எல்லாம் உடையவர்கள் காலில் பணத்தைக் குவித்தால் அவர்கள் யாது தான் செய்வார்கள். பணமிருந்தவர்கள் தப்பு வழியில் நடந்து தமக்கும் பணம் கொடுத்தவர்களுக்குப் பாவத்தை விளைக்கிறார்கள். நமது சமயத்திலே அளவிறந்த பணம் ஆலயங்கள் பொருட்டுச் செலவாகின்றது. அஃது அறிவை வளர்ப்பதற்குப் பயன்படாது. மூட நம்பிக்கையை மிகுதிப் படுத்தவே பயன்படுகின்றன. அந்நிய நாடுகளில் சமயத்தின் பெயரால் எத்துணையோ அறநிலையங்கள் பொதுநலத்தின் பொருட்டு இனிதாக அமைக்கப்பட்டுள்ளன. நம்முடைய நாட்டிலும் அவை நன்கமையவேண்டும். கடவுளுடைய திருமேனிக்கு அபிடேகக் கட்டளை செய்வதொன்றுமே சுவாமிக்குச் செய்யும் வழிபாடென்று நம்மவருட்பலர் கருதுகின்றார்கள். சுவாமியின் திருப்பெயரால் பிறவுயிர்களுக்கு நன்மை செய்தலும் சிறந்த வழிபாடென்று பெரியோர் கருதுவர். திருக்கோயில்களில் வழிபாடுகள் முட்டின்றி நடைபெற வேண்டுமென்பதை யொருவரும் மறுக்க முடியாது. ஆனால் கடவுளை வழிபடுவதற்குக் காரணமான அன்பினை வளர்க்குஞ் சமய அறிவினை எல்லா மக்களும் அறிவதற்குக் கோயில்களிலே புத்தக நிலையங்களும் ஆகம நிலையமும் பிரசங்க இடமும் அமைக்க வேண்டுமென்ற ஆகம விதிகளைப் பின்பற்றி, அவற்றை யமைத்துப் பயன் படுத்துவார் ஒருவருமில்லை. இன்னும் துறவிகள் முதலிய ஆதாவில்லார்க்கு உணவளித்தல் முதலிய நன்மைகளும் திருக்கோயில்களிலே செவ்வையாக நடைபெறாமல் சைவக்

கொள்கையும் ஐந்தெழுத்துபதேசமுமில்லாத புறமதத்தார்கட்கு வயிறு நிறைய உணவளித்தலே நன்கு நிகழ்கின்றது. இஃது ஒழியவேண்டும். நோயினால் வருந்துகின்றவர்களும் எண்ணிய காரியம் முடிக்க விரும்புகின்றவர்களும் கடவுளுக்கு நன்றி செய்யக் கருதினால் கடவுள் பெயராலே ஏழைகளுக்கு உண்டி உறையுள் உடை மருந்து முதலியன ஈவதாகவும் பலவகைக் கல்விகளும் பயிற்றுவிப்பதாகவும் நேர்ந்து கொள்ளுதல் நலம். அவ்வாறே பெருந்தொகைகளை அறத்திற்கென்று எடுத்து வைப்பவர்கள் அதனைக் கல்விச்சாலை நூலாராய்ச்சிக் கழகம் ஆங்கிலமொழி பெயர்ப்புக் கழகம், ஆரிய நூன்மொழிப்பெயர்ப்புக் கழகம், சித்தர் நூற்பதிப்புக்கழகம், புத்தகசாலை, அச்சியந்திரசாலை, பத்திரிகைச்சாலை, கைத்தொழிற் கல்விச்சாலை, ஆதரவில்லார்க்கு வீடு அமைத்தல்,மருத்துவக் கலாசாலை, இசைப்பள்ளிக்கூடம், தேவாரக்கல்லூரி, சித்தாந்த பாடசாலை, பிராம்மணரல்லாத வழிப்போக்கற்குத் தங்குமிடம், பிராமணரல்லாத மாணவர்க்கு விடுதி, தாழ்ந்த மக்கட்கு இராப்பள்ளிக்கூடம் வேலையில்லாதார்க்கு வேலை கொடுக்குமிடம், சமயக் கதைகளை நடித்துக்கொடுக்கும் நாடகசாலை, உணவும் நீரும் இல்லாத இடங்களில் அவை தரும் நிலையங்கள் உடல் நலம் பாதுகாத்தற்குரிய உடற்பயிற்சி இடங்கள், பொதுநலத்திற்குரிய பூஞ்சோலைகள் முதலாய இவைகட்கே இயன்ற அளவு பயன்படுத்தவேண்டும்.

சுருக்கமாகக் கூறினால் பொதுவாக எல்லா மக்கட்கும் சிறப்பாக ஏழைகட்கும் உடல் நலம் மனநலம் உயிர்நலம் என்பவை நன்கமைந்து தழைத்தோங்குதற்குரிய அறமுயற்சிகளுக்கே அறஞ்செய்வாரது செல்வம் பயன்படவேண்டும். சோம்பேறிகளுக்கும் ஒருகுலத்தார்க்கும் பயன்படும் தப்பறங்களும் காரணமில்லாமலும் நினைத்த பயனில்லாமலும் நிகழும் வீண் ஆரவாரச் செலவுகளும் அறவே யொழிக்கப்படல் வேண்டும்.

இக்கொள்கையை முதலில் அறிஞர்கள் கைப்பற்றிப் பொதுமக்கள் மனத்திலும் பதிப்பிக்கவேண்டும். அறிஞர்க்குரிய வசதிகளைச் செல்வவான்கள் தவறாது செய்து வரவேண்டும். நமது தென்றமிழ் நாட்டுச் செல்வரும் கலைஞரும் ஒருங்கு கலந்து அறிவை வளர்த்து யாவர்க்கும் பயன்தரும் நல்லறத்தையும் அருளொழுக்கத்தையும் சிவபரம்பொருள் மாட்டுப் போன்பினையும் நிலைபெறச்செய்து தமிழரது பண்டைத் தனிப் பெரு நாகரீகத்திற்குப் புத்துயிரளிக்கச் செய்யுமாறு திருவருளை மனமொழி மெய்களால் வழுத்துகின்றேன்.

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[திரு. T. S. பாலசுந்தர னவர்கள்]

(௪௬௮-ம் பக்கத் தொடர்ச்சி)

சிறிது நேரம் பொறுத்து உணர்ச்சி வரப்பெற்றுப் பெருமூச்சுவிட்டு உள்ளும்புறமும் ஒத்து ஒருணர்வே நிகழத், தம்மை உடையபிரானை ஒருவருமறியாமல் நேர்முகமாய் நீள நுகர்ந்தனர்கள். அந்நிலையில், பாலிலும் தயிரிலும் வெண்ணெய் மறைந்தும் தெளிந்துங் கலந்திருப்பதுபோலச் சிவத்தின் திருவருள் பிள்ளையவர்கள் உடம்பிலும் உயிரிலும் நிரம்பித் துளும்பிற்று. அவ் அருட்கடலிற் குளித்த பிள்ளைகட்குப் புறத்திற் பொறிகளால் நுகரப் படுவனவெல்லாம் அச்சிவ நடமேயாயிற்று. இங்ஙனம், தில்லையிலிருந்த நடத்திறையின் அருட்குறியைக் காணப்பெற்றநிலிருந்து, தம் உடம்பும் உயிரும் அருள் வடிவாய் நிலன் நீர் தீ வளி வான் ஆகிய எல்லாவற்றிலும எங்கும் அவ் அருட்கொழுந்தை இடையீடின்றி நீக்கமறக் காணும் ஒரு நிலை எய்தப்பெற்றனர் பிள்ளையார். பின்னர் அவர் அம்பலக் கூத்தனை அரிதிற் பிரிந்து ஒரு மடத்தை எய்தினர். அவர்கட்கு அப்பெருமான் மாட்டுள்ள இயற்கைக் காதலுணர்வினைத்,

"திருவார் பொன்னம்பல நடுவேதெள்ளார் அமுதத்திரள் அனைய
உருவார்அறிவு ஆநந்தநடம் உடையார் அடியார்க்கு உவகைநிலை
தருவார் அவர்தம் திருமுகத்தேததும்பும் இளவெள் நகைகண்டேன்
இருவாதனை அற்று அந்தோநான் இன்னும்ஒருகால் காண்பேனோ" ௩

"வள்ளலார்தம் திருஅழகை
கோயிற்கு அருகேசென்று மனம்குளிரக் கண்டேன்பிரிவு உற்றேன்
ஈயின் சிறியேன் அவர்அழகை இன்னும்ஒருகால் காண்பேனோ" ௩

"என்கண் அனையார் அவர்முகத்தை இன்னும்ஒருகால் காண்பேனோ" ௪

என்று மடத்தை அடைந்த பின் பாடப்பட்ட "தரிசனப் பதிக"த்துத் திருவாக்குக்களாற் காண்க. "தரிசனப் பதிகம்", மடத்தை அடைந்த பின்னர்த்தான் பாடப்பட்ட தென்பதற்கு, அதன்கண், கோயிலிலிருந்து பாடியதன்றென்பது புலப்படக் "கோயிற் கருகே சென்று மனங்குளிரக் கண்டேன்" என்று வரும் மேலுரையே தக்கசான்று.

தில்லைக் கடவுள்பால் இவ்வாறு அளந்தறியப்படாத பேராக் காதல் பெருகப்பூண்டு ஒழுகிய வள்ளலார், சில நாட்கள் அவண் தங்கி யிருந்தார். "தரிசனப் பதிகம்" முதல் இரண்டாந் திரு

முறைப் பாடல்கள் முழுவதும் அடிகள் தில்லையிலிருந்தபோதே பாடப்பட்டன வன்றோ! அப்பாடல்களைப் பாடிக்கொண்டிருக்கும்போதே இடையிடையே பிள்ளையார், சீகாழி, புள்ளிருக்கு வேளூர், மதுரை முதலிய திருக்கோயில்களுக்குச் சென்று தில்லையை அடைவர். மதுரைக்குப்போய்ப் பாடல்கள் அருளினமைக்குத் திருவருட்பாவில் எதொரு குறிப்பும் அகப்படவில்லை. தில்லையிலிருந்தபோது அருகிருந்த பெரியார் ஒருவர், 'எதிரிருப்பார் வலிவை உடனே இழுத்துக் கொள்ளும் ஆற்றலுடையார் பிள்ளையார்' என்று கூறி அவர்களைச் சிறப்பித்தமையும், 'அப்பெரியாரின் உடம்பு இன்னும் ஆறு திங்களில் விழும்' என்று வள்ளலார் வருவதுரைத்தமையும், சீகாழிக்குச் சென்றபோது 'குன்ம' நோயாளர் ஒருவரைத் திருநீறு கொடுத்து நலப்படுத்தினமையும் வள்ளற்பெருமானின் அருள் நிலையைப் புலப்படுத்துகின்றன. அதன் பின்னர் வள்ளலார், தாம் பிறந்த மருதூருக்கு அடுத்த கருங்குழி யென்னும் ஊரைத் தமது இருபத்து எட்டாம் ஆண்டில் அடைந்தனர். எனவே; திருவொற்றியைப் பிரிந்த பின், கருங்குழி சேரும் வரையில் தில்லைக் காட்சியின் வாயிலாக அடிகளுக்குச் செலவழிந்த ஆண்டுகள் நான்கு என்று அறிந்து கொள்க.

அடிகள் கருங்குழியைச் சேர்ந்த சில நாட்களுக்கெல்லாம் தம் இளவல் பரசுராமப் பிள்ளையும், பின்னும் சிலநாட்களுக்கெல்லாம் தம் தமையனார் சபாபதி பிள்ளையும் இம்மண்ணுலகை நீத்தனர். உலகுக்குத் தனியாய் விளங்கிய பிள்ளையார் தம் குடும்பத்துக்கும் தனியரானார். கருங்குழியிலிருந்தபொழுது பிள்ளைப் பெருமான், அதையே தமது வாழ்நாளிடமாக வைத்துக்கொண்டு அன்பர்கள் வேண்டுகோட்கு இணங்கியும் இயற்கையே தமக்குள்ள பேரருளிரக்கத்தால் இரங்கியும் சுற்றுப் புறத்துள்ள பல ஊர்கட்கும் நகர்கட்கும் சென்று அடிக்கடி விரிவுரை செய்வார்கள். அப்பொழுதெல்லாம், உயிர்கட்கு இயற்கையில் உள்ள அருளிரக்கத்தை மிகுதிப் படுத்துவதே மக்கட் பிறப்பாலாகிய பயனென்றும், மிகுத்துக்கொண்ட அவ் அருளிரக்கத்தாலேயே இறைவனருள் தலைக்கூடுமாதலால் அதனைப் போற்றி வைத்து அது கொண்டு இறைவனை வணங்கி அவன் திருவருளை விழுங்கவேண்டுமென்றும், மற்றப்படி செய்யப்படும் இவ் உலகத்துத் தொழில்களெல்லாம், "மண்குடமாகும் வரையில் தண்ட சக்கரம் உடனிருந்து சுழன்று பின் சுழலாது நிற்றல்போல, உயிர்களின் மருள்நிலை அருள் நிலையாகும் வரையில் உடனிருந்து தொழிற்பட்டுப் பின் அழிந்துபோவன ஆதலால் அவைகளையெல்லாம் தமதுயிர்க்கு உறுதி பயப்பனவென்று ஒரு பொருளா

வெண்ணுதல் ஆகாது என்றும், ஆகவே வேற்றுமை யில்லாமல் எல்லா உயிர்களிடத்தும் எல்லா மக்களிடத்தும் உள்ளபடியே அருளும் அன்பும் உடையராயிருக்கப் பழகுவதுதான் முதல் முதலாகச் செயத்தக்கது என்றும், இவ் அன்பு அருளென்பனவே எல்லா உயிர்கட்கும் இயற்கை யின்பம் தருவன ஆதலின் இன்பம் ஒன்றையே விரும்பி அல்லும் எல்லும் ஓவாது உழைத்து உழலும் உயிர்கள், எவ்வகையாலாவது அவைகளை ஒழுக்கத்திற் கொண்டுவந்து விடுவததான் நல்லவழி (சன்மார்க்கம்) என்றும், எவ் உயிர்க்கும் அன்பருள்கள் பொதுவாதலால் அந்நெறி நிற்பதே பொதுநன்னெறி (சமரச சன்மார்க்கம்) யாகுமென்றும், அப்பொது நன்னெறியே 'சைவ சமயம் என்றுள்ள வேறொரு பெயராலும் அழைக்கப்படும் என்றும், அச்சமயமும் அதன் அன்பருட் கருத்துக்களும் எச்சமயங்கட்கும் பொதுவில் முதன்மையான உண்மைகள் என்றும் ஆங்காங்கும் வற்புறுத்து வற்புறுத்து இசைவான முறையில் எளிதாகத் தெளிய விளக்கிச் 'சமரச சன்மார்க்க' மென்னும் பொது நன்னெறியை நிலைபெறுக மக்களை நல்வழிப்படுத்துவது அவர்கட்கு வழக்கம். வடலூரிற் சென்றிருந்த பொழுது ஓயாது விரிவுரைசெய்து எல்லாரையுந் திருத்தினார்கள். இவ் உண்மையை,

அருள் விளங்கிய திருச்சிற் றம்பலத்தி லேஅழியாப்
பொருள் விளங்குதல் காண்மினோ காண்மினோ புவியீர்
மருள் உளங்கொளும் வாதனை தவிர்ந்து அருள்வலத்தால்
தெருள் விளக்கு வீர்ஞான சன்மார்க்க மேதெளிமின்!

என்று அவர்கள் உரைப்பதால் நன்கு விளங்கும்!

இதில், "புவியீர்" என்று உலகத்தவரை அழைத்து, அருளிரக்கம் உள்ள அந்தண்மைப் பெருமக்களின் அறிவு வெளியை "அருள் விளங்கிய திருச்சிற்றம்பலம்" என்றும், அவ் அறிவு வெளியில் முனைத்துத் திரளும் அருளிடையே அழியாத இறைவனருள் தோய்தலால் தயிரில் திரளும் வெண்ணெய்போல உயிரிரக்கத்தில் திரண்டு விளங்கும் அவ் இறைவனருளைத் "திருச்சிற்றம்பலத்தில் விளங்கிய அருளிலே அழியாப்பொருள் விளங்குதல்" என்றும், உயிருளால் அவ் இறைபருளைக் காணுங்கள் என்னும் தமது கருத்தைக் காணமாட்டீர்களோ என்னும் தமது இரக்கம் தோன்றக் காண்மினோ காண்மினோ என்றும், இங்ஙனங் காண்டற்குப் பெருந்தடையாய் நிற்கும் அறியாமைத் துன்பத்தை "மருள் உளங்கொளு வாதனை" என்றும், அதினின்றும் தவிர்தல் வேண்டுமென்று தவிர்ந்தும் என்றும், தவிரவே அருள் வளரும் அவ் அருளால் தெளிவு வரும்: அருளாகிய அத்தெளிவால்

முன்கூறிய இறைவனருளைக் காணலாம் என்பவை புலப்பட, மருள் உளங்கொளும் வாதனை தவிர்ந்த பின்வரும் உயிரிரக்கத்தை (சீவகாருணியம்) அருள் என்றும், இறையருளைக் காட்டிவிடும் அவ் அருளின் வல்லமையை வலத்தால் என்றும், அதனால் பெறக்கூடிய தெளிவைத் தெருள் என்றும், அவ் அருளாகிய தெளிவைப் பெறுதல், இறைவனையும் அவன் அருட் செயலையும் அச்செயலில் அடங்கிச் செயற்படும் உயிர்களையும் அவ்வெல்லா உயிர்களும் தமக்குள் உடன் பிறப்பான உரிமை கொண்டு தம்மை இயக்கும் எல்லாம் வல்ல முழுமுதல் ஆண்டவனுக்கு ஒரு வயிற்றுப் பிள்ளைகளாய் நிற்கு நிலையையும், அந்நிலையில் அவைதாம் தத்தமை மூடிய மலத்தின் வன்மை மென்மைகளுக்கேற்பப் பிறவிச் சூழலிற்பட்டு நினைத்தாலும் நெஞ்சம் நீராம்படிபடும் அளவிறந்த துன்பங்களையும் ஆக இவையெல்லாவற்றையும் தொடர்புபடுத்து நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து ஊற்றெடுத்த கண்ணீரதனால் உடம்பு நனைந்து நனைந்து'' வாடி வதங்கி வழுத்தும் நம் முயற்சியினாலேயே கூடும் என்பதைத் 'தன் வினை'யால் விளங்குவீர் என்றும், அறிவின் அருள் கொண்டு அருள்காணும் இதையே அறிவின் நல்வழி என்பர் என ஞான சன்மார்க்கம் என்றும் விளங்கக்கூறி அரிதான இதனைத் தேளிமின் என்று அவர்களைத் தெளிந்து கொள்ளுமாறு வேண்டுதலுங் காண்க! இவ்வகையாக மக்கட்கு அறிவுறுத்து அவர்களை நல்லசிவ அருள் நெறியில் திருப்புதலையே வள்ளற் பெருமான் தமது பிறப்பின் கடமையாகக் கொண்டிருந்தார் என்பதும்,

> "அகத்தே கறுத்துப்புறத்து வெளுத்திருந்த உலகர் அனைவரையும்
> சகத்தே திருத்திச்சன்மார்க்க சங்கத்து அடைவித்திட அவரும்
> இகத்தே பரத்தைப்பெற்று மகிழ்ந்திடுதற்கு என்றேஎனை இந்த
> யுகத்தே இறைவன்வருவிக்க உற்றேன் அருளைப் பெற்றேனே''
> (சு, வேண்டுகோள், க)

என்று அப்பெருமானே அருளுதலால் நன்கு விளங்கும். பிள்ளைப் பெருமானுடைய அரிய விரிவுரையைப் பல்லாயிரம் மக்களும் திரள்திரளாகக் குழுமிக்கேட்டுப் புலனாச் சுவைப்பார்கள். "தாசில்தார்," "வக்கீல்" முதலான பலவகை அலுவன் மக்கள் கூட முறையாக வந்து அன்புடன் செவியுண்டு மகிழ்வார்கள்.

வள்ளலார் கருங்குழியில் விளங்கிய காலங்களில் நிகழ்த்திய திருவருட் செயல்களும் பலப்பல. அவற்றுள்ளும், ஒருவரைத் தம்மாணவரால் "இலக்கண வியனிடை வழக்கப்பா டுறுத்துவிக்

கும் பத்திரிகை" ஒன்று எழுதுவித்தும் மற்றொருவரைக் 'கடவுளது திருஉருவ வழிபாடு வேண்டுந்தானென்று வாதிட்டு வென்றும் திருத்தியதோடு, இன்னும் வேறு புலவர் ஒருவரை 'வாழைப்பழங் கொடுத்தவன் கல்லா லடித்தான்; கல்லா லடித்தவன் வாழைப்பழங் கொடுத்தான்' என்றொரு கதையைச் சொல்லி அவர் மலைந்தவாதினின்றும் அவரை விடுவித்து அமைதியாக்கியதும், தம் தந்தையார் ஆணைப்படி அருளாசிரியனை எதிர் நோக்கி யிருந்த ஒருவரை, அவர் மறைவாக நினைத்திருந்த முறைப்படியே ஆட்கொண்டதும் முதன்மையானவை. கருங்குழியில் இருக்கும்பொழுதே அடிகள் சித்தராய் விளங்கினர்கள்.

பிள்ளைப் பெருமான் கருங்குழியைச் சேர்தற்கு முன்னரே இரண்டாந் திருமுறையாக உள்ள எல்லாப் பாடல்களையும் பாடிவிட்டனர் என்பது மேல்காட்டப்பட்டது. இங்குவந்த பின்னர், மூன்றாந் திருமுறைப் பாடல்களையும் நான்காந் திருமுறைப் பாடல்களையும் பாடியருளினர். அடிகள், நினைத்தால் ஒரு நாளிலேயே பாடிவிடக்கூடிய மிகக்கொஞ்சமான பாடல்களே, மூன்று நான்கு திருமுறைகளாக உள்ளன. கருங்குழியிற் பாடிய பாடல்களில் முதல் இருநூற்று முப்பத்தைந்து பாடல்கள் திருவொற்றியூரை நினைந்து பாடப்படுதலால் அப்பாடல்களை ஒரு திருமுறையாகவும் எஞ்சிய இருநூற்று முப்பத்தேட்டு பாடல்களும் தில்லையை நினைந்து பாடப்பட்டிருத்தலின் அவற்றைத் தொகுத்து மற்றுமொரு திருமுறையாகவும் வகுத்து இரண்டையும் மூன்று நான்கு திருமுறைகளாகச் சேர்த்தனர் மேலோர். தலைவனைப் பிரிந்தபின் நிகழ்வனவாகிய தலைவியின் அகப்பொருள் துறைகளெல்லாம், "தலைவி பாங்கியொடு கிளத்தல்," "தலைவி பறவைமேல் வைத்துப் பையுளெய்தல்," "தலைவி இரங்கல்," "தலைவி நினைவின் மகிழ்தல்," "தலைவி வியந்து மொழிதல்," "நற்றாய் நயத்தல்," "தலைவி வருந்தல்," "தலைவி வியத்தல்," "தலைவி மிகு கழிகாதல்," "செவிலி கழறல்," "தலைவி கடிற்றெதிர் மறுத்தல்," "தோழியொடு கூறல்" என்பனவாக அம்மூன்றாந் திருமுறையுட் காணப்படுவதால் அத்திருமுறை திருவொற்றியூரிலிருந்து பாடப்பட்ட தன்றென்பதும், வள்ளலார் வரலாற்றில் அவர் கருங்குழியைச் சேரும் வரையில் தில்லைத் தேவினது காதல் நினைவிலேயே நெஞ்சழுந்தித் திருவொற்றியை நினைத்தற்கும் இடம் இலாய் நின்றது வெளிப்படுதலின் அது கொண்டு திருவொற்றியை நினைந்து பாடிய மூன்றாந் திருமுறைப் பாடல்கள் கருங்குழியைச் சேர்தற்கு முன்னரும் பாடப்பட்டன அல்லவென்பதும் பெறப்பட்டு அவ்வழியாக அவை கருங்குழியைச் சேர்ந்த பின்னர் அங்குத்தான் பாடப்பட்டனவென்பது ஐயுற

வுக்கிடனின்றி விளங்குகின்றது. நான்காந் திருமுறையின் தலைப்புக்களெல்லாம் "அன்பு மாலை," "அருட்பிரகாச மாலை," "பிரசாத மாலை," ஆநந்த மாலை," "பத்தி மாலை," "சௌந்தர மாலை," "அதிசய மாலை," "அபராத மன்னிப்பு மாலை," "ஆளுடைய பிள்ளையா ரருண்மாலை," "ஆளுடைய அரசு அருண் மாலை," ஆளுடைய நம்பிக ளருண்மாலை, ஆளுடைய அடிக ளருண்மாலை என மாலைகளாகவே அமைந்திருத்தலின், அத்திருமுறை ஒரு நெறியின் கண்ணதாய் வகுத்தெடுத்துக் கொண்டு ஓரிடத்திற் பாடப்பட்டதென்பது பெறப்படுமன்றி, அவ்வப்பொழுதும் தில்லையிற் சென்று இறைவனைக் கண்டு நினைந்தது நினைந்தாங்குப் பாடுமுறையால் ஆண்டுப் பாடப்பட்டதென்பது பெறப்படமாட்டாது. எனவே, நான்காந் திருமுறையும், மூன்றாந் திருமுறையைப் பாடியபின், கருங்குழியிலேயே பாடப்பட்டதென்க. பிள்ளையார் திருவொற்றியிலிருந்த பொழுது தில்லையின் நினைவுதோன்றப் பெற்றாராய் ஒற்றியினின்றும் பிரிந்து தில்லையை அடைந்து இறைவனொடுகூடி தன் அவாவைத் தீர்த்துக்கொண்டபின்னர் மீண்டும் திருவொற்றியின் நினைவு தோன்றுதலும், அந்நினைவால் சற்று இரங்கிப் பாடியபின், திரும்பத் தில்லையின் நினைவு தோன்றுதலுமே உள்ளத்தின் இயற்கைக்கு இயைவதாகும். அங்ஙனம் திரும்பத் திருவொற்றியை நினைந்து பாடுதலும் தில்லையை நினைந்து பாடுதலும் வள்ளலார் தில்லையை அடைந்து அவாத்தீர்ந்து வேறிடஞ் சென்ற பின்னரே அவர்க்கு நிகழுமாதலின், கருங்குழியிற் சென்ற பின்புதான் வள்ளலார் அங்ஙனம் அவ்விரண்டையும் நினைந்து இரண்டுக்கும் இரண்டு திருமுறைகள் அருளினர் என்பது இயற்கையொடு மாறாத முழுப்பொருத்தமான உண்மை உரையாகுமாறு கண்டு கொள்க! மூன்று நான்காவனவாகிய இவ் இரண்டு திருமுறைகளுள்ளும் மூன்றாந் திருமுறையில் முன்வந்த தலைப்புகளே "திருவுலாப்பேறு," "திருவுலாவியப்பு," "திருவுலாத்திறம்" என்பன போலப் பின்னும் வந்துள்ளனவாதலின், நான்காந் திருமுறையைப்போல் ஒரு நெறிப்படுத்து வகுத்தெடுத்துக்கொண்டு பாடப்பட்டதாக அல்லாமல், அவ்வப்பொழுதும் தமக்கெழுந்த அருளுணர்ச்சியின் வேறுபாடுகளை வள்ளலார் அவ்வப்பொழுதும் பதிகங்களாக இயற்றியிட, அவையெல்லாம் ஒருங்கு தொகுக்கப்பட்டு மூன்றாந் திருமுறையாயிற்றென்று அறிதல் வேண்டும்.

அடிகள், திருவொற்றியங் கடவுளை வணங்கிப் பாடத் துவங்கியதிலிருந்து கருங்குழியைச் சேர்தற்குமுன் தில்லையங் கடவுளைப்பாடி முடிந்த வரையில் நூல்வடிவாக உள்ள பாடல்க

ளெல்லாம் ஒரு திருமுறையாகவும், மற்றவையெல்லாம் மற்று மொரு திருமுறையாகவும் வகுக்கப்பட்டமையின், அவ்விரண் டோடு கருங்குழியிலிருந்து பாடிய திருவொற்றிப் பாடல் களும் தில்லைப் பாடல்களுமாகிய வேறிரண்டு திருமுறைகளும் உடன்சேர்க்கப்பட அவைகள் முறையே முதல் நான்கு திரு முறைகளாக நின்றன. இந்நான்கு திருமுறைகளும் சூழ இரு ந்த நல்லோர் சிலரால் அச்சேறி வெளியாயின. இவை அச்சின் மிளிர்ந்ததும், இவைகளுக்கு முன்னரே முதன் முதலில் முரு கப்பெருமான் மாட்டு அகமுருகிப் பாடப்பட்டு மறைந்த நிலையி லிருந்த திருத்தணிகைப் பாடல்கள் அவ்வளவும் அச் சேறுங் கருத்தால் தாமே வெளிப்பட்டன. முன் நான் கும் அச்சாய் விட்டமையால் இவை ஐந்தாந் திருமுறை யெனப் பெயர் பெறலாயின. அந்நான்கும் அச்சிடப்படாத தற்கு முன்பே இத்திருத்தணிகைப் பாடல்கள் கிடைத்திருக்கு மாயின் வள்ளலாரின் வரலாற்று வழியே திருமுறைகளை முறைப் படுத்துத் திருவருட்பா அச்சிடப்பட்டிருத்தலை நோக்க, இவை கள் முதல் திருமுறை யெனப்பெயர் பெற்று அம்முறையே இப்பொழுது முதல் திருமுறையாக இருப்பது இரண்டாந் திரு முறையாகவும், இரண்டு மூன்றாகவும், மூன்று நான்காகவும், நான்கு ஐந்தாகவும் வழங்கும் என்று துணிந்து கூறலாம். முதல் நான்கும் முதலில் அச்சிடப்பட்டமையால் பின்னர்க்கிடைத்த இவ் ஐந்தாவது மட்டும் தனி நூலாகப் பின் அச்சிடப்பட்டது. அதன்பின் ஆறாந்திருமுறையும் பின்னர் இயற்றப்பட்ட ஏது வினால் தனி நூலாக அச்சாய் உலவிற்று. இவை யெல்லாம் இரண்டாவதாகத் திருவருட்பாப் பதிப்பாயின பொழுது ஒன் றாய்ச் சேர்க்கப்பட, ஒரே நூலாயின. இவ்வாறான இத்திரு வருட்பா வரலாற்றில், முதல் ஐந்து திருமுறைகளும் வள்ளலா ரடிகள் கருங்குழியிலிருந்த பொழுதே அச்சாயின வென்க. முதல் நான்கு திருமுறைகட்குப்பின் அச்சிடப்பட்ட ஐந்தாந் திருமுறையின் முகத்தில், பிள்ளையார்மேற் பாடப்பட்ட சில பாடல்கள் "சித்தி விநாயகர் பதிகம்", "வல்லபை கணேசர் பிர சாதமாலை," "கணேசத் திருவருண் மாலை" எனவும், "தனித் திருமாலை" எனவுங் காணப்படுகின்றன. இவற்றுளொன்றில்,

"காவிநேர் களத்தான் மகிழ் ஐங்கரக் கடவுளே
நற்கருங்குழி என்னும் ஊர்
மேவிஅன் பர்க்கருள் கணநாதனே விளங்குஞ்
சித்திவி நாயக வள்ளலே"

எனக் கருங்குழிப் பெயர் நிற்கின்றது. எனவே இவைகள் கருங் குழியிற் பாடப்பட்டன வென்பது திண்ணம். ஐந்தாந் திரு

முறையை அன்பர்கள் அச்சிட்ட பொழுது. அதன்கண் முருகப் பெருமான் பாடல்களே நிற்கின்றமையின் சிவபிரான் பிள்ளைகள் என்பதில் அப்பெருமானோடு ஓரினப்பட்ட பிள்ளையாருக்கும் அதில் பாடல்கள் இருக்க வேண்டுமென்று விழைந்து அவர்கள் பிள்ளைப் பெருமானிடம் விண்ணப்பித்தலும், அவரும் அங்கு விளங்கிய பிள்ளையார்மேற் சில பதிகங்கள் அருளிச் செய்து கொடுத்தனராதல் வேண்டும்! சைவ சமயத்தவராய்ப் பெரிது கொண்டாடப்படும் பலவகையான கடவுள் வடிவங்களெல்லா வற்றிற்கும் பாடல்கள் கொண்ட அருட்பாவில், பிள்ளையாருக்கு அப்பொழுது பாடல்கள் இல்லாமையின் அக்குறையை நிறைத்து விடுவான் கருதியும் அப்பாடல்களை வைத்தற்கிடமாகிய முருக வேள் பாட்டின் ஐந்தாந் திருமுறையில் அன்பர்கள் பிள்ளைப் பெருமான் மாட்டு அவைகளை அவாவினர் என்றலும் ஒன்று. இங்ஙனம் ஐந்தாந் திருமுறை கருங்குழிப் பாடல்களைத் தலைப் பிற்பெற்று அச்சானமையின் அஃதும், அதற்கு முன்பே அச் சான முதல் நான்கு திருமுறைகளும ஆகத் திருவருட்பா ஐந்து திருமுறைகளும் வள்ளலார் கருங்குழியில் விளங்கியபொழுதே அச்சாய்விட்டன வென்பது உண்மையாயிற்று. மேலும், வள்ள லார் பிரபவ ஆண்டு பிறந்த பின்னரே வடலூர்ப்பெருவெளிக்கு எழுந்தருளியிருப்பதால், அட்சய ஆண்டே அச்சிடப்பட்ட திரு வருட்பா அங்ஙனம் வெளியானது அவர்கள் கருங்குழியி லிருந்த போதுதா னென்பது நிலைபெறுனது காண்க.

இவைதாம் அச்சேறிய காலத்து வள்ளலார் கொண்ட ஓர் அரிய நல்லியல்பு இங்கு எடுத்துக் காட்டாமல் இருக்கக்கூட வில்லை. அன்பர்கள் அருட்பா அச்சிடுதற்குப் பிள்ளைப்பெரு மானை அவர் தம் திருவுள்ளத்தக்காக வேண்டிக்கொண்ட பொழுது அவர்கள் முதலில் இசையாமல், வேண்டினவர்கள் பின்னும் பின்னும் வேண்டினமையால் அவர்பாலும் பிறர்பாலும் இரங்கியே பின் இசைந்தனர்கள். பிள்ளைகட்குத் தம் செய்கை கள் செயற்கரியவாயிருந்தாலும் அவற்றை வெளிக்காட்டி அதன் வாயிலாகத் தம்மைப் பிறர் புகழவைத்துக்கொண்டு அதுகேட்டு மகிழுந் தீய இயல்பினர் அல்லர்! தம் நில் எத்துணைதான் உய ரியவாயினும், அடக்கமே கைக்கொண்ட செல்வமென உன்னி யாவர்க்கும் அடங்கியே நிற்குநீரர்! ஓர் ஊருக்கு இரவிற் சென்று கொண்டிருந்த வள்ளலார், தம்மோடு உடனிருந்து ஒருவரை அடிக்கவந்த திருடர்களின் கையைத் தூக்கினவாறே விரைக்கச் செய்துவிட்டு, "இஃது ஆண்டவன் செய்கை; இதை வெளியிடவேண்டாம்" என்று அருகிருந்தார்க்குக் கட்டளையிட் டதும், உயிர்நீங்கும் பருவத்திலிருந்த ஒருவரைத் திருநீறு

கொடுத்து முற்றிலும் கலப்படுத்திவிட்டு, அங்ஙனம் வேறொரு ஊரில் இதுசெய்த அதே விஞடியில் வடலூர்க்கு வந்து விரிவுரை புரிந்துகொண்டிருந்ததை அறிந்துகொண்ட அவர்க்கு "இஃது ஆண்டவன்செயல்: வெளிப்படுத்தவேண்டாம்" என்றதும், வடலூரில் விரிவுரை செய்துகொண்டிருந்த அடிகள், அப்பொழுதே சென்னையிற்போய் ஒருவரோடிருந்து ஓர் அலுவல் பார்த்துவிட்டு, அந்நொடியிலேயே திரும்பிப் பழையபடி வடலூரில்வந்து உரையாடிக்கொண்டிருந்த தம் அருட்செய்கையை அறிந்துகொண்ட அச்சென்னையாளர்க்கும் "இஃது ஆண்டவன் செயல்: வெளிப்படுத்த வேண்டாம்" என்றருளியதும், இவைகளைப்போல இன்னும் பலப் பல அருஞ்செய்கைகளைச் செய்து விட்டு வெளிப்படுத்த வேண்டாமென்று அவைகளை அறிந்து கொண்டவர்களுக்குச் சொல்லிய பல வரலாறுகளும் வள்ளலாரடிகளின் அடங்கிய அருநிலையைப் புலப்படுத்துகின்றன. இங்ஙனமாக வள்ளற்பிரான், பலபல அருட் செய்கைகளைச் செய்து கொண்டும், திருப்பதிகங்கள் இயற்றிக் கொண்டும், விரிவுரைகள் புரிந்துகொண்டும, சூழ உள்ள பல திருக்கோயில்களுக்குச் சென்று சிவத்தை வணங்கிக் கொண்டும் கருங்குழியில் பதினைரண்டுகள் விளங்கினர்கள்.

பலவாறன விரிவுரைகளை உயிரிரக்கங் குறித்துச் செய்து கொண்டிருந்தமையால், உயிர்கள்படும் துன்பங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரிதும் எல்லா உயிர்களின் உணர்ச்சிக்கும் வருவதுமான பசித்துன்பமே அவைகளை எப்பொழுதும் வாட்டுகின்றதென்பதும், அதன்முன் மற்றத் துன்பங்கள் தலைக்காட்டா என்பதும் வள்ளலார் திருவுள்ளத்தில் மிக்குத்தோன்றி, அத்தோற்றத்தின் பயனை பேரிரக்கம் நம்பெருமான் மாட்டு நிரம்பிப் பெரிதுங் கவ்விக் கொண்டது.

"ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலின் பின்"

என்பது மறைமொழி எனவே, மக்கள் பலரும் அவரவர் வினைமேற் செல்லும்பொழுது தற்செயலாய்க் கூடுதற்கு வசதியான ஒரு நடுவிடத்தில் சோறிடுசாலை யொன்று ஏற்படுத்தி வருவாரெல்லார்க்கும் மறுது சோறிடுமாற்றை எண்ணி, உறுதிப்படுத்திவிட்டனர். மக்கட் செய்கையே பெரிதும் விளங்கும் நகரத்தை அறவே விடுத்து இறைவன் விளக்கமொன்றே ஒளிவிட்டிலகும் நகர்ப் புறத்தையே அடிகள் விரும்பு நிலையினர் என்பதும், நட்டப் பெருமான் வழிபாட்டிலேயே உள்ளம் அழுந்திய வள்ளலார்க்கு அப்பெருமான் நடிக்கும் வெளிபோலும் இடமேபெரிது

பிடிப்பதென்பதும் வெளிப்படை ஆதலால், தாமிருந்த கருங் குழிக்குப் பக்கத்திலேயே, தில்லை கூடலையாற்றூர் திருமுதுகுன் றம் திருவதிகை திரு இரும்பை மாகாளம் திருப்பாதிரிப்புலியூர் முதலான திருக்கோயில்களுக்கும், தென்பெண்ணையாறு கெடில ஆறு வெள்ளாறு மணிமுத்தாறு முதலிய நீர் நிலைகட்கும் நடுவிட மாய் உள்ள வடலூர்ப் பெருவெளியை அடிகள் அறச்சாலை அமைத்தற்குத் தக்கதாகக் குறிக்கொண்டனர்கள் பிறந்தபோ திருந்தே பிள்ளைப் பெருமான் எல்லாராலும் விரும்பப்பட்டு அவர்க்குத் தலைவராக விளங்கி வந்தனராதலின், குறித்தருளப் பட்ட வடலூர்ப் பெருவெளியில் செடி கொடிகள் சூழ ஓர் அறக் கூழ்ச்சாலை அன்பர்களால் மிக எளிதாகக் கட்டப்பட்டது. வள்ளலார் தமது நாற்பத்து நான்காம் ஆண்டில் (பிரபவ, வை காசிப், பதினோராம்நாள்) அச்சாலையில எழுந்தருளினர்கள்! எழுந்ததும் உயிரிரக்கத்தைப்பற்றி இப்போது முதற்பிரிவாக விளங்கும் சீரிய தெளி தமிழ்க் கட்டுரையை எழுதிச், சோற் றுக் கொடையை விளக்கி வற்புறுத்தினார்கள். அஃது அத்திருப் பணியில் எல்லாரையும் நன்கு ஊக்கிற்று. உடனே, நாளொன் றுக்கு ஆயிரக் கணக்காக அங்குவந்த மக்கட்குச் சிலநாள் சோறிடப்பட்டது அன்றுதொட்டு இன்றுவரையில் அங்குச் செல்வார் எல்லார்க்கும் எப்பொழுதும் சோறிடப்படுவது யாவரும் அறிந்ததொன்று.

(தொடரும்)

---

# பொருளதிகாரம்

[திரு. M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B. A., L. T.,]

## I

பொருளதிகாரம் பொருளினது இலக்கணத்தை உணர்த் தும். பொருளாவன அறம் பொருள் இன்பமும் அவற்றின் நிலைப்பின்மையும், அவற்றின் நீங்கிய வீடு பேறுமாம். இவ்வதி காரம் 666-சூத்திரங்கொண்ட ஒன்பது இயல்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. (1) அகத்திணை இயல், (2) புறத்திணை இயல், (3) களவு இயல், (4) கற்பு இயல், (5) பொருள் இயல், (6) மெய்ப்பாட்டு இயல், (7) உவம இயல், (8) செய்யுள் இயல், (9) மரபு இயல், இவற்றின் முறையே 55, 36, 50, 53, 54, 27, 37, 244, 110, சூத்திரங்கள் உள. இவற்றுள் செய்யுள் இயலே பெரிதாம்.

1. அகத்திணை இயல்.—அகமாகிய மனத்தின்கண் நிகழ்கின்ற இன்ப ஒழுக்கத்தின் இலக்கணம். ஒருவனும் ஒருத்தியும் கூடிய காலத்துப் பிறந்த பேரின்பத்தினைப் பின்னர் ஒருவருக்கொருவர் அஃது இவ்வாறிருந்ததென்று கூற இயலாமல் தத்தம் உள்ளத்தே உணர்ந்து நுகர்தல். இதில் சூத்திரம் 55.

2. புறத்திணை இயல்.—ஒத்த அன்புடையார் மனத்திலே நிகழும் இன்பமும் துன்பமும் பிறருக்குப் புலனாகாமல் மறைக்க முயன்றும் வெளிப்படுதலால் அவை வெளிப்படுங்காலத்தில் அன்னாருடைய ஒழுக்கத்தின் இலக்கணத்தை இதில் கூறப்படும். போரின் நிமித்தம் தலைவியைத் தலைவன் பிரிதல் காரணமாதலின் போரின் உருப்புகளையும், இருவரும் தத்தமிடத்தே இருந்து மனநிகழ்ச்சிகளைப் பிறருக்குக் கூறுதலையும் இவண் காணலாம். இதில் சூத்திரம் 36.

3. களவு இயல்.—ஒருவனும் ஒருத்தியும் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுக் கண்ணும் மனமும் தம்முள் ஒத்து இன்பம் பற்றிப் புணருதலாகிய ஒழுக்கத்தின் இலக்கணம். இக்களவு கந்தருவம் எனப்படும். களவின் முடிவு வரைதலாம். இதில் சூத்திரம் 50.

4. கற்பு இயல்.—மணமுடிந்தபின் தலைமகன் தலைவிக்கு இல்லற ஒழுக்கம் இத்தகையது என்று கூறுதல். துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லற நிகழ்த்துதலில், கொண்டவனே தெய்வம். அவனை வழிபடுமாறு இது. அந்தணர், சான்றோர், ஐயர், அமரர்முதலானோரைவழிபடுமாறு இஃது என்று கிழவன், கிழத்திக்குக் கற்பித்தல். இதில் சூத்திரம் 53.

5. பொருள் இயல்.—சொல் உணர்த்தும் பொருளும், தொடர்மொழி உணர்த்தும பொருளும் ஒருங்கே கூறலிற் பொருளியல் எனப்பட்டது. இவை நாடக வழக்கும் உலகியல் வழக்கும் ஆகிய புலநெறி வழக்கில் தத்தம் பொருளை யுணர்த்தாது திரிந்து பொருளுணர்த்தினும் பொருளேயாம். இதில் சூத்திரம் 54.

6. மெய்ப்பாட்டு இயல்.—மெய்ப்பாடு என்பது பொருள்பாடு. உலகத்தாருடைய உள்ள நிகழ்ச்சி உள்ளத்தில் நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றல் வெளிப்படுதல். மெய்ப்பாடு முப்பத்திரண்டு என்றும், அவை நாடக நூலாசிரியர்க்குப் பதினாறென்றும், எட்டென்றும் கூறப்படும். எண்

வகை மெய்ப்பாடு எவையெனின் சிரிப்பு, அழுகை, இழிவு, வியப்பு, பயம், வீரம், கோபம், மகிழ்ச்சியாம். இதில் சூத்திரம் 27.

7. உவம இயல்.—உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல். உவமத்தால் பொருள் புலப்பாடு கூறப்படுகின்றது. இஃது உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் வரும் உவமமும் தொழில். பயன், வடிவு, வண்ணம் பற்றித் தனித்தும் விரவியும் வரும். இதில் சூத்திரம் 37.

8. செய்யுள் இயல் —செய்யுள் இலக்கணம், பொருள்பற்றிச் செய்யுள் கூறுதலால் செய்யுள் இலக்கணம் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. இதனை யாப்பதிகாரமென உரைப்பாரும் உளர். இவ்வியலே பெரிதாம். இதில் சூத்திரம் 244.

9. மரபு இயல் —மரபு கிளவி யாக்க மரபு, செய்யுள் மரபு, இருதிணைப்பொருள் குணமாகிய இளமை, ஆண்மை, பெண்மை வரலாற்று மரபு, உயர்திணை நான்கின் மரபு, அஃறிணை மரபு, உலகியல் மரபு, நூல் மரபு எனப் பலவாம். இவையன்றி இலக்கண மரபும் கூறப்பட்டுளது. நூல், முதல்நூல், வழிநூல், உரை, யுத்தி இவற்றின் தன்மைகளும் பாகுபாடுகளும் பரக்கக் காணலாம். இதில் சூத்திரம் 110.

## அகத்திணை

## II

திணை என்பது ஒழுக்கம். ஒழுக்கம் பொருள் இடம் காலம் இவற்றைத் தழுவிவரும். அகத்திணை, அன்பின் ஒழுக்கம், அஃது எழுவகைப்படும். எழுவகையாவன: (1) கைக்கிளை. ஒருதலைக்காமம், (2) புணர்தல், (3) இருத்தல், (4) பிரிதல், (5) இரங்கல், (6) ஊடல், (7) பெருந்திணை, வழுவுடைக் காமம் பொருள் மூவகையாம்—முதல் கரு. உரிப்பொருளாம். முதற்பொருள் இயற்கை அமைப்பு. கருப்பொருள் உற்பத்திப் பொருள். அஃது உணா, ஊர், குடிதலைவர், தெய்வம்தொழல், நீர், பண், பறை, மரம், மலர், யாழ், விலங்கு என்பன. உரிப்பொருள் புணர்தல், புணர்தல்நிமித்தம், ஊடல், ஊடல் நிமித்தம், இரங்கல். இடம் ஐவகைப்படும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை. காலம் சிறுபொழுது, பெரும்பொழுது என இருவகைத்தாம். சிறுபொழுது மாலை, யாமம், வைகறை (விடி

| 1. நிலம் | 2. தெய்வம் | 3. உணா | 4. மா | 5. மரம் | 6. புள் | 7. பறை | 8. தொழில் | இசை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. முல்லை | குறும்பன்<br>(மாயோன்) | வரகு<br>சாமை<br>முதிரை | உழை<br>புல்வாய்<br>முயல் | கொன்றை<br>குருந்தம் | கானக்கோழி<br>சிவல் | ஏறுகோட்<br>[பறை<br>(பம்பை) | [தல்<br>நிரைமேய்த்<br>கனைகட்டல்<br>கடாவிடுதல் | |
| 2. குறிஞ்சி | முருகன்<br>(சிவன்) | ஐவனநெல்<br>தினை<br>மூங்கிலரிசி | புலி<br>யானை<br>கரடி<br>பன்றி | அகில்<br>ஆரம்<br>தேக்கு<br>திமிசு<br>வேங்கை | கிளி<br>மயில் | முருகியம்<br>தொண்ட<br>[கப்பறை | தேனழித்தல்<br>கிழங்ககழ்<br>[தல்<br>தினைவிளைத்தல்<br>கிளி கடிதல் | |
| 3. மருதம் | மருதன்<br>(இந்திரன்) | செந்நெல்<br>வெண்ணெல் | எருமை<br>நீர்நாய் | வஞ்சி<br>காஞ்சி<br>மருதம் | தாரா<br>நீர்க்கோழி | மணமுழவு<br>நெல்லரி<br>[சினை | நடுதல்<br>களைகட்டல்<br>அரிதல்<br>கடாவிடுதல் | செங்குறிஞ்சி செவ்வழி |
| 4. நெய்தல் | (வருணன்) | மீன்<br>உப்பு | உமண்பகடு<br>முதலை, சுறா | புன்னை<br>ஞாழல்<br>கண்டல் | அன்னம்<br>அன்றில் | மீன்கோட்<br>[பறை | மீன்படுத்தல்<br>உப்புவிளைத்<br>விற்றல் [தல் | |
| 5. பாலை | காளி | ஆறலைத்தல்<br>சூறைகோ<br>[டல் | கிழயானை<br>புலி<br>செந்நாய் | வற்றின இரு<br>[ப்பை<br>ஓமை<br>உழிஞை<br>ஞெமை | கழுகு<br>பருந்து<br>புறா | சூறைகோட்<br>[பறை<br>நிரைகோட்<br>[பறை<br>துடி | ஆறலைத்தல்<br>சூறைகோ<br>[டல் | [பிரபலை |

| நிலம் | 9. யாழ் | 10. பூ | 11. நீர் | 13. ஊர் | 13. மக்கள் | 14. தலைமக்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1. முல்லை | முல்லை<br>[யாழ் | முல்லை<br>பிடவு<br>தளம்<br>தோன்றி | கானயாறு | பாடி, சேரி,<br>பள்ளி | கோவலர்<br>ஆயர்<br>பொதுவர்<br>இடையர் | அண்ணல்<br>தோன்றல்<br>குறும்பொறை<br>[நாடன் |
| 2. குறிஞ்சி | குறிஞ்சி<br>[யாழ் | காந்தள்<br>வேங்கை<br>சுனைக்குவளை | அருவிசுனை | சிறுகுடி,<br>குறிச்சி | கானவர்<br>குறவர்<br>வேட்டுவர்<br>இறவுளர்<br>குன்றுவர் | வெற்பன்<br>சிலம்பன்<br>பொருப்பன்<br>கொடிச்சி |
| 3. மருதம் | மருத<br>[யாழ் | தாமரை<br>கழுநீர் | யாறு<br>கிணறு<br>பொய்கை | ஊர் | களமர்<br>உழவர்<br>கடையர் | ஊரன்<br>கிழவன்<br>மகிழ்நன் |
| 4. நெய்தல் | நெய்தல்<br>[யாழ்<br>விளாரி | கைதை<br>நெய்தல் | மணற்கிணறு<br>உவர்க்குழி | பட்டினம்,<br>[பாக்கம் | திமிலர்<br>பரதர்<br>நுளையர் | சேர்ப்பன்<br>புலம்பன்<br>துறைவன்<br>கொண்கன் |
| 5. பாலை | பாலையாழ் | மரா<br>குரா<br>பாதிரி | அறுநீர்க்கூவல்<br>[சுனை | பறந்தலை<br>குறும்பு | வேடர்<br>கள்ளர்<br>மறவர்<br>எயினர் | மீளி<br>காளை<br>விடலை |

# இளையான்குடிமாறர் வரலாறு

## அன்பு

[திரு. C. M. ராமச்சந்திர செட்டியாரவர்கள் B. A., B. L.,]

"இயலா விடைச் சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவித்து வாரி மனையாக் கால்வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன் செழுநீர்க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங் கற்பகமே"

முற்காலத்திலே இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே மாறனார் என்ற ஒருவர் இருந்தார். அவர் அளவிறந்த செல்வம் படைத்தவர். சிவனடியார் மேல் முழு அன்பு பூண்டவர். தமக்கு இறைவன் அருளின செல்வம் அடியார்களுக்கு அறம் செய்வதற்காகவே அளிக்கப்பட்டது என்று உளமாரக்கொண்டு அங்ஙனமே எக்காலமும் செய்து அறமே உருவமாக நிற்பவர். தம் வீட்டிற்கு வரும்படியான அடியார்கள் எந்த குலத்தைச் சேர்ந்தவரா யிருந்தபோதிலும் அதைக் கருதாது அவர் ஒழுக்கத்தையே மேலாகக் கொண்டு எதிர்கொண்டு அழைத்து அடிகழுவி அதன் நீர் அருந்தி இருக்கை அளித்து அறநூற்படி சோறு உண்பித்து அவரவர் விருப்பப்படி நடந்து இனிமை கொடுப்பார். இங்ஙனம் நாள்தோறும் ஆரா அன்பின் பெருக்கினால் அடியார்களுக்கு விருந்திடவே தமது செல்வமும் பன்மடங்கு பெருகி வளவனைப் போல் வாழ்ந்து வந்தார்.

இப்படியிருக்கும் காலத்தில், மேன்மக்கள் தாம் செல்வவான்களாயிருந்தபோது நடந்துவந்த தன்மையைப்போலவே வறுமை வந்தகாலத்திலும் நடப்பர் என்பதை உலகர்க்குக் காட்ட இறைவனார் நமது இளையான்குடிமாறனையனார் செல்வமெல்லாம் நாள்தோறும் சிறிது சிறிதாய் அழிந்து வறிஞர் ஆகும்படி அருளிச் செய்தார். அப்படி வறிஞர் ஆகியும் தம் உளம் சிறிதேனும் தளர்வடையாமல் இருப்பனவற்றை விற்றும் கடன்கள் வாங்கியும், பொருள்தேடி முன்போலவே அறம் நடத்திவந்தார்.

பின்னர் மழைக்காலத்தில் ஒருநாள் கடுமையாக பெருமழை பெய்துகொண்டிருந்தபோது அன்று காலைமுதல் உண்ண உணவு இல்லாமல், மற்றவர் உதவியும் கிடைக்காமல் மிகுந்த பசி

யுடனே இருந்த நாயனார் இரவில் நீண்டநேரம் ஆகிவிட்டபடியால் கதவைப் பூட்டிக்கொண்டு வீட்டிற்குள் இருந்தார்.

அப்பொழுதில் இதுதான் தகுந்த வேளை என்று இறைவன் சிவனடியார் வடிவங்கொண்டு அவர் வீட்டின் கதவைத் தட்டினார். நாயனார் கதவைத் திறந்து சிவனடியாரை அன்புடன் அழைத்து மழையினால் நனைந்த அவரது திருமேனியை ஆடையால் துடைத்து ஓரிடத்தில் அவரை அமர்த்தினார். உடனே அவருக்கு இன்னுணவூட்ட எண்ணங்கொண்டவராய்த் தம் மனைவியாரிடம் சொல்ல அவ்வம்மை வீட்டில் காய்கறி ஒன்றும் இல்லாமையையும், வேறிடம் கடன் கேட்க முடியாமையையும் தெரிவித்து அன்று பகலில் வயலில் விரைத்த நெல்லைக்கொண்டு வந்தால் செம்மை செய்து சமைத்து உண்பிக்க முடியும் என்று அறிவிக்கவே நாயனார் உளமகிழ்ந்து அங்ஙனமே செய்ய உடன்பட்டுச் சென்றார். கடுமையாய்க் கொட்டிக்கொண்டிருந்த மழையில் மிக்கிருண்ட இருட்டில் தலையில் ஒரு கூடை கவிழ்த்துக்கொண்டு காலினால் வழியைத் தடவிக்கொண்டு தன் வயலுக்குச் சென்று அப்போதுதான் முளைத்துக்கொண்டிருந்த நெல்லை வாரிக் கூடையில் நிரப்பிக்கொண்டு வீட்டிற்கு வந்தார். மனைவியார் நெல்முளைகளை வாங்கிச் சேறு போகும்படி அலம்பி, அடுப்பு எரிக்க விறகு இல்லாமல் வீட்டுக் கூரையை அறுத்து, தீ மூட்டி, அதில் நெல்லை வறுத்து அரிசி ஆக்கிப் பின் சோறு ஆக்கினார். கறிக்காகப் புறக்கடைத் தோட்டத்துக் கீரையை அறுத்து அதனால் வெவ்வேறு வகை கறியுணவாக்கினார். சமையல் செய்தானவுடன் தெரிவிக்கவே, நாயனார் அடியாரை அழைக்கச் சென்று, தூங்கியவர்போலப் படுத்திருந்த அடியாரை "அடிகளே உணவு கொள்ள எழுந்தருளும்' என அழைக்க அங்கு அவர் ஒரு ஒளிவடிவாய் விளங்கினார். அக்காட்சியைக் காணவே, நாயனாரும் அவர் மனைவியாரும் திகைத்து நின்றார்கள். அப்போது இறைவன் வெள்ளி விடையின் மேல் அம்மையாரோடு எழுந்தருளிக் காட்சிகொடுத்து, "அன்பனே! நம் அடியாரை உண்பித்த நீயும் உன்மனைவியும் நமது திருவடியை அடைந்து பேரின்பம் பெறுவீர்" என அருளிச் செய்து மறைந்தருளினார்.

இவ்வரிய வரலாற்றால் நாம் அறியக்கூடிய சில படிப்பினைகளை ஆராய்வோம்.

க. இளையான்குடிமாறநாயனார் சிவனடியார்களிடம் அன்பு பூண்டு உணவளித்து ஓவாது அறம்புரிந்து வீடெய்தினவர். இதற்கு அடியவர் அன்பினால் வீடடைதல் என்பர். இப்படிப்

பட்ட அடியார் வணக்கத்திற்கு இறைவணக்கம் என்று பெயர். அவ்வணக்கத்தைவிட வேறு சிறந்த அறம் இல்லை. ஏனெனில் இறைவனிடம் அன்புள்ளவர்கள் மீது நாம் அன்புகாட்டினால் அஃது இறைவனுக்கே உரித்தாகுமன்றோ ? திருமூலரும்,

படமாடக் கோயில் பகவற்கு ஒன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே"

என்கிறான்றோ?

௨. சிவனடியார்களில் குலவேற்றுமையில்லை. உலகவாழ்க்கையில் எவ்வளவு தாழ்ந்தவராகக் கருதப்படுவர் எனினும் அவர் உயர்ந்தவரே யாவர். அவர்களைக் காணும்போதும் அருமைகாட்டும்போதும் எல்லாரையும் பொதுவாகவே எண்ண வேண்டும். சிவனடியார் எவரையும் தாழ்ந்த வகுப்பினர் என எண்ணுவது குற்றமாகும். அதனால்தான் சேக்கிழார் பெருமானும், "ஐயர் தம் அன்பர் என்பதோர் தன்மையால் நேரவந்தவர் யாவராயினும்......வந்தெதிர்கொண்டு" என்று நம்நாயனார் அடியார்களை எதிர்கொண்ட சிறப்பினை எடுத்துக்காட்டியுள்ளார்.

3. "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்றும், " தம்தம் தனம் சிறியர் ஆயினும் தார்வேந்தர் கெட்டால் மனம் சிறியர் ஆவரோ மற்று" என்றும் அருளின ஔவையார் அருளியபடி நாயனார் தாம் செல்வவானாயிருந்த காலத்தில் செய்த அறத்தைப்போலவே வறுமை வந்த காலத்தும் தவறாமல் வழங்கி வந்தார். அவர் உளம் எக்காலத்தும் மாறவே இல்லை. அதுதான் உண்மை அடியாரின் குறிப்பு அன்றோ ?

4. நாயனார்க்கு வறுமை வந்ததின் வழியைச் சேக்கிழார் பெருமான் மிகவும் நன்றாய்க் கூறுகின்றார். நாயனார் செல்வம் வந்த காலத்திலன்றி வறுமை வந்த காலத்தும அதைச் செய்ய வல்லவர் என்பதை உலகிற்கு அறிவிக்க எம்பெருமான் அவர்க்கு வறுமை கொடுத்தார் என்கிறார். இதனால் அறியப்படும் உண்மைகள் என்னவெனில், பெருமானார் நல்லோர்களுக்கு வறுமை, கொடுத்தல் அவர்கள் நயத்தின்பொருட்டு என்பதும், அந்நயம் கடைசியில் கைகூடும் என்பதும், அக்கருத்து அறியாமல் அறஞ் செய்த நமக்குக் கடவுள் இடர் தந்தாரே என்று நோதல் பழுதாகும் என்பதும், எல்லாம் உலகத்தாரின் நன்மைக்காகவே இறைவனார் அருளுகிறார் என்பதும் ஆகிய இவைகளே. இவ்

வுண்மைகள் அனைத்தினையும், சிறிது ஆராய்ந்து பார்த்தால், நம் நாயனார் வரலாற்றிலே நாம் தெளிவாய்க் காண்கிறோம்.

5. இளையான்குடிமாறனாருடைய அன்பினை வெளிப்படுத்த இறைவனார் செய்த ஆராய்ச்சி மிகக் கடுமையே. அவர் அக்கடிய ஆராய்ச்சிக்குச் சிறிதேனும் இளகியவரே யல்லர். வீட்டில் உணவு இல்லாமல் பசியோடிருந்த காலத்தில் எம்பெருமானார் சிவ வுருக்கொண்டு வந்தார். மழையோ விடாமற் பொழிந்து கொண்டிருந்தது. இருட்டோ மிகுந்திருந்தது. அந்நேரத்தில் வந்த அடியாருக்கு உணவு அளிக்கவேண்டும் என்ற கடமையை நாயனார் செலுத்த நினைத்தார் என்றால் அவர்க்கு எதுதான் ஒரு தடையாகும்? அன்று பகலே விதைத்த நெல்லை இனிப் பிற்காலத்துக்கு இல்லாமற் போய்விடுமே என்பதையும் ஒரு பொருட்டாக எண்ணாமல் அந்த ஈரமான முளை நெல்லைக் கொண்டுவரச் செல்கிறார். கடுமழை அவர்க்கு ஒரு தடையோ ஒன்றுமில்லை. அவர் மனைவியாரோ தங் கணவரின் எண்ணம் எவ்வளவு கூடாததாயினும் நிறைவேற்ற உளத்திட்பம் உடையவர். வீட்டின் கூரையையும் தீக்கிரைசெய்தார் பலபேர் நெடு நேரம் செய்யக்கூடிய செய்கையையும் செய்துமுடித்தார். ஈர நெல்லை வறுத்து அரிசி ஆக்கி, அரிசியைச் சோறு ஆக்கிப் பயிரைக் கறியாக்கிச் சமைத்தார் அன்றோ? இத்தகைய உறுதியையும், விடாமுயற்சியையும், செய்கை கைகூடுதலையும் கொண்ட இருவர்க்கும் சிவபெருமான் ஏன் தம் அருட்கடலைப்பொழிந்து பேரின்பத்தை அளிக்கமாட்டார்?

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்."

என்பதன் உண்மையினை நம் நாயனாரிடம் ஓர் உருவமாகக் காண்கிறோம்.

# சொற்பொருள் வேறுபாடு

[திரு. S. அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் M. A., L. T.]

இன்னும், வடசொற்கள் 'இழிவுபொருட்பேறு' என முன்னர்க் குறிக்கப்பட்ட நியமம்பற்றிப் பொருள் வேறு படுதலுமுண்டு.

'ஆபாஸ' என்னும் ஆரியச் சொல் அம்மொழியிலேயே சோபை, பிரதிச்சாயை, பொய்த்தோற்றம் முதலிய அர்த்த பேதங்களையடையும். தமிழிலோ ஆபாசம் என்னும் தற்பவம் அருவருக்கத்தக்கது. அவலட்சணமாயிருப்பது முதலிய பொருள்களை அடைந்திருக்கிறது. வேதாந்த நூலாராய்ச்சி யுடையார்க்குச் சிதாபாசன் முதலிய சொற்களிலே ஆரியத்திலுள்ள அர்த்தம் தெரிந்ததே யாயினும் அவர்களும் சாமானிய வழக்கில் தமிழ்த்தற்பவத்துக்குள்ள பொருளையே காண்பர்.

'கவிராஜ' என்னும் ஆரியச்சொல் கவிகட்குள் அரசன் என்னும் பொருள் தருவது. அது தற்பவமாகக் கவிராயன் என்று தமிழில் ஆதியில் வந்தபொழுது அந்தப்பொருளையே யுடையதாயிருந்திருக்குமென்பதி லையமில்லை யாயினும், இக்காலத்தில் கவிசெய்வோன் என்னும் பொருளளவிலேயே அஃது உபயோகிக்கப்படுகிறது. சில சமயங்களில் அது 'புலவன்' என்னும் தமிழ்ச்சொல்லைப்போலச் சிறுபொருள் விரும்பியும் பாடுபவன் என்னும் இழிந்தபொருளையும் அடையும்.

'நாரீ' என்னும் ஆரியச்சொல் ஸ்திரீ என்னும் பொருளது. 'நாரீமணி,' 'நாரீரத்நம்' என்னும் தொடர்களும் வழங்கும். 'நாரி' என்னும் தற்பவம் ஸ்திரீயைக் குறிக்க வழங்குங்கால் கவுரவ வழக்கென்று எவரும் எண்ணார். குணங்கெட்டவள் என்ற பொருளே தொனிக்கும். 'வேசை நாரி,' 'கெட்டுப்போன நாரி' முதலிய வழக்குக்களையுங் காண்க.

'நிர்வாண' என்னும் ஆரியச்சொல் முத்தி, பேரின்பம் முதலிய பொருள்களையுடையது. தமிழில் அது நூல்வழக்கில் அப்பொருள்களை யுடையதே. தீக்ஷைவகைகளில் நிர்வாணதீக்ஷை பிரசித்தமானது, மோக்ஷத்தைப் பயக்குந் தீக்ஷை யென்னும் பொருளது. ஆயினும் சாமானிய வழக்கில் அதற்குத் துணியில்லாமல் பிறந்தகோலத்தோ டிருக்கையென்பதே பொருள். தத்துவங்களனைத்தினுடைய தொடர்பும் விட்டுப் பரம்பொருள் முன்னே ஆன்மா தனித்துநிற்கும் நிலையைக் குறிக்கும் இச்

சொற்கு அப்பொருள் இன்னவிதமா யமைந்திருக்கக்கூடுமென்று நாம் எளிதினூகிக்கலாம். இனி, நிர்வாணியென்னும் சொல் எல்லாம்விட்ட துறவியென்னும் பொருளதாய்த் திக்குகளையே ஆடையாகவுடைய திகம்பரனைக் குறித்தலால், நிர்வாணமென்னும் சொல் ஆடையின்மையைக் குறிக்க வந்திருக்கவுங் கூடும். நிர்வாணமென்னும் சொல்லைச் சிலர் உச்சரிக்குங்கால் நிரம்மண மென்று கேட்பதுபோலத் தோன்றும். அங்ஙனம் சொல் மாறுபடுமோ என்பதை நோக்காது நிர்வாணத்திலிருந்து நிரம்மணம் வந்ததென்று சொல்லிவிடுதல் இயல்பு. ஆயினும், பொருள் வேற்றுமையில்லாத நிர்வாணம் அம்மணம் என்னும் சொற்கு அப்பொருள் எப்படி வந்தது? ஜைன விக்கிரகத்துக்குத் துணி கட்டுவதில்லை யாதலால் அதனை அம்மணசாமியென்று வழங்குவதுண்டு. அம்மணத்துக்கு நிர்வாணமென்னும் பொருள் இவ்வாறு அமைதல் இயல்புதானே. அம்மணம் அமணமென்னும் சொல்லின் திரிபு. 'ஶ்ரமண' சமணம் என்றாய்ப் பின் அமணமாயிற்று.

இனி, வடசொற்கள் மேற்சொல்லிய நியமங்களைப் பற்றாது வேறுவகையாகப் பொருள் மாறுதலு முண்டு.

'அதிஶய' என்னும் ஆரியச்சொல் அதிகம், மேன்மையென்னும் பொருளில் வரும். தமிழிலக்கியங்களில் 'அதிசயம்' அப்பொருளில் ஏகதேசமாக வருவதுண்டு. 'நிரதிசயானந்தம்,' 'அதிசயோக்தி' யென்னும் வழக்குக்களில் காண்க. சாமானிய வழக்கில் அச்சொற்குப் பொருள் அற்புதம், ஆச்சரியம் என்பதே. தெலுங்கிலும் அஃது இப்பொருளில் வரும். மிக உயர்வாயிருப்பது அசாதாரணமா யிருப்பது அற்புதமாகக் கருதப்பட்டது போலும்!

'அபராத' என்னும் ஆரியச்சொல் தவறு, குற்றமென்னும் பொருளை யுடையது. தமிழிலக்கியத்தில் 'அபராத'த்திற்கு அப்பொருள் உண்டு. சாமானிய வழக்கில், இன்ன குற்றத்திற்காக இவ்வளவு தொகை செலுத்துக என்று விதிக்கும் தண்டனை வகையை அது குறிக்கும். தெலுங்கிலும் அதற்கு இப்பொருள் உண்டு. சாமானிய மக்களுக்கு வேறு பொருளே தெரியாது. தமிழில் இழிசனர் வழக்கில் இச்சொல் அவராதமென்றும் அவதாரமென்றும் திரிந்துவரும். தெய்வங்கள் உலகிற் பிறத்தலை அவதாரமென்னும் வழக்கு அவர்களிடத்து அரிதாகவே காணப்படுகின்றது.

'அபஸ்மார' என்னும் ஆரியச்சொல் மறதியென்றும், பின் மறதி பூர்ணமாயிருக்கும் காக்காய் வலிப்பு முதலிய ரோகங்

களையுங் குறிக்கும். 'தமிழில் அபஸ்மாரம்' எண்ணத்தகாத தென்னும் பொருளில் வழங்கும். இவ்வேறுபாடு எப்படிவந்தது? தமிழர் 'அப' என்னும் முன்னிடையையும், 'ஸ்மார' என்னும் சொல்லையும் பிரித்து 'எண்ணக்கூடாதது' என்று பொருள்செய்து பின் 'எண்ணுதற்குத் தகுதியில்லாதது' என்னும் பொருளையும் அதற்கு வருவித்திருக்கவேண்டும். அந்நோயினின்றும் இப்பொருள் வந்ததெனல் தமிழ் மக்களுக்குக்கேவலம் அருளின்மையைக் கற்பிக்கும்.

'அப்ராணிந்' என்னும் ஆரியச்சொல் உயிரில்லாத என்னும் பொருளது. மலையாள மொழியில் அச்சொல் நோய் கொண்ட என்னும் பொருளில் வரும். தமிழ்த்தற்பவமாகிய அப்பிராணி தீங்கு செய்ய அறியாத ஸ்வபாவஸ்தன் என்னும் பொருளைத்தரும். அவனுக்கும் பிணத்துக்கும் செயலால் பேதமில்லையென்பது கருத்து.

'அப்யந்தர' என்னும் ஆரியச்சொல் உன்னிடம் இடையீடு என்னும் பொருள்களில் வரும். தமிழ்த்தற்பவமாகிய அப்யந்தரத்துக்குத் தடையென்பது பொருள். இடையில் வருவதாகிய இடையீடு காரிய நிகழ்ச்சிக்குச் சிறிது தடையாயிருத்தலால் அதிலிருந்தே இப்பொருள் வந்திருக்கவேண்டும். வழக்கில் சிறு தடையே கருதப்படுகின்றது.

'அவஸர' என்னும் ஆரியச்சொல் சந்தர்ப்பமென்னும் பொருளது. ஆரியமறிந்தோர் ஸம்பாஷணத்திற்கூட அப்பொருளிலேயே அச்சொல்லை வழங்குகின்றனர். சாமானியவழக்கிலோ அவசரமென்பது விரைவைக் குறிக்கும். கன்னடமொழியிலும் அதற்கு இப்பொருள் உண்டு. சந்தர்ப்பம் முதலில் கஷ்ட சந்தர்ப்பமென்னும் பொருளில் வந்திருக்கவேண்டும். அதாவது உடனே காரியம் நிகழ்த்தாது காலந்தாழ்க்கப்படின் பல நஷ்டங்களும் நேர்வனவாயிருக்கும். அத்தகைய சந்தர்ப்பத்தில் மக்கள் சுறுசுறுப்பாகக் காரியஞ்செய்தல் இயல்புதானே- பார்ப்பவர்களுககு அவர்கள் விரைவதாகத் தோன்றலாம். இவ்விதமாக அவசரம் விரைவைக் குறிப்பதாயிற்று.

'ஆயத்த' என்னும் ஆரியச்சொல் சார்ந்திருக்கின்ற பணிவான முதலிய பொருளில் வரும். தமிழில் அச்சொல் தயார் என்னும் பொருளையுடையது. சார்ந்திருக்கும் தன்மையிலிருந்து தயார் என்னும் பொருள் உண்டாதல் இயல்பே. பராதீனனாயிருப்பவன் தன் இறைவன் பணியைச் செய்ய எப்போதும் தயாராயிருக்கவேண்டுமென்றோ?

---

# திரு. நீலாம்பிகை அம்மையாரின் திருமண நிகழ்ச்சி

[தி. சு. பாலசுந்தரனார்]

இப்பொழுது தமிழ் மக்களென்று இருப்பவர்களை உண்மைத் தமிழர்களாக ஆக்கிவிடுதற்குப் பல ஆண்டுகளாக ஊன்றிய கருத்துடன் ஓவாது உழைத்துவரும் உயர்திரு. மறைமலையடிகள், சிவபெருமான் திருவருளையே கண்ணாகக் கண்டு எதனையும் அதன் வழியாகச் செய்யும் பழந்தமிழ் மக்களின் சீரிய வழக்கப்படியே தம் அருமைத் திருமகள் திருமிகு. நீலாம்பிகை அம்மையாரின் திருமணத்தைச் செய்து காட்டுமுகத்தால் தமிழர்களுக்கு ஒரு வழிகாட்டியாக நிற்கக் கருதி, அந்தத் திருமணத்தைத் திருமயிலைச் சிவபிரான் திருக்கோயிலிற் செம்மையும் சிறப்பும் செழித்தோங்க நடத்தினார்கள். அது நடந்தமுறை: அங்குள்ள சிவபிரான் திரு உருவங்களுக்குத் திருமுழுக்கும் வழிபாடும் கருப்பூரவொளியும் நிகழ்வித்துச் சிவத்தின் திருமுன் வைத்தெடுத்துக் கோயிற் குருக்களால் தரப்பட்ட தாலியைச் சிவம் நினைந்து மணமகன் மணமகளுக்குச் சூட்டச் செய்தமையேயாகும். அங்ஙனம் சூட்டும்போது,

"குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க"

என்னும் திருவாசகத் திருமறையின் சைவச் செந்தமிழ்த் தெய்வத் திருமொழியை எல்லாரும் ஓதிப் பூச்சொரிதலே அடிகளின் அழுந்திய நோக்கமாயிருந்து, அங்ஙனமே நிகழப்பெற்றது. அம்மறைமொழியின் கருத்து நுட்பம் திருமணத்துக்கு மிக இயைந்து ஒத்துநிற்றல், நெஞ்சொருங்கி யறிந்து மகிழக் கூடியது. இவ்வகையாகத் திருமணத்தைத் தமிழ் மணமாக நடத்திக் காட்டிய அடிகளின் அருட் செயலுக்குத் தமிழுலகம் கடமைப்பட் டிருக்கின்றது.

இங்ஙனம் சிவத்தின்வழி நடக்கற்பாலனவாம் திருமணங்களுக்குப் பேரிடையூறாய் நின்று அவற்றை முழுதுங் கெடுத்துத் தமிழர்களை அவத்தின்வழிக் கிடக்கச் செய்தவர்கள் ஆரியப் பார்ப்பனர் என்படும் மாந்தரே யாதலால், தமிழரின் திருவிழாக்களுக்கு அவ் ஆரியப் பார்ப்பனரின் தொடர்பு சிறிதுமே இலதாதல் வேண்டும். திருமணத்தையே யல்லாமல் தமிழர்களின் மற்ற நிகழ்ச்சிகளையும் முழுதுங்கெடுத்தவர்கள் அவர்களே யாதலால், எந்த நிகழ்ச்சிகளுக்கும் எப்பொழுதும் அவ் ஆரிய

ரின் கூட்டுறவு தம்முள் நுழையாதபடி, உயர்வைப்பெற விரும்புந் தமிழராவா ரெல்லாரும் அதனை முழுதும் விலக்கிவிடக் கடவர். ஆதலால் அவ் ஆரியப் பார்ப்பனரின் தொடர்பை அடியோடு நீக்கிக் குருக்கள் பட்டர் எனப்படும் தமிழந்தணர் வாயிலாகச் சிவத்தை வணங்கி இந்தத் திருமணம் நிகழ்த்தப் பட்டமை நினைவிற் பதிக்கற் பாலதாகும். உண்மை இவ்வாறிருக்க, ஆரியரைப் போலவே வடமொழியோதி வெண்ணூல் பூண்டு மற்றைத் தமிழரோடு உண்ணல் கலத்தல் செய்யாதிருத்தல் ஒன்றே கொண்டு, அக் குருக்கண்மாரை ஆரியப் பார்ப்பனரே யெனக் கருதி 'நீலாம்பிகை அம்மையாரின் திருமணமும் ஆரியத் தொடக்கை நீக்கியதன்றே' என்று 'தமிழ்நாடு' 'திராவிடன்' என்னும் நாளிதழ்களின் வாயிலாக மனங்கரைந்தார் ஒரு சிலர். தமிழ் மக்களை ஆரியத் தொடக்கினின்றும் விடுவித்தலில் அவர்கள் கொண்டுள்ள ஊன்றிய உண்மை உயர் கருத்தைத் தமிழுலகம் அறிந்து, அவர்களோடு ஒத்துழைத்தலாகிய நன்றியாற்றுங் கடப்பாடு உடையதாகின்றது. எனினும், நூலணிந்துகொண்டு மற்றத் தமிழரோடு உண்ணல் கலத்தல் செய்யாது, வழிபாட்டு முறை முதலியவற்றில் ஆரியரைப்போல வடமொழி யோது தலே பற்றிக் கோயிற் குருக்களை ஆரியப் பார்ப்பனரோடு சேர்த்து அவர் ஆரியரேயாவர் என்றுரைத்தால், அவரைப்போலவே நூலணிந்து கொண்டு மற்றத் தமிழரோடு உண்ணல் கலத்தல் செய்யாது வழிபாட்டு முறை முதலியவற்றில் வடமொழி ஓதியும் ஓதவிரும்பியும் 'பிராமண' 'க்ஷத்திரிய' ப் பெயர் புனைந்தும் வருகின்ற உண்மைத் தமிழ் மக்களாகிய தட்டாரிற் சிலர் தச்சரிற் சிலர் வன்னியரிற் சிலர் வள்ளுவரிற் சிலர் செட்டிகளிற் சிலர் கணக்கரிற்சிலர் வேளாளரிற்சிலர் ஓதுவாரிற்சில ராவாரையும் அவ்வாறே அவ் ஆரியரினத்திற் சேர்த்து அவரையும் ஆரியரென்றே ஒதுக்கிவிடல் வேண்டும். அங்ஙனங் கொள்வதானல், நண்பர்களே! மேற்காட்டிய தமிழர்கள் தவிர வேறு தமிழர்கள் தமிழகத்தில் இல்லாமையால் தமிழர்கள் என்னும் இனமே இல்லாது ஒழிந்து, அவ் ஒழிதலால் தமிழர்களின் தொகையும் இல்லையெனும்படியாகி எல்லாரும் ஆரியராக, அவ்வாற்றால் நம் தமிழ்நாடும் ஆரிய நாடாகவன்றோ மாறிவிடும். ஒரு சார்பான பற்றினல் விரைந்து முடிவு கட்டிவிடாது, நடு நின்று ஆராய்ந்து பார்த்தலே நன்மை பயப்பதாகும். தமிழ் நன்மக்களே! ஆரியப் பார்ப்பனர் என்னும் ஒரு பாம்பும், கிறித்துவர் என்னும் மற்றொரு பாம்புமாகத் தவளைகளை யொப்பக் களங்கமில்லாத தமிழ் மக்களை விழுங்கி விடுமானல், தமிழகமும் ஒன்று நிலையுங்கொலோ! நிலையுங்கொலோ!! ஐயகோ! தீயை விரும்பும் விட்டிலைப்போல இவ் ஆரிய மாந்தரோடு சேர விரும்

புந் தமிழர்களின் தளர்ந்தநிலே, உண்மை யறிஞர்களின் ஈரநெஞ் சத்தை நீராக்குகின்றது.

தமிழ்த் தொண்டர்களே! தமிழராவா ரெல்லாரும் தம்மை அறியாது ஆரியரெனக் கூறிக்கொண்டு ஆரியராகத் திரிந்து தமிழையும் தமிழ்க் கொள்கைகளேயும் தமிழ்ப் பழக்க வழக்கங்களே யும் தமிழ் நாட்டையும், ஆரிய மொழியாகவும் ஆரியக் கொள் கைகளாகவும், ஆரியப்பழக்க வழக்கங்களாகவும் ஆரிய நாடாக வும் ஆக்கிக்கொண்டுவரும் இக்காலத்தில், நீங்கள் செய்யவேண் டிய உயர்ந்த உண்மைத்தொண்டு எதுவென்று நினைக்கின்றீர் கள்? ஆரியராய்த் திரியும் தமிழரைப் பார்த்து, 'நீங்கள் ஆரியர் களே யாவீர்கள்; ஆதலால் உங்கள் தொடர்பே எம்மனோர்க் குக் கூடாது' என்று கூறி அவர்களே நம்மினின்றும் விலக்கிவிட விரும்புகிறீர்களா? அல்லது 'நீங்களெல்லாரும் உண்மையான தமிழ்ப் பெருமக்கள் கண்டீர்! களங்கமற்று வெள்ளேயெல்லாம் பால் என்று கருதிக் கள்ளம் அறியாதொழுகும் தமிழ் நன்மக் களே ஆழ்ந்த கருத்தும் உண்மை உணர்ச்சியும் நல்ல ஒழுக்கமும் இல்லாத நூலும் மடியும்பூண்ட தமதுருவத்தாலும், கதையும் ஓசையும் மலிந்த வடமொழியாலும் மயக்கி வஞ்சித்து, அவரா வதுபோற் காட்டி அவர்க்குத் தலேவராய் அப்படி ஆனபின் 'தீட்டிய மரத்திற் கூர் பார்ப்பதையொப்ப அந்தத் தமிழ் மக்க ளேத் தமக்கு வேலேக்கார ராக்கிக்கொண்டு, கடைசியில் அவர் களே அடியோடு அழித்துவிடும் படிற்றெண்ணமும், படிற்று ணர்ச்சியும் படிற்றொழுக்கமுமுடைய ஆரியப் படுகுழியில் வீழ்ந்து அறியாது அப்பெயரெடுக்க விரும்பி, வௌவால்போ லப் பிறர் இரங்கத்தக்க நிலேயில் நிற்கின்றீர்! நீங்கள் ஆரியரோடு சேரப் பார்த்தாலும் அவர்கள் உங்களே ஏற்றுக்கொள்வதா யில் லேயே! எவ்வளவுதான் நீங்கள் அவர்களுக்கு அணுக்கமான நட்பு ரிமைகொண்டு நின்றாலும், உண்ணல் கலத்தல் முதலியவைகளில் உங்களே அவர்கள் புறத்துத்தானே அடித்தோட்டுகிறார்கள். நூலாலும் மடியாலும் இறந்த மொழியாலுமே, அறிஞரும் இறைவனும் விரும்பத்தக்க அந்தணராய்விடமாட்டீர்கள். அந் தணரென்பது ஓரினமாகாது. அடியாரென்பது ஓரினமானால், அந்தணரென்பதும் ஓரினமாகும். அறிவும் அன்பும் அருளும் என்னுந் திருவருளியல்புகளிற் சிறந்து நிற்பவர் எந்த இனத்தி லிருந்தும் அடியார் அந்தணர் என்று பெயர்பெறலாம்.

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும்கொண்டு என்செய்வீர்"

"கோலும்புல்லும் ஒருகையில் கூர்ச்சமும்
தோலும்பூண்டு துயரம்உற்று என்பயன்"

"நூலும் வேண்டுமோ நுண்உணர்ந் தோர்கட்கே"

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்அடியார்க்கு
இங்கேஎன்று அருள்புரியும் எம்பெருமான்"

என்னும் உண்மைப் பெரியாரின் அருண் மொழிகளையேனும் சற்று நினைத்துப் பாருங்கள். ஆகவே அறிவு முதலிய நல்லியல்புகளிற் சிறந்தவரை யெல்லாம் உயர்ந்த இனம் என்று அழைமின்கள்! மற்றவரை யெல்லாம் தாழ்ந்த இனமென்றே கொண்மின்கள்! அம்மையப்பராகிய திருமால் சிவத்தை வழுத்தும் மாந்தரை யெல்லாம் உயர்ந்த இனம், அந்தணரினம், என்று பாராட்டுமின்கள்! இராமன், கண்ணன், இந்திரன், சந்திரன், சூரியன் முதலான மக்களையும் சிறு தேவரையும் அறிவற்ற பருப் பொருள்களையும் முழுமுதற் கடவுளென்று சொல்லி வணங்குவாரை அங்ஙனம் உயர்ந்தவராக நினையன்மின்! நூலும் மடியும் வடமொழியு மென்னும் வெளிப்பகட்டை விரும்பிப் போலி அந்தணராக மாறாமல், அறிவும் அன்பும் அருளும், என்னும் நல்லியல்பை விரும்பி உண்மை அந்தணராக ஆமின்கள்! அங்ஙனம் ஆவது தமிழாலும் தமிழ் நூலாலும் தமிழ்ப் பழக்க வழக்கங்களாலும் தமிழர் கூட்டுறவாலுமே ஆகும் என்பதற்குத் தமிழராயுள்ளாரிற் பெரும்பாலாருக்கு அவ் அறிவு அன்பு அருள் என்னும் நல்லியல்புகளும் அம்மையப்பராகிய திருமால் சிவமென்னும் முழுமுதற் கடவுள் வணக்கமும் இயற்கையில் இருப்பதே தக்க சான்றாம். ஆதலால் நீங்களெல்லீரும் உங்களைப்போன்ற மற்றத் தமிழ் மக்களோடு உண்ணல் கலத்தல் முதலியன செய்து கொண்டு, ஒருவருக் கொருவர் ஒற்றுமையும் அன்பும் காட்டித் தமிழ் நாட்டைத் தமிழ் நாடாகவே ஆக்கி, உங்களுடைய நய வஞ்சகப் பகைவர்களாகிய ஆரிய மந்தர் தம் தொடக்கை முழுதும் நீக்கி முழுமுதற் கடவுளை வழிபட்டு இன்பமும் அறனும் பொருளும் ஓங்கத் திருவள்ளுவர் தம் தெய்வ வாழ்க்கையில் நின்மின்கள்! என்று அவர்களுக்கு உணர்ச்சிவர எடுத்துக்கூறி அவர்களை உங்களோடு சேர்க்க விரும்புகிறீர்களா? அமைந்து விடை கூறுமின்! ஆரிய மக்களை நம்மோடு சேர்த்தல் வேண்டாம். தமிழ் மக்களையே தமிழ் மக்களோடு சேர்த்துக்கொள்வதில் வரும் இழுக்கென்னை? இல்லையேல், தமிழ் நாடும் இல்லையா மென்பது திண்ணமா மன்றோ?

ஆதி சைவர்களாகிய கோயிற் குருக்கண்மார் தமிழராகிய நம்மோடு உடன் உண்ணல் கலத்தல் செய்யாமையால் அவர்களை நம்மோடு சேர்த்தல் தகாததோடு, ஆரியருக்குரிய வடமொழி வெண்ணூல் மடிகளையே அவர்களும் மேற்கொண்டு ஒழுகத்

தொடங்கி விட்டமையால் அவர்களை நம் பக்கல் திருப்புவதும் இயலவே இயலாதாம் என்றால், குருக்கண்மார் நம்மோடு உடன் உண்ணல் கலத்தல் செய்யாதது போலவே ஆரியப் பாரப்பன ரோடும் அவர்கள் உடன் உண்ணல் கலத்தல் இயலாமையாலும் ஆரியர்கள் இவ் ஆதி சைவ நன்மக்களை எப்பொழுதும் இழித் துரைக்கவே காண்டலானும் அவர்களை ஆரியரோடு சேர்த்தலும் தகாதகோடு, தமிழர்களுக்குரிய சிவ வணக்கம் அடியார் வணக் கம் தமிழ் மொழிப்பற்று தமிழ் மறைப்பற்று முதலியவற்றில் அழுந்திய உள்ளெண்ணம் ஆதி சைவர்கள் உடைமையானும், நூல் மடி முதலிய வெளிப்பகட்டினும் சிவ வணக்கம் முதலிய உள்ளெண்ணம் சிறந்ததாதலானும் அக்குருக்கண்மாரை ஆரிய ராகத் திருப்புவதும் இயலவே இயலாதா மன்றோ என்று வினவுவார்க்கு விடை இறுக்க ஏலாமையின் அது பொருந்தாது. அப்படியன்று, ஆரியப்பார்ப்பனரைப்போல் தமிழந்தணர்களும் வடமொழியைப் பயன்படுத்தி இறைவனை வழிபடுதலால் இவர் களும் நம்மால் விலக்கப்பட வேண்டியவர்களே எனின், கோயில்க ளெல்லாம் தமிழ்க்கோயில்கள், அக்கோயில்களில் வைத்து வணங்கப்படும் முருகன், சிவபிரான், திருமால் எல்லாம் தமிழ்த் தெய்வங்கள், அத்தெய்வங்களையுங் கோயில்களையுங் கொண்டாடி வருவன தேவாரம் திருவாசகம் முதலிய தமிழ் மறைகள்; இவை யெல்லாவற்றிற்கும் உரியவர்கள் தமிழர்கள். பெருந்தொகையின ரான தமிழர்கள் தம்மால் கோயில் வழிபாட்டுக்கென்று தம்மி னின்று பிரித்துவைத்த கோயிலந்தணர்களைத் தமிழ் மொழியி லேயே வழிபாடு செய்யும்படி உறுதியான ஏற்பாடு செய்திருப் பார்களாயின், அக்கோயி லந்தணர்கள் தமிழ் மறைகளைக் கொண்டே வழிபாடு செய்துவருவர். தமிழர்கள் தம்முடைய தமிழ் மொழியினிடத்தும் தமிழ் மறையினிடத்தும் தமிழ்த் தெய்வத்தினிடத்தும் அன்பும், பற்றும் இல்லாதவர்களாய்த் தம் ஆதிசைவக் குருக்கள் நடக்கவேண்டிய முறைகளை வற்புறுத்தா மற் பராமுகமாய் இருந்ததனாலும் இருக்கின்றமையினாலுமே, சிறு தொகையினரான ஆரியப் பார்ப்பனரின் சூழலில் அகப் பட்டு நம் தமிழந்தணக் குருக்கள் வடமொழியைப் பயன் படுத்துகின்றனர். இஃது யாருடைய பிசகு? தமிழர்களுடை யதே. தமிழர்கள் தமக்குரிய உரிமைகளைப் பாதுகாத்தலிற் கண் ணுங் கருத்தும் வைப்பார்களாயின் இத்தகைய பிசகுகள் வரா. தாம் செய்யவேண்டுங் கடமைகளில் முற்றுந் தவறிவிட்டு, ஆதி சைவக் குருக்களைக் குறை கூறுதலானும், அவரை ஆரியப் பார்ப் பனரோடு உடன் சேர்த்து ஒதுக்கல் வேண்டுமெனக் கூக்குரல் இடுதலானும் ஏதொரு நன்மையும் விளையாது. வடமொழியைப் பயன் படுத்துதல்பற்றித் தமிழ்க் குருக்கண்மாரை ஆரிய இனத்

திற் சேர்த்து ஒதுக்கிவிடல் வேண்டு மென்றால், நம்முடைய திருக்கோயில்களையும் அங்ஙனமே ஆரியர்க்கு ஒப்படைத்துவிடல் வேண்டும். தாமும் பார்ப்பனராக வேண்டுமென்று வடமொழியைப் பயன் படுத்தும் நம் தமிழ் மடாதிபதிகளையும், சைவப் பண்டாரங்கள் தொண்டை மண்டலத்தார் முதலான நம் தமிழினத்தார் பலரையும் அங்ஙனமே ஆரியராக ஒதுக்கிவிடல் வேண்டும். இங்ஙனம் நமக்குரிய உரிமைகளையும், நம்மினத்தவர்களையும் இடையே வந்த ஆரியக் கூட்டுறவுபற்றி ஒதுக்கிவிடுதல், தமிழராகிய நமக்கே பெருங் கேடாகுமாதலால், அங்ஙனஞ் செய்தலைக் கனவினும் நினையற்க. ஆரியக் கூட்டுறவை அறக் களைந்து நம் முரிமைகளையும் நம்மவர்களையும் தூய தனித்தமிழ் நாகரிகத்தின்பாற் படுத்துஞ் சீர்திருத்த முறைகளையே நம் தமிழ்த் தொண்டர்கள் விரைந்து கைக்கொள்ளக் கடவர். அம் முறைகள் ஈடேறும் வரையில், ஆதிசைவ நம் தமிழந்தணக் கோயிற் குருக்கண்மாரைப் பகையாமலும், அவரை அருவருத்து விடாமலும் அவர் தமக்கு உண்மையை உள்ளவாறெடுத்துக் காட்டி அவரைச் சீர்திருத்தி நம் தனித்தமிழ் வழிப்படுத்துமின்கள்! தமிழர்களில் ஆதி சைவர்களைப்போலச் சிவ வணக்கமும் இல்லாத இன்னும் எத்தனையோ பல இனப் பிரிவுகளிற் கிடந்து நெருங்கிக் குழுங்கி வெதும்புவாரெல்லாம் தம்மை உயர்ந்தவராக நினைந்து செருக்கிச் சிவவணக்கமும் நல்லொழுக்கமும் உடைய மற்றத் தமிழ் நன்மக்களோடு உடன் உண்ணல் கலத்தல் செய்யாது நிற்ப, அவரையெல்லாம் நாம் நம் இனத்தவராக்கித் தமிழர்கள் என்று கூறிக் கொள்ளவில்லையா? சிவபிரானுக்குத் தொண்டுசெய்தலைக் கருதியேனும் ஆதிசைவக் குருக்கண்மாரை உயர்த்தெண்ணி அவர்களோடு அளவளாவுதல் வேண்டாமா? இன்றேல், சைவசமயாசிரியர்களில் ஒருவரான ஆதிசைவப்பெருமான் சுந்தரமூர்த்திகளையும் நாம் ஆசிரியராக வணங்காது அருவருத்துவிடுதல் வேண்டுமன்றோ? மேலுங் குருக்கண்மார் கொள்கைகள் முதலிய எவ்வகையாலும் திரிபு படாமல் மேல் உருவத்தால் ஆரியரைப்போல் திரிபுபட்ட நிலையினைமட்டுங் கண்டு அவ்வளவில், சிவத் திருமால் வணக்கத்தையே தொன்று தொட்டுக் கண்ணாகக் கொண்டுவரும் தமிழ் மக்கள், கோயிலில் நிற்க இடமும் வாங்கத் திருநீறும் அரியவாம்படி அக் குருக்கண்மாரை மேலும் மேலும் ஆரியராகவே ஆக்கிவிட்டால் தமிழருக்குந் திருக்கோயிலுக்கும் ஏதேனும் தொடர்பிருக்க நேருமா? நண்பர்களே! நன்றாய் நினைத்துப் பாருங்கள்! தமிழர்களுக்குச் சிவவணக்கமே தொன்று தொட்ட வணக்கமாய்ச் சிவன் திருமால் கோயிலே தொன்று தொட்ட உரிமைப் பொருளாய்த் தொடர்ந்து வருவதற்காகத் தமிழ் முன்னோர்கள்

அரும் பாடுபட்டுத் தமிழ்நாடெங்கும் சிவபிரான் திருமால் திருக்கோயில்களை அளவிலாமல் அமைத்து நிறைத்து வைத்திருப்ப வகைகெட்ட தமிழர்களாகிய நாம் அவற்றைத் தமிழர்களாலும் தமிழ் மறைகளாலும் நிகழ்வித்துக்கொண்டு உரிமைபெற்று வாராமல், தமிழ் நாட்டிலே விரல்விட்டு எண்ணக்கூடிய மிகச்சிறு தொகையினரான ஆதிசைவத் தமிழ்க் குருக்கண்மாரைத் தமிழரெனத் திருப்பிவிடும் மிக எளிதான முயற்சியையுங் கைந்நெகிழவிட்டு, அவரை ஆரியராக்கிச், சிவபெருமான் திருக்கோயில்களை அவற்றிற்குரியரல்லா ஆரியர்க்கு உரிமையாக்கி அவை தம்மை இழந்து ஏங்குவாமா? ஐயகோ! நாட்டு வாழ்க்கையின் எல்லா உரிமைகளையுந் தாம் ஆரியர்க்குக் கொடுத்திழந்து அவர்களுக்கு அடிமைகளாய்த் தமிழர்கள் துன்புறுகின்றார்கள் என்றால், தமிழர்களுக்கு உயிரினுஞ் சிறந்த சிவபிரான் திருமால் திருக்கோயில்களையுமா அவர்களுக்கே விட்டுக் கடவுளை வணங்கவும் இடம் பெறாமல் விலங்கினங்களாய்க் கிடப்ப நம் தமிழ்த் தொண்டர்கள் விரும்புகின்றார்கள்! தமிழ் மொழியையுஞ் சிவ வணக்கத்தையும் விட்டுவிட்டால் தமிழர்களுக்கு உலகத்தில் வேறுயர்ந்த உரிமை யாதுதான் இருக்கின்றது? ஆரியப் பார்ப்பனராயினும் சிவபிரான் திருக்கோயில்களை உள்ளன்புடன் வணங்குகின்றார்களோவென்றால், அது தானும் இல்லையே! யாதேனும் ஓரினத்துக்காயினும் திருக்கோயில்கள் பயன்படுவதென்றால், அதுபோதுமென்று தமிழர்கள் அமைந்து கிடக்கலாம்!

தொண்டர்களே! தொன்றுதொட்டு வரும் உண்மைத் தமிழர்களாகிய ஆதி திராவிடர்களில் தூய்மையா யிருப்பாருக்கேனும் திருக்கோயில்களில் உரிமை உண்டா? அவர்களைத் தூய்மையாக்கிக் கிறித்துவரைப்போல் அழைத்துக் கொள்வார் எவரும் இலர். இன்னும் ஆதி திராவிடரேயன்றி வேறு தமிழினத்தார் சிலரும் தமிழ் நாட்டில் ஆரியப் பார்ப்பனரின் அதிகாரமும் உரிமையும் உடைய சிற்சில இடங்களில், திருக்கோயில் இருக்குந் தெருக்களிலும் நுழைதற்கு இடமிலராய் நைகின்றார்! குருக்கண்மாரை இன்னும் நாம் ஆரியராகவே ஆக்கிவிட்டால், அவரொழிந்த மற்றத் தமிழருக்கெல்லாம் திருக்கோயிலில் எதற்கேனும் இடமிருக்குமென்று நினைக்கின்றீர்களா? ஒருபோதும் இடமிராது! இப்போது சிவபிரான் கோயிற் குருக்களைவிடத் திருமால் திருக்கோயிற் பட்டரும், தமிழர்களிலேயே ஆரியரைக் கண்டு வைணவப் பார்ப்பனராய்த் திரிந்தாரும் ஆரியக் கலப்பு மிகுதியும் உடையவர்களானமையால் தமிழர்களுக்கு இப்போது சிவபிரான் திருக்கோயில்களில் இருக்கும் உரிமையைவிடத் திருமால் திருக்கோயில்களில் இருக்கும் உரிமை மிகக் குறைந்தே.

நிற்கின்றது. அதனை நினைத்துப் பார்த்தாலும், ஆதி சைவர்கள் ஆரியராய்த் திரிந்தால், தமிழர்களுக்குச் சிவபிரான் திருக்கோயில் களில் உரிமை ஏதும் இராதென்பது விளங்கிவிடுமே! ஆதலால் இவை யெல்லாவற்றையும் நினைத்துப் பாராமல், தமிழராகிய ஆதிசைவக் குருக்கண்மாரைப் "பிராமணர்" என்றும், "பிராமணப் புரோகிதர்" என்றும் "சிவன்கோயிற் புரோகிதப் பிராமணர்" என்றும் "ஆரிய" ரென்றும் கூறி விலக்குவதை அறவே விடுத்து அவர்களைத் தமிழரென்று உணர்த்தி நம்மோடு சேர்ப்ப தற்குரிய வழியை முதன்முதற் றேடுதலே தமிழ்த்தொண்டர் உடனே விரைந்து செய்தற்குரிய நன்முயற்சியாகும். ஆதிசைவக் குருக்கண்மாரைப் பார்த்து 'நீங்கள் புரோகிதர்' என்று கூறினால், அவர்கள் அக்கூற்றை அருவருத்தொதுங்குவதை நேரிற் காணலாம்.

இவ்வகையாக, ஆதிசைவத் தமிழ் நன்மக்களைத் தமிழராக்கிக்கொள்ளுந் தமிழ்த் தொண்டே, இப்பொழுது இன்றியமையாதது என்பதைக் காட்டுதற்கே, "காஷாய உடை தரித்து முக்காடிட்டு முற்றுமுணர்ந்த முனிவராய்த்" தோன்றிய மறைமலையடிகள் தமிழ் அந்தணர்களாகிய கோயிற் பட்டர்களைத் தம்மவராகத் தம்மோடு சேர்த்துக்கொண்டு சிவத்தை வணங்கி மேற்கூறிய திருமணத்தை முடித்தனர்கள். கோயிற் குருக்கண்மார் தமிழரே யாவர் என்பதும், அவர்கள் தமிழ வேளாளரினின்றும் திருக்கோயில் வழிபாடு செய்வதற்காகப் பழங்காலத்திலேயே பிரித்து வைக்கப்பட்டவர்களென்பதும் அடிகளுக்கு இப்போது மட்டும் எழுந்த நோக்கங்களல்ல. இவைகளை, 'வேளாளர் யாவர்' என்னுந் தமதரியநூலில் அவர்கள் முன்னமேயே விளக்கியிருத்தல் காண்க. மேலும், 'குருக்கள்' 'பட்டர்' எனப் படுவாரெல்லாம் சிவபிரான்திருமால்ஆனமுழுமுதற் கடவுளையன்றி மற்றொருவரை வழிபடாது உறுத்து நிற்றலும் தேவார திருவாசகம் முதலான தமிழ் மறைகளில் அவர்களுக்கு அன்பும் பற்றும் இயற்கையாகவே இருத்தலும் அவர்கள் தமிழினத்தவரே யாவர் என்பதை நன்கு வலியுறுத்தும். இஃதன்றி வேத உரையையே உரிமையாகக் கொண்டு இந்திரன் முதலான சிறு தெய்வங்களையே வணங்கும் ஆரியப் பார்ப்பனருக்கும், ஆகம உரையையே உரிமையாகக் கொண்டு முழுமுதற் கடவுளாகிய சிவத்தையே வணங்கும் குருக்களுக்கும் எப்பொழுதும் மனம் பொருந்தாது மாறுபட்டே நிற்பதுடன், அவ் விருசாரார்க்கும் உண்ணல் கலத்தல் முதலியன நடவாமல் ஒருவருக் கொருவர் விலகியே நிற்பதும் அவரிருதிறத்தாரும் வேறு வேறினத்தவரே யாவர் என்பதை நன்கு துணிவு படுத்துமன்றோ?

இன்னும், ஆரியர்கள் ஊனுங் கள்ளும் படைத்து இந்திரன் வருணன் முதலான சிறு தெய்வங்களுக்கு வெறியாட்டு வேள்விகள் ஆயிரக்கணக்காக வேட்டு வந்தவரேயன்றி, ஒரு முழுமுதற் கடவுளை யறிந்து அதற்குத் திருக்கோயில்கள் அமைத்து அவற்றின்கண் அக்கடவுளின் திரு உருவங்களை நிறுத்தி அவற்றை வழிபட்டு வந்தவர்கள் அல்லர். இருக்கு எசுர் முதலான பழைய வேதங்களிலும், சதபதம் ஐதரேயம் முதலான பிராமணங்களிலும் ஆடு மாடு குதிரை முதலிய விலங்கினங்களைக் கொன்றும், சோமப் பூண்டில் இறக்கிய மயக்கம் மிகுந்த கள்ளைத் தொட்டி தொட்டியாக வைத்தும் சிறு தெய்வங்களுக்கு அவர்கள் வேள்வி அயர்ந்தமை விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. மேற்காட்டிய ஆரியப் பழநூல்களில் ஓரிடத்தாயினும் திருக்கோயில்களைப் பற்றிய குறிப்பு ஒரு தினைத்தனையுங் காணப்படவில்லை. மதுரை, தில்லைச்சிற்றம்பலம், திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலை முதலான மிகப்பழைய சிவபிரான் திருமால் திருக்கோயில்கள் ஆரியப் பழநூல்களில் யாண்டும் சுட்டப்படாமையும் நினைவு கூரற்பாற்று.

அதுவேயுமன்றிப், பண்டைத் தமிழ்மக்கள் இறைவன் திருவடையாளமாக இப்பரத நாடெங்கணும் ஆங்காங்கு வைத்து வழிபட்ட அருட்குறியாகிய 'சிவலிங்க' த்தை ஆரியர் இகழ்ந்து பேசினமை இருக்கு வேதத்திலேயே குறிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனமாகத் தமிழ்ச் சான்றோர் வழிபட்டு வந்த இறைவன் திருவடையாளங்களை ஆரியர்கள் இகழ்ந்துவந்தமையால், அவ்வடையாளங்கள் உள்ள திருக்கோயில்களையும், அக்கோயில்களில் இறைவற்கு வழிபாடு ஆற்றுந் தமிழ் அந்தணர்களையும் அவ் ஆரியர் இகழ்ந்து ஒதுக்குதல் சொல்லாமலே பெறப்படும்.
மனுஸ்மிருதி, மூன்றும் அத்தியாயத்தில்,

தேவர்களுக்கும் பிதிரர்களுக்கும் வேள்வியாற்றுங் களங்களில், மருத்துவர்களுங், கோயிற் குருக்களும், ஊன் விற்பவர்களுங், கடைவைத்துப் பிழைப்பவர்களும் வராது அகற்றல் வேண்டும்'' (கருஉ) எனவும்,

''சோமக்கள் விற்பவனுக்குக் கொடுக்கும் உணவு மலமாய் விடுகின்றது. மருத்துவனுக்குக் கொடுப்பது சீழும் இரத்தமும் ஆகின்றது, கோயிற் பூசகனுக்குக் கொடுப்பது வீணாய்விடுகின்றது, மிகுந்த வட்டி வாங்குபவனுக்குக் கொடுப்பது புகழுக்கு இடமில்லாமற் போகின்றது'' (கஅ௯) எனவும் போந்த உரைகள் கோயிற் குருக்களை ஊன் விற்பாரோடும் ஒருங்கு வைத்து இகழ்ந்து ஒதுக்குமாற்றால், ஆரியர்கள் பண்டுதொட்டுத் தமிழ்க்

கோயில் அந்தணர்களை இகழ்ந்து விலக்குந் தீய இயல்பினராதல் ஐயமின்றித் தெளியப்படும்.

மிக இழிந்த தொழில்களைப் புரிவாரான ஆரியப் பார்ப்பனர், இறைவன் திருக்கோயில்களில் வழிபாடு ஆற்றுதல் ஒன்றே கடைப்பிடியாய்க் கொண்டு அவ் உயர்ந்த தொழிலின்கண் இன்றுகாறும் வழுவாது நிலைபெற்று வருகின்ற தமிழ்க்கோயில் அந்தணர்களை இஞ்ஞான்றும் இகழ்ந்தொதுக்குதல் என்னை என்று ஆழ்ந்து ஆராயுமிடத்துத், தமிழர்களிடத்தும் தமிழர்களின் சிறந்த பழக்க வழக்கங்களினிடத்தும் ஆரியர்கள் தொன்று தொட்டுக் கொண்ட பொறாமையும் பகையுமே அதற்கு ஏதுவாதல் தெற்றென விளங்காநிற்கும். இவ்வாற்றால், தமிழர்களைப் பகைத்து அவர்களை நசுக்குதற்குப் பலவகையாற் கேடு சூழ்ந்து வரும் ஆரியப் பார்ப்பனர் வேறென்பதும், பண்டு தொட்டுத் தமிழ்க் கோயில்களில் இறைவற்கு வழிபாடு ஆற்றி வருந் தமிழந்தணர் வேறென்பதும் இனிது விளங்குகின்றன அல்லவோ?

மேலும் நம் தமிழ் மக்களுக்கு இதுகாறும் நேர்ந்துள்ள தீங்குகளெல்லாம் ஆரியப் பார்ப்பனரால் வந்தனவே யன்றித், தமிழ்க்கோயில் அந்தணர்களால் வந்தன அல்ல. ஆரியப் பார்ப்பனர் தமக்குரிய வேதமோதுந் தொழிலை அறவே கைவிட்டு மற்றையோர்க்குரிய எல்லாத் தொழிற்றுறைகளிலும் புகுந்து அவற்றைக் கைப்பற்றிக்கொண்டு,மற்றையோர் பிழைப்புக்குப் பெருங் கேடுசெய்து வருகின்றார்கள். இப்போது இப்பார்ப்பனர் செய்யாத தொழில் ஏதுமே இல்லை. இத்தொழிற்றுறைகளுக்கு உண்மையில் உரிய ஏனை வகுப்பினரெல்லாம் பிழைப்புக்கு வழியின்றி வறியராய்க் காலங்கழிக்கும் நிலை வந்துவிட்டது! இவ்வாரியப் பார்ப்பனரைப்போல் தமிழ்க்கோயி லந்தணர்கள் திருக்கோயில்களிற் சிவபிரானுக்கு வழிபாடு ஆற்றுந் தமக்குரிய விழுமிய தெய்வத் தொழிலைவிட்டு வேறு தொழில்செய்ய நீவிர் கண்டதுண்டா? உண்மையை ஒளியாது சொன்மின்கள்! தமிழ்க் கோயில் அந்தணர்கள் பொருள் ஈட்டுவதிற் பேரவா இல்லாதவர்களாய்ச் சிவபிரானுக்குத் தொண்டு செய்யும் வழியில்வரும் சிறிது பொருள் கொண்டு தம் வாழ்நாளை நன்முறையிற் கழிக்கும் மனவமைதி யுடையவர்களாய்ப் பழமைக் காலந் தொட்டு நிலைமாறாமல் உயிர் வாழ்ந்து வருதலையும், ஆரியப் பார்ப்பனர் பொருளோ பொருளென்று பேயாய்ப் பறந்து அதனை எந்த வழியாலேனும் ஈட்டுவதிற் கண்ணுங் கருத்தும் உள்ளவர்களாய் மற்றை வகுப்பினர்க்குரிய செல்வங்களை யெல்லாம் பலவகைச் சூழ்ச்சிகளால் உறிஞ்சியும் மனவமைதியின்றிக் கட்டை பாடை

யிலே ஏறும் வரையில் நிலைமாறிப் பொருள் தொகுத்து வருதலை யும் நீங்கள் பார்த்ததில்லையா? இவ்வாறாக ஆரியப் பார்ப்பனருக் கும் தமிழந்தணருக்கும் உள்ள வேறுபாடு பெரிது விளங்கிக் கிடப்பவும், அதனைப்பாராது அருளொழுக்கத்திலும் சிவ வழி பாட்டிலும் தலைசிறந்து நிற்பவரான நம் தமிழந்தணராம் ஆதி சைவக்குருக்களை, ஈரநெஞ்சமின்றி 'யாமே பிரமம்' என்று கூறித் திரிந்து, ஏனை வகுப்பினருக்கு ஓவாத இன்னல் இழைத்துவரும் ஆரியப் பார்ப்பனரோடு உடன்சேர்த்து ஒதுக்கிவிடுதல் தகுமா? உணர்ந்து பார்மின்கள்! இங்ஙனமெல்லாம் குருக்கண்மார் ஆரிய ரினத்தவராகாரென்பது பெறப்பட்டு, அவ்வாற்றால் அவர் தூய தமிழரேயாவர் என்பது போதராலானும், இவ் உண்மையை எடு த்து அவர்கட்குக் கூறும் நெருங்கிய அன்பர்களுக்கும் அவர் கட்கும் இதன்கண் உள்ள ஒருமைப்பாடு வெளிப்படுதலானும் அந்தத் தமிழ்க்குருக்கண்மாரைத் தமிழாகிய நம்மோடு சேர்த் துக்கொள்ள முயல்வதே செயற்பாலதாம் தொண்டே ஒழிய விலக்குவது தொண்டாகாதறிமின்!

எனவே, தமிழராகிய ஆதிசைவக் குருக்களந்தணர்கள் வழி யாகச் சிவத்தை வணங்கி இப்போது நடைபெற்ற திருமகள் நீலாம்பிகை அம்மையாரின் திருமணம் ஆரியப் பார்ப்பனரின் தொடக்கை முற்றும் நீக்கித் தமிழராலேயே நடைபெற்றதாம் என்று துணிந்து தமிழறிஞர் அமைதியுறுதலே செயற்பாலதா கும் என்பது.

---

# சித்தாந்தப்படவிளக்கம்

[பஞ்சாட்சரபுரம் ஸ்ரீ வாலையானந்த சுவாமிகள்]

(ருஎ௬-ம் பக்கத் தொடர்ச்சி)

## ஆகமம்

ஆகமமாவது :—அநாதியே மலமில்லாதவனும் சர்வஞ்ஞத் வாதி எண்வகைச் சிற்குணங்களை யுடையவனுமாய் உள்ள சிவ பெருமானால் காருண்ணியத்தினாலே அருளிச்செய்த காமிகம் முதலிய திவ்விய ஆகமங்களாம்.

"நயந்தா ருலகெல்லா நண்ண வறமாதி
யியம்பினு ணாகமநா லேழு"

ஆகமமானது தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்றுவகைப்படும்.

தந்திரகலையாவது :—சரியா கிரியா பாதப்பகுப்பாதலால் கருமகாண்டம்பற்றிப் பின்னொடு முன்மாறுகோளின்றிச் சரியா கிரியா பாத கிருத்தியங்களைப் போதிப்பது.

மந்திரகலையாவது :—யோகபாதப் பகுப்பாதலால் உபாசனா காண்டம்பற்றி ஆசன மந்திர ஜெபத்தோடுகூடிய பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை என்பவைகளால், மனமாதி அந்தக் கரணங்களை நிறுத்தித் தெய்வத்தை வழிபடும் தன்மையைப் போதிப்பது.

உபதேசகலையாவது .—ஞானபாதப் பகுப்பாதலால், ஞான காண்டம்பற்றி, தனக்கு முதலும் முடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறல்லாத தன்வயமாதி எண்குணமுடையனாதல்,

உழிதர லியைந்த பழித ராகத்
தழியா வறிவன் கழியா, னொழியாச்
சேதன மன்மையிற், கடம்போ, லாகலி,
னெய்யா தியற்றிய னெவனவன் பொய்யாப்
புற்கல னென்ப, வொற்கமில் சேதன
மறிவு வறித சேதன மென்ன
நெறியறி புலவ ரறிவறி வகையே.

(ஞானாமிர்தம்-௬)

இது, பசு உளனென்கைக்குப் பிரமாணம் என்னென அந்வய வெதிரேகி யநுமானத்தாற் பசு உண்மை கூறியது.

(இ - ள்.) உழிதரல் - கழியான் எ - து போக்கு வரவுடைத்தா யிருக்கப்படா நின்ற பழிக்கப்பட்ட தேகத்திலே நித்தியமாயிருக்கின்ற ஓரான்மா உளன் இது பிரதிஞ்ஞை,

ஒழியா - அன்மையில் எ - து அதற்கு ஏது வென்னெனில் தேகங்கெடாத சைதந்நிய மல்லாமையால் இது ஏது,

கடம்போல் எ - து என்போல வென்னில் கடத்தைப் போல இது திட்டாந்தம்,

ஆகலின் எ - து ஆதலாற் கடமுமொருவன் கொடுபோகிற் போம் அல்லாவிடில் இருக்கும் அதுபோலத் தேகமும் தானே போக்கு வரவு பண்ணமாட்டாததாலான் இது உபநயம்,

எய்யா - என்ப எ - து ஒழியாதே இத்தேகத்தைப் போக்கு வரவு பண்ணுகிறான் யாவனொருவன் அவன் அழிவில்லாத தேகி யென்று கொள்க. இது நிகமனம் இவ்வைந்தும் அந்நுவய வெதிரேகியநுமானம்,

ஒற்கம் - வகையே எ - து ஒதுக்கமில்லாத சைதந்நிய மாவது அறிவென்றும் இந்த அறிவில்லாதது அசேதன மென்றும் முத்திக்கு வழியறியு ஞானவான்கள் ஆன்மரூப தெரிசனம். பண்ணுமியல்பு எ - று.

இன்னும் அநுமானமானது பூர்வக்காட்சி யநுமானம், அநுமானுநுமானம், ஆகமாநுமானம் என மூன்று வகைப்படும்.

பூர்வக்காட்சி யநுமானமாவது :—ஒருவன் முன்பு ஒருபூவையும் அதன் மணத்தையும் அநுபூதியாக அறிந்து, பின்பு ஒரு காலத்து ஒரிடத்தில் பூவின் மணம் வீச, அப்பூவைக்காணுதிருக்கவும் அம்மணத்தைக்கொண்டே தான் முன்பறிந்த வாசனு அநுபூதி ஞானத்தினுல் அப்பூவை இன்னதென்று நிச்சயிப்பது.

தன்னின் வேருகிய பசு பாசங்களை யுடையனுதல் முதலிய தன்மைகளைத், தான் உணருமாறும் பிறர்க்குணர்த்துமாறும் போதிப்பது.

இனி, மேற்கூறிப்போந்த அநுமான சாமக்கிரியைகளுள் துணிபொருட் கிடனுதலாகிய பக்கலக்கணத்தில் குறைபாடுடைத்தாயும் ஒருபுடையொத்துப் பக்கம்போலத் தோன்றுவதாகிய பக்கப்போலியானது

“ துணியும்பொருட் கிடனுகாததூஉம்
துணியும்பொருட் கொருமருங் கிடனுகாததூஉம்
துணிந்தபொருட் கிடனுவதூஉம்
துணிந்தபொருட் கொருமருங் கிடனுவதூஉம்”

என நான்கு வகைப்படும்.

சாத்யப் பொருளோடு வ்யாத்தியுடைத்தாய்ப், பக்கத்திலிருத்தலாகிய ஏதுவிலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும், ஒருபுடையொத்து ஏதுப்போலத் தோன்றுவதாகிய ஏதுப்போலியானது

துணியப்படாததூஉம்
மறுதலைக்கட் படுவதூஉம்
ஒருதலைப்படாததூஉம்

என மூவகைப்பட்டு, விரியா னிருபத்தொன்றும்.

அவையாவன :—

சார்பில்லதூஉம்
சார்புண்மை யறியப்படாததூஉ

மெனச் சார்புபற்றிய குற்றமிரண்டும்,

சொரூபமில்லதூஉம்
சொரூபமுண்மை யறியப்படாததூஉம்
சொரூபத்தின் விசேடணமில்லதூஉம்
விசேடணமுண்மை யறியப்படாததூஉம்
விசேடியமில்லாததூஉம்
விசேடியமுண்மை யறியப்படாததூஉம்
ஒருமருங்கில்லதூஉம்
ஒருமருங்குண்மை யறியப்படாததூஉம்
பரனுக் குடம்பாடில்லதூஉம்

எனச் சொரூபம்பற்றிய குற்றமொன்பதும்,

சாத்தியத்தோடு வ்யாத்தியுண்மை யறியப்படாததூஉம்
செயற்கைபற்றி வ்யாத்தியுடையதூஉம்

என வ்யாத்திபற்றிய குற்றமிரண்டும்,

ஆகிய பக்க விருத்தி துணியப்படாத ஏதுப்போலியின் விரி பதின்மூன்றும்,

மறுதலைப்பொருள் சாதிப்பதூஉம்
மறு தலைப்பொருள் சாதிப்பதாய்ப் பிறிதோரேதுவை
உடன் கொண்டு வருவதூஉம்

காட்சி யளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉம்
உரையளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉம்

என மறுதலைத்தலையுடைய ஏதுப்போலிவிரியைந்தும்,

பக்க சபக்க மாத்திரையினன்றி விபக்கத்துஞ் சேறலுடையதூ
சபக்கத்திற் சேறலின்றிப் பக்க மாத்திரையிலுள்ளதூஉம் [உம்
சபக்க விபக்கங்கள் கிடைக்கப் பெறாததூஉ

மென ஒரு தலைப்படாத வேதுப்போலி விரிமூன்றும்.

இனி வ்யாத்தி நிச்சயித்தற் கிடனாதலாகிய உவமையிலக்கணமின்றியும் உவமை போலத் தோன்றுவதாகிய உவமைப் போலி, அந்நுவயம் பற்றியும் வெதிரேகம் பற்றியும் இருவகைப் பட்டு, விரியானொரோவொன் றொன்பதாய்ப் பதினெட்டு வகைப் படும்.

அவையாவன :—

சாத்தியமுடைத் தாகாததூஉம்
சாத்திய முடைமை நிச்சயிக்கப் படாததூஉம்
ஏதுவுடைத் தாகாததூஉம்
ஏதுவுடைமை நிச்சயிக்கப் படாததூஉம்
இரண்டு முடைத் தாகாததூஉம்
இரண்டு முடைமை நிச்சயிக்கப் படாததூஉம்
சொரூபமில்லதூஉம்
சொரூபமுண்மை பரனுக் குடம்பாடாகாததூஉம்
செயற்கையானகிய வ்யாத்தியுடையதூஉ

மென அந்நுவய வுவமைப்போலிவிரி ஒன்பதும்,

சாத்தியமின்மை யுடைந்தாகாததூஉம்
சாத்தியமின்மையுடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூ
ஏதுவின்மை யுடைத்தாகாததூஉம் [உம்
ஏதுவின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப் படாததூஉம்
இரண்டின்மையு முடைத்தாகாததூஉம் [தூஉம்
இரண்டின்மையு முடைத்தென்பது நிச்சயிக்கப் படாத
சொரூபமில்லதூஉம்
சொரூபமுண்மை பரனுக் குடம்பாடாகாததூஉம்
வெதிரேகவ்யாத்தி செயற்கையானுடையதூஉ
மென வெதிரேக வுவமைப் போலிவிரி யொன்பதுமாம்.

இனித் தருக்கவாதத்தின்கட் பேசத் தெரியாமையாகிய தோல்வித்தானம், என்று மயங்கப்பேசுதலும் வாளாவிருத்தலு மென் றிருவகைப்பட்டு, விரியானிருபத்திரண்டாம்.

அவையாவன :—

தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்காமாட்டா மல் அதற்குக் கேடுவரப் பேசுதலும்

பிறிதொரு மேற்கோளைக் கூறுதலும்
மேற்கோளுக்கு மறுதலைப்படப் பேசுதலும்
மேற்கோளை விட்டுவிடுதலும்

தான் கூறிய ஏதுவுக்குக் குற்றம் வந்துழி வேறோராற்றான் ஏதுக் கூறுதலும்

தனக்கு வருந்தோல்வியைப் பிறிதொன்றுபேசி மறைத்தலும்
பயனெடுபடாதன பேசுதலும் [சுதலும்
பொருள் இனிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டு பே

அவாய்நிலை தகுதியண்மையில்லனவாய்ப் பேசுதலும்
மேற்கோள்முதலிய வைந்தினையும் முறை பிறழப் பேசுதலும்
அவற்றுட் சிலகுறையைப் பேசுதலும்
ஒன்றற்குப் பல கூறுதலும்
சொல்லையிரட்டித்துச் சொல்லுதலும்
பொருளையிரட்டித்துச் சொல்லுதலும்
பிறன்கூறியபொருளை அநுவதிக்கமாட்டாமையும்
பிறன்கூறியபொருளை யறிந்தும் அறியான்போன்று வினுதலும்
விடைசொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையன் போன்றிருத்தலும்
வாதத்தைவிட்டுப் பிறிதொன்றனைச் சொல்லிப் பொழுது போக்கலும்
சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியா துடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம் பேசுதலும்
தோல்வித்தானமெய்தாதானை எய்தினுனென்று கூறுதலும்
தன் சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ் சாதித்தலு மெனவிவை

இங்ஙனம் நான்கும், இருபத்தொன்றும், பதினெட்டும், இருபத்திரண்டுமாகிய அறுபத்தைந்தும்; அனுமான வளவைக்குக் குற்றங்களா மென்பதாம்.

இன்னும் இப்பக்க வேது வுவமைகளை எடுத்துச்சொல்லும் வழி உண்டாகுஞ் சொற்குற்றங்களெல்லாந் தோல்வித்தானத்துளடங்கும்.

ஈண்டுக் கூறும் பக்கப்போலி உவமைப் போலிகளெல்லாம் ஏதுப்போலியு ளடங்குமெனத் தார்க்கிகர் கூறுவர். பக்க வுவமைகளி னிலக்கணத்தை நோக்கிக் காணும்வழி, அவை பக்கப்போலி யுவமைப் போலியெனப் படுவனவன்றி, ஏதுப் போலியெனப்படாமை யறிக.

இதனனே அநுமானப் பிரயோகத்தின்கட்படுங் குற்றங்களிவை யென்பது தெரித்துக் கூறப்பட்டது.

இங்ஙனங் கூறப்பட்ட பிரயாணங்களினல் பயன் யாதோவெனின் பொருள்களின் தன்னியல்பு பொது இயல்புகளை அறிந்து அநிஷ்டமானதை விடுதலும் இஷ்டமானதைப் பற்றுதலும் இஷ்டாநிஷ்டம் இரண்டும் அல்லாததை உபேட்சித்தலும் பயனும்.

தன்னியல்பாவது:—அந்நிய சாதியும் தன் சாதியும் அகன்று நிற்றலாகும். அஃதாவது:—கபிலைப் பசுவானது அந்நிய சாதியான எருமை முதலானவைகளினுடைய இலட்சணங்களையும், தன் சாதியாகிய வெள்ளை, கறுப்பு, சிவப்பு முதலான நிறங்களையுடைய பசுக்களின் இலட்சணங்களையுமன்றிக் கபிலைப் பசுவென நிற்பது. இஃது உண்மை இலட்சணமாகும்.

பொதுவியல்பாவது:—அந்நிய சாதியைத் தவிர்ந்து தன் சாதிக்கொத்தல். அஃதாவது:—அந்நிய சாதியாகிய எருமை, குதிரை முதலானவைகளின் இலட்சணங்களையன்றி அலைதாடி, கொம்பு, குளம்பு, வால், குட்டேறு ஆகிய இந்த ஐந்து இலட்சணங்களையும் உடையது பசு வென்பது. இவை பசுக்களுக்கெல்லாம் பொது இலட்சணமாகும்.

அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்ப
ரளவை மேலு மொழியுண்மை யைதி கத்தோ டியல்பெனநான்
களவை சாண்ப ரனவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லா
மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே. (க)

மாசறு காட்சி யையந் திரிவின்றி விகற்பமுன்னு
வாசற வறிவ தாகு மனுமான மவினுபாவம்
பேசுறு மேதுச் சொண்டு மறைப்பொருள் பெறுவதாகுங்
காசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும். (உ)

கண்ட பொருளை யிரட்டுறவே கருத லையந் திரியவே
கொண்ட திரிவாம் பெயர்சாதி குணமே கன்மம் பெயரெனவைந்
துண்ட விகற்ப வுணர்வினுக்குப் பொருளி னுண்மை மாத்திரத்தின்
விண்ட லில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே. (ங)

காண்டல் வாயின் மனந்தன்வே தனையோ டியோகக் காட்சியென
வீண்டு நான்கா மனுமானந் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டா
மாண்ட வுரைதந் த்ரமந்திரத்தோ டுபதே சச்சொ லெனமூன்றும்
பூண்ட வளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.

அன்னிய சாதி யுந்தன் சாதியு மகன்று நிற்ற
றன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்த
றுன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவு மடங்கிடு மான முற்றால். (ரு)

உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச்
செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
யயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான மானதக் காண்ட லாமே. (சு)

அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் காரக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்க ளெல்லா
மிருந்துணர் கின்ற ஞான மியோகநற் காண்ட லாமே. (எ)

பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டா மநுமானந்
தொக்க விவற்றுற் பிறர்தெளியச் சொல்ல லாகு மச்சொல்லு
மிக்க வன்னு வயத்தினெடு வெதிரே கச்சொல் லெனவிரண்டாம் (அ)

மூன்று பக்கம் பக்கநிகர் பக்க நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக் கிடமா முவமை நிகர்பக்க
மான்ற பொருள்சென் றடையாத விடமா நிகரில் பக்கமுத
லேன்ற விரண்டும் பொருளுண்மைக் கிடமா மொன்று பொருளின்றும்.

ஏது மூன்று மியல்புகா ரியத்தோ டநுப லத்தியிவை
யோதி னியல்பு மாமரத்தைக் காட்ட லுறுகா ரியம்புகைதன்
ஞதி யாய வனல்காட்ட லாகு மநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை காட்டல் போலுஞ் செப்பிடினே. (௯)

புகையா லனலுண் டடுக்களைப்போ லென்னப் புகற லன்னுவயம்
வகையா மனலி லாவிடத்துப் புகையன் றுகு மலரினெடு
முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரே கச்சொலிவை
தொகையா குறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாரு முளர் துணிந்தே.

போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமான
மோது மூரையா லறிவினை வுணர்தல் கருத லனுமான
நீதி யான்முற் கன்மபல நிகழ்வ திப்போ திச்செய்தி
யாதி யாக வரும்பயனென் றறித லுரையா லனுமானம். (கஉ)

அநாதியே யமல னுய வறிவனு லாக மந்தான்
பினுதிமா றின்றிப் பேண றந்திர மந்தி ரங்கண்
மனுதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யாகுந்
தனுதியீ றிலாதான் றன்மை புணர்த்துத லுபதே சந்தான். (கங)

ஈண்டு பக்கப் போலிநான் கேதுப்போலி யொரு மூன்றாய்
வேண்டு மெழுமூன் றுகும்விளங் குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண் டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்லா மளக்கி லறுபத் தைந்தாகும். (கச)

அளவையியல் முற்றிற்று.

---

# காழிக்கண்ணுடைய வள்ளலார்

[திரு. P. A. முத்துத்தாண்டவராயபிள்ளையவர்கள்]

(ருருக-ம் பக்கத் தொடர்ச்சி)

## ரு. அவதார கால நிலை

முந்துமறை மொழிபொருளின் முறைமையினைத் தேறாது
வந்தவா பலபகரும் வாதியர்தம் பிணக்கறுப்பா
னந்தமரன் பரையோடு நானிலத்துத் தோற்றியருள்
கந்தனவன் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

மகத்தாகிய பிரபஞ்சத்தையும் வானகத்துள்ள சோதி மண்டலங்களையும் இவற்றின் நடைபெறுஞ் செயல்களையும் கண்ணுற்று நாடும் ஏத்தகையினரும் இவற்றிற்கு ஒரு முதல்வன் வேண்டும் என்று துணியாதிரார். இத் துணிவிற்கு மாறாகச் சிலர் பிரபஞ்சம் தானே தோன்றி நின்று அழிதல் இயல்பாம் எனக் கூறியும் உளார். இவ்வண்ணம் உலகினர் ஆஸ்திக நாஸ்திக புத்தியுள்ளவர்களாக என்றும் தம்மை வெளிப்படுத்து வருகின்றனர். ஆஸ்திகருள்ளும் நாஸ்திக புத்தியுள்ளவரும் நாஸ்திகருள்ளும் ஆஸ்திக புத்தியுள்ளவரும் காணக்கூடும். இங்ஙனம் கர்மபேதங்களுக் கேற்பப் பல பக்குவிகள் நிலைபெற்றுள்ள இப்பூமண்டலத்தில் சமரச பாவம் ஜனிப்பது கஷ்ட சாத்தியமே. மானுடவர்க்கத்தார் சார்வாகராகவும் (Materialistic), விஞ்ஞான வாதிகளாகவும் (Rationalistic). அதி விஞ்ஞானவாதிகளாகவும் (Suprakarionalistic), பின்னர்க் குறித்தவர்களுள்ளும் நியாயம் வைசேஷிகம் சாங்கியம் யோகம் பூர்வமீமாம்சை உத்தரமீமாம்சை இவற்றுள் ஒன்றின் சார்பினராகவும் விளங்கி, தம் தலைவனுக்கும் தமக்கும் உள்ள சம்பந்தம் அபேதம் (Succession, Consation), பேதம் (Co-existence with mutual exclusion), பேதாபேதம் (Co-existence without mutual exclusion) முதலியவற்றுள் ஒன்றேயாம் என்று வாதிப்பார். இம்முறை வாதிப்பதில் தலைவனைத் தனிமுதல்வனாகவும் (God an extra Cosmic and a personal Being), ஜடசேதனர்கட்கு அப்பாற்பட்ட தனிப் பொருளாகவும் (God as apart from Matter and Soul), பிரேரகமுதல்வனாகவும் (Yet an instigator and a Mover) வியவகரித்து, அவ்வியவகாரத்தில் விருத்தி (Cognition, Reality and Consality) பரிணமம் (Universe as embodiment of God, Reality and

Consality) விவர்த்தனம் (Ilusion) என்னும் வாதங்களைப் புகுத்தியும் மறுத்தும், இவற்றின்மேலும் பல வுவமைகளைக் கொண்டு ஐக்கியம் தாதான்மியம் சமவாயம் சையோகம் சொரூபம் அத்தியாசம் சமம் என முடிந்த நிலையைப் பலதிறப்படுத்து முடிப்பர். ஐக்கியம் சிவாத்துவிதம் ஐக்கவாதம் என இருதிறமும், சமதை ஞானம் பற்றுதலாற் சங்கிராந்தம், ஞானம் உற்பத்தியாதலால் உற்பத்தி, இறைவன் ஆவேசித்தலால் ஆவேகம் என முத்திறமும் படும். சாதனமும இறைவன் தானே தன்னை உணர்த்துதல் (Spiritual Illumination), அவனும் இவனும் ஒன்றெனக் காணல் (Inseparableunion), காரியப் பொருள் பொய்யெனக்கோடல் (Identificatton of cause and effect) இவற்றுள் யாதேனும் ஒன்றேயாம் எனவும் கூறுவர். இந் நிலைமையில் உலகமெங்கும் எக்காலத்தும் சமயவாதம் நிகழ்ந்து வந்ததையும் வருவதையும் நாற்சார்பாற் கேட்டும் கண்டும் வருகின்றோம். லக்ஷியத்தைக் கைவிடா நோக்கத்தோடு இவ்வாறு வாதித்து வருபவர்களைப்பற்றி எவருங் குறைகூறார். லக்ஷியப்பேறு இன்றி வீண்வாதமே போக்காகக் கொள்பவர் சந்திர புஷ்கரிணியையுங் கலக்கினோர் போல்வர்.

வானை நோக்கி மண்வழி நடப்பவர்போலப் பொருளின் வழியே நோக்கிச்செல்லாது குதர்க்கவுரை குழறுவாரை உண்மை ஞானவழி நிற்பவர் கண்டித்துப் பேசுதல் தர்மமே. தாம் பெற்றுய்ந்த பேறு உலகம் பெறுதல் வேண்டும் என்னும் கருத்தால் நகுதற் பொருட்டன்றி நட்டன் மிகுநிக்கன் அவ்வாறு அன்னோர் கடிந்து பேசுவர். அக்கூற்றுக்கள் தூஷண மொழிகள் அல்ல, பரோபதேசங்களே. மாதவச் சிவஞான யோகிகள் சிவ சமவாத மறுப்பினும் ஆசாரிய லக்ஷணங் கூறுமிடத்தினும் பிரயோகிக்குங் கடுஞ் சொற்கள் சில காருணிய வசனங்களே. பரோபதேசம் புரிவார் இன்மொழிகளாற் புகழ்ந்தும் வன்மொழிகளாற் கடிந்தும் பிறரைத் தம் வசமாக்கக் கருதுதல் சால மாண்புடைத்தாகும்.

முன்பெலா மிளைய கால மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண விருமி நாளுங் கருத்தழிந் தருத்த மின்றிப்
பின்பக லுணங்க லட்டும் பேதைமார் போன்றே னுள்ள
மன்பனாய் வாழ மாட்டே னதிகைவீ ரட்ட னீரே.

கறைப்பெருங் கண்டத் தானே காய்கதிர் நமனை யஞ்சி
நிறைப்பெருங் கடலைக் கண்டே னீள்வரை யுச்சி கண்டேன்
பிறைப்பெருஞ் சென்னியானே பிஞ்ஞகா விவைய னைத்து
மறுப்பதோ ருபாயங் காணே னதிகைவீ ரட்ட னீரே.

என்ற திவ்ய சூக்திகள் எத்துணை மதுர மொழிகளாய் மிலேச்சப் பிராயத்தனை யுழன்ற என்னை நல்வழிப்படுத்தும் ஆற்றலுடையவாயின என்று புகல்வேன். எம்மவர் புறவொன்றன்பொருட்டுத் தம் தசையை யரிந்து கொடுத்தவர் தூங்கெயில் எறிந்ததும், ஓர் பக்கல் இருடிகளைப் புரந்தவர் மற்றோர் பக்கல் வில்லு மம்புமாக வனத்தி லுழன்றதும், கங்காதீரத்தினின்றும் காவிரிக் கரைக்கு வருவதும், காவிரிதீரத்தினின்றும் கங்கைக்கரை செல்வதும், இந்திரனுக் குத் திருவிழாச் செய்ததும் அவ்விந்திரனையே வாகனமாகக் கொண்டதும், மறக்கள வேள்வியோடு அறக்கள வேள்வி புரிந்ததும், இன்னோரன்ன ஒன்றின் ஒன்று மாறுபட்ட செயல்கள் யாவும் சுதர்மத்தை நாடெங்கும் பரவுதற் செய்யும்பொருட்டே யன்றோ? பரமப்பிராப்தியே லக்ஷியமாகக் கொண்டு சிவலிங்கோபாசனை புரியினும் திருமாலுக்கும் அடிமைசெய்வர். வேதவழியே நிற்பினும் ஆகமாந்தத்து அரும் பொருள் ஆராய்வர். இவர்கள் யாவரும் இலக்கைத் தவற விடாது பல துறைகளினும் பயின்ற பெரியோர். அன்னார் பாத கமலம் என் சென்னிமிசைத் திகழ்வனவாக. இனியும் எண்ணுபிரவரை யன்று எட்டு எண்ணுபிரவரைத் தமது வாக்வித்தியால் வழிப்படுத்தாரும் உளர் (Active Resister). க்ஷமணர்கள் செய்த கொடுந் துன்பங்களைப் பொறுத்துக் கருணை புரிந்தாரு முளர். (Passive Resister) சந்தான பரம்பரையிற் கிரமமாகப் படிப்படியாய் ஹிதோபதேசங்களாற் பொய்ச் சமயங்களைப் போக்கி உண்மைச் சமயத்தை உறுதியாக நாட்டினாரு முளர் (Constitutionalist). சங்கேத குழுக்களால் தமது நாட்டிற் கலாம் விளையுமெனக் கண்டபோது அக் குழுவிற்குத் தலைவராகத் தோன்றியவரைத் தமது பராக்கிரமத்தால் நாட்டைவிட்டுத் துரத்தினாரும் உளர். இன்னார் யாவரும் லக்ஷிய லக்ஷமுடைய புனிதர்களே யாவர்.

இனி லக்ஷியத்தை முற்றிலும் கைவிட்டுப் பிரஜைகளுள் சாதி மதம் சமயம் சாஸ்திரம் கோத்திரம் சூத்திரம் முதலியன காரணமாகப் பெரும்போர் கிளப்பிவிட்டுச் சமய சாஸ்திர விபரீதங்களை உண்டாக்கினர் சிலர். இன்னார் எக்காலத்து எவர் எவ்வாறு கலாம் புரிந்தார் என்பதைக் கருத்தான்றி இங்கு விசாரித்தல் வேண்டும்.

தமிழகத்தை நாடு வளநாடு நகராக்கியும், அதன்மேல் மண்டலம் கோட்டங்களாக்கியும் சேர சோழ பாண்டியர்களும் தொன்முதுவேளிரும் அரசாண்டுவந்த காலத்தும், அதன்பின் தொண்டைப் பல்லவர் சார்வபௌமர்களாகச் செங்கோல் புரிந்துவந்த காலத்தும், அதன்பின் மீண்டும் சோழபாண்டியர்

கள் ராஜ்ய நிர்வாஹகர்களாக வீற்றிருந்து வந்த காலத்தும், விஜயநகரத்தாரும் சாளுவரும் அரசு செலுத்திவந்த காலத்தும் வேதாகம வழக்கங்களும் சற்சம்பிரதாய கொள்கைகளும சனாதன தருமங்களும் தேவாலய மடாலய பரிபாலனங்களும் செவ்வன அவ்வச் சாதி மதம் வருணம் ஆச்சிரமங்கட்கும் அன்னார் பரிபாகங்கட்கும் ஏற்ப நடைபெற்று வந்தன. விஜயநகர வேந்தர்களுக்கு முன்னும் பின்னும் இப்பிரதேசத்தில் ஏற்பட்டிருந்த அராஜக காலத்தே பூர்வாசாரங்கள் யாவும் அச்சுக்கெட்டுத் தசசுத் தடுமாறின. இத் தடுமாற்றக் குழப்பம் முன்னொரு காலத்தே விஜயதரன் சோழநாட்டிலிருந்து வேங்கிநாட்டுக்கு வடக்கேயிருந்த விரோதிகளை யடக்க வயிராகரம் சக்கரக்கோட்டம் முதலிய இடங்களுக்குச் சென்றிருந்த காலத்தில் அன்றான் மாதாமகன் வீராஜேந்திரன் காலஞ்சென்றுவிட அச் செய்தியைக் கேட்டு உடனே திரும்பிவந்து கி. பி. 1070-ல் சோழ சக்கரவர்த்தியாரும் முன் இருந்த சொற்பதினங்களில் உண்டாகியிருந்த பெருங்குழப்பம் போன்று இருந்தது. அக் குழப்பத்தை ஜயங்கொண்டார் வாக்கின்படியே கவனிப்போம். அவ்வாக்கு:—

மறையவர் வேள்வி குன்றி மனுநெறி யனைத்து மாறித்
துறைகளோ ராறு மாறிச் சுருதியு முழக்க மோய்ந்தே.

சாதிக ளொன்றோ டொன்று தலைதடு மாறி யாரு
மோதிய நெறியி னில்லா தொழுக்கமு மறந்து போயே,

ஒருவரை யொருவர் கைம்மிக் கும்பர்தங் கோயில் சாம்பி
யரிவையர் கற்புச் சோம்பி யரண்களு மழிய வாங்கே.

என்பது.

இவ்வாறே இச்சோழநாட்டில் அதனினும் இக்காழியம் பதியினருகே இவ்வராஜக காலத்துப் பெருங்குழப்பம் உளதாயிற்று. இக் குழப்பத்தின் பயனை மனத்துட் கவனித்துப் பார்த்தால் அன்றிக் கண்ணுடைய வள்ளலார் அவதாரத்தின் ஆவசியசமும், அதற்குப் பின் சிவஞானசுவாமிகள் தமது பேருரையிற் சைவாகமப் பிரமாணியம் சிவதீக்ஷை சைவ சந்நியாசம் ஆசாரியத்தன்மை யதிகாரம் என்னும் விஷயங்களையும் காஞ்சிப் புராணத்து ஆங்காங்கு ஜாதி ஆசார நியமங்களையும் நம்மனோர் ஒழுக்க வியல்புகளையும் அமைத்தற்குக் காரணமும் விளங்கா. (இவ் விளக்கங்களுள் வேளாளர்களைப்பற்றிய வாதம் சில இக் காலத்துத் தோன்றி நடைபெற்று வந்ததால் அதன் விவரம் அடுத்த ௬-பகுதியில் வியவகரிக்கப்படும்). அராஜக காலத்தில் உண்டாகிய குழப்பத்தின் முதற்பயன் சீர்கேடே. அச் சீர்

கேட்டால் இரண்டாம் பயனைக் சீர்திருத்தமொன்று நமது வள்ளலாலும், சாஸ்திரப்பிணக்கு ஒழித்த லொன்று மாதவச் சிவஞான யோகிகளாலும் உண்டாயின. இவை முன்னரே சூசிப்பிக்கலாயின. இப் பெரியோர்களது நூலின் திட்ப நுட்பங்களைப் பார்ப்பவர்க்கு இவை தெற்றெனப் புலனாகும். இன்னோர் செய்தருளிய பேரறச் செயல்கள் வித்தியா சம்பந்தமாக மாத்திரம் பயன்பட்டன வென்று கருதலாகாது. லௌகிக வைதிக சம்யந்தமான சமஸ்த பிரவிர்த்திகளிலும் இவை இன்றும் பெரும்பயன் விளைப்பன வாயின. ஞானசார ஸ்திதியை நல்வரம்பு படுத்தருளிய ஞானதான வள்ளலாராகிய சேக்கிழார் பெருமானார்—இவர் எத்தகையினர்? உத்தமச் சோழப் பல்லவர், சொல்லளவிலா? அதற்கு மேலும்—அருளிய பரமேதிகாசமும், சிவஞான முனிவர் அருளிச்செய்த செந்தமிழ் நூல்களும் இலவாயின் சதாசாரங்கள் சமயநெறிகள் சாதிவரம்புகள் சன்மார்க்க சீலங்கள் இன்னின்னவை யெனத் தமிழ்நாட்டின் கண்ணே யாம் உறுதிசெய்ய இயலுமோ? சேக்கிழார் நாயனார் காலத்தும் அதற்கு நெடுங்காலம் முன்னும் இந்நாட்டைக் கண்ணும் ஆவியும் போலக் காவல்செய்து வந்தவர் சோழரும் தொண்டையோரும், அவருள் முன்னவர் சுத்த க்ஷத்திரியரும் பின்னவர் பிராமண க்ஷத்திரியரும் ஆவர். இவர்கள் உபய வேதாகமங்களின் வழியேநின்று வைதிக கர்மங்களையும் சனாதன தருமங்களையும் சமயங்களையும் காத்து வந்தனர். நாடுகாவல் அறப்புறங்காவல் அனைத்தையும் தாமேயாகவும், தம்மினத்தின் வீழ்ந்த மண்டில மாந்தர் மூலமாகவும் தம் மூலபிதாவாகிய தொல்மநுவின் முறைப்படி செய்து வந்தனர். மானவ கோத்திராகிய சோழரும் பாரத்துவாஜ பார்க்கவ கோத்திரராகிய தொண்டைப் பல்லவரும் ஆகஸ்தியாதி கோத்திரர்களையும் முன்னிட்டு இந்நாட்டை ஆட்சிபுரிந்து வந்தார்களாகையால், தொல்மனு தர்ம சாஸ்திரத்தில் பார்க்கவ ஸம்ஹிதையில் ஜபதக்நி மஹாமுனிவர் செய்தருளிய திருத்தங்களே இவர்களது சட்டப் பிரமாணங்கள். பரசுராமர் இந் நாட்டு மன்னரை வருத்தாமைக்குக் காரணம் அகஸ்தியரும் விஜயமாகாளியும் செய்தருளிய உபாயங்களோடு அப்பரசுராமர் செய்துவைத்த மனுமுறையை அவலம்பித்துத் திரணபிந்து முதலியோரைப் போற்றி வந்ததுமே யாகும். இதனால் மேல் நின்ற நான்கு வருணத்தாருள்ளும் நான்கு நிலையினருள்ளும் என்றும் பிணக்கு உண்டானதே இல்லை. ஒருவரை யொருவர் திக்கரிக்க முகாந்தரமே இல்லாமற் போயிற்று. உயர்ந்தோர் நால்வரும் இந்நிலையில் நிற்பமே. தாழ்ந்தோ ரனைவரும் தத்தம் குலாசாரம் தவறாமல் ஒழுகி இவ்வுயர்ந்தோர் தேர்ச்சிக்கு (Culture) உள்ளாயினர்.

முதலாளர் வலங்கையாகவும் தொழிலாளர் இடங்கையாகவும் உலக தருமத்தைச் செய்து வந்தனர். பாரதருள் சுத்த திராவிடரும் தமிழரும் இவ்வாறு ஒரே தேர்ச்சிக்குள்ளாகிப் பிளவு படாமலே வாழ்ந்து வந்தனர். தேவாலய மடாலய பரிபாலனங்கள் கிரமமாக நடைபெற்று வந்தன. ஆசாரிய சிஷ்யாநுஷ்டானங்கள் அவரவர் தகுதிக் கேற்பனவாக அமைதி பெற்றிருந்தன. மாதம் மும்மாரி பொழிந்தது, நிலம் தன் வளம் சொரிந்தது. தேவாலயம் பிரமாலயம் அரசராலும் அவரினத்தவராலும் அமைக்கப்பட்டு, அவற்றின் பரிபாலனம் அவர்களாலே செய்யப்பட்டு வந்தன. வேதாகமங்களின் வழியே பரார்த்த பூசைகள் செய்யப்பட்டு வரும் ஆலயங்கள் அந்தணர்களாலும் தாந்திரிகாலயங்கள் அந்தணரின் ஒரு நிலையினராகிய தேவலர்களாலும் பூஜிக்கப்பட்டு வந்தன. தாந்திரிகாலயங்களில் பேர் கொண்ட பார்ப்பார்களை நியோகிப்பது அரசனுக்கு ஆகாது என்று கட்டளை பிறந்திருந்தது. சிவாலய விஷ்ணுவாலயங்களில் சாதிகளுக் கேற்ற கௌரவங்களும், சபைகளில் மரியாதைகளும் செய்யப்பட்டு வந்தன. சமயாதி சம்ஸ்காரங்களும் தீக்ஷாக் கிரமங்களும் அவ்வச் சாதியாருக்கு அவரவர் தகுதிக்கேற்ப அவரவருக்குரிய வழிகளின்படியே செய்யப்பட்டு வந்தன. ஒருவர் கடமை உரிமைகளை மற்றொருவர் ஆக்கிரமிப்பதில்லை ஒரு சமயத்தினரை மற்றொரு சமயிகள் எவ்வித காரணத்தாலும் புறக்கணிப்பதில்லை. போலி வேஷதாரிகளும் போலிச் சமயிகளும் அரசரால் தண்டிக்கப்பட்டனர். இவ்வாறு தொன்று தொட்டு வரன்முறையாகக் காரியம் நிகழ்ந்து வந்தது. அராஜக காலத்தே அதிகாரங் காரணமாகப் பதக்கத்தாருக்கும் காவற் காருக்கும் போராட்டம் தொடங்கி, அஃது கல்வி செல்வம் குலம் கொள்கை யளவும் மதுபிந்து கலகமாக முடிந்தது.

(தொடரும்)

---

# காலமறிதல்

[திரு வ. சுப்பையா பிள்ளை]

"கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்
குத்து ஒக்க சீர்த்த இடத்து"

(இதன் பொருள்) ஒருவன் தொழில்மேல் செல்லா திருக்க வேண்டுங் காலத்தில் கொக்கு இருப்பதுபோல் இருக்கக்கடவன். மற்றுச் செல்லுங் காலம் வாய்த்த வழி அது செய்து முடிக்குமாறு போலத் தப்பாமற் செய்து முடிக்கக் கடவன்.



கொக்கினைப்போல வினைமேற் செல்லல்.

கொக்கானது நீர் மடையினிடத்துத் தனக்கு இரையாதற்கேற்ற பெரிய மீன் வருமளவும் அது முன்னறிந்து தப்பாமற்பொருட்டு இரைச்சல் செய்யாதும் அசைவு செய்யாதும் உயிரில்லதுபோல் வாடியிருந்து, உற்ற மீன் வந்தபொழுதே குறிதப்பாது குத்திக் கொன்று தின்னும். அதுபோல நாம் ஒரு தொழின்மேல் செல்லுங் காலத்து அத்தொழில் கைகூடுங் காலமும் வகையும் நினைந்து அமைதியாக இருந்து அவை தெரிந்தவழி உடனே எற்று முடித்தின்புறக் கடவேம். இதனை யன்றோ,

'ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்'

என்றும்,

'காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்'

என்றும் நமது வள்ளுவப் பெருந்தகையார் கூறுகின்றார்.

ஓரரசன் வேற்றரசனோடு போர் புரிந்து அவன் நாட்டை வெல்ல வேண்டுமாயின் அதற்குரிய காலத்தைநாடி அது கழிவதற்கு முன்னேயே முன் செய்தற்கரிதாய வினைகளைச் செய்து முடித்தல் வேண்டும். ஒரு பகை யரசரை வெல்ல வேண்டுமாயின் அதற்குரிய காலத்தை நாடியே அமைதியுடனிருத்தல் வேண்டும். தன்னினும் மிக்க வலிமையுடைய அரசனையுங் காலங்கருதி வெல்லுதல் எளிது. காலங்கருதியிருப்பவர் தமக்கு மிகை செய்த அரசர் மீதும் அவரறிய உடனே புறத்தே வெகுளாது அது வருங்காறும் உள்ளேயே வெகுண்டு அமைதியுடனிருப்பர். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற மேனாட்டுப் பெரும் போரில் ஜெர்மானியர் பல்லாண்டுகளுக்கு முன்னேயேயிருந்து பெரும் போரை எதிர் பார்த்து வெளித்தோன்றாது மறைவாகப் போருக்கு வேண்டியவற்றை யெல்லாம் ஒழுங்கு படுத்தி வந்தமையும் போருக்கு ஏது கிடைத்தபோது அதனை ஏற்று நடத்தினமையும் யாவரும் அறிந்தனவே.

'வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்'

என்ற திருக்குறளின்படி ஒரு வினையினை முடிக்கப் புகும்போது நால் வகை வலியினையும் அளந்து அறிந்து புகுதலே நன்று.

முற்காலத்தில் திருக்கோயில்கள் கட்டும்போது பெரிய கற்றூண்களை மேலேற்றுவதற்கு இக்காலத்தில் கிடைக்கப்பெறும் பொறிகள் கிடையா. ஐம்பது பேர்கள் சேர்ந்து தூக்கமுடியாத பெரிய கல்லைச் சிற்பிகள் கால மறிந்து சில பேர்கள் துணை கொண்டு ஏற்றி விடுவார்களாம். வானின்கண் இன்னவிண்மீன் உச்சிக்கு வரும்போது, இதனைத் தூக்குவது எளிது என்று சிற்ப நூலின்கண் கண்டறிந்தபடி பல நாட்கள் பல பேர்கள் துணையாற் றூக்கமுடியாத பெரிய கல்லைச் சில பேர்களினுதவியால் உற்ற காலத்தில் தூக்கி விடுவார்களாம். இன்னவிண்மீன் உச்சிக்கு வருகிறபோது கற்கள் தமது வலிமை குறையக் காணப்படுகின்றன வெனத் தெரிகின்றோம். நிற்க,

செய்வினை என்று நம் நாட்டில் வழங்குவது தெரியலாம். அஃதாவது பகைவர் துன்புறும்படி சில வினைகளை யாற்றுவது. அவற்றிற்குப் பகைவருடைய கோள் நிலை மிக வலுவுடையதாயிருக்கிறபோது அக்கொடுவினைகள் பயனிலவாய் ஒழியும். ஆனால் கோள் நிலை வலிமை குன்றிய ஞான்று பயன்றரும். ஆகலான் கொடுவினையாளர் பகைவருடைய கோள் நிலை குன்றுங் காலத்தையே எதிர் நோக்கியிருப்பர்.

'அடக்க முடையார் அறிவிலர்என்று எண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு'

என்ற மூதுரைச் செய்யுளும் ஈண்டுக் கருதற்பாலது.

நமது பண்டைப் பெரும் புலவர்கள் உலகயியற்கையின்கண் எவ்வளவு ஆழ்ந்து சென்று ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள் என்பது மேற்காட்டிய செய்யுட்களான் நன்கு விளங்குகிறதன்றோ. ஒன்றுமுதல் ஐயறிவுடைய உயிர்ப் பொருள்களினிடம் அமைந்துகிடக்கும் அரிய செய்கைகளை யெல்லாம் நன்கு அறிந்து ஆறறிவுடைய மக்களின் வாழ்க்கையினைச் செம்மைப் படுத்துவான் கருதி எழுதியிருக்கும் பாக்களின் நயம் மிகவும் வியக்கற்பாலது.

---

# பெண்களுக்குக் கல்வி அவசியம்

[திரு. P. V. சரோசனி தேவி]

எனது பிரிய சகோதரிகாள் !

இப்பொழுது மற்ற நாடுகளைவிட நம் நாட்டில் பெண் கல்வி மிகக் குறைவாய் இருக்கின்றது என்னும் விஷயம் நம்மில் அநேகருக்குத் தெரிந்ததேயாம். பெண்களுக்குக் கல்வியின்மையால் நேரிடும் தீமைக்கோ ரளவில்லை. உலகில் கல்வி கற்காதவர்கள் பிறவிக் குருடுக்குச் சமானமாவார்கள். இதுபற்றியே நாயனர் "கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்'' எனக் கூறியிருக்கிறார். பார்வையற்ற குருடன் ஒருவன் கண் தெரியாததால் இவ்வுலகில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட அநேக இயற்கைக் காட்சிகளையும், இன்னும் மனிதர்களால் உண்டாக்கப்படும் செயற்கைக் காட்சிகளையும் கண்டு களிப்புற வழியின்றி மனம் வருந்தி இருக்கிறன். அவன் தான் நடக்கும்பொழுது பிறர் உதவியின்றி நடத்தல் கூடாதகாரியம். ஏனெனில் அவனுக்கு மேடென்றும், பள்ளமென்றும், எதிரில் என்ன இடையூறு இருக்கிறதென்றும் தெரிய ஹேதுவில்லை. அதேபோல் கல்லாதவர்களுக்குக் கல்வி யறிவின்மையால் அவர்கள் நெஞ்சம் இருண்டிருக்கிறது. அகக்கண்ணில்லாத அவர்கள் உலக விஷயங்களை நன்றாய் அறிந்து கொள்ளவும், இன்னும் பல பத்திரிகைகளையும், நல்ல நீதிப்புஸ்தகங்களையும் படிக்கவும் வழியின்றி யிருக்கிறார்கள். குருடர்களேபோல் தங்கள் வாழ்நாட்களை எவ்விதம் நல்வழியிற் கழிக்கவேண்டுமென்பதை அறியா

மல், தத்தமக்குத் தோன்றியவாறு நடக்கிறார்கள். இதனால் அவர்கள் பல சமயங்களில் தீயவழியில் நடந்து பிறகு அநேக கஷ்டங்களுக் குள்ளாகிறார்கள். கல்லாதவர்கள் தங்கள் வாழ் நாட்களில் அநேக சுகங்களை இழந்து விடுகிறார்கள் என்று நினைக்க இடமேற்படுகின்றது. எப்படியெனில் ஒருவருக்கு இவ் வுலகில் எவ்வளவு சகித்தற்கரிய துன்பங்கள் நேரிட்டபொழு தும் ஒரு நல்ல புஸ்தகத்தை எடுத்துப்படிக்க ஆரம்பித்தால் உடனே அத்துன்பம் ஒருவாறு மாற மனதிற்குச் சிறிது அமை தியும், ஆறுதலும் உண்டாகும். ஒருவன் உலகத்தாராலும், பந்து மித்திரர்களாலும் வெறுக்கப்பட்டும், கைப்பொருள் இழந்தும் மிக்க மனம் வருந்தி யிருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுதும் அழிவிலாச் செல்வமாகிய கல்வி ஒன்றுமட்டும் இருந்தால் எவ்வளவோ மன வமைதியையும், சந்தோஷத்தை யும் அவன் அடையலாம். கல்வியை இவ்வளவுதான் கற்கலாம் என்று ஓர் அளவில்லை. நம் ஆயுள்நாட்கள் முழுவதையும் கல்வி யிலேயே செலவழித்தபோதிலும் நாம் கல்வியாகிய பெருங்கட லின் கரையைக் காணமுடியாது. புஸ்தகம் நமக்கு ஒரு நல்ல சிநேகிதன் போன்றது. நல்ல அறிவைத் தரக்கூடிய புஸ்தகங் கள் இல்லாத ஒரு வீடு உயிரற்ற உடலுக்குச் சமானமாகும். அநேக பிரசித்திபெற்ற அறிவாளிகளால் எழுதப்பெற்ற பல புஸ்தகங்களையும், பல பத்திரிகைகளையும் படித்து மிக்க ஆனந் தத்தை அடையலாம். இப்பெறற் கரும்பேறு கல்லாதவர்களுக்கு ஒருபோதும் கிட்டாது

இவ்வளவு பெருஞ் சிறப்பினையுடைய கல்வியை நம் நாட்டு ஆடவர்களிலுங் கூட அநேகர் அடையவில்லையென்று கூறலாம். அதிலும் நம் நாட்டுப் பெண்களின் கல்வியோ, மிகக் குறைவா யிருக்கின்றது. நம் நாட்டு ஆடவர்கள் பெண் மக்களை இழிந்த அடிமைகளைப்போல் நடத்தி வருகிறார்கள். அநேக ஆடவர்க ளும், பல வருஷங்கள் அடிமை வாழ்வில் மூழ்கிக்கிடக்கும் சில ஸ்திரீகளும், பெண்மக்களைக் கேவலமாகக் கருதி 'அடுப்பூதும் பெண்டிர்க்குப் படிப்பு ஏன்?' என்றும் பெண்களுக்கு வீட்டு வேலை செய்யத்தெரிந்தால் போதும் என்றும், இன்னும் 'பெண் கள் எதற்காகப் படிக்கவேண்டும்?' அவர்கள் படித்து உத்தி யோகம் செய்யப்போகிறார்களா? என்றும் இன்னும் பலவாறான இழிமொழிகளால் ஏளனம் செய்துவருகிறார்கள்.

தம் இனத்திற்குத் தாமே கேடு சூழ்விப்பதுபோல, தம் மைத் தாமே கேவலமாகச் சொல்லிக்கொள்ளுகிறோமே என்று சில ஸ்திரீகளுக்குத் தெரிகிறதில்லை, என்னே! அவர்கள் மதி யீனம்!

உண்மையில் கல்விகற்பது உத்தியோகம் செய்வதற்குமாத்திரம்தான் என்று எண்ணுவது சரியன்று. கல்விகற்றால் அறிவு விருத்தியாகும். கல்வியானது மனிதர்களுடைய அறிவை விளக்குவதில் ஓர் தூண்டுகோல் போன்றது. கல்விகற்ற ஸ்திரீகள் சமயம் வந்தால் உத்தியோகம் செய்வதினாலும் தீமை ஒன்றும் இல்லை.

கடவுள் ஆண், பெண், இருவரையும், உலகில் சமமாகவே சிருஷ்டித்திருக்கையில், ஆடவர்கள் நினைப்பதுபோல பெண்கள் எவ்வகையில் ஆடவர்களுக்குக் குறைந்தவர் ஆவார்கள்? ஸ்திரீகளும் ஆடவர்களைப்போல் கல்விகற்று சம்பாதிக்கத் தடையென்ன? இப்பொழுது நம் நாட்டு ஸ்திரீகளுக்கு அநேகமாய்ச் சொத்துரிமை கிடைக்காததாலும், பொருள் சம்பாதிக்க வழியின்மையாலும் வயிற்றுப் பிழைப்புக்காக வேண்டிக் கணவன் வீட்டில் என்னகொடுமை செய்தபோதிலும் அதைச் சகித்துக்கொண்டு அங்கேயே இருக்கிறார்கள். இப்பொழுது உதாரணமாக மேல்நாட்டு ஸ்திரீகள் ஆடவர்களிடம பொருளுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருப்பதில்லை எனெனில் அவர்கள் சிறுவயதிலிருந்தே ஆடவர்களைப்போல் கல்விகற்றுப் பிறகு உத்தியோகம் செய்து பணம் சம்பாதிக்கிறார்கள். ஆதலால், அவர்கள் அதிகமாய் ஆடவர்களின் கொடுமைக்கு ஆளாவதில்லை. பெண்கள் சுதந்திர விஷயத்தில் நாம் அவசியம் மேனாட்டார் கொள்கையைப் பின்பற்றல்வேண்டும்.

இதனால் நம் நாட்டு ஸ்திரீகள் கணவர்களிடம் அன்பாயும், கீழ்ப்படிதலாயும் இருக்கக் கூடாதென்றாவது, அல்லது ஒவ்வொரு ஸ்திரீகளும் அவசியம் உத்தியோகம் செய்யவேண்டுமென்றாவது கூறவில்லை.

நம் நாட்டு ஆடவன் ஒருவன் ஒரு படித்த பெண்மணியை விவாகம் செய்து கொள்ளுகிறான் என்று வைத்துக்கொள்வோம், அவன் கல்வி கற்ற தன்மனைவியின் மூலமாய் எவ்வளவோ நன்மைகளையும், சந்தோஷத்தையும் அடைவான். எப்படியெனில் படித்த மனைவி குடும்பத்தை வெகு ஒழுங்காகவும், திறமையாகவும் நடத்துவாள். தன் கணவனுக்கு ஆபத்து வந்த காலத்து நல்ல ஆலோசனை சொல்லுவாள். தன் கணவனுக்குப் பணக் கஷ்டம் வந்தகாலத்தில் தானும் தன் கணவனைப்போல் உத்தியோகஞ் செய்து பணம் சம்பாதித்துக் கணவனுக்கு உதவியாய்க் குடும்பத்தைக் காப்பாற்றுவாள், குழந்தைகளை நல்ல வழியிற் பழக்கி வருவாள், கற்ற இருவரால் நடத்தப்படும் அக்குடும்

பம் ஒழுங்காகவும், அன்பும் சந்தோஷமும் நிறைந்ததாயும் இருக்கும்.

நம் நாட்டு ஆடவர்கள் இவ்விஷயங்களை யெல்லாம் கவனியாமல் தாங்கள் படித்த பெண்களை விவாகம் செய்துகொண்டால் தங்களை மதிக்கமாட்டார்களென்றும், குடும்பத்தைக் கவனிக்க மாட்டார்களென்றும் தப்பபிப்ராயங் கொண்டு படித்த பெண்களை விவாகம் செய்துக்கொள்ள விரும்புகிறதில்லை. கணவர்கள் மனைவிமார்களுக்குச் சம உரிமை கொடுத்து, அன்பாக நடத்தினுல், மனைவிமார்களும் கணவர்களிடத்தில் அன்பாகவும், பணிவாகவும் நடந்து கொள்வார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

சகோதரிகளே! நாம் சம உரிமையை அடைவதற்குக் கல்வி அவசியம் என்பது 'அங்கை நெல்லி' யென விளங்குகிறதல்லவா? நாம் சம உரிமையை அடைவதென்றால அஃது இலேசான காரியமன்று. அதற்காகப் பெரிதும் பாடுபடல்வேண்டும்.

சென்ற சிலவாரங்களில் 'லோகோபகாரி' ப் பத்திரிகையின்கண் 'அல்விராஜ்யம்' என்னுந் தலைப்பெயர்கொண்ட சில சிறு துண்டுச் செய்திகள் வந்திருப்பதைக் கண்ணுற்றேன். அதில் 'பின்லண்டு' தேசத்துஸ்திரீகளும், இன்னும் சிலதேசத்து ஸ்திரீகளும் சுதந்திரம் பெறுவதற்காகச் சொல்லுதற்கரிய முயற்சி எடுத்துக் கொண்டார்கள் என்றும் இப்பொழுது அவர்கள் நல்ல முன்னேற்றத்தை யடைந்து தேசத்தின் பலவிடங்களிலும் உயரிய உத்தியோகங்களை வகித்துச் சமஉரிமை பெற்று வருகிறார்கள் என்றும் எழுதி யிருந்தது. நாமும் அவர்களைப்போல் மிக முயற்சி எடுத்துக்கொள்ளல் வேண்டும். அப்போது தான் நாம் சம உரிமையை அடையமுடியும்.

சகோதரர்களே! நீங்கள் பூரணசுகத்தையும், சந்தோஷத்தையும் விரும்பினுல் உங்கள் வீட்டு ஸ்திரீகளை அடிமைகளைப் போல் நடத்தாமல் உங்களைப்போல் அவர்களையும் சமமாகப் பாவித்து, அவர்களுக்குச் சமஉரிமை கொடுத்த அன்பாக நடத்துங்கள் அப்போதுதான் உங்கள் வீட்டில் சந்தோஷமும், ஒற்றுமையும் நிலைத்திருக்கும்.

எந்த நாட்டில் ஸ்திரீகள் சந்தோஷமாய் வாழ்ந்திருக்கிறார்களோ? அந்த நாடே யாவற்றிலும் சிறந்து விளங்கும் என்பதை மறந்து விடாதீர்கள். சகோதரிகளே! நாம் முன்னுக்கு வர வேண்டுமானுல், முதலாவது நம் நாட்டில் பெண்களுக்குக் கட்டாயக் கல்வி (Compulsary education) ஏற்படல் வேண்டும்.

அதுவும் இப்பொழுது சிற்சில இடங்களில் ஏற்படுத்தி யிருப்பதைப்போல் 5-வயதிலிருந்து 10—வயது வரை அவசியம் கல்வி கற்கவேண்டும் என்பதினால் அதிக நன்மை உண்டாகாது. ஏனெனில் அவ்வளவு சிறுவயதிற்குள் அவர்கள் நல்லறிவை உண்டாக்கத்தக்க கல்வியைக் கற்றுவிட முடியுமா? அநேகமாய் நம் நாட்டுப் பெண்கள் அவ்வளவு வயதில் சுமாராய் எழுதவும், படிக்கவுமே கற்றுக்கொள்ளுவார்கள், பள்ளியைவிட்டு நின்ற சிலகாலத்திற்குள் அவற்றையும் மறந்து விடுவார்கள், ஆதலால் கட்டாயக் கல்வியின் வயதை இன்னும் உயர்த்தவேண்டும், அதுவன்றி நகரங்களிலும், கிராமாந்திரங்களிலும், ஏழைப் பெண்மணிகளுக்கு இலவசப் பாடசாலைகள் ஏற்படல்வேண்டும்.

எனது பிரிய சகோதரிகளே !

நான் நமது முன்னேற்றத்தைக் குறித்து இம்மாதிரி வியாசங்கள் எழுதுவதற்குப் போதிய கல்வியறிவும், அனுபவ ஞானமும், உடையவனல்லேனாயினும், நமது முன்னேற்றத்திற்காக இம்மாதிரி வியாசங்கள் எழுதவேண்டும் என்ற பேராவல் என் மனதில் தோன்றி என்னைத் தூண்டியதாலும். அன்பகம் திருவாளர். மு. போ. ஈஸ்வரமூர்த்தியா பிள்ளை அவர்கள் இம்மாதிரி வியாசங்கள் எழுதும்படி எனக்கு ஊக்கமுண்டாக்கி உதவி செய்தபடியாலும் என் சிற்றறிவிற்குத் தோன்றியவாறு எழுதலுற்றேன். இதில் உள்ள குற்றங்களைநீக்கிக் குணத்தைக்கொள்ளுமாறு உங்களை வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன். சகோதரிகளே! ஆடவர்கள் சுயநலப் பிரியராய் இருக்கும்பொழுது இப்பெரியார் எனக்கு இவ்விஷயத்தில் எவ்வாறு உதவி புரிந்தார் என்று நினைக்கலாம். நம் நாட்டில் எல்லா ஆடவர்களும் சுயநலப் பிரியர் என்றாவது, ஸ்திரீகளை அடிமைகளைப்போல் நடத்துபவர் என்றாவது சொல்லிவிடக் கூடாது. சில சகோதரர்கள் பெண்களைச் சம்மாகப் பாவித்துச் சுதந்திரம் கொடுத்து வருகிறார்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அவர்களில் பிள்ளை அவர்களும் ஒருவராவார், அப்பெரியார் பெண்கள் முன்னேற்றத்திற்காக பெரிதும் பாடுபடுபவர். அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனம் உரியதாகின்றது. நாம் கூடிய விரைவில் கல்வியிற் சிறந்து சுதந்திரத்தைப் பெறவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை முழுமனதுடன் பிரார்த்திக்கின்றேன்.

---

## திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபை

## ௩அ-சஉ ஆம் ஆண்டு நிறைவு விழா

நிகழும் பிரபவ ஆண்டு, புரட்டாசித் திங்கள் 29, 30 ஆம் நாட்களில் (15, 16-10-1927) திரிசிரபுரம் மலைக்கோவில் நூற்றுக்கால் மண்டபத்தில் பல்லாவரம் பொது நிலைக்கழக ஆசிரியர் உயர்திரு. சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை அடிகள் அவைத்தலைமையின் கீழ்ப் புலமை சான்ற பேரறிஞர் பலர் அரும் பெரும் பொருள்பற்றிச் சிறந்த விரிவுரைகள் நிகழ்த்துவார்கள்.

அன்பரனைவரும் அந்நாட்களில் அங்குப்போய்ச் சொற்பொழிவுகளைக் கேட்டு விழாவைச் சிறக்க நடாத்துமாறு வேண்டுகிறோம்.

---

## தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

### தமிழ்த் தேர்வுத்தேர்ச்சி

இத்தேர்ச்சியைப்பற்றித் தேர்வெழுதிய மாணவர் தனித்தபாற்றுள்களும் வந்துள்ளன. தேர்வுவிடை நிறுத்துதவுவோர் சிலரிடமிருந்து தேர்ச்சியம்சங்கள் வராத காரணத்தினலேயே இந்த மாதச செந்தமிழ்ச் செல்வி இதழில் வெளியிடக்கூடவில்லை. தேர்ச்சிக்குறிப்பு கூடிய விரைவில் வெளியிடப்பெறும். தினப்பதிப்புகளிலும் வெளிவரும்.

பு. சி. புன்னைவனநாதன்.

---

## செந்தமிழ்ச் செல்வி இதழாசிரியரவர்களுக்கு

ஐயா,

நமது பழக்க வழக்கங்களில் காணப்படும் யாண்டு. மதி. கிழமை. நாள் (நட்சத்திரம்) கோள் இவற்றின் பெயர்கள் பெரும்பாலும் வடமொழிச் சொற்களாகவோ, வடமொழித் திரிபுச்சொற்களாகவோ கொள்ளப்பட இருத்தலால், அத்தகைய மயக்கம் ஒழியும்பொருட்டு மேற்கூறியவற்றிற்குரிய பெயர்களைத் தனித்தமிழ்ச் சொற்களாக அமைத்துச் செல்வியில் வெளியிடுமாறு வேண்டுகிறேன், இவ்வெளியீடு தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணையாகும். இத்தகைய முயற்சியைத் தமிழறிஞர் எவரேனும் மேற்கொண்டு செய்துபோதரத் தாழ்மையாய் வேண்டுகிறேன்.

தமிழ்த்தொண்டன்

17-11-27

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ரு } மெய்கண்டான் யாண்டு-எாரு ஐப்பசித் திங்கள் 1927ஹு அக்டோபர்—நவம்பர்மீ { பரல் ம

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

## கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா*

[சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள்]

அன்பர்களே!

இச்சபையார் கேட்டுக்கொண்டதற் கிணங்கிக் 'கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா' என்பதனைப் பொருளாகக் கொண்டு ஒரு விரிவுரை நிகழ்த்தலா மென்று

---

* குறிப்பு :—திருச்சி, சைவசித்தாந்த சபையின் உஅ - சஉ - வது ஆண்டு விழாவில் தலைமை பூண்டு செய்த முன்னுரைச் சொற்பொழிவு.

துணிந்தேன். இக்கால நிலைக்கு ஏற்றபடி எதனைப்பற்றிப் பேசலாம் என்று ஆராய்ந்து பார்க்கையில், மெய்யல்லாத கோட்பாடுகளைச் சைவசமயமாகப் பிறழ உணர்ந்து அவற்றையே சைவசமயமென நம்மனோர் மயங்கிக் கிடத்தலானும், பொய்யை மெய்யாக மயங்கிக் கிடக்கும் வரையில் அம்மயக்க உணர்ச்சிக்கு ஏதுவான அறியாமை நம்மைவிட்டு நீங்காமையின் நாம் எல்லாம் வல்ல சிவத்தின் நிலையை உணர்ந்து இப் பிறவித்துன்பத்தை நீக்குதலாகாமையானும் இந்தப் பொருளையே பேசுவது இன்றியமையாததாக எனக்குத் தோன்றியது. ஏனென்றால் பிறவி நீங்காத வரையில், அப்பிறவியை நீக்கும் முயற்சி உண்மையில் நடவாத வரையில், அம்முயற்சி நடைபெறுதற்கு மெய்யுணர்ச்சி பெறுதவரையில் நாம் இப்பிறவி எடுத்ததன் நோக்கம் நிறைவேறாமலே போய்விடும்.

நமக்கு அரிதிற் கிடைத்திருக்கும் மக்கட் பிறவியின் நோக்கம் நிறைவேறாதாயின் நாம் பிறவிப்பயனை அடுத்தடுத்து இழந்து பிறவித் துன்பத்திற் கிடந்து சுழலுவதோடு, நமக்குப் பிறவிகளை ஓயாது கொடுத்தற்கு ஏதுவாயுள்ள பலர்க்கும் நாம் மீளாத துன்பத்தையும் கொடுத்தவராவோம். எம்மை ஈன்றெடுக்குந் தாய்மார் எத்தனை முறை எம்மைத் தம் வயிற்றகத்தே சுமந்து சுமந்து துன்புறுகின்றனர்! எம்மைப் பெற்றெடுத்து வளர்ப்பதற்கு எத்தனை முறை அலக்கணுறுகின்றனர்! இதுமட்டுமோ, எம்மைப் படைக்கும் இறைவன் எத்தனை முறை எம்மைப் படைத்துப் படைத்துக் கைசலிக்கின்றான்! இதுபற்றியன்றோ பட்டினத்தடிகளும்,

> "மாதா உடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
> வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
> இருப்பையூர் வாழ்சிவனே இன்னுமோர் அன்னைக்
> கருப்பையூர் வாராமைக் கா."

என்று அருளிச் செய்தனர்கள். இவ் உலகத்தில் நாம் வந்து பிறந்ததெல்லாம் மெய்யுணர்வு பெறுதற்கேயாம். இவ் உலக வாழ்க்கையானது நமக்கு ஒரு பள்ளிக்கூடமாயிருக்கின்றது. பள்ளிக்கூடத்திற் கல்வி பயிலும் மாணவர்கள் ஆசிரியன் உதவிகொண்டு மெய்ந்நூல்கள் பலவற்றைப் பயின்றும், தம்மோடு பயிலும் மாணாக்கர்களுடன் கல்வித்துறைகளை உசாவி ஐயந்தீரப்பெற்றும் அறிவு விளங்கி வருதல்போல, நாமும் இவ் உலகவாழ்க்கைத் துறைகள் ஒவ்வொன்றிலும் போறிஞர் பற்பலரின் உதவியால் உண்மைகள் பற்பலவற்றை உணர்ந்தும், நம்மோடொத்த மக்கள் ஓவாது செய்யும் பலதிற முயற்சிகளாற் பலதிற வாழ்க்

கை நலங்களைப் பெற்றும் நாளுக்கு நாள் அறிவிலும் இன்பத்திலும் மேன்மேற் சிறந்து வருகின்றோம்.

இவ்வாற்றால் நம்மைப் பழமை தொட்டுப் பற்றிக் கொண்டு வரும் அறியாமையும் அதன்வாயிலாக வருந் துன்பமும் படிப் படியே நீங்கப்பெற்று வருகின்றோம். இங்ஙனமாக அறியாமை நீக்கமும் அறிவுப்பேறும் அடைதலே இப்பிறவி எடுத்ததன் நோக்கமாய்க் காணப்படுதலின், அவ் அறியாமையைக் களைந்து அறிவு பெறுதற்குரிய உண்மைக் கோட்பாடுகளையே நாம் ஆராய்ந்து கைக்கொள்ளல் வேண்டும் என்பதுபற்றிக் கடவுள் நிலைக்கு மாறான கோள்கைகள் சைவமாகா என்பதனை நுங்கள் முன்னிலையிற் பேசத் துணிந்தேன்.

இனி எடுத்துக்கொண்ட இப்பொருளைக் கடவுள் நிலை யாதெனவும், அந்நிலைக்கு மாறான கொள்கைகள் யாவை யெனவும், அம்மாறான கொள்கைகள் சைவமாகாதவாறு யாங்ஙனமெனவும் மூன்று வகையால் ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். இங்ஙனம் ஆராயும் இவ் ஆராய்ச்சி மிக உயர்ந்த உண்மைப் பொருள்களைத் தெளிவதில் நமதுகருத்தை ஈடுபடுத்தி நிற்றலால், இப்போது நாம் தவமுயற்சியைச் செய்யப்போகும் நிலையில் இருக்கின்றோம். ஏனென்றால் தவம் என்பது உயர்ந்த பொருளில் நமது கருத்தை ஒருமுகப்படுத்தி உறைத்து நிற்றலே யாதலால், இப்போது நாம் தவமுயற்சியைத் துவங்கி நிற்கின்றோம் என்பதனை நினைந்து, ஒருவரோடொருவர் பேசாமலும் மற்ற வீணெண்ணங்களை எண்ணாமலும் நாம் பேசும் பொருளிலேயே கருத்தை நிறுத்தி அமைதியாய் இருத்தல் வேண்டும்.

இனி, முதலாவதாகக் கடவுள் நிலையை ஆராய்ந்து பார்ப்போம். கடவுள் என்னுஞ் சொல்லைக் கேட்ட அளவானே அஃது எப்பொருளையுங் கடந்து நிற்பது என்னும் பொருள் புலனாகாநிற்கின்றது. இனிக் கடவுள் எப்பொருளைக் கடந்து நிற்கின்றார் என்று ஆராய்ந்து பார்க்குமிடத்து இவ் உலகத்தையும் இவ் உலகத்தில் வாழும் உயிர்களையுங் கடந்து நிற்கின்றார் என்றே நாம் சொல்லுதல் வேண்டும். நம்மறிவால் முதலில் அறியப்படுவது இவ் உலகமேயன்றிப் பிறிதில்லை. இவ் உலகந்தான் எங்ஙனம் ஆக்கப்பட்டிருக்கின்றது என்று மேலு மாராய்ந்து பார்க்குமிடத்து மண்ணுந் தண்ணீருந் தீயுங் காற்றும் வானுமென்னும் ஐம்பெரு முதற்பொருள்களால் ஆக்கப்பட்டிருத்தல் விளங்கும். இவ் உண்மையை இற்றைக்கு ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னமே இருந்த நம் பழந்தமிழாசிரியரான தொல்காப்பியனார்,

" நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகமாதலின்."

என்றும், இவர் காலத்துக்கு ஐந்நூறு ஆண்டு பிற்பட்டு வந்த தலைச்சங்கத்து நல்லிசைப் புலவரான முரஞ்சியூர் முடிநாகராயர்,

" மண் திணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்கு
ஐம்பெரும்பூதத்து இயற்கைபோல."

என்றும் கூறுதல் கொண்டு உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு ஐயாயிர ஆறுயிர ஆண்டுகட்கு முன்னமே இவ் உலகத்தி னியல்பினை நன்காராய்ந்து ஐந்து முதற்பொருள்களி லடக்கிய நம் பழந்தமிழாசிரியரின் பேரறிவுப் பெற்றியை என் னென்று கூறுவேன்! எங்ஙனம் புகழ்வேன்! அன்பர்களே!

இனி இங்ஙனம் பகுக்கப்பட்ட இப்பொருள்கள் ஐந்தையும் நாம் எங்ஙனம் அறிகின்றோம் என்றால், செவியின் உதவிகொண்டு ஓசையை உணர்கின்றோம். இவ் ஓசையோ வானின் தன்மை. ஓசையை உணரவே அவ் ஓசைக்கு நிலைக்களனாய்க் கட்புலனாகாத வானத்தை அறிகின்றோம். கண்ணி னுதவிகொண்டு தீயின் தன்மையான ஒளியை உணர்கின்றோம். இத்தீயில் ஒளியேயன் றிச் சூடுமுண்டாதலின் அச்சூட்டினை உடம்பி னெல்லா வுறுப்பு களாலும் உணர்கின்றோம். இனிக் காற்றின் தன்மையினையும் அங்ஙனமே உடம்பின் எல்லா வுறுப்புகளாலும் உணருகின்றோம். வாயின் உதவி கொண்டு நீரின் சுவையினையும் மூக்கின் உதவி கொண்டு மண்ணின் நாற்றத்தினையும் உணர்கின்றோம். இவ்வா றாக வான் வளி தீ நீர் மண் என்னும் ஐம்பெரும் பொருள்களை யும், நாம் அறிந்து கொள்ளுதற்கு உதவியாக மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளையும், அவ் ஐம்பொறிக ளமைந்த இவ் வுடம்பினையும் எல்லாம் வல்ல இறைவன் நமக்குப் படைத்துக் கொடுத்திருக்கின்றார். இவ் ஐம்பொறிகள் இல்லா விட்டாலும் அல்லது இவை சிறிது பழுதுபட்டாலும் நாம் உல கத்துப் பொருள்களை அறிதலும் அவற்றாற் பயன் கொள்ளுத லும் சிறிதும் இயலா. செவி இல்லையாயின் அல்லது செவி யிருந்தும் அது பழுதுபட்டுப் போனதாயின் நாம் ஓசையை உணர்வதெங்கே! கண் இல்லையாயின் அல்லது கண்ணிருந்தும் அது பழுதுபட்டுப் போகுமாயின் ஒளியினையும் அவ் ஒளியினால்

விளக்கப்படும் பலதிறப் பொருள் வடிவங்களையும் நாம் காண்ப தெங்கே! இங்ஙனமே மற்றைப் பொறிகள் இல்லையாயின் அல்லது அவையிருந்தும் பழுது பட்டனவாயின் அப்பொறிகளால் அறியப்படும் பொருள்களை நாம் அறிந்து கொள்ளுதல் இயலாதன்றோ? அன்பர்களே! இங்ஙனம் பொறிகளின் உதவியின்றி அறியமாட்டாத நிலையிலிருக்கும் ஏழை மக்களாகிய நாம் சிற்றறிவுஞ் சிறுதொழிலு முடைய சிற்றுயிர்களே யல்லாமற் கடவுளாதலியாங்ஙனம்? சிலர் உயிர்களே கடவுளென்று வாய் கூசாமற் சொல்லுகின்றார்கள். உயிர்களே கடவுளாயின் ஐம்பொறிகளின் உதவியின்றியே அவ்வுயிர்கள் ஐம்பொருள்களையும் உணர்தல் வேண்டுமன்றோ? ஆதலால் உயிர்களே கடவுள் என்னுங் கொள்கை பிழைபா டுடைத்தாகும்.

இனி, இங்ஙனம் ஐம்பொறிகளால் ஐம்பொருள்களை அறியுமிடத்து அங்ஙனம் அறியும் அறிவு அவற்றை அறிந்த அளவிலே அற்றுப்போகுமானால் நமக்கு அறிவுவிளக்க முண்டாகாது: அறியாமை நீங்காது; விலங்குகளினும் நாம் கீழ்ப்பட்டவர்களாய் விடுவோம். நாம் பொருள்களை அறிந்த அறிவு அவ்வளவிலே அற்றுப்போகாமல் நம் நினைவிலே பதிந்து நின்று அப்பொருள்களின் தன்மைகளை நம் நினைவில் தொடர்பாக வைத்து அறிவித்து வருகின்றது. நேற்று நாம் கேட்ட சொற்களையும், நேற்று நாம் கண்ட காட்சிகளையும், உண்ட உணவுகளையும் நேற்றளவிலேயே மறந்து, இன்று கேட்குஞ் சொற்களையுங் காணுங் காட்சிகளையும் உண்ணும் உணவுகளையும் புதிது புதிதாக அறிந்து அறிந்த அந்நொடியிலேயே அவை தம்மை மறந்து விடுவோமாயின் நமது நிலை எவ்வளவு உதவியற்றதாய், எவ்வளவு இரங்கத் தக்கதாய் இருக்கும் பார்மின்கள் அன்பர்களே! இங்ஙனம் மறவாதபடி எல்லாம் வல்ல ஆண்டவன் நாம் அறிந்தவைகளை மறவாத நினைவினை எவ்வளவு இரக்கத்தோடு நமக்கு அளித்திருக்கின்றான். நாம் பொறிகளால் அறிந்தபொருள்கள் அழிந்து மறைந்தாலும் அப்பொருள்களைப் பற்றிய நினைவுகள் எம் உள்ளத்தில் வேரூன்றி நிற்கின்றன வல்லவோ? யாம் எங் கண்ணெதிரே காணும் இம்மண்டபம் ஒரு காலத்தில் இல்லையாய் மறைந்தாலும் இதனைப் பற்றிய நினைவு எம் அகக் கண்ணெதிரே இதனை எமக்குத் தெளிவுறக் காட்டுமன்றோ? அல்லது இம்மண்டபத்தை விட்டு வேறோரிடத்திற் சென்ற பின்னும் எமக்கு இம்மண்டபத்தைப் பற்றிய நினைவு வருமன்றோ? இங்ஙனமே இம்மக்கள் வாழ்க்கையில் இதுவரையிற் கழிந்துபோன முன்னாட்களில் நாம் அறிந்தறிந்துவந்த பொருள்களின் நினைவுகளெல்லாம் நம் உள்ளத்தில் அழுத்தமாய்ப் பதிந்து நாமொன்றை நினைப்ப

தற்கு அறிவை ஒருமுகப் படுத்திக் கண்மூடி யிருக்குங்கால், அப் பழைய நினைவுகள் ஒன்றன்பின் ஒன்ருய் ஒரு தொடர்பாயும் தொடர்பின்றிக் கலந்தும் பல திறப்பட்டு மாறி மாறி வரப்பெறு கின்றன மல்லமோ ? இதனுலன்றோ,

"உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன"

என்று ஔவையாரும்,

"கண்டன வெலாம்அல்ல வென்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்க ளோயக்
கண்மூடி ஒருகண மிருக்கவென் ருற்பாழ்த்த
கர்மங்கள் போரா டுதே"

என்று தாயுமான அடிகளும் அருளிச் செய்வாராயினர்.

என்று இத்துணை ஆராய்ந்த வளவில் நம்மால் அறியப்படும் பொருள்களென்பன மண் புனல் அனல் கால் வான் என்னும் உலகத்துப் பொருள்களுந்தும், பொறிகளின் வாயிலாக நம் உள் ளத்தில் வந்து பதியும் இவ் ஐம்பொருள்களைப் பற்றிய நினைவு களும் என்னும் இரண்டுமே யல்லாமல் வேறில்லை என்பது இனிது விளங்காநிற்கும். ஆகவே, கடவுள் எல்லாப் பொருள்களையுங் கடந்து நிற்பவரென்ருல் நம் ஐப்பொறிகளுக்கு விளங்கும் ஐம் பெரும் பொருள்களையும் அப்பொருள்களைப்பற்றியெழும் நினைவு களையுங் கடந்து நிற்பவரென்றே முடிவு செய்யப்படும். ஏனென் ருல் கடவுள் நாமறிந்த மண்ணில் ஒருவரா ? அல்லது நீரில் ஒரு வரா? தீயில்ஒருவரா? காற்றில் ஒருவரா? அல்லது இடைவெளியா யிருக்கின்றனரா? என்று கேட்போமாயின் எவரும் இப்பொருள் களைக் கடவுளென்று சொல்ல ஒருப்படமாட்டார். அல்லது இப் பொருள்களைப்பற்றி நம் உள்ளத்திலெழும் எத்தனையோகோடி நினைவுகளில் எந்த நினைவு கடவுளாகும் என்று கேட்டால் எந்த நினைவினையுங் கடவுளென்று சொல்ல எவரும் ஒருப்படமாட் டார். எனவே, உலகத்துப் பொருள்கள் எதனுள்ளும், அப்பொ ருள்களைப்பற்றிய நினைவுகள் எதனுள்ளுங் கடவுள் அடங்காமல் அவைகளையெல்லாம் அவர் கடந்து நிற்பவர் என்பதே எல்லா மக்கட்கும் உடம்பாடான பொது உண்மையாகும். நம் சமயா சிரியரான திருநாவுக்கரசுநாயனரும்,

"விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனுந்
திரிதரு வாயுவல்லர் செறிதீயு மல்லர்
தெளிநீரு மல்லர்"

என்று இவ்வுண்மையை இனிது விளக்கி அருளிச் செய்திருக்கின்றார்கள்.

இனி இவைகளையெல்லாம் இறைவன் கடந்து நிற்பவன் என்றால் எந்தவகையினால் இவைகளைக் கடந்து நிற்பவன் என்பது ஆராய்ந்து தெளிதல் வேண்டும். கடத்தலென்பதை மூன்று வகையாகப் பாகுபடுத்தல்வேண்டும். அவை இடத்தைக் கடப்பதுங் காலத்தைக் கடப்பதும், பொருட்டன்மைகளைக் கடப்பதும் என்பனவாம். அவற்றுள் இடத்தைக் கடப்பதாவது பொருள்களெல்லாமிருக்கும் எல்லா இடத்தையும் கடந்து நிற்பதேயாகும். நம்மாலறியப்பட்ட எந்தப்பொருள்களின் எல்லையில் அல்லது எந்த இடத்தின் எல்லையில் கடவுளை அடக்கலாம் என்று எவரைக் கேட்பினும் கடவுள் எந்தப் பொருளின் எல்லையிலும் அடங்கார், எந்த இடத்தின் எல்லையிலும் அடங்கார் என்றே விடை கூறா நிற்பர். ஆதலால் கடவுள் இடத்தைக் கடந்து நிற்பவர் என்பது எல்லாமக்கட்கும் ஒப்பமுடிந்ததேயாகும்.

இனிக் காலத்தைக் கடந்தவர் என்பது முக்காலத்தையும் கடந்து நிற்பவர் என்பதேயாம். அவர் எந்தக் காலத்தில் தோன்றினவர், எந்தக்காலத்தில் வளர்கின்றவர், எந்தக்காலத்தில் முடிவடைபவர் என்று எவரைக் கேட்பினும் அவர் ஒருகாலத்திற்றோன்றியவருமல்லர், மற்றொருகாலத்தில் வளர்பவருமல்லர், பிறிதொரு காலத்தில் முடிபவருமல்லர் என்றே எல்லாரும் விடை கூறாநிற்பர்.

அதுபற்றியே,

"எல்லார் பிறப்பும் இறப்பும்இயற் பாவலர்தம்
சொல்லாற் றெளிந்தேம்நஞ் சோணேசர்—இல்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்தண்டு
இறந்தகதை யுங்கேட்டி லேம்"

என்று ஆன்றோர் திருமொழியும் எழுந்தது.

இறைவன் எல்லாவற்றிற்கும் முற்பட்ட காலந்தொட்டே இருப்பவன் என்று கூறுதலுங்கூட அவனது இறைமைத் தன்மைக்கு இழுக்காம் என்பது பற்றியே மாணிக்கவாசகப் பெருமான்,

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

என்றும்,

"மூப்பான் இளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான்"

என்றும் அருளிச்செய்வாராயினர்.

இனிப் பொருள்களின் தன்மையைக் கடந்தவரென்பது, அவ்வப்பொருள்களின் இயல்புகளிலுந் தம்மியல்பு அடங்காமல் அவ்வெல்லாவற்றின் இயல்புகளையும் முற்றுங் கடந்து நிற்பவர் என்பதேயாம். இனிப்பொருள்களின் இயல்புகளாவன எவையென்று ஆராய்வோமாயின், அவை வண்ணம் வடிவு அளவு சுவை யென்னும் நால்வகையில் அடங்கும். வண்ணமாவது சிவப்பு, நீலம், மஞ்சள், கறுப்பு, ஊதா, பச்சை, வெள்ளை என்னும் எழுவகை நிறங்களேயாகும். வடிவாவது வட்டம், நாற்கோணம், முக்கோணம் முதலியனவாகும். அளவாவது எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை யென நான்காகும். சுவையாவது தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என அறுவகைச்சுவைகளே யாகும். இங்ஙனம் வகுத்துக்கொண்ட இயல்புகளுள் கடவுள் எந்த நிறத்தினர், எந்த வடிவினர், எந்த அளவினர், எந்தச் சுவையினர் என்று எவரைக் கேட்பினும் அவர் இன்ன நிறத்தினராயிருப்பர், இன்ன வடிவினராயிருப்பர், இன்ன அளவினராயிருப்பர், இன்ன சுவையினராயிருப்பர் என எவரும் உறுதிப்படுத்திச் சொல்ல மாட்டுவாரல்லர். ஆகவே கடவுள் பொருள்களின் எல்லையினையும் இடத்தினெல்லையினையுங் காலத்தினெல்லையினையுங் கடந்து நிற்பவராதலோடு, அவ்வப்பொருள்களின் இயல்புகளிலேயும் அடங்காதவராய் அவற்றையுங் கடந்து நிற்றல் எல்லார்க்கும் ஒத்த கருத்தேயாதல் இனிது விளங்குகின்றதன்றோ? இங்ஙனமாக எல்லாவற்றையும் எல்லாவற்றி னியல்புகளையுங் கடவுள் கடந்து நிற்பவராய் உள்ளவர் என்பது கடவுள் என்னுஞ் சொற்பொருளால் நன்கு தெளியக் கிடக்கின்றமையின், இவ்வுண்மையைப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னமே ஆராய்ந்துணர்ந்த நம்பழந்தமிழாசிரியர்கள், நம்மாலறியப்பட்ட பொருள்வகைகளிலும் உயிர்வகைகளிலும் அவ் உயிர்களின் தோற்ற ஒடுக்கவகைகளிலும் ஒன்றாக அக்கடவுளைக் கீழ்க்கொணர்ந்து வைத்துச் சொல்லுதற்கு ஒரு சிறிதும் மன மிசையாதவர்களாய், அவனைப் பிறவான் இறவான் என்றே யாண்டும் வலியுறுத்திச் சொல்வாராயினர் ஆசிரியர் தோல்காப்பியனார், பிறப்பு இறப்புக்களுக்கு வித்தாகிய வினையினின்றும் இறைவன் நீங்கி நிற்பவன் என்பதை

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன்"

என்றும், பிறப்புக்கு முதல்வரான தாயும் தந்தையம் இல்லாத வன் இறைவன் என்பதை மாணிக்கவாசகப்பெருமான்,

"கோயில்சு டுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி"

என்றும், திருஞானசம்பந்தப்பெருமான்,

"வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யார்அவர் எவ்வகை யார்கொலோ"

என்றும், சமண்சமய முனிவரான இளங்கோவடிகள்,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்"

என்றும் அருளிச்செய்வா ராயினர். பிற்காலத்து வைணவ சமயத்தில் உறைத்து நின்ற வில்லிபுத்தூராழ்வாருங்கூட வேட்டுவன் வடிவில் வந்து அருச்சுனனோடு போர்புரிந்து அவன் கைவில்லால் அடியுண்ட இறைவனைப்பற்றி மொழியும் போது,

"வேதமடி யுண்டன விரிந்தபல ஆகம
விதங்களடி யுண்டன ஓரைம்
பூதமடி யுண்டனவி நாழிகைமு தற்புகல்செய்
பொழுதொடு சலிப்பில் பொருளின்
பேதமடி யுண்டன பிறப்பிலி இறப்பிலி
பிறங்கல்அர சன்றன் மகளார்
நாதன் அமலன்சமர வேடவடி வங்கொடு
நரன்கையடி யுண்ட பொழுதே"

என்று இவ் உண்மையை ஒளியாமல் நன்கெடுத்துக் கூறினர்.

இவ்வா றெல்லாம் இவ் உலகத்திலுள்ள எல்லா மக்கட்கும் இசைந்த தாகிய கடவுளின் பொது இலக்கணத்தையும், அங்ஙனம் எவர்க்கும் எட்டாதவராய் எல்லாம்வல்ல இறைவன் இருப்பினும் எம்போன்ற சிற்றறிவினர்க்குக் காணவுங் கருதவும் படாத அக்கடந்த நிலையிலேயே அவன் நிற்பனாயின் அவனது திருவரு ளுதவியின்றி இப்பிறவித் துன்பத்தை, இப்பிறவி வித்துக்கு மூலமான அறியாமையை யாமே நீக்கிக்கொள்ள மாட்டாமையால் அவன் தாயினும் மிக்க இரக்கமும் அன்பும் வைத்து எம்மனோர்க்கு எளிவந்து தோன்றி அருள்செய்யும் சிறப்பிலக்கணத்தையும் ஒருங்கு விளக்கி நம் சைவ சமய முதலாசிரியரான

மாணிக்கவாசகப் பெருமான் அருளிச் செய்திருக்கும் ஒரு திருப் பாட்டினை ஈண்டு ஆராய்ந்து பார்ப்போமாக. அத்திருப்பாட்டு வருமாறு :

" கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
 கிளையிலான் கேளாதே எல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருக்க ஞாலத் துள்ளே
 நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
 கேளா தனவெலாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
 எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே."

அருமருந்தன்ன இச் செய்யுளின் கண் நாமெடுத்துக் கொண்ட இவ்விரிவுரைப் பொருளின் முதற்கண்ணதாகிய கடவுள் நிலையை மாணிக்கவாசகப் பெருமான் நன்கு விரித்து விளக்கியிருக்கின்ரு ராதலின், இச்செய்யுட் சொற்பொருளை ஒவ்வொன்றுய் ஆராய்ந் தும் பார்ப்பது நமக்குப் பெரிதும் பயன்படுமெனக் கருதி அவற்றை ஆராயப் புகுகின்ரும்.

முதலிற் 'கேட்டாரு மறியாதான்' என்னுஞ் சொற்ரு டர் 'அறிவிற் சிறந்த எத்தகையினரை வினவியும் இறைவன் அறியப் படாதவன்' என்பதனை விளக்குகின்றது. இறைவ னிருக்கும் ஊரேது, அவன் பேரேது, அவனைப் பெற்ருர் யார்? அப் பெற்ரேரின் பெயா என்னை ? என்று நாம் எவரை வினவி ஞலும் அவரெல்லாம் அவற்றிற்கு விடை சொல்ல மாட்டாமை யின், வினவியவர் அங்ஙனமெல்லாம் வினவியும் அவனை அறிந்து கொள்ளாத நிலையிலேயே இருக்கின்றனர். இன்னுந் தவமுயற்சி யிற் றேர்ந்த முனிவர்களுங் கூட இறைவன் இயல்புகளைக் கேட் டறியப் புகுந்து தமக்கு மேல் நிற்கும் முனிவர்களைக் கேட்க அவர்களும் அவற்றைத் தமக்குத் தெரியாது என்று தமக்கு மேற் பட்ட முனிவர்களைக் கேட்க அவரும் தமக்குத் தெரியாதென்று தமக்கு மேற்பட்டாரைக் காட்டிக் கைவிட, இங்ஙனமே எவர் எவரைக் கேட்பினும் அவரெல்லாம் அவன்றன் முழுமுதற் றன் மைகளை எடுத்துக்காட்ட முடியாமல் வருந்திநிற்றலின் 'கேட் டாரு மறியாதான்' என்று முதற்கிளந் தோதினர்.

(தொடரும்)

---

# அளவைகள்

[பண்டிதர். ந மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

சமய நூல்களிலே பொருள் உறுதியின் பொருட்டுப் பல வகை அளவைகள் கூறப்பட்டுள்ளன. அளவை என்பதற்கு வடமொழியில் பிரமாணம் என்று பெயர். ஒவ்வொரு சமயத்தினரும் சில பல அளவைகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு தம் தம் கொள்கைகளை நிறுவுவர். ஆகவே அளவையென்பது எல்லா மதத்தினர்க்கும் பொதுவாதல் பெறப்படும். எனினும் சில மதத்தினர் சில அளவைகளை ஒப்புக்கொள்வதில்லை. வேறு சிலர் சில அளவைகளை வரையறுத்துக் கொண்டு பிறவெல்லாம் அவற்றுள் அடங்குமென்று கூறுவர். பொதுவில் இவ்வளவைகளை ஆய்ந்துரைப்போர் அளவை வாதியர் எனப்படுவர். கடைச் சங்கப் புலவருள் ஒருவராகிய மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் இயற்றிய மணிமேகலை யென்னும் தமிழ்க் காப்பியத்தில் சமயக் கணக்கர்தந் திறங்கேட்ட காதை என ஓர் பாட்டு உளது. அதில், பாட்டுடைத் தலைவியும், பௌத்த சமயத்தைச் சார்ந்திருந்தவளுமாகிய மணிமேகலை யென்னும் நங்கை ஓர் மறைமொழியால் முனிவன் உருத்தாங்கிச் சேர மன்னரது வஞ்சிமாநகரத்தையடைந்து, அங்கே பல சமய வாதிகளும் கூடியிருந்த அவையின்கண் புகுந்து, அவரவர் சமயக் கொள்கைகளை யெல்லாம் கேட்டறிந்த வரலாறு கூறப்பட்டுளது. அளவைவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி என்னும் இவர்களுடைய கோட்பாடுகளை அதில் ஒருவாறு காணலாகும். அவருள் அளவைவாதியானவன் காண்டல், கருதல், உவமை, ஆகமம், அருத்தாபத்தி, இயல்பு, ஐதிகம், அபாவம், பாரிசேடம், சம்பவம் என்னும் இப்பத்தளவைகளால் பொருளின் மெய்ம்மையை அறிந்து கொள்ளல் வேண்டும் என்கின்றனன். அளவைகள் பத்துக்குமேலும் கூறுவார் உண்டென்றும், அவையெல்லாம் காண்டல், கருதல், உரை என்னும் மூன்றினுள் அடங்குமென்றும் சைவ நூல்கள் கூறுகின்றன. இதனை,

"அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்பர்
அளவை மேலும் ஒழிபுண்மை ஐதிகத்தோ டியல் பெனான்
களவை காண்பர் அவையிற்றின் மேலுமறைவ ரவை யெல்லாம்
அளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே."

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தால் உணர்க.

இனி, அப் பத்தளவைகளின் இயல்பை இங்கே சுருக்கிக் கூறுவோம். காண்டல் அல்லது காட்சி யளவையானது வட மொழியில் பிரத்தியட்சப் பிரமாணம் எனப்படும். இது ஐந்து வகையினதாகும். கண்ணால் நிறத்தினைக் கண்டும், செவியால் ஓசையைக் கேட்டும், மூக்கால் நாற்றத்தை (மணத்தை) உயிர்த்தும், நாவால் சுவையை உண்டும், மெய்யால் ஊற்றினை (ஸ்பரிசத்தை) உற்றும் இன்பமும் துன்பமும் தடையற உணர்வது காட்சியாகும். இதற்கு உயிர், பொறி, நெஞ்சு என்பன ஊறுபாடின்றியும், ஒளி, பொருள், இடம் என்பன பழுதில்லாமலும் இருத்தல் வேண்டும். பொருளுண்மை அளவு சுட்டலும், ஒன்றை மற்றொன்றாகக் காண்கின்ற திரிதலும், இரண்டுபடக் காண்கின்ற ஐயமும் இன்றி, பொருள், பெயர், வகுப்பு, தன்மை, தொழில் என்னும் வேறுபாடுகள் தோன்றக் காண்பதே மயக்கற்ற காட்சியாகும்.

காட்சியை வாயிற்காட்சி, உளக்காட்சி, தன் நுகர்வுக் (வேதனை) காட்சி, மன ஒருமைக் (யோக) காட்சி என நால் வகைப் படுத்துரைக்கின்றனர் சைவர். வாயிற் காட்சியாவது இந்தியப் பிரத்தியக்ஷம்; அஃது உயிரின் அறிவு கண் முதலிய பொறிகளையும், தீ முதலிய பொருள்களையும், (பூதம்) உருவம் முதலிய தன் புலன்களையும் (தன் மாத்திரை) பற்றி நின்று, ஐயம் திரிபு என்னும் குற்ற மின்றியும், பெயர், இனம் முதலிய வேறுபாடின்றியும் உருவம் முதலிய ஐம்புலன்களை வேறுபாடின்றி அறிவதாம். உளக்காட்சி மானதப் பிரத்தியக்ஷம் எனப்படும். அஃது ஐம்புலன் சார்ந்து அறிந்த வாயிற்காட்சியானது பின் மறத்தலின்றி நெஞ்சத்தால் நினைக்கப் பட்டு, உறுதியாகி அறிவின்கண் வந்து சேரும் நிலையான வுணர்வாம். தன்வேதனைக் காட்சியானது உளக்காட்சிப் பெருமை பற்றி நிகழும் தூய (சத்துவ) தன்மை முதலியவற்றின் விளக்கமாகிய இன்ப துன்பங்கள் உயிரின் உணர்வுக்குப் புலனும்படி வருவதாகும். ஒருமைக் (யோகம்) காட்சியாவது அறிவைத் தடைசெய்து நின்ற அழுக்குகளை எட்டுறுப் பொருமை நிலையால் (அட்டாங்கயோகசமாதி) வாட்டுதல் செய்து ஒரு காலத்தில் ஓரிடத்தில் இருந்தபடியே மூவிடத்தும் முக்காலத்துப் பொருள்களையும் உணர்வதாகும்.

கருதல் அளவை அநுமானப் பிரமாணம் எனப்படும். அது, பொது, எச்சம், முதல் என மூவகைப்படும். கருதல் சாதனத்தால் சாத்தியத்தை உணர்வது. பொதுவான கருதலாவது முதலும் பயனுமான (சாதனசாத்தியம்) சேர்க்கை. அதாவது முறையான உடனிகழ்ச்சி யில்லாதிருந்தும் காட்டின்கண் யானையொலியைக் கேட்டவன் அங்கு யானை உண்டென உணர்தல்

போல்வது. எச்சக் கருதலாவது ஆற்றில் வெள்ளம் வரக்கண்டு மேற்கில் மழை பெய்தமையை அறிதல் போல்வது. இது பயனளவை (காரியாநுமானம்) எனவும் படும். முதல் கருதலாவது கருக்கொண்ட மேகத்தைக்கண்டு மழைபெய்யுமெனச் சொல்லுதல் போல்வது. இது முதலானவை காரணாநுமானம்) எனவும்படும். இம்மூவகை யளவைகளும் முறையே நிகழ்வு, இறப்பு, எதிர்வு என்னும் முக்காலமும் பற்றி நிகழும். கருதலுக்கும் உயிர், மனம், பொறி என்பன ஊறின்றியிருத்தல் வேண்டும். சிவஞான சித்தியார் முதலே (சாதனத்தை) இயல்பு, காரியம், இன்மை (அநுபலத்தி) என மூவகைப் படுத்துக் கொண்டு, எடுத்துக்காட்டுமுறையே மா என்பது மாத்தைக் காட்டலும், புகை அனலைக் காட்டலும், குளிரின்மை பனியின்மையைக் காட்டலும் ஆம் என்று கூறுகிறது. மற்றும் இக்கருதல் தன் பொருட்டுப் பிறர் பொருட்டு எனவும், உடம்பாடு, எதிர்மறை எனவும் பல வகையாகப் பிரிக்கப்படும்; கருதலளவை இன்னும் மிக விரித்துரைக்கற் பாலது; இங்கே சுருக்கப்பட்டது.

உவமை அளவை உபமானப் பிரமாணம் எனப்படும். இஃது ஆவினைப்போலும் கவயமா அல்லது ஆமா (காட்டுப்பசு) என்று ஒன்றை மற்றொன்றனோடு ஒப்புமைப் படுத்திக் கூறுவது.

உரையளவை என்பது சத்தப் பிரமாணம் எனவும் ஆகமப் பிரமாணம் எனவும் கூறப்படும். இஃது அறிவன் நூலால் துறக்க நரகங்கள் உண்டென அறிதல் போல்வது. ஆகம அளவையைத் தந்திரம், மந்திரம், உபதேசம் என மூவகைப் படுத்துக் கூறுகின்றது சிவஞானசித்தி.

அருத்தாபத்தி என்பது தமிழில் பொருள் அளவை எனப்படும். 'எடுத்தமொழி யினஞ் செப்பலு முரித்தே' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற் குறிக்கப் பெற்றுள்ள இனம் செப்புதலே இவ்வளவைக்குப் பொருளாகும். ஆயர்பாடி கங்கையில் இருக்குமென்றால் கங்கைக் கரையில் என்று எண்ணுவதும், கொடுப்பார் உண்டென்றால் கொடாதவரும் உண்டெனக் கருதுவதும் இவ்வளவையாம்.

இயல்பு என்பது யானைமே லிருந்தோன் ஒன்று தா என்றால் பிறிதொன்று தாராது அங்குசத்தைத் தருவது போல்வது.

ஐதிகம் என்பது செவியாறலாக வருகின்ற உலகுரை ஆகும். அஃது இந்த ஆலமரத்தில் பேய் உண்டு என்பது போல்வது.

அபாவம் என்பது இன்மையாகும். அஃது அவ்விடத்து அப்பொருள் இல்லையென்பதாகும். இன்மையில் பலவகையுண்டு. அவை கேட்டுணர்க.

பாரிசேடம் என்பது ஒழிபு எனவும், மீட்சி யளவை எனவும் தமிழிற் கூறப்படும். இராமன் வென்றான் என்றால் இராவணன் தோற்றான் என்று கருதுவது இவ்வளவை யாகும். மூவரில் இருவர் பொய்யரென்றால் ஒருவன் மெய்யன் என்று அறிவதும் இது.

சம்பவம் என்பது உள்ள நெறி எனப்படும். நாராசத்தின் அசைவினைக் கண்டு காந்தம் உளதென அறிவது இவ்வளவை யாகும். 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின்படி காற்று அசையும், தீச்சுடும், நீர் குளிரும் என்பனவெல்லாம் இவ்வளவையாம் என்பர்.

அளவை பத்தும் ஒருவாறு உரைக்கப் பட்டன.

---

# தென்னிந்திய வகுப்பு வரலாறு

[திரு வி. பி. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

(௨௫௭ - ம் பக்கத் தொடர்ச்சி.)

## ௪-வது அதிகாரம்

### வகுப்பு இலக்கணமும் தென்னிந்திய வகுப்பு நிலைமையும்

தென்னிந்தியாவிலுள்ள மக்களுள் ஆரியர் ஓரினத்தாரென்றும் மற்றவர்கள் அவ்வினத்தைச் சேர்ந்தவர்களல்லரென்றும் ஆரியர் ஒழிந்த பல வகுப்புத் தமிழரெல்லாம் ஒரே இனமோவென்பதைப் பின்பு ஆராய்வோமென்றும் அப்படி ஆராயும்போது வகுப்பு இன்னதென்று வரையறுக்கப் படவேண்டுமென்றும் சொல்லியிருந்தேன். ஆதலால் இப்போது வகுப்பின் இலக்கணத்தை ஆராய்வோம். வகுப்பு (1) இயற்கை வகுப்பு, (2) செயற்கை வகுப்பு என்று இரு வகைப்படும். நீண்ட முகமும் நெடுகி நெருங்கிய கொம்பும் தொங்கிய கோசமும் உள்ள ஆலம்பாடி மாடு, பரந்த முகமும் மிக நீளாமலும் நெருங்காமலுமுள்ள கொம்பும் ஒட்டுக் கோசமும் உள்ள காங்கேய நாட்டு மாடுபோன்ற வெவ்வேறான மாட்டு வகுப்புகள் இயற்கை வகுப்புக்கு எடுத்துக்காட்டுகள் (உதார

ணங்கள்). இவ்வாறே மக்களுள்ளும் பல இயற்கைவகுப்புகளுண்டு. தடித்துத் தொங்கு முதடு, சப்பை மூக்கு, பெருத்துப் புடைத்த கன்னம் மோவாயெலும்புகள் முதலிய உருவ அமைப்பு முடைய நிகிரோவரும், சாய்ந்தகண் பரந்து தட்டையான முகம் முதலிய அடையாளமுள்ள சீனரும் வெவ்வேறான இயற்கை வகுப்புகள். இவ்வாறு இயற்கையான மாறுபாடுமில்லாமல் மனிதரால் ஏற்படுத்திய வேறுபாடுடைய வகுப்புகளே செயற்கை வகுப்புகள். ஆனால் தென்னாட்டு ஆரியர் மேலேசொல்லியபடி நெடுங்காலம் தமிழப் பெண்களைப் பல நூற்றாண்டுகளாக மணந்து மிகவுங் கலப்புற்றுத் தமிழரினின்றும் பிரித்தறியக் கூடிய இயற்கை அடையாளங்கள் அனைத்தையும், முற்றும் அல்லது சற்றுக் குறைய முற்றும், இழந்திருக்கின்றனர். தமிழருள் அடங்கிய வேளாளர், மறவர், இடையர், கம்மாளர் முதலிய வகுப்புகள், பல செயற்கை வகுப்புகளாயும், ஒரே இயற்கை வகுப்பாயுமிருக்கின்றனர். பார்ப்பனரிற் சிலர், வேளாளரிற் சிலர், மறவரிற் சிலர், இடையரிற் சிலர், கம்மாளரிற் சிலர், மற்றைய தென்னிந்திய வகுப்புகளொவ்வொன்றிலும் சிலர் ஆகிய இவர்களை ஒரே வகையாகச் சவரம் செய்வித்து, ஒரே விதமாக உடை உடுப்பித்து, ஒரு சேரத் திரட்டினால் அவர்களுள் இன்னார் இன்ன வகுப்பு இன்னார் இன்ன வகுப்பு யென்று 'மனிதநூல்' வல்லாரே பகுத்தறியமாட்டார்கள். சற்றுமுன் நிகிரோவ சீனவகுப்புகளைப் பற்றிக் கூறியபோது, வேண்டுமென்றே அவர்களது நிற வேற்றுமைகளைக் கூறாது விடுத்தேன். நிகிரோவர் கரிய நிறத்தினர். சீனர் மஞ்சள் வண்ணத்தினர். அமெரிக்கா இந்தியரென்ற வகுப்புகள் இவ்விரு வகுப்பினின்று பிரித்துக்காட்டும் உருவ மாறுபாட்டோடு செம்புநிறமு முடையார். இம்மூன்று வகுப்பு மனிதரையும் முன் சொன்னபடி ஒரே வகையாகச் சவரஞ் செய்வித்து உடை உடுப்பித்தலேயன்றி எல்லாருக்கும் ஒரே நிறம் பூசிவிட்டாலும், இவர்களை மிக எளிதாக இன்னின்ன வகுப்பென்று யாவரும் பகுத்தறியக் கூடும். இவ்வாறாக வடிவ வேறுபாடுபற்றி யாராயுங்கால் தமிழரெல்லாம் ஒரே இயற்கை வகுப்பு என்பது தெளிவாகின்றது.

மேலே முதலில் ஆரியர் பிற வகுப்பு மக்களைப் பார்ப்பனராக்கி வந்தனரென்றும் இன்னும் பிற வகுப்பினர் ஆரிய வகுப்பினராவது நின்று விடவில்லை என்றுஞ் சொன்னேன். இது போலவே தமிழருள் முதலில் கீழ் வகுப்புகள் மேல்வகுப்புகளாகி வந்தனரென்பது "கள்ளன் மறவன் கனத்த அகம்படியன் மெள்ள மெள்ளக் கிட்டி வந்து வேளாளனானே" என்ற மூதுரையாலும் இன்னும் கீழ்வகுப்புகள் மேல்வகுப்புகளாகி

வருகின்றனவென்பது பின்வரும் காட்டுகளாலும் விளங்கும். பல 'ஜில்லா'க்களில் பல வகுப்புகளில் செட்டிவகுப்பாரிருக்கிறார்கள். இவர்கள் தொடக்கத்தில் செட்டித் தொழில் செய்ததனால் செட்டிகளானவர்கள். பின்பு அவரவர் தாம் எந்தவகுப்புக்குரியவர்களோ அந்த வகுப்புக்கு மேல்வகுப்புச் செட்டிகளென்று கூறி உரிமை பாராட்டி நாளடைவில் அவ்வாறே பாராட்டப் பட்டிருக்கின்றனர். திருநெல்வேலி'ஜில்லா'வில் சிலசெட்டி வகுப்பாரிருக்கிறார்கள். இவர்கள் தாங்கள் உயர் வகுப்புச் செட்டிகளென்று சொல்லிக்கொள்வதே யல்லாமல் பெரும்பாலும் அவ்வாறே பாராட்டப்பட்டும் இருக்கிறார்கள். இந்தச் செட்டி வகுப்பைச் சான்றார் தங்கள் இனத்தவரேயென்று பல ஏதுக்களால் வெளிப்படுத்துகின்றனர். இச்செட்டி வகுப்பைச் சேர்ந்த பெண்மக்களின் உடைகளும் நகைகளும் சான்றாரப் பெண்மக்களுடைய உடை நகைகளை முற்றும் முன் ஒத்திருந்தனவென்பதும், இன்னும் சிலபாக மொத்திருக்கின்றன வென்பதும், அச்செட்டிப் பெண்களுள் மிக்க வயதுசென்ற பெண்பிள்ளைகளின் உடை நகைகளைச் சான்றாரின் உடை நகைகளோடு ஒத்திட்டு நோக்குவதனாலும் இரு வகுப்பாரிடையே நெடுங்காலம் வாழ்ந்துள்ள கிழவர்களைக் கேட்பதனாலும் விளங்கும். இச்செட்டி வகுப்பார் திருமணமுதலிய நல்ல காலங்களில் செய்யும் பல திருமணச் சடங்குகள் அக்காலங்களில் சான்றார்கள் செய்யும் சடங்குகளை 'முன்னே முற்றும் அல்லது சற்றுக் குறைய முற்றும் ஒத்திருந்தனவென்றும் பெரியோர் கூறுகின்றனர். முன்னிருந்த நடை உடை நகைகள் முதலியவை ஒரு வகுப்பாருள்ளேயே சிறிது காலத்துள் மாறியிருப்பதற்குக் காட்டுகள் பல உண்டு. முதலிமாரென்ற தொண்டைமண்டல வேளாளருள் ஆடவரும் முன் காலத்தில் காது வளர்க்கும் வழக்க முடையராயிருந்தனர். இது மதுரை ஆயிரக்கால் மண்டபத்து முகப்பில் அரியநாயக முதலியார் உருவமாக நிற்கும் சிலையையும் மற்றும் பழைய உருவச் சிலைகளையும் நோக்குவோருக்கு விளங்கும். அவ்வாறு காது வளர்த்த தம் மூதாதையரைப் பார்த்திருந்த நினைப்புடைய கிழவர் சில காலத்துக்கு முன்னிருந்திருக்கின்றனர். இப்போது நமது கண்முன்னே அம்முதலிமார் மற்ற வேளாளர் இவர்களுடைய பெண்பிள்ளைகளில், முதன்மையாக மதுரைக்குத் தெற்கே வாழ்பவர்களில், காது வளர்த்துள்ளோர் பலரிடையே வளராதார் சிலருமிருக்கின்றனர். பின்னவர் தொகை வரவரப் பெருகி வருகின்றது.

(தொடரும்)

---

# வாணி வழிபாட்டுண்மை

[திரு மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B. A.]

புரட்டாசித் திங்கள் 19-ம் நாள் புதன்கிழமையாகிய இன்று வாணி வழிபாட்டுநாள். அதன் உண்மையைச் சிறிதுகூற நான் இறைவன் அருளைத் துணைகொண்டு முயல்கின்றேன். இதினுள்ள குற்றங் குறைகளை அறிவுடையோர் ஏதுக்களுடன் வெளியிடுவார்களாயின், அவர்களுக்கு நான் நன்றி அறிதலுள்ளவனாயிருக்குங் கடப்பாடுடையேன்.

2. உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒருவனே. அவனை விட்டுப் பிரியாது அவனுடனாய் நிற்கும் அருள் 'அம்மை' என்று கூறப்படும். உண்மை நிலையில் கடவுள் சிவன் என்று கூறப்படுவன். அம்மை அவரிடத்தில் ஒடுங்கியிருக்கும்பொழுது, உலகமெலாம் அவரிடம் ஒடுங்கியிருக்கும். சிவம் அம்மையினிடத்தில் ஒடுங்கும்பொழுது உலகம் உண்டாம். சிவம் அம்மையினிடத்தில் ஒடுங்கிப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்கள் செய்யும்பொருட்டு, அம்மையினிடத்திலிருந்து முறையே 'சதாசிவன்' 'மகேசுவரன்' 'உருத்திரன்' 'விஷ்ணு' 'பிரமன்' என்னும் ஐந்து தேவர்களும் ஒருவர் பின் ஒருவராய்த் தோன்றுவர். சிவன் ஐந்தொழில் செய்யும் நிலையில் தலைவன் என்னும் பெயர் பெறுவர். அவர் ஐந்தொழில் செய்யும் நிலையில் 'தடத்தலக்கண' முடையவர் ஆவர். பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் என்னும் நான்கு தேவர்களும் தலைவனுடைய உருவத் திருமேனிகளாம். 'சதாசிவம் அரு உருவத் திருமேனியாம். விந்து, நாதம், சத்தி, சிவம் ஆகிய நான்கும் அருவத் திருமேனியாம். இவ்வாறு தலைவராகிய ஒருவரே ஆன்மாக்களுடைய மலமாயை வினைகளை நீக்கும்பொருட்டு ஐந்தொழில்கள் செய்வதற்காக வேறுபட்ட ஒன்பது திருமேனி வடிவங்களாக நடிப்பர். "நவம் தருபேத மேகநாதனே நடிப்பன் என்பர்" என்பது சிவஞான சித்தியார். சிவபெருமானுக்குப் பிரமன், விஷ்ணு, உருத்திரன் மூவரும் 'போகாங்க' மாவர்; மகேஸ்வரன், சதாசிவன் இரண்டும் அதிகாராங்கமாவர்; விந்து, நாதம், சத்தி, சிவம் நான்கும் லயாங்கமாகும். அருவத் திருமேனிகளாகிய சிவம், சத்தி, நாதம், விந்து நான்குக்கும் மூர்த்திகளில்லை. சிவத்திற்குச் சத்தியும் நாதத்திற்கு விந்துவும் சத்தி பேதங்களாம். சதாசிவ மூர்த்திக்கு மனோன்மனியும், மகேஸ்வரமூர்த்திக்கு மகேசையும், உருத்திரமூர்த்

திக்கு உமையும், விஷ்ணுவுக்கு இலக்குமியும், பிரமனுக்குச் சரஸ்வதியும் சத்தி பேதங்களாம்; சூரியன் ஒருவன்தானே தன்னியல்பில் தன்னை விளக்கும் நிலையில் கதிரோன் எனவும் புறத்திலுள்ளவைகளை விளக்கிப் புறப்பொருள் நோக்கி நிற்கும் நிலையில் கதிர் எனவும் இருதிறப்பட்டு இயைந்து நிற்றல் போலக், கடவுளாகிய அறிவுப்பொருள் ஒன்றே அறிவினளவாய்த் தன்னியல்பில் நிற்கும் நிலையில் சிவம் எனவும் புறப்பொருளை நோக்கி நிற்கும், நிலையில் சத்தி யெனவும் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும்.

3. சிவனிடத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்றுய் ஒன்பது சத்தி பேதங்கள் தோன்றினமையால் இவ்வாறு தோன்றுகிற சத்தியின் பெருக்கமே (Development) 'நவராத்திரி' யாகும். தோன்றுமுறையில் கடைசியாகத் தோன்றிய அம்மை கலைமகளாதலின் ஒன்பதாம் நாள் கலைமகள் வழிபாட்டுநாள் என்று கூறப்படுகின்றது. ஒன்பது நாள்களிலும் கோயில்களில் அம்மை வழிபாடு செய்யப்படுகின்றது. வீடுகளிலும் உள்ளுணர்ச்சியுடன் மனமமையுமாறு ஒன்பது நாட்களும் வழிபாடுசெய்தலே முறையாகும். இப்பொழுது வீடுகளில் கடைசிநாளில் மட்டும் வாணி வழிபாடு செய்யப்படுகின்றது. வாணிதேவி கலைகளுக்கெல்லாம் உரியவள்; தோற்று முறைமையில் கலைமகள் கடைசியில் வந்தாலும், உயிர்கள் தொழில் செய்யும் முறைமையில் யாதாமொரு கலையைப் படித்த பின்பே அக்கலைக்கு உரிய தொழிலை உலகில் செய்ய முடியும். ஆதலின் கலைமகள் விழா நாளில் படித்தல், அல்லது ஒரு தொழில் செய்தல் கூடாது என்னும் வழக்கமும், அந்த நாளுக்கு மறுநாள் தொழிலாளர்கள் தங்கள் தங்கள் தொழிலுக்குரிய கருவிகளைப் பயன்படுத்தல் வேண்டுமென்னும் வழக்கமும் நமது நாட்டில் கையாளப்பட்டு வருகின்றன.

4. உண்மை அறியாதவர்கள் கடவுளுக்கு மனைவி யுண்டா? என்று கூறுகின்றார்கள். மக்களாகிய நமக்கு மனைவி யிருப்பது போலக் கடவுளுக்கு மனைவியுண்டென்று அவர்கள் தங்கள் அறியாமையினால் நினைக்கின்றனர்: ஐந்தொழில் செய்யும் தேவர்களின் சத்திகள் அவர்களுடைய மனைவிகளாக நூல்களில் கூறப்பட்டிருக்கின்றனர். உலகிலுள்ள உயிர்கள் எல்லாம் ஆண் உருவமாயும் பெண் உருவமாயும் விளங்குகின்றன. அந்த உயிர்களெல்லாம் தாம் இருக்கும் இடமாகக்கொண்டு வீற்றிருக்கும் கடவுளும் ஆண் உருவத்திலும் பெண் உருவத்திலும் உயிர்களால் வழிபடப் படுகின்றார். உண்மை நிலையில் கடவுளுக்கு யாதொரு உருவமுமில்லை; ஆண் உருவமுமில்லை; பெண் உருவமுமில்லை; அலி யுருவமுமில்லை. 'தடத்த' நிலை (mani-

fested stage) யில் அவனை உயிர்கள் ஆணாகவும் பெண்ணாகவும் வழிபடுகின்றார்கள்: உலகம் விளங்கும் நிலையிலே கடவுளை வணங்குதலே பொருத்தமுடைய வழிபாடு ஆகும். திருமூலர் திருமந்திரத்திலே "பைங்கொடி யாளும் பரம னிருந்திடத், திண்கொடி யாகத் திகழ்தருசோதியாம், விண்கொடி யாகி விளங்கி வருதலால், பெண்கொடி யாக நடந்த துலகே" என்று கூறி யருளினார்.

சிவத்தினிடத்து இரண்டற்றிருக்கிற அம்மை பராசத்தி என்று கூறப்படும், அவ்வம்மை மாயையிற் சேர்ந்து ஐந்தொழில் செய்யும் நிலையில் ஆதி சத்தி அல்லது திரோதான சத்தி என்று கூறப்படும், ஆதி சத்தியானது இச்சாசத்தி, கிரியா சத்தி, ஞானசத்தி என மூலவகைப்படும். கடவுளானவர் மேலே கூறிய சதாசிவமூர்த்தி முதலிய ஐந்து தேவர்களையும் உண்டாக்கி நின்று பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்திகளைத் துணையாகக்கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் செய்தருளுகின்றார். அம்மை ஒன்றுதானே தொழில் வேறுபாட்டால் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என ஐந்து வகைப்படுகின்றது. தீயின் சத்தி ஒன்று தானே சுடுதல், அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி, அடுஞ்சத்தி முதலிய சத்திகளாயினாற்போல, இந்த ஐந்து சத்திகளும் மேலே கூறியவாறு சிவ வேறுபாடுகளுக்குரிய கலைமகள் திருமகள் மலைமகள் மகேஸ்வரி, மனோன்மனி, விந்து எனச் சத்தி எழுவகைச் சத்திகளாகக் கூறப்படும். உலகமே அம்மையினுடைய விளக்கம் (The world is the expression of Gods' energy). உலகில் பலவாறாகக் காணப்படும் ஆற்றல்கள் எல்லாம் கடவுளினது ஆற்றலின் (சத்தியின்) கூறு என்று நாம் அறிதல்வேண்டும். ஒரு சத்திதானே தொழில் வேறுபாட்டினாலும், தொழிற்படும் 'தத்துவ' ங்களின் வேறுபாட்டினாலும் பலவாறாக நாம் காண்கின்றோம். தூல உலகில் விளங்குகின்ற மின்சார ஆற்றல், காந்த ஆற்றல், ஒளி, வெப்பம், முதலியன கடவுளது சத்தியின் கூறுகளேயாகும். மக்கள் உயிர்களிடத்திலும், பிற உயிர்களிடத்திலும் விளங்கும் அருள் வேறுபாடுகளும் (சத்தி வேறுபாடுகளும்) கடவுளது சத்திக்கூறு ஆகும். மக்களுக்குக் கீழ்ப்பட்ட உயிர்கள் தங்களிடத்துள்ள (சத்தி) ஆற்றலைக்கொண்டு கடவுளுடைய கருத்து என்னவென்றும் அக்கருத்துப்படி தாங்கள் எப்படி நடக்கவேண்டும் என்றும் அறியும் பகுத்தறிவுடையவைகள் அல்ல. மக்களாகிய நாம் பகுத்தறிவுடையவர்களாதலின் கடவுளுடைய கருத்துக்கு இணங்க நம்முடைய கருத்துக்களைப் பயன்படுத்துதல்வேண்டும். கடவு

ளுடைய கருத்தானது உலகில் எல்லா வுயிர்களும் வாழ்ந்து மேலுக்குமேல் பலவழியினும் முன்னேற்றம் அடைதல் வேண்டும் என்பதுதான். அதனைக் கருதி எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமலிருத்தற்கும், இயன்ற அளவில் பிறவுயிர்களுக்கு நன்மை செய்தற்கும் மக்களாகிய நாம் கடவுளாற் கொடுக்கப்பட்ட நம்மிடத்துள்ள ஆற்றலைப் பயன்படுத்தி ஒழுகல்வேண்டும் என்னும் உண்மையே வாணி வழிபாட்டு உண்மையால் நாம் அறிந்த மேலான உண்மையாகும். இதனை யறிந்து கடவுள் அருளால் யாவரும் ஒழுகுவார்களாக.

---

# திருவள்ளுவர்

# ஒரு மரநூல் பேராசிரியர்

## (Thiruvalluvar - a great Botanist)

[ஒட்டப்பிடாரம் திரு. அ. மா. முத்தைய நாட்டாரவர்கள்]

### முன்னுரை

பல்லுயிர் உண்மையறிந்துய்ய, திருவள்ளுவரருளிய திருக்குறளுக்குப் பண்டைக்காலமே புலவர் பதின்மர் உரையருளியுள்ளார்கள். அவைகளில் பரிமேலழகருரையே, இன்று எவராலும் பயிலப்பட்டு வருகிறது. இவ்வுரைகளையன்றியும், பிற்காலத்தில் பல புலவர்கள், குறளின் நூற்பெருமையையும், நூல்நுதலிய பொருளையும் வியந்தும், விரித்தும் பலவாராய்ச்சிகளால் வெளியிட்டிருக்கிறார்கள். தற்காலம் தமிழ்மொழியில் வெளிவரும் வெளியீடெல்லாம், இடையறாது குறளாராய்ச்சி செய்து, முன்னுரையைக் கண்டித்துப் புத்துரை விளக்கியும், விரித்தும் வருகின்றன. இவையனைத்து மாராயுங்கால், திருக்குறளுக்குச் செய்த உரைகளனைத்தும், அன்றி எது ஒன்றும் என்றும் முற்றுரையாகாமையும், திருவள்ளுவர் போன்ற முழுதுணர்ந்த ஒருவரே, முற்றுரை காண்பிக்க முடியுமென்பதும், பெறப்படுகின்றன. என்னை? எவராலும் பயின்று வருகிற பரிமேலழகருரையை அரசஞ்சண்முகனர், சுவாமி வேதாசலம் முதலியோர்கள் மறுத்திருப்பதைக் காண்கின்றேமாதலால் அன்றியும், நுண்ணூல்களின் (Sciences) ஆழ்ந்த கருத்துக்கள் அமையப்பெற்ற சில குறள்களுக்குப் பரிமேலழகருரைப் பொருத்தமின்மை மிகவும் வெளிப்படை. அவைகளை யாங்காங்கு விளக்குதும். ஆதலால் குறள் பயிலுமொருவர் இவ்வுரைகளைத்

துணைக் கருவியாகக்கொண்டு, குறளின் பெருமையையும், பொருளையும் தன்னறிவா லறிந்துணர வேண்டுமேயன்றி, இவ்வுரைகளையே உண்மையாகக் கொள்ளக்கூடாது. அங்ஙனம் கொளின்; பலகுருடர்கள் யானையின் பல்லங்கங்களைத் தனித்துக் கண்டு, யானையென வியந்ததுபோலாகும்.

இனிக் குறள் பொருளின் மாறுபாடு மட்டுமன்றி, உரையாசிரியர் பலரும், அதிகாரமுறையிலும், பாமுறையிலும், மாறுபட்டுத் தங்களறிவுக்கு ஏற்றவாறு முறைப்படுத்தியும், அங்ஙன முறைப்படுத்தியதற்கு வேண்டிய ஏதுக்களும் கூறுவாராயினர். ஆகவே கொள்ளக்கிடப்பது என்னையெனில், குறளின் அதிகாரமுறையும், பாமுறையும் திருவள்ளுவர் வகுத்தவண்ணம், இப்பொழுது காணப்படவில்லையென்பதும், பிற்காலத்தார் தங்களறிவிற்குத் தோன்றியவாறு முறை செய்திருக்கிறார்களென்பதும், ஆதலால் இவைகளும் கற்போன் தன் அறிவாலறிந்து உணர்ந்து கொள்ளவேண்டிய ஆராய்ச்சியிலொன்று என்பதும் பெறப்படுகின்றன.

மேற்காட்டிய பல்வேறு ஆராய்ச்சியாலு முரையாலும், குறளில் கண்ட விலக்கண அமைதியும், இலக்கியச் சுவையும் பல்பொருள் விரிவும், விளக்கிச் சென்றனர்களேயன்றித், திருவள்ளுவர் கண்ட நுண்ணூலாராய்ச்சி முடிவுகளைத் தற்கால நுண்ணூலாராய்ச்சி கொண்டு விளக்கியதொன்றும், வெளிவந்ததாகக் காணப்படவில்லை. உண்மைப்பொருளெல்லாவற்றிற்கும் முதற்பொருளொன்றை ஆராயச் சென்ற வகையில் இவ்வாராய்ச்சி வேண்டற்பாற்றன்றென விடுத்தனர்போலும். அதனாலேயே, மேனாட்டு மொழியில் பயிலும் நம் தமிழ் மக்களிற் பலர், நம்மினிய தமிழில், நுண்ணூற்கிசைந்த வாராய்ச்சியில்லையென்றும், நுண்ணூற்கிசைந்த பொருளும் அவைகளை விளக்கு மொழிகளு மில்லையென்றும் வெகுண்டு, தமக் கிசைந்தவாறு வடமொழியையும், ஆங்கிலத்தையும் உள்ளவாறே தமிழில் வரைந்து இடர்ப்படுகின்றனர். இடையறாது நுண்ணூற்கிசைந்த மொழிகள் தமிழில் மலிந்துண்டென விளம்பும் சுவாமி வேதாசலம்மொழியை மறந்தனர்போலும்.

நிற்க, இப்பொழுது நுண்ணூல்களாராய்ச்சி, பல துறைகளில் மிகவிரிந்தும் மிகவிளங்கியும் வருவதை யாருமறிவர். அதற்கேற்ப, நம் தமிழ் மொழியில் நுண்ணூல்களாராய்ச்சியும், நம் தமிழ்மக்களால் நாளு மாராயப்படாதது மிகவும் வருந்தத் தக்கதே. நம் பண்டைத் தமிழ்மக்கள் கண்ட நுண்ணூலா

ராய்ச்சிகளின் முடிபுகள், புராணகாலமாகிய பிற்காலத்தில், விளக்கமுறாது நசித்துவருவதைக் கண்டும், மேல் தொடர்ந்து விளக்கிக் காட்டாதது பெருங் குறையேயாகும். இவ்வகையில், நம் தமிழன்னைக்குப் பிற்காலத் தமிழ்மக்கள் செய்தவிடர் என்றும் துன்புறுத்துவதேயாம்.

நம் திருவள்ளுவர் குறளை நான் ஒருசமயம் பரிமேலழகருரை கொண்டு பயிலுங்கால், அவைகளில் சில நுண்ணூல்களினுண்மைகள் மிகத் தெளிவாகவும் ஆழ்ந்த கருத்துடனும் தோன்றினமையின், அவைகளை ஒருவாறு இக்கட்டுரையில் வெளியிடுவான் துணிந்தனன். நுண்ணூலாராய்ச்சியாக, முறையன்றிப் பல்லிடங்களில் சிதைந்து காணப்படும் பல வுண்மைகளை ஒருங்கு கூட்டிச் செல்லுங்கால், குற்றமுறின், அவையனைத்தும் எனதேயெனக் களைந்து உண்மையுறின் திருவள்ளுவர் மரநூலாராய்ச்சியின் பெருமை யென உணர்ந்து மிகவும் வியப்பீராகவும்.

## பல்லுயிர் முறை விளக்கம். (Classification.)

சிறப்புவகையான், மக்கட்கு ஓர் அறநூல் வயங்க அருளுற்ற திருவள்ளுவர், உயிர்ப்பெருங்கடலில் செய்தொழில் வேற்றுமையால் பல்வேறுக் காணுறும் எல்லாவுயிர்க்குமுள்ள தொடர்பையும், உயிரனைத்தும் தோன்றும் ஆற்றலையும், அதனாலாம் நிகழ்ச்சியுணர்ச்சிகளையும், வினையாலாம் பிறப்பையும், முறையே தெள்ளிதினாராய்ந்து, அவற்றின் முடிபின் முறைகொண்டு, இந்நூலியற்றுவாரானார். பல்விலங்குகளில் காணுறும் பிறப்பு முறையும், விளக்கும் நூல்கள், நுண்ணூல்களெனப்படும்பொழுது, மக்கட் பிறப்பிற் காணுறும், சிறப்பனைத்தையும் விளக்குமிந்நூல் நுண்ணூலாகாமாறென்னை ? நம்மாராய்ச்சிக் குறைவேயன்றி வேறல்ல. நுண்ணூல்களனைத்து முண்மையறிய வாராய்ந்து வரும் நூல்களாதலின், அவையனைத்தும் ஒரு பெரும் முடிபிற்கே வருதல் வேண்டுமென்பது ஒரு பெற்றியாம். அதனாலன்றே, தற்கால நுண்ணூலாராய்ச்சிக்காரர்கள் ஒரு துறைபிற் கண்ட வுண்மையைப், பல்துறைகளிலும் பொருத்தி விளக்க முயலுகின்றார்கள். (Comparative study) அங்ஙனம் பொருந்தி வெளிவரு முண்மையே திடனுறுகின்றது. இப்பெற்றி இக்கால நுண்ணூற் புலவர்கள்பால், மிகுந்துறக்கண்ட நம் தமிழ் மக்கள், மிகுந்து வியப்புறுவாராவர். இப்பெற்றிப் புகழுடையாராய்ச்சி யொன்றை விளக்குமுறையில், யாவராலும் நன்கு மதிக்கப்படுவதொன்றேயாயினும், அம்முறை நம் தமிழ்மக்கள் பால் மிக்கு விளங்கியதென்பது, பண்டைத் தமிழ்நூல் கற்பார்

யாருக்கும் நன்கு வெளியாகும். இம்முறை நம்மருமைத் திரு வாசகத்திலும், கோவையாரிலும், குறளிலுமலிந்து காணப்படு கின்றது. ஒருதுறையி லாராயுங்கால், 'நம்மரிய சிவஞான போதம்' நுண்ணூல்களி லுண்மையாராயும் நூலென்றே (Philosophy of Sciences) பெறப்படுகின்றது.

நிற்க, மக்கள் நூலியற்றிய வாசிரியர், மக்களுமோர் விலங் கெனவே கண்டனர். ஆயினும், செய்தொழின் வேற்றுமை யாற் சிறப்பற்ற வோர் விலங்குத் தொகுப்பெனக் கண்டனர். மக்களுக்கும் மற்றைய விலங்குகளுக்குமுள்ள தொடர்பை நுண்ணூலாராய்ச்சியால் முறைசெய்தனர். இங்ஙனம் விலங்கு வகுப்புக் கண்டவாசிரியர், இவையினின்றும், மிக வேறுபட்டுக் காணுறுமவைகள், மரவுயிர்த் தொகுப்பெனக் கண்டனர். இவ் வுண்மையை நான் எழுதும் திருவள்ளுவர் ஓர் உயர் வகுப்புப் பேராசிரியர் என்ற கட்டுரையுள் காண்க. (Thiruvalluvar-a great Biologist). ஆகவே, கடல்போலும் பல்லுயிர்ப் பெருந் தொகுப்பை, இரண்டு பெரும் வகுப்புகளாக முறைசெய்து, அவற்றில் மரவுயிர் ஒரு பெரும் வகுப்பென்றும், விலங்குயிர் ஓர் பெரும் வகுப்பென்றும் கொண்டு இவ்விரண்டு பெரும் வகுப் பினுள் கண்ட தொடர்பையும், அவைகளின் ஒற்றுமை வேற் றுமை நிகழ்ச்சி யுணர்ச்சிகளையும், மிக நுண்ணிய அரிய வுவமை ஆராய்ச்சியால் விளக்குவாரானார். இங்ஙன மிரண்டுயிர்ப்பெரும் வகுப்புகளையும் அவைகளின் ஒற்றுமை வேற்றுமைகளையும் நம் தமிழ்மொழி கொண்டு ஆராயுமாற்றல் திருவள்ளுவர் போன்ற செந்நாப்புலவர்க்கன்றி, மற்றையோரா வியலாதென்பது திண்ணம்.

(தொடரும்,)

---

# ஓங்காரமும் தமிழும்

[ஈரோடு, திருவாளர் S. D. சுப்பிரமணியமவர்கள்]

மக்கட்கு மிக்க பயன்றரும் உறுதிப் பெருமொழிகள் பல வற்றுள்ளும் 'ஓம்' என்னும் மறைமொழி* தலைசிறந்து விளங்கு கின்றது. இமயமுதற் குமரிவரை இந்து சமயத்தைச் சார்ந்தோர் எவரும் இப் பெருமொழியை ஒதுக்கத் துணியார். நம் மக்கள் பேசும் பலவகை மொழிகளிலும் இவ்வொலி அவ்வம் மொழி களின் வரிவடிவில் போற்றப்படுகிறது. 'நான் மந்திரங்களில் 'ஓம்'† என்று கண்ணன் கீதையிற் சொல்லுகின்றான். 'எல்லா மறை

---

* கீதை ம அத்ய, உகு சுலோகம். †மந்திரம்

களும் எம்முடிவைக் குறிக்கின்றனவோ, எல்லாத் தவங்களும் எப்பயனை நாடுகின்றனவோ மாணிகள்* எதற்காக விரதங் காக்கின்றனரோ, அதை நான் உனக்கு மிகச் சுருக்கமாகக் கூறுகின்றேன். அது ஓம்'என்று †கதோ உபநிடதங் கூறுகின்றது. 'உய்ய வென்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா' என்று மணிவாசகரும் 'ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே' என்று திருமூலரும், கூறுவது மேற்சொன்ன கருத்துக்களை யொட்டியே தான். இத்தகைய அருண் மொழியின் தோற்றமும், வரலாறும், பொருளும் அறிய வேண்டுவது ஒவ்வொருவரின் தலையாய கடமைகளில் ஒன்று. எற்றுக்கோ எனின்; நம் வீடு பேற்றிற்கே. வெறும் மொழியைப் பொருளறியாது போற்றுதல் உயிரற்ற உடலை ஊரூட்டிப் பேணுதலை யொக்கும். ஒரு மொழியின் பொருளை அதன் தோற்றமும், வரலாறுங் கண்டு துணிதல் போன்று அவ்வளவு துணிவாக மற்ற வகைகளில் துணிதல் அரிது. ஆகலான் இப்பெரும் மறைமொழியின் தோற்றமும் வரலாறும் ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

இதுகாலை நம் தமிழ் நாட்டுள் 'ஓம்' என்னும் மறைமொழியைப் பற்றிய இருபெருங் கொள்கைகள் நிலவுகின்றன. ஒன்று அஃது ஆரியத்தினின்று பிறந்தது என்றும்,மற்றொன்று தமிழின் வழிவந்தது என்றுமே. முன்னையது முற்காலத்தி னின்றே மிக்குப் பயில்வது. பின்னையது இக்காலக் கோட்பாடு. முன்னையது சமய நூல் வழியால் தெளிவது. பின்னையது மொழி நூலோர் ஆராய்ச்சி. இவற்றுள் எது தப்பு? எது ஒப்பு? என்று உடனே சொல்ல முடியாது. அஃது ஆராய்ச்சி முறைக்கு ஒத்தது மல்ல. இனி இதைப் பற்றிய எளியேனது சிற்றுரைகள் சிலவற்றை எழுதுகின்றேன்.

என்னை இக் கட்டுரை யெழுதத் தூண்டியது யாதெனின், திருவாளர் திரிசிரபுரம் திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் 'திரு நான்மறை விளக்க ஆராய்ச்சி' யென்று திருவாளர் கா. சுப்பிரமணியப் பிள்ளை (எம். ஏ., எம். எல். அட்வகேட்) யவர்களது 'திரு நான்மறை விளக்கம்' என்ற செந்தமிழ்ச் செல்விக் கட்டுரையை மறுத்தெழுதிய நூலேயாகும். ஆகவே இவ் விருவோரது வாதங்களையும் பற்றி ஒரு சிறிது கூறிவிட்டு மேற் செல்லல் நலம் என்று நினைக்கின்றேன். நான் முதற்கண் திருநான்மறை விளக்க ஆராய்ச்சி வழியைப் படிக்குங்கால் ‡கா. சு. காட்டிய கொள்கைகளுக்கு மறுப்புரைகளைக் கண்டோமேயன்றி வேறு வகையில்

---

* பிரம்மசாரி. † கதோ உபநிஷத், உ-ம் வல்லி கசு சுலோகம்.

‡ கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்.

தங் கொள்கைகளை நிலை நாட்டுவான் புதிதாக ஒன்று கூறியிருப்பதாக அடியேன் காணவில்லை. அன்றியும் மொழி நூலையும், சித்தர் நூல்களையும் இழி பூட்டும் வகையில், அல்லவெனில் சிறிது தாழ்வாகவோ கூறுவது போன்ற சில பகுதிகள் அடியேன் சிற்றறிவிற் கெட்டின. எடுத்துக் காட்டாக (தி. வி. ஆ. கசுசு. பக்கம் உஅ. வரி முதல் ௩சு வரை). 'கிற்க, மொழிநூல் முறைக்கு முரணுகின்றது என்றார். மொழிநூல் என்பது யாது? எப்போழ்து யாரால் உண்டாக்கப் பட்டது? அந்நூலை எதற்காக அந்நூலாசிரியர் எழுதினர்? என்பவற்றை ஆராயு மிடத்துச் சில ஆண்டுகட்கு முன்னர் சைதாப்பேட்டையிலிருந்த திருவாளர் மாசுறல். கார்த்திகேய முதலியாரென்பவர் தமிழ் மொழியே முதலாயுள்ளது: அதனிட மிருந்து வடமொழி யுண்டாயது எனும் ஒரு நவீனக் கொள்கையை நிலைப்படுத்த எழுதிய நூல் அஃது எனத் தெரிய வருகின்றது' என்று தி. மா. சா. எழுதியுள்ளார். இதைப்பற்றிய ஒரே ஒருமொழி. மொழிநூல் என்பது இது மாத்திரமல்ல. மேற்சொன்ன மொழிநூல் மொழிநூனெறியில் தமிழ் மொழியைப் பற்றி ஆராயும் ஒரு நூல் ஆகுமல்லாது அது ஒரு பொது மொழிநூலன்று. மொழிநூல் (Philology) என்பது பல் வேறு மொழிகளையும், ஒலிகளையும் ஆராயும் இலக்கணங் கூறுவது. அவ் விலக்கணங்களின் வழிமேற்சொன்ன நூல் ஆராயப்பட்டுள்ளதால் அஃது அப்பெயர் பெற்றது, அற்றன்றி வேறில்லை. யாம் எமது படிப்பறையிலிருந்த ஆங்கில அகராதியில் (Philology) மொழி நூலுக்குப் பொருள் தேடியபோது. (Science of origin and history of language) 'மொழிகளின் பிறப்பும் வரலாறும் பயிலும் நூல்' என்று இருக்கக் கண்டோம். ஆகலான் மொழிநூல் என்பது மேற்சொன்ன ஒரு புத்தகந்தான் என்ற குறுகிய எண்ணம் ஒழிக்கற்பாலது. பின்னும் நமது 'ஆராய்ச்சி' யுடையார் (தி. வி. ஆ. கசுசு. ஆம் பக்கம் உச வரி முதல். உசு வரை) 'ஒலிநூல் உடையார்க்கு எழுத்துக்கள் சுத்தமாயா காரியமென்பது உடன்பாடன்மையின், 'சுத்த மாயையினின்றும் விருத்தியாகி அகார, உகார, மகார விந்து நாதரூபமாகிய சூக்கும பஞ்சாக்கரங்களின் சமட்டி ரூபமாகிய பிரணவத் தோற்றத்திற்கு ஒலிநூலைப் பிரமாணமாகக் கோடல் சைவசித்திகளாயினார்க்கு அடாத செய்கையாம்' என்று எழுதி யுள்ளார். 'சித்திக' ளென்பது சித்தாந்திகளென்று இருக்கவேண்டுமென்று நினைக்கின்றேன். அஃது அச்சுப் பிழையாக இருக்கலாம். இனி 'ஒலி நூலுடையார்க்கு எழுத்துக்களெல்லாம் 'சுத்த மாயாகாரிய' மென்பது உடன்பாடன்மையின்' என்று கூறுகின்றார். எவ்வொலி நூலில் இவ்வாறு கூறியுள்ளது என்று என்னறிவுக்கு எட்டவில்லை. ஒலிநூலும் மொழி

னூலும் ஒன்றே. அவைகள் 'சுத்தமாயையைப்' பற்றியும் 'அசுத்த மாயை'யைப் பற்றியும் கூறுவதைக் கண்டிலேன். ஒருவேளை மாகறல் முதலியார் னூலுள் கூறப்பட்டிருக்கின்றதோ என்னவோ? அடியேன் அந்நூல் பயின்று நீண்ட நாட்களாய் விட்டமையால் அறியேன். எவ்வாறாயினும், மொழிநூ லல்லது ஒலி நூல் 'சுத்த மாயை'யினின்று ஒலிகள் பிறப்பதைக் கண்டிப்பதை மாத்திரம் நான் இதுவரை கண்டதுமில்லை கேட்டதுமில்லை. மொழிநூல் அல்லது ஒலிநூல் செய்யும் ஆராய்ச்சிகளெல்லாம் பல்வேறு வகைப்பட்ட மொழிகளையும் ஒலிகளையும் அவற்றிற்கு உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும், ஒருமொழிக்கும், மொழியாளர்க்கும், மொழி பயிலிடத்திற்கும், மொழி யொலிகட்கும் உள்ள உறவு, பிரிவு, ஒப்பு முதலியவைகளையும் சில முடிவான மொழி யுண்மைகளால் ஆராய்வதே யன்றி வேறில்லை. ஆகலான் இதைச் சைவர்கள் கொள்ளத் தக்கதல்ல என்று கூறுவது எவ்வாற்றானும் அடாது. அன்றியும் இதைக் கொள்ளோமாயின் வேறு இத்தகைய மொழி யாராய்ச்சி யிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. மற்றும் 'சுத்த மாயை'யினின்றும் 'ஓம்' ஒலி உண்டாயிற்று என்பதை மறுக்கவோ அல்லது திருத்தவோ இப்போழ்து வாதமில்லை. இப்போது நமக்கு வேண்டுவதெல்லாம் 'சுத்தமாயை'யினின்றும் ஓம் தோன்றியதோ அல்லவோ அதைப்பற்றி யக்கரையில்லை, அவ்வொலி வரிவடிவமுங் கொண்டு எம்மொழியில் முதலில் பயிலப்பட்டது என்பதே. இதற்குச் சமய நூலாகிய 'சுத்த மாயா அசுத்தமாயா தத்துவ'ங்களின் ஆராய்ச்சியைக் காட்டிலும் மொழிநூ லாராய்ச்சியே மிகவும் வேண்டற்பாலது என்பதை இங்குக் குறிப்பிட விரும்புகின்றேன். (தொடரும்)

---

# குருடும் செவிடும்

[திரு. S. வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் B. A.]

குருடரைக்கண்டால் நாம் எப்பொழுதும் இரங்குகிறோம். செவிடரிடத்தில் பொதுவாய் நமக்குச் சினம் உண்டாகின்றது. ஆனால் உண்மையில் அவர்களுள் எவர் நம் இரக்கத்திற்கு உரியவர்கள்? நமக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணுகின்ற சூரிய வெளிச்சம் போன்ற நூற்றுக்கணக்கான இயற்கைப் புதுமைகளை நுகர இயலாத குருடரைக் கண்டு நாம் மனம் இரங்குவது இயல்பே. உலக வேலைகள் பலவற்றுள்ளும் மற்றவரைப்போல உழைக்க இயலாமல் திண்டாடித் தத்தளிக்கும் குருடரைக் கண்

டால் எவர்க்குத் தான் மனம் இரங்காது? ஆனால் செவிடரின் உறுப்புக்குறை நமது கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அவர்கள் யாதொரு குறையுமில்லாத மற்ற மனிதரைப்போலவே தோன்று கின்றனர். ஆதலால் அவர்களிடத்து நாம் காட்ட வேண்டிய அளவு இரக்கங்காட்டுவதுமில்லை. காட்டக்கூடுவதுமில்லை.

கண்ணை விடக் காதே மனிதருக்கு மிகவும் முக்கியமான உறுப்பு. வெளிச்சத்தில் தான் கண்ணுக்கு வேலையுண்டு. காதோ வெளிச்சத்திலும் வேலை செய்யும் இருட்டிலும் வேலை செய்யும். கண்ணால் எச்சரிக்கக்கூடாத சமயத்தில் காது எச்சரிக்கை செய்யும். இன்னும், காதே மிகவும் ஐயமகற்றித் துணியத்தக்க உறுப்பு. ஒரு கயிறு ஒரு பாம்புபோல் தோன்றலாம். வெளிச்சத்தின் ஏற்பாட்டால் கண் ஏமாறக்கூடும். ஆனால் காது அவ்வளவு சுலபமாய் ஏமாறாது. ஒரு தெருவின் திருப்பத்திற்கு அப்பால் கண்பார்க்கமுடியாது. காது கேட்கக்கூடும். உண்மையாய்ப்பார்த்தால், காதைக்கேட்காமல் இருக்கச்செய்யமுடியாது.

ஒருவன் தன் கண்களை இழந்துவிட்டால் மற்றப் பொறிகளின் வேலை அதிக மும்முரமாகும். காது, மூக்கு, உடம்பு இம்மூன்றும் தத்தம் வேலையை மிகுந்த கருத்துடனும் நுட்பமுடனும் செய்யும். நினைவாற்றல், மனத்தை ஒரு வழி நிறுத்தும் வன்மை ஆகிய இவையும் மேம்படும். உண்மையில், கண் மிகவும் தொல்லை தருவதொரு பொறியாகும். நம் நினைவை அது பல வழிகளிலும் சிதறச்செய்து, நமக்குக்கொடுக்கிற அறிவை விட மிகுதியான அறிவைப் போக்கடிக்கும். ஆனால் அது கண்ணின் குற்றம் ஆகாது. அதைத் தக்கவழியில் பயன்படுத்தத் தெரியாத உடையவன் குற்றமே என்று சொல்லலாம். அஃது உண்மையே. ஆனால் ஒருவனுக்குக் காது கேளாவிட்டாலோ, அவனுக்கு ஒருவித நன்மையும் ஏற்படாது. குருடரில் பலபேர் நலமாய் வாழ்தல் வழிவழியாய் நாம் கேட்டறிந்ததொன்று. இவர்கள் தம்மைச்சுற்றி நடக்கும் ஒவ்வொன்றையும் கேட்டறிந்து கொள்வார்கள். சுழித்த முகமும் வலித்த முகமும் அவர்களுக்குத் தென்படா. இன்னும், அவர்களுக்குச் செவியின் தொழில் அதிக நுட்பமாவதால் மற்ற மனிதரைவிட அவர்கள் இசைக் கல்வியில் மிகவும் தேர்ந்தவராகிறார்கள். பல இனத்தாருள்ளும் பல இடங்களிலும் இருபாலாரிலும் குருட்டுப் பாடகர்கள் இருப்பதைப்பற்றி நாம் கேட்டிருக்கிறோம். அவர்களில் சிலரை நாம் பார்த்தும் இருக்கக்கூடும். இசையால் உண்டாகும் இன்பமே குருடரின் குருட்டுத் தன்மைக்கு ஒரு மாற்றுப் பொருளாகும். இதனோடு அரைச்செவிடன் ஒருவனுடைய முகத்தில் தோன்றும் வருத்தக் குறியையும் சினக்குறியையும் நோக்குங்

கள்! அவன் பக்கத்தில் இருப்பவரின் உதட்டசைவால் அவர் பேசுவதைப் பார்க்கிறான். ஆனால் அவனுக்கு ஒரு மொழியும் கேட்கக்கூடவில்லை. என்ன செய்வான்! மனம் புழுங்குகின்றது. இல்லாத ஐயமெல்லாம் உண்டாகின்றன. அரைகுறையாய்க் காதில் விழுந்த சொற்களும் பேச்சுகளும் பலவகையான மன வருத்தங்களுக்கும் தவறுதல்களுக்கும் ஏதுவாய் முடிகின்றன. (முதன்மையாய்) அரைச் செவிடருக்கே இவ்விதம் ஏற்படும்.

குருடரில் பலர் தமது நினைப்பாற்றலாலும் அறிவின் வளர்ச்சியாலும் பெரிய கல்விமான்களெனப் பேரெடுத்திருக்கிறார்கள். சில வாண்டுகளுக்கு முன்னர் ஸ்மித் என்ற ஒருவர் ஆக்ஸ்போர்டு எம். ஏ ஆராய்ச்சியில் மிகவும் சிறப்புடன் தேறினார். அவர் பிறவிக்குருடர். பாஸெட் என்பவர் எங்கிலந்தில் 'போஸ்டு மாஸ்டர் ஜெனரல்' என்ற ஒரு பெரிய பொறுப்புள்ள அலுவலை மிகவும் திறமையுடன் செய்து வந்தார். அவரும் குருடரே. நமது செந்தமிழ் நாட்டிலும் குருடர்கள் பலர் புலவர் பெருமான்களாய் விளங்கியிருக்கின்றனர். 'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று புலவர் ஒருவரால் சிறப்பித்துக் கூறப்பட்ட இரட்டையரில் ஒருவர் குருடர் என்பதை அறியாத தமிழ் மகன் யாவன்? சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் கல்வியிலும் மிகச் சிறந்து யாழ் வாசிப்பதிலும் மிகத் தேர்ந்து பல நூல்களும் இயற்றித் தமிழ் நாட்டைச் செழுமை செய்த வீரராகவ முதலியார் பிறவிக்குருடர் என்பதும், அதனால் அவர் பெயர் 'அந்தகக்கவி' என்ற அடைமொழியோடு சேர்ந்து வழங்கலாயிற்று என்பதும் யாவரே அறியாதார்? இன்னும், நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் நமது நாட்டில் கற்றோராலும் மற்றோராலும் பெருமை படுத்தப்பட்டுக் 'கவிச் சிங்க நாவலர்' என்ற பட்டமும் பெற்று விளங்கிவந்த புலவர் பெருமான் தமது மூன்றாம் ஆண்டிலேயே அம்மை நோயினால் முக்கண் இழந்தவர் என்பது நாம் யாவரும் கேட்டறிந்ததாகும். ஆனால் செவிடர்கள் தங்கள் அறிவினால் மேன்மை அடைதல் மிகவும் அரிது. அரைச் செவிடர் பலர் உயர்ந்த நிலையில் இருப்பதைக் கண்டும் இருக்கிறோம் கேட்டும் இருக்கிறோம். ஆனால் அவரெல்லாம் மிகவும் வருத்தத்துடனேயே தத்தம் தொழிலைச் செய்யக்கூடும். அவர்களின் கீழ் இருந்து வேலை செய்பவர்களின் பாடும் மிகவும் வருத்தமாகத்தான் முடியும். முழுச்செவிடர்க்கோ ஒன்றுமே முடியாது. அவர்களுககு எப்பொழுதும் தங்கள்மேல் மன வெறுப்பும் பிறர் மேல் ஐயப்பாடும் இருந்து கொண்டேயிருககும். ஒரு வேலையிலும் இன்பம் தோன்றாது. அவர் வாழ்நாள் கீழ்நாளாகத்தான் முடியும். பித்தவன் என்ற பெயர்

வாய்ந்த இசைப் புலவர் ஒருவர் இருந்தார். அவர் பாடத் தொடங்கினால் கல் நெஞ்சமும் தானாகவே கரைந்து உருகும். காட்டு விலங்குங் கேட்டு இன்பமடையும். அங்ஙனம் உலகத்தை யெல்லாம் தமது இசைப் புலமையால் இன்புறச்செய்த அவர் தமக்குக் சிறிதும் இன்பம் கிடையாது; இவர் முழுச்செவிடர். இதைவிட எண்ணி இரங்கத்தக்கது வேறுண்டோ? ஐயகோ! என்ன கொடுமை! என்ன துன்பம்! இன்னும், தமக்கு அருமையானவரிடத்தும் உரிமையானவரிடத்தும் அளவளாவி மகிழுரை செய்து அதனால் உண்டாகும் இன்பத்தைச் செவிடர்கள் ஒருகாலும் எய்துதற்கில்லையே! அவர்கள் பாடு துன்பத்திலும் துன்பமே என்பதற்கு என்ன தடை?

குருடர் நிலைமை வருத்தம் வாய்ந்ததே; ஆனால் செவிடர் நிலைமை அதனினும் மிகுதியான வருத்தம் வாய்ந்ததென்றே சொல்ல வேண்டும். கண்ணுக்குப் புலப்படும் காயத்தைப் பாராட்டுகின்றோம். அதைவிடப் பன்மடங்கு வருத்தத்தை உண்டு பண்ணுகின்ற பல்வலியை அவ்வளவு பாராட்டுகிறதில்லை. ஏன்? அவ்வலி நமது கண்ணுக்குப் புலனாவதில்லையாகையால். அது போலவே, குருடரின் சங்கடம் நமக்குத் தெரிவதால் அவருக்கு உதவி செய்ய நம் மனம் முன்னெழுகின்றது. செவிடரின் துன்பம் அவர் தமக்கே தெரிவதல்லாமல் நமக்குப் புலனாகாமையால் அவர்க்கு உதவி செய்ய நம் மனம் பின்வாங்குகின்றது. இதை நாம் யாவரும் சிறிது நினைந்து பார்க்க வேண்டியது கட்டாயம். நம்மைச் சுற்றிச் செவிடர் பலரைக்காண்கின்றோம். அவர் தம் துன்பங்களைச் சிறிதேனும் நாம் ஒழிக்கக் கூடுமாவென்று நினைந்து பார்த்து இயன்ற வரையில் ஒழிக்க முயலவும் வேண்டும்.

---

# தமிழ்நாட்டுச் சைவ இளைஞர் கடமை

[இலங்கை S. சின்னதம்பியவர்கள்]

சிவனருள் விழைவும் செழுந்தமிழ்ப்பற்றுமிக்க சீருடைச் செல்வர்காள்!

இவ்வுலகின்கண்ணே நிலவுறு பல்வேறு சமயங்களுளெல்லாம் தொன்மையானும், செம்மையானும் எவ்வகையானும் அளப்பரிய மாட்சியுடைத்தாய்த் தலைசிறந்து நிகழ்வது நம் சமயமாகிய சைவ சமயமென்பது எவரானும் நினைத் துணையேனும் மறுத்தற்கரியதோர் முடிந்த முடிபாம். இதற்குச் சான்று

கள் பலவுள. சமயநுண் பொருளாராய்ச்சியிற் சிறந்திலங்கிய Max Muller முதலிய மேல்நாட்டுப் பெரியார் பலர்க்கும் இவ்வுண்மை உடன்பாடாயிருத்தல் காண்டும். இவற்றை யெல்லாம் சமய நூலாராய்ச்சியானும் வரலாற்று நூலாராய்ச்சியானும் நன்கு அறிந்துகொள்ளல் கூடும். ஏனைய சமயங்களையெல்லாம் படிமுறையிற்றன்னு ளடக்கித்தான் ஏனைய வொன்றிலேனு மடங்காது கடந்ததோர் மாண்புடை நிலையில் நின்றொளிரும் தனியுரிமை யொன்றுமே நம் சைவ சமயத்தின் சால்பை நனி விளக்குமன்றோ !

சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருள்
கைவந்திடவே மன்றுள் வெளிக்காட்டும் இந்தக் கருத்தைவிட்டுப்
பொய் வந்துழலும் சமயநெறி புகுதவேண்டாம் முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாரும் செகத்தீரே !

என்றும்,

காகமுறவு கலந்துண்ணக்கண்ட ரகண்டாகார
சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ ! இன்புற்றிட நாமினியெடுத்த
தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும் செகத்தீரே !

என்றும் எழுந்த திருவாக்குகளின் பெருமையை ஓர்க ! ஏனைய சமயங்களொன்றிலேனும் எய்தாப் பெரும் பேரின்பத்தைச் சைவ நெறிக்கணன்றே எய்தலாமென்றும், உண்மை நிலையை முற்று முணர்த்தப் பிறசமய நெறிக்கண் புகுந்துழலாது, அருட்பெருங்கடலாகிய எம் அம்மையப்பர் திருவடியையச் எளிதாயறிந்து உய்தற்குரிய உண்மை நெறியாகிய சைவ நெறிக்கண் சென்றுய்யுமாறு, உலகினரை ஆற்றுப்படுத்தும் முறையாகச் சிவஞானவள்ளலாகிய தாயுமானஅடிகளாலருளப்பட்ட இவ்விரு பாட்டுக்களானும், 'ஒரும் வேதாந்தமென்றுச்சியிற் பழுத்த ஆராவின்ப அருங்கனிபிழிந்து சாரங்கொண்ட சைவ சித்தாந்தத் தேனமுது' என்று குமரகுருபரர் உரைத்த நல்லுரைவாயிலானும், சைவ சமய மாட்சியின் ஒப்புயர்வற்ற தன்மையை அறிந்து கொள்ளல்கூடும். சிவஞானந் துய்த்துச் சிவனடிசேர்ந்த ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அரசு, ஆலாலசுந்தரர் ஆகிய மூவரையும், பெருந்துறை புகுந்து பேரின்பவெள்ளந் துய்த்தமணிமொழித் தேவனையும், மூன்றாண்டேனும் நிரம்பா முழுக்குழவிப் பருவத்தே முற்றுணர் வெய்தப்பெற்று, உலகமுய்வான் சைவ சித்தாந்தத் தேனைச் சிவஞானபோதமெனும் விழுமிய வழியாகத் தமிழ்நாட்டிற்கு ஊட்டியருளினவராகிய மெய்கண்டதேவனையும் தலைவராய்க் கொண்டிலங்கும் நம் சமயத்தின் மாண்பை

வரையறுத்தலுங் கூடுமோ! இத்தகைய பெரியாரை ஆசிரியராக அமைந்துள்ள சமயம் பிறிதொன்றுமேயில்லை. பிற சமயங்களொன்றிலும் இவர்களைப்போற் செம்பொருளுணர்ந்து செந்நெறி வகுத்தவர் ஒருவருமில்லையென்று மனங் கோணாது கூறலாம். பிறசமய ஆசிரியர்களாயிலங்கும், யேசு நாதர் புத்தப்பெருமான் முகமதடிகள் போன்ற இறைவனடித் தொழும்பர்கள் பற்பலர் நம் நாட்டிற் பண்டைநாளிருந்ததாகவும், நம் சமயத்திற்குரியராய் இருந்தனரென்றும், சேக்கிழார் அடிகள் வகுத்தருளிய, ஏனைய புராணங்களைப்போ லில்லாது உள்ளதை உள்ளவாறே உணர்த்தும், பெரிய புராணமெனும் திருத்தொண்டர் புராணவாயிலாக நன்கு அறியக் கிடக்கின்றன. ஆயின் இத்தகைப் பாடல்சால்சிறப்பும் புரையில் மாண்பும் நிரம்பப்பெற்ற நம் சமயமானது இக்காலத்தில் அடைந்திருக்கும் நிலைமைதானென்னே! எப்பொருள் விழுமியவாயினும் அப்பொருள் ஒருகால் பழுதுறல் வேண்டுமென்பது இயற்கை நிகழ்ச்சியாமோ! பண்டொருகால் நம் சமயமானது அரவின் வாய்பட்ட வெண்மதிபோற் பிறசமய இருளால் ஒளி மழுங்கிக்கிடந்ததையொப்ப இந்நாளிலும் நம் சமயமானது பெரியதோர் வீழ்நிலையெய்தியது. ஆயிற் சிந்தாமணி தென்கடலமிழ்தம் தில்லையானருளால் வந்ததையொப்பத் திருஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு அடிகளும் இறைவனருளால் நம் நாட்டிற் பிறந்து அந்நாட்போந்த பிறசமய இருளை அறவே நீக்கித் திரும்பவும் சிவனார் திருநெறியைத் திகழச்செய்தனர். இந்நாட்போந்த வீழ்ச்சியினின்றும் நம் சமயமானது உய்தற்குரிய தொண்டு புரிதற்குகந்த தொண்டர்களில்லைபோலும்! பிறநெறிகளனைத்தும் நாளுக்குநாட் சாலவும் சிறப்புடன் வளர்ந்துகொண்டிருப்ப, எமது நெறி மட்டும் சீர்நிலை குன்றித் தளர்வெய்திப் பயனளியாது மறைபொருளா யடங்கிக் கிடப்பத் தவப்பெருஞ் செல்வச் சைவ மக்களாகிய யாம் உழைக்காதுவாளாவறிதே யிருத்தல் தகுதியோ! சம்பந்தாரன்ன பெரியாரை முன்னோராய்க் கொண்ட யாம் சமய வளர்ச்சிக்காக உழைக்காது அயர்ந்து கிடத்தற்கு இதுவோ சமயம்! எழுமின்! எழுமின்! சைவமுழக்கம் உலகமெங்கணும் பரவச்செய்மின்! திருத்தொண்டின் மேன்மையைப் பாரெங்கும் திகழச் செய்மின்!

“ஆலமே யமுதாகவுண்டு வானவர்க் களித்துக்
காலனை மார்க்கண்டற்காக் காய்ந்தனை அடியேற்கின்று
மூலகின் புகழேயாக வேண்டும்நான் மறைகளேத்தும்
சீலமே வாலவாயிற் சிவபெருமானே”

என்ற சம்பந்தப் பெருமான், சிவனார் திருநெறியானது தமிழ் நாட்டில் மட்டுமன்றி, உலகமெங்கணும் பரந்து புகழுடன் நிலவவேணுமெனும் பேரவாவினால் உந்தப்பெற்று மனங் குழைந்து இறைவனை வழுத்தியிருப்ப, யாமெல்லாம் இப்பெரு நெறியானது அம் நாட்டிலாதல் பரந்துலவுமாறு வேண்டிய தொண்டாற்றாதுவாளா இருப்பேமாயின், பெரியாராணையைக் கடந்த பெரும் பழிக்கும், அவர் தம் மனமுவந்த விழைவைப் பேணாதொழிந்த பெரும் பாவத்திற்கும் ஆளாவே மன்றோ; எம் சமயத்தின் விழுப்பெருந் தலைவராயமைந்துள்ள இப்பெரியார் தம் சீரிய ஆணையைக்கடந்து யாமுய்யுமாறெங்ஙன்; அன்னவர் தம் அருள் மொழிகட்கும் உயரிய நோக்கங்கட்கும் முழுதும் முரணுயுள்ள புல்லொழுக்கம் பூண்டயாம் அவர் தம் பெரு நெறிக்குரியராதலெங்ஙன்; அன்புடையீரே கூறுமின்; இச்சிறு திருப்பாட்டின் கண்ணேயுள்ள பெரும் பொருளைச் சைவ நன் மக்களாகிய யாம் ஒரு சிறிதேனும் உள்வேமாயின் நம்மனோரகத் தின்கண் பற்றுச் (அபிமான) சுடரானது அவியாப் பேரொளி சான்று, ஆசிரியர் சம்பந்தப் பெருமான் பணித்தருளிய பெரு நெறியில் நின்று மல்லன்மா ஞாலமுழுவதும் மாண்புடைச் சைவ நெறியானது திகழ்ந்தோங்குமாறு வேண்டிய தொண்டு செய் வதில் எம்மனோரையெல்லாம் ஈடுபடுத்தி விடுமன்றோ! அன்பர் களே! அமெரிக்காவிலிருந்தும், ஐரோப்பாவிலிருந்தும் தம் நெறியைப் பரப்பவேணுமெனும் பேரவாக்கொண்டு திரள் திர ளாகக் கிறித்துவமதத் தொண்டர்குழாங்கள் உலகமெங்கணும் போந்து கோவில்களும் கழகங்களும் பலப்பல அமைத்துப் பெரும் பொருளெலாம் செலவழித்து வருதலைக்காண்கிலையோ! சமயத் தொண்டொன்றினையே பெரும் பொருளெனப் போற்றி யும், தம்வாழ் நாளின் விழுமிய குறிக்கோளாகக் (Ideal) கொண் டும், தமக்கென்றும் தனியுரிமை யெலாம் அறவே துறந்தும் இறைவனடித் தொழும்பில் ஈடுபட்டுழைக்கும் பல்லாயிரக்கணக் கான பெரியாரைப் (Protestant Missionaries and Catholic Fathers and Brothers) பிற சமயங்களிற் காணல் கூடும். இதுவன்றோபற்றுள்ளம்! இதுவன்றோ சமயப்பற்று! இது வன்றோ 'சத்தியாக்கிரகம்;' நம் நாட்டில் இத்தகைத் தொண்டில் ஈடுபட்டிருப்பவர் ஒரு பத்துப்பேராயினும் உண்டோவென ஐயுறலாம். இமைபணியாற்றும் விழைவிற்றோய்ந்த இளைஞர் பலர் கிளர்ச்சியுடன் எழுந்தாலொழிய எம் நாடும் சமயமும் உய் தல் ஒரு போழ்தும் முடியாது. ஆளுடைய பிள்ளையாரைப் போன்ற ஒரு சிவஞானக்கன்றை இவ்வேளை எங்களிடையிற் பெற்றுக் கொள்ளாதது எம் தவக்குறைவே யாயினும், பண்டு தொட்டு இறைவனுவார் தமிழ் மக்களாகிய எம்பாற்கொண்ட

பேரருட் பொலிவால், தமிழ் நாடும் சைவ நெறியும் தமக்குரிய பொற்புடை நிலையினின்றும் வழுவி அல்லற்பட்ட ஞான்று தமது அருட் குழந்தைகளைத் தோற்றுவித்து எம் நாட்டையும் நெறியையும் எவ்வாறு நிலைபேறெய்தி உலவச் செய்தனரோ, அதுபோலவே இந்நாளிலும் எம் இழிவெலாம் களைந்து தடுத்தாட் கொள்வாரென்பது அடியனது உறுதியான நம்பிக்கை. எனினும்,

> " நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
> தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
> தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
> என்கடன் பணிசெய்து கிடப்பதே "

என்ற அப்பர் அருள்மொழிக் கிணங்க, யாம் தனித்தனி உய்ய வேண்டினும் அல்லது எம்நாடு உய்யவேண்டினும், யாமோவ்வொருவரும் எம் முழுமுதற் கடனாகிய இறைபணி யூல்லும் வகையாற்றல் வேண்டுமென்பது ஒருதலை. அப்படிச் செய்வேமாயின் இறைவனருளானது எம்மனோரையும், எம்நாட்டையும் ஆட்கொண்டு பேணி வருமன்றோ !

சைவ நன்மக்களாகிய யாம் செய்யவேண்டிய கடன்களும் பணிகளும் பலதுறைப்பட்டுக் கிடக்கின்றன. பிற சமயத்தவருள் முதன்மையாகக் கிறித்துவரும் புத்த சமயத்தவரும் தம் சமயத்தொண்டின் சார்பாக ஓம்பிவரும் முறைகள் பலவும் ஈண்டு கருதற்பாலன. அன்னார் முறைகளையொட்டி யாமும் உரைத்தலே எம் சமய வளர்ச்சிக் குகந்தது. பண்டைநாளில் சமயமானது எம்மரசர்களாற் போற்றி யோம்பப்பட்டு வந்ததனால் இம் முறைகளொன்றும் எங்கட்கு வேண்டாவாயிருந்தன. ஆயின் நம் சமயத்திற் குரியரல்லாத வேற்றரசர்களால் யாம் ஆளப்பட்டு வரும் இக்காலத்தில், சமய வளர்ச்சியானது பண்டுள்ளதுபோல் அரசியல் நெறியின்பாற் படாதொழிந்தது. வேற்றரசர் ஆணையிலடங்கி அடிமைகளாய் அல்லற்படும் யாம் முன்செய்த தவப் பயன் காரணமாகவோ அல்லது வெள்ளைப் பெரியார்தம் விரிந்த நோக்கின் காரணமாகவோ அரியதோர் உரிமையை இன்னும் இழந்திலம். முன்னை நாளிருந்த வழக்கம்போல் அரசனுடைய நெறியையே குடிகளும் ஏற்றுக்கொள்ளல் வேண்டுமென்னுங் கட்டுப்பாடு ஒரு சிறிதேனு மில்லாது, எமக்குகந்த நெறிக்கண் நிற்கும் உரிமையை இன்றும் பெற்றிருக்கிறேம். இவ்வுரிமையை உணர்ந்து அதற்குகந்தவாறு நின்று தொண்டுபுரிதல் எம்மனோர் முதற் கடனெனக் கொள்ளல்வேண்டும். சமயத்தொடர்பாக யாம் செய்யவேண்டிய தொண்டுகளை அடியனது சிற்றறிவுக் குகந்தவாறு ஒரு சிலவற்றைக் குறிப்பிடுவல்.

சென்ற சில நூற்றாண்டுகளாக நம் சமயமானது தனது பழைய விழுமிய நிலையினின்றும் வீழ்ந்ததுமன்றிப் பிறமதக் கலப்பினாலும் வேறு பல இடர்களினாலும் தனது தூய்மைக்கு இழுக்காகிய கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் தழுவி நிற்கின்றது. திருநீற்றின் மாண்பை யறியாதார் பலரும், சிவத்தின் முழுமுதற்றன்மையை உணராதார் பலரும் புலாலுணவின் புன்மை தெளியாதார் பலருமாகிய இன்னோரன்ன பல்வேறு குழூஉப்பட்ட மக்களுங்கூட இக்காலத்திற் சைவரென மதிக்கப் பட்டு வருகின்றனர். இன்னுமொரு சாரார் நம் சமய உண்மைகளேனும் புறச்சமய உண்மைகளேனும் தமக்குத் தெரியாதிருப்ப மிகவும் துணிவுடன் “காடன்மாடனுஞ் சரிதான், கறைமிடற்றண்ணலுஞ் சரிதான். புத்தருஞ் சரிதான் புராணங்களுஞ் சரிதான். மணிவாசகப் பெருந்தகையுஞ் சரிதான், முகமதடிகளுஞ் சரிதான், எல்லாஞ் சரிதான்” என்று பெரியதோர் போலிச் சமரசம் பேசிப் பெரும்பேதுற் றலைகின்றனர். இத்தகைய குழப்பங்களால் நம் சமயமானது வரை யறையில்லாப் பெரியதோர் கலங்கிய நிலையிலிருக்கின்றது. இவற்றிற்கெல்லாம் பல காரணங்களுண்டு. அவற்றையெல்லாம் ஈண்டு விரிக்கிற் பெருகுமென அஞ்சி முதன்மையாயுள்ள ஒரு சிலவற்றை மட்டும குறிப்பிடலே இக்கட்டுரையின் நோக்கமென்றுணர்க.

நம் சமய வளர்ச்சிக்கும் மேன்மைக்கும் இடர்களாயுள்ளவற்றுள் முதன்மையாக எம்மனத்திற் றோன்றுவது என்னையெனின், எம் சமய நிலைபேற்றிற்குப் பார்ப்பனரும் அவர்தம் ஆரிய முறைகளும் இன்றியமையாது வேண்டுமென நாம் கொண்டிருக்கும் அறியாமையும், அவைபாற் பாராட்டிவந்த குருட்டு நம்பிக்கையும் நல்ல மதிப்புமாமெனச் சுருங்கக் கூறுவேன். எம் சமயத்தின் வீழ்நிலைக்கு முழுக் காரணமாயுள்ளோர் இப் பாரப்பனச் சிறுமக்களேயெனல் மிகையாகாது. பார்ப்பனருக்கும் அவர் தம் ஆரிய முறைகட்கும் யாம் குருட்டுத்தனமாக அளித்துவந்த உரிமையினாலன்றோ சைவசமயமானது தமிழுலகத்தில் இவ்வளவு சீர் குன்றிப்போனது. நம் கோவில்களில் நிகழ்வுறு வழிபாட்டு முறைகளைச் சிறிதாராயின், இப்பார்ப்பன மக்கள் தம்சூழ்ச்சிகளும் அவர்தம்போலி முறைகளும் வெளிப்படையாகின்றன. தமிழ்நாட்டுச் சைவமக்கள் இறைவனை வழிபடு முறைகளும் இக்காலத்தில் அறங்கூறும் அவையங்களில் (Court Houses) வழக்காடு முறைகளும் பெரிதும் ஒத்திருக்கின்றன. எப்படியெனின் கூறுதும். நாட்டுமொழி யறிவில்லா நடுநிலையாளர்களிடம் (Magistrates) ஏதுங் குறையிரந்து முறையிடவேண்டின் ஒரு மொழிபெயர்ப்பாளன் பெரு

பாலும் வேண்டப்படுவது எல்லோர்க்குந் தெரிந்ததே. மொழி பெயர்ப்பாளனின்றேல், உடல்வலியும், மனவன்மையும் சூழ்ச்சியு மிக்க தீயரினால் இடரிழைக்கப்பெற்றுத் துன்புறாஉம் துணை யிலா எளியர்தம் குறைகளையெல்லாம் முறையிட்டுத் துயர்களைந் தின்புறற்கு வலாவாய் அலக்கணுறுவரன்றோ! அறங்கூறுமன்றங் கட்கு இக்காலத்தில் மொழிபெயர்ப்பாளர் எம்நாட்டில் எவ்வ ளவு இன்றியமையாதவரோ, அவ்வளவுக்கு நம்பனருள் மன்றங்க ளாகிய நம் கோவில்களிலும் ஆரியப் பார்ப்பனரேனும், அல்லது ஆரிய மொழியின் வல்ல பெரியாரேனும் வேண்டப்படுகின்றனர். வேண்டினோர் வேண்டியவாறெல்லாம் ஈந்தருளும் தண்டா ஈகைத் தகைமாண் செல்வனாகிய எம் அப்பனைத் தொழவேண்டி னும், அவனருளைப்பெற் றுய்யவேண்டினும், நம் கோவில்களி லுள்ள போலி ஆசிரியர்களாகிய பார்ப்பனரைக்கொண்டே நமது போற்றல்களையும் வேண்டல்களையும் வடமொழியில் மொழிபெ யர்த்திட வேண்டியிருக்கிறது. இவ்வாரியப் பார்ப்பனரும் அவர் தம் வடமொழியு மில்லாதுபோனால் எம் ஈசனை ஒருவரும் தொழல் முடியாதுபோலும்! இவைதம் துணையின்றி இறைவ னடி நண்ணுதல் எவர்க்கும் சாலாதுபோலும்! சூத்திரச் சிறு மக்களாகிய யாம் வழங்கும் சிறுமொழி வாயிலாக இறைவனைத் தொழல் சாலாதெனக் கோடலே பொருத்தமுடைத்து! அறி விற் பெரிய ஆரியமக்கள்தம் கருத்தும் இதுவே! அப்பனைத் தொழுதற்குகந்த தனிப்பெரு மொழியாகிய வடமொழியைத் தமக்குத் தனி யுரிமையாகப்பெற்ற இவ்வாரியமக்கள், தங்களைப் போற் றமிழ் நாட்டினரும் இறைவனை வழுத்தி யுய்தல் வேண்டு மென்னும் பேரவாக்கொண்டே இப்பார்ப்பனர்களாகிய மொழி பெயர்ப்பாளர்களை எங்கட்குத் தந்தருளினர்போலும்! ஆ! இவர் தம் அன்புதான் இருந்தவாறென்னே! இந்நன்றிக்குகந்த கைம்மாறு தமிழ் மக்களால் யாதுதான் ஆற்றல் முடியும்! 'சமஸ் கிருத சுலோகங்களும்' அவற்றை ஓதுதற்கு ஆரியப் பார்ப்பனரு மின்றேல் சைவ சமயமோர் இல்பொருளாய் விடுமன்றோ! இக் கொள்கையானது தமிழ்நாட்டிற் பண்டைநாளிலும் பார்க்கப் பெரிதும் இக்காலத்தில் உறுதியாய்ப் பதிவு (Register) செய் யப்பட்டிருத்தல் கண்டு களிபேருவகை யெய்தினம்!! வட மொழியின் மாண்புபற்றி ஓரணுவளவேனும் தாழ்த்துரை பகருவோர் சைவ சமய உரிமையை முற்றும் இழந்தவரே யாவ ரென்று கூறும் தமிழ்ப் பெரியார்தம் விரிந்த அறிவும் அன்ன வர் செய்ந்நன்றி மறவாப் பெருநீர்மையும் மிகவும் போற்றற் குரியதேயன்றோ!

ஆ! இப்போலி முறைகளையும், பொய்க் கொள்கைகளை யும் தமிழ் நாட்டிற் புகுத்தி எம்மனோரையெல்லாம் மபங்க

வைத்த புன்மையை நினைந்து என் மனம் குழைகின்றது. ஆவதென்!

வடமொழி தேவர்மொழியென்றும், அம்மொழிக்குரிய ஆரியப் பார்ப்பனரெல்லாம் ஒப்புயர்வற்ற மேல் வகுப்பாரென்றும், ஆகவே அம்மொழியில் வழிபடுவதே இறைவனுக் குகந்ததென்றும், மேல் வகுப்பாராகிய தாம் வகுத்த நூல்களெல்லாம் இறைவன் மொழிகளே யாமென்றும் பொய் புனை சுருட்டுகளாலும் வெறுங் கட்டுக்கதைகளாலும், ஏனைய சூழ்ச்சிகளாலும் நம்மனோரை ஏமாற்றித் தம் வலையுட்பற்றி மயக்கிவந்த இப்பார்ப்பன மக்களையும் அவர்தம் குழுவினரையும் அருவருத்து ஒதுக்காது மேலும் மேலும் அவரைப் பெரியோரென நம்பி யுழலும் அன்பரை நினைந்து பெரிதும் தேம்பிப் பரிவுறல் வேண்டியிருக்கிறது. என்னே! உணவுக்கும் உடைக்கும் வழியில்லாது ஒருநாழி அரிசிக்குக்கூட ஊர் ஊராய்த் திரிந்து எம்மனோரிடமிருந்து ஊதியம்பெற்று வாழும் இப்பார்ப்பன மக்கள், தாம் நான்முகனது தலையினின்றும் தோன்றிய பெரியாரெனச் செருக்கி எம்மனோரையெல்லாம் எளிய பிறப்புகளென எள்ளி இழித்துக்கூறுப. ஆ! இவற்றையெல்லாம் நம்பி ஏமாந்திருக்கும் தமிழ் மக்கள்தம் மயக்க உணர்ச்சிதான் இருந்தவாறென்னே! தமிழகத்திற் பண்டைநாள் நிலவிய அரும் பெரும் நூல்களையெல்லாம் மொழிபெயர்த்துப் பல பொய்யுரைகளையுஞ் சேர்த்துப் புராண நூல்களென்றும் மனுநீதி நூலென்றும் பலப்பல நூல்களை யியற்றி, அவற்றையெல்லாம் இறைவனே ஆக்கியருளினனென்றும் அந்நூல்களிலுள்ள கொள்கைகட்கும் விதிகட்கும் இசைந்தொழுகல் நம் கடனென்றும் தங்கட்குப்பொருள் சேரும் வகையாக பணிவினை பிணிவினைச் சடங்குகளையும் ஏனைய பல்வேறு கட்டுப்பாடுகளையும் வகுத்து எம்மனோரையெல்லாம் இப்பார்ப்பன மக்கள் தங்கட்கு அடிமைகளாக்கி விட்டார்கள். இறைவனது அருட் செயல்களிற் பெரிதும் நம்பிக்கையுடைய தமிழ்மக்கள், இவ்வடமொழி நூல்களையெல்லாம் இறைவனாலருளப்பட்டனவென்று ஆரியப் பார்ப்பனர்தம் உரைக்கிணங்க ஏற்றுக்கொண்டது ஒரு வியப்பன்று. ஆயின் இவர்தம் மனப்பான்மையை யறிந்து அதற்கிணங்கத் தம் சூழ்ச்சியை வகுத்த ஆரியர்தம் மனவன்மையே பெரிதும் வியக்கற்பாலது. இங்ஙனம் இவ்வாரியப் பார்ப்பனரும் அவர்தம் குழுவினரும் பண்டுதொட்டு எம்மனோர் சீரிய சிறப்பையும் மேன்மையையும் தாழ்த்தும் பொருட்டுச் செய்துவந்த தீச் செயல்களெல்லாம் இப்பொழுது நிகழும் வரலாற்று ஆராய்ச்சியானும், நூலாராய்ச்சியானும் வெள்ளிடை மலைபோல் தெளிவாய்க் கிடக்கின்றன. தமிழர்க்கென

ஒருவகையான சிறப்புரிமையுமில்லாது, தாங்கள் மட்டுமே தொன்றுதொட்டு நாகரீகமுடைய மக்களா யிலங்கினரென்று நிறுவும்பொருட்டுக் கால அணுக்கள்தோறும் எம்மனோர்க்குத் தீங்கும் புன்மையும் புரிந்துவந்த புரட்டர்களாகிய இவ்வாரியக் குழுவினைச்சார்ந்த பார்ப்பனரையோ எம் ஆசிரியர்களாக யாம் கொள்ளல்வேண்டும்! இழிவு! இழிவு! ஆரியப் பார்ப்பனர்களும் அவர்தம் மொழியும் நூல்களும் தமிழ்நாட்டிற்கு வருமுன் தமிழ்நாடு விலங்கனைய அறிவிலாமாக்கள் நிறைந்தவோர் பெருங்காடாயிருந்தது போலும்! மக்கள் தோற்றத்தைப்பற்றி ஒருவாறு ஆராய்ச்சிசெய்த Darwin என்னும் ஆங்கிலப் பெரியார், மக்களாவார் குரங்கினத்தினின்றும் எழுந்தவோர் உயிர்த் தொகுதியெனக் கூறுவர். அன்னவர் ஆராய்ச்சியின்படி முதன்முதற் குரங்கினத்தினின்றும் மக்கட் பிறப்பாய் மாறின ஒரு கூட்டமிருத்தல் வேண்டியது பெறப்படும். மக்கட்கெல்லாம் மேலானவரென்றும், தொன்மையின் மிக்கவரென்றும் தம்மையே பாராட்டித் திரியும் இவ்வாரிய மக்கள்தாமோ முதன்முதல் மக்கட் பிறப்பெய்திய மாண்புடைக் குரங்குகளென எண்ணுகிறேம். ஆரியக்குரங்குகள் முதன்முதல் மக்களாய் மாறியகாலத்திலும் அதற்குப் பன்னெடுங்காலத்திற்குப் பின்பும், தமிழரென ஒரு மக்கட் கூட்டம் இல்லையென்றும், அக்காலத்தில் தமிழ்நாட்டில் வதிந்த நம்முன்னோரெல்லாம் தம் பழையநிலை மாறு முழுமுழுக் குரங்குகளாய் இலங்கினரென்றும் இவ்வாரிய மக்கள் கூறுவர். இதுபற்றியே இராமனுக்குத் துணையாய்நின்ற, தமிழ்நாட்டுச் சேனைகளையெல்லாம் குரங்குகளென இராமாயணத்திற் குறித்துவிட்டனர் போலும். இராமன் காலத்திற்கும் எத்தனையோ ஆண்டுகட்குமுன் நடந்த பாரதப்போரில் பாண்டவர் சேனைக்கும் துரியோதனன் சேனைக்கும் பெருஞ்சோறு வரையாது வழங்கிய தமிழரசனும் தமிழ் மக்களும் எவ்வாறு இராமன் காலத்திற் குரங்குகளாய் மாறினரென்று தெரியவில்லை. பாரத காலத்திற்கும் பன்னெடுங்காலத்திற்கு முன்னரே நாகரீகத்திலும், செல்வத்திலும் கல்வியறிவொழுக்கத்திலும் மிக்கோராய்ச் சிறந்திலங்கிய தமிழ் மக்கள்மீது பொறாமையும் அழுக்காறுங்கொண்டு மனம் புழுங்கிய இவ்வாரிய மக்கள் நாளடைவில் தாம் இவர்பாற் பெற்ற பெரு நன்மைகளையெல்லாம் மறந்து, தன் மனையாளைப் பிறனொருவன் கவர்ந்துகொள்ள, அக் கள்வனிடமிருந்து மீண்டும் அவளைப் பெற்றுக்கொள்ள இயலாது பெரிதுங் கவன்று நின்ற இராமனுக்கும் அவனது குழுவினருக்கும் இறுதிவரையும் பெருந்துணையாய் நின்று ஒப்புயர்வற்ற வலியும் திறனும் உடைய இராவணனுடன் போர்செய்து அவனைவென்று சீதையைச் சிறையினின்றும் நீக்கி அவளது கற்பைக் காப்பாற்றித் தந்துதவிய தமிழ்

விர மக்களையெல்லாம் ஆரியமக்கள் குரங்குகளெனக் கூறினர். ஆ! இவர்தம் புன்மைதான் இருந்தவாறென்னே! 'எழுமை எழுபிறப்புமுள்ளுவர் தங்கண் விழுமந்துடைத்தவர் நட்பு' என்று செய்ந்நன்றி யுணர்வைப்பற்றி எம் செந்நாப்புலவன் பகர்வன். ஆயின் இவ்வாரிய மக்களோ தமக்குப் பிறராற்றிய நன்றி பனைத்துணையளவேயாயினும் அவற்றையோர் தினைத்துணை யளவாகவேனும் பாராட்டும் நீர்மையில்லாப் புல்லரென நூலாராய்ச்சியால் அறியக்கிடக்கின்றது. இதுநிற்ப, ஆரியமக்கள் தமிழ் நாட்டிற்கு வந்ததின்பின்புதான் தமிழ்நாடு சீர்நிலை யெய்தியதென்றும், அவர் வருமுன் தமிழ்நாட்டிலுள்ள மக்களனைவரும் இறைவன் ஒருவன் உண்டென்னும் உண்மை தெரியாமல் விலங்கு நீர்மையின் மூழ்கிப் பெரிதும் மயங்கிக்கிடந்தனரென்றும், இப்படியெல்லாம் அறியாமையிற் கிடந்தழுந்திய பேதைகளாகிய தமிழ்மக்கட்குப் பரிவுடன் இறையுண்மையும் ஏனைய அறிவும் தெருட்டி அன்னவரை நன்னிலையடையச் செய்தது இவ்வாரிய மக்களேயாமென்றும், மனமுவந்து பெருமகிழ்ச்சியுடன் ஒரு சிறிதேனும் நாணுதுகூறும் தமிழ்ப்புலவர் பலரை இற்றைநாளினுங் காணல்கூடும். அன்னவரைத் தமிழரென அழைப்போமா! அன்றித் தமிழ்த்தோல் போர்த்த ஆரியப் புலிகளெனக் கொள்வோமா! யாதோ தெரிகிலம். தொல்காப்பியர் காலத்திற்கும், எத்தனையோ நூற்றாண்டுகட்கு முன்னரே ஆழ்ந்தகன்ற நுண்ணிய அறிவுப் பெருக்கத்தால் இவ்வுலகிற்கெல்லாம் கடந்ததோர் நிலையில் முழுமுதற் றனிச் செம்பொருள் ஒன்று பேரின்பப் பிழம்பாய் உண்டென உணர்ந்து, அப்பொருளுக்குகந்த 'கந்தழி' 'முருகு' என்ற விழுமிய பெயர்களையும் புனைந்து பெரியதோர் சமயம் நிறுவிக் கொலை முதலிய புன்மை கடிந்து அருளறங் கனிந்த இன்ப நெறிக்கணின்று தம் வாழ்வைச் சீர்பெறச் செலுத்திவந்த தமிழ் மக்கட்குச் சிறு தெய்வ நம்பிக்கையும், பல தெய்வ வணக்கமும் சிற்றுயிர் சிதைத்துச் சிறு தெய்வங்களுக்கு வேள்வி யாற்றும் தாழ்ந்த அறிவும், சிதைக்கப்பெற்ற ஊன்களை உவந்து அயின்றுவந்த இழிவான ஒழுக்கமும் உடையவர்களாகிய இவ்வாரிய மக்கள் சமய அறிவு தெருட்டினர் எனல் எத்துணை உண்மையுடைத்தென்பதை உய்த்துணர்க. மேற்போந்த உரைகட்கும் தமிழர்தம் பழைய உரிமை மாண்பிற்கும் வேண்டிய சான்றுகள் தொல்காப்பியம், புறநானூறு, பத்துப்பாட்டு முதலிய நம் பண்டைய நூல்களுள் மண்டிக்கிடப்பதை மேல் நாட்டு நூலாராய்ச்சியின் நுண்ணிய நோக்குக்கொண்டு இந்நூல்களை ஒரு சிறிதேனும் ஆராய்வாருக்குத் தெள்ளிதிற் புலனும். சைவ சமயத்தைத் தமிழ் நாட்டிற்றோன்றி நிலவச்செய்தது ஆரிய மக்களும் அவர்தம் மொழியுமே யென்பது ஒரு தப்புக்கொள்கை.

சைவ சமயமானது தமிழ் நாட்டின் தனியுரிமை யென்னல் மிகை யாகாது. சமயப் பெருநிலையங்களாயுள்ள திருக்கோவில்களே இவ்வுண்மைக்கு ஒருவாறு சான்றாயிருத்தல் காண்டும். இந்திய நாட்டின் ஒரு சிறு பகுதியாயுள்ள இத்தென்றமிழ் நாட்டில் காலத் திற்குக்காலம் அழிந்தொழிந்துபோன எண்ணில் பல கோவில் களைவிட இற்றைநாளிலுங்கூடப் பல்லாயிரக்கணக்கான சைவக் கோவில்களைக்காணல்கூடும். ஆயின் இந்தியாவின் பெரும்பாகமா யமைந்துள்ள ஆரிய நாடுகளிலோ, தமிழ் நாட்டுச் சைவக் கோயிற் றெருகுதியின் நூற்றிலொரு பகுதியேனும் காண்டலரிது. சைவாகம விதிப்படி சமைக்கப்பெற்ற கோவில்கள் தமிழ் நாட்டி லிருப்பதுபோல் ஏனைய நாடுகளில் ஒரு சிலவேனும் காண்டலரி தாகையால், சைவாகமங்களென இக்காலத்தில் வழங்கப் பெறா உம் வடமொழி நூல்களெல்லாம் ஆதியில் தமிழர்க்குரியனவென் பது அறிவுடையோர் கருத்தென அறியக்கிடக்கின்றது. இது காறுங் கூறியவாற்றால் தமிழுக்கும் சைவத்திற்கும் இருக்கவேண் டிய தொடர்பு ஒருவாறு குறிக்கப்பட்டது. எனவே ஆரியப் பார்ப்பனரும் அவர் தம் மொழியும் நம் சமய வழிபாட்டிற்கு இன்றியமையாதனவல்ல வென்பதூஉம் இனிது பெறப்படும். வடமொழி எள்ளளவேனும் தெரியா யாம் எம் கோவில்களில் வடமொழியின் துணையைக்கொண்டு வழிபாடு நிகழ்த்துவதால் ஆம் பயனென்னே! வழிபாடு நிகழும் பொழுது விலங்கனைய அறிவில்லா மாக்கள்போல் பார்ப்பனர் தம் வாயைப் பார்த்துக் கொண்டு எற்றிற்கு நிற்றல் வேண்டும். ஏனைய மொழிகள் எவற் றினும் வடமொழியே யுகந்ததென்றும், அம் மொழியில் வழி பாடு செய்வதே தம தருளைப் பெறுதற்குரிய தனிமுறையென் றுங் கூறல் அடாது. அமிழ்தினுமினிய நம்மருமைத் தமிழ் மொழி யின் இனிமையுணராது கூறும் தெய்வமு மொன்றுண்டேல், அது வும் இவ்வாரிய மக்களால் வணங்கப்பட்டுவரும் சிறுதெய்வங்களு ளொன்றாயிருக்கலாமே யொழிய, இன்னணம் கூறல் அருட் பெருங்கடலாகிய எம் கண்ணுதற் பெருமானுக்கும் தமிழ் மொழி மரபிற்கும் சாலாதாகையான், இப்பொய்யுரை பகரும் புல்லரையும் அவர்தம் தெய்வங்களையும் ஒதுக்கிவிடலே சால் புடைத்து. ஆயின் இச் சுலோகங்களெல்லாம் எம் முழுமுதற் செம்பொருளாலருளப்பட்ட வேதாகமக் கூறுகளாகையால், அவற்றைப் பாராட்டல் வேண்டுமென்று ஒரு சிலர் சொள்ளக் கூடும். இறைவனு லருளப்பட்டனவாயினென், பிறிதெவ்வாறாயி னென், இச்சுலோகங்களைப்பற்றி யொன்று ஆராயற்பாற்று. நாம் கோவில்களில் வழிபாடு நிகழ்த்தி இறைவனை வழுத்தும்பொழுது நெஞ்சமுனைப்பும்உள்ளக்கசிவும் நனிகெழீஇய உணர்வு நிலையெய் தல் வேண்டும். இத்தகைய உணர்வு நிலை யெய்துதற்குத்

துணையாயுள்ள உரைகளையும் பாக்களையுமன்றோ யாம் ஓதல் வேண்டும். ஆயின் உள்ளத்தை உருக்கி ஒரு சிறிதேனும் உணர்வு நிலைக்கண் நம்நெஞ்சத்தை எழுப்பிவிடும் திறத்தனவல்லாத வல்லோசை மலிந்த காடு முரடான இவ்வாரியச் சுலோகங்களைப் பொருளும் தெரியாது வாய் நிறையச் சொல்லி வழி படுவதினால் யாது பயன் விளையும்? சுலோகங்களின் பொருளின்னதென்று யாமறியாதிருப்ப அவற்றைக்கூறல் இறைவனுக் குகந்ததென்று கோடல் முற்றும் இழுக்கேயன்றோ. அறிவிற்கும் எம் நோக்கத்திற்கும் முழுதும் முரணுயுள்ள இப்போலி முறைகளைப் பேணி வருவேமாயின், எம் அறிவின்மையைக் கண்டு பிறமதத்தினரும் ஏனையோரும் எள்ளி நகையாடுவார்கள். கல்லினும் வல்ல மனத்தையுருக்கி விழிநீர் பெருக்கி உளமெலாம் உவகை பொங்கச்செய்து வரம்பிகந்த இன்பத்தை யூட்டி அறிவுக்குமப் பாற்பட்ட உணர்வு நிலைக்கண் நின்று இறைவனை வழுத்துதற்கு எவரையும் உய்த்துவிடும் தேவார திருவாசக முதலிய அருட்பாக்கள் இருப்ப, அவற்றை யெல்லாம் விடுத்து ஆரிய மொழிச் சுலோகங்கள் இன்றியமையாதனவென்றுபிதற்றி அலக்கணுறும் அன்பர்தம் அறிவு பெரிதும் பரிவுறற்பாற்று. மூன்றுண்டேனும் நிரம்பா முழுக்குழவிப் பருவத்தே பிறை கெழு சடைமுடிப் பெம்மான் திருவருட்டுறையில் மாசறத்தோய்ந்து இறையன்பு கனிந்தொழுக நறை பழுத்த துறைத்தீந்தமிழில் ஞானசம்பந்தன் இறை வணக்கம் தொகுத்தது எற்றிற்கு என்பதை இது ஞான்றும் அன்பர் பலர் அறிந்திலர். பாடுங்கால் "நற்கருப்பஞ் சாற்றினிலே, தேன் கலந்து பால் கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து, ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமலினிக்கும்" மணிவாசகனது திருவாசகத்தைப்போல் இறை வணக்கத்திற்குரிய பாக்கள் வேறெம் மொழியிலுமுண்டோ! அறிவுடையோரே கூறுமின்! அப்பனருள் நிரம்பத்துய்த்து அவனடியிற் சென்றுய்ந்த அப்பரும் சுந்தரரும் இறைவனை எவ்வாறு வழுத்தினர்? எம்மொழியிற்றுதித்தனர்? என்றினையவற்றை யெல்லாம் நண்பர்கள் கருத்தில் நிறுத்தி உண்மையை யாராய்தல் வேண்டும். இந்நால்வருமன்றோ தமிழ் நாட்டுச் சைவர்களாகிய எம்மனோர்க்கெல்லாம் சமயப் போாசிரியராயமைந்துள்ள பெரியார்! இவர்களன்றோ எம் நாட்டிற்கும், சமயத்திற்கும் அரும் பெரும் எடுத்துக்காட்டாயுள்ள விழுமியோர்! இவர்களையன்றோ யாம் பின்பற்றல் வேண்டும்! வடமொழி தேவர்மொழியென்றும், வடமொழிச் சுலோகங்களும் ஆரிய முறைகளும் சமய வழிபாட்டிற்கு இன்றியமையாதன வென்றும், இவற்றின் துணைக்கோடலே அப்பனடி சேர்ந்து உய்தற்குரிய தனி நெறியென்றும் எம் தலைவர்கள் உணர்ந்தார்

களேல் வடமொழியிலேயே பாமாலை புனைந்து இறைவனைத் துதித்திருப்பார்கள். ஆயின் வடமொழியில் ஒரு சுலோகமேனும் வகுக்காது, பல்லாயிரப் பதிகங்களைத் தமிழிற் புனைந்தது, தமிழ் மொழியின் மாண்பை உலகினர்க்குத் தெரிக்கும் பொருட்டும், வடமொழியே இறை வணக்கத்திற்குரிய தனி மொழி யென்னும் பேய்க்கொள்கையை மறுத்து நம்மனோர்க்கெல்லாம் நல்லறிவு தெருட்டுதற் பொருட்டுமே யென்று உணரக்கிடக்கின்றது.

---

# திருவருட்பா ஆராய்ச்சி

[இளவழகனார்]

(௫௩௩-ம் பக்கத் தொடர்ச்சி)

இத்திருப்பணியில் நம் அண்ணலார் வள்ளலாரடிகள் செய்து வைத்திருக்கும் திருத்தம் நினைக்குந்தோறும் பெயராப் பெருமகிழ்வை ஊற்றெடுத்துப் பெருக்குகின்றது. உயர்ந்த குலத்தார்க்கும் தாழ்ந்த குலத்தார்க்கும், அன்றி விலங்கு முதலியவைகட்கும் பசிதாகத்துன்பம் இயல்பாதலின், உயிர்கட்கு வருந்துன்பத்தை அவைபால் இரங்கியே நீக்கிவிட எண்ணலுறுவார்க்குப் பசித்துன்பத்தில் ஒரே நிலையினராய், இப்போது போலியாக வழங்கிவரும் உயர்ந்த குலத்தினரும் தாழ்ந்த குலத்தினருமாகச் சிலர் வந்தக்கால், உயர் குலத்தினர் எனப்படுவாரை முன்னுக உண்பித்து அவர் துன்பத்தை முன் நீக்கி விடுதலும், தாழ்குலத்தினரெனப்படுவாரை முன் குலத்தினர் உண்ணும் வரையில் அப்பசித்தீயில் வதங்கித் துடிக்குமாறு தாழ்க்கவைத்து அவரைக் குற்றுயிருங் கொலையுயிருமாக ஆக்கிவிட்டுப் பின்னுண்பித்து, அம்முறைபால் நெஞ்சார வயிறார உண்ணுதை அவர் துன்பத்தை அரைகுறையாக நீக்குதலும் சால்பாகாவாதலின், வருவார் எவராயினும் அவரை யெல்லாம் ஒரு குலத்தினராகவே எண்ணி ஒரே காலத்தில் உண்பித்தல் வேண்டு மென்பது ஒரு திருத்தம். அங்ஙனம் உண்பிக்கும் பொழுதும், உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வேற்றுமை பாராமல் அவரெல்லாரையும் ஒரே இடத்தில் கலந்தவாறு உட்காரவைத்து உண்பித்தல் வேண்டு மென்பது மற்றொரு திருத்தம். தந்தையாகிய ஒரே கடவுளுக்குப் பிள்ளைகளாய் நிற்பதை நோக்க, மக்களெல்லாரும் உடன் பிறப்பினராக ஆகின்றனர் ஆதலாலும், இனிய இயல்பும்

நல்லொழுக்கமும் உடையவர்களே மேற்குலத்தவரென்று இறைவனும் உலகமும் அறநூல்களும் பாராட்டுவதாலும்,

"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்"

என்னும் வேத உரைப்படி அவ் வியல்பினர் எல்லாக் குலத்திலும் இருப்பாராதலாலும், இப்போது போலியாகத் தாழ்ந்த குலத்தவரெனப் படுவாரைத் தாழ்ந்த இடத்திலிருந்து உண்ணுமாறு இடம் அமைத்தால் அப்படி இடம் அமைக்கப்பெற்ற அவருள் இருக்கும் நல்லொழுக்கமும் நல்லியல்பும் வாய்ந்த உண்மை உயர்குலப் பெரியாரையும் தாழ்ந்த இடத்தில் உட்காரவைத்துக் கீழ்மைப்படுத்த நேருமாதலின், அவ்வாற்றால் உயர் குலத்தினரை மேலிடத்தில் உட்காரவைத்து உண்பிக்க வேண்டும் என்னுந் தமது கருத்தே நிறைவேறாமற் போதலாலும்,

"குலவராகக் குலம் இலருமாகக் குணம் புகழுங்கால்
உலகின் நல்லகதி பெறுவர்"

"நலம் இல்ராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற
குலம் இலராகக் குலமதுண்டாகத் தவம்பணி குலச்சிறைபரவும்"

எனவரும் தேவாரத் திருமொழிகள் கூறுமாறு பசியெடுத்து வருவாரை அப்போது நல்லவர் வேறாகவும் தீயவர் வேறாகவும் பிரித்தெடுத்தலும் எளிதிற் கூடுவதன்றாதலாலும் உயர் குலம் தாழ் குலம் பார்த்து உட்காருமிடத்தை வேறு படுக்காமல் ஒரே இடத்தில் உட்காரவைத்து உணவு தருவதே இறைவன் திருக்குறிப்புக்கு இசைவது காண்க! இவ்வகையான திருத்தங்களோடு சோற்றுக்கொடை நடைபெறும் அச்சாலைக்கு உண்மையறச்சாலை (சத்திய தரும சாலை) என்று பெயர்.

இன்னும் வள்ளலார், போதுமறைக் கல்விக் கழகம் (சமரச வேதபாடசாலை) ஒன்று ஏற்படுத்தியதோடு 'ஞானசபை' ஒன்றும் வடலூரில் நிறுவினர். இறைவன் இடைபறாது செய்யும் அருட்செய்கையை நினைந்தால் உலகுயிர்களையெல்லாம், அவை தம் மலம் ஒழிவதற்காக அவன் ஆட்டுவதாகப் புலப்படுகின்றது. பொம்மைகளை ஆட்டும் பொம்மையாட்டக்காரன், தன் கை கால்களை அசைத்து ஆடினலன்றி அவை ஆடா. ஆகவே, உலகுயிர்கள் ஆடவேண்டுமாயின் அவற்றின் உள்ளிருந்து மறைந்து இறைவன் ஆடுதல் வேண்டுமன்றோ? இங்கு இறைவன் நினைப்பது ஒன்றானே உலகுயிர்களெல்லாம் நினைந்தபடி ஆடுவனவாயிருக்க இவைகள் ஆடுவதற்காகச் சிவபிரான் ஆடுதலும் வேண்டுமோ

எனின், உண்மையே வினுயினுய்; இறைவன் அவற்றின் பொருட்டு ஆடுதல் வேண்டாம். ஒரு நூறுயிர வெள்ளியைக் கை வைத்திருக்கும் செல்வனெருவன், தான் இருந்த இடத்தை விட்டும் நகராமலேயே ஒரு திங்களிலோ அல்லது ஒரு ஆண்டிலோ அப்பொருள் முழுவதையும் ஏதாவதொரு வழியில் செலவழித்து விடுவானுயின், அவனைப் பார்த்துப் பக்கத்திலுள்ளவர்கள், "அப்பன் அரும்பாடுபட்டுத் தொகுத்து வைத்த பணத்தைக் கொண்டு பிள்ளை ஓர் ஆட்டம் ஆடி விட்டான்; ஆட்டமாவா ஆடினுன்" என்று எள்ளுவது வழக்கம். அச்செல்வந்தன், தான் உட்கார்ந்த இடத்தைவிட்டு அசையாதிருக்கும் பொழுதே "ஆட்டமாவா ஆடினுன்" என்றுல் ஆட்டம் என்பதற்கு இங்குப் பொருளென்ன? ஆட்டம் என்பது உடம்பாட்டம் அன்று, நெஞ்சாட்டமென்றன்றே கொள்ளல் வேண்டும்! உடம்பாட்டம் ஓரிடத்தே நின்று ஆடுவது; நெஞ்சாட்டமோ எந்த இடத்தையேனும் எந்தப்பொருளையேனும் பற்றி எப்பொழுதும் ஆடுவது. உடம்பாட்டத்தினும் நெஞ்சாட்டமே மிக்க விசையுள்ளது. இதனை நெஞ்சோட்டம் என்றும் சொல்லுவர். சிறு பிள்ளைகள் உடம்பை ஆட்டித் தெருவில் நின்று மிக்கு விளையாடுகிறுர்கள்: அவர்கள் ஆண்டில் முதிர்ந்து பெரியவர்கள் ஆக ஆக விளையாட்டாகிய உடம்பாட்டம் குறைகின்றது; நெஞ்சாட்டமோ அங்ஙனம் ஆண்டிற் பெரியராக ஆனுலுங் குறையாமல் அறிவில் பெரியவர்களாக ஆகஆகத்தான் குறையும். ஆனுல் அஃது அரிது! இங்ஙனம் நெஞ்சாட்டம் அளவில்லாத ஆற்றலுடையதாய்க் குரங்காட்டத்தைப்போல் அரை நொடியேனும் விடாமல் பலவிடங்களிலும் உண்டாகும் என்பது உணர்ந்தே நம் வள்ளலாரடிகள், "குரங்கு மனம்", "பல் முகம் சேர் மனம்", "விரிந்த மனம்", "விளையாட்டு மனம்", "பாய் மனம்" எனப்பெயரிட்டு,

"மனம்எனும்ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே" (சு,தான்பெற்றபேறு, உ)
"பல்முகம் சேர்மனம் எனும்ஓர் பரியாசப்பயலே" ,, ௩
"விரிந்தமனம் எனும் சிறிய விளையாட்டுப்பயலே" ,, ௪
"பாய்மனம் என்று உரைத்திடும்ஓர் பராய் முருட்டுப்பயலே",, ௫

என்று அதனை அழைக்கின்றுர்கள்.

உலகத்தில் நடைபெறும் எல்லா வேலைகளும், மனத்தோடு கூடிய உடம்பாட்டத்தால் ஆவதும் உண்டு; உடம்பாட்டத்தின் உதவி சிறிதுமே வேண்டாமல் நெஞ்சாட்டத்தால் மட்டுமே ஆவதும் உண்டு. திருநாவுக்கரசுகளைக் கொல்லுவதற்காகச் சமணர்

களால் விடப்பட்டு மதவெறி கொண்டு எதிர் விரைந்து வந்த யானையை, வலிவான எத்தனை நூறாயிரம் பேர் இருந்தால் அடக்கமுடியும்! அவ்யானை, தான் கட்டப்பட்டிருந்த இருப்புச் சங்கிலிகளைப் படீரென்று முறித்துக்கொண்டு மலைபோலப் புறப்பட்டு எதிர்ப்பட்டவைகளையும் எதிர்ப்பட்டவர்களையும் இடறித் துவைத்து மேலே பறப்பவைகளும் கீழே இருப்பவைகளும் நடு நடுங்கி வெதிரியோடக் கடலின் எழுந்த கனலேயெனச் சினம் பெருகிச் சிந்த மடைதிறந்த புனலேயென மதம்பெருகி யொழுக இடிபோலும் பேரோசையால் பிளிறிக்கொண்டு கடுகி முடுகி, அமைதியே ஓர் உருக்கொண்டாற்போலத் தனியே இருந்த நம் திருநாவுக்கரசுகளை நோக்கிக் குறித்தோடி வந்ததெனச் சேக்கிழார் பெருமான்,

"கூடத்தைக் குத்தியொரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தை மறித்திட்டு மண்டபங்கள் எடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலையிடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு விறல்வேழம்"

என்பது முதலாக ஐந்து பாட்டுகளாற் கூறுகின்றார்கள். இங்ஙனம் பல்லோராலும் அடக்கலாகாதபடி வரும் யானையைத் திருநாவுக்கரசுகள், உடலுதவியே சிறிதும் வேண்டாமல் தம் நெஞ்சத் திட்பத்தாலேயே அரை நொடியிற் பணிந்து போகச் செய்தனரன்றோ? ஆதலால் நெஞ்சத்தின் ஆட்டமே உடம்பால் ஆகாத மிகப் பெரிய வேலைகளை யெல்லாம் செய்வதாகும். முன்கூறிய செல்வந்தன், தனது நூறாயிர வெள்ளியைச் செலவு செய்ததும் நெஞ்சத்தின் ஆட்டமேயாகும். நெஞ்சத்தின் ஆட்டமென்பதும் நெஞ்சத்தின் நினைப்பு. இவ்வளவுங் காட்டியது, 'எல்லாம வல்ல சிவம், யாராலும் யார் உடம்பாலும் செய்தற்கரிய இவ் வுலகுயிர்களின் ஆட்டத்தை ஒப்புயர் வில்லாத தன் தன் நினைவின் வலிவால் உண்டுபண்ணுவதையே, அச்செல்வந்தனைக்கூறியதுபோல, இறைவன் ஆடுகின்றான் என்று சிவத்தையும் அவன்பால் அன்பினர் கூறி மகிழ்வாரானார்கள்' என்பதற்கென்க. சிவம் கடவுளாதலின் 'ஆடுகின்றான்' என்று எல்லார்க்கும் உரிய பொதுச் சொல்லால் கூறாமல், 'நடனம் செய்கின்றான்' என்று பெருமையான சிறப்புச் சொல்லாற் கூறுவார்கள். இதனாலேயே சிவத்துக்கு நடவரசு (நடராஜன்) என்றும் பெயர். சிவம், அருளால் இங்ஙனம் நினைந்து உலகத்தை அசைப்பதால் நடனம் என்பது 'அருளசைவு' என்று கொள்க. இறைவனது அருளையே நினைத்துக்கொண்டிருந்த வள்ளலார், மேற்காட்டிய வாற்றால் 'இறைவன் நடனம்' அல்லது 'இறைவன் அசைவையே' நினைத்துக்கொண்டிருந்தார் என்பது பெறப்படுகின்றது!

இனி இந்நடனத்தை அல்லது அசைவைக் கண்ணுக்குப் புலனாகும் வண்ணம் ஓர் உருவம் வாயிலாக மக்கட்குத் தெளியத் தெரிவித்தற் பொருட்டு, நடிப்பதுபோல் நடவரசுத் திருஉருவம் செய்வித்தனர். ஆயினும், இறைவன் அங்ஙனங் கையுங் காலும் கொண்டு உருவமாக ஆடுகின்றான் என்பதனிலும் அரு உருவமாக ஆடுகின்றான் என்பது உண்மையொடு பொருந்துவதனால், அத்திரு உருவத்தினும் நுட்பமான வேறோர் அரு உருவின் நடனத்தை முன்னையினும் நுட்ப உணர்வினர் வேண்டினர். இறைவன் உருவினன் எனில் அவன் இருப்புக்கு ஓர் இடமும் குறிப்பிடப்படும். அவ்விடத்திலன்றி மற்ற விடங்களில் அவன் ஆடுகின்றிலன் என்பதும் பெறப்பட்டு அவ்வழியாக அவனும் அவன் ஆட்டமும் கண்ணுக்குக் காணப்படாத தென்னையோ என்னும் ஐயுறவுக்கும் இடனாகும். அன்றி அருவினன் என்றால், உருவமாகிய உலகத்தைத் தொழிற்படுத்துவதே நடனம் என்று மேலே காட்டப்பட்டது கொண்டு, ஓர் அருவப்பொருள் தன்னின் வேறான ஓர் உருவப்பொருளைத் தோற்றுவித்தல் எங்கும் இல்லாமையால், அவ் வுலகமாகிய உருவத்தைத் தோற்றி இருத்தி அழித்து அருளி மறைத்தற்கு இறைவனும் அதற்கேற்கும் ஓர் உருவினனாதல் வேண்டுமே என்று வினவுவார்க்கு விடையிறுத்தல் இயலாதுபோம். ஆதலால் அருவம் உருவம் என்னும் இரண்டுக்கும் பொருந்துமாறு அரு உருவமாய் நின்று இறைவன் அசைகின்றான் என்பது நன்று.

எல்லாம் வல்ல நம் ஆண்டவனுடைய அரு உருவத்தோடு ஒற்றுமையுடையது தீப்பொருளொன்றே என்று துணியக்கிடக்கின்றது. நிலம் நீர் நெருப்பு காற்று வான் என்னும் ஐந்தனுள், நிலம் உருவமாயும் காற்றும் வானும் அருவமாயும்போக எஞ்சிய நீரும் நெருப்புமே அரு உருவமாய் நிற்கும் பொருள்களாம். அவற்றுள்ளும் நீரைவிட நெருப்பே மிகவும் நுண்ணியதாயும் பற்றுங்கால் பற்றப்படாததாயும் இருளை நீக்கும் ஒளிப்பொருளாயும் விளங்குவதனால், அஃதொன்றே பலவகையானும் இறைவனியல்பை நம்மனோர்க்குப் பொள்ளெனப் புலப்படுக்கும். இவ்வுண்மையைத் தேவாரம் சிவஞான போதம் முதலான அருண்மெய்ந்நூல்களிற்கண்டு கொள்க. இங்கு விரிப்பில் விரிவுக்கிடனாம். நம் வள்ளலாரடிகளும் "தீயோடுறழும் திருவருள் வடிவச் சிவனேயோ" (௬, தனிப்பாடல்கள்) என்று அருளுகின்றார்கள். எனவே எம்பிரானுக்குத் தீப்பிழம்பையும் அவன் அசைவுக்கு அத்தீயின் அசைவையும் ஒப்புமைப்படுத்து, உலகத்து மக்களுக்கு இறைவனுண்மையை அறிவாளர்கள் தெளிவிப்பாரானார்கள். தில்லைச்சபையில் விளங்கும் நடனத்தேவைத் திருமாளிகை

யில் விளங்கும் திருவளரொளி என்று தெய்வச்சேக்கிழார் கூறுதல் காண்க. (தடுத்தாட்கொண்ட புராணம், ௱ச) அம்முறையே பற்றி நம் ஆளுடைய வள்ளலாரடிகளும், வடலூரில் ஏற்படுத்திய 'ஞான சபை'யில் கருப்பூரங் கொழுந்துவிட்டு எரிவதுபோல ஒரு தீக்கொழுந்தை நிறுத்தத் திருவுளம் பற்றினார்கள். தகுதியுள்ள மக்களின் அறிவாகிய சபையில் சிவம் விளங்குதலால், வடலூரில் ஏற்பட்ட சபை ஞானசபை எனப் பெயர்பெற்றது. அறிவின் முனைப்புக்கு இடமாகிய நெஞ்சம், மனத்தின் முனைப்புக்கு இடமாகிய மலர் போலுதலால், "மலர்மிசை ஏகினான்" என்னும் மறைக்கு இணங்க, அந்த 'ஞான சபை' யும் மலர் வடிவாக அங்குக் கட்டப்பட்டுள்ளது. சபை தைத்திங்களில் கட்டி முடிந்ததால், அத்திங்களில் நல்ல நாளெனப்படும் பூச நாளில் ஒரு நிலைக்கண்ணாடியின் முன்னர்த் தீக்கொழுந்தை நிறுத்திப் பல்லாயிரம் நன் மக்கட்கும் அதனைக்காட்டியருளி, இறைவனுடைய அருளியல்பைக் காட்சி முறையால் அடிகள் நேரே விளக்கினார்கள். இவ்வாறான அருட்காட்சியை ஆண்டுதோறும் தைப்பூசத்தன்று, பல்லாயிரம் மக்களும் ஆங்குத்திரண்டு காணப் பெறுகின்றார்கள். அது நிற்க.

'ஞான சபை' கட்டத்தொடங்கியதும் வள்ளற்பெருமான் வடலூர்க்கு இரண்டுகல் தொலைவில் உள்ள மேட்டுக்குப்பம் என்னும் ஊரிற்சென்று, ஒரு குடிசையுள் நுழைந்து அங்கமர்ந்து கொண்டு வெளிமுக உணர்வை மடக்கி உண்முகமாகச் செலுத்தித் தமது தூய நெஞ்சத்தில் வடலூரிற் கட்டுவதுபோல மலர் போலும் உண்மையான ஒரு அறிவு சபை கட்டி, அதனுள் இறைவன் முனைப்பைச் சுடருருவாகக் (சோதி) காணப்பெற்றுப் பெயராத பெரு நிலையில் மகிழ்ந்திருந்தார்கள். வடலூரில் 'பிரசோற்பத்தி' ஆண்டு ஆனித் திங்களிலிருந்து அவ் ஆண்டின் தைத்திங்களுக்குள், புற 'ஞான சபை' கட்டப்பட்டதாதலின், அக்காலத்திலேயே மேட்டுக் குப்பத்தில் வள்ளலார், தமது திரு உளத்தில் ஓர் அக 'ஞான சபை' யைக்கட்டினாரென்பது கொண்டு, அவர் அக 'ஞான சபை' யின் காலமும் அதுவே யாமென்க. எனவே, அவ் வக 'ஞான சபை' யில் விளங்கிய சிவத்தின் சுடருருவை அப்போது வள்ளலார் நேரேகண்டு, அவ் அகக்காட்சியின் உணர்ச்சியால், மக்கள் புற 'ஞான சபை' யின் திருவொளி உண்மையை உணர்ந்து வணங்குதற் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளப்பட்ட "அருட்பெருஞ்சோதி அகவ" லின் காலமும் அதுவேதானென்க. அடிகள் மேட்டுக் குப்பத்திலிருந்து அருட்சுடர் கண்டு அருளிய "அருட் பெருஞ்சோதி அகவலும்," வடலூரின் 'ஞான சபை' யும் ஒரே காலத்தில் முடிவு பெற்றமை

யால், அத் தைப்பூசத்தில் அருள் நன்மக்களாவார் எல்லாரும் அடிகளின் "அருட்பெருஞ்சோதிஅகவ"லை நன்கு படித்துச் சுடருண்மை உணர்ந்து கொண்டு வடலூர் ஒளியைக்கண்டு மகிழ் வதற்கு நன்மையாயிருந்தது. அவ் வொளிப்பெருமையை அடி கள்,

"ஒளியாகி உள்ஒளியாய் உள்ஒளிக்குள் ஒளியாய்
ஒளிஒளியின் ஒளியாய் அவ்ஒளிக்குளும் ஓர்ஒளியாய்"

(௬, இன்பத்திறன், ௮) என்பது முதலிய பலப்பல அருட் பாடல்களால் பின்னும் பின்னும் விளக்குகின்றார்கள்.

வள்ளலார் பிரபவ ஆண்டு வைகாசித் திங்களின் முதலி லேயே கருங்குழியைவிட்டு வடலூர்க்குவந்து விட்டமையால், பிரசோற்பத்தி ஆண்டு ஆனித்திங்களுக்குமேல் ஞான சபை கட் டிய ஏதுவால் அப்போது பாடப்பட்ட "அருட்பெருஞ்சோதி அகவ" லுக்கு முன், இடையில் கழிந்த நான்காண்டு ஒரு திங்கள் காறும், பாடல்கள் அருளாமல் அடிகள்வாளா இரார்கள். ஆத லால், இப்போது ஆறுந் திருமுறையின் தலைப்பிலுள்ள "அருட் பெருஞ்சோதி அகவ" லுக்குப் பின்னால் காணப்படும் பாடல் களில், சில பல பாடியதன் பின்னரே "அருட்பெருஞ்சோதி அகவ"லை அருளினர் என்று அறிதல் வேண்டும். ஆறுந்திரு முறையில் திருமுதுகுன்றப் பதிகம் ஒன்று காணப்படுகின்றது. அதன்கண் ஒவ்வொரு பாட்டின் ஈற்றடி தோறும் திருமுது குன்றத்திற் சிவத்தின் அருட்கோலத்தைத் தாம் கண்டதாக வள்ளற் பெருமான் காட்டுவதாலும், அதன் பத்தாம் பாட்டின் ஈற்றடியில் "சூழ்ந்து வணங்கிக்கண்டேனே" என்றொன்று காண் கின்றமையாலும் வடலூரிலிருந்தபோது அடிகள் ஒரு நாள், திருமுது குன்றத்தை அடைந்தே அப்பதிகம் அருளியிருக்கின் றார்கள் என்பது பெறப்படும். அப்பதிகத்தின் முகத்தில் "குரு தரிசனம்" என்றொரு அருட்செய்தி குறிப்பிடப்பட்டிருப்பதும் உற்று நோக்கற்பாலது. வள்ளற்பிரான் இவ்வாறு அருட்பா பாடுவதும் விரிவுரை புரிவதும் தனித்திருந்து இறைவனது அருள் விறக்கத்திற் படிந்திருப்பதுமாக வடலூரில் நான்காண்டு களும், மேட்டுக் குப்பத்தில் இரண்டாண்டுகளுமாக விளங்கினர் கள். அடிகளின் உள்ளுணர்ச்சி வன்மையை,

"ஏய்ந்த பொன்மலைமேல் தம்பத்திலேறி
ஏகவும் ஏகவும் நுணுகித்
தேய்ந்த போதடியேன் பயந்தவெம் பயத்தைத்
தீர்த்து மேலேற்றிய திறத்தை"

(௬, பிள்ளைப்பெரு விண்ணப்பம், ௧௧)

"வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயிலாச்சுதடி—அக்கச்சி
மயில்குயி லாச்சுதடி"

"ஆணிப்பொன் அம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி—அக்கச்சி
அற்புதக் காட்சியடி"

என்னுந் திருமொழிகளால் நன்கு விளங்கும்!

இக்காலங்களில் அவர்கள் செய்தருளிய அருட்பெருஞ் சிறப்புகளும் பலப்பல. தமிழினைப் 'பின்னால் எழுந்த தாழ்ந்த மொழி' என்று அறியாது கூறிச் செருக்குவார் அடங்குமாறு தமிழ் என்றொரு கட்டுரை யெழுதி விளக்கியும், அகரத்தைப் பற்றிய அறுபத்து நான்கு இலக்கணங்கள் விரித்தும் வைத்திருக்கின்றனர். கருங்குழியிலிருந்தபோதே சித்திகள் பெற்ற பிள்ளையவர்கள், மேன்மேலும் பேரருட் சித்தராய் விளங்கியது வடலூரில் தான்.

"சித்திகளெல்லாம் சிறந்திட உனக்கே தந்தனமெனஎன்
சென்னி தொட்டு உரைத்தனை"

(கூ, திருவடி முறையீடு, கூ)

என்றது காண்க. ஆறுந்திருமுறைப் பாடல்களில்மட்டும் சித்தத் தன்மை காணப்படுவதால் இது விளங்கும். ஒருநாள் உச்சி வேளையில் அடிகள் அறக்கூழ்ச்சாலையிலிருந்து வெளியேறி வெளியிடைச் சென்று தம் கால் ஒரு பக்கம் கை ஒரு பக்கம் தலை ஒரு பக்கம் உடம்பொருபக்கமாகப் பிய்க்கப்பட்டுத் தனித் தனிக் கிடக்குமாறு அமர்ந்திருந்ததும், இரும்பு முதலியவற்றைப் பொன் முதலியவாகச் செய்ததும், இன்னும் இவைபோன்ற சித்திச் செய்கைகள் பலவும் இதற்குமுன் கருங்குழியிலிருந்த வரைக்கும் செய்யப்படாத புதுவகையினவாம். வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும் செய்த மற்றப்பலவும் இதற்குமுன் நிகழ்ந்தவைபோல்வன. வள்ளலார் வடலூருக்குவந்த பின்னும் வருவதற்கு முன்னும் நிகழ்ந்த பல வரலாறுகள், அடிகள் அருளும் பாட்டுகளால்மட்டும் விளங்குகின்றன.

(தொடரும்).

---

# தமிழர் தனிமாண்பு

[திரு கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M. A., M. L.,]

இந்தப் பேருலகிலே மக்கட்கூட்டம் உடற்கூறுபற்றிச் சில பெரும் பகுதியாகப் பகுக்கப்படும். காக்கேசியரென்றும் மங்கோலியரென்றும் நிகிரோவரென்றும் செப்பும் முப்பகுதிகளின் வேறாகத் தமிழர் பெருந்தொகையைக் கருதவேண்டுமென்றும் அத்தொகையைச் சார்ந்தோரே இந்தியநாட்டிற் பெரும்பாலாரென்றும் ஆங்கிலப் பெரும் புலவரொருவர் சென்ற ஆண்டிற் கூறியதாக அறிகிறோம். கடல்கொண்ட தமிழ் நாடானது மக்களது சீர்திருத்தத்திற்குத் தோற்றுவாய் செய்த இடமென்று கெக்கெல் (Kackel) என்னும் பண்டிதர் கூறுகின்றார். அந்நாட்டின் கீழைப்பகுதியே இப்போது ஜாவா முதலிய தீவுகளாக வழங்குகின்றதென்பது அவ்விடங்களிலே தமிழர்கோவில் போன்ற சமயநிலையம் முதலிய காணப்படுதலை வைத்துணர்க. அத்தீவுகளே மக்கள் முதல் முதல் உண்டாகிய இடமாயிருத்தல் கூடுமென்று கீன் என்னும் பண்டிதர் தமது உடற்கூற்று நூலில் இயம்புவதால் தமிழ்ப் பெருநாடுதானே பல நூறாயிரமாண்டுகட்குமுன் மக்கள் தோற்றத்திற்கும் ஏதுவான நிலப்பிரிவாகத் தோன்றுகின்றது. இங்ஙனம் மக்கட் படைப்பிற்கும் அவர்கள் உயர்நல வாழ்விற்கும் இடமாக விருந்த நிலத்தே வழங்கிய மொழி தமிழே யென்பது செங்கோன் தரைச்செலவு முதலிய பழந் தமிழ்நூல்களால் அறியக்கிடத்தலின் நமது தாய்மொழியின் தொன்மையை எத்துணையென்று யாவர் அளவிட்டுக் கூறமுடியும்? இன்னும் நமது தண்டமிழ் நாடானது இந்தியாவிலேனைப் பகுதிகள் கடலுளிருந்து வெளிவருவதற்கு முன்னேயே நிலமாயிருந்ததென்கின்றனர். விந்தியமலைக்கு வடக்கே பனிமலைவரையும் பரவியுள்ள நிலப்பகுதியின் பெரும்பாகம் கடலில் மூழ்கியிருந்த காலத்தே தென்னாடு நிலப்பரப்பாக விருந்ததெனவும் பனிமலையினும் பொதியின்மலை மிக்க முதுமை யுடைத்து எனவும் கேட்கின்றோம். இதனால் நமது நாட்டின் பழமை நன்கு விளங்கும்.

வடமொழியில் 'ஆதிகாவிய'ம் வருவதற்கு முன்பே முதற் றமிழ்க்கழகம் முற்றுப்பெற்றது. இருக்கு வேதத்தில் குறுமுனிவர் வரலாறு கேட்கப்படுகிறது. அவர் இறைவனை வேண்டித் தமிழறிவுபெற்றுத் தென்னாடு செல்வதற்கு முன்னே அவண் தமிழ் சிறப்புற்றிருந்தமை புராணங்களாலே தெளிதற்குரியது. இங்ஙனம் பாராட்டுவது புதுமையன்றே யெனினும் நமது நாக

நீகத்தின் தொன்மை உணர்ந்தக்கால் அதனை நன்கு போற்றுது மென்ற உள்ளக்கிளர்ச்சி யெழுமாதலால் அது குறிக்கப்பட்டது. இனித் தமிழரது வாழ்க்கை, மொழி, கடவுட்கோள்கை யென்பனவற்றை ஒரு சிறிது ஆராய்வாம்; அவையே நம்மை ஒன்று படுத்தும் பிணிப்பு ஆகலான்.

பண்டைத்தமிழர் இந்திய நாடெங்குஞ் சென்று தமது அரசு, தொழில், வாணிபம், கல்வி முதலியவற்றைச் சீர்பெற வளர்த்ததுமன்றிக் கடல்வழியாகப் பல நாடுகளிலுஞ் சென்று தமது வாணிபத்தை நிலை நிறுத்தினரென்பதும், கப்பற்போர் முதலியவற்றில் வல்லவரென்பதும் புறநானூறு, பட்டினப்பாலை முதலிய சங்க நூல்களால் இனிது விளங்கும். ஆரியர் ஆடுமாடுகளை மேய்த்தும் உழுதும் உயிர்வாழ்ந்த காலத்தில் தமிழரது ஆடைவணிகமும் அரசியலும் வடநாடெங்கும் பரவியிருந்த தென்று ரகோசின் என்னும் ஜெர்மனிய புலவர் கூறிப்போந்தனர்.

நல்லொழுக்கத்திற்குச் சிறந்த வாய்ப்புகளாயுள்ள வாய்மை, அருள், ஒப்புரவு, முயற்சி முதலிய பண்புகளில் பண்டைத்தமிழ் நன்மக்கள் தலைசிறந்து விளங்கினர் என்பது ஒழுக்க நூல்வளம் தமிழிலே காணப்படுகின்ற அளவு ஏனைய மொழிகளிலே இல்லாமையை வைத்துணரப்படும். அனைய நல்லியல்புகளை நாமும் இடைவிடாது போற்றுவோமாயின் நமது முன்னோர் பெருமை நமக்கு இற்றைநாளிலும் கைவருதல்கூடும். இனி நமது மொழி இத்தன்மைத்தென நோக்குவாம். உலகிறந்த நமது செந்தமிழ் எவ்வளவு பயன்றரவல்லது என்பது திருவாளர் பா. வே. மாணிக்க நாய்க்கரவர்கள் செய்த கூரிய ஆராய்ச்சியால் வெளியாம்.

எவ்வகை அணியும் ஒன்பது மணிகளும் பொன் வெள்ளி செம்பு என்பனவும் ஆகியவற்றுள் சிலவோ பலவோ கலந்துள்ளது போலவும், மேல்நாட்டு இயற்பொருள் நூல்வல்லார் உலகின்கண்ணுள்ள அளவற்ற பருப்பொருளனைத்தும் எழுபத்தைந்து அல்லது எண்பது தனிப்பொருள்களுள் சிலவோ பலவோ சேர்ந்து எழுவனவேயாம் என்றதுபோலவும், பேச்சொலிக்குழாமனைத்திற்கும் அடிப்படையாகிய தனி ஒலிகளே தமிழ் நெடுங்கணக்கின் முப்பது முதலெழுத்து ஒலிகளேயாகவும் அத்தனியொலிகளின் ஒரோ ஒன்றின் முன்னோ பின்னோ நடுவோ ஒன்றோ பலவோ கலந்து கலப்பொலியாகவும உண்டாவதற்கு ஏதுவாய்ச் சார்பு ஒலிகள் மூன்றும் தமிழ் இலக்கணத்துட்

போந்தனவாகவும் அமைந்துள்ளதோர் பெருவியப்புப் பேருண்மையை நமது நாய்க்கர் அவர்கள் கண்டுகொண்டு தமிழ்த்தனியொலிகட்கும் சார்பொலிகட்குமுள்ள குறியீடுகளால் எம்மொழியிலுள்ள பேச்சொலியையும் எழுதிவிடும் ஆற்றலை எமக்கு உணர்த்தினமைக்கு யாம் செய்யக்கடவதாய கைம்மாறு என்னே! வினிசியாத லிபி ஏற்படு முன்னமே தமிழ்ப் பெரியோர் தமிழ் மொழிக்கு எழுத்து வகுத்துவிட்டமை தொல்காப்பியத்தின் பழமையாலும் அதன்கண் தமிழ் எழுத்துரு பெறப்படுவதாலும் உணரப்படும். வடமொழிக்கு லிபி பின் ஏற்பட்டதென்று யாவருமறிவர். தமிழ் எழுத்துக்களுக்கு மூல மறைமொழியாய ஓ! (பிரணவ) வடிவத்தை இயற்கையிற் கண்ட பெரியோர் அதன் வடிவத்தின் பகுதிகளினின்றே உருவகுத்து முடித்தனரென்ற உண்மையும் நமதறிவுச்சுடராய நாய்க்கரவர்களாலே உலகிற்கு விளக்கப் பட்டதே. இதனால் நமது மொழியில் பேச்சொலி யாவும் வரைதற்கு வேண்டும் எழுத்துக்கள் மூல மறைமொழி வடிவின் பகுதிகளே தமக்கு உருவாகப்பெற்றுள்ளன என்பது முடிந்தது. இப்பெருமை பிற எம்மொழிக்கும் உள்ளதாகத் தெரியவில்லை.

இனித் தமிழ் இலக்கணம் நயம்பட அமைந்திருத்தல்போல உலகத்திலுள்ள பழைய உயர் மொழிகளில் ஒன்றிற்கும் இயல் நூல்கள் அமைந்திருந்தாகத் தெரியவில்லை. எழுத்ததிகாரத்திலே இயற்கையாக இன்ன எழுத்தின்பின் இன்ன எழுத்து எளிதாக ஒலிக்கும் என்றுணர்ந்து வேற்றுநிலை மயக்கம் உடனிலை மயக்கம் என்பதற்குரிய முறைகளை வகுத்த திட்பம் எம் மொழியிலுங் காண்பதரிது. இங்ஙனம் செய்தமையாற்றான் தமிழ் உயர்தர மொழிகள் பலவற்றுள்ளுஞ் சிறந்து தன்னையொழிந்த ஏனைய இறந்த காலத்தும் தான் இன்றும் என்றும் வழங்கும் பெரு மொழியாயிற்றென்க. மேலும் திணைபால் முதலியன சொல்பற்றியமையாது பொருள்பற்றி யமைந்திருத்தல் மொழி கற்பதை மிக எளிதாக்கலோடு அறிவிற்கும் நன்கு பொருந்துந் தன்மையது. தமிழ்ச்சொற்கள் பெரும்பான்மையும் குற்றெழுத்துக்களால் அமைந்து 'யோக'ம் பயில்வோர் தமது மூச்சை மிக்கு வெளிவிடா வண்ணம் வழங்குதற்குரிய செம்மை உடைமை யாவரும் வியக்கத்தக்கது. பொருளதிகாரம் என்பது தமிழுக்கே சிறப்பாகவுள்ளது. அது தமிழ் மக்களின் உயிர்நல வாழ்க்கையை இனிது விளக்கும் யாப்பிலக்கணம் தமிழில் வளம்பெற அமைந்துள்ள முறை விரிப்பிற் பெருகும். இத்துணை இலக்கண மாண்போடு பண்டைத் தமிழரது இலக்கியமும் ஒப்புயர்வற்றுத் திகழ்ந்ததென்பது ஈண்டு விளக்கப்படும்.

தமிழிலக்கியமானது தொல்காப்பியம் முதலிய இலக்கண முண்டாவதற்கு முன்பே செம்மையாய நிலையை யடைந்திருந்த தென்பது வெள்ளிடை விலங்கல். பாணினீயம் எழுவதற்கு முன்னே தொல்காப்பியம் இயற்றப்பெற்றதென்பது வரலாற்று ஆசிரியர் துணிபு. அகத்தியம் அதற்கு முன்பே உளதானால் உலகத்தில் மிக்க பழமையான இலக்கணமும் இலக்கியமும் தமிழ் மொழிக்கே இருந்தன என்பது முடியும். தமிழ் இலக்கியங்கள் பண்டைக்காலத்தே முப்பகுதி யுடையனவாயினமை நோக்கச் சொல்லொணு வியப்பு எழுகின்றது. இயற்பகுதியே இலக்கியமென ஏனை மொழிகளுள் வழங்கவும் இசைக்கொரு பெரும் பிரிவுங் கூத்திற்குப் பிறிதொரு பகுதியுஞ் சேர்த்து மூன்றாக நமது மொழி வழங்கிய பான்மை, உள்ளம் மொழி உடல் என்னும் மூன்றையும் நன்கு காட்டும் மூன்று கண்ணாடிபோல முத்தமிழ் நிலவியதென்பதை வற்புறுத்துகின்றது. என்னை? உள்ளக் கருத்தின் நயங்களை இயற்றமிழ் உணர்த்தும். மொழிக்கு இனிமை பயப்பது இசை. உடற்செய்கையாற் கருத்தை விளக்குவது நாடகம் ஆதலின் என்க. தேவாரத்துள்,

> தமிழினீர்மை பேசித்தாளம் வீணைபண்ணி நல்ல
> முழவ மொந்தை மல்குபாடல் செய்கையிட மோவார்
> குமிழின்மேனி தந்துகோல நீர் மையது கொண்டார்
> கமழுஞ்சோலைக் கானூர்மேய பவள வண்ணரே

என்ற விடத்து முத்தமிழும் இறைவா தந்ததெனப்புகழ்ந்தமை தெளியப்படும். இக்காலத்தே இசை நயம் ஒரு சிறிது வட நூலார் தொடர்புபற்றி நிகழினும் வடமொழியிற் காணப்படும் இசைநூற்கு மூலம் தமிழெனபதைக் காலஞ்சென்ற ஆபிரகாம் பண்டிதர் தமது நுட்பமிகுந்த ஆராய்ச்சியால் நிறுவியுள்ளார். அருட்பாக்களை இன்னும் நமது பழந்தமிழ்ப் பண்களிலேயே ஓதுகின்றோம். அவற்றை நன்கு நாம் போற்றவேண்டும்.

நாடகமென்பது தமிழ்நூல் முறைப்படி இக்காலங் காண்ப தரிது. நம்முடைய கோயில்களில் நடக்கும் திருவிழா முதலியன யாவும் நாடகங்களே. நாடகத்தே நமது அகம் நாடவேண்டும். பண்டைத் தமிழ் முறையும் ஆங்கிலம் ஆரியம் என்பவற்றின் கண்ணுள்ள முறையுந் தெரிந்துள்ளவர்கள் தமிழில் சிறந்த நாடகங்கள் எழுதுதற்குரியார். இப்பொழுதுள்ளவைகளில் நல்லவற்றைப் பாதுகாத்தலும் தவறிய தன்மையுள்ளவற்றைக் கழித்தொதுக்குதலும் நமது கடன். காலஞ்சென்ற பெரும்புலவர் சுந்தரம்பிள்ளை எம். ஏ. அவர்களது மனோன்மணீயம் போன்ற நாடகம் பாராட்டற்பாலது.

இலக்கியம் என்பதனை ஆசிரியர் தொல்காப்பியர் செய்யுளென்ற சொல்லால் வழங்குகின்றார். இச்சொல் பாட்டை மட்டுங் குறிப்பதல்ல; பிற விலக்கியங்களையுஞ் சுட்டும். தமிழ்ச் செய்யுள் நூல், உரை, பாட்டு, அங்கதம், பிசி, முதுமொழி, மறை என்னும் எழுவகையாக விரிந்து வழங்கிற்று. அவற்றுள் உரை, நூல், மறை என்பன ஈண்டு ஆராயத்தக்கன.

உரையென்பது பாட்டிடைவைத்த குறிப்பாகவும், பாவில்லாதெழுந்த சொற்றொகையாகவும், பொருளொடு புணராப் பொய்ம்மொழியாகவும், பொருளொடு புணர்ந்த நகைமொழியாகவும் நான்கு வகைப்படும். இரண்டாவதனுள் பாவாலியன்ற நூற்குச் செய்யப்படும் உரை அடங்குதல்கூடும். இக்காலத்தே கட்டுரை என்று கூறும் விரிவுரையும் அதன் பாலதாம். மூன்றாவதனுள் விலங்கு புள் முதலியன தம்முட் பேசுதல் முதலியன செய்தனவெனக் கூறுங் கதைகள் அடங்கும். நான்காவதனுள் அக்காலத்தே 'நாவ'லெனப்படும் கதைகள் அடங்கும். இவ்வகைக் கதையே இப்போது மிகுதியுமெழுதப்பட்டு வருதல் காண்கின்றோம். அவற்றுள் பல நற்றமிழிலெழுதப்படாது நற்கருத்துக்களை உணர்த்தாமல் நிலவுகின்றன. நாவலெழுதும் முறைமையை நன்கு தெளிந்த புலவர்களே எழுதற்குரியர். இப்பொழுதுள்ள நாவல்களுள் தக்கவற்றைப் போற்றுதலும் தகாதவற்றைத் தள்ளுதலும் நமது கடன்.

---

# வடசொற் றமிழகராதி

[திருவளர்செல்வி. நாகை. நீலாம்பிகை அம்மையார்]

*நார்த்விக் மகளிர்கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்.*

எழுநூறு ஆண்டுகளாக ஆரியப் பார்ப்பனர் சூழ்ச்சியாலும், அவர் தம்மைப் பின்பற்றிய போலித் தமிழர்களிற் பெரும்பாலார் முயற்சியாலும் புகுத்தப் பட்டுப் பலப்பல வடசொற்கள் நந்தமிழிற் கலந்துவிட்டன. இங்ஙனந் தமிழின் கண் பல வடசொற்கள் வந்து புகுந்தபின் பழந்தமிழ்ச் சொற்களிற் பல வழங்காதொழிந்தன. தமிழிற்கலந்து அதுதன்னை முற்றும் வேறு படுத்தும் ஆரியமொழிச் சொற்களை இப்போதே நாம் தடை செய்யாவிடின், தமிழ் தன்னிலை கெட்டு வேறு மொழிபோலாகு மென்பதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை. வேறுநாடுகளிற் குடியேறிய நாகரிகமில்லாத தமிழ் மக்கள் தம் தமிழ் மொழியினைப் பாதுகாவாமல் திரித்து வழங்கியதோடு, வடமொழிச் சொற்களும்

கலக்க இடந்தந்தமையினாலேதான் தமிழ்மொழி ஒன்றே தன்னிலை திரிந்து 'மலையாளம்' 'கன்னடம்' 'தெலுங்கு' முதலான பல வேறு மொழிகளாயிற்று. தமிழின் கண் வடமொழிச் சொற்கள் நிரம்பவும் விரவினமையால், இவைதாம் வடசொற்கள், இவைதாம் தமிழ்ச்சொற்கள் எனத் தமிழ் மக்களிற் பெரும்பாலார் அறியக்கூடாதவாறு அவை தலைமயங்கிக் கிடக்கின்றன. இக்காலத்துத் தமிழ் மக்களிற் பெருந்தொகையினர் ஆரியமொழிச் சொற்களையும் தமிழ்ச் சொற்களையும் பகுத்துணருங் கல்வி இலராகித் தாமெழுதுங் கட்டுரைகளிலும் நூல்களிலும் வடசொற்களைச் சேர்த்தெழுதுவதோடு, அவைகளைத் தமிழ்ச் சொற்களாகவே பிழைபடக் கருதி அவை தம்மை மிகவும் சேர்த்தெழுதித் தமிழின் தூய்மையையும், இனிமையையும், பழமையையும் கெடுத்து வருகின்றார்கள். வடசொற்களிவை, தமிழ்ச்சொற்களிவை என நந்தமிழ்மக்கள் எளிதில் உணர்ந்து வடசொற்களை நீக்கித் தூய தனித்தமிழில் எழுதி, நந்தமிழை நிலை திரியாமல் பாதுகாக்கும் பொருட்டு உலக வழக்கிலும் நூல்வழக்கிலும் காணப்படும் வடசொற்களுக்குத் தூய செந்தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து காட்டுதல் நன்றென்று கருதிப் பின்வருமாறு அகரவரிசை முறையாக எழுதப் புகுந்தாம். வடசொற்களுக்கு இதன்கண் காட்டப்படும் தமிழ்ச் சொற்களைவிட ஒன்னுந் திறமான தமிழ்ச் சொற்களை எவரேனுந் தெரிந்து எமக்குத் தெரிவிப்பார்களாயின் அவற்றை அவர்கள் பெயருடன் நூலில் வெளிப்படுத்துவாம்.

| வடசொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| அகங்காரம் | செருக்கு |
| அகண்டம் | எல்லாம் |
| அகதி | வறியோன் |
| அகந்தை | செருக்கு |
| அகம் | உயிர், நான் |
| அகராதி | அகரவரிசை |
| அகர்த்தா | உரிமையற்றோன் |
| அகாதம் | ஆழம், கரவு |
| அகாத்தியம் | பொல்லாங்கு |
| அகாரணம் | ஏதுவின்மை, வழியின்மை, தற்செயல் |
| அகாலம் | தகாக்காலம் |
| அகிதம் | உரிமையின்மை, தீமை |
| அகிர்த்தியம் | அடாச்செய்கை, தீச்செயல் |
| அகிலம் | எல்லாம், உலகு, நிலம் |
| அகோசரம் | அறியொணாதது |
| அகோரம் | அழகின்மை, கொடுமை |
| அகோராத்திரம் | பகலிரவு |
| அக்கரம் - அக்ஷரம் | எழுத்து, அழிவில்லது |
| அக்கம் / அக்ஷம் | கண் |
| அக்கியாதவாசம் | மறைந்துறைதல் |
| அக்கிரகாரம் | பார்ப்பனத்தெரு |
| அக்கிரம் | முதன்மை |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அக்கினி<br>அக்கி | நெருப்பு, தீ |
| அங்கசன் | காமவேள் |
| அங்கப்பிரதட்சணம் | வலம்புரளல் |
| அங்கம் | உறுப்பு |
| அங்காதிபாதம் | முழு உடம்பு |
| அங்கி | தீக்கடவுள் |
| அங்கீகரித்தல் | ஏற்றுக்கொள்ளல் |
| அங்கீகாரம் | உடன்பாடு |
| அங்குசபாணி | பிள்ளையார் |
| அங்குசம் | தோட்டி |
| அங்குட்டம் | பெருவிரல் |
| அங்குரம் | முளை |
| அங்குலம் | விரற்கடை |
| அசம்<br>அஜம் | ஆடு |
| அசகியம் | அருவருப்பு |
| அசங்கதம் | ஒழுங்கின்மை, வெறுப்பு, பொய் |
| அசங்கியம் | அருவருப்பு |
| அசங்கோசம் | அடக்கமின்மை |
| அசத்தியம்<br>அசத்தை | பொய் |
| அசந்தர்ப்பம் | நேரமின்மை |
| அசப்பியம் | அவைக்காகாச்சொல் |
| அசமந்தம் | மலைவு, சோம்பல் |
| அசம்பவம் | மாறுகொளக்கூறல் |
| அசம்பாவிதம் | நடவாதது |
| அசம்பிரேட்சிய காரித்துவம் | ஆராயாது செய்தல் |
| அசரம்<br>அக்ஷரம் | அசைவில்லாதது |
| அசரீரி | உருவற்றது |
| அசலம்<br>அஜலம் | அசையாதது, அம்பு |
| அசனம் | சோறு |
| அசாக்கிரதை<br>அஜாக்கிரதை | விழிப்பின்மை, சோம்பல் |
| அசாத்தியம் | முடிக்கக்கூடாதது |
| அசித்து | பருபொருள், அறிவில் பொருள் |
| அசிந்தியம் | நினைவிற்கெட்டாதது |
| அசிபத்திரம் | வாளலகு |
| அசினம்<br>அஜினம் | தோல் |
| அசீரணம்<br>அஜீரணம் | பசியின்மை, செரியாமை |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
| --- | --- |
| அசுசி | அழுக்கு |
| அசுத்தம் | துப்புரவின்மை, அழுக்கு |
| அசுபம் | தீயது |
| அசுவம் | குதிரை |
| அசூயை | பொறாமை |
| அசேதனம் | அறிவின்மை |
| அசோகம் | பிண்டிமரம் |
| அச்சுதன் | அழிவில்லான், கடவுள் |
| அஸ்தமனம் | சாயுங்காலம் |
| அஸ்திபாரம் | கடைக்கால், அடிப்படை |
| அஞ்சலி | கும்பிடல் |
| அஞ்சனம் | இருள், மை |
| அஞ்சுகம் | கிளி |
| அஞ்ஞானம் | அறிவின்மை |
| அடம் | பிடி |
| அட்சரம் | எழுத்து, நாப்புண் |
| அட்டகம் | எட்டாலானது |
| அட்டகாசம் | பெருநகை, வீண்பேச்சு, புரளி |
| அட்டபந்தனம், அஷ்டபந்தனம் | திசைக்கட்டு |
| அட்டம், அஷ்டம் | எட்டு |
| அட்டாங்கயோகம் | எட்டுத்தவநிலை |
| அட்டாதுட்டி | தாறுமாறு, குறும்பு |
| அட்டாவதானம், அஷ்டாவதானம் | எண்பொருணோக்கு |
| அண்டசம், அண்டஜம் | முட்டைப் பிறப்பு, (முட்டையிற் பிறப்பன) |
| அண்டம் | முட்டை, உலகம் |
| அண்டர் | இடையர், வானோர் |
| அண்டவாதம் | விதைநோய் |
| அதமம் | கடைத்தரம், கீழ்மை |
| அதமன் | கடையவன் |
| அதரபானம், அதரமதம் | இதழ் ஊறல் |
| அதரம் | உதடு, இதழ் |
| அதருமம் | அறமின்மை, மறம் |
| அதி | சொல் |
| அதிகம் | மிகுதி |
| அதிகரணம் | இடம் |
| அதிகரித்தல் | மிகுதல் |
| அதிகாரம் | இயல் |
| அதிகாரி | தலைவன் |
| அதிக்கிரமம் | முறைவழு |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அதிசயம் | புதுமை, வியப்பு |
| அதிசாரம் | வயிற்றுளைவு |
| அதிசீக்கிரம் | சுருக்கு, கடிது, மிகுவிரைவு |
| அதிட்டம் / அதிஷ்டம் | செல்வம், நல்வினை |
| அதிட்டானம் | இடம் |
| அதிட்டித்தல் | இடங்கொளல் |
| அதிதி | விருந்தினன் |
| அதிதேவதை | சிறுதெய்வம் |
| அதிபதி / அதிபன் | தலைவன் |
| அதிபாதம் | எதிரிடை |
| அதிமதுரம் | குன்றிவேர் |
| அதிரிசம் | இன்னடை, இனிய அடை |
| அதிருத்தி | காணுமை, மனக்குறை |
| அதிவியாத்தி | மிகைபடக்கூறல் |
| அதிவேகம் | மிகுவிரைவு |
| அதீதம் | எட்டாதது, கடந்தது |
| அதுலம் | ஒப்பில்லது |
| அதைரியம் | திட்பமின்மை |
| அதோகதி | கீழிறக்கம், பள்ளம் |
| அதோபாகம் | கீழ்ப்பாகம் |
| அதோமுகம் | கீழ்நோக்குமுகம் |
| அத்தசந்திரன் | பாதிமதி |
| அத்தயாமம் | நள்ளிரவு |
| அத்தநாசம் | பொருளழிவு |
| அத்தமம் / அஸ்தமனம் | சாயுங்காலம் |
| அத்தம் | கை, பொருள் |
| அஸ்தமிக்கை | படுக்கை, சாய்வு |
| அத்தாட்சி | சான்று, ஒப்பனை |
| அத்தி / அஸ்தி | எலும்பு |
| அஸ்திசுரம் | எலும்புக்காய்ச்சல் |
| அஸ்திபாரம் | அடிப்படை |
| அத்தியட்சன் | தலைவன் |
| அத்தியந்தம் | மிகுதி, மட்டற்றது |
| அத்தியயநம் | மறை ஓதல் |
| அத்தியாசம் | சாட்டு, |
| அத்தியாத்துமிகம் | தன்னால்வருந்துன்பம் |
| அத்தியாயம் | படலம் |
| அத்திரசத்திரம் | அம்பும் வாளும் |
| அத்திரம் | அம்பு |
| அஸ்து | அப்படியாக |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
| --- | --- |
| அத்துவிதம்<br>அத்துவயம் | ஒன்றிப்பு, பொருத்தம் |
| அநங்கன் | காமவேள் |
| அநந்தம் | அளவின்மை |
| அநர்த்தம் | பயனில் உரை |
| அநாதன் | தனியன் |
| அநித்தம் | நிலையற்றது |
| அநித்தியகாலம் | முடிவுகாலம் |
| அநியமம்<br>அநியாயம் | முறையன்மை, விலக்கு |
| அநிருத்தன் | அடங்காதவன் |
| அநீதம் | நெறியன்மை |
| அநீதி | முறைகேடு |
| அநுகூலம் | கைகூடுதல், உதவி, நன்மை |
| அநுசிதம் | பொய், தகாதது |
| அநுதாபம் | இரக்கம், வருத்தம் |
| அநுபோகம் | பழக்கம் |
| அநுமதி | உடன்பாடு |
| அநுமாகம்<br>அநுமானம் | ஐயம், வழியளவை, கருதலளவை |
| அந்தகம் | அழிவு |
| அந்தகாரம் | இருள் அறியாமை |
| அந்தக்கரணம் | மனம், உட்கருவி |
| அந்தக்கிரகம் | உள்வீடு |
| அந்தஸ்து | நிலைமை |
| அந்தப்புரம் | உவளகம் |
| அந்தமந்தம் | உறுப்புக்கேடு |
| அந்தம் | முடிவு |
| அந்தர் | உள்மறைவு |
| அந்தரங்கம் | அருமறை, மறைபொருள், தனிமை |
| அந்தரம் | வெளி, வானம் |
| அந்தரவனம் | பாழ்ங்காடு |
| அந்தாதி | இறுதிமுதல் |
| அந்தி | முடிவு |
| அந்திசந்தி | எப்போதும் |
| அந்திப்பூ | வாடாமல்லி |
| அந்தியகருமம் | சாவுச்சடங்கு |
| அந்தியகாலம் | முடிவுகாலம் |
| அந்தியவருணம் | கடைக்குலம் |
| அந்தோ | ஐயோ |
| அந்நியம் | அயல் |
| அபகருமம் | பொல்லாங்கு |

(தொடரும்)

# சுற்றந்தழால்

[இளவழகனார்]

"காக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள" (திருக்குறள்)

காக்கைகள் தமக்குரிய உணவை ஓரிடத்திற் காணுமானால், அதனை மறையாமல் மற்றக் காக்கைகளையுங் கூவி யழைத்து உறவு கலந்து கொண்டு, எல்லாம் ஒன்றாய் உண்ணத் தொடங்கும். மக்களில் அப்படிப் பட்ட தன்மை உள்ளவர்களுக்கே அறமும் இன்பமும் உண்டாவதோடு பொருளும் உண்டாகும் என்பது இதன் கருத்து.

காக்கைக்கு அமைந்துள்ள அழகிய ஐந்து இயல்புகளில் உற்றாரோடு உண்ணுதலாகிய இதுவும் ஒன்று என்பதை,

"காலைஎழுதல் மற்றொருவர் காணுமே இன்புறுதல்
மாலை குளித்து மனைக்குஏகல்—சாலவே
உற்றாரோடு உண்ணல் உயிர்ஓம்பல் இவ்ஐந்தும்
கற்றாயே காக்காய் கனிந்து"

என்னும் வெண்பாவினாலும் அறியலாம்.

சுற்றந் தழுவுதல் என்னும் இதனில் இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று தன் நலங்கருதித் தழுவுதல். மற்றொன்று அவர் நலங் கருதியே அது செய்தல். தன் நலங் கருதுதலென்பது, 'இனிமையாகப் பேசி வேண்டிய பொருள்களைக் கொடுத்துப் பக்கத்திலுள்ளவர்களை நமக்கு நண்பர்களாக ஆக்கிக் கொண்டால், அவர்கள் துணையினாலே பல வேலைகளை நாம் முடித்துக் கொள்ளலாம்; பிறரும் நம்மோடு பகைகொள்ள மாட்டார்கள்.' என்று அச் சுற்றத்தவரால் தமக்கு ஆகும் பயன் கருதி அவர்களை ஒருவன் தழுவுவது. இந்த வகையில் நம் நல்லிசைப் புலமை நாயனார் காக்கைக்கு உள்ள உறவு கலக்கும் தன்மையை ஒருவன் தனக்கு வேண்டுவதாகிய துணையைக் கூட்டிக்கொள்ளும் தன்மைக்கு உவமையாகக் காட்டியிருக்கிறார். இவ்வாறு தன் நலங்கருதிச் சுற்றத்தைத் தழுவுதலால் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றால் நந்நின்ற செல்வம் உண்டாகும். நாயனார் தன்னலங் கருதுமிடத்து இதனை உவமைப்படுத்துத் தன்னல விருப்பத்தை எழுப்பினாரென்றாலும், இதன்கண் பிறர் நலப்பெருமையையும் அவர் செவ்வையாய் விளக்கி யிருக்கின்றார் என்று அறிதல் வேண்டும்.

இனிச் சுற்றத்தாரை அவர் நலங்கருதித் தழுவுதலென்பது, 'நாம் அடையும் இவ் இன்பத்தை நம்மைச் சூழ்ந்து நிற்பவர்களும அடைய வேண்டும்' என்று அவர் நலமொன்றே கொண்டு அவரைத் தழுவுவது.

இந்த வகையில் காக்கையின் தன்மையை உவமைப்படுத்தி நம் தாயுமானச் செல்வனர்,

> காகம் உறவு கலந்து உண்ணக்கண்டீர்! அகண்டா காரசிவ
> போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
> ஏகஉருவாய்க் கிடக்குது ஐயோ! இன்புற்றிட நாம்இனி எடுத்த
> தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும் செகத்தீரே.



என்று அருளிச்செய் திருத்தல் காண்க. இங்ஙனம் சுற்றத்தாரை அவர் நலங் கருதியே தழுவுதல் அறச்செய்கை யானதால்; பிறர் நலங்கருதிச்

சுற்றந் தழுவுதலில் அறமும் அதன்வழி இன்பமும் உண்டாகின்றன. நாயனுர் "ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள" என்று எச்ச உம்மை கொடுத்துக் கூறினமையால், 'ஏனை அறமும் இன்பமும் அன்னநீரார்க்கே உள' என்பது வெளிப்படும். எனவே அவ் அறமும் இன்பமும் தருவது சுற்றத்தை அவர் நலங்கருதித் தழுவுதல் ஆதலால், நாயனுர் அவ் உம்மை யின் வாயிலாக இதனையும் விளக்கினுராயிற்று.

இவ்வகைப்பட்ட இரண்டினுள்ளும் உயர்ந்தது இது என்பதையும் நம்பெரு நாவலர் தெளிவிக்கின்ருர். 'பிறர் நலங்கருதிச் சுற்றத்தாரைத் தழுவி அறனும் இன்பமும் பெறுதலே உயர்வு. வேண்டுமானுல் அச் சுற் றத்தாரைத் தன்னலங் கருதித் தழுவிக்கொள்ளு முகத்தால் ஆக்கமும் பெறலாம்' என்னும் பொருளை ஆக்கமும் என்பதன் உம்மை விளக்கி நிற்றல் காண்க.

இங்ஙனம் சுற்றந்தழாலில் இரண்டு வகைப்படுமாயினும் பொது வாக இன்பமும் அறனும் பொருளும் அதன்கண் உண்டாதலின், அச் சுற்றந்தழாலில் வழாமல் இருக்கவேண்டும் என்க. 'சுற்றத்தாரோடு ஒரு வன் அளவளாவுதல் செய்யானுனுல், அவன் வாழ்க்கையில் வருந் துன் பங்கட்கு ஒருவரும் உதவிசெய்யமாட்டார்: குளம் நீர் நிரம்பித்தாங்குங் கரையின்றித் தத்தளிப்பதுபோல் அவனும் அளவில்லாத இடுக்கண்க ளால் நிரம்பித் தாங்குவாரற்றுத் தத்தளிப்பான்' என்பதை நாயனுர்,

> "அளவளா இல்லாதான் வாழ்க்கைக் குளவளாக்
> கோடுஇன்றி நீர்நிறைந் தற்று"

என்று அருளுகின்ருர்.

இதனுல் காக்கையைப் பார்த்தேனும் நாம் நம் இனத்தைச் சேர்த்து ஒற்றுமைகொண்டு அறமுதலா மூன்றினையும் அடையவேண்டும் என்பது விளங்குகின்றது.

---

# தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

## திருநெல்வேலி

### தனித்தமிழ்த் தேர்வுகள்

இச்சங்கத்தார் 1927ஆ ஜுன்மீ 27, 28, 29-ம் நாட் களில் சென்னை, கோயம்புத்தூர், திருநெல்வேலி ஆகிய மூன் றிடங்களிலும் தக்கார் மேற்பார்வையில் நடத்திய தனித்தமிழ்த் தேர்வுகளில் வந்தெழுதியவர் எண்மர். சங்கத் தேர்வுகட்கு விண்ணப்பித்தவர் பதினைவர். கொழும்புத் தலைநகர்க்கு விண் ணப்பித்த மூவரில் ஒருவரும் வரவியலாது போயினர். தேர்ச்சி யுற்றவர் வகையடியிற் காணப்படும். இளந்தமிழ்ப்புலவர் தேர்

வுக்கு எழுதிய மூவரில் ஒருவர் தேர்ந்துள்ளார். தமிழ்த்தேர்வுக் கெழுதிய ஐவரில் இருவர் தேர்ந்திருக்கிறார்.

தேர்ச்சிக்குறிப்பு

இளந்தமிழ்ப்புலவர்

| பதிவெண் | பெயர் விலாசம் | தேர்ச்சிவகுப்பு |
|---|---|---|
| 27. | ரா. கிருஷ்ணசாமி, கணபதி, கணபதி P. O. கோயம்புத்தூர் | இரண்டாவது |

தமிழ்த்தேர்வு

| பதிவெண் | பெயர் விலாசம் | தேர்ச்சிவகுப்பு |
|---|---|---|
| 20. | களப்பூர். சு. சண்முகதேசிகர் ஆசிரியர், போர்டுபாடசாலை, திருவத்திபுரம், செய்யாறு, செங்கற்பட்டுஜில்லா | இரண்டாவது |
| 19. | K. P. வேங்கடகிருஷ்ணன், பேயாழ்வார் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை. | மூன்றாவது |

பு. சி. புன்னைவனநாதன்,
அமைச்சர்

---

# மதிப்புரை

வயித்திய விளக்கம் என்னும் அரிய தமிழ் மருத்துவநூல் ஒன்று எம்பார்வைக் கனுப்பப்பட்டது. இஃது இருபாலைச் செட்டியார் இற்றைக்குத் தொண்ணூறாண்டுகளுக்கு முன்னர் இயற்றியதாகத் தெரிகிறது. இதனைப் பதிப்பித்தவர் யாழ்ப்பாணத்து ஏழாலைச் சுதேச வயித்தியர் அ. பொன்னையபிள்ளை என்பவர்.

இந்நூலின் பெயருக் கேற்ப இதனுள் பொருள்கள் விளக்கமாகவே எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூற்றலைவர் தமிழ்மொழியிலும், மருத்துவக் கலையிலும் சாலவன்மையுடையரென்பது இந்நூலை நோக்குந்தோறும் ஐயமின்றித் தோன்றுகின்றது. இவர் இந்நூலை மூப்பாகுபடுத்தி மருத்துவன் இலக்கணம், நாடிவகை, நோயறிதல், மருந்துகள் செய்முறை முதலியவைகளை ஒன்றாக்கி வயித்தியவிளக்கம் எனவும், சரக்குகளைத் தூய்மைபுரிதலைச் சரக்கு சுத்தி எனவும், பதார்த்தங்களின் குணங்களைப் பதார்த்த சூடாமணி எனவும் பெயரிட்டுச் செய்துள்ளார். இவர் தென்மொழியான தமிழுக்கு அரசுமாறின முறைகளாலும், பல சமயத்தார்களின் சேர்க்கைகளினாலும், கட்டுக்கேளாலும், பல இடுக்கண்கள் நேர்ந்து வந்தும் இன்னும் அம்மொழி ஒழிந்து படாமலிருப்பது

அது செய்யுள் வடிவமாகவே இருப்பதாலாமென்று ஐயந்திரிபற வுணர்ந்த பேரறிஞராகலான், இக்காலத்துத் தமிழ் மருத்துவநூலெழுதுஞ் சிலர்போல் உரைநடையா யெழுதாமல் செய்யுள் நடையாகவே எழுதிவைத்தார். இதனால் உரைநடை நூல்களில் உள்ள குற்றமுணர்தலும் அரிதென்பது அவருள்ளக் கிடைபோலும். இந்நூலில் இவர், தம்மூர்வழக்கச் சொற்களையும் வழங்கியுள்ளார். அவை கராம்பு, சேடம், இவைபோல்வன. ஆகலான், இந்நூலை மருத்துவர்கள் படிப்பாரானால் மருத்துவத்தில் பல உள் பொருள்கள் உணர்தலுடன் பல நோய்களுக்கும் எளிதாய் நீக்கும் மருந்துகளையுமுணர்வார்கள் என்று சொல்வதற்கு எள்ளளவும் ஐயமில்லை. அரசாங்கத்தார் தமிழ்ச் சித்த மருத்துவத்தை ஒப்பிப் பள்ளிக்கூடம் வைத்து நடாத்துகின்ற இக்காலத்தில் இவ்வாறாய நூல்கள் வெளிவருதல் சித்தமருத்துவர்கள் செய்த நல்லறமே யென்பது மிகையாகாது.

---

திருவாளர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்களால் இயற்றப்பட்ட செந்தமிழ் இலக்கணம் என்னும் நூலொன்று எமது பார்வைக்கு வந்தது. அது நன்னூற் சூத்திரங்களைத் தழுவித் தமிழின் எழுத்துச் சொல்லிலக்கணங்களை எளிதான தமிழ் நடையில் தெளிவாக விரித்து எழுதப்பட்டுள்ளது. இலக்கணம் எளிதில் விளங்கக்கூடாத இடங்களில் அது நன்றாய் விளங்கும்படி இந்நூலாசிரியர் மேற்கொண்ட முறைகள் பாராட்டத்தக்கன. குற்றியலுகரம் முதலான சில இலக்கண வகைகளின் முதலிலும் இறுதியிலும் அவற்றைப் பற்றிய தொகுப்புரைகள் தெளித்து வைத்திருப்பது தெளிவுக்கு இடம். இடையிடையே எடுத்துக்காட்டு உரையாடல்களும் சில ஆராய்ச்சிகளுங் காணப்படுகின்றன. நன்னூற் சூத்திரங்கள் நானூறுக்குமேல் இதன்கண் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

ஆனால், பத்துக்கோடி ஆண்டுகளுக்கு முன்னே யிருந்த உரை நடைச் செய்யுட்களைக் கொண்டு முருகப்பிரானும் குறுமுனிவரும் தமிழ்க்கு இலக்கணம் செய்தாரென்றும், அவ்விலக்கணந்தானும் வடமொழி வியாகரண முதலிய இலக்கணங்களின் வழியாகச் செய்யப்பட்டதென்றும், மேலுலகத்தில் வழங்கிவந்த தேவநாகரி என்னும் எழுத்தைத் தேவமுனிவர்கள் இந்நிலவுலகத்தில் நிலைப்படுத்தினர் என்றும் இந்நூலிற் காணப்படும் சில கருத்துக்கள் நம்பத்தக்கன அல்ல. சில இடங்களில் தமிழ்ச் சொற்களையே பெய்து அவற்றை விளக்குதற்கு வட சொற்களைப் பின்னால் இட்டு எழுதப்பட்டிருக்கும் இந்நூல், வடசொல் விளக்கம் வேண்டாமல் தமிழேயிருந்து எளிதில் விளங்கக்கூடிய பல இடங்களில், எளிதில் விளங்காத வடசொற்களை மட்டும் மேற்கொண்டு எடுத்த இலக்கணத்தைத் தெளிவாக விளக்கவேண்டும் என்னுந் தன் கருத்துக்கு மாறாக அதை மயக்கி நிற்கின்றது. விளக்கம் வேண்டும் என்னும் இந்நூலின் நோக்கத்திற்குக் குறைவு நேராதபடி, ஒரு ஓர் அது அஃது என்னும் இவைபோன்ற பல நிலைமொழிகளோடு வந்துபுணரும் வருமொழிவகைகளும், உயர்திணைச் சொற்கள் சேரும்பொழுது பல சில வென்னும் அஃறிணைப் பன்

மைகள் ஒன்று இரண்டு என்னும் எண்ணுச் சொற்கள் அ அது என்னும் வேற்றுமை யுருபுகள் போல்வன எய்தும் மாறுபாடுகளும் இன்னும் இவைபோன்றவைகளும் இலக்கணத்தில் மிகவும் எளியனவேயாயினும் கற்றோர் சிலரிடையிலும் இவைதாம் இப்பொழுது பிழையின்றிக் காணப் படாமையின் இவைகள் இன்றியமையாது விளக்கப்பட்டிருத்தல் வேண்டும். இப்பொழுது வெளிவந்துகொண்டிருக்கும் இலக்கணநூல்கள் இவை தம்மை நெகிழவிட்டுக்கொண்டேவருகின்றன. 'ஆறன்ஒருமைக்கு அதுவும் ஆதுவும்' என்னும் இலக்கணத்துக்கு மாறாக அந்தச் சூத்திரத்தின் விளக்கத்திலேயே 'மாடது கால்கள்' என்பதை ஒருமைப் பன்மை வழுவாக இந்நூலில் எடுத்துக்காட்டியிருப்பதும் இதுபோன்றவைகளும் நீக்கிவிடற்பாலன.

பொதுவில், நன்னூலிற் கூறப்படும் எழுத்துச்சொல் விலக்கணங்கள் செவ்வையான பல நல்ல முறைகள் கொண்டு மிகவும் தெளிவாக இதன்கண் விளக்கப்பட்டிருத்தலால், இந்நூல் நன்னூல் பயிலும் மாணாக்கர்க்குப் பெரிதும் பயன்படுமென்று நம்புகின்றோம்.

---

பண்டிதர் திரு. பு. சி. புன்னைவனநாதமுதலியார் அவர்கள், 1928 'மார்ச்சுமாதம்' சென்னைப் பல்கலைக் கழகத்தார் நடத்தும் Inter mediate ஆராய்ச்சிக்குரிய தமிழ்ப்பாடச் செய்யுட் பகுதிகளாகிய குமரகுருபரர் பாடல் திரிகடுகம் என்னும் இவ் இரண்டுக்கும் எழுதியுள்ள உரைநூலை யாம் பார்வையிட்டேம்.

மாணுக்கர் இடர்ப்படாதபடி நூல்வரலாறு ஆசிரியர்வரலாறு நூலிற் குறிப்பிடப்பட்டுள்ள கதை வரலாறு இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் மேற்கோள்கள் கருத்து விளக்கங்கள் முதலியவற்றோடு, பதப்பொருள் முடிப்புரை என்பவைகளும் தெளிவாக இந்நூலில் எழுதப்பட்டிருக்கின்றன. நடையும் எளிது.

நூலாசிரியர் திருநெல்வேலி செயின்று ஜான் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும், பத்தாவது வகுப்புப் பாட புத்தகங்களுக்கு (Matric Texts) உரையாசிரியரும், தொல்காப்பியமூலம் முதலியவைகளின் பதிப்பாசிரியரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்துக்குந் தென்னிந்திய தமிழ்ச்சங்கத்துக்கும் ஆராய்ச்சி யாசிரியருமாய் (Examiner) இருப்பவர் ஆதலால், இந்நூல் நன்கு பயன்படும் என்பது திண்ணம். மாணவர்கள் படித்துத் தேர்ச்சி அடைவார்களாக!

---

## பிழை திருத்தம்

நம்செல்வி, சிலம்பு ௬, பரல் அ-ல் வெளிவந்துள்ள திருவருட்பா ஆராய்ச்சியில் இராமலிங்க அடிகளுக்குப் பரசுராமப்பிள்ளை என்பார் தம்பியார் என்றிருக்குமிடங்களில் அவர்க்கு அவர் தமையனார் என்று திருத்திக்கொள்க.




தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்ழத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(படைத்தல். காத்தல். அழித்தல். மறைத்தல். அருளல்.)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ரு } மெய்கண்டான்யாண்டு-எளரு கார்த்திகைத்திங்கள் 1927ஹுல நவம்பர்—டிசம்பர்மூ { பரல் கக

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக மூந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## கடவுள் நிலைக்கு மாறுன கொள்கைகள் சைவமாகா

[சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள்]

(௩அஅ - ம் பக்கத் தொடர்ச்சி)

இனிக் 'கேடொன்றில்லான்' என்னுஞ் சொற்றொடர் 'இறைவன் எக்காலத்தும் எத்தகைய அழிவும் எத்தகைய ஊறுபாடும் இல்லாதவன்' என்பதை அறிவுறுத்துகின்றது. அவன் ஒருகாலத்தில் இல்லாமலிருந்து பின்னை யொருகாலத்துத் தோன்றினவனுய் இருப்பினன்றே அவ்வாறு ஒருகாலத்துத் தோன்றினவன் பின்னே ஒரு காலத்து இறந்து கேடுறுவா

னென்று கொள்ளல் வேண்டும். கடவுளுக்குத் தாய் தந்தை யாவார் யாவரென்று எவரைக் கேட்பினும் அவரெல்லாம் அவற்குத் தாய் தந்தையர் இலரென்றே சொல்லுதலால், எவராலும் அவன் பிறப்பைக் கேட்டறிய முடியாமையின் அவன் பிறவாதவன் என்பது தெளியப்படும். அவ்வாறு தெளியப் படவே அவனுக்கு இறப்பும் இல்லையென்பது தானே போதரும். எவ்வெவ் வுயிர் பிறக்கின்றனவோ அவை யெல்லாம் இறக்கின்றன. பிறவி யெடுத்த உயிர்களுக்கே இறப்பும் நிகழக் காண்கின்றோமே யல்லது பிறவாதவைகள் இறத்தலை யாண்டுங் கண்டிலேம்.

'பிறப்புண்டேல் இறப்புண்டாம், இறப்புண்டேல் பிறப் புண்டாம்' என்னும் மூதறிஞர் மொழியும் இவ் வுண்மையினையே வலியுறுத்துகின்றது. பிறந்திறப்பன வெல்லாம் சிற்றறிவும் சிறுதொழிலு முடைய உயிர்களென்றும் பிறந்திறவாதவன் ஒருவனே இறைவன் என்றும் பகுத்துணர்ந்து கொள்வது மிகவும் இன்றியமையாததாகும். இவ்வாறு உயிர்களுக்கும் இறைவனுக்கும் உள்ள வேறு பாட்டினையும் அவ் வேறுபாட்டுக்கு ஏதுவான இலக்கணங்களையும் கடைப்பிடியாக உணர்ந்து கொள்ள வேண்டுவது பெரும்பயன் பெறவேண்டும் மக்களின் மெய்யுணர்ச்சிக்கு முதன்மையாகும். இவ்வேறு பாட்டினைக், கடவுளுக்குரிய பிறந்திறவாச் சிறப்பிலக்கணத்தை முதன் முதற் கண்டறிந்தவர்கள் சைவ சமய நன்மக்களே யாவர். பழைய யூதர்களும், மகமதியர்களுந் தவிர மற்றச் சமயத்தவர்களெல்லாரும் பிறந்திறக்கும் உயிர்களையே அவ்வவர்பாற் காணப்பட்ட சில ஆண்மைச் செயல்களால் கடவுளாகப் பிறழ உணர்ந்து அவை தம்மையே கடவுள் நிலையில் வைத்து வணங்கி வருகின்றார்கள். ஆனல் இத்தமிழ் நாட்டின்கண் உள்ள சைவசமயத்தவர்கண் மட்டும் பண்டைக் காலந் தொட்டுப் பிறந்திறவாத் தன்மையனே முழுமுதற் கடவுளாவன் எனத் தெளிய உணர்ந்து இன்றுகாறும் அக்கொள்கையிற் சிறிதும் வழுவாதவர்களாய் நிலைபெறுற்று வருகின்றனர். பிறப்பிறப்பில்லா இக்கடவுளிலக்கணத்தை நம் சைவ சமய ஆசிரியரும் பிறரும் வலியுறுத்திப் பாடிய பாட்டுக்களை முன்னரே நுங்கட்கு எடுத்துக் காட்டினேம். இன்னும் நம் சந்தா ஞசிரியராகிய அருணந்திசிவனரும்,,

'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே
மாதொரு பாகனர் தாம்வருவர், மற்றத் தெய்வங்கள்
வேதனைப்படும் பிறக்கும் இறக்கும் மேல்வினையும் செய்யும்
ஆதலால் இவைஇலாதான் அறிந்து அருள்செய்வ னன்றே"

என்று வரையறுத்துக் கூறிய அருமைத் திருப்பாட்டும் நம்ம ஞேர் ஒவ்வொருவர் உள்ளத்திலும் கன்மேற் செதுக்கிய எழுத்துப்போல் நிலைபெற்று நின்று நினைவு கூரற் பாலதாகும்.

அங்ஙனமாயினும், முன்னே யூதர்களும் மகமதியர்களுங் கூட கடவுளுக்குப் பிறப் பிறப்புச் சொல்லவில்லை யென்றமையால், சைவ நன்மக்களே அக்கடவுளிலக்கணத்தை அறிந்தார்களென்பது யாங்ஙனமெனின், அவர்கள் கடவுளுக்குப் பிறப்பிறப்புச் சொல்லாவிட்டாலும் கடவுள் பிறந்திறவாதவன் என்பதனையும் உயிர்களே பிறந்திறப்பன என்பதனையும் சைவசமய ஆசிரியர்களைப் போலப் பிரித்துக் காட்டி அவர்கள் ஆசிரியன்மார் எவரும் தமது விவிலிய வேதத்திலாதல் குரானிலாதல் வலியுறுத்திச் சொல்லி விளக்கினாரில்லை. மற்றுத் தமிழாசிரியர்கள் நூல்களிலோ மிகப் பழைய காலந்தொட்டே கடவுள் வினையின் நீங்கினவனென்றும், அவன் பிறவாயாக்கையன் என்றும், தந்தை தாய் இல்லாதவனென்றும், எல்லா உயிர்களும் இறந்த சுடுகாட்டில் தான் என்றும் இறவாது நின்றே ஆடுவானென்றும் பல காலும் வற்புறுத்திச் சொல்லும் மெய்யுரைகள் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன. ஏனைச் சமயத்தவர் நூல்களிலோ இங்ஙனம் வரையறுத்துரைக்கும் மெய்யுரையினைக் காண்டலியலாது. இறைவ னிலக்கணத்தைத் தெளிய உணர்தலும் இயலாது. ஆகவே பிறப்பு வளர்ப்புகள் ஒருவாற்றானும் கேட்டறியப் படாத முதல்வனுக்கு எவ்வகையான கேடும் எக்காலத்தும் எவ்விடத்தும் நிகழாதென்பது தெரித்தற் பொருட்டாகவே 'கேடொன்றில்லான்' என்னுஞ் சொற்றொடரைக் 'கேட்டாருமறியாதான்' என்னுஞ் சொற்றொடர்க்குப் பின்னே பெரிதும் இயைபுபடவைத்து மாணிக்கவாசகப்பெருமான் அருளிச்செய்வாராயினர்.

இனிக் 'கிளையிலான்' என்பது 'சுற்றத்தாரை இல்லாதவன்' என்று பொருள்படும். உறவினரைக் குறிக்கும் சுற்றம் கேள் உறவு முதலான பல தமிழ்ச் சொற்களிருக்கவும் அவற்றையெல்லாம் விட்டுக் கிளையென்னுந் தமிழ்ச் சொல்லால் அடிகள் அதனை அருளிச் செய்திருக்கும் நுட்பம் ஆராயற்பாலது. கிளை யென்னுஞ்சொல் ஒருவர்க்கும் அவரோடு உடம்பின் தொடர்பு உடையார்க்கும் உள்ள நெருங்கிய இசைவினைத் தெரிவிக்குமாறு போல் மற்றச்சொற்கள் தெரிவிக்கவில்லை. கிளையென்பது முதன் முதல் மரத்தின் கோடுகளுக்கே பெயராக வழங்கப்பட்டதாகும். ஒரு மரமும் அம்மரத்தினின்று பல கவர்களாகப் பிரியும் கிளைகளும் ஒன்றைவிட்டொன்று வேறாகாமல் பெரிதும் இயைந்து

நிற்கின்றன. இங்ஙனமே ஒருவனுக்குக் கிளைகள்போல் நெருங்கிய தொடர்புடையராதற்குரியார் அவன் தான் பிறத்தற்கு இடமான தாய் தந்தையரும் தன்னோடுடன்பிறந்த தமையன் தம்பி முதலியவரும் தம்மினின்றுபிறக்கும் மக்களும்அம்மக்களினின்று பிறக்கும் மக்களும் தன்னோடுடன்பிறந்தாரினின்று பிறக்கும் மக்களும் அம்மக்களுக்கு மக்களும் என அவனோடு நெருங்கிய உறவு வாய்ந்தாரே யாவர். மற்றச் சுற்றத்தார் உறவினர் கேளிர் என்பவரெல்லாம் அவனுக்கு அத்துணை நெருக்கம் உடையாரல்லர். அதுபற்றியேதான் ஒருவனுக்கு மிக நெருங்கிய உடம்பின் தொடர்புடையாரைக் குறித்தற்கு மாணிக்கவாசகப் பெருமான் கிளையென்னுஞ் சொல்லைச் சிறந்ததொன்றாக எடுத்துக் கொண்டார்.

இனி இறைவன் தான் பிறத்தற்கு இடனான தாய்தந்தையரும் தன்னோடுடன்பிறந்தாரும் தனக்கு மக்களாவாரும் அம்மக்களுக்கு மக்களாவாரும் தன்னுடன்பிறந்தார்க்கு மக்களாவாரும் அம் மக்களுக்குப் புதல்வராவாரும் இல்லாதவனென்பது முன்னமே பெறப்பட்டமையால், அத்தகைய நெருங்கிய சுற்றத் தொடர்பு சிறிது மில்லாதவன் என்பதை அறிவித்தற்கே 'கிளையிலான்' என்றார். கிளைஞராகிய பெருந் தொடர்பு இல்லாதவர்களுக்கு அத் தொடர்புபற்றி வரும் மற்றைச் சுற்றத்தாரும் இல்லாமை தானே பெறப்படுமாதலால், இறைவனுக்கு வேறு அகன்ற சுற்றத்தாரும் இல்லை என்பது இது கொண்டு முடிக்கப்படும். நெருங்கிய உடம்பின் தொடர்பிலிருந்தே ஏனை எல்லாச் சுற்றங்களும் அச் சுற்றங்களைப்பற்றி வரும் பல் வேறு அல்லல்களும் ஒன்றிலிருந் தொன்றாய்க் கிளைக்கக் காண்டலால், அவ்வெல்லாவற்றிற்கும் அடிப்படையான உடம்பின் தொடர்பினை இறைவன் ஒரு சிறிது மில்லாதவன் என்பது தெரித்தற்கே உடம்பின் தொடர்புக்குப் பெயரான கிளையென்னுஞ் சொல்லை எடுத்தாண்டு அச் சொல்லால் எவ்வகைத் தொடக்கு மில்லாத இறைவனியல்பைச் சுருங்கச் சொல்லல் ஆழமுடைத்தாதல் என்னும் அழகுபெறக் கூறிய அடிகளின் அறிவின் திறத்தை என்னென்பேன்!

அங்ஙனமாயின், எண்ணிறந்த உயிர்கள் இறைவன் என்றுள்ளானோ அன்று தொட்டே அவனிடத்தில் தாமும் தம்மிடத்தில் அவனுமாக நெருங்கிய தொடர்புடையராய் இருத்தலால் உயிர்களை அவனுக்குக் கிளைஞராகக்கூறுதல் பொருத்தமன்றோஎனின், கிளைஞரென்பார் ஒருவருக் கொருவர் உதவியுந் துணையுமாய் இருக்குந் தன்மையராவர். இது கிளையென்னுஞ் சொல்லின் முதற் பொருளினாலேயே இனிது விளங்கா நிற்கும். எங்ஙனமெனின்,

மரத்தாற் கிளையும் கிளையால் மரமும் உயிர் வாழ்கின்றன. அடிமரத்தை வெட்டினால் கிளைகள் பட்டுப்போம். கிளைகளையெல்லாம் வெட்டினால் மரமும் பட்டுப்போம். இது பெரும்பாலும் எல்லா மரங்களிடத்தும் காணப்படும் உண்மை நிகழ்ச்சியாம். இது போலவே தாய் தந்தையர் தம் மக்கள் இளைஞரா யிருக்கும் பொழுது அவர்க்கு உதவியுந் துணையுமாய்நின்று அவரைப் பாதுகாத்து உயிர்வாழச் செய்கின்றனர். மக்கள் வளர்ந்துபெரியராம் பொழுது தம் தாய்தந்தையர் ஆண்டின் முதிர்ந்து வலிவுகுன்றப் பெறுதலால் மக்கள் அவர்க்கு உதவியுந் துணையுமாய் நின்று அவரை உயிர்வாழச் செய்கின்றனர். இங்ஙனமே உடன் பிறந்தாரும் ஒருவருக்கொருவர் உதவியுந் துணையுமாய் நின்று உயிர் வாழ்தலை நேரே காண்கின்றோம். ஆகவே கிளைஞராவா ரெல்லாரும் ஒருவருக்கொருவர் உதவியுந் துணையுமாய் நின்று ஒழுகினால் மட்டும் அவர் கிளைஞரென்று பெயர் பெறுதற் குரியா ரென்பது பெறப்படும். இந்த முறையில் வைத்துக் கடவுளும் கடவுளோடு தொன்று தொட்டு இருக்கும் உயிர்களும் ஒருவருக்கொருவர் உதவியுந் துணையுமா யிருந்து உயிர்வாழுந் தன்மையராயின், அவர் தம்மையுங் கிளைஞரென்று மொழிதல்பொருந்தும். கடவுள் உயிர்களுக்கு உற்ற துணையும் உதவியுமாய் நிற்றல்போல உயிர்களுங் கடவுளுக்கு உற்ற துணையும் உதவியுமாய் நின்று அவரை உயிர்வாழச்செய்குவாராயின், அவரை அவர்க்குக் கிளைஞரென்று கூறுதல் பொருத்தமாம். மற்று உயிர்களோ பண்டு தொட்டே அறியாமை யென்னும் பேரிருளால் விழுங்கப்பட்டுத் தம்மையும் உணராமல் தம் உயிர்க்குயிராய் நின்று தமக்குப் பேருதவி செய்துவரும் முதல்வனையும் உணராமல் வலியற்ற நிலையினராய் இருத்தலாலும் இறைவனுடைய உதவியைப் பெற்று அறிவுவிளங்கித் தம்மையுந் தலைவனையும் உணரும்நிலை வந்தஞான்றும் தம்முடைய அறிவும் செயலும் இறைவன்றன் பேரறிவு பேராற்றல்களின் முன் வலிவிழந்தன வாயே இருப்பதல்லது அவ் விறைவற்குத் தம் அறிவாலும் தம் செயலாலும் செய்யத்தக்க உதவி சிறிதுமில்லாமையாலும், எல்லாச் செல்வமும் செயலும் உடைய இறைவனுக்கு முன் அவ் உயிர்கள், செயலிழந்த வறிய இரவலரே யாவரல்லது அவனுக்குக் கிளைஞராதல் ஒருவாற்றானுஞ் செல்லாது. இங்ஙனம் எண்ணிறந்த இவ் உயிர்த் தொகைகளை யெல்லாம் எல்லாம் வல்ல இறைவனுக்குக் கிளைஞராகச் சொல்லுதல் ஒருவாற்றானும் இசையாமையால், இவ் உண்மையை நன்குணர்ந்த மாணிக்கவாசகப் பெருமான் 'கிளையிலான்' என்று அருளிச்செய்தாரென்பது.

---

# இரண்டன்மை (அத்துவிதம்)

[திரு. மா. வே. நெல்லையப்பப்பிள்ளையவர்கள் B. A.]

உலகநெறியிலுள்ள இரண்டன்மையைப் பற்றிய உண்மை முன்னே செந்தமிழ்ச்செல்வி சிலம்பு ரு பரல் ஙு, ச, கூ ல் எழுதப் பட்டது. அவைகளின் தொடர்பாகச் சில கருத்துக்களை இயன்றவாறு வரைதலே கட்டுரையின் கருத்தாகும்.

சிறப்பியல்பு நிலையில் (சொரூபநிலை) சிவம் ஒரு பொருளா யுள்ளது. இந்த நிலையில் அவனது அருளாற்றல் (அருட்சத்தி) அவனிடம் அடங்கியுள்ளது. பொது இயல்பு நிலையில் (தடத்த நிலை) சிவத்தினிடத்திலிருந்து உள்ளடங்கியிருக்கும் அருளாற்றல் விரிந்து சிவம் ஆற்றல் என இரண்டும் இரண்டு பொருளா யுள்ளன. இந்த அருளாற்றலானது உருத்திரன், திருமால், நான்முகன் என்னும் மூன்றாய் விரிந்து மூன்று வடிவங்களாய் விளங்குகின்றது. சிவனொருவனே நான்முகனாகிப் படைத்தற் றொழிலையும் திருமாலாகிக் காத்தற் றொழிலையும் உருத்திரனாகி அழித்தற்றொழிலையும் செய்கின்றான்.

இக்கருத்துக்களையே திருஞானசம்பந்தப்பெருமான்

"ஒருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விரிசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை"

என்று தாம் பாடிய திருவெழுகூற்றிருக்கைத் தேவாரத்திலும்,

"மூவருமாகி இருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி"

என்று திருப்பேணுபெருந்துறைத் தேவாரத்திலும் பாடியருளி னார். திருநாவுக்கரசு அடிகள்

"உருமூன்றாய உணர்வின்கண் ஒன்றானை"

என்று திருவாலம்பொழில் திருத்தாண்டகத்திலும், சுந்தரமூர்த்தி அடிகள்

"மூவராயு மிருவராயு முதல்வ னவனேயாம்"

என்று திரு எதிர்கொள்பாடித் தேவாரத்திலும் பாடியருளினார் கள்.

சிவபெருமான் ஒருவனே பொது இயல்பு நிலையில் உருத்திரன், திருமால், நான்முகன் என்னும் மூன்றுவடிவி (மூர்த்தி)களாகியும் அவர்களுக்கு முதல்வனாகியும் விளங்குகின்றான். அப்படி விளங்குமிடத்துச் சிவபெருமானுடைய அருளாற்றலில் ஒரு சிறு கூறு உருத்திரனிடத்திலும், அதனிலும் சிறிய ஒரு கூறு திருமாலிடத்திலும், அதனிலும் சிறிய ஒரு கூறு நான்முகனிடத்திலும் விளங்குகின்றது. அம்மூவரும் சிவபெருமானுடைய அருளாற்றலைக்கொண்டே தங்கள் தங்கள் தொழிலைச் செய்கின்றார்கள். சிவபெருமானுடைய அருளாற்றலானது மூவர்களிடமாய் விளங்குமிடத்து அவனுக்கும் உயிருக்கும் உளதாய் ஒன்றாய் நிற்கும் நிலை, வேறாய் நிற்கும் நிலை, உடனாய் நிற்கும் நிலை என்று கூறப்பட்ட மூன்றுவகையான இரண்டற்ற (அத்துவித) நிலைகளும் உளவாம் என்று நாம் உய்த்துணரலாம். ஒன்றாய் நிற்கும் நிலை திருமாலிடத்திலும், வேறாய் நிற்கும் நிலை உருத்திரனிடத்திலும், உடனாய் நிற்கும் நிலை அயனிடத்திலும் உள்ளன. இப்படி அறியுந் தன்மையில் மூன்று இரண்டற்ற நிலைகளும் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாதவைகள் என்று நாம் அறிதல் கூடாது. ஒவ்வொரு நிலையிலும் ஒரு நிலை மேலிட்டிருந்தாலும் மற்ற இரண்டு நிலைகளும் குறைவாகவேனும் அதனுடனே உள்ளன. அயனுடைய படைத்தற்றொழிலில் செயல் மிக்கு விளங்குகின்றது. மற்றைய அறிவு வேட்கைகளும் அதனுடனே குறைந்து விளங்குகின்றன. திருமாலின் ஆற்றலை நான்முகனும் உருத்திரன் ஆற்றலைத் திருமாலும் நேரே கொண்டு தத்தம் படைத்தல் காத்தல் தொழில்களைச் செய்கின்றனர். திருமாலினுடைய காத்தற்றொழிலில் வேட்கையின் தன்மையாகிய அன்புமிக்கு விளங்குகின்றது. மற்றைய இரண்டும் குறைவாகவாயினும் உடன் விளங்குகின்றன. திருமால், நான்முகன் ஆற்றலைக் கொண்டு காத்தற்றொழில் செய்வதில்லை. உருத்திரனுடைய அழித்தற்றொழிலில் அறிவுமிக்கு விளங்குகின்றது. ஆனால் அதில் அன்பு செயல் இரண்டுங் குறைவாக விளங்குகின்றன. உருத்திரன் செய்யும் அழித்தற்றொழிலில் திருமாலாவது நான்முகனாவது தொடர்பு படுவதில்லை.

மூன்று தேவரையும் செயலாளர்களாகக் (அதிகாரிகளாகக்) கூறுமிடத்துப் படைத்தற்றொழிலில் நன்கு பயின்றவர்தான் காத்தற்றொழில் பெறத் தகுதியுள்ளவர் ஆவர். அழித்தற்றொழிலைச் செய்கிறவர் காத்தற்றொழிலையும் படைத்தற்றொழிலையும் செய்யத் தகுதியுடையராவர். காத்தற்றொழிலைச் செய்கிறவர் படைத்தற்றொழிலையுஞ் செய்யத் தகுதிஉடையராவார். ஆனால் அவர் அழித்தற்றொழிலைச் செய்யத் தகுதி யுடையவரல்லர். படைத்தற்றொழிலைவிடக் காத்தற்றொழிலும் காத்தற்றொழிலை

களே யாம். வடமொழிக்கணுள்ள மறைகள் ஏட்டிலெழுதும் இயல்பில்லாது பயில்வோரெல்லாம் அவற்றை அறிந்தோரிடத் துக் காதாற் கேட்டு நெட்டுருச் செய்து நினைவில் வைக்கவேண் டும் தன்மையுடைத் தாகையால், காலப் போக்கில் அவைதம் உண்மைநிலை பிறழ்ந்து மாறுதலடையும் என்பது ஒரு தலை. ஏட் டிலமைந்த நூல்களே ஒரு சில நூற்றாண்டுகளுள் பெரிதும் திரி பெய்தியதை இயல்பாய்க் காண்டுமாகையால், எழுத்திலமையா தியங்கும் இவ் வடமொழி வேதங்கள் அவை தோன்றிய காலத் திற்கும் இக் காலத்திற்கு மிடையில் எத்துணை மாறுதலடைந் திருக்குமென்று கூறவும் வேண்டுமோ! இறையருள் விழைவிற் றோய்ந்து நின்ற ஒரு சில முனிவர்கட்கு முதன்முதல் இவ்வாரிய மறைகள் இறைவனு லருளப்பட்டிருத்தல் கூடும். ஆயின் அவை கள் அருளப்பெற்ற மொழியின் நிறைவின்மை காரணமாக இந் நாள் தம் தூயநிலை முழுதும் பிறழ்ந்து, தம் ஆசிரியர் பெருமைக் கும் இழுக்கந்தேடிப் பல்வேறு புல்லிய உரைகளையும் முறைகளை யும் தம்முட் கொண்டு நிலவுகின்றன. ஆனது பற்றியே திரி புறும் நீர்மை யுடைத்தாகிய எழுதா மறைகளைப்போ லில்லாது மாறா நிலைப்பேறுடைய பெருமை வாய்ந்த தமிழ் மறைகளை 'எழுதுமறை' யெனப் புராண ஆசிரியர் புனைந்து கூறினர் போலும்!

'கண்ட பெரு மந்திரமே மூவர் பாடல் கைகாணு மந்திரங் கண்ணுதலோன் கூறல்' என்றும்,

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத்தேடு
மதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே யன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல் பாரின்
எரியிடைவே காதஆற் றெதிரே யோடும்
என்புக்கு முயிர்கொடுக்கும் இநெஞ் சாற்றும்
கரியைவளை விக்கும்கன் மிதக்கப் பண்ணும்
கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே"

என்றும் எழுந்த திருவாக்குகள் நம் தமிழ் மறையின் பெரு மைக்குத் தனிப்பெருஞ் சான்று நுவல்கின்றன. உரையி லடங்காப் பெருமை வாய்ந்த மாணிக்க வாசகரது திருவாசகங் களைச் செவிமடுத்து ஆரா இன்பந் துய்த்த போர இயற்கைப் பெம்மான் மணிமொழித் தேவனுடைய இன்னுரைகளை உலகுய் வான் ஏட்டிற் றெருக்கவேண்டுமென்னும், பேரவாக் கொண்டு அன்னவர் பால் ஓர் அந்தணர் வடிவமாய் நண்ணி 'அன்ப, நின்

என்பெலாம் கனிந்தொழுகும் திருவாசகத்தை யான் ஓதித் துன்பம் நீக்கி இன்ப மடையும் பொருட்டு எழுதிக்கொள்ள வந்தேன். ஒருகால் அவற்றை விளம்பவேண்டும்' என்று கேட்க அடிகளும் மனமகிழ்ச்சியோடு அவற்றைப் பகர்ந்தருளினர். அந்தணராவார் மேலும் 'அன்பனே! நின் திருவாசகத்தின் இனிமை என் என்பெலாம் சென்று செறிந்தது. ஆகையால் அப்பனைத் தலைவனாக வைத்து ஓர் கோவையும் தொகுத்தருளல் வேண்டும்' என்று இரந்தனர். அதற்கு அடிகள் பெரிதும் மனமுவந்து 'திருக்கோவையார்' எனும் விழுமிய நூலைக் கடலமுதெடுத்துக் கரையில் வைத்ததுபோற் பரப்பின் தமிழ்ச் சுவையெலாம் திரட்டித் திறம்பட உரைத்தருளினர். கரந்த கோலங்கொண்ட அரவணி அந்தணனும் உடனே நாயனார் பெருமையையும் அவரது நூல்களின் விழுமிய மாண்பையும், அந் நூல்களுக்கும் தனக்கும் உரிய உவகைத் தொடர்பையும் உலகினர்க்குத் தெரிப்பான் ஏடுகளினிறுதியில் "மாணிக்க வாசகர் சொல்லச் சிற்றம்பலமுடையார் எழுதியது" என்று பொறித்தருளினன். இது போன்ற புகழுடைச் செயலை நினைந்து கனியா திருத்தலுங் கூடுமோ! அன்புடையீர் கூறுமின்! எனவே இதுகாறுங் கூறியவாற்றால் வடமொழி வேதாகமங்களெனும் மறை நூல்கள், நம்மருமைத் தமிழ் மறைகளாம் தேவார திருவாசகங்களினும் பார்க்கத் தினைத்துணையேனும் பெருமை மிகுந்தன அல்ல என்பதூம், வடமொழி மறைகளைப்போல் எமது மறைகளும் இறைவனருளப்பட்டனவேயாமென்பதூம், வடமொழிச் சுலோகங்களைப்போற் கரடு முரடான நீர்மையில்லாது பயில்வோர் மனத்தை யெல்லாம் சிவன்பா லீர்க்கும் சீரியபான்மையும் இசையினும் மிக்க இனிமையும் நம் தமிழ் மறைகளுக்குத் தனியுரிமையா மென்பதூம் உய்த்துணரற் பாலனவாகும். உண்மையிவ்வா றிருப்பதால் தமிழ்நாட்டுச் சைவக் கோவில்களிலும் பிற விடங்களிலும் இறை வழிபாட்டிற்குச் சமஸ்கிருத சுலோகங்கள் வேண்டாமென்றும், தமிழ் மறைகளின் துணைகொண்டு அவற்றைச் செய்வதே யுகந்ததென்றும் யாம் உள்ளதை உரைத்துழி எம்மேற் பெரிதும் வெகுண்டு சொல்லம்புகள் பெய்து பகைமையும் பொறாமையும் பாராட்டித் தாம் பிடித்த முயலுக்கு மூன்று காலெனக் குருட்டுத்தனமாய் நின்றுளாறும் பேதையார்க்கு மனஞ்சோராது மேன்மேலும் உண்மை தெருட்டுதலே செய்யக் கடவேம். தெருளாதார்க் கிரங்கிச் சிவத்தை வேண்டுதலே யொழிய அவரை இழித்துக் கூறல் உகந்ததன்று

அன்பர்களே! தமிழ் மறையின் தனிப்பெருமாண்பை இனிமேலாகுதல் உணருமின்! உணர்ந்துய்மின்! நறைபழுத்த தமிழ்

மறையின் துணைகொண்டு இறைவணக்கம் புரிமின்! பண்ணும் பொருளும் பொலிந்து மிளிரும் செழுந்தமிழ்த் திருமறைகளாகிய தேவார திருவாசகங்களை யன்றோ கோவில்களிலேனும் பிறவிடங்களிலேனும் யாம் ஓதல் வேண்டும். ஓதுவித்தலும் வேண்டும். எவற்றினும் விழுமியவாயுள்ள தமிழ் மறைகட்குரிய மேன்மையைக் கொடாது, ஆரியமொழிச் சுலோகங்களையும் வேதங்களையும் மட்டும் பேணி வந்ததுபோல் இனிமேற் பேதுற்று மயங்காது தெளிந்துய்வோமாக!

சமயப் பெருநிலையங்களாயுள்ள நம் கோவில்களில் நிகழ்வனவற்றுள் இன்னுமொன்று ஆராயற்பாற்று. நம் மில்லங்களிலிருந்து ஒருப்பட்ட மனத்துடனும் ஒடுங்கிய உள்ளத்துடனும் இறைவனைத் தொழுதல் இயலாதாகையா னன்றோ, கடவுள் வழிபாட்டிற் கென்று புறத்தே இக் கோவில்களெல்லாம் அமைக்கப்பெற்றன. மலமறைப்பினாற் கறைகெழுமி யிருக்கும் நம்மனோரகத்தைத் தூய்மை யாக்கி இறைவனைத் தொழற்கென்று யாம் கோவில்கட்குச் செல்ல, ஆண்டு நிகழ்வனவெல்லாம் எம்பெருமானை வழுத்துதற்குகந்த மனவமைதி ஒரு சிறிதேனும் தாராவாய் மனக்குழப்பத்தையே யுண்டாக்கிக் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக் கொள்ளுவதுபோற் செய்திடுகின்றன. பாருங்கள்! கடவுளுக்குகந்த வேள்வியாற்றுகிறேமென்ற பேய்க் கொள்கைக்கு ஆட்பட்ட புல்லறிவாளர் பலர் ஆண்டவனது திருக்கோவில்களிலே பல்லாயிரக் கணக்கான சிற்றுயிர்களைக் குருதி பெருகச் சிதைத்தும், சிதைக்கப்பெற்ற ஊன்களை விலைகூறி விற்றும், கட் சாராய மாதிய பல் வேறு குடிவகைகளைக் குடங்குடமாய் மொண்டு வெறிக்கூத்து நிகழ்த்தியும் இன்னோரன்ன பல புன்மைகளைப் புரிந்து நிற்கும் பொழுது, எம்பெருமானை யார்தான் வழுத்தல் முடியும். இது மட்டோ, இவ்வளவில் நில்லாது, பண்பொன்று மில்லாப் பரத்தையர் நடனங்கூட இறைவனுக்குகந்ததென நினைந்து அவர்களை அழைத்து அப்பன் நிலையங்களில் ஆட்டம் நிகழ்த்தியும் இன்புறுகின்றனர்! ஆ! இவையெலாம் சமய வழிபாட்டின்பாற்பட்டனவாமோ! இவற்றை யெல்லாம் தமிழ் நாட்டினருக்குப் போதித்தருளிய பேராசிரியன்மாரும் யாரோ தெரிகிலேம்! அடியார் உவககும் ஆண்டவன் திருக்கோவில்களெல்லாம் படிற்றொழுக்கம் பூண்ட புல்லர் விழைவுறு களிபயில் மன்றங்களாக (Theatres) வன்றோ இக்காலத்தில் மாறிவிட்டன. திருவிழாக் காலங்களில் நிகழ்வுறும் புன்மைகள் இன்னும் பலப்பல உண்டு. வாணவேடிக்கை பார்க்கவென்றும் வடிவான சம்பளம் வந்ததென்றும் வயங்கு கோதையில் வண்மலர் சூடியும் இலங்கு நுதற்கண் துலங்கு திலகம் நுண்ணிதாய்ச் சுட்டியும் பொன்னும் மணியும் பொலிவுறப் புனைந்த பல்வேறணிகள்

எழில்பெற அணிந்தும் பத்து நூறு பெறுமதியான பட்டும் பருத்தியும் பொற்புற உடுத்தும் முன்னும் பின்னும் பார்த்துப் புன்னகை முகிழ்த்துப் புதியதோர் மகிழ்ச்சியுடன் பெரிதும் அலங்காரமாய் நாடகக் கணிகையர்போல் சைவமாதர்கள் திருக்கோவில்கட்குச் செல்வதைக் கண்டும் ஐயகோ! சைவப் பெண்மணிகள் தம் நிலைமைதான் என்னே! திருக்கோயிலுக்குச் செல்லும் திருக்கோலம் இது தானோ! அறிவுடையீர் கூறுமின்! மாலைப் பொழுதிற் கடற்கரையோரமாய்க் கொழும்புப்பட்டினத்தில் உலாப்போகும் மங்கையர்க்கும், யாழ்ப்பாணத்தில் திருக்கோவில்சட்குப் போகும் மாதர்கட்கும் புறத்தேயோர் வேற்றுமையுமில்லை. அகத்தே யேதும் வேற்றுமையுண்டோ தெரிகிலேம்! பதக்கஞ் சங்கிலியில்லாது சிவபிரான் திருக்கோயிற்குச்சென்று பத்தியுடன் எம் அப்பனை வழுத்துதல் முடியாதெனத் தங்கணவருடன் பிணங்கி நிற்கும் பத்தினிப் பெண்டிர் பலரை இற்றைநாளிற் காணல்கூடும். ஆ! அறியாமையின் பெருமிதம் தான் இருந்தவாறென்னே! தமிழ் நாட்டுச் சைவமாதர்கட்கு விழுப்பெரும் எடுத்துக் காட்டாகத் திகழ்வுறும் திலகவதியம்மையார், மங்கையர்க்கரசியார், புனிதவதியார் போன்ற மாதரசிகள் தம் நலங்கெழு வரலாற்றினையும் அன்பிற் கனிந்த ஒழுக்கத்தினையும் அன்னார்தம் எளிய வாழ்வின் விருப்பத்தையும் இன்னுள் எம்மினியார் அறிந்திலர்போலும்! 'செப்பரும் பெருமை யன்பாற் றிகழ்திரு வாலங்காடு நற்பதி தலையினாலே நடந்து' காரைக்காலம்மையார் எம்பெருமானைப் பரசியிருப்ப, இற்றை ஞான்றுள்ள பெண்மணிகட்கு ஒரு கால்கட்டை தூரத்தில் இருக்கும் கோவில்கட்குப் போவதென்றாற்கூட மோட்டார் வண்டியும் கைவண்டியும் வேண்டியதா யிருக்கிறதே! என்ன அறியாமை!

தமிழ்த்தாயீன்ற தகைசால் நங்கைகாள்! நுங்களையொன்று வேண்டுதும்; அன்புடன் அதற்கிசைவீர்களென்று நம்புகிறேன். ஊழ்வினைக் காரணமாகி இந்நாள் எம்நாட்டிடைத் தோன்றி எம்பழைய சிறப்பை யெல்லாம் சிதைத்துப் பொய்ம்மையையும் ஆரவார நீர்மையையும் பெருக்கிக் காட்டுத் தீப்போற் பரந்து எம்மனோரை யெல்லாம் பற்றி மயக்கிவரும் மேலைநாட்டுப்போலி நாகரீகத்தின் பயனாக நும்மாற்பெரிதும் உவந்து பாராட்டப்படும் புறப்புனைவைத் தவிர்மின்! அகத்தூய்மையோடிசைந்த புறத்தூய்மையே ஆண்டவனுக்கு உவகை தருவது. அகத்தூய்மை யில்லாப் புறப்புனைவு ஆண்டவனுக்கு வெறுப்பைத்தருவது; அறிவுடையார்க்கெல்லாம் அது அருவருப்பை விளைக்கு மன்றோ! நெருநல் உளது இன்றில்லை யென்னும் நீர்

மையுடைத்தாயும், மலக்கடலின்பா லீர்க்கும் புன்மையுடைத் தாயும் உள்ளதாகிய இவ்வுடலை நீத்து இறைவனுடன் தலைக்கூடி இறவாப் பேரின்பந்துய்க்கும் ஒரு பெரும் நோக்கத்தையே கடவுள் வழிபாடானது குறிக்கொண்டிருப்ப, யாம் இன்னணம் புறப்புனைவு புரிதல் எம்நோக்கத்திற்கு முழுதும் முரணாய் முடியுமன்றோ? அன்புடை நல்லீர்! அப்பன் நிலையங்களை அலங்காரக் காட்சி நிலையங்களாகக் (Show Rooms) கருதாது இப்புல்லொழுக்கம் தவிர்ந்து நன்னெறிச் சேர்மின்! Hazeline Snow வுக்கும் Toilet (Powder) க்கும் ஈடாகத் திருநீற்றை நம் திருநுதற்கண் திகழ்வுறப் பூசிக்கொண்டு உண்மைச் சிவனடியார்தம் திருக்கோலத்துடனும் கந்தை மிகையாங் கருத்துடனும் எம் அண்ணல் நிலையங்களை நண்ணுதலே யாமுய்தற்குரிய நெறியென்பதைச் சாலவும் தெளிமின்! சைவ சமயமானது தற்கால வீழ்நிலையினின்றும் உய்யவேண்டுமாயின் அதுவும் பெண்மணிகளாகிய எம் தாய்மார்களாலேயே முடியவேண்டும். எம் அருட்டாயாகிய உமையம்மையாற் குழந்தைப் பெருமான் "எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்த பாலடிசில்" ஊட்டப்பெற்றதினாலன்றோ இத்தென்றமிழ் நாட்டின்கண்ணே மாண்புடைச் சைவ நெறியானது மறுபடியும் சீர் நிறைந்த நிலைபெறெய்தியது. அதையொப்பச் சைவமாதர்களாகிய எம் தாய்மாரனைவரும் தம் குழந்தைகட்கு முலையமுது ஊட்டும் போது சிவனருள் விழைவெனும் செழுந்தேன் குழைத்து ஊட்டுவராயின் எம் நாடு சம்பந்தரன்ன சிவஞானக் கன்றுகள் மலிந்துள்ள திருநாடாய் விடுமே. மங்கையர் குலக்கொழுந்தா யிலங்கும் 'மங்கையர்க்கரசியார்தம் பெருமையை எம் பெண்மணிகள் உணராத புன்மையன்றோ எம் சமயத்தை இந்நிலையிற் புகுத்தி விட்டது. ஆ! ஆண்டவனே! மங்கையர்க்கரசியன்ன தவத்திற் சிறந்தவோர் மாதரசியை விரைவில் இந்நாட்டிடைத் தோற்றுவித்து எம்மனோரை யெல்லாம் ஆண்டு கொள்ளல் வேண்டும்; இன்றேல் யாமெல்லாம் அழிந்து போதல் திண்ணம்.

(தொடரும்)

---

## பிழைதிருத்தம்

இந்த இதழில், ௬௧௰-ம் பக்கத்துக்குப் பின் ௬௬௧ முதல் எண்ணிட்டுப் பதினாறு பக்கங்கள் அச்சிடப்பட்டுள்ளதை, ௬௬௧ முதற் பதினாறு பக்கங்களாகக் கணக்கிட்டுக் கொள்க.

# தமிழ் இலக்கியம்
# TAMIL LETERATURE

## உலகநீதி

## ULAGANIDHI* (Worldly Virture)

காப்பு.

உலகநீதிப் புராணத்தை யுரைக்கவே
கலைகளாய்வரும் கரிமுகன் காப்பு.

May the Lord of many sciences, the Elephant face Ganesha be my help when I utter forth these words of ancient wisdom.

I. க. ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்.
Neglect not your daily study.

உ. ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
Speak ill of no one.

ந. மாதாவை யொருநாளும் மறக்க வேண்டாம்.
Forget not your mother.

ச. வஞ்சனைகள் செய்வாரோ டிணங்க வேண்டாம்.
Associate not with treacherous men.

ரு. போகாத விடந்தனிலே போக வேண்டாம்.
Go not to forbidden places.

சு. போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்.
Do not speak of ill of any behind his back.

எ. வாகாரும் குறவருடை வள்ளிபங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே !

Praise rather my heart, Him mounted on the Peacock, the wedded Lord of lovely Valli.

---

* The name is derived from the opening words, like the do'nt of *2nd warrants* for instance.

II. ௧. நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
Do not wilfully tell a lie.

௨. நிலையில்லாக் காரியத்தைச் செய்ய வேண்டாம்.
Set not your hand to worthless tasks.

௩. நஞ்சுடனே ஒருநாளும் பழகவேண்டாம்.
Become not familiar with poison.

௪. நல்லிணக்க மில்லாரோ டிணங்க வேண்டாம்.
Do not associate with those who keep bad company.

௫. அஞ்சாமற் றனிவழியே போகவேண்டாம்.
Go not with fool-hardy courage a lonely fearsome way.

௬. அடுத்தவரை யொருநாளுங் கெடுக்கவேண்டாம்.
Ruin not those who throw themselves on your mercy.

௭. மஞ்சாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே !

III. ௧. மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்.
Follow not your own sweet will.

௨. மாற்றானை யுறவென்று நம்ப வேண்டாம்.
Believe not in the kinship of an enemy.

௩. தனந்தேடி யுண்ணாமற் புதைக்க வேண்டாம்.
Bury not hard earned treasure, stinting yourself the necessaries of life.

௪. தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்.
Do not give up righteousness.

௫. சினந்தேடி அல்லலையுந் தேட வேண்டாம்.
Lose not your temper nor suffer from the evil effects thereof.

௬. சினந்திருந்தார் வாசல்வழி சேர வேண்டாம்.
Go not by the doors of those angered against you.

௭. வனந்தேடுங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே!

(தொடரும்)

# புறநானூற்றின் ஆராய்ச்சி

[பண்டிதர் திரு ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்.]

புறநானூறு என்பது சங்கப் புலவர்களால் அருளிச் செய்யப்பட்ட எட்டுத்தொகையுள் ஒன்று. பாரதம் பாடிய பெருந்தேவனார் முதல் கோவூர் கிழார் இறுதியாகவுள்ள புலவர் பலரால் பாடப்பெற்ற நானூறு அகவற்பாக்களை யுடையது. இதிலுள்ள பாக்கள் எல்லாம் தமிழுக்கே உரிய அகம் புறம் என்னும் பொருளிலக்கண வகையுள் புறப்பொரு ளிலக்கணத்தின் திணை துறைகளுக்கு இலக்கியமாக உள்ளவை. இந்நூற் செய்யுட்களிலிருந்து, பழைய நாளில் தமிழகத்திலிருந்து செங்கோலோச்சிய முடியுடைத் தமிழ் வேந்தராகிய சேர, சோழ, பாண்டியர்களில் பலருடைய வரலாறுகளையும், பாரி, பேகன், ஆய், அதிகன், காரி, ஓரி, நள்ளி, குமணன் முதலிய வரையா ஈகையினையுடைய வள்ளல்களின் வரலாறுகளையும், புலவர் வீரர் முதலானவர்களின் வரலாறுகளையும் அறிந்து கொள்ளலாகும். மற்றும், அரசவொழுக்கம், ஒற்றுமை, அன்பு, அருள், துறவு, வாய்மை, தவம்,கற்பு, நட்புமுதலிய எண்ணிறந்த அறங்களும், பண்புகளும் இவற்றிடை நன்கு விளங்கிக் கிடக்கின்றன. தமிழரின் வரலாறுகளையும், பழம் பெருமைகளையும், பழக்க வழக்கங்களையும் அறிந்துகொள்ளுதற்குச் சிறந்தகருவியாகவுள்ள நூல்கள் எல்லாவற்றிலும் இது முதன்மையானது. இதனைப் பாடிய புலவர்களில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், எயினர், பொற்கொல்லர், நாகர், கூத்தர், பாணர் முதலிய பல வகுப்பினரும் இருக்கின்றனர். பாடிய பெண்பாலரும் பலராவர். தமிழ் மக்கள் இதனைப் படித்தலால் உயர்ந்த எண்ணங்களும் ஊக்கமும் உடையராவர் என்பதில் ஐயமில்லை. முதற்கண் இதிலுள்ள அரசாங்க ஒழுக்கத்தைப் புலப்படுத்தும் பகுதிகளை எடுத்துக் காட்டுதும். அரசர்பால் அமைந்துள்ள ஒழுக்கங்களைப் புலவர்கள் எடுத்துரைப்பனவும், அரசர்க்கு அவர் அறிவுறுத்துவனவும், அரசர்கள் தாமே கூறுவனவும் ஆகிய மூன்று வகையால் அரசாட்சி முறைகள் புலப்படுகின்றன.

நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என்ற சோழ மன்னனைப் பாடிய ஊன்பொதி பசுங்குடையார் என்னும் புலவர் 'நீ நின்னை வழிபட்டு ஒழுகுவோரை விரைவில் அறிந்து கொள்வை, பிறர் குற்றங்களை எடுத்துத் தூற்றுவாருடைய மொழியை நம்பமாட்டாய், நீ மெய்யாக ஆராய்ந்து துணியப்பட்ட தீமையை ஒருவன்பாற் கண்டால் அதனை ஒழுக்கநூலோடு பொருந்த

ஆராய்ந்து அத்தீமைக்குத் தக ஒறுப்பாய், அங்ஙனம் தீமை புரிந்தோரும் தம் குற்றத்தை ஒப்புக்கொண்டு வந்து பணிந்து நிற்பரேல் முன்னையினும் அவர்மேல் அருள் மிகுந்து அவரை ஒறுக்காது விடுவாய்' என்று கூறுகின்றனர்.

"வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக வொறுத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே."

என்பது காண்க.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை என்னும் சேரமன்னனைப் பாடுகின்ற குறுங்கோழியூர் கிழார் என்னும் புலவர், 'தென்றிசைக்கண் குமரியும், வடதிசைக்கண் இமயமும், கீழ்த்திசையிலும் மேற்றிசையிலும் கடலும் எல்லையாக வுடைய நிலத்திலே குன்றும் மலையும் காடும் நாடும் உடையோர் அனைவரும் ஒரு பெற்றியே வழிபாடு கூறக், கொடுமையைப் போக்கிச், செங்கோன்மை பூண்டு, ஆறிலொன்றாகிய இறைகொண்டு, நடுவு நிலைமையைப் பொருந்தித், தடையின்றி உருண்ட ஆணைவட்டத்தால் நிலவுலகம் முழுதையும் ஆண்டோருடைய மரபைக் காத்தவனே' என்கின்றனர்.

"தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலாவெல்லை
குன்றுமலை காடுநாடு
ஒன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோல்திருத்திப்
படிவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல்."

என்பது அது.

மற்றும் அவர் அவ்வேந்தனைப் பிறிதோரிடத்தில், 'பெரிய கடலின் ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்று இயங்கும் திசையும், வடிவின்றி நிலைபெற்ற வானும் என்னும் இவற்றை அளந்தறியினும் நின் அறிவு அன்பு கண்ணோட்டம் என்பன வரையறுத்தற்கு அரியன; ஆதலால் நின் குடைநிழலில் வாழ்வோர் சோறு சமைக்கும் நெருப்புடன் ஞாயிற்றின் வெம்மை யலல்து வேறு வெம்மை யறியார்; 'இந்திர'வில் அல்லது பகைவரது கொலைவில்லை அறியார்; கலப்பை அல்லது வேறு

# வடசொற்றமிழகராதி

(௬௩௬-ம் பக்கத்தொடர்ச்சி)

[திருவளர் செல்வி நாகை. நீலாம்பிகை அம்மையார்]

நார்த்விக் மகளிர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்.

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அபங்கம் | பழுதின்மை |
| அபசகுணம் | தீக்குறி |
| அபசயம் | தோல்வி |
| அபசரம் | விரைவு |
| அபசாரம் | தீச்செய்கை |
| அபசாரி | வேசி |
| அபசெயம் | தோல்வி |
| அபட்சம் | வெறுப்பு |
| அபஹாரு | கொள்ளை, பழிச்சொல் |
| அபத்தம் | தவறு, பொய் |
| அபமரணம் | முதிராச்சாவு |
| அபமானம் | புகழின்மை, இழிவு |
| அபமார்க்கம் | தகாவழி |
| அபயகரம் | அஞ்சல் என்றருளுங்கை |
| அபயம் | அச்சமின்மை |
| அபயஸ்தம் | அஞ்சாக்கை |
| அபயதானம் | அடைக்கலம் |
| அபயர் | மறவர் |
| அபயவாக்கு | அஞ்சேலெனல் |
| அபரம் | பின் |
| அபராதி | குற்றவாளி |
| அபரிமாணம் | அளவில்லாதது |
| அபரிமிதம் | அளவின்மை |
| அபரூபம் | அருமை |
| அபலம் | பயனற்றது |
| அபவாதம் | பழிச்சொல், ஒவ்வாச்சொல் |
| அபவிருத்தி | குறைவு |
| அபாகம் | முதிராமை |
| அபாக்கியம் | செல்வமின்மை; வறுமை |
| அபாசம் | குற்றம், அவாவின்மை |
| அபாண்டம் | பழி |
| அபாயம் | அழிவு, கேடு |
| அபாரம் | அளவின்மை |
| அபிசந்தானம் | அனுப்புதல் |
| அபிசாரி | வேசி |
| அபிஞ்ஞானம் | அடையாளம், அறிவு |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அபிஷூதம் | மருந்து |
| அபிஷேகம் } அபிடேகம் } | திருமுழுக்கு |
| அபிதானம் | பெயர் |
| அபிநயம் | குறிகாட்டல் |
| அபிநயர் | கூத்தர் |
| அபிநவம் | புதுமை |
| அபிப்பிராயம் | நோக்கம், எண்ணம், உட்கருத்து |
| அபிமானபுத்திரன் | வளர்ப்புப்பிள்ளை |
| அபிமானம் | பற்று |
| அபிமானி | பற்றுடையான் |
| அபிமானித்தல் | மதித்தல், உயர்த்துக்கூறல் |
| அபியோகம் | தடை, போர்க்கழைத்தல் |
| அபிராமி | அழகி |
| அபிரூபன் | காமவேள், சிவன் |
| அபிலாசம் | விருப்பம் |
| அபிவிருத்தி | பெருக்கம் |
| அபின்னம் | ஒற்றுமை, வேறுகாதது |
| அபிமானம் | பற்று |
| அபீஷ்டம் | மிருவிருப்பம் |
| அபூதம் | இன்மை |
| அபுருவம் } அபூர்வம் } | அருமை |
| அபூபம் | அப்பம் |
| அபேட்சித்தல் | விரும்பல் |
| அபேதம் | ஒற்றுமை, வேறன்மை |
| அப்பியங்கஸ்நானம் | எண்ணெய் முழுக்கு |
| அப்பியசித்தல் | பழகல் |
| அப்பியாசம் | பழக்கம் |
| அப்பிரகாசம் | இருள் |
| அப்பிரசித்தம் | விளக்கமின்மை, இருள் |
| அப்பிரதட்சிணம் | இடப்பக்கச்சுற்று |
| அப்பிரதானம் | முதன்மையற்றது |
| அப்பிரமாணிக்கன் | பொய்யன் |
| அப்பிரமேயம் | அளவிடப்படாதது |
| அப்பிரயோசநம் | பயனற்றது |
| அப்பிராகிருதம் | மேலானது |
| அப்பிரீதி | வெறுப்பு |
| அப்பு | நீர் |
| அமங்கலம் | தீமை, நலமற்றது |
| அமங்கலி } அமங்கலை } | கைம்பெண் |
| அமதி | அறிவின்மை, அறியாமை |
| அமரத்துவம் | அறியாமை |
| அமரர் | வானோர் |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அமராபதம் | வானுலகு |
| அமராவதி | வானுலகு |
| அமலம் | அழுக்கின்மை, தெளிவு |
| அமாத்தியர் | அமைச்சர் |
| அமாவாசியை<br>அமாவாசை | புதுப்பிறை |
| அமிசம் | பங்கு, நல்வினை |
| அமிதம் | மிகுதி |
| அமித்திரர் | பகைவர் |
| அமிருதம் | மருந்து |
| அமிர்தகலை | நிலவு |
| அமுது | சோறு, அடிசில் |
| அமூர்த்தம் | உருவமின்மை |
| அமேத்தியம் | அழுக்கு, துப்புரவின்மை, பவ்வீ |
| அமோகம் | மிகுதி, பெருக்கம் |
| அம்சம் | புள், தாரா |
| அம்பகம் | கண் |
| அம்பட்டன் | சிரைப்போன் |
| அம்பரம் | வெளி |
| அம்பிகை | தாய், அம்மை |
| அம்புசம் | தாமரை |
| அம்புதி | கடல் |
| அம்புயம் | தாமரை |
| அம்புராசி | கடல் |
| அம்போதரம் | முகில் |
| அம்போருகம் | தாமரை |
| அம்மிரம் | மாமரம் |
| அம்மிலம் | புளிப்பு |
| அயக்காந்தம் | இரும்பிழுக்கி |
| அயச்சிந்தூரம் | இரும்புச் செந்தூள் |
| அயநம் | வழி |
| அயமேதம் | ஆட்டுவேள்வி |
| அயம் | இரும்பு, ஆடு |
| அயனம் | வழி |
| அயன் | நான்முகன் |
| அயிக்கம் | ஒற்றுமை, ஒன்றிப்பு |
| அயிராவணம் | வெள்ளையானை |
| அயிராவதம் | ,, |
| அரந்தம் | பொருந்தாது |
| அயோக்கிதை | தகுதியின்மை |
| அயுணி | தீக்கடைக்கோல் |
| அரணியம் | காடு |
| அரதனம் | சிலம்பணி, மணி |

(தொடரும்)

# தென்னிந்திய வகுப்பு வரலாறு

[திரு. வே. பா. சுப்பிரமணிய முதலியாரவர்கள்]

(௫௬௪ - ம் பக்கத்தொடர்ச்சி)

தொண்டை மண்டல வேளாள ஆடவர்போல மற்றைய வேளாளரையும் பிற தமிழ் வகுப்புகளையும் சேர்ந்த ஆண்மக்கள் காது வளர்க்கும் வழக்கம் முதலி லிருந்திருக்கிற தென்பது பல கோயில்களிலுள்ள பழைய உருவச் சிலைகளால் விளங்குகின்றது. மேற்கூறிய செட்டி வகுப்பார் இன்னின்ன ஊரினரென்று சுட்டிக் கூறுதற்கு ஏது அவ்வாறு கூறுவதனால் அவ்வகுப்பினருக்கு வீணாக மனவருத்த முண்டாக்கலாகா தென்பதே. ஆயினும் வகுப்புப் பற்றில்லாமல் கீழ் வகுப்புகள் மேல்வகுப்புகளாக மாறிவரும் உண்மை நிகழ்ச்சியை அறிய விரும்புவோர் பொருட்டு அச்செட்டி வகுப்பார் ஒட்டப்பிடாரம் "தாலூக்கா"வி லிருக்கிறார்க ளென்ற மட்டும் சொல்லி நிறுத்துகின்றேன். இவ்வாறு திருநெல்வேலி 'ஜில்லா'வி லேயே வேறு 'தாலூக்கா'க்களிலும், மற்றை 'ஜில்லா'க்களிலும் இருக்கலாம். கோயம்புத்தூர் 'ஜில்லா'வில் பள்ளர்களுள்ளே மூப்பரென்ற பட்டமுண்டு. சான்றாருள்ளும் அந்தப்பட்டமுண்டு. சான்றாருள்ளும் வேளாளர் முதலிய மற்றைய வகுப்புகளுள்ளும் வாணிகம் புரிவோர் செட்டிகளென்று கூறப்படுவ துண்டென்று சொல்லியிருக்கிறேன். பள்ளமூப்பர் சாணாரமூப்பராய், அந்தச் செட்டிகளாய்ப், பின் வேளாளச் செட்டிகளாய், அந்த வகுப்புப் பிள்ளைமாராய்ச், சைவக் குருக்களாய்க், கடைசியாக ஆதி சைவக் குருக்களாய்க் கால முறையில் மாறி யிருத்தல் கூடாமையன்று என்பதை, 'ராமாநுஜ மத'த்தில் சேர்ந்த பல கீழ்வகுப்பாரும் பார்ப்பனராயிருப்பதைக் கொண்டு ஊகிக்கலாம். இடையர், பறையர் முதலியோருள் சிலர் அலுவல் ஏதுவாகவாவது வேறு ஏதுவாகவாவது மேன்மையடையும்போது தங்களைப் பிள்ளைகளென்று கூறிக்கொள்ளும் வழக்கம் பலருக்குந் தெரிந்தது. இப்போது முதன்மையாக 'மாத்துவப்' பார்ப்பனரின் வகுப்புப் பட்டமாகிய இராயர் என்ற பெயர் பூண்டு (இராயர் அப்பாஜி கதைகளில் கூறப்படும்) நடுவகுப்பான் ஒருவன் அரசனாக இருந்தானென்பது கேள்வியான் அறியப்படுவ தொன்று. தென்னிந்தியாவை யாண்ட சேர சோழ பாண்டியர் முதலிய அரசர்கள் பெரும்பாலும் வேளாளராக இருந்தன ரென்று பழைய கல்வெட்டு, செப்பேடு முதலியவற்றால் விளங்குகின்றது.

வகுப்பு வேறுபாட்டுக் கருத்தாக இன்னுஞ் சில கூறவேண்டி யிருப்பவைகளைக் கூறி முடித்து விடுகிறேன். இனப்பிரிவு வேதத் தின் கடைசி காலத்தில் தொடங்கி யிருக்கலாம். ஆயினும் இப் போதிருக்கிறபடி யுள்ள வகுப்பு ஏற்பாட்டுக்குச் சான்று வேதத் தில் இல்லை. தமது வாழ்நா ளனைத்தையும் வடமொழி படிப்ப தில் செலவிடுதலையே முதன்மையாகக் கொண்டு இருக்குவேத முழுவதையும் 'சாயணுசாரிய'ரது உரையோடு பதிப்பித்து வெளிப்படுத்தி உலக முழுதும் பெரும் புகழ்பெற்று விளங்கிய மாக்ஸ் முல்ல ரென்ற ஐரோப்பியப் பெரும் புலவர் கூறியதன் கருத்துப் பின்வருமாறு :—"பலவகைப் பட்ட வகுப்புகளுக்கு வேதத்தில் எவ்வகைச் சான்றும் ஒரு சிறிது மின்று. பல வேறு வகுப்புக் குடிமக்கள் தம்முள் ஒன்ருக உண்டு உடன் வாழ்வ தற்கு மாறுபாடான எக்கட்டளையு மில்லை. வெவ்வேருன வகுப்பு களைச் சார்ந்த குடிமக்கள் திருமணத் தொடர்பு செய்தலைத் தடுக்கும் முறையுங் கிடையாது. அவ்வகை மணத்தில் பிறந்த பிள்ளைகளை இழிவு படுத்தற் குரிய முறையு மில்லை. குருமார், தேவர்க்கே யுரிய வணக்கத்தைப் பெறுதற்காயினும், எந்த வகுப்பு மனிதரும் விலங்குகளினும் கீழ்பட்ட நிலைமைக்குத் தாழ்த்தி யிழிக்கப் படுதற் காயினும், இடங்கொடுக்கும் முறை யுங் கிடையாது."

பின் வருவது, வடமொழியிற் பெரும் புலவராகிய டாக்டர் ஜி. பந்தர்க்கா 1894-ம் ஆண்டு, சென்னப்பட்டினத்தில், குடிக ளின் ஒழுக்கச் சீர்திருத்தத்திற்காகக் கூடிய கூட்டத்தார் முன்பு செய்த விரிவுரையின் கருத்து :—வகுப்பு முதலிய மக்களொழுக் கங்களின் "வரலாற்றை நன்ருகத் தெரிவதற்கு வடமொழி நூல் கள் பண்டுதொட்டு நாளது வரை யுள்ளவைகளைக் காலமுறைப் படி கவனிப்பது நலம். அவைகள் யாவற்றிலும் பழைமையா னவை வேதங்களில் மந்திர பாகங்கள் ; அடுத்த முதுமையுடை யவை 'பிராமண'ங்களும் 'உபநிடத'ங்களை யுள்ளிட்ட 'ஆரணிய'ங் களும். அடுத்துப் பழமையானவை 'மகாபாரத இராமாயண'ங் களாகிய 'இதிகாசங்கள்' ; கடைசியானவை ஒழுக்க நூல்களும் 'புராண'ங்களும். இந்நூல்களின் பரப்பை நான் நோக்க நினைக் கும் முறை, கால வரிசை யென்பதொன் றுள்ள தென்னும் உணர்ச்சியே இல்லாதவர்களாக வாவது, அந்த உணர்ச்சி இருந் தாலும் அவ்வரிசை முதன்மையற்ற தென்று கருதுகிறவர்களாக வாவது உள்ள புலவர்கள் நோக்கும் முறையாக வில்லாமல் கால நாட்டுப் போக்கு என்பதை நுட்பமாகக் கவனிப்பதா யுள்ளது. மிகப் பழைய காலத்தில் வகுப்பு வேறுபாடு இருந்த தில்லை. அது வேதகாலத்தின் முடிவில் ஏற்பட்டதாகத் தோன்று

கின்றது. அது முதலில் மனிதர்கள் பிழைப்புக்காகச் செய்த ஏற்பாடுகளின் வேறுபாட்டினால் உண்டாகத் தொடங்கியது. தகப்பனுயுள்ளா னொருவன் தான் பிழைப்புக்காகச் செய்து வந்த தொழிலையே தன்மகனும் பின்பற்ற வேண்டுமென்று விரும்புவது இயல்பு. இவ் விருப்பமே முதன் முதலில் வேறு வேறான வகுப்புக ளுண்டாவதற்கு ஏதுவா யிருந்தது. வேதத்தின் பழைய பாகங்களில் 'பிராமண'ம் என்ற சொல்லுக்குத் 'தெய்வத்துக்கு வணக்கமாகச் செய்யப்பட்ட இசைப் பாட'லென்பது பொருள். அவ்வகைப் பாடல்கள் செய்தலில் வல்லவராகச் சிலரிருந்தனர். அந்தப் பாட்டுக்களுக்குக் கைமாறாக, அவைகளாற் பாடல்பெற்ற தெய்வங்கள், பாடியவர்களுக்கும் அப்பாட்டுகள் எந்த அரசர் பொருட்டுப் பாடப்பட்டனவோ அந்த அரசர்களுக்கும், நற்பயனளிப்பதாக நம்பிக்கை யிருந்தது. எந்தத் தெய்வத்தை யாவது அன்புவழிப்படுத்தும்படி நேர்ந்தபோ தெல்லாம் அப்பாட்டுக்காரர் வேண்டியவர்க ளாயினார்கள். அவர்கள் வாழ்வும் மேன்மையான தாயிற்று. ஆகவே அவருள் தந்தைமார்கள் மக்களை அவ்வகையிலே பழகச் செய்தனர். அதனால் காலமுறையில், சில குடும்பத்தவர்கள் அப்பாட்டுக்களைச் செய்வதும் தெய்வங்களை வணங்கும் காலத்தில் அவைகளை இசைமுறையாகப் பாடுவதுமே தொழிலாகக் கொண்டனர். அப்படிப் பட்ட குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பார்ப்பனர் என்று அழைக்கப்பட்டு ஒரு தனியான வகுப்பாயினர். இவ்வாறே அரசர்கள் படைத்தலைவர்கள் படைவீரர்கள் ஆகிய இவர்களின் பின் வந்தவரும் தத்தம் முன்னோர் முறைகளைப் பழகி வேறொரு தனியான அரச வகுப்பின ரானார்கள். உழவுதொழில் செய்வோர் 'வைசிய'ராயினர். ஆரியர்கள் 'பஞ்சாப்'பினின்று நீங்கி வட இந்தியாவில் சென்று பரவிய காலத்தில் சில பழைய குடிகள் அவர்கள் இனத்தோடு கலந்து 'சூத்திர' வகுப்பாயினர். இவ்வாறாக நான்கு வகுப்புகளிருந்தன. ஆனாலும் தொடக்கத்தில் அவ்வகுப்புகளைப் பற்றிய கட்டளைகள் பிற்காலத்தி லானது போல அவ்வளவு வலிவாகிவிடவில்லை. வேதகாலம் உபநிடத காலம் இவைகளுக்குப் பிந்திய இதிகாச காலத்திலும் கூடப் பார்ப்பனர் அரசரோடும் வைசியரோடும் உண்ணல் செய்திருக்கின்றார்கள். துருவாசர் திரௌபதியால் விருந்து செய்யப் பெற்றதை யறியாதார் யார்? உயர்ந்த வகுப்பினர் தாழ்ந்த வகுப்புப் பெண்களை மணஞ் செய்தல் வழக்கமா யிருந்தது. தாழ் குலத்தார் உயர் குலத்துப் பெண்களை மணத்தலும் வழங்கா திருக்கவில்லை. வேதப்பாட் டாசிரியர்களுள் காவலர், 'அயிலுஷர்' போலப் பார்ப்பன ரல்லாதார் அநேகருளர். வகுப்பு இப்போது எப்படியா யிருக்கிற தென்பது சொல்லவேண்டுமோ? நாலு

வகுப்பு மிப்போது நாலாயிரம் வகுப்புகளா யிருக்கின்றன வென்று சொல்லலாம்.”

மேலே கூறியபடி இக்கால வகுப்பு ஏற்பாட்டுக்குச் சான்று ஆரிய நூல்களுள் ‘மநு ஸ்மிருதி’யும் ‘புராண’ங்களும் இவற்றுக் குப் பின் உண்டாகிய நூல்களுமே. முந்திய நூல்களுள் வகுப்பு களைப் பற்றிச் சில விடங்களிற் கூறியிருந்தாலும் அப்படிக் கூறிய வகுப்புகள் மற்ற நாட்டிலுள்ளவை போலத் தொழில் பற்றிய வகுப்புகளே யன்றி இப்போது இந்தியாவில் மட்டுமே யுள்ள பிறப்பொன்றே ஏதுவான வகுப்புகளல்ல. இப்போதைய வகுப்பு வழக்கங்கள் மநுஸ்மிருதியையும் புராணங்களையும் பின்னிடச் செய்துவிட்டன. இந் நூல்கள் ஒரு வகுப்பின் உள் வகுப்புகள் ஒன்றோடொன்று பெண் கொண்டு கொடுப்பதையும் அவ்வவ் வகுப்பு அதன்கீழ் வகுப்புப் பெண்களை மணப்பதையும் விலக்க வில்லை. இப்போதைய வகுப்பு வழக்கங்களோ அவ்வகை மணங் களைத் தவிர்த்து விட்டன. இப்போது பார்ப்பான் வேளாளன் பெண்ணைக் கொள்ள விரும்பினாலும் வேளாளன் அதற்கு இசை யான். ‘தாழ்ந்த’ வகுப்பார் உயர்ந்த வகுப்பார் அளிக்கும் உணவையேற் றுண்பார்களே யன்றிக் (பெண் கொள்ளல் கொடுத்தலாகிய,) கலத்தல் செய்ய ஒருப்படார். “உயர்ந்த” வகுப்பாரிடத்துத் “தாழ்ந்த” வகுப்பார் உணவேற் றுண்பது நிலையாக இல்லை. “சிங்கு”, “வீரசைவர்” முதலிய சில வகுப்பி னர் பார்ப்பனர் சமைத்த உணவையும் புசியார்; தத்த மினத்தா ரகத்து மட்டுமே உண்ணல் செய்வர்.

---

# இருபெண்மணிகளின் உரையாடல்

[திருவாளர். மூலத்துறை. குமரநாயகம் பிள்ளை அவர்கள்]

(௬௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)

பா—எப்படியாயினும் நீ குற்றவாளிதான். ஆன்றோர்கள் தாயைப் பெருமையாய் கூறவில்லையா? நீ சற்று முன்பு சொன்ன பெரியோர்களில் ஒருவர் “தாயுடன் சென்று பின் தாதையைக்கூடி” என்றும், வேறு சிலர் “அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்” என்றும் தாயாருக்குத் தந்தையைவிட மதிப்புக்கொடுக்க வில்லையா? நீ ஏன் அவர்களுடன் சேர்ந்து தாயினிடத்தில் அன்பு வைக்கக்கூடாது?

தில—நீ உரைத்தவை சரியல்லவென்று நான் சொல்லுகிற தில்லை. தாயைப்போல் நமக்குத் தகப்பன் பாடுபடுகிற தில்லை. என்பதை ஒப்புக்கொள்கிறேன்; தாய் எவ்வளவு செய்தாலும் அவள் பெண்தானே, 'பேதைமை என்பது மாதர்க் கணிகலம்'. அவள் சமய நூல்களையும் ஒழுக்க நூல்களையும் குடும்ப நூல்களையும் கற்று வல்லவளாயிருப்பின் இங்ஙனம் பெயரிடாள் அல்லவா. அவ்வித மில்லாமையினால் சக்களத்தியாள் இறக்கும் பொழுது சொல்லியதை நினைந்து பெயரிட்டாள். கற்றறிந்தவர் களுக்கு அருவருப்புத் தோன்றுவது இயல்புதானே. எனவே அவர்கள் ஆராய்ந்து கூறியதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டாமா? மேலும் நீ கூறியவாறே தாயுடன் சென்று தந்தை யோடு கூடி என்பதை எடுத்துக்கொள்வோம். அது எங்கு முடிகிறது? தந்தையிடத்தில் முடிகின்றது. தந்தையின் உதவியின்றித் தாய் எதையும் செய்ய முடிகிறதில்லை யல்லவா? அப்படியாயின் யார் மேலானவர்? உனக்கு ஓர் எடுத்துக்காட்டுக் கூறுகிறேன் கேள். நான்முகன் படைக்கிறான். திருமால் காக்கிறான். சிவபிரான் நான்முகன் படைத்தவையும் திருமால் காத்தவையும் அழிக்கின்றான். மூவரில் யார் பெரியார்? நீயே சொல்.

பா—சிவபிரானே சிறந்தோன் என்பது அறிவுடையோர் கொள்கை. அதில் ஐயமின்று.

தில—இதை ஒப்புக்கொள்வதனால் தந்தை சிறந்தோன் என்பதில் உடம்படுகின்றாய். நிற்க. வேறு சில மேற்கோள்கள் சொன்னாயே அவற்றையும் சிறிதாராய்வாம்.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று கூறினை.. பிறிதோரிடத்தில் தந்தை சொல் மிக்க மந்திர மில்லை." என்று படித்துள்ளதை மறந்து விட்டனை போலும். முதலாவது கூறியதில் அன்னையை முன்னர் வைத்திருப்பதைத் தவிர தந்தையின் மதிப்பை எவ்வாற்றானும் தாழ்மைப்படுத்த வேண்டும் என்பதற்கல்ல. ஆதலால் நமக்கு இருவரும் பொதுப்படத் தெய்வமென்பதுபெற்றாம். இரண்டாவதில் தந்தை சொல்லுக்கு மிக்க சிறப்பு அமைந்திருப்பது கருதற்பாலது. மேலும் காகத்தால் வளர்க்கப்பட்ட குயில் காகத்தின்இயல்பைக் (தாழ்ந்த தன்மைகளை) யகைக் கொள்ளாமல் தன்இனத்தின் உயர்ந்த கொள்கைகளையே மேற்கொள்வதுபோல், தாயினால் போற்றப்படினும் அவளது அறியாமையினால் வரும் இழுக்குகளைக் களைந்து தந்தையார் கற்பிக்கும் தூயதும், அழியா இன்பம் பயப்பதும் ஆகிய நன்னடக் கையைக் கைக்கொள்ளவேண்டும். அங்ஙனங் கைக்கொள்ளா

விட்டால், நன்றாய்ப் பழுத்துச் சுவை மிக்க நற்கனிகளை உதைத்துத் தள்ளிவிட்டு வெம்பிப்போன காய்களை விரும்பி நுகர்தலையொக்கு மல்லவா?

பா—ஏ, திலகவதி; நீ மிகவும் வலக்காரியாய் இருக்கின்றனை. நான் எவ்வளவோ நூல்களை வாசித்திருந்தும் உன்னை வெல்ல இயலாது தோல்வியுற்றே னல்லவா! உண்மையில் நானே உன்னைவிடக் கற்றுளேன் என்று களித்திருந்தேன். இனி அவ் விறுமாப்பு ஒழிகின்றேன். தமிழுக்கு இருவர் என்பதை இப்பொழுதே உணர்ந்தேன். நாம் இவ்வகையாகவே எப்பொழுதும் உசாவுவோமாயின் பெரும் பயன் அடையலாமென்று தோன்றுகிறது.

தில—அதற்கென்ன ஐயம். கற்றல் மட்டும் போதாது. நீ எவ்வளவோ நூல்களைப் படித்திருக்கின்றனை. நான் படித்தவைகளோ மிகச்சில. ஆயினும் உன்னுடன் உரையாடி வெற்றிபெற எனக்குதவி புரிந்தது எது என்று எண்ணுகிறாய்; பெரியார் தந்தையார் முதலியோர்களின் வாய்மொழிகளை நன்கு கேட்பதே. அதனாலன்றோ ஞானசம்பந்தப் பெருமான் தமது முதல் திருப்பதிகத்திலும் "கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" என்றும், குறளாசிரியர் கற்றலுக்கு அடுத்த அதிகாரம் கேட்டல் என்றும், ஒரு குறட்பாவில் "கற்றிலனாயினும் கேட்க" என்றும், 'செல்வத்துள் தலை சிறந்தது செவிச்செல்வ' மென்றும் கூறியுள்ளார்கள். இன்னும் செல்வி ஐந்தாம் சிலம்பின் முதற்பரலில் கல்வியினும் கேள்வியே இன்றியமையாதது என்று விரித்துள்ள கட்டுரை நோக்கற்பாலது.

பா—திலகவதி என்றே உன்னை இனிக்கூப்பிடுவேன்; நீ மிகவும் அறிவும் வல்லமையுமுள்ளவள்.

தில—தோழீ, மணி ஏழடிக்கிறது. சிறிது சிற்றுண்டி புசித்து வருவோம் வா.

பா—நான் புசித்தே வந்தேன். அன்பு கூர்ந்து மன்னிக்க.

தில—ஆனால் நான் சென்று விரைவில் மீள்வேன். நீ வேண்டுமானால் அதோ இருக்கிற நூலை எடுத்துப் படித்துக்கொண்டிரு. (திலகவதி உடனே சமையல் கூடத்திற்குச் சென்றாள். பார்வதி அந்நூலைக் கையிலெடுத்து அதன் தலைப்பிலுள்ள பெயரைப் 'புலவர் புராணம்' திருமுருகதாச அடிகளால் இயற்றப்பட்டது என்று படித்தாள். இதற்குமுன் அத்தகைய பெய

லைக்கேட்டிராதவ ளாகையால் உள்ளே அடங்கியுள்ள கதைகளை அறிய ஆவல் மிககவளாய்த் தாள்களை நீக்கிப் பாயிரம் என்ற தலைப்பைக் கண்டனள். மேல் நோக்குகையில் எல்லாம் செய்யுட்களாய் இருப்ப, எழுத்துச் சோரமின்றி வாசிக்க இயலாமலும் கருத்து விளங்காமலும் இருந்தமையால் தோழியைக் கேட்டறிவான் அவள் நல்வரவை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனள்.)

தில—பார்வதி, அப்புராணம் எவ்வளவு இன்பத்தை ஊட்டுகிறது பார்த்தனையா.

பா—எனக்கொன்றும் விளங்கவில்லை.

தில—உனக்கு விளங்காவிட்டால் பின் யாருக்கு விளங்கப் போகிறது? சற்று முன்பு திலகவதியாருடைய வரலாற்றைப் பன்முறை பயின்றுள்ளதாக நீயே சொல்ல வில்லையா. அதை அறிந்த உனக்கு இது அரிதாகுமா.

பா—நான் உன்னிடத்தில் உண்மையையே பேசுவேன். திலகவதியாரின் வரலாற்றைப் 'பெரிய புராண வசனம்' என்னும் நூலிற்படித்துள்ளேனே யன்றிச் செய்யுளில் படித்தறியேன்.

தில—ஆ! அப்படியா. சரி. சரி, ஆனால் இனிமேல் செய்யுளில் படிக்கப் பழகிக்கொள்ள வேண்டும்.

பா—உரைநூ லல்லவா படிப்பதற் கெளிது. கொஞ்ச நேரத்தில் எவ்வளவோ பக்கங்கள் படித்து விடலாம். செய்யுளானாலோ ஒரு பாட்டுப் படிப்பதற்கு ஒன்பது நாழிகை செல்லும். அங்ஙனம் உழைப்பெடுத்துப் படித்தாலும் பொருள் விரைவில் விளங்காது. அவ்வளவு வருந்துவானேன்?

தில—என்ன வருத்தம்? எல்லாம் பழக்கந்தான். சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம் வைத்த தொரு கல்வி மனப்பழக்கம்........குணம்" எனபது நீ அறியாததோ. இரண்டு மூன்று திங்கள் பெரியோர்களைக் கேட்டறிந்து செய்யுள்களை வாசித்துப் பொருளறியப் பழகிக்கொண்டால் பின் மிகுதியான இன்பத்தை நுகரலாம்.

(தொடரும்)

---

# மெய்யறிவு

[திரு. வேலாயுதம் அவர்கள்]

கடவுள் அருள்பெற்றில்லாத எந்த வேலையும் தவறியே போம்.

ஒரு மனிதன், தானே வல்லவன், தான் விரும்பியவற்றை யெல்லாம் செய்து விடலாம் என்று நினைப்பானாயின், அவன் அறியாமையில் மூழ்கியிருக்கிறான்; விரைவில் மயக்கந் தெளிவான். கடவுள் முன்னிலையில் அவன் நாணற்புல் ஆட்டி வைக்கும் வண்ணம் ஆடவேண்டியவனே.

* * * * * *

ஒருவரையும் குறை கூறாதே. உன்னையே கடிந்துகொள். கடந்த காலத்தில் நீ எத்துணைப் பெரியோனாயிருந்தாலும், உன் செயல்கள் உயரியனவா யிருந்தாலும், ஒரு நொடி நேரத்தில் ஓர் இழிசெயல் செய்து விட்டால், நீ கீழே தள்ளப்படுவாய். உயர்வான இடத்திலிருந்து, ஏணியின் கடைசீ படியதை உணர்வாய். அம்மட்டோ ? உன்னைப்பற்றி உயர்வாய் நினைத்து, மதித்திருந்தவர்களும், உன்னைப் போற்றியவர்களும், உன்னை எள்ளி நகையாடுவார்கள். தண்ணீரினின்றும் வெளியேற்றப்பட்ட தாமரைப் பூப்போன்று. நீ அனைவராலும் எரிக்கப்படுவாய். ஐயோ என்ன வருத்தமான வேலை ! இந்த உண்மைகள் எல்லாம் எத்துணைத் துக்கத்தி லாழ்த்தும் ! போற்றிப் புகழப்பட்ட நிலையிலிருந்து, தூற்றப்படும் நிலைக்கு வந்துவிடுவாய். உலகினர் அனைவருமே உண்மையறிஞர்க ளல்லர். உனக்கு இரக்கங்காட்டி அறிவூட்டிக் கைதூக்கிவிட மெய்யறிவாளர் மிகச்சிலரே உளர். உலகத்தில் பெரும்பான்மையோர் விரிந்த நோக்கமுடையவர்களல்லர். நீ அழுக்கன், கூடிப்பழக்கக்கூட அருகனல்லன் என்று புறக்கணிக்கப்படுவாய். இவற்றை யெல்லாம் முன்னறிந்து நடந்திருந்தோமாகில், நாம் எவ்வளவு அறிவுடையவர்களாயிருந்திருப்போம். என்செய்வது? வாழ்நாளில் வழுக்கி வீழ்ந்துவிடுகிறோம். படுகுழிகள் ஆங்காங்கு இருக்கின்றன. நம்முடைய குறைகளை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிடக்கூடிய துணிவும் நமக்கில்லை. நாம் எவ்வளவு உறுதியான கொள்கைகளை உடையவர்களாயிருந்த போதிலும், ஒரு விநாடியில் மதியைக்கடன் கொடுத்து விடுகிறோம். பின்னர் வீழ்ச்சி தான். ஆனால் ஈடேற வழியில்லையா ? இல்லை யென்று யார் சொல்வது? இல்லை, வழி உன்னிடமே இருக்கிறது. கடவுள் உனக்கு அறிவைக் கொடுத்திருக்கிறார். அதை உபயோகித்து நீ எங்கே

---

* அநுபவஞானம்.

தவறினாய் என்பதைக் கண்டறி. திருத்தமடைந்து புதிய வழியைக் கடைப்பிடி. கடந்தகாலத்தை எச்சரிக்கையாய்க் கொண்டு நிகழ்காலத்தில் நல்லவனாய் நடந்து, எதிர்காலத்தில் மீண்டும் புகழ்பெறு.

* * * * * *

ஒருவனுடைய தீச்செயலைக் கண்டிக்கலாமே யொழிய செயல் செய்த மனிதனைக் கண்டிப்பது அறமல்ல. எவன் தீச்செயல் செய்யாதவன் ? செய்த அச்செயலுக்காக அவன்வருந்தி உருகும்போது அவனுக்குக் கைகொடுத்து, அடைக்கலங்கொடு. உன்பெருந்தன்மையும், உயர்ந்த இயல்பும் அதிற்றானிருக்கிறது. பழிக்குப் பழி வாங்கவேண்டு மென்கிற உணர்ச்சியி லல்ல. ஒரு மனிதன் உண்மையிலேயே தான் செய்த தவறுக்காக வருந்தும் போது, நீ அவனை எதிர் கொள்ளாயேல், நீ தீவினை செய்தவனாவாய். பின்னர் அதற்காக நீ வருந்தவேண்டி வரும். ஒருவனுக்கு நீயும் உடந்தையா யிருந்துவிட்டுப் பின்னர் ஒன்று மறியாதவன்போற் பதுங்குவாயானால், நீ வஞ்சகன். உனக்குக் காலத்தில் தண்டனை கிடைக்கும். தவறிழைப்பது மனித இயற்கை ஆனால் நல்வழியில் திருந்துவதற்குக் குறிப்புப் பார்க்க வேண்டியதில்லை. நம்மைச் சேர்த்து அணைத்துக்கொள்ளவும் நம்மை மன்னிக்கவும், நமக்கு அறிவு வெளிச்சத்தைக் காட்டவும் அன்பே உருவாகிய கடவுள் என்றைக்கும் காத்திருக்கிறார். நாம் அவருக்கு மட்டுந்தான் அச்சப்பட வேண்டும். நாம் அவருக்கு அஞ்சி என்றைக்கு நடக்கிறோமோ, அன்றுதான் நமக்கு அறிவு தோன்றும் நாள்.

---

# தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல்

[இளவழகனார்]

"சுடர்த்தொடீ ! கேளாய், தெருவில்நாம் ஆடும்
மணல்சிற்றில் காலின் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டுஒடி
நோதக்க செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா 'இல்லிரே !
உண்ணுநீர் வேட்டேன்' எனவந்தாற்கு, அன்னை
அடர்பொன் சிரகத்தால் வாக்கிச் 'சுடர்இழாய் !
உண்ணுநீர் ஊட்டிவா' என்றாள் எனயானும்
தன்னை அறியாது சென்றேன்மற்று என்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு

'அன்னாய் இவனொருவன் செய்ததுகாண்' என்றேனா,
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணும்நீர் விக்கினான்' என்றேனா அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற்று என்னைக்
கடைக்கண்ணால் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தான்அக் கள்வன் மகன்'' (கலித்தொகை, ருக)

(இ - ள்.) ஒளி பொருந்திய வளையலை உடைய தோழீ! இதை னைக்கேள். பேதைப்பருவத்தில் நாமெல்லாரும் தெருவிலே மணல் வீடுகட்டி விளையாடும்போது அம்மணல் வீட்டைத் தன் காலால் அழித்து என் தலையிற்செருகி வைத்திருந்த பூ மாலையை அறுத்து வரி வரியாயிருக்கும் என் பந்தையும் எடுத்துக்கொண்டு ஓடி அவ்வப்போதும் துன்பம் செய்துவந்த வழக்கமான குறும்பன் இருக்கிறானே அவன், முன்னொரு நாள், என் தாயும் யானுமாக வீட்டில் இருந்தபோது நீர் வேட்கையாய் இருக்கிறது என்று சொல்லிக்கொண்டே வந்தான். வரவே, என் தாய், ஒளியுள்ள கல்லா லிழைத்த நகைகளை யணிந்த பெண்ணே! தகடடித்துச்செய்யப்பட்ட பொற்செம்பினால் அவனுக்கு நீர் வார்த்து அதை அவன் குடிக்கும்படி செய்துவிட்டு வா என்று சொன்னாள். சொல்லவே நானும் அவன் குறும்புத் தன்மையை அறியா மல் தண்ணீர் எடுத்துக்கொண்டு அவனிடம் போனேன். போனதும் அவன், வளையல் உள்ள என் முன்கையைப் பிடித்து என்னை ஓர் ஆட் டம் ஆட்டிக் கலக்கிவிட்டான். அதனால் நான் கலக்கமடைந்து அம்மா, இவன் செய்ததைப் பார்த்தனையா என்று கூச்சலிட்டேன். கூச்சலி டவே, உடனே என் தாய் அலறிப் பதறி ஓட்டமா ஓடி வந்தாள். வரவே, நீர் குடித்ததனால் அவன் திணறித்திணறி விக்கலெடுத்தான் என்று சொல்லி விட்டேன். அவளும் அவனை வைதுகொண்டே அவன் முதுகைத் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்தாள். அப்போது அந்தத் திருட்டுப் பையன் என்னைக் கொன்றுவிடுவான்போலக் கடைக்கண் ணாற் பார்த்து இப்படிப்பட்ட மகிழ்ச்சியான சோக்கையைச் செய்தான். என்பது.

இருந்தேமா என்பது கடைக்குறை. இருந்தேமாக என்றுகொண்டு, இருந்த அளவில் என்று பொருள் செய்க. 'செய்ததுகாண் என்றேனா' 'விக்கினான் என்றேனா' என்றதும் அது. இச்செய்யுளில்வரும தன்னை என்னும சொற்களெல்லாம் ஆண்மகனைக்குறிக்கும். தெருவில விளை யாடிய காலம் அவளுக்குப் பேதைப்பருவம். இப்போது அவள் மங்கைப் பருவமடைந்து விட்டனள். ஆதலால், குழந்தையா யிருந்தபோது செய் ததுபோல இப்போதும் குறும்பு செய்வானா என்று நினைத்து, அவன் கள்ளத்தன்மையை அறியாமற் சென்றேன் என்பாள், 'யானுந் தன்னை அறியாது சென்றேன்' என்றாள். முன்னரே அவ் ஆண்மகனிடத்தில் தனக்குள்ள காதலன்பினால், தான் அவனிடம செல்லல் வேணடும். அவனைப் பார்த்தல்வேண்டும். அவன் தன் கையைப்பிடித்து அசைப்பது போன்ற இவ்வகையான செயல்களைச செய்யப்பெறுதல் வேண்டும் என்று தனக்குள் எண்ணிய அவள் 'அவனை அறியாது சென்றேன்' என்று மறைத்துக்கூறினாள். அவட்கு அவனைப் பார்க்கவேண்டும என்னும் ஆசை இருந்ததென்பது, "தலைவி காட்சி யாசையாற் கலங்கிய அதற்கேற்

பத் தலைவற்குங் காட்சியாசை கூறிற்று. அது 'சுடர்த்தொடீஇ கேளாய்...செய்தானக் கள்வன் மகன்'' என்று இக் கலித்தொகைச் செய்யுளையே எடுத்துக் காட்டி நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்தில் (தொல், களவியல், ௧௬)விளக்கங் கூறினமையானும் புலனும்.

தோழிக்குத் தான் தவறிப்போனதாகத் தெரியாதபடி இங்ஙனங் கூறினாள். இங்ஙனங் கூறினா ளானாலும் தான் காதலித்த அவ் ஆண் மகனை மணஞ்செய்து வைப்பது தோழியினாலேயே முடிவதாதலால், தனக்கு அவ் ஆண்மகன்மேற் காதல் உண்டு என்பதை அவளுக்குத் தெரிவித்தல் வேண்டி 'தன்னையான் உண்ணுநீர் விக்கினேன் என் றேனா' என்று உள்ளதை உள்ளபடியே அவளுக்குச் சொல்லிவிட்டாள். இங்ஙனங் கூறினமையால் தோழிக்கு இவர்கள் இதுவரையிற் கொண் டிருந்த களவொழுக்கத்தின் நினைப்புப் பிறந்தது. இனி அவள் நற்றாய் முதலியவர்கட்கு இச்செய்தியை எட்டவைத்து மணத்தை முடித்து வைப்பாள். 'தன்னைப் புறம்பழித்து நீவ' என்பதில் 'புறம்பழித்து' என் பதைப் புறம்பு அழித்து என்று பிரித்துக்கொண்டு அவ் ஆண்மக னுடைய 'முதுகைப் பலகால் அழித்து அழித்துத்தடவ' என்று பொருள் செய்வார் நச்சினார்க்கினியர். விக்கல் கொண்டவன் முதுகிலே அழித்த ழித்துத் தடவுதற்காம் இயைபு ஏதும் இல்லாமையாலும்,முதுகினை உண ர்த்துதற்குப் 'புறம்' என்னுஞ் சொல்லன்றிப் 'புறம்பு' என்னுஞ்சொல் ஆன்றோ ரிலக்கியங்களிற் பெரும்பான்மையாய் வழங்காமையாலும், ஆனால்அவ்விக்கல் எடுத்துத் தொண்டை அடைத்துத் துன்புறுவோனை 'மெல்லக் குடித்தா லென்ன: ஏன் இவ்வளவு விரைவு' என்று அன்பினாற் பழித்துக்கொண்டே அவன் முதுகினைத் தடவுதல் உண்மையாலும், ஒரு சொன் னீரதான 'புறம்பழித்து' என்னும் சொல் இருந்தவாறு எளிதிலே 'வைது' என்னும் பொருளைத் தருதலாலும் அவ் 'வைது' என்னும் பொருளே அதற்குப் பொருத்தமானதென்று அறிஞர் கருதுவர். 'சுடர்த் தொடீ' 'சுடரிழாய்' 'அடற்பொற் சிரகம்' என்னுஞ் சொற்குறிப்புகளால் பழங்காலத்துத் தமிழ்மக்களின் செல்வநிலையும் அதற்கேற்ப அவர்கள் பெற்றிருந்த நாகரிக உணர்ச்சியும் நன்குபெறப்படும். கள்வன் மகன் என்பது கள்வனான மகன் என்பதற்கு. அதாவது திருட்டுப் பையன் என்பது. இது அன்பின் மொழி.

## பாட்டின் முன்பொருள்

தலைவனும் தலைவியும் ஊழ்வலியாலும் இறைவன் அருளாலும் தாமே ஓரியற்கையிடத்தில் ஒருகாலத்தில் எதிர்ப்பட்டுக் கண்டு, ஒருவரை யொருவர் 'இவள் யாரோ, இவன் யாரோ' என்று ஐயுற்றுப் பின் தெளிந்து, அருக் காதல் துளும்பப் பெற்றாராய் நீங்குவர். நீங்கின அள விலே பின்னும் பின்னுங் காதல் மிக மல்குமாதலின் அவர்தாம் ஒருவரை யொருவர் தத்தமக்கு இன்றியமையாதவ ரெனக் காண்பர். ஆதலின் பின் னொருகால் அவர்கள் கூடியபொழுது தம்தம் அவாவைப் புலப்படுத்து, மீண்டுங் காண்பதற்குப் பகற்குறி இரவுக்குறி என்னும் இரண்டு குறி களும் இடை இட்டு ஓர் ஏதுவினால் வருந்திப் பிரிவர். பெரும்பாலும் இரவுக்குறியே இவர்தம்முட் கொள்ளப்படும். ''இரவுக்குறி பொருந்திய துணைப்பகற்குறி பொருந்திற்றன்று'' (இறையனாரகப்பொருளுரை, ௩௮) என்பதனாலும் இது விளங்கும்.அங்ஙனம் குறியிட்டுப் பிரிந்தவர்தாம் இப்

பாட்டிற் காணப்படும் தலைவனும் தலைவியும் என்க. கூடுதற்பொருட்டுக் குறிவைத்துக் கொள்ளும் வழக்கத்தைக்

"கூடுதல் வேட்கையாற் குறிபார்த்து" (கலித்தொகை, ௪௬)

என்னும் மற்றொரு குறிஞ்சிக் கலிப்பாட்டும் தெளிவிக்கும்.

இங்ஙனங் குறியிட்டுக்கொண்டு வந்தபிறகு அக்குறிப்படி செல்லுதற்குத் தலைவனுக்கு இயலுவதுபோல் தலைவிக்கு எளிதில் இயலாது. தலைவன் எப்போதும் வெளியே சுற்றும் வாய்ப்புடையவன். தலைவியோ வென்றால் ஏது இல்வழி வெளியே சென்றால் பிறர் ஐயுறவு கொள்ளத்தக்க நிலையுடையவள். ஆதலால் தலைவிக்குக் குறிப்படி நடத்தல் இயலாதுபோம். மேலும், இவ் ஏதுவாற் பகலில் இயல்வது அரிதாயிற்று. இனி இரவு நேரத்திலும், தாய் தூங்காமை, ஊர்தூங்காமை, காவலர் விழித்திருத்தல், நிலாக்காய்தல், நாய்துஞ்சாமை முதலிய இடையூறுகளால் தலைவி தலைவன் இட்ட குறியினிடத்தில் வரப் பெறாமற் காலந்தாழ்த்துவள். ஆனால், இட்ட குறியிடத்தில் தலைவன் மட்டும் தவறாமல் வந்து பார்ப்பான். தலைவி அங்கு வரப்பெறாமையால் அவளைக் காணாதாகி 'அவளைக் காணவேண்டுமே' என்னுங் காட்சியாசை மிகப்பெற்றுச் சற்றுக் கலங்கிப் பின் நீங்குவான். அந்த நேரத்திலேயே தலைவியும் 'பகற்குறியின் தப்பி இவ் இரவுக் குறியினுந் தப்பினேனே, நீண்ட நாழிகையாக அவனைக் காணமாட்டாது நிற்கின்றேனே. அவனோ அக்குறியிடத்துக்குத் தவறுவது வந்து, நம்மைக் காணாமல் வருந்துவான். எப்பொழுது அவனைப் பார்க்கப்பெறுவேன். அவனைப் பாராவிட்டாலும், குறியிடத்துக்குத் தான் வந்து போனமைக்கு அடையாளமாக மோதிரம், மாலை, முத்து முதலியவற்றில் ஏதேனும் ஒன்று அங்குள்ள செடிகொடிகளில் அவன் இட்டுவைத்திருப்பான். அதனையேனும் விடியற்காலையிற் போய்ப் பார்த்துவருவேன்' என்று வருந்திக் கிடந்து வீட்டாரெல்லாரும் தூங்கிய காலத்தே தலைவி குறி இடத்திற் சென்று தலைவனைக் காணாமல் அவன் அங்கு இட்டுவைத்த குறியைமட்டுங் கண்டு அதன் வாயிலாகத் தன் கணவன் வந்து போயிருக்கிறான் என்று உணர்வாள். உணரவே ஆற்றா வருத்தம் அவளுக்கு மீதூர மீண்டும் அவனை இத்துணை இடையூறுகளி னிடையே எப்பொழுது காண்வேனோ என்று வேட்கையின் மயங்கி வருந்திப் பின் வீடு சேர்வள். இதுவரையிற் கூறியவை இப்பாட்டிற்கு முன் நிகழ்ந்த செய்திகளாம். இனி இப் பாட்டின் செய்தி வருமாறு:—

## பாட்டின் கருப்பொருள்.

இவ்வாறு தலைவன் தலைவியாகிய இருவரும் பகற்குறி, இராக்குறி என்னும் இருவகைக் குறியிலும் ஒருவரை யொருவர் காணமாட்டாமல் தவறிவிட்டார். அத்தவறுதலால் மடங்காத காட்சியாசை தம்முள் மிகப் பெற்றாராய் அதனாற் பெரிது வருந்தி அவ் ஆசையினாலேயே நெஞ்சு சொல் செயல் என்னும் மூன்றும் மயங்கத் தாமும் மயங்கித் துடித்துக் கிடப்பர். உடனே தலைவன் நினைந்து பார்ப்பான்: 'நம் தலைவி, தன் வீட்டினரின் இடையூறுகளால்தான் குறியிடத்துக்கு வாரத் தவறியிருப்பாள். நமக்கு அவா மிகுகின்றது. அவளுக்கும் அப்படித்தான் இருக்கும். ஆகவே அவளைப் பார்ப்பதற்கு வழி யாது? ஒன்று தோன்றுகிறது. பொழுதும் விடிந்தது, வெயிலேறி உண்ணும் வேளை யானமையால், நாம் நம் தலைவியின் வீட்டிற்கு விருந்தாகச் செல்லல்வேண்டும். நாம்

செல்லும் நேரமும் அவர்கள் உணவுகொள்ளும் நேரமாயிருத்தல்வேண்டும். அப்பொழுது சென்றால்தான்

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று."— (திருக்குறள், விருந்து, ௨)

"பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்டல் அரிது." ( ,, , ஈகை, ௭)

என்னும் நம்மவர்கள் கொள்கைப்படி நம்மைத் தவறாது விருந்தேற்பார்கள். அப்பொழுது எப்படியாவது நம் காதலியைக் கண்டு நாம் கண்களிக்கப் பெறுவோம் அதுதான்வழி, என்று இவ்வாறெல்லாம் நினைந்து முடிவு செய்துகொள்வான். கொண்டதும் அவன் ஒரு விருந்துபோலத்



தலைவியின் வீட்டுக்குவந்து சேர்வான். அங்ஙனம் வந்தவனே இப்பாட்டின் தலைவன். இவ்வாறு குறிபிழைத்துக் காணாது கலங்குங்கால் உண்ணும்போது தலைவியின் இல்லத்தில் இருவரும் எதிர்ப்படுதல் உண்மையை ஆசிரியர் தொல்காப்பியனார்,

"இருவகைக் குறிபிழைப்பு ஆகிய இடத்தும்
காணாவகையின் பொழுதுநனி இகப்பினும்
தான்அகம் புகாஅன் பெயர்தல் இன்மையின்

காட்சிஆசையின் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிய கையறு பொழுதும்
புகாஅக் காலைப் புக்குஎதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்."—(தொல், களவியல், ௧௬)

என்று கூறுதல் காண்க.

வீட்டுக்குவந்த தலைவன் இல்லிரே என்று கூப்பிட்டு உண்ணுநீர் கேட்க, அத் தலைவியின் தாயு மிசைந்து தன் மகளை நீரூட்டிவாவெனச் சொன்னாள். அது கேட்ட தலைவிக்கும் தலைவனுக்கும் அப்போது எழுந்ததான மகிழ்ச்சிக்கு ஓரெல்லை கூற முடியுமோ? உடனே தலைவியும் நீர்கொண்டு தனித்து வருதலும், தலைவன் தன்னுள்ளிருந்து துருத்துத் துருத்துவரும் பேர் ஆர்வத்தினிடையே கரைகாணுய் அவளைக் கண்டனன். அங்ஙனமே அவளும் கண்டாள். காட்சியாசையால் ஆற்ருனாய் இன்னது செய்வதென்று தோன்றப்பெருமல் நின்றவன் அவள் கையை விரைந்துபற்றி அசைத்து அசைத்து நலித்துவிட்டான். அவளும் தனக்குள்ள காதலால் அதற்கு மகிழ்ந்து என்னவென்று வந்த தாய்க்கு அதனை மறைத்துவிட்டாள். என்ருலும், தனக்குத் திருமணம் தன் பெற்ரோரால் விரைந்து முடியவேண்டி யிருத்தலின், தன் தோழிக்குமட்டும் தப்புக் கருத்து உண்டாகாத முறையில் அறத்தொடு நின்று ஒரு வகைக் குறிப்பொடு இதனைக் கூறினாள்.

களவின்கண் குறிவழிச் சென்ற தலைவிக்குக் கருக்கொள்ளல் நேர்ந்துவிடுமாதலின், அங்ஙனம் குறியின்கண் தனிப்பட்ட அக்காலத்திலிருந்து இரண்டு திங்களுக்குள் அவள் தன் காதலனை மணந்துகொள்ளல் வேண்டுமென்று இறையனாகப் பொருள்கூறும். ஆகவேதான், தலைவி '(உண்ணுநீர் விக்கினான் என்றேனா' என்று தன் தோழிக்குக் குறிப்பளாயினாள் என்பது.

இங்ஙனம் புணர்ச்சி நேரும் ஒழுக்கத்தைக் குறிஞ்சித் திணை என்றும், முறைப்படி தோழியின்பால் அறிவித்துப் பெற்ரோரான் மணஞ் செய்யப்படவேண்டும் என்று முறையுற நன்னெறி நிற்றலைத் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல் என்றும் கூறுவார் அகப்பொருள் நூலார்.

இனி இக்காதலர் மணஞ்செய்துகொண்ட பின்பு, அவர்கள் அவ் அன்பின் வழியே இல்வாழ்க்கையில் நிற்பராதலின், அவரிடையில் என்றும் இன்பமே எழுமன்றித் துன்பம் தினைத்துணையும் தோன்றமாட்டாது. அன்பினாற் பிணையலுற்ற இக் காதன்மக்கள், அன்பினையும் அதன்வழி வரும் இன்பினையுமே எந்தச் செயலினுங் காணும் இயல்பினராய் நிற்பராதலால், மெய்யுறு புணர்ச்சிக்கண் உண்டாம் சிற்றின்பக் கருத்து விரைந்து நீங்க, அறிவுப் புணர்ச்சிக்கண் உண்டாம்பேரின்பக் கருத்தே மிகுந்தெழப்பெற்றுத் தமது அறிவினிடையில் எழுந்த அவ் அன்பின்பங்கொண்டு இறைவன்பால் செலுத்தவேண்டிய அன்பும் அதன் பயனும் இனைத்தென் றுணர்ந்து, அவ் உணர்ந்தாங்கு இறைவனை வணங்கி வீடு பெறுவர் என்க. "இது மேன்மக்களாற் புகழப்பட்டு ஞான ஒழுக்கத்தோடொத்த இயல்பிற்ருகலானும் பழிபாவ மின்மையானும்" என்று இக்காதன் மணம் இறையனாகப் பொருளுரையிற் சிறப்பிக்கப்பட்டமை காண்க (க-ம் நூற்பா) அங்ஙனமன்றி, முன்பின் னறியாத இருவர்தாம் பெற்ரோராற் பிணைக்கப்பட்டால், அவர் தமக்குள் அறிவு ஒற்றுமை தோன்ருதுபோம். தோன்ருதுபோகவே, அவர்

களங்கமற்ற அன்பையும் அதன் பயனும் இன்பத்தையும் உணரார். உணராராகவே, இறைவனை வழிபடுமுறையும் அறியாது அங்ஙனம் அறியாமையின் வீணே உடலுறு புணர்ச்சிக்கண் இடைவிடாது நின்று பொருந்தாத தீய மக்களைப் பன்றிக் குட்டியென அளவிலாதுபெற்றுத் தமது வாழ்க்கையில் நெடுக நோய் முதலாம் இடுக்கண்களுக்கே இரையாகி எந்த இன்பமும் நுகர்தற்கிடனின்றி மீண்டும் மீண்டும் பிறப்பதற்கே தொழிலாகி அவர் இறந்துபோவார். ஆதலால், இனிய உலகவாழ்க்கையும் சிறந்த இம்மைப் பயனும் காதன்மணத்தைக் கௌவிக் கிடத்தலால், இரக்கம் மிக்க இறைவனது அருளழைப்புக்கு ஏற்பப் பிறவியின் நோக்க முணரும் அறிஞரெல்லாங் காதன்மணம் பொருந்தவும், அங்ஙனமே தம் மக்கட்குப் பொருத்துவிக்கவும் கடமைப் பட்டிருக்கின்றனர்.

---

## மதிப்புரை

காரைக்குடி வள்ளுவர் நிலையத்தின் வெளியீடான காதற்கடிதங்கள் என்னும் அரிய உரைநூலொன்று எமது பார்வைக்குவந்தது. அது கடல் கடந்து பொருள்தேடும் பொருட்டுக் காதலன் தன் காதலியைப் பிரிந்துபோக, 'அவர்தாம் இடையிற்கண்ட பிரிவு நாட்களில் ஒருவருக்கொருவர் காதன்மிக்கு எழுதிக்கொண்ட பொருட்செறிவு வாய்ந்த வளவிய தெளிதமிழ்க் கடிதங்களாக விளங்குகின்றது. அதனுட்காதலன் கடிதங்கள் இருபத்து மூன்றும், காதலி கடிதங்கள் இருபத்திரண்டும் உள்ளன. தமிழகப்பொருளின் நூலுரையோடு அந்நூல் முழுதொத்துத் திகழுகின்றதென்பதை அதன்கண் காதலன் பிரிந்து மீண்ட காலம் முறையே ஆனியுங் கார்த்திகையுமா மென்று குறிக்கப்பட்டிருப்பதும், அகப்பொருணூற் சான்றுகள் அங்கங்குக்காட்டப்பட்டிருப்பதும்,அதன் எல்லாப் பொருள்களும் அகப்பொருட் கருத்துக்களா யமைக்கப்பட்டிருப்பதும் இன்னபிறவும் நன்கு தெளிவுபடுத்தும்.

கடிதங்களெல்லாம் உயர்ந்த கருத்துக்கள் அமைந்து நாட்டைச் செம்மைப்படுத்தும் நலங்கெழுமி உள்ளன. காதலரிருவருள்ளும் ஆண்மகனின் விரைவு, மேன்மிதக்கும் நோக்கம் அறிவிக்க அறியும் அறிவு முதலியவைகளும், பெண்மகளின்பொறுமை ஆழ்ந்துஅமர்ந்த நோக்கம் இயற்கையறிவு முதலியவைகளுமாகிய இயற்கை வேற்றுமைகள் இனிது தெளிவாமாறு அக்காதலன் கடிதங்களும் காதலி கடிதங்களும் எழுதப்பட்டிருக்கின்றன.

உடலோடு உடல் சேர்ந்து அதன்கட் பெறும் இன்பமே காமவின்பமென்றும், உளத்தோடு உளஞ்சேர்ந்து அதன்வழிப் பெறும் இன்பமே காதலின்ப மென்றும் அவ்விரண்டின் வேற்றுமையையும் அந்நூல் செவ்விதின் பகுத்துரைக்கின்றது. இன்னும், 'உளங்கலந்து அக்கலத்தலின்வழிப்பில்கும் உயர்ந்த இன்பத்தை நுகர்ந்து அதனோடமையாமல் மேன்மேலும் அதனையே விரும்பும் உயர்ந்த நோக்கமுடைய காதன் மக்கள், தாம்கொண்ட நோக்கத்துக்குப் புறம்பான செல்வம் காம இன்பம் முதலான பிறவெல்லாம் இல்லாத பொழுது, அவற்றால் ஏதும் தொடக்குறார்: தொடக்குற்றுத் தமது காதலன்புக்கு இழுக்கந்தேடார்,' என்னும் அவரியல்பினைத் தருவி யெடுத்து விளக்கியிருப்பது அறிந்து மகிழக்கூடியதாகும்.

ஆகவே இந்நூல் தமிழ் மக்கள்பாற் பரவினால் மணமக்களைத்திருத்தி நாட்டுக்கு நலந்தரும் என்பதற் கையமில்லை. இதன் விலை அணா கஉ.



அப்பர் கடலில் கல்மேல் மிதப்பது.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு ரு | மெய்கண்டானாண்டு-எாரு மார்கழித்திங்கள் 1927ஹ டிசம்பர்—1928ஹ ஜனவரிமீ | பரல் கஉ |

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## குறிஞ்சிப் பாட்டின் உள்ளுறை*

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்]

இப்பாட்டு, உசுக - அடிகளையுடைய அகவற்பா ஆகும். தமிழ்ச் செய்யுளின் ஓசையமைதிக்குப் பா என்று பெயர். பாவையுடைய செய்யுளும் ஆகுபெயரால் 'பா' என வழங்கப் படுகின்றது. செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் எனச் செய்யுளோசை நான்கு வகைப்படும். செப்பலாவது, ஒருவன் கேட்ப மற்றொருவன் மாறுகூறுவதுபோல் இடையிடை நின்று செல்லும் இயற்கை யோசையாம். அகவலாவது, ஒருவன் தான்

* இது 'கபிலர்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டதொரு பகுதி.

கருதியவாறெல்லாம் வரையாது கூற, இடையிடை நிற்றலின்றித் தொடர்புபட்டுச்செல்லும் இயற்கை யோசையாம். துள்ளலாவது, இசை தோன்றத் துள்ளிச்செல்லும் செயற்கை யோசையாம். தூங்கலாவது, சீர்தோறும் நிறைந்து செல்லும் செயற்கை யோசையாம். செப்பலோசையுடையது வெண்பா எனவும், அகவலோசையுடையது அகவற்பா எனவும், துள்ளலோசையுடையது கலிப்பா எனவும், தூங்கலோசையுடையது வஞ்சிப்பா எனவும் கூறப்படும். இவையன்றிச் செப்பலும், அகவலும் விரவிவருவது மருட்பா எனவும், செப்பலோசையேனும், எல்லா வோசையுமேனும் பெற்றுக் கலிக்குரிய உறுப்புகளுடையதாய் வருவது பரிபாட்டு எனவும் கூறப்படும். இப்பாட்டு முழுதும் ஒரே தொடர்ச்சியாய்ச் செல்லும் அகவலோசை உடைத்தாயிருத்தலின், இஃது அகவற்பாவா மென்பது அறிக.

குறிஞ்சித் திணைக்குரிய பொருள் கூறுதலின், இதற்குக் குறிஞ்சிப்பாட்டு என்று பெயர் கூறினர். உலகத்துப் பொருளெல்லாவற்றையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூவகைப்படுத்துக் கூறுவது தமிழ்நூல் வழக்கு. நிலனும் காலமும் முதற்பொருள் எனப்படும். நீர், தீ முதலிய மற்றைப் பூதங்களும் நிலனென அடங்கும். பிறபொருளெல்லாம் இவற்றைச் சார்ந்து தோன்றுதலின், இவைமுதற்பொருள் எனப்பட்டன. தேவர், மக்கள், விலங்கு, புள், மரம் முதலாயினவும் கருப்பொருள் எனப்படும். நிலத்தினும், காலத்தினும் தோற்றுதலின், இவை கருப்பொருள் எனப்பட்டன. (கரு-தோற்றம்). அவ்வந் நிலத்து மக்கட்கு வேறு வேறுய்த் தோற்றி நிற்றலின், தெய்வமும் கருப்பொருளாயிற்று. மக்கள் எய்தற்பாலனவாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பன உரிப்பொருள் எனப்படும். உரிய பொருள்களாகலின் உரிப்பொருள் எனப்பட்டன. இவற்றை அகப்பொருள், புறப்பொருள் என இரண்டாக அடக்கிக் கூறுவது தமிழ் நூன் முறை. இன்பம் அகப்பொருள். அறமும், பொருளும் புறப்பொருள். வீடு, அகம் புறம் இரண்டினும் அடங்கும். இன்பம் தானே யுணர்தலன்றிப் பிறர்க்கு இன்ன தன்மைத்தெனக் கூறலாகாமையின், அகம் என்றும், அறமும், பொருளும் பிறர்க்குக் கூறப்படுதலின், புறம் என்றும் பெயர் பெறுவவாயின. இன்பமும் பலவாயினும், ஒருகாலத்து ஒரு பொருளால் ஐம்புலனும் நுகரும் சிறப்புடைய காமவின்பமே இங்குக் கொள்ளப்பட்டது. அவ்வின்பந்தானும், சுவை மிகுதி தோன்ற உலக நடையோடு ஒத்தலும், ஒவ்வாமையும் உடையதாக்கிக் கூறப்படுகின்றது. உருவும், திருவும், பருவமும், குடியும்

குணனும், அன்பும் முதலியவைகளால் தம்முள் ஒப்புமை யுடையராய தலைவனும், தலைவியும் பிணி, மூப்பாதியவின்றி நுகரும் இன்பமே அகம் எனக் கூறப்படும் இன்பமென்க.

அவ்வின்பத்துக்குக் காரணமாய ஒழுக்கம் அகத்திணை எனப்படும். அது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என எழுவகைப்படும். அறம், பொரு ளுக்குக் காரணமாய ஒழுக்கம் புறத்திணை எனப்படும். அதுவும் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் டிணை என எழுவகைப்படும். சிற்சில ஒப்புமைபற்றிக் குறிஞ்சி முதலிய அகத்திணை ஏழுக்கும், வெட்சி முதலிய புறத்திணை யேழும் முறையே இனமாக ஆசிரியர் தொல்காப்பியனார் கூறி யுள்ளார். அகத்திணையுள், பெருந்திணையும், கைக்கிளையும் அல் லாத ஐந்துமே சிறப்புடையன. குறிஞ்சி யென்பது, கூடலும், கூடல் நிமித்தமுமாம். முல்லை யென்பது, பிரிவின்கண் ஆற்றி யிருத்தலும், இருத்தல் நிமித்தமுமாம். மருதமென்பது, ஊட லும், ஊடல் நிமித்தமுமாம். நெய்தலென்பது, இரங்கலும், இரங்கல் நிமித்தமுமாம். பாலை யென்பது, பிரிதலும், பிரிதல் நிமித்தமுமாம். குறிஞ்சி முதலிய திணைகளுக்கு, முதற்பொரு ளாகிய நிலம், பொழுதுகளும், கருப்பொருளாகிய தெய்வம் முதலியவும் வேறு வேறு வகுக்கப்பட்டுள்ளன. குறிஞ்சிக்கு நிலன் மலையும், மலை சார்ந்த இடமும் ஆம். பெரும் பொழுது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிர்ப்பருவமும், மார்கழியுந் தையுமாகிய முன்பனிப் பருவமும் ஆம். சிறு பொழுது அப் பருவங்களது இரவின் நடுக்கூறாகிய யாமம் ஆம். கருப்பொருள் முருகவேள் ஆகிய தெய்வமும், குறவர் முதலிய மக்களும், புலி முதலிய விலங்குகளும், மயில் முதலிய புட்களும், வேங்கை முதலிய மரங்களும், மற்றும் இந்நிலத்தினும் காலத்தினும் தோன்றும் பொருள்களும், பிறவும் ஆம். இவ்வாற்றால் இப் பாட்டின்கட் கூறப்படும் பொருள் இவையாதல் வேண்டும் என் றறிக. இவற்றுள் உரிப்பொருள் இன்றேல் பொருட்பேறு இன் றாம் ஆகலின், அஃது ஒருதலையாகக் கூறப்படுவதாம். அதனைச் சிறப்பிக்கவே முதற்பொருள் கருப்பொருள்களும் கூறப்படும்.

இனி, இப்பாட்டில் உரிப்பொருளின் எப்பகுதி கூறப்படு வது எனவும், இது யார் யாருக்கு எப்பொழுது எவ்வாறு கூறுவதாக இயற்றப்பட்டுளது எனவும் முதற்கண் அறிந்து கோடல் வேண்டும். குறிஞ்சி முதலிய அகவொழுக்கமெல்லாம் களவு, கற்பு என இருவகைப்படுத்துக் கூறப்படும். இவற்றில் களவின்றிக் கற்பு நிகழுமா றில்லை யெனவும், களவே சிறப்

புடைத்தெனவும் கூறுப. களவாவது, முற்கூறிய உருவும் திருவும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையராய தலைவனும் தலைவியும், கொடுப்பாரும் அடுப்பாருமின்றி ஊழ்வகையால் தாமே யெதிர்ப்பட்டு இன்பம் துய்த்து வருவது. முதலில் இவ்வாறு ஒரு பொழிலில் எதிர்ப்பட்டுச் சேர்வது இயற்கை எனவும், அதன்பின் அவர்கள் பிரிந்து சென்று முன்போன்று மீட்டும் அவ்விடத்தே கூடப்பெறின் அஃது இடந்தலைப்பாடு எனவும், பாங்கனாற் கூடப்பெறின் அது பாங்கற் கூட்டம் எனவும், தோழியாற் கூடப்பெறின் அது தோழியிற் கூட்டம் எனவும் கூறப்பட்டுக் களவு நால்வகைப்படும். பாங்கனும் தோழியும் தலை மக்கட்கு உயிர்போற் சிறந்தாராகலின், அவர்களறிவது பிறரறிவ தாகாது, தலைமக்களறிவதே போலும் என்க. இப்பாட்டு, இயற்கையும், பின்னிகழும் கூட்டங்களுக்கு நிமித்தமும் கூறுவது என்பர் நச்சினார்க்கினியர். இயற்கையின் பின்பு தோழியிற் கூட்டம் நிகழ்ந்து வருங்கால், இரவுக்குறியிடையீடுபட்டுத் தலை மகன் பன்முறை வறிதே மீளாநிற்பத் தலைவி ஆற்றாமை பெரிதுடையளாய் உடல் மெலிவுற லானாள். தலைவியின் மேனி இளைத்து வேறுபட்டிருத்தலைக் கண்ட செவிலியானவள், இவ்விளைப்புக்குக் காரணமான நோய் இன்னதென அறியும் பொருட்டுக், குறிசொல்லுவாரை வினவி, அவர்கள் தெய்வத்தானாயிற்று எனக்கூறலின் தெய்வங்கட்குச் சிறப்புச் செய்து, பின்னும் நோய் நீங்காமை கண்டு வருந்துகின்றாள். அந்நிலையில், தலைவி மேலும் ஆற்றாமையுடையளாய், 'எமக்குள் நிகழ்ந்த இம் மன்றலை நாம் தாய்க்கு அறிவுறுத்தலால் பழியும் வருவதுண்டோ?' என்று தோழிக்கு உணர்த்த, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக, இயற்றப்பட்டுளது இப்பாட்டு. அறத்தொடு நிற்றல் என்பது, தலைவனுக்கும் தலைவிக்கும் நிகழ்ந்த கூட்டத்தை வெளிப்படுத்தல். இந்த நிலைமையில் இதனை வெளிப்படுத்தலே அறத்தொடு பொருந்திய செயலாகலின், இஃது அறத்தொடு நிற்றல் எனப்பட்டது. எனவே, இப்பாட்டிற்குத் திணை குறிஞ்சி எனவும், துறை தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் எனவும் கொள்க. தோழியானவள், உயர்குடிப் பிறந்த தலைவியது களவொழுக்கத்தை வெளிப்படுத்தும் பொழுது, செவிலிக்குச் சினமுண்டாகாவாறும், தலைவியிடத்தாதல் தன்னிடத்தாதல், தலைவனிடத்தாதல், அவளிடத்தாதல் சிறிதும் குற்றமின்றென அவளுணருமாறும், இங்ஙனம் நிகழ்ந்தது நல்வினைப் பயனேயெனத் தோற்றுமாறும்' படைத்து மொழியும் திறப்பாடு பெரிதும் வியக்கத்தக்கதாகும். இப்பாட்டின் பொருளுணரவே, அது நன்கு விளங்குமாகலின், ஈண்டு அதனைச் சுருக்கிக் கூறுகின்றாம்.

"தாயே! யான் கூறுவதனை விரும்பிக்கேட்பாயாக! நீ தான், ஒள்ளிய நெற்றியையுடைய என் தோழியது இழையினை நெகிழச்செய்த பொறுத்தற்கரிய நோயைக்கண்டு அலமந்து, கட்டினாலும் கழங்கினாலும் அறிந்து குறி சொல்லுவாரை வினவி, அவர் தெய்வத்தான் வந்த வருத்தம் என்றலின், பல்வேறு தெய்வங்களை வழிபட்டும் அதனாற் றீராமையின், இந் நோயை அறியாத மயக்கத்தை உடையையாய் வருந்தா நின்றாய். இவளோ, தனது நல்ல வனப்புக்குன்றவும், தோள்மெலியவும், கூறுதற்கு அருமையாலே தன் மனத்துள்ளே மறைத்திருக்கும் ஆற்றுதற்கரிய நோயினைக் குறித்து யான் நெருங்கிக் கேட்கலுற்ற பொழுது, என்னை நோக்கி, "முத்தாலும், மணியாலும், பொன்னாலு மியன்ற அருங்கலன் கெட்டதாயினும், பின்னும் வந்து பொருந்தும். அஃதன்றிக், குணங்களின் அமைதியும், மேம்பாடும், ஒழுக்கமும் கெட்டால், உண்டாய மாசு போம்படி கழுவி, முன்போலப் புகழை நிறுத்தல், குற்றமற்ற அறிவினையுடைய முனிவர்க்கும் எளிய தன்றென்று தொன்னூலறிஞர் கூறுவர். யாங்கள் இருவேமும் ஆய்ந்த மன்றல் இதுவென நாம் தாய்க்கு அறிவுறுத்தின், நமக்குப் புகழன்றிப் பழிவருவது முண்டோ? அஃதில்லையே. இங்ஙனம் வெளிப்படுத்த பின்பு, தலைவர்க்கே நம்மைக்கொடுக்க நேர்ந்திலராயினும், நாம் உயிர் போந்துணையும் இவ்வருத்தத்தைப் பொறுத்திருப்பின், நமக்கு மறுமையினும் இக்கூட்டம் கூடுவதொன்றாகுமே.' எனக்கூறி, ஆற்றரு நோயினை யுடையாளாய் மையல் நோக்கங்கொண்டு, செயலொழிந்து அயர்ந்து மெலியாநின்றாள். யானுந்தான், மாறுபட்டு அமரிலே மிக்குச் செல்லும் இரண்டு பெரிய அரசரைச் சந்துசெய்விக்கும் தொழிலில் நின்ற சான்றோர்போல, நினக்கும் இவளது வருத்தத்திற்கும் அஞ்சும் இரண்டு பெரிய அச்சத்தாலே வருந்தாநின்றேன். கொடுப்பின் எல்லாவற்றானும் நன்றாகி முடிதலும், குடியும் குணமும், சுற்றத்துதவியும் எனுமிவற்றை ஒப்பித்துப் பார்த்துப் பலருடனும் எண்ணுதலும், நும்மையின்றியும் யாங்களே துணிந்த உயிர்க்குப் பாதுகாவலான, இவ்வரிய மணம் முன்பு நிகழ்ந்தவாற்றை நீ நன்றாக வுணரும்படி கூறுதற் கமைந்தேன். அது கேட்டுச் சினவா திருப்பாயாக! தாயே! நீ தான், 'விளைந்த தினையின் கண் வீழும் கிளிகளை யோட்டி, மாலைப்பொழுதில் வருவீராக.' எனச்சொல்லி, எம்மை அனுப்புகையாலே, யாங்களும் சென்று மரத்தி னுச்சியில், இரவு காத்திருப்போன் பண்ணின, புலியஞ்சும் பரணிலே யேறிக், கவணும் தட்டையும் முதலியவற்றை முறை முறை கைக்கொண்டு, கிளிகளை யோட்டினேம். பின்பு ஞாயிற்றின் வெம்மை மிகுகின்ற பகற்பொழுதிலே, வானிற்

பறக்கும் பறவைகளெல்லாம் தாம் விரும்பும் சேக்கையிற் செல்லா நிற்க, யாங்கள் நெடிய மலையுச்சியினின்றும் குதிக்கும் தெளிந்த நீரையுடைய வெளிய துகில்போலும் அழகிய அருவி யிலே, தவிராத விருப்புடன் மேலும் மேலும் விளையாடி, அதன் பின்பு, பளிங்கினைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற்போலும் சுனையிற் குடைந்து விளையாடுங்கால், எங்கள் மனத்திற்கு விருப்ப மான பல பாடல்களைப் பாடினேம், ஆனபின், எமது பின்னிய கூந்தலின் நீரைப் பிழிந்து, ஈரம்புலர்த்தி உள்ளிடம் சிவந்த கண்ணினேமாய், ஆம்பல் அனிச்சம் செங்கழுநீர் குறிஞ்சி வெட்சி முதலிய பல்வகைப் பூக்களையும் மிக்க வேட்கையுடன் பலகாலும் திரிந்து பறித்து வந்து, தூய்தான அகன்ற பாறை யிலே குவித்துப் பறவைகளின் ஓசையாகிய பல்லியங்களை யுடைய மலைப்பக்கத்திற் புனத்தே, தெளிந்த இசையுடன் கூடிய சொற்களால் இடையிடை கிளிகளை யோப்பியும், புறவிதழ்களைக் களைந்தெறிந்து ஒழுங்குபெறக் கொய்து இயற்றிய தழை யென்னும் உடையினை இடையிலே உடுத்தியும், பல்வேறுரு வின் அழகமைந்த மாலைகளை எம்முடைய மெல்லிருங் கூந்தலில் அழகுபெறச் சுற்றியும், நெருப்புப்போலும் நிறத்துடன் விளங் கும் அழகிய தளிரையுடைய அசோகினது தாது உதிர்கின்ற தண்ணிய நிழலிலே மேவியிருந்தேம். அங்ஙனம் இருக்கையில், ஆண்டு ஓர் தோன்றல் பன்னிறமுள்ள பல்வகைப் பூக்களா லும் தொடுக்கப்பெற்ற தொடையினையும் வெளிய தாழை மட லிற் பொருந்தச்செய்த கண்ணியையும் சென்னியில் அழகுறச் சூடியும், பிச்சி மலராற் றொடுத்த ஒருசரமாகிய மாலையைச்சுற்றி யும், அசோகினது தளிரைத் தோளில் வீழ்ந்தசையும்படி ஒரு காதிலே செருகியும், சந்தனம் பூசப்பெற்று அகன்று உயர்ந்து விளங்குகின்ற செம்பொறியையுடைய மார்பில் தொன்றுபட்டு வரும் சிவந்த அணிகலங்களோடே நறிய மாலைகளைப் பொலிவுற அணிந்தும், நுண்டொழிலமைந்த கச்சினை உடையின்மேல் இறு கக்கட்டியும், கையிலே வில்லை யெடுத்து அம்புகளைத் தெரித்துப் பிடித்தும், பொன்னாற்செய்த வீரக்கழல், பெயரும் பொழுதெல் லாம் திருந்திய அடியிலே ஏற்றிழிவு செய்து விளங்கும் படி யாகப் போந்தனன். போந்தவன், அணுகுதற்கரிய வலி யமைந்த பகைவரைப் புறங்கண்ட வீரர்போலே செருக்கும் சினமுமுடைய நாய்கள் இமையாத கண்ணினவாய் எம்மை வளைத்துக்கொண்டு மேன்மேல் நெருங்கி வருதற்கு யாங்கள் அஞ்சி அடிதளர்ந்து வருத்தம் மிக்க மனத்துடன் வேறு புலத்தேறச் செல்லாநிற்பதனைக் கண்ணுற்றானாய், மாறுபாய விடை களை யெல்லாம் பொருதோட்டியதும் வேறு புலத்திருக்கும் புதிய ஆவினைக் காணலுற்றதுமாகிய ஏறுபோலே அழகுபெறத்

தோன்றி, யாங்கள் அஞ்சுதற்குத் தான் அஞ்சி, மென்மையும் இனிமையுமுடைய சொற்களை எமக்குப் பொருந்துமாறு சொல்லி, எம் கூந்தலையும் அழகையும் புகழ்ந்து, 'ஒள்ளிய தொடியும், மெல்லிய சாயலும், அழகிய உந்தியும், மதரிய கண்ணும் உடைய இளைஞரே! என்னைத் தப்பி இவ்விடத்துப் போந்த யானை முதலியவற்றைக் கண்டீரோ?' என வினவினன். அதற்கு யாங்கள் மறுமொழி தந்திலே மாகையால், அவ்வாண்டகை நெஞ்சழிந்து 'நீவிர் அவற்றைக் காட்டித்தாரீ ராயினும் எம்முடன் ஒரு சொல் சொல்லுதலும் நுமக்குப் பழியாமோ?' எனச்சொல்லி, வண்டு மூசும் பூக்களையுடைய தழை பரந்த கொம்பை முறித்தும் பரிக்கோலைக் கைகடந்த மதயானை போல ஒச்சிக், கல்லென்னும் ஓசைபடக் கத்தும் வேட்டை நாய்களின் கடுங்குரலை மாற்றி, யாங்கள் பேசுவதோர் காலத்தைப் பார்த்து நின்றனன். அப்பொழுது, வேறு புனத்திலே, காவலாளர்கள் கள்ளுண்டு காவன் மடிந்திருந்த வளவில், ஓர் வேழமானது புனத்தினைத் தின்று நொக்கிவிடுகையினாலே அவர்கள் வருத்தம் மிக்குத் தமது பாம்பு போலும் வில்லை நாணேற்றி அம்பினை யெய்து, காடெல்லாம் கல்லென் ஓசை பிறக்க வாயை மடித்து விளையோசை யெழுப்பி அதனைப் புனத்தினின்றும் ஒட்ட, அக்களிறு, மதச்செருக்கினை யுடைத்தாகி உருமேறுபோல முழங்கி மரங்களை முறித்துக் கையைச் சுருட்டி நிலத்தே யெறிந்து கூற்றுவனைப்போல எங்கள் மீது கடுகவந்தது யாங்கள், உயிர் கொண்டு பிழைப்பதோ ரிடம் அங்கு வேறுணரேமாகி, உலைவுற்ற மனத்துடன், உயிரினுஞ் சிறந்த நாணினைப் பாதுகாத்தலை மறந்து, வளைக ளொலிக்கும்படி விரைந்து சென்று அவனைச்சேர்ந்து தெய்வமேறின மயில்போல நடுங்கா நிற்க, அவன் கடுவிசைப் பகழியை நிரம்ப வலித்து அவ்வியானையின் முகத்தே யெய்தமையால், அம்பு பட்டுருவின புண்ணினின்றும் குருதி யொழுகா நிற்க, அது தன்னை மறந்து ஆண்டு நிற்கலாற்றாது புறங் கொடுத்தோடிற்று. அதன்பின், யாங்கள், முருகவேளுக்கு வரைமகளிர் கைகோத் தாடுவது போன்று, கடம்பின் அரையினை நெருங்கச் சூழ்ந்த மாலைபோல், கைகோத்துக்கொண்டு, யாற்றின் பெருக்கிலே குதித்து விளையாடலுற்று, இடிகரையினின்ற வாழைபோலே கால்தளர்ந்து நீரிற் செல்லலுற்றேமாக, அது கண்டு விரைந்துவந் தெடுத்து அழகிய மலை பொருந்தின நாட்டையுடையனான அவ்வாண்டகை, 'யான் நினது அழகிய நலத்தை நுகர்வேன். நின்னை நீங்குவேனெனச் சிறிதும் அஞ்சாதே' என்று சொல்லி, ஒளிபொருந்திய நுதலினைத் துடைத்து, நெடு நாள் இக்களவொழுக்கம் நிகழவேண்டுமென நினைத்து,

என்முகத்தை நோக்கிச் சிரித்தான். அப்பொழுது, தனக்கு இயல்பாகிய நாணமும் அச்சமும்வந்து தோன்றுகையால், இவள் தன்னிடத்து நின்று விரைந்து நீங்கவும் விடானாய், அங்ஙனம் நின்ற நிலையிலே கையாலணைத்து, இவள் மார்பு தன் மார்பிலே யொடுங்கும்படி தழுவாநின்று, பின், இவளுள்ளக் கருத்துமேல் வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துதலாயிருக்குமென உட்கொண்டு இவளை நோக்கி, 'ஆருயிர்ப் பாவாய், பலரும் வந்துண்ணுமாறு கதவு அகலத் திறந்துகிடக்கும் வாயிலையுடையதாய் மிடாச்சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமலிடுகின்ற விழாக் கொண்டாடினாற்போலும் செல்வத்தையுடைய மனையகம் பொலிவு பெறும்படி, பைந்நிணமொழியநெய்ம்மிக்க அடிசிலை நீ இடா நிற்கக் குற்றமில்லாத உயர்குடிப் பிறந்தோர் தமது சுற்றத்தோடே விருந்துண்டு, எஞ்சியுள்ள மிச்சிலை நீயும் யானும் உண்ணுதல் மேன்மையுடைத்து' என்று சொல்லி, இல்லறம் தங்களைக் கரையேற்றுவதாகத் தெளிவித்து, மலையுச்சியி லுறையும் முருகவேளை வாழ்த்தி வணங்கி, அவன் முன்பு வஞ்சினங்கூறி, அழகிய இனிய நீரைக் குடித்தனன். அதனால் இவள் நெஞ்சு பொருந்தியிருக்கக், களிற்றினால் தரப்பட்ட கூட்டத்தைத் தேவர்களும் விரும்பும் பூக்கள் நிறைந்த சோலையில் அன்றைப் பகற்பொழுதெல்லாம் போக்கி, ஞாயிறு மலையின்கண் மறைய, மாலைப்பொழுது வருதல்கண்டு, இலங்கிழையீர்! நும்முடைய சுற்றத்தார் நுமது நேரிறை முன்கைப்பற்றி எமக்குத்தர, நாடறியும் நன்மணத்தினைப் பின்பு நிகழ்த்துவோம், யாம் இக்களவொழுக்கத்தாற் பெறும் பேரின்பம் நுகர்தற்குச் சிறிதுநாள் இங்ஙனம் ஒழுகுவதுபற்றி நெஞ்சு கலங்காதிருப்பீராக' என்று அருளுடைத்தாகிய நன்மொழியை இவள் வருத்தந் தீரும்படி சொல்லி, ஆவைப் புணர்ந்த ஏறு போலே விடாமல் எம்முடன் கூடவந்து, குழலோசை யறாத நம் ஊர்வாசலில் பலரும் நீருண்ணுந் துறையில் எம்மை நிறுத்தி மீண்டுபோனான். அது முதலாக, அன்றுபோலும் விருப்பத்தோடே, எந்நாளும் இரவுக்குறியில் வருதலைத் தனக்கியல்பாகவுடையன். அங்ஙனம் வரும்போதெல்லாம், ஊர்காவலர் கடுகிக் காத்தாராயினும், சினத்தினையுடைய நாய் குரைத்ததாயினும், நீ துயிலுணர்ந்தாயாயினும், நிலவு வெளியாக எறித்ததாயினும், மூங்கிலையொத்த மென்றோளிற்பெறும் இன்றுயில் பெறாது போவன். அங்ஙனம் வாளாபெயரினும் அதற்கு வெறுத்தலைச் செய்யான். அவன்றான் இளமைப் பருவத்தைக் கடந்ததுமிலன். செல்வச் செருக்கால் எந்நாளும் தன் குலத்திற்குரிய நற்குணங்களின் நீங்கியதுமிலன். அலர் முதலியவற்றால் அச்சத்தையுடைய இவ்வூரின்கண், தனக்குப் பொய்யா

யிருக்கின்ற இரவுக் குறியில் வருந் தன்மையை இஃதொழுக்க மன்றென்று நினைத்து, அவன் வரைந்துகொள்ள இல்லறம் நிகழ்த்துதலே நல்லொழுக்கமென்று துணிகையினாலே, இவளுடைய பெரிய மதர்த்த குளிர்ந்த கண்கள் பெருந்துளி யெறிந்து மழைபெய்யப்பட்ட மலர்போல் அழகுகெட்டு இமை சோர்ந்து ஈரத்தினை யுடையவாய்க் கலங்கா நிற்கும். அதற்கு மேலே, இவள், அவர் வருகின்ற மலையிடம் புலியும் யாளியும் முதலிய இடும்பை செய்வன வுடையவா யிருக்குமென்று நினைக்குந் தோறும், வலையிலகப்பட்ட மயில்போலே தனது நலம் போம்படி மெலிந்து, கண்ணில் அரித்து வீழ்கின்ற நீர் நாள் தோறும் மார்பிலே துளிப்பக் கலங்கா நிற்கும். இதுகாண் நல்வினை நிகழ்ந்தவண்ணம் என்றாள்" என்பது.

---

# வடசொற் றமிழகராதி

(௬௯௧-ம் பக்கத் தொடர்ச்சி)

[திருவளர் செல்வி. நாகை. நீலாம்பிகை அம்மையார்]

நார்த்விக் மகளிர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்.

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அரவிந்தம் | தாமரை |
| அரன் } ஹரன் } | சிவன் |
| அராகம் | அவர் |
| அராதி | பகைவன் |
| அரி | காற்று, அருள், சிங்கம், பகை, திருமால் |
| அரிகரபுத்திரர் | ஐயனார் |
| அரிசனம் } ஹரிசனம் } | மஞ்சள் |
| அரிச்சனை | வழிபாடு |
| அரிட்டம் | கேடு |
| அருக்கன் | பகலவன் |
| அருக்கியம் | நீரிறைத்தல் |
| அருச்சகன் | வழிபாடியற்றுவோன் |
| அருச்சனை | வழிபாடு |
| அருச்சித்தல் | வழிபடல், பூத்தூவுதல் |
| அருச்சுனம் | வெண்மை |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
| --- | --- |
| அருணம் | சிவப்பு |
| அருணன் | கதிரவன் |
| அருணாசலம் | திருவண்ணாமலை |
| அருணோதயம் | கதிரோன் வருகை, விடியல் |
| அருத்தசந்திரன் | இளம்பிறை |
| அருத்தசாமம் | நள்ளிரவு |
| அருத்தம் | பொருள் |
| அருத்தி | அவா |
| அருந்ததி | வடமீன் |
| அரூபம் | உருவற்றது |
| அரோசகம், அரோசம், அரோசிகம் | அருவருப்பு, ஓக்காளம் |
| அர்க்கம் | பொன் |
| அர்ப்பணம் | நீரொடுகொடுத்தல் |
| அலங்காரம் | அணி, ஒப்பனை |
| அலட்சியம் | பராமுகம் |
| அலம், ஹலம் | கலப்பை |
| அலுவா | பாகு |
| அவகரணம் | கொள்ளை, பறித்தல் |
| அவகாசம் | வசதி, ஒழிவு |
| அவகிருத்தியம் | தீச்செய்கை |
| அவகீர்த்தி | இழிவு, புகழின்மை |
| அவக்கியாதி | வசை |
| அவசகுனம் | தீக்குறி |
| அவசத்தம் | இன்னா ஓசை |
| அவசயம் | தோல்வி |
| அவசாரம் | தீச்செய்கை |
| அவசாரி | வேசி |
| அவசியம் | முதன்மை, கட்டாயம் |
| அவசுத்தம் | துப்புரவின்மை |
| அவச்சேதனம் | பகுத்தறிதல் |
| அவதரித்தல் | பிறத்தல் |
| அவதாரம் | பிறப்பு |
| அவதானம் | நினைவு |
| அவதி | அளவு, எல்லை |
| அவதிப்படல் | துன்புறல் |
| அவதூதம் | முழுத்துறவு |
| அவத்தம் | பொய் |
| அவஸ்தை, அவத்தை | துன்பம் |
| அவ, அப | இன்மை, எதிரிடை |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அவமதி | இகழ்ச்சி, பழிப்பு |
| அவமரணம் | தீயசாவு |
| அவமானம் | இழிவு |
| அவம் | வீண் |
| அவயமிடல்<br>அபயமிடல் | முறையிடல் |
| அவயம் | அழுகை |
| அவயவம் | உறுப்பு |
| அவயவி | உடல் |
| அவதம்<br>அபரம் | பின் |
| அவரோகணம் | இறங்குதல் |
| அவலட்சணம் | அழகின்மை |
| அவலம் | கேடு, வருத்தம், மிடி |
| அவலித்தல் | புலம்பல், வருந்தல் |
| அவலோகம்<br>அவலோகனம் | பார்வை |
| அவனி | நிலம் |
| அவாசி | தெற்கு |
| அவார்தரம் | அழிவு, உதவியின்மை, வெறுவெளி |
| அவி<br>ஹவிஸ் | சோறு, தேவருணவு, நெய் |
| அவிகாரம் | எழுவாய், மாறின்மை |
| அவிகாரி | கடவுள், மாறாதவன் |
| அவிச்சை | அறியாமை, வெறுப்பு |
| அவித்தை | அறியாமை |
| அவிநயசாலை | நாடக அரங்கு |
| அவிநயம் | நாடகம் |
| அவிநாபாவம் | பிறழா நிகழ்ச்சி |
| அவிப்பாகம் | தேவருணவு |
| அவிரோதம் | மாறின்மை |
| அவிவேகம் | அறியாமை |
| அவுஷதம்<br>அவுடதம்<br>ஔஷதம் | மருந்து |
| அவுணர் | அசுரர் |
| அவ்வியத்தம்<br>அவ்வியாத்தி | குன்றக்கூறல் |
| அளகம் | கூந்தல் |
| அளி | கள், தேன், வண்டு |
| அற்பம்<br>அல்பம் | சிறுமை |
| அற்பர் | கீழ்மக்கள் |
| அற்புதம் | வியப்பு, அருள் நிகழ்ச்சி |
| அனகம் | மாசின்மை |

| வடசொற்கள் | தமிழ்ச்சொற்கள் |
|---|---|
| அனங்கன் | உடலிலான், கடவுள், காமவேள் |
| அனத்தம் | அழிவு, பயனின்மை |
| அனந்தம் | அளவின்மை |
| அனந்தரம் | பின்பு |
| அனவரதம் | எப்பொழுதும் |
| அனுசாரம் | அழுக்கு, நடைக்கோணல், நடத்து |
| அனுதரவு | தனிமை, உதவியின்மை [வது |
| அனுதி | கடவுள், தனியன் |
| அனுமயம் | நோயின்மை |
| அனுயாசம் | அயர்ச்சியின்மை; இளைப்பின்மை |
| அனிலம் | காற்று |
| அனீகம்<br>அநிகம் | படை |
| அனுகூலம் | கைகூடல் |
| அனுக்கிரகம் | அருள் |
| அனுசந்தானம் | ஆராய்வு |
| அனுசரிப்பு | பின்பற்றல் |
| அனுசன் | தம்பி |
| அனுஷ்டானம்<br>அனுட்டானம் | நிலை நிறுத்தல், கைக்கொள்ளல் |
| அனுதாத்தம் | படுத்தலோசை |
| அனுதாரயம் | இரங்கல் |
| அனுதினம் | எப்போழ்தும் |
| அனுபந்தம் | தொடர்ச்சி, முகவை, பின்னுரை |
| அனுபலத்தி | இன்மையேது |
| அனுபவம் | பழக்கம் |
| அனுபானம் | உடன்பருகுவது |
| அனுபூதி | அளவை யறிவு |
| அனுபோகம் | அடைதல் |
| அனுமதி | கட்டளை |
| அனுமானம் | வழியளவை, கருதலளவை |
| அனுமானித்தல் | ஐயப்படுதல் |
| அனுராகம் | காமம், இணைவிழைச்சி |
| அனுவாகம் | வழிமொழிதல் |
| அனேகம் | பல |
| அன்னசாரம் | கஞ்சி |
| அன்னம் | சோறு, உணவு, அடிசில் |
| அன்னவஸ்திரம் | உணவும் உடையும், சோறும் கூறை |
| அன்னிய சன்மம் | மறுபிறப்பு [யும் |
| அன்னியம் | வேறு |
| அன்னியோன்னியம் | ஒற்றுமை |
| அன்னுவயம் | தொடர்ப்படுத்தல் |

(தொடரும்)

# மறைஞான தேசிகர்

[திரு. அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் M. A., L. T.,]

"பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
யோர்விருத்தப் பாதிபோ தும்."

என்று சிவபோகசார முடையாரும்,

"பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ."

என்று தாயுமானுரும் புகழ்ந்த சிவஞான சித்தியாரென்னும் மெய்கண்ட நூலுக்கு உரை செய்தாருள் ஒருவர் மறைஞான தேசிகர். சிவஞானபோத யந்திர சாலையில் அச்சிட்டு வெளி வந்த சுபக்கம் அறுவருரை யென்னும் புத்தகத்தில் இவர் வரலாறு பின்வருமாறு உரைக்கப்பட்டது.

"திருமறைஞான தேசிகர் சீகாழிப்பதியில் திருஞான சம்பந்த மூர்த்திகளின் திருவடியார்களில் வள்ளல்கள் அறுபத்து நால்வருள் ஒருவராகிய ஆளவந்த வள்ளல் சந்தானத்தைச் சேர்ந்தவர். பிராமண குலத்தவர். வைதிக சைவ பரிபாலகர். பதிபசுபாசப் பனுவல் முதலிய நூல்களுக்கு உரையியற்றியவர். பரமததிமிரபானு முதலிய நூல்களை யியற்றியவர். இவர் இந்நூற்குக் காண்டிகையுரை கண்ணழிவுரை யென இரண்டுரை இயற்றினர். அதனுள் இஃது காண்டிகையுரை. இவ்வுரையே யிந்நூற்கு முந்திய வுரையெனப் பிந்திய வுரையாசிரியர்கள் கொண்டிருப்பதை அவ்வவர் 'சமவாத' மறுப்பு முக வுரைகளாற் றெள்ளிதிற் றெளியலாகும்.

உரையாசிரியர் பெயர் திரு மறைஞானதேசிகர் என்றே வழங்கப்பட்டதா? திரு ஸ்ரீ போன்ற உபசார அடையா? திருவண்ணாமலை யாதீனம் ஞானப்பிரகாசர் தம் உரை தொடங்குங்கால் "திருமறைஞான தேசிகர் ஸ்ரீ சிவக்கொழுந்தாசிரியர் இவர்கள் சிவஞான சித்திக்குச் செய்தவுரைகள் விரிந்த படியினாலே' என்று கூறியதனுல் 'திரு'வும், 'ஸ்ரீ'யும் உபசார அடைகளென்றே கொள்ளக்கிடக்கின்றது. உரைப்பதிப்பாளரும் மறைஞான தேசிகர் உரையென்றே நூலுள் எல்லாவிடத்துங் குறித்தனர். உரை முடிந்தபின்வரும்

நிலையடைய வனுதினமு நினையெனது மனமே
தொலைவிலரு டருமகவு மலமுமுறு துயரு
மலையுடைய வனதுமட மதியுடைய வருளு
மூலவின்மறை ஞானமுனி யுரைசெய்திரு மொழியே.

'என்னுஞ் செய்யுளானும் 'திரு' உரையாசிரியர் பெயருள் ஒரு பகுதியன்றென்று தோன்றுகிறது.

பதிக்கப்பட்டவுரை காண்டிகையுரை யென்பது உரையாசிரியர் பாயிரவுரையுள் "யாதானுமொரு நூற்குப் பொருளுரைக்குங்கால் உரைவகை விருத்திவகை காண்டிகைவகையென மூவிதப்படும். ஈண்டிந்நூற் குரைக்கப்பட்டது காண்டிகை வகையெனவறிக" என்றுரைத்ததைக்கொண்டும், உரையிறுதியில் "சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கோர் வகையானே காண்டிகை முற்றும்" எனவந்த சொற்றொடர் கொண்டும் துணியப்படும்.

உரையாசிரியர் தமிழிலும் ஆரியத்திலும் ஒருங்கே புலமை வாய்ந்தவரென்பது அவர்காட்டும் மேற்கோள்களால் நன்கு விளங்கும். தோல்காப்பியம், திருக்குறள், தேவாரம், திருவாசகம் முதலியன அவரெடுத்தாண்ட தமிழ் நூல்கள். காமிகம் முதலான ஆகமங்களும், கந்த புராண முதலிய புராணங்களும், நான்கு மறைகளும் முதலாயின அவரெடுத்தாண்ட வடநூல்கள். அவரெடுத்தாண்ட நூல்களின் தொகை நூற்றுக்கு மேற்படும். ஆங்காங்கே திருவிருத்தங்களுக்கு உரை யெழுதுங்கால் இஃது இன்ன ஆகமத்தின் கருத்தென்று சான்றுகளைக் குறித்திருக்கின்றார்.

மற்று மேற்கண்ட வரலாற்றுள் மறைஞான தேசிகர் சீகாழி வள்ளல்களின் வழிமுறையைச் (சந்தானத்தைச்) சேர்ந்தவரென்றும் பார்ப்பனக் குலத்தவரென்றும் உரைக்கப்பட்டது, வள்ளல்களின் வழிமுறையைச் சார்ந்தவர்களுக்கெல்லாம் வள்ளலென்னும்பட்டமுண்டு; கண்ணுடைய வள்ளல் சிவஞான வள்ளல் என்னும் பெயர்களிற்போல, இவர் வள்ளல்களின் வழிமுறையில் அறிவுறுத்தப்பட்டிருக்கக்கூடும். பார்ப்பனக்குலத்தவரென்பது ஆராயற்பாற்று.

இன்னும், அவ்வரலாற்றுள் அவர் பதிபசுபாசப்பனுவல் முதலிய நூல்களுக்கு உரையியற்றினரென்றும், பரமததிமிரபானு முதலிய நூல்களை இயற்றினரென்றும் உரைக்கப்பட்டது. 'முத

லிய' என்னும் சொல்லை வழங்குவோர் அதனுல் இன்ன பொருள் குறிக்கின்றனரென்று தெளிவதற்கில்லை. வேறு உரைகளும் வேறு நூல்களும் உள்ளனவாகத் தமக்குத் தெரிந்திருந்தால் அவை யின்னவின்னவெனக் குறித்திருத்தலே நலம். எல்லாருக்கும் தெரிந்த பொருள்களைப் பற்றிப் பேசுங்கால் 'முதலிய' என்னுஞ் சொல்லை வழங்கலாம். மறைகள் இருக்கு முதலாயின, ஆகமங்கள் காமிக முதலாயின, புராணங்கள் சைவ முதலாயின, மெய்கண்ட நூல்கள் திருவுந்தியார் முதலாயின, ஐந்திலக்கணங்கள் எழுத்து முதலாயின. இப்படிப்பட்ட விடங்களில் மயக்கத்திற்கிடமில்லை. இங்குக் குறித்த பரமததிமிர பானுவை யியற்றினுர் சைவசமயநெறி சிவதருமோத்தரமென்னும் நூல்களை யியற்றியவரேயென்று கொள்வாருமுண்டு. அது பின்னர் மறை ஞானசம்பந்த நாயனுர் வரலாற்றில் விவரிக்கப்படும்.

மற்றுத் தமது தமிழ்ப்புலவர் சரிதத்துச் சிவஞானசித்தியார் சுபக்கத்துக்கு உரை செய்தார் பெயர்களைக் குறிக்குங்கால் மறைஞான தேசிகரொருவரெனக் கூறிச் செந்தமிழில் (19, 3) அவர் பெயரை அதுவாகவே குறித்த திரு. அ. குமாரசுவாமிப் புலவர் அவ்வெளியீட்டில் (19, 12) பின் அவர் பெயரை மறை ஞான சம்பந்த தேசிகர் என மாற்றியது என்ன சான்றுகொண்டோ விளங்கவில்லை.

இனி, அருணகிரிபுராணம் பதிப்பித்த சிதம்பரம் வாமதேவ முருக பட்டாரகர் அந்நூலாசிரியர் சிதம்பரம் மறைஞான தேசிகரெனத் தலையிதழிற் காட்டியிருக்கின்றுர். அவர் சித்தியாருரைகாரர் மறைஞான தேசிகரினின்றும் வேறு என்பது புலப்படவில்லை. அருணகிரிபுராணம் திருவண்ணுமலையென்னும் திருப்பதியின் பெருமையையுடையது. அது செய்யத் தொடங்கியகாலம் கலியபதம் 4655 [கி. பி. 1553] பிரமாதீச வாண்டு தைத்திங்கள் ஏகாதசியோடு கூடிய ஞாயிற்றுக்கிழமை யென்பது ஆசிரியர் தாமே புராணத்துட் குறித்தலால் விளங்குகின்றது.

*தருணமதிச் சடைமுடியா னருணகிரிச் சதாசிவன்சந் நிதிவா மத்திற்*
*புரவிகள்பூண் மண்டபத்தி னுல்வேத மாகமங்கள் புராண மெல்லாந்*
*திரிவுமறத் தேர்ந்துணர்ந்த வைதிகருஞ் சைவர்களுந் திகழ்சங் கத்தி*
*னருணகிரி வரந்தமிழா லறைகவென வவரருளப் பகர்வா மன்பால்.*

என்னுஞ் செய்யுளால் நூல் செய்தற்குக் காரணமும் உரைக்கப்பட்டது.

அருணகிரிபுராணம் காப்பும், பாயிரமும், திருநாட்டுச் சிறப்பும், அருணசலோதயச்சருக்கம், அருந்தவச்சருக்கம், வலம்புரிசருக்கம், ஆலயத்தொடுபுரியாக்கிய சருக்கம், தராபதி புழுகுசாத்திய சருக்கம் என்னும் ஐந்து சருக்கங்களும் கொண்ட ௬௧௩-விருத்தப்பாக்களால் இயன்ற நூல்.

திருநாட்டுச் சிறப்பில் ஆசிரியர் "உண்டோவென் சிவனமல னுயிரினுளு மெனவுணர்ந்த, பண்டிதர்கைத் தாளமெனப் பலவித சாலியும் விளை" கின்றனவென் றுரைத்ததும்,

மன்னிய மாட நீடு மாளிகை சூளி கைக்கண்
கன்னலுங் கனியுங் கண்டும் போன்மொழி கன்னி மாத
ரன்னையெவ் வுயிர்க்கு முண்ணு முலையுமை யென்றம் மானை
நன்னயம் பாடி யாடு நகர்திக ழருணை நாடே.

தருமுத லிருவர் தேடு முக்கண னுன்கு வேத
மருளின னுண்டொன் றற்கு மருளிரு நாழி நெல்லாற்
றருமமெண் ணுன்கு மோம்புந் தாயுமை சரணம் பாடித்
தெரிவைய ரூடலாருந் திகழ்பதி யருணைத் தேசம்

என்று அம்மானை பாடுவதையும், ஊசலாடுவதையும் முறையே புனைந்துரைத்தது ஆசிரியர் மனப்பாங்கினை விளக்கும்.

அவ்வாறே, திருநகரச் சிறப்பில்,

ஒறுத்தார்கள் புலனைந்து முறவுபகை யெனுமிரண்டு
மறுத்தார்க ளவனிதனி லாக்கையொடு வாழ்க்கையினை
வெறுத்தார்கள் மெய்க்கணிந்து வெண்ணீற்றைக் கண்டிவடம்
பொறுத்தார்கள் சிவபூசை புரிமடமும் பொதுளியுறும்

என்பது போன்ற செய்யுட்களை நோக்குக.

அருணசலோதயச் சருக்கத்தில், நான்முகனுந் திருமாலும் தம்முள் மாறுபாடுற்றவிடத்து இறைவன் அழன்மலையாய்த் தோன்றி அவர் செருக்கை மாய்த்தவகை சொல்லப்படுகின்றது. அருணகிரி நினைக்க வீடுதருங் கோயிலென்பது

அருண கிரியென் பவரொருகா லற்றை யவல வினையற்று
ரருண கிரியென் யவர்பலகா லாண்டொன் றுளதீ வினையற்று
ரருண கிரியை யகத்திருத்தி யருண கிரியென் பவர்தினமு
மருண கிரிநா யகனருளான் மேலுற் றமல னடியடைவார்

என்னுஞ் செய்யுளிற் குறிக்கப்பட்டது.

அருந்தவச் சருக்கத்தில் திருக்கயிலைமலையில் இறைவன் கண்ணைப் புதைத்துவந்த குற்றம் போக்குதற்கு உமையம்மையார் காஞ்சியில் சிவனை வழிபட்டுப் பின் இறைவனேவலால் அருணகிரியைச் சேர்ந்து தவம்புரிந்த வரலாறும், இந்திரன் முதலியோர்க்கு இடர் விளைத்துக் கொண்டிருந்த மகிடாசுரனைத் துர்க்கையை யேவி அழிப்பித்த வரலாறும், பின் தங் குற்றந் தீர்ந்து இறைவன் பாகம் புகுந்த வரலாறும் சொல்லப்பட்டன. இச்சருக்கத்தில் கைலாய நவிற்சியும்(வருணனை) தொண்டைமண்டல நவிற்சியும், காஞ்சிநகர்நவிற்சியும் அழகானபாகங்கள். இன்னும் இதில் உமையம்மையார் கேட்கக் கௌதமர் அருணாசலப் பெருமையைச் சுருக்கி யுரைத்தனர். இடையில் அத்திருப்பதியினுள்ள பல நீர்த்துறைகளும் வந்த வரலாற்றையும் உரைத்தனர். இச்சருக்கத்துள் அருணாசலமென்னும் சொற்பொருள் உரைத்தவகையும் உற்று நோக்கத் தக்கது. உலகத்தில் சிவபிரான் திருக்கோயில்கள் எண்ணிலவுண்டு. அவற்றுள் முதன்மையானவை அறுபத்தெட்டு.

அந்த வறுபத் தெட்டினுக்கு மதிக மருணா சலமுயிரின்
பந்த பாவத் தினுக்குரிய பெயரே ருணமப் பாவந்தான்
இந்த வரையைத் தெரிசித்தார்க் கில்லை யிதனு லதனும
முந்தி யருணா சலமெனவே மொழியப் படுஞ்சொன் முறையாலே.

இதனுட் கூறப்பட்ட எண்ணான் கறங்களுக்கும் நிகண்டிலும் வேறு நூல்களிலும் காணுமவற்றிற்கும் வேறுபாடு உண்டு..

அருமறைக ளான்கினையுந் தனித்தனியே பயில்விக்கு மந்த ணாளர்க்
குரிமையுறப் பயில்வார்க்கு முறையுளன பானுதி யுதவ லொப்பில்
பரமசிவ னாகமத்தைப் பயில்விக்கு மந்தணர்க்கும் பரிவு கூர
னுரிமையுறப் பயில்வார்க்கு முறையுளன பானமுத லுதவ லன்பால்.

வயிரவதந் திரர்வாம தந்திரர்கா ருடர்பேய்கண் மாற்று நூலோர்
மயிர்கடியு மாருகதர் பவுத்தரிவர்க் கன்னுதி மடமு மீதல்
செயிரரிக்கு மிருதியிதி காசஞ்சித் தாந்தந்தேர்ந் தாராய் வார்க்கு
முயிரினுக்குத் துணையான புராணஞ்சோ திடந்தர்க்க மோது வார்க்கும்.

காவியமா யுள்வேதங் காந்தருவஞ் சத்தவியல் கற்றாய் வார்க்கு
மாவியினுள் ளானமல னருத்துவிப்பா னென்பார்க்கு மன்ன மீதல் [ளர்க்
கோவினுக்குப் புற்கொடுத்த னீரளித்தன் மருந்தளித்தல் கொடுநோ யா
ளீவதுபா லும்மெண்ணெயு மிளங்குழவிக் கெழுத்தினையார்க் கியற்று வித்தல்

இல்லம்விளக் கெண்ணெய்சுக்கு மீதனிறை கர்ப்பிணிக்கான் பாலென்றே
சொல்லியவெண் ணான்கறமும் புரிவித்து. [தான்

“அதெந்துவே யென்றருளாயே” என்னும் மணிவாசகர் திருவாக்கைப் போற்றி ‘எந்து’ என்னுஞ் சொல் “எந்துமது குறையறைமின்” எனத் திருவிருத்தத்திற் கையாளப்பட்டுள்ளது.

வலம்புரி சருக்கத்தில் மலைவலஞ்செய்யுமுறையும், அதன் பயனும் உரைக்கப்பட்டன. அன்றியும் கோயில் வலஞ்செய்யு முறையும், கோயில் வணக்கம் செய்யுமுறையும் விரித்துரைக்கப் பட்டன. இறுதியில் சதுர் வருணங்களும், அநுலோமப் பிரதிலோமரும், அந்தராளர் விராத்தியரும் தோன்றிய வரலாறும் தொகுத்துரைக்கப்பட்டது.

ஆலயத்தொடு புரியாக்கிய சருக்கத்தில் தேவர்கம்மியன் அவ்விரண்டையுஞ் சமைத்த சிறப்பு உரைக்கப்பட்டது.

தராபதிபுழுகு சாத்திய சருக்கத்தில் ஒருநாவி புழுகை மலையிலொற்றியதன் பயனாக அரசனாகப் பிறந்து இறைவனுக்கும் புழுகு சாத்துவித்துப் பேறுபெற்ற வரலாறு உரைக்கப் பட்டது.

(இன்னும்வரும்)

---

# களவுங் கற்று மற

[திரு. அ. சிதம்பரநாதன் அவர்கள்]

இக்கட்டுரையில் “களவுங் கற்று மற” என்ற பழமொழியின் பொருள் நயத்தைப்பற்றி ஆராயப்படும். அவ்வாறு ஆராயு முன்னர் உலகத்திற் பொதுவாக என்ன பொருளில் அச்சொற்கள் வழங்கப்பட்டு வருகின்றன என்பதை யறிவது நலம். ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு சொல்லுக்கும் பற்பல பொருள்களிருப்பது யாவரு மறிந்ததே. ஒவ்வொருவரும் தத்தமக்கு வேண்டியவாறு பொருள்கோடல் எங்கும் நிகழ்ந்து வருவதொன்றாகும். அவ்வாறு பொருள்கோடல் பற்றிச் சிலர் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் பிரிப்பர்; பிரிக்குங்கால் சில வமயங்களில் அச்சொற்களினழகு குன்றி விடும். அழகு குன்றாதவாறும் திறமாகவும் பொருள் கூறுவோர் பலர் உளர். அவருட் சிலர் “களவுங் கற்று மற” என்பதற்குத் “திருட்டுத் தொழிலினும் பழகி அதன் பின்னர் அதை மற” எனப் பொருள் கொள்வர். இப்பழமொழியினுள்ள

'களவு' என்றது எத்தகைய களவைக் குறிக்கின்றது என்றறிவதன் பொருட்டே இக்கட்டுரை யெழுந்தது.

சிலர், களவினால் வருமிழுக்கு யாதொன்று மிலதென்பர். அவர் கூற்று பாம்பினிடத்து நஞ்சின்று என்பதற் கொப்பாகும். கண்ணன் வெண்ணெய் திருடவில்லையா என்றும், அரனன்று கோவணந் திருடவில்லையா என்றும் சிலர் கடாவுவர். கடாயினோர்க்கு விடை பகருமுறையில் நாம் சொல்லக்கூடுவதி யாதெனில், "நீவிரும் அத்தகைய (கடவுள்) நிலையை யடைந்த பின் அத்தொழிலில் இறங்கலாம்" என்பதே. கடவுளார் கல்லாலடிபட்டவாறு நாம் படக்கூடுமானால், அவர் நஞ்சுண்டவாறு நாமுண்ணக்கூடுமானால், அவர் படைத்தளித்துக் காத்தும் பல்லுருவமெடுத்து மியற்றும் பல தொழில்களையும் ஆற்ற வல்லோமானால், நாமு மத்தொழிலில் இறங்க உரித்தானவரே. அன்றி, அதிலிறங்க எண்ணுவோர் "கொள்ளென்றால் வாயைத் திறக்கும், கடிவாளமென்றால் வாயைமூடும்" என்ற பழமொழிக் கிலக்காவர்' பிறர் பொருளைக் கொள்ள எண்ணுவோரே களவைக் கற்க விரும்புவர். ஆனால், கற்றபின் அக்களவை மறத்தலென்பது பெரும்பாலோர்க் கியலாத தொன்றாம். களவைக் கற்குமொருவன் அதனுடன் பிறந்தவையாகிய பொய், புனைசுருட்டு முதலிய தீய இயல்புகளுக்குப் பங்காளி யாவான். ஆதலால் அத்தகைய தீய இயல்பில் அழுத்த எழுந்ததல்ல இப்பழமொழி என்பதை வலியுறுத்தல் அழகுடைத்தே.

களவு சிற்சில விடங்களில் நன்மை பயக்கலாம். காட்டாக ஒருவன் தனதுயிரை மாய்த்துக்கொள்ள எண்ணிச் சிறிது நஞ்சு வாங்கி வைத்திருந்தான். அதை அவன் நண்பன் ஒருவ னறிந்து அவனதுயிரைக் காக்கவுன்னி அந்த நஞ்சைத் திருடிச்சென்றான். நஞ்சருந்த எண்ணியவன் நஞ்சினைக் காணாது முதலில் மயங்கி, பின்னர்க் காலப்போக்கில் தனதுயிரில் மிகவும் பற்றுடையனாயினான். இவ்வாறு உயிரைக் காக்கும்பொருட்டு நிகழ்ந்த களவு போற்றற் பாலதே. ஏனெனில், ஆசிரியர் திருவள்ளுவனாரும்,

> "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
> பிறவினை யெல்லாந் தரும்"

என்று திருவாய்மலர்ந் தருளினாராகலின், அத்தகைய கொல்லாமையாகிய பேரறத்தின் பெரும் பயனைப் பெறுவான் குறித்து எழுந்த இக்களவு மாசற்றதாகும். இக்களவினால் பிறர்க்கு

நிகழ்ந்த துன்பம் யாதொன்றுமில்லை; இருப்பினும் அத்துன்பம் பின்னர் இன்பத்தில் துய்த்தற்குரிய தென்பதற் கையமில்லை.

இத்தகைய களவைக் கற்று மறக்கும்படிக் கூறுவதோ, இப்பழமொழியெனின், அற்றன்று. இத்தகைய களவுகள் கற்கப்படவேண்டுவதே இல்லை. காலத்திற்கேற்ப இக்களவுகள் பிறனுதவியின்றி நிகழ்த்தற்பாலன. இத்தன்மை வாய்ந்த களவுகள் கற்கும் பொருட்டு நிகழ்த்தப்படவேண்டுமானால் யாராகினுமொருவன் நஞ்சாதல், வேறு உயிர்நீக்கும் பொருளாதல் வாங்கி வைத்திருக்கவேண்டும். இக்களவுகளைக் கற்பதற்கு ஆசிரியர் பெறவியலாது. தவிர, ஒருவன் ஒருயிரைக் காக்கவேண்டிக் களவு செய்யக் கற்றிருந்து பின்னர் மறந்துவிடுவானானால், வேறுயிர்கள் அவ்வா றுயிர்துறக்க எண்ணுங்கால், தான் மறந்துவிட்டதாகக்கூறி விடுதலைச் சீட்டெழுதி, அனுப்பிய களவை மீண்டு மழைத்துவர என் செய்வது? ஆதலால் "களவுங் கற்று மற" என்ற பழமொழிக்கு வேறு சிறந்த பொருளிருக்கலாமென்றெண்ணுவது இயற்கையே.

சிலர் "களவுங் கத்து மற" என்றுகொண்டு களவையும் பொய்யையும் (அல்லது பிதற்றலையும்) மறந்துவிடு என்று பொருள் கூறுவர். "கற்று" என்பது "கத்து" என்று திரிக்கப்பட்டுப் பொருள் கொள்ளப்படலின், அதைவிட்டு, வேறு சிலர் கூறுவதை நோக்குவோம். "நூல்பலகல்" என்று கூறப்பட்டிருப்பதை யொட்டிக் "களவு நூல்களையும் ஒருவன் கற்றுக் களவைச் செய்கையிற் காட்டாது மறந்துவிடக் கடவன்" என்று முரைப்பாருண்டு. ஆனால் ஒருவன் களவைக் கற்காது களவு நூல்களையே கற்கிறானாதலால், கற்ற களவுநூல்களை மறவாது கற்காத களவுச் செய்கையை மறக்குமாறு கூறப்படலின், அது பொருந்தாதென்க. களவியல் நூலைக் கற்ற ஒருவன் தான் நூலியற்றுங் காலத்துக் களவியல் பற்றிய செய்திகளைக் கூறவேண்டியிருக்குமாதலின், அதன் இலக்கணத்தை மறந்துவிடு என்று கூறுதல் ஏற்புடைத்தன்று. அன்றியும், கற்ற ஒருநூலை மறந்துவிடுதல் எளிதன்று; அவ்வாறு மறந்துவிடுமாறு கற்கும் கல்வியும் கல்வியன்று. "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்கெழுமையும் ஏமாப்புடைத்து" ஆதலால் மேற்கூறியபொருளும் பொருந்தாதென்பது வெள்ளிடைமலை.

ஆகவே "களவுங் கற்றுமற" என்பதற்கு வேறு என்ன பொருள்கொள்ளலாம் என்பதை யாராய்ந்து வருங்கால் சிறியேனுக்குத் தோன்றியதை வரைகின்றேன். களவு என்பது

அகத்திணையின்பால் நிகழுங் களவொழுக்கத்தைக் குறித்து நிற்பதாகக்கொள்ளலாமோ வென்பதே, எனக்குள் நிகழ்ந்து வந்த ஐயப்பாடு. "கற்பெனப் படுவது களவின் வழித்தே" யாகலானும் பொய்யும் வழுவுந் தோன்றுமுன்னர்க் கரணமின்றிக் களவே நிகழ்ந்து வந்ததாகலானும், முற்காலத்தில் தலைவனுந் தலைவியும் மணஞ் செய்துகொள்ளுமுன்னர்க் களவொழுக்கத்திற் பழகினதாக ஒல்காப் பெருமைவாய்ந்த தொல்காப்பியத்தினின்று அறியப்படுதலானும் "களவு" என்ற சொல் களவொழுக்கத்தைக் குறித்து நிற்பதாகக்கொள்ள இடமேற்படுகிறது. முற்காலத்தில் ஒருவன் ஒருத்தியை மணம் புரியுமுன்னர்த் தனியே அவளைச் சோலையிலோ, எயிற்புறத்திலோ அல்லது சந்தடி இல்லாத வேறெந்தவிடத்திலோ கண்டிருந்து கூடிச் சிலகால் சென்றபிறகு யாவருமறிய மணம் புரிந்துகொண்ட செய்தி தமிழ் நூல் வல்லார் யாவருமறிந்ததே. அவ்வாறு நிகழும் களவு பெயரளவே களவன்றி உண்மையிற் களவாகாது. ஏனெனில், ஒருவனுக்குரிய பொருளைப் பிறன் கவர்ந்து செல்வதே களவு. பெண்கள் என்றுந் தங்கள் தந்தையின் உரிய பொருளாகமாட்டார்கள். தந்தையினிடத்து இருக்கும்வரை அவர்கள் அவன் பொருளே. ஆனல், எந்தநேரத்தில் ஒரு பெண் ஒரு ஆண்மகனைத் தலைவனைகத் தன் நெஞ்சத்தாற் கோருகிருளோ, அந்த நேரத்திலேயே அவள் தன் உழுவலன்பு சென்றிழுக்கும் தலைவனுக்கே உரிய பொருளாகிருள். ஆதலால் தலைவன் தனக்குரிய பொருளைத் தான் கொள்கிருன். ஆயினும் இவ்வொழுக்கம், வேதம் 'மறை' என்று வழங்கப்படுவதுபோன்று, களவு என்றே கருதப்பட்டது.

இத்தகைய களவொழுக்கத்தைக் "களவு" என்ற சொல் குறிக்க, அதிலுள்ள உம்மை "தலைவன் கற்கவேண்டிய ஒழுக்க நூல், அறிவுநூல், முதலியவற்ருேடும், வில், வேல், வாள் முதலிய படைத்தொழில்களோடும்" என்பதைக் குறிக்காநின்றது. இப்பழமொழி முதலில் தலைவன் தலைவிமாட்டே வழங்கப்பட்டுப் பின்னர்க் காலப்போக்கில் யாவர் மாட்டும் அல்லது யாவராலும் வழங்கப்படும் நிலைமையை அடைந்திருக்கவேண்டும்.

இக்களவைக் கற்பிப்பதற்கு ஆசிரியருண்டு. தலைவன் தலைவிக்கும் தலைவி தலைவனுக்கு மாசிரியராவர். களவொழுக்கத்திற் பழகுங்கால் ஒருவர் கண்ணிலு மகப்படாதவாறு நடந்து கொள்ளுவதற்கு வேண்டிய முறைகளை ஒருவர் மற்ருெருவரிடமிருந்து கற்றலின் "கற்று" எனப் பட்டதுபோலும்.

இனி, 'மற' என்பது தலைவனும் தலைவியும் களவொழுக்கத்திலேயே எந்நாளும் பழகாமல் சிறிதுகாலத்திற்குள் களவை மறந்து யாவருமறிய மணம் புரிந்துகொள்ளக்கடவர் என்ற பொருளைக்கொண்டு நின்றதுபோலும். ஆதலால் "கற்று மற" என்ற சொற்களின் பொருளும் களவொழுக்கத்தைக் குறித்து நிற்பதைக் காண்க.

ஆகவே, "களவுங் கற்றுமற" என்பதற்குக் களவொழுக்கத்திற் சிறிதுகாலம் பழகிப் பின்னர் அதைமறந்து கற்பொழுக்கத்தைக் கொள்க" என்ற பொருள் பெறப்படும். கற்ற நூல்களையும் கற்ற படைத்தொழில்களையும் மறவாது மென்மேலும் பெருக்குவதுபோல் களவொழுக்கத்தைப் பெருக்காது "நீ கற்ற களவை அறவே (உன் வாழ்நாள் முழுதும்) மறந்துவிடு. வேறொருவரோடுங் களவொழுக்கத்தி லிறங்காதே. கற்ற களவை வேறொருவரோடுங் காட்டாது நினைத்தல்கூடச் செய்யாதே" என்ற ஆழ்ந்ததோ ரருமையான பொருளைக்கொண் டெழுந்ததே இப்பழமொழி என்பது எனது சிற்றறிவுக்குத் தோன்றியவாறு. "எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப் பொருள்" காணும் அறிஞர் ஏற்ற பெற்றிகொள்ளக்கடவர்.

குறிப்பு:—'களவுங் கற்றுமற' என்னுந் திருஉரையில் 'களவு' என்பது களவொழுக்கத்தைக் குறிக்குமென்றும் 'மற' என்பது அவ்வொழுக்கத்தை மற்றொரு பெண்ணின் பொருட்டுக் கைக்கொள்ள லாகாதவாறு மறந்துவிடுக என்பதை உணர்த்துமென்றும் இங்குக் காட்டப்பட்ட பொருளுண்மை பொருந்துவதேயாம். களவொழுக்கத்தை ஒருவன் கற்றலும் வேண்டுமோவெனின், அதனை நன்முறையில் முறைப்படி கற்றலே இங்குக் கற்று என்று கூறியதின் கருத்தாமன்றிப் புதிது கற்றுக்கொள்ளல் என்பது அன்றாம் என்க. இதனை ஆராய்ந்து தெளிவுபடுத்திய திரு. அ. சிதம்பரநாதன் அவர்கள் (கல்லூரி மாணவர், கும்பகோணம்) என்பார் நீண்ட நல்வாழ்வுடன் இத்தகைய நுட்ப ஆராய்ச்சிகளிற் பின்னும் நுழைந்து சிறப்பத், திருவருள் அருள் புரிக.

---

# தமிழ் இலக்கியம்
# TAMIL LITERATURE

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M A., L.T.]

## உலக நீதி

(கூ௫எ-ம் பக்கத் தொடர்ச்சி)

## ULAGANIDHI (Worldly Virtue)

IV. க. குற்றமொன்றும் பாராட்டித் திரியவேண்டாம்.
Make no fuss about others' faults.

உ. கொலைகளவு செய்வாரோ டிணங்க வேண்டாம்.
Associate not with thieves and murderers.

ங. கற்றவரை ஒருநாளும் பழிக்க வேண்டாம்.
Despise not the learned.

ச. கற்புடைய மங்கையரைக் கருத வேண்டாம்.
Cast not lascivious eyes on the chaste.

ரு. கொற்றவனோ டெதிர்மாறு பேச வேண்டாம்.
Contradict not thy king.

சு. கோயிலில்லா வூரிற்குடி யிருக்க வேண்டாம்.
Live not in any place which is without a temple.

எ. மற்றுநிக ரில்லாத வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே!

V. க. வாழாமற் பெண்ணைவைத்துத் திரிய வேண்டாம்.
Put not aside your wife.

உ. மனையாளைக் குற்றமொன்றுஞ் சொல்ல வேண்டாம்.
Speak not ill of your wife.

ங. வீழாத படுகுழியில் வீழ வேண்டாம்.
Fall not into the bottomless pit.

ச. வெஞ்சமரிற் புறங்கொடுத்து மீள வேண்டாம்.
Do not escape with life by turning your back on a field of battle.

ரு. தாழ்வான குலத்துடனே சேர வேண்டாம்.
Don't mix up with a low family.

சு. தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
Harass not by false accusation the low-fallen.

எ. வாழ்வாருங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

VI. க. வார்த்தைசொல்வார்வாய்பார்த்துத்திரியவேண்டாம்.
Go not about following admiringly the speakers of idle words.

உ. மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்.
Visit not those who disregard you.

ங. மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்க வேண்டாம்.
Forget not the words of the wise.

ச. முன்கோபக் காரரோ டிணங்க வேண்டாம்.
Avoid the hot-tempered and easily irritable.

ரு. வாத்தியார் கூலியைவைத் திருக்க வேண்டாம்.
Delay not the payment to the teacher.

சா. வழிபறித்துத் திரிவாரோ டிணங்க வேண்டாம்.
Associate not with dacoits.

எ. சேர்த்தபுக ழாளனொரு வள்ளி பங்கன்
திருக்கைவே லாயுதனைச் செப்பாய் நெஞ்சே.

VII. க. கருதாமற் கருமங்கள் முடிக்க வேண்டாம்.
Attempt no act without deep deliberation.

உ. கணக்கழிவை ஒருநாளும் பேச வேண்டாம்.
Speak not always of the past.

ங. பொருவார்தம் போர்க்களத்தில் போக வேண்டாம்.
Go not where people fight.

ச. பொது நிலத்தில் ஒருநாளும் இருக்கவேண்டாம்.
Live not on Communal Land.

ரு. இருதார மொருநாளும் தேட வேண்டாம்.
Seek not to marry two wives.

சா. எளியாரை எதிரிட்டுக் கொள்ள வேண்டாம்.
Set not the helpless in opposition to you.

எ. குருகாரும் புனங்காக்கும் ஏழை பங்கன்
குமரவேள் பாதத்தைக் கூறாய் நெஞ்சே!

VIII. க. சேராத விடந்தனிலே சேர வேண்டாம்.
Associate not with the unworthy.

உ. செய்தநன்றி யொருநாளும் மறக்க வேண்டாம்.
Forget not the good done to you.

௩. ஊரோடுங் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்.
Be not a tale-bearer.

௪. உற்ருரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்.
Speak not all of your kindred.

௫. பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்.
Give not up great deeds.

௬. பிணைபட்டுத் துணைபோகித் திரிய வேண்டாம்.
Become not a pledge unto any one.

௭. வாராருங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

IX. ௧. மண்ணின்று மண்ணோரஞ் சொல்ல வேண்டாம்.
Standing on the (impartial) earth speak not partial ( and unjust ) words.

௨. மனஞ்சலித்துச் சிலுகிட்டுத் திரிய வேண்டாம்.
Do not get dispirited and go about quarrelling with all people.

௩. கண்ணழிவு செய்துதுயர் காட்ட வேண்டாம்.
Part not good friends and cause pain thereby.

௪. காணாத வார்த்தையைக்கட் டுரைக்க வேண்டாம்.
Speak not to what you have not seen yourself.

௫. புண்படவே வார்த்தைதனைச் சொல்ல வேண்டாம்.
Speak not to wound or offend.

௬. புறஞ்சொல்லித் திரிவாரோ டிணங்க வேண்டாம்.
Associate not with talebearers.

௭. மண்ணளந்தான் தங்கையுமை மைந்த னென்கோன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

X. ௧. மறம்பேசித் திரிவாரோ டிணங்க வேண்டாம்.
Associate not with boasters.

௨. வாதாடி வழக்கழிவு சொல்ல வேண்டாம்.
Do not pervert justice by vain contest.

௩. திறம்பேசிக் கலகமிட்டுத் திரிய வேண்டாம்.
Don't boast of your strength and go about challenging all to fight.

௪. தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்
Forget not God

௫. இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
Die rather than speak a lie.

௬. ஏசலிட்ட உற்றாரை நத்த வேண்டாம்.
Favour not foul-speakers even if they be kinsmen.

௭. குறம்பேசி வாழ்கின்ற வள்ளி பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூறாய் நெஞ்சே.

XI. ௧. அஞ்சுபேர் கூலியைக்கைக் கொள்ள வேண்டாம்
௨. அது எதிங் கென்னினீ சொல்லக் கேளாய்
௩. தஞ்சமுடன் வண்ணா னாவிதன் கூலி
௪. சகலகலை யோதுவித்த வாத்தியார் கூலி
௫. வஞ்சமற நஞ்சறுத்த மருத்துவச்சி கூலி
௬. மகாநோவு தனைத்தீர்த்த மருத்துவன்கூலி
௭. இன்சொலுட னிவர்கூலி கொடாத பேரை
ஏதேது செய்வானோ எமன் றானே!

Don't appropriate the wages of the following five:—
The Washerman's, the barber's for they are mean;
the teacher's for he has taught you many sciences;
the Midwife's for she has honestly helped at the delivery and the Physician's for he has cured you of a deadly disease.
Who pays these not and with sweet word's, they shall suffer unspeakably at the hands of the Lord of Hell.

XII. ௧. கூறுக்கி ஒருகுடியைக் கெடுக்க வேண்டாம்.
Divide not a family and destroy it.

௨. கொண்டைமேல் பூத்தேடி முடிக்க வேண்டாம்.
Seek not always to put flower on your hair.

௩. தூறுக்கித் தலையிட்டுத் திரிய வேண்டாம்.
Entangle not yourself in any scandal.

௪. துர்ச்சனராய்த் திரிவாரோ டிணங்க வேண்டாம்..
Associate not with the wicked.

௫. விறுன தெய்வத்தை இகழ வேண்டாம்.
Despise not the Omnipotent.

சு. வெற்றியுள்ள பெரியோரை வெறுக்க வேண்டாம்.
Quarrel not with Victorious.

எ. மாறுன குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

XIII. க. ஆதரித்துப் பலவகையாற் பொருளுந் தேடி
அருந்தமிழா லறுமுகனைப் பாட வேண்டி
ஓதுவித்த வாசகத்தால் உலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலித்துக் கற்றோரும் கேட்ட பேரும்
கருத்துடனே நாடோறுங் களிப்பி னோடு
போதமுற்று மிகவாழ்ந்து புகழுந் தேடி
பூலோக முள்ளளவும் வாழ்வர் தாமே.

After having sought fortune in all right ways, anxious to praise the six faced God in beautiful tamil, I have, even as I have learnt, sung these moral precepts, Lovingly may you hear and learn them; earnestly may you follow them and daily grow in wisdom!

Live well, grow famous, and endure as long as the Earth itself!

---

## கடவுள் நிலைக்கு மாறுன கொள்கைகள் சைவமாகா

[சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள்]

(சுசஎ - ம் பக்கத் தொடர்ச்சி)

இனிக் 'கேளாதே எல்லாங் கேட்டான்' என்னுஞ் சொற்றொடர் பிறர் சொல்வனவற்றைச் செவியென்னுங் கருவியால் கேட்டு அறியும் நம்மனோர் போலாது அக்கருவியில்லாமலே உலகின்கண்ணுள்ள எல்லா மக்களும் சொல்லுஞ் சொற்களையும் நினைக்கும் நினைவுகளையும் அறியவல்லான் எனவும், வாயென்னுங் கருவிகொண்டு பிறர்பால் அறியவேண்டுவனவற்றைக் கேட்டறியும் நம்மனோர் போலாது அக்கருவியின் உதவியில்லா

மலே பிறர் உள்ளத்து நிகழும் நிகழ்ச்சிகளையெல்லாம் தன் நினைவினாலேயே உணரவல்லான் எனவும் இருபொருள் தரு வதாம். மக்கட் பிறவியினராகிய நாம் செவியினுதவியின்றிப் பிறர் சொல்வனவற்றைக் கேட்டுணரும் ஆற்றலில்லாதவர்களா யிருக்கின்றோம். வாயினுதவியின்றிப் பிறரை வினாவித் தெரிய வேண்டுவனவற்றைத் தெரிந்துகொள்ள இயலாதவர்களாயிருக் கின்றோம். செவியும் வாயுமில்லாத செவிடரும் ஊமரும் அக் கருவிகள் இல்லாமையாற் படுந் துன்பத்தைக் கண்டு எவ்வளவு இரக்க முறுகின்றோம். தம்மினும் அறிவிற் சிறந்தவர்களில்லை யெனவும், தம்மினும் வலிமையிற் சிறந்தவர்களில்லையெனவும் இறுமாந்து நின்றோர் குருடர் ஊமர் முதலான உறுப்பறை களைக் கண்டு தாமும் அவர்களைப்போற் பழுதுபட்டிருந்தால் தம்முடைய நிலையும் எவ்வளவு துன்புறத்தக்கதா யிருக்கு மென்று நினைந்து அதனால் தமது சிறுமையும் எல்லாம் வல்ல இறைவன்றன் பெருமையும் உணர்ந்து நெஞ்சம் நெக்குருகு தலைக் காண்கின்றோமல்லமோ? இங்ஙனமே இவ்வரிய உடம் பில் அமைந்த மற்றைப் பொறிகளும் மற்றை உறுப்புக்களும் பழுதுபட்டுப் போகுமானால், அவ்வுடம்பின்கண் நிற்கு முயிர் அதனால் அறிவு விளங்கப் பெறாது ஏதொரு செயலுமின்றி வெறுங் கல்லைப்போற் கிடக்குமன்றோ? இறைவன் அருள் கனிந்து அளித்தருளிய இவ் வுறுப்புகளின் உதவியை முழு தும் பெற்று உயிர் வாழும் சிலர் அவ் வுதவியைத் தினைத்துணை யும் நினைந்து பாராமல் யாமே கடவுளென்று செருக்கிப் பேசா நிற்பர். அவருடைய செருக்கெல்லாம் அவர் தம் உறுப்புகள் சீர்குலைந்துபோனால் நிலைக்குமோ சொன்மின்கள் அன்பர்களே!

இவ்வாறாக உடம்பினுதவியும் உடம்பிலமைந்த உறுப்பு களினுதவியும் இன்றி அறிவுஞ் செயலுங் கைகூடப்பெறாத நம் மனோர் நிலைமைக்கும், இவ் வுறுப்புகளின் உதவி சிறிதும் வேண்டாமலே எண்ணிறந்த உலகங்களையும் அவ் வுலகங்களி னுள்ள எண்ணிறந்தகோடி உயிர்களையுங் "காத்தும் படைத் துங் கரந்தும் விளையாடி" வரும் எல்லாம் வல்ல ஐயனுடைய நிலைமைக்கும் ஒப்புமை எங்கே! தொன்றுதொட்டே பேரிரு ளாகிய அறியாமையிற் கிடந்து அறிவொளி மழுங்கிப் பின்னர் இறைவன் தந்த உடம்பாலும் அவ் வுடம்பின் உறுப்புகளாலும் சிறிது சிறிதாக அறிவு விளங்கப்பெற்றுவரும் நம்மனோர்க்கே ஊனுடம்பின் கருவிகள் வேண்டப்படுவதன்றி, இக்கருவிகளைப் படைத்துக் கொடுக்கும் எல்லாம் வல்ல இறைவனுக்கு இக்கருவி களும் இவற்றினுதவிகளும் சிறிதும் வேண்டப்படா. இது பற்றியே,

"செவியினாற் கேளாததாய்ச் செவியினைக் கேட்பிப்பதாய்
உள்ளதெதுவோ அதுவே பிரமம்

என்றும்,

வாயினாற் பேசாததாய் வாயினைப் பேசுவிப்பதாய்
உள்ளதெதுவோ அதுவே பிரமம்

என்றும் அறி.

அதன் பக்கத்தேயிருந்து அதனால் இயக்கப்படுகின்ற நீ
பிரமமாகாய்"

எனக் கேநோபநிடதம் வற்புறுத்துக் கூறுவதாயிற்று. இவ்வுண்மையினையே மாணிக்கவாசகப்பெருமான், 'கேளாதே எல்லாங் கேட்டான்' என்னுஞ் சொற்றொடரால் தெளியக் கூறினார்.

என்று இதுகாறுங் 'கேட்டாரு மறியாதான், கேடொன்றில்லான், கிளையிலான், கேளாதே யெல்லாங் கேட்டான்' என்பனவற்றால் பெறப்பட்ட கடவுள் இலக்கணங்கள் அவ்வளவும் இந்நிலவுலகத்துள்ள எல்லா மக்களாலும் எல்லாச் சமயத்தாராலும் ஏற்றுக்கொள்ளப் படுவனவேயாகும். ஆகவே, எல்லார்க்கும் உடன்பாடான இவை கடவுளுக்குரிய பொது இலக்கணங்களெனப்படும். இப்பொது இலக்கணங்களால் இப்பொதுவிலக்கணங்களை உடையவராக நம்மால் ஆராய்ந்தறியப்பட்ட கடவுள் நிலை, சிற்றறிவினராகிய நமதுசொல்லுக்கும் நினைவுக்கும் எட்டாததாயிருக்கின்றது. எப்பொருளுங்கடந்த முதல்வனை, எவராலுங் கேட்டறியப்படாத தலைவனை, எவ்வகை அழிவுக்கும் அகப்படாத ஆண்டவனை, எவ்வகைப்பட்ட கிளைஞருமில்லாத தன்னன் தனியனை, யாமறியாதே யாம் கேளாதே இருக்கவும் எமக்கு வேண்டுவனவெல்லாம் தந்து தலையளித்துவரும் தோன்றாத் துணையை ஏழையேம் எங்ஙனங் காண்பேம்? அவனது அருட்பேரமிழ்தத்தை எங்ஙனம் பருகுவேம்? எம்மை இடையறாது பற்றித் தொடர்ந்துவரும் பிறவித்துன்பத்தை எங்ஙனம் நீக்குவேம்? என்று எண்ணி எண்ணி நெஞ்சங் குழையாநின்ற நேரங்களில் அவனது எட்டா நிலைமையில் எம்மனம் பற்றுவதின்றாய் அவன் திருவுருவினைக் காணவும் அவன் திருவடிகளைப் பற்றிக்கொண்டு தேம்பவும் விழைந்து என்பிலாப் புழுவினும் கடைப்பட்ட எம்மையும் கடைக்கணிப்பனோ என்று எமதுள்ளம் ஏங்குகின்றதன்றோ? அத்தகைய அடங்கா ஏக்கத்தின் பாற்பட்ட எம் சிற்றுயிர்க்குக் கடவுளின் எட்டா நிலைமையைச் சொல்லிச் சொல்லிக் காட்டுவதால் எம் ஏக்கந் தீருமோ? தீராதன்றே! அவன், தன்னில் எவ்வளவு பெரியனாயினும் எவ்வளவு எட்டா நிலைமையனாயினும் எம்போன்ற சிற்றுயிர்களுக்கு

இரங்கி எளிவந்து தோன்றி அருள்செய்யினன்றே எமது ஏக்கந் தீரும். அப்போதன்றே எமதுள்ளம் இவ் வுலகத்தை மறந்து இங்குள்ள தொடர்புகளை மறந்து மேலெழும்பி அவன் திருவடிகளிற் படியும். அப்போதன்றே கடவுளின் உண்மை நிலை எமக்கு விளங்கும். அதுகாறும் சருக்கரையைக் கண்டறியாதவன் அதன் சுவையைச் சுவைத்தறியாதவன் அதன் இனிமையினை வியந்து வியந்து பேசிச் சலிப்படைவதல்லது அதனைப் பெற்றுச் சுவைத்து மகிழும்வகை அவற்குக் கைகூடாதவாறுபோல, யாமும் கடவுளின் எட்டாத நிலைகளை அவன்றன் பேரின்பப் பெருஞ்சுவையைப் பேசிப்பேசி எண்ணி எண்ணி வாடுவதல்லது அவனைப் பெற்று அவனது பேரின்பவயமாய் நிற்கும் பெரும்பேறு எமக்குக் கைகூடுமோ?

"கடவுள் தாமே தோன்றியவரென்பதும், அவரது இருப்பு இன்றியமையாததென்பதும், மாயையைக் கடந்தவரென்பதும், அவர் எளியர் என்பதும், சிற்றுயிர்களிற் காணப்படும் வரிசைக்கும் உள்வேற்றுமைக்கும் அவர் மேம்பட்டவரென்பதும், பகுக்கப்படாதவரென்பதும், உயிருள் பொருள்களிலும் இயக்கங்களிலும் இன்றியமையாத் தன்மைகளிலும் அவையல்லாத தன்மைகளிலும் மறைந்துள்ள செயல்களிலும் வெளிப்பட்ட செயல்களிலும் உள்ள வேற்றுமைகள் அவர் உடையரல்லர் என்பதும், அவர் ஓரினத்திற் சேர்க்கப்படுதலில்லாதவரென்பதும், மெய்ம்மை வாய்ந்த அளவிலாத் தன்மையரென்பதும், தான் காட்டும் நல்லியல்புகளுக்கு வேறான திருவுருவம் வாய்ந்தவரென்பதும், தீமையின் இருப்புக்கு இடந்தருவரேயன்றி அத்தீமையினை உண்டுபண்ணுபவர் அல்லரென்பதும், தாமே எல்லாமுடையரென்பதும், தம்பாலன்பினர் என்பதும், தம்பால் தனித்த பேரின்பத்தை உடையரென்பதும் ஆகிய அவருடைய இயல்புகள் எமது வாழ்க்கையோடு எவ்வகையான தொடர்புகொண்டு நிற்கின்றன? அவருடைய இவ்வியல்புகள் தனித்தனியே தமக்கு ஒத்த வகையாக எமது ஒழுகலாற்றினைத் திருத்திக்கொள்வதற்கு இடஞ் செய்யாவாயின், அவை உண்மையேயாயினும் அல்லதவை பொய்யேயாயினும் அவை ஒருவனுடைய சமயவாழ்க்கைக்கு எந்த வகையில் வேறுபட்ட பயனைத் தரக்கூடும்?

என்னளவில் மேற்குறிக்கப்பட்ட கடவுள் இயல்புகளைப் பற்றிய நினைவுகளுக்கு மாறானவைகளைச் சொல்வதில் யான் வெறுப்புடையேனாயினும், இவைகள் குற்றமில்லாதனவாகவே எடுக்கப்படுமாயினும் நமது சமயவாழ்க்கைக்கு இவை தினைத்

துணையாவது பயன்படுமென்று கருதக்கூடவில்லை என்பதைத் திறந்து சொல்கின்றேன். ஆகவே, இவை ஒன்றும் உண்மை யாவன அல்ல. கடவுள் எளிமையுடையரா யிருந்தால் அந்த இயல்புக்குப் பொருத்தமாம்படி யான் எவ்வகையான ஒழுக லாற்றில் ஒழுகக்கூடும், அதனைச் சொன்மின்கள். அவர் தனிப்பட்ட நிறைவான இன்பமுடையரானல், அதனை உணர் வதனுல் யான் எனது நடக்கையை எவ்வாறு வகுத்துக்கொள் ளக்கூடுமோ அதனைச் சொன்மின்கள். அத்தகைய இயல்பு களைப்பற்றிய சொற்றொகுதிகள் கடவுளைப்பற்றிய உண்மை யான உணர்ச்சியை எமக்குத் தருகின்றனவா? கடவுளிருப்பினை நம்பிய கோட்பாடுகள் தொடர்பாக நிலவுமாயினும், உண்மைச் சமயமானது இந்நிலவுகத்தில் இல்லாமல் பறந்தோடிவிடும். ஆனல் பயன்படத்தக்க சமய வாழ்க்கையிலிருந்து நோக்குவே ணுனல், மேற்குறித்த வெற்றியல்புகள் கல்விப்புலமை மிக்கோர் கட்டிவிட்ட சிறிதும் பயன்படாத கட்டுப்பாடுகளே யல்லாமல் அவற்றை வேறென்னென்று விளம்புவேன்.

இனி, அவை அங்ஙனமிருக்க நமது ஒழுக்கமுறைக்கு ஒத்த கடவுளின் இயல்புகளைச் சிறிது ஆராய்வாம். இவ்வியல்புகளோ அச்சத்தையும் நம்பிக்கையினையும் நிலைபெறச் செய்து தூய துறவு வாழ்க்கைக்கு அடிப்படை கோலுகின்றன. யாங்ஙன மெனின், கடவுள் தூய தன்மையுடையரென்று கொண்டால், அவர் உயிர்களின் நன்மையினையன்றி வேருென்றனையுங் கரு தார். அவர் எல்லாம் வல்லரென்றுகொண்டால் அவர் அந் நன்மையினை உயிர்களுக்கு முடித்துத்தர வல்லுநராவர். அவர் எல்லாம் உணர்பவர் என்று கொண்டால் அவர் இருளிலும் நம் மைக் காண வல்லுநராவார். அவர் நடுநிலையாளரென்று கொண் டால் நம்முடைய தவறுகளைக் கண்டு அவர் ஒறுக்கவல்லுநராவர். அவர் அன்புடையரெனக் கொண்டால் நமது இழுக்கங்களை அவர் மன்னிக்கவும் வல்லுநராவர். அவர் மாருத இயற்கைய ரென்று கொண்டால் அவரது உதவியில் நாம் நம்பியிருக்கக் கூடும். இத்தகைய இயல்புகளே நமது வாழ்க்கையோடு நெருங் கிய தொடர்புடையனவாக இருத்தலால், இவைகளைப்பற்றி நாம் தெரிந்துகொள்வது மிகவும் இன்றியமையாததாகும். கட வுள் உலகத்தைப் படைத்ததன் நோக்கம் அவர் தனது பே ரருட் சிறப்பினை உயிர்களுக்கு வழங்கவேண்டுமென்பதே யாகை யால் இவ்வியல்பும் நமது வாழ்க்கையோடு திட்டமான தொடர் புடையதாக விளங்கா நிற்கின்றது''* எனவும், "கடந்த நிலை

* Professor William 'James' 'The Varieties of Religious Experience' pp. 445-447,

யினைக் கூறும் மாயாத ஆராய்ச்சியுரைகள் சமய உண்மையினை உலகமெல்லாம் தழுவும்படி செய்யமாட்டாதனவாய் வழுவுகின்றன'' † எனவும் அமெரிக்காவில் மெய்யுணர்வினராய் விளங்கிய உவில்லியம் ஜேம்ஸ் என்னும் சான்றோர் ஆழ்ந்து ஆராய்ந்து உரைத்த அறிவுரைகள், கடவுளின் பொதுவியல்பாகிய கடந்த நிலைமையினை வற்புறுத்து உரைக்கும் கோட்பாடுகள் சிற்றுயிர்களாகிய நமக்கு எவ்வாற்றானும் பயன்படா என்பதையும், அவர் சிற்றுயிர்களெல்லாவற்றிற்கும் வேண்டுவதாகிய அழியாப் பெரும்பேற்றை நல்குதற்கும் அதனை நல்குதற்பொருட்டு எளியராய் வந்து அவைதம்மை ஆட்கொள்ளுதற்கும் அவர்க்கு இயற்கையாயுள்ள அன்பும் அருளும் இரக்கமுமாகிய அரும்பேரியல்புகளே எமக்கு எவ்வாற்றானும் பயன்படுமென்பதையும் இனிது விளக்குகின்றன.

கடந்த நிலைமையனாய் நிற்கும் இறைவனைச் சிற்றுயிர்களாகிய எம்முடன் நெருங்கத் தொடர்புபடுத்துவன, அன்பும் அருளும் இரக்கமுமாகிய இவ்வியல்புகளேயாம். சிற்றுயிர்களாகிய எமது இவ் வுலகவாழ்க்கையி னுள்ளும் ஒருவரோடு ஒருவரை மனமகிழ இசைவித்து உயிர்வாழச் செய்வதும் அன்பும் அருளும் இரக்கமும் அல்லவோ? அன்பில்லாதவர்கள், பிற உயிர்களின் துன்பத்தைக் கண்டு இரங்காதவர்கள் ஒருவரோடொருவர் கூடி உயிர்வாழ்தலும் உதவிவேண்டும் உயிர்களுக்கு உதவிபுரிதலும் உலகத்தில் நிகழக் கண்டதுண்டோ சொன்மின்கள். இதுபற்றியன்றோ ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார்

"அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு"

என்று அருளிச்செய்வா ராயினர். தானீன்ற குழந்தை நோய்வாய்ப்பட்டு வருந்துகையில் ஊனும் உறக்கமுமின்றி அதன் பக்கத்தே இருந்து தாயானவள் கவலைகொண்டு வருந்துமாறு செய்வது எது? போர்மேற் சென்ற தன் கணவன் இறந்தான் என்பது கேட்டு ஏங்கி உயிர் துறந்த காதலியை அங்ஙனம் உயிர் துறக்குமாறு செய்தது எது? தான் வழிபடுகடவுளின் திருவுருவக் கண்ணினின்று செந்நீர்வடிய நோக்கி ஆற்றாது தன் கண்ணை இடந்து அக்கடவுள் வடிவத்தின் கண்ணில் அப்பிய கண்ணப்பரை அங்ஙனம் அப்புமாறு செய்தது எது? ஈன்று அணிய பன்றிக் குட்டிகள் தம் தாயினை இழந்து நிலைக்களன் காணாது தத்தளித்தலைக் கண்டு தாங்காமல் தாய்ப் பன்றியின் வடிவெடுத்து அவற்றின் துன்பத்தைப் போக்கிய இறைவனை அங்ஙனம் செய்யுமாறு ஏவியது எது? வேடனால் துரத்தப்பட்டுத் தன்னகம்

† Ibid p: 454.

புகுந்த புறவின் அல்லல்கண்டு, அப்புறவின் எடைக்கு ஈடாகத் தன்னுடம்பின் சதையினை அறுத்துக் கொடுத்த சோழமன்னனை அங்ஙனம் செய்யுமாறு தூண்டியது எது? என்று நன்கு ஆராய்ந்து உணரின் அன்பும் அருளும் இரக்கமும் அவ்வாறெல்லாம் செய்வவாயின என்பது புலப்படுமன்றே? (தொடரும்)

---

# *பொது நெறி

## [இளவழகனார்]

இங்குப் 'பொதுநெறி' என்னும் இச் சொற்றொடர் 'மக்கள் முதற்கண் எவ்வழி நின்றாராயினும் இறுதிக்கண் அவ்வெல்லா மக்களும் இதுவே தமதென ஒருமித்துப் பற்றக் கடவதாகிய ஒருவழி' என்னும் பொருளை உடையது. இனி, அவ்வழிதான் யாதென்று நோக்குவோம்.

காணப்படுகின்ற உயிர்கள் எல்லாம் இன்பம் ஒன்றையே வேண்டி அல்லும் பகலும் ஒவாது உழல்கின்றன. அவைகள் எடுக்கும் உழைப்பெல்லாம் இறுதியில் இன்பம் அல்லது துன்பம் என்னும் இருவகைப் பயன்களுள் ஏதேனும் ஒன்றை அவ்வுயிர்கட்குப் பயந்தொழிகின்றன. இன்பம் ஒன்றையே நுகரும் உயிராதல் அல்லது துன்பம் ஒன்றையே நுகரும் உயிராதல் இவ்வுலகத்தில் ஒன்றுதானும் இல்லை என்பது வெளிப்படை. எனவே, உயிர்களின் உணர்ச்சிக்கு வருவன இன்பம் துன்பம் என்னும் இரண்டுமேயாம் என்பதைத் தீரப்பெற்றும். பெறவே இன்பந் தருவதற்குந் துன்பந் தருவதற்கும் உரிய இருபொருள்கள் உயிருக்கு வேறாக இருக்கின்றன என்பதும் உடன் பெற்றும். இன்பந் தருவது அறிவு ஆதலும் துன்பந் தருவது அறியாமை ஆதலும் நிகழ்ச்சியிற் றெளியப்படும் உண்மைகளாதலின், அவ்விருபொருள்களுள் ஒன்று அறியாமையுடையது ஆனால் அறிவில்லது என்பதும், மற்றொன்று அறிவுடையது ஆனால் அறியாமை இல்லது என்பதும் தெளியப்படுகின்றன. முதலிற் றுன்புறுவோர் பின்னர் இன்புறுவாராய் நிற்றலின், இன்பத்துக்குத் துன்பம் ஏது ஆவதென்றும், துன்புதரும் அறியாமைப் பொருள் இன்புடைய அறிவுப்பொருளோடு உயிரைச் சேர்த்து அதன் இன்பத்துக்கு ஏதுவாகின்றதென்றும் நன்குணரலாமன்றே? இதையே வேறொன்றானுங் காட்டுவோம்.

---

* இது திருச்சி சைவசித்தாந்த சபையின் ௧௨-ம் ஆண்டு விழாவில் 16-10-27-ம் நாள் உயர்திரு மறைமலையடிகளின் சீரிய தலைமையின்கீழ்ச் செய்த விரிவுரையாகும்.

எல்லா உயிர்கட்கும் உணவு தேடும் வேட்கையும் ஆண் பெண் விழைச்சியும் உள்ளன. இவை ஓரறிவுமுதல் ஆறறிவு காறும் விளங்கும் எல்லா உயிர்கட்கும் பொதுவாவன. இவ்விரண்டுமாதல் அல்லது ஒன்றுமட்டுமாதல் இல்லாத உயிர் எதுவும் இன்று. உயர்ந்த பிறப்பினரான மக்களாவாரும், இவ்விரண்டினும் மேற்பட்டு எவைதம்மை விரும்புவாராயினும், பசிப்பிணியுங் காதலன்பும்மிகுந்து நிற்குங்கால் மற்று அவைகள் எவ்வளவு உயரியவாயிருப்பினும் அவைகளையெல்லாம் இடை முறியவிட்டு இவ்விரண்டின் தொடக்கில் அடங்கிநிற்பர். தேவர்களும் அவ்வியல்பினராவர். எனவே, அவர்களால் விரும்பப்படும் பொருள்களும் இவ்விரண்டின்கட் படும். இன்னுந் தூநிலைக்கண்ணரான இறைவன்றன் தலையன்பினரும் பசிப்பிணியும் இறைவனது காதலன்பும் மிகுந்து எழுங்காலம் உலகத்து மக்களையும் அவர்தம் செயல்களையும் அவரோடு தொடர்புபட்ட தஞ்செயல்களையும் மறந்து அவைதங்கண்ணராவர். ஆகவே, உயிர்களெல்லாவற்றின் உணர்ச்சிக்கும், அவ் வுணர்ச்சியின் பயனாகிய செயலுக்கும் முதன்மையும் அடிப்படையுமாவன பசியும் காதலன்புமே என்பது நன்கறியப்படும். முதல் வேட்கை உணவுதேடுவது. உணவு அறியாமைப் பொருள். இரண்டாவது விழைச்சி ஆண் பெண்ணையும் பெண் ஆணையும் தேடுவது. ஆண்பெண்ணுவார் அறிவுப்பொருள்கள். ஆதலால் ஒவ்வோருயிரும் அறியாமைப் பொருளின் தொடர்பும் அறிவுப்பொருளின் தொடர்பும் இல்லையேல், எவ்வுலகவாழ்க்கையும் அவைகட்கு இல்லை என்பதும் தெளிவாகின்றன. மேலும் அறியாமைப் பொருளாகிய உணவை உண்டு மகிழ்ந்திருப்பாரே ஆண் பெண்பாலராம் அறிவுடையார்ப் புணர்ச்சியை விரும்புதலின், அறிவுப் பொருட் புணர்ச்சிக்கு அறியாமைப் பொருட்புணர்ச்சி ஏதுவாகின்றது என்பதும் வெளிப்படுமன்றோ?

இவ்வாறு உயிர்கட்கு இன்றியமையாதனவென்று வகுத்தெடுத்துக்கொள்ளப்பட்ட அறியாமைப்பொருள் அறிவுப்பொருள் என்னும் இரண்டுள்ளும், அவ் வுயிர்களின்நோக்கங்கொண்டது அறிவுப்பொரு ளொன்றுமேதான். ஏனென்றால், உணவையும் பெண்ணையும் விரும்பும் ஒருவன் முதலில் உணவு உண்டு தன் உடம்பைச் செம்மை நிலையில் வைத்துக்கொண்டு அதன் பின்னரே பெண்ணை விழைந்து அளாவி இன்பம் நுகருகின்றனன். அவன் உணவு தேடும்பொழுதும் தான் விழையும் அப்பெண்ணுக்கு உணவு ஈந்து தானும் உண்டு ஒருவரோடொருவர் கூடி இன்புறுதலை உட்கொண்டு, பின் நுகரப்படும் அப்பெண்ணின்பத்திற்கு இவ் வுணவை ஒரு கருவியாகமட்டும் நினைந்து அப்பெண்ணின்பத்தைப் பயனாக உணர்ந்து, அப்பெண்

உண்ணுமுறையும் தனக்கு இன்மொழி புகன்று கொடுக்குமுறையும் நினைந்து நெகிழ்ந்தபடியாய் உணவு தேடுகின்றான் அல்லனோ? ஆதலால் அவன்றன் நோக்கம், அறிவுப்பொருட் புணர்ச்சியை அதற்குக் கருவியாகமட்டுங் கைக்கொள்கின்றது என்பது பெற்றாம். இதுகொண்டு அறியப்பெறுவது எல்லா உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் ஓரறிவுப் பொருட் சேர்க்கையை அடைவதே தமக்குத் தெள்ளத் தெளிய வடித்தெடுத்த முடிவுப் பயனாகக் கொள்கின்றன என்பதாம்.

அடைவார்தம் திறத்துக்கேற்ப, அடையப்படுபொருள் சிற்றறிவுப் பொருளாகவேனும் பேரறிவுப் பொருளாகவேனும் இருக்கலாம். சிலர் பெண்ணின்பமே பெரிதாகக்கொள்வர். சிலர் மக்களின்பமே மாண்பாயுணர்வர். மேலும் சிலர் குருதருமின்பமே மேலதென்பர். இன்னும் சிலர் அடியாரின்பமே அமைவென அடைவர். மற்றுஞ் சிலர் காவலரின்பமே கைகண்டதென்பர். பின்னுஞ் சிலர் இறைதரும் இன்பமே பேரின்பமென அதன்கட்பெயராது படிந்துநிற்பர். இவ்வாறு இவரெல்லாம் தத்தம் அறிவுக்குந் திறனுக்குந் தக்கபடி இன்பந் துய்ப்பினும் எல்லாம் அறிவுப் பொருளொடு சேர்ந்து இன்புறவே முந்துகின்றனவென்பது ஈண்டுணரற்பாலது.

இனி அவ் வறிவுப்பொருளைச் சேர விரும்புவது இன்பத்தின் பொருட்டென மேலே தெளியப்பட்டதால், அவ் வறிவுப் பொருளையும் அதன் பயன் கருதியே துய்க்கின்றன என்பது பெற்றாம். இன்பத்தின்கண் தன் நோக்கத்தை இருத்தும் உயிர் அவ் வின்பந்தரும் அறிவுப்பொருளைச் சேர்தற்கு அது செய்யும் வழி யாது? பெண் வேட்கையுடைய ஒருவன் தனக்குத் தக்க பெண்ணைக் கண்டு தன் மனத்தை ஈர்க்கத்தக்க அவளுடைய கட்டிளமையும், செந்நிறமும், உருவங்களின் பொருந்திய அமைப்பும், மெல்லிய சாயலும், இன்னொலியும் புன்னகையுங் கலந்துவருந் தீஞ்சொல்லும், இவைகளால் விளங்குவதாகிய பெண்மைத் தன்மையும் ஆகிய அவளாற்றல்களை இடையறாது நினைந்து நினைந்து அகம் உடைகின்றான். அப்பெண்ணினல்லாளும், இங்ஙனமே தன் நெஞ்சை வலிக்கும் இவனாற்றல்களை நினைந்து ஓவாது உளமுடைகின்றாள். இவ்வாறு உள்ளம் வதங்கும் இருவர்தம் நெஞ்சப்பான்மையை ஒருவரையொருவராக இருவரும் அறிகின்றார்கள். தன்னை நினைந்து பெரிதும் துன்புற்றுத் துடிக்கும் அவ் வாண்மகனின் இரங்கத்தக்க நிலையை அப்பெண் உணர்தலும் அவள் உள்ளம் உடனே நெகிழ்ந்துபோம். இவ்வாறே தன்னை நினைந்து வாடும் அம்மங்கை நல்லாளின் வதங்கிய நிலையை இவ்வாண்மகன் உணர்தலும் இவன் உள்

ளமும் உடனே நெகிழ்ந்துவிடும். இவ்வாறு இவ்வாண்பெண் மக்கள் உள்ளம் நெகிழ்ந்ததும் அவர்தம் ஈர் உடல் பொருள் ஆவிகளும் ஒருடல்பொருள் ஆவிகளாக ஆகின்றன. ஆகவே, அவ்வாற்றால் அவர்கள் உள்ளத்திற் பேரின்பம் பில்குகின்றது. எல்லாருணர்ச்சிக்கும் போந்த இம்மெய்ந் நிகழ்ச்சியினின்றும் நோக்குங்கால், ஓரறிவுடைப் பொருண்மாட்டு இன்பந் துய்க்க விரும்பும் ஒவ்வோருயிரும், அவ்வறிவுடைப் பொருள் தமக்குச் செய்து போதரும் அரும்பேருதவிகளையும் அவைதம்மின் வழியாக அதன் ஆற்றல்களையும் நினைத்தலால், தம்மாட்டு ஓர் உள்ள நெகிழ்ச்சி உண்டாகப் பெறுகின்றன என்பது தெளிவாகின்றதன்றோ? அந்த உள்ளநெகிழ்ச்சியே அன்பு எனப்படும்.

ஒருயிர் தனக்கு நலஞ்செய்வாரை உணர்ந்து இங்ஙனம் உள்ளம் நெகிழ்வதால், இவ்வன்பைத் 'தொடர்புடையார்மாட்டு எழுவதோர் உள்ளநெகிழ்ச்சி' என்பர் ஆசிரியன்மார். இவ்வன்பைக் கண்ட அவ்வறிவுப்பொருளும் அன்புகொண்டு அவ்வுயிர்க்குத் தன் இன்பத்தை நல்கும். இவ்வகையாக அன்பு செலுத்தி இன்பத்தைப் பெறுதலால்தான் "அன்பினால் இன்பமார்வார்" என்னுந் திருமொழியும் எழுந்தது "நான் அவனும் வணம் அன்பு தந்த நலமே நினைவோமே" என்றார் சம்பந்தரும். மேலும் அன்பூறும்போதெல்லாம் இன்பூறுதல் தெளிவாதலின், அன்பே இன்பமாவதென்றும், இன்பம் விரும்புவாரனைவரும் அன்பினை விரும்பி வளர்க்கற்பாலார் என்றும் இனிது விளங்கும்.

"அன்பளிப்பதொன்று பின்னர் இன்பளிப்பதொன்று என்று
அறிஞரெலாம் மதிக்கின்ற அடிமலர்கள்" (வள்ளலார்)

"முடிவிலா இன்பமான அன்பு" (சேக்கிழார்)

"இறவாத இன்ப அன்பு" "

என்னும் அருளுரைகள் இக்கருத்தையே உட்கொண்டனவாம்.

அறிவுப் பொருளைச் சார்ந்து இன்பார உழைக்கும் ஒவ்வோருயிரும் இங்ஙனம் அன்புவழியில் நின்றே இன்பார்ந்துவருதலை நேரிற் காண்கின்றோம். அறிவுப்பொருளைச் சேர்ந்து மகிழ்வுபெற உதவும் இவ்வன்பு நெறி எல்லா உலகத்துமுள்ள எல்லா உயிர்கண் மாட்டும் பொதுவிற் காணப்படுவதால் இந்த அன்புநெறியே பொதுநெறி எனப்படும்.

இனிப் பொதுநெறி எனப்படும் இவ்வன்பு நெறியாலல்லாமல் வேறொன்றால் தாம் விரும்பும் அறிவுப்பொருளொடு கூடி

இன்பமாருதல் உயிர்கட்கு இயலாதோவெனின் எவ்வாற்ரு ணும் இயலாதென்றே உறுதியாய்க் கூறலாம். செடி, கொடி, புழு, பூச்சி, பறவை, விலங்கு என்னும் ஐயறிவு உயிர்களிற் சில ஆண்பெண் விழைச்சியானும் மற்றுஞ் சில அவ்வாண்பெண் விழைச்சியோடு குஞ்சு குட்டிகளின் விருப்பத்தானுமன்றி, வே றெவ்வாற்ருனும் அவை தமக்குள் அறிவுப்பொருட் கூட்டுறவு நேர்வதின்று. இவ்வகைக் கூட்டுடைய அக்கீழ்நிலை உயிர்கள் அன்பாலன்றி வேறெவ்வாற்ருனும் தாம் விரும்பிய அவ்வறிவுப் பொருண்மாட்டு இன்பம் எய்துதலை எங்குங் காண வியலாது.

"அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று" (திருக்குறள்)

என்பது இதனாலன்ரே எழுந்தது.

இனி அவர்கட்கு மேற்பட்ட மக்கட் பிறப்பினரை எடுத் துக்கொள்வோம். இவர்கட்கு மனைவி மக்கள் சுற்றம் அரசன் குரு ஆன்ரோர் கடவுள் என்னும் எழுவகைப்பட்ட அறிவுப் பொருட் கூட்டுறவு மட்டுமே உளவாவதன்றி வேறில்லை. இன் னும் மாணவர், ஏவலர் என்பார் உறவும் அவர்கட்கு உளவா மெனின், அவரோடு இணங்கி இன்பம் நுகர்வதற்கு அவர் உரி யார் அல்லர். மற்றுத் தம்மாட்டு அவரிணங்கி இன்புறவே அவர் அவரொடுகூடி உதவிமட்டுஞ் செய்வர். பெரியார் சிறி யார் தம்மொடு இணங்குதற் குரியார் அல்லர் என்பதும், சிறியார் மட்டும் அப்பெரியாரொடு இணங்கி அவர் துணைபற்றி இன்புறக் கடவர் என்பதும் "பையலோ டிணங்கேல்" "பெரியாரைத் துணைக்கொள்" என்னும் ஔவைச் செல்வியின் அருந்தமிழுரை யால் இனிதுவிளங்கும். விளங்கவே, மக்களெவரும் மேற்கூறிய எழுவகைப்பட்ட அறிவுப்பொரு ளுறவே உடையர் என்பது நன்கு துணியப்படும்.

இவ்வெழுவகை அறிவுப் பொருண் மாட்டும் மக்கள் எந் நெறி நின்று இன்பந்துய்க்கின்ருர்? மனைவிமக்கள்பால் அன்பா லன்றி வேறெவ்வாற்ருனும் கூட்டுறவே நேர்வதின்று. சுற்றம் அரசன் குரு ஆன்ரோர் கடவுள் ஆகிய இவரிடமும் அன்பு அச் சம் என்னும் இருவகையானன்றி வேறெவ்வாற்ருனும் உறவு நேர்வதின்று. அச்சம் நிகழ்பொழுதெல்லாந் துன்பமேயன்றி இன்பம் சிறிதும் விளங்குவதில்லை. மற்று அவர்பாலெல்லாம் அன்பு நிகழ்பொழுதுமட்டும் இன்பம் நிகழ்கின்றது. எனவே அவ்வெழுவகையினர் மாட்டும் இன்பம் நுகர்வாரெல்லாம் அன்புநெறிக் கண்ணே நிற்கின்ருர் என்று தெளியலாமன்ரே?

ஆகையால் அன்புவழியாலன்றி வேறெவ்வகையாலும் இன்பந் தரும் அறிவுப்பொருட் டொடர்பு இல்லையென்பதே இதுகொண்டு தேறும் முடிபொருளென்க. மேலும் அறிவுப்பொருளாகிய உயிர்ப் பொருள்களை ஒன்றோடொன்றாய் இறுகப் பிணித்துக் கட்டி அவைதம் வளர்ச்சிக்கு உறு துணையாய் நிற்பது அன்பேயன்றி வேறொன்றும் உண்டுகொலோ! அறிவு நிகழுமிடமெல்லாம் அன்பும் நிகழும். எனவே அன்பு நிகழா விடமெல்லாம் ஆண்டு அறிவு இல்லை என்பதும், அவ்வாற்றால் அப்பொருள் உயிரில்லாததென்பதும் தெளியப்படும். இவ்வாறு அன்பு நிகழ்பொருளே உயிர்ப்பொருளென்பதும், அன்பு நிகழாப் பொருள் உயிரில் பொருளே என்பதும்

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதின்றேல்
என்புதோல் போர்த்த உடம்பு"

என்று இவ்வன்பினியலை இனிது விளக்க எழுந்தருளிய பொது நெறித் திருவள்ளுவனார்தம் அமிழ்துறழ் திருவருள் வாக்கால் இனிதறியப்படுகின்றது. இதன்கண் உயிர்நிலை அன்பின் வழியதென்று அறியப்படுதலின், அன்பின் செயலே உயிரின் அறிவுச் செயலாவதென்பதும் உணரலாம். அறிவுப் பொருட்களெல்லாம் அன்பு நிகழுமாதலால், ஒரு பேரறிவுப்பொருளின் அன்பைப் பெற விரும்பும் மற்றொரு சிற்றறிவுப் பொருள் தன் கண் அன்பைத் தோற்றுவிக்க, அப்பேரறிவுப் பொருளும் தன் கண் உள்ள அன்பு தானே எழப்பெறும். கன்று தன்கண் உள்ள அன்பைத் தோற்றுவித்தலும் ஆவுக்குத் தானே அதன் பால் அன்பெழுகின்றதன்றோ? இங்ஙனம் அன்பே அன்பைத் தோற்றுவித்து அவ்விரண்டு அறிவுப் பொருள்களையும் ஒருமைப்படுத்தும் அவ் வன்பின் திறத்தை,

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்"

என்று திருக்குறளும்,

"சுரந்த திருமுலைக்கே துய்யதிரு ஞானம்
சுரந்துண்டார் பிள்ளை எனச்சொல்ல - சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு."

என்று திருக்களிற்றுப்படியாரும் பெரிது விளக்குதல் காண்க. எனவே அன்பியல்பு இன்னது என்று இனிது தெளியப் பட்டமையால், அறிவுப்பொருள்களைச் சேர்ந்து இன்புறுதற்கு அன்புநெறியே உள்ளதும் சிறந்ததும் இயல்பாவதுமன்றி

வேறு எந்நெறியும் அங்ஙனம் உள்ளதும் சிறந்ததும் இயல்பாவதும் அன்றாதல் தேர்வதுடன், இந்நெறியே எல்லா உயிர்கட்கும் எல்லா மதத்தவர்கட்கும் பொதுநெறியாவதும் பெறப்படுகின்றதன்றோ?

இனி, இவ்வன்புநெறி எல்லா மதத்தவர்க்கும் பொதுவாதலை வேறுவழியானும் பெறலாம். உலகத்தில் எண்ணிறந்த மதங்கள் உள்ளன. அவை தம்மிற் சில பொருளுண்மைபற்றியும், மற்றுஞ் சில உண்மை எனத் தெளிந்த பொருளை எய்துநெறி பற்றியும் ஆக இருவகையாக எழுந்துள்ளன. பொருளுண்மைபற்றி எழுந்த மதங்கள் உலகம், உயிர், கடவுள் என்னும் முப்பொருள்களும் வேறு வேறாகும் உண்மைப் பொருள்கள் என்று தெளிதலில் ஒன்றற்கொன்று மாறுபடுவன. தெளிந்த பொருளை எய்துநெறிபற்றி எழுந்த மதங்கள் சிற்றறிவுப் பொருளாகிய உயிர்கள் உலகத்தின் உதவியால் பேரறிவுப் பொருளாகிய கடவுளை அன்பினாற் சேர்ந்து இன்பமாருதல் என்னும் நெறிப்படுதலில் ஒன்றற்கொன்று மாறுபட்டுப் பல திறப்படுவன. இவைதம்முள் இறைவன் உண்மை தெளிந்தாரும் தெளியாதாரும் என்னும் இருவர் தங் கொள்கையை நோக்குங்கால், இறையுண்மை தேறாதார் இறைவன் இலன் என்று துணிந்து கூறுவாராய்த் தோன்றிலர். ஒருவர் தெளிந்தாரும் மற்றொருவர் தெளியாதாருமாய் இருக்கின்றனர். தெளிந்தார் தாம் தெளிந்துகொண்டமையால் கடவுள் உளர் என்று துணிந்து கூறுகின்றனர். தெளியாதார், தமக்குத் தெளிவாகாமைபற்றிக் கடவுள் உளர் அல்லது இலர் என்னும் ஆராய்ச்சியில் எட்டுணையும் நுழையமாட்டாராய்த் தமக்கு விளங்கிய உலகாராய்ச்சியில் மட்டும் நிற்கின்றனர். அதனால் அவர் கடவுள் இலர் என்று கூறினார் என்றலும், அவ்வாற்றால் அவர் கோள்பற்றிக் கடவுள் என்பதொரு முதல் இல்லையாம் என்றலும் பெறப்படா. மற்று அம்மதத்தினர் நாள் பல செல்லப் பின்பொருகால் இறையுண்மை தேறுவர் என்பதே பெறப்படும் என்க. இது, கடவுளுண்மை தேறாத அவரும் தமக்கு இடரான இடுக்கண் நேர்ந்துவிட்டபொழுது தம் மதத்தையும் தம்மையும் மறந்து ஏதோ தம்மினும் ஒரு பெரிய பொருளை இருப்பதாக நாடி அதன் உதவியைப் பெற விரும்புவதாற் றெளியப்படும். ஆகவே இவரை இறையுண்மை நன்கு தேறாதவர் என்று தெளிந்து இறையுண்மை தேர்ந்தவரோடு கூட்டி அவரைக் கருதுங்கால், அச்சமயத்தார் இறையுண்மை தேர்ந்தும் இதுதான் இறை என்று துணிதலில் பல கோட்படுவாராய்க் காணப்படுகின்றனர். அவையெல்லாம் விரிக்கில் இது பெருகும்.

"இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்து ஈசன்திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"

என்பது அப்பர் திருவுரையாதலால் அவர் எப்பொருளை இறைவனைக் கருதினும் இறையொன்றுண்டு என்னும் அவர் கோளுண்மையே இங்கு வேண்டப்படுதலின், அம்மட்டில் அவர் துணிவை எடுத்துக்கொண்டு அவ்விறைவனை அடையுநெறியில் இருதிறப் படுவாரோடுங் கூட்டி அவரைக் காண்போம்.

பேரறிவுப் பொருளாகிய இறைவனடியை அன்பால் அணைந்து இன்பாருதல் என்னும் நேர்நெறி தேறாத ஒருவகைச் சமயத்தார், தங் கொள்கைவழிப் பலவகையின ராயினும் தம் மினும் பேரறிவுப் பொருளாம் இறையொன் றுண்டென்று தேர்ந்து அவர் உதவியைப் பெற விழையும் அவர்தம் பொதுக் கோள்பற்றி, அவ்விறைவ னுதவியை அன்பினால் அன்றிப் பிற வாற்றாற் பெறுதல் இயலாதாகலான், அவரும் அன்புநெறியில் நிற்றல் ஒன்றானே இறைவனை நாடுதல் தெளியலாம். எனவே, அவரும் அவரின் மேற்சமயத்தவரோடு விரைவிற் சேர்வரென வும், அம் மேற்சமயத்தவரேயாவர் எனவும் உட்கொண்டு அவ ரொடுகூட்டி அம்மேற் சமயத்தவரை ஆராயுங்கால், அவருள் தலையாயினர் அன்பையே இறைவனென்று உணர்ந்து அன்பு நெறியில் நிற்கப் பழகுகின்றார் என்பது

"அன்பனே அரனே என்று அரற்றுவார்க்கு
இன்பனாகும் எறும்பியூர் ஈசனே" (அப்பர்)

"அன்பேஎன் அன்பேஎன்று அன்பால் அழைத்தழைத்திட்டு
அன்பேஅன்பாக அறிவுஅழியும்" (திருக்களிற்றுப்படியார்)

என்னும் அவர் மதநூலுரையினாற் றெளிவாகின்றது.

இங்ஙனம் எல்லா மதத்தவரும் நால்மதத்தவ ராகவும் இரு மதத்தவராகவும் நிற்பார்போற் றோன்றி, இறுதியில்இறையன்பு கொண்ட ஓரன்பு மதத்துள் நிற்றலை இனிதறியலாம். ஏனென்றால் இறைக்கு அன்பிலராயின் தமக்கும் அன்பிலராய் ஒழிவர்.

"ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கும் அன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பிலார் தமக்கு மன்பிலார்" (அருணந்திசிவனார்)

என்பது அருண்மொழி யாகலின்.

எனவே எவர்பாலேனும் அன்புடைய எல்லா மதத்தினர்க்கும் அவர் அறிந்தோ அறியாமலோ அன்புநெறி பொதுவாத

லும், அம்மதத்தவர் கோட்பாடுகளெல்லாம் அதன்கண் அடங்குதலும், ஆனால் அந்த அன்புமதம் மற்றெல்லாவற்றையும் வீறி நிற்றலும், எந்நெறி நின்றாராயினும் இறுதியில் அந்த அன்புநெறிப்பட்டே ஆண்டவன் அருள்பெறுதலும் தெளிவாயின.

இனிப் பொதுநெறி பொதுமதம் எனப்பட்ட இவ்வன்பு மதமே சைவமதமென வேறொரு பெயரால் அழைக்கப்படுகின்றது. இவ்வாற்றாற் சைவமதமெனப்படுவது தன்னையொழித்த ஏனை எல்லா மதங்களாலும் உணர்த்தப்படும் எல்லாக்கொள்கைகளையும் தனவாக்கண்டு அவற்றைத் தன்னுள் அடக்கிக்கொண்டு அவை எல்லாவற்றிற்கும் பொதுவாய் அவ்வெல்லா மதங்களாலும் உணர்த்தப்படாத கடவுள் உயிர் உலகம் எனப்படும் முப்பொருளுண்மைகளையும் அவைதம் உண்மை இலக்கணங்களையும் உணர்த்துவதோடு, சிறுமையுடைய உயிர் உலகத்தின் உதவியால் பெருமையுடைய இறைவனடியை அன்புநெறி ஒன்றினால்மட்டும் கூடி இன்புறும் இனிய நெறியையும் இனிது விளக்கும் ஒரு பொதுச் சமயம் ஆம் என்று தீர உணர்க. இவைதம்மை அச்சைவநூல் அருளுரைகளால் நன்கு தெளியலாம். எல்லா மதக்கொள்கைகளையும் ஒருங்கே உடைய ஒரு பொது மதமும் பொதுநூலும் எவையோ அவையே மதமும் நூலும் ஆம் என்னும் பொருளுண்மையை,

"ஓதுசமயங்கள் பொருள்உணரு நூல்கள் ஒன்றோடொன் றொவ்வாமல்
உளபலவும் இவற்றுள்
யாதுசமயம்? பொருள்நூல்யாது? இங்குஎன்னின் இதுஆகும்அது
அல்லதுஎனும் பிணக்கதுஇன்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண நின்றது யாதொருசமயம்
அதுசமயம் பொருள்நூல்"

என்று சிவஞானசித்தியார் என்னும் ஒரு சைவசமய நூலே கூறுதலின், அன்பு எல்லாரையும் தழுவுவதுபோல எல்லாச் சமயங்களையும் வேற்றுமை காணாது தழுவிக்கொள்ளும் அத்தகையதொரு சமயமே ஒப்பற்ற முடிந்த சமயமாமென்பதும், அவ்வாறு எல்லாக் கொள்கைகளையும் உடைய சமயம் உலகத்தில் ஒன்றே உண்மையால், அது சைவசமயமே யாமென்பதும், ஒவ்வொருகொள்கைபற்றி எழும் சமயங்களெல்லாம் உண்மைச் சமயங்களெனப் படாவென்பது இத்திருமொழியிற் பெறப்படுவதால், எல்லா உயிர்களும் இறுதியில்வந்து உய்யக் கடவதாகிய உண்மைச்சமயம் இச் சைவசமயம் ஒன்றேயாதலும் தெளிவாக விளங்குகின்றன. இதனாலன்றோ "யாது சமயமும் வணங்கும் இயல்பதாகி" "சைவசமயமே சமயம்" என்று அதன் விழுப்

பத்தை மேன்மேலும் ஆன்ருேர் எடுத்தோதுவராயினர் என் பது. எம்மதங்களையும் வேற்றுமை காணுது தழுவிக்கொள் ளும் இச் சைவத்தின் பொதுத் தன்மையை, (சமரசத்தை)

"விரிவிலா அறிவினர்கள் வேருெரு சமயஞ்செய்தே
எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்றதாகும்"

என்று அப்பரடிகள் அருளிச்செய்வாராயினர்கள்.

அன்புநெறி என்ருல் அன்பு செலுத்துவாரும், செலுத்தப் படுவாரும்,இவர்க்கிடையில் உதவியாகும் சில அறிவற்ற உயிரில் பொருள்களும் என முப்பொருளுண்மை பெறப்படுவதால், அவ் வன்பு நெறியே என்னும் சைவசமயத்துள்ளும் கடவுள் உயிர் உலகம் என முப்பொருளுண்மை கூறப்படும். அதனைப்

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம்அ நாதி"        (திருமந்திரம்)

"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய்போல"        (திருவாசகம்)

எனச் சைவ இலக்கண இலக்கியங்களிற் காண்க. அன்பு விளை தற்குப் பெருமையுஞ் சிறுமையுமே ஏதுவாயிருத்தலின், சைவத் துள்ளும், இறைவன் பெருமையும் உயிரின் சிறுமையும் காணப் படுகின்றன. அது,

"அவையே தானே யாய்இரு வினையின்,
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே"        (சிவஞானபோதம்)

"சிவனெம்பிரான் என்னை ஆண்டுகொண்டான் என்சிறுமைகண்டும்
அவனெம்பிரான் என்ன நானடியேனென்ன இப்பரிசே
புவனெம்பிரான் தெரியும்பரிசாவ தியம்புகவே"

என்னும் அருளுரைகளால் தேறப்படுதல் காண்க.

அப்பெருமையுடைய இறைவனைச் சிறுமையுடைய உயிர் அன்பு நெறியினுலேயே அடையுமென்பதை,

"என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை எய்தவொண் ணுதே"        (திருமந்திரம்)

"யாவராயினும் அன்பரன்றி அறியொணு மலர்ச் சோதியான்"
(திருவாசகம்)

"சார்வருந் தவங்கள் செய்து முனிவரும் அமரர் தாமும்
கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்ருர் நீளிருள் நீங்க நின்ருர்."
(திருத்தொண்டர் புராணம்)

"துன்பறுத் தொரு துரிய சுகந்தனை
அன்பருக் கேதரும் அருட்பெருஞ் சோதி" (திருவருட்பா)

என்னும் அருட்டிரு மொழிகளிற் காண்க.

அன்பில் விளைவதே இன்பம் ஆதலால், சைவசமயத்தவரும் தாம் முடிந்த வீடுபேறென விரும்பும் பெயராப் பேரின்பத் துக்கு அன்பே ஏதுவெனக்கொண்டு அவ் வன்புருவாவர். இது,

"மிக்கஅன்போடு அழுவார்க்கு அமுதங்கள் ஆவன" (தேவாரம்)

"அன்பினில் விளைந்த ஆரமுதே" (திருவாசகம்)

"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடையன்பே" ,,

"அன்பிலேபழுத்த தனிப்பெரும் பழமே" (திருவருட்பா)

"தன்பரிசும் வினையிரண்டும் சாருமல மூன்றும்அற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ"
(திருத்தொண்டர் புராணம்)

என்னும் வாய்மொழிகளாற் பெறப்படும்.

இனிச் 'சைவம் என்பது 'சிவத்தை வணங்கு நெறி' என்னும் பொருளது. சிவம் என்னுஞ் சொல் அன்பு இன்பம் என்றும் பொருள்படும். அன்பினுல் இன்பமார்தலை விழைந்த ஆன்ருேர் அதன்பொருட்டும் சிவம் என்று இறைக்குப் பெயரிட்டனர். அவ்வாற்ருல் அவர்க்கும் 'சைவர்' என்னும் பெயர் வந்தது. அன்பே இன்பமாத லுணர்ந்துதான் தமது அன்புநெறி அல்லது சைவநெறியில் நின்று சிவத்தொடு கூடி இன்பமார்ந்து வந்தனர் அச்சைவரென்க. சைவர் அன்பர் இன்பர் என்பன ஒருபொருட் சொற்கள். அன்புக்கும் இன்பத்துக்கும் உள்ள அணுக்கமும், அன்பே இன்பத்துக்கு ஆம் ஏதுவும் பற்றியே,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே" (திருமந்திரம்)

என்றும்,

"அன்பென்பதே சிவம் உணர்ந்திடுக என எனக்கு
அறிவித்த சுத்த அறிவே" (திருவருட்பா)

என்றும்,

"முடிவிலா இன்பமான அன்பு"
"இறவாத இன்ப அன்பு" (திருத்தொண்டர் புராணம்)

என்றும் திருவுரைகள் எழுந்தன.

இத்தகைய அன்புநெறி மாசற்ற தூயநிலையில் நிகழ்வதாதலின், 'தூநெறி' என்றும், ('கண்டவர்க்குறு காதலின் மனங் கரைந் துருகத் தொண்டர் அன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்') அன்பே சிவமும் உண்மைத் தெய்வமுமாதலால் சைவ நெறி 'தெய்வநெறி' என்றும், ('சைவநெறித் தலமேழும் பாலிக் குந் தன்மையினால் தெய்வநெறிச் சிவம் பெருக்கும்') இங்ஙனமே அன்பு அரிய தமிழ்த் தன்மையாவதால் 'தமிழ்நெறி' யென்றும், ஒப்பற்ற நெறி என்பது விளங்கத் 'திருநெறி' 'ஒருநெறி' 'பெருநெறி' என்றும், இந்நெறியொன்றே இன்பெய்த உளதாகலான், 'வாய்மைநெறி' யென்றும், மலமாசினை நீறாக்குதலின் 'நீற்றினெறி' 'தெருள்நெறி' என்றும், இதனினின்றும் அருள் தோன்றுதலின் 'அருணெறி' என்றும், தவத்தின்பயன் அன்பே ஆதலின் 'தவச் செந்நெறி' என்றும், பழையமக்கள் கொண்ட நெறியானமையின் 'தொன்னெறி' என்றும், அன்பு நெறியில் நின்றக்கால்தான் நண்பர் அயல் என்னும் வேற்றுமை இரிந்து அன்பென்னும் சிவநெறி தலைப்படுமாதலால் "சுற்றத் தொடர்பொழியத் தூயசிவ நன்னெறி" என்றும், வேதத்திற் பெறுநெறி என்பதுபட 'வேதநெறி' என்றும், எல்லா நெறிகட்கும் இவ்வன்பு நெறியே தலையாதலின் "தலைநெறியாகிய சமயம்" என்றும், இதன்கண் நிற்பதே தொண்டாகுமெனத் 'தொண்டினெறி' என்றும், இதுவே பொருளும் மெய்யுமாதலால் 'பொருணெறி' என்றும் பலவாறாகச் சைவ அருணூல்கள் கூறா நிற்கும்.

இனி இதன் தொடர்பாகப் பொதுமறையென வழங்கும் திருக்குறட் கருத்தையும் ஆராய்வோம். அது 'கடவுள் வாழ்த்து' என்னும் அதன் முதல் அதிகாரத்தை நோக்கவே விளங்குவதாகும். அவ்வதிகாரத்தின் பத்துத் திருக்குறள்களில்,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்னும் முதற் குறளால் கடவுளிருப்பை நாட்டி, இரண்டாவ தாகக்,

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

என்று இக்குறளால் உடலெடுத்த உயிர்கள் உலகமாகிய கல்விக் கழகத்தில் உழல்வதெல்லாம் அவ் விறைவனை அடைதற்பொருட் டாம் எனச் செயற்பாலது இதுவென்று வலியுறுத்து,

"மலர்மிசை எகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு

பொறிவாயில் ஐந்துஅவித்தான் பொய்தீர் ஒழுக்கம்
நெறிநின்றார் நீடுவாழ் வார்"

என்னும் இந்நான்கு திருக்குறள்களாலும் அவ்விறைவனை அடையுநெறி கூறித்,

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது

கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

என்று இந்நான்கினும் அந்நெறி நின்று இறைவனை அடையா தார் எய்துங் குற்றமுந்தேற்றி அருளினார் அதன் ஆசிரியர்.

இவைதம்மில் இக்கட்டுரைக்கு வேண்டியன இறைவனை அடையுநெறி கூறும் நான்கு திருக்குறள்களேயாம். அந்நான் கிலும் முதல் நின்றது, அன்பினால் இறைவனை வணங்குமுறை கூறிற்று. ஆசிரியர் பரிமேலழகியாரும், "மலர்மிசை எகினான்" என்னுஞ் சொற்றொடருக்கு "அன்பா னினைவாரது உள்ளக்

கமலத்தின்கண் அவர்நினைந்த வடிவோடு விரைந்துசேறலின்'' என்று உரைகூறி, இதன்கண் விரைந்து சேறலைக்காட்ட எழுந்த ஏகினன் என்னுஞ் செய்யுட் சொல்லைமட்டும்,

"வாராக்காலத்தும் நிகழுங்காலத்தும்
ஓராங்குவரூஉம் வினைச்சொற்கிளவி
இறந்தகாலத்துக் குறிப்பொடுகிளத்தல்
விரைந்தபொருள என்மனார்புலவர்''

என்னுமொரு தொல்காப்பிய நூற்பாக் கொண்டும் விளக்கி 'அன்பினால் இறைவனைக்க முடையோரே அதனை விரைவிற் பெறுவர்' என்று திருவள்ளுவரால் வலியுறுத்தப்பட்ட கருத்தை இனிது புலப்படுத்தார். அவ் வன்புநெறி நின்றார்க்கு வேண்டுதல் வேண்டாமை இல்லாமையும், தன் அன்புக்குரிய பொருளின் புகழைப் பேசுதலும், அவா ஒழிந்த தீமை தீர் நல்லொழுக்கமுடைமையும் வாய்தலின், முறையே அவை தம்மைப் பின் மூன்று குறள்களால் ஆசிரியர் விளக்கி யருளினர்.

இதனால் எம்மதத்தவரும் தம்மதத்தவர் என்று வலிந்து தேடிக்கொள்ளும் பொதுமதத் திருநெறித் திருவள்ளுவத் தேவரே இறைவனை அடைதற்கு அன்புநெறியை உரியதாகக் காட்டுவார்களாயின், அவ்வன்பு நெறியே எம்மதத்தவர்க்கும் பொதுவான நம் தேவர்நெறியாம் என்பதும் இனிது விளங்குமன்றோ?

சைவசமயமே பொதுநெறி யென்று, சைவசமய முதலாசிரியரான திருமூலமுனிவரும்,

"சைவச் சமயத் தனிநாயகன் நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுஉண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே''

என்று விளங்க அருளுவார்கள்.

"திருநெறிஒன்றே அதுதான் சமரச சன்மார்க்கச்
சிவநெறி என்று உணர்ந்து உலகீர்
சேர்ந்திடுமின் ஈண்டு
கருநெறிவீழ்ந்து உழலாதீர் கலக்க மடையாதீர்
கண்மையினுற் கருத்தொருமித்து உண்மை
உரைத்தேனே''

என்று பொதுநெறியை (சமரச சன்மார்க்கம்) வளர்க்கவந்த இராமலிங்க அடிகளும் இன்னும் விளங்க மிகமிகத் தெளிவாக அருளுதல் காண்க.

# நம்பியாரூரரும் பரவையாரும்

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M. A., M. L.]

அகப்பொருள் நூலிற் கூறியவண்ணம் ஒத்த தலைவனுந் தலைவியும் தாமே எதிர்ப்பட்டு மனத்தல் ஊழ்வினையின் பயனு மாதலின், ஆரூரரும் பரவையாரும் கூடிய திருமணக்கூட்டத் துக்கு "நற்பெரும் பான்மை கூட்ட" என்றார் ஆசிரியர் சேக் கிழார். காட்சித் துறைக்குப் பின் ஐயம், குறிப்பறிதல், தெளிவு என்னுந் துறைகள் வரற்பாலன. பண்டை நூல்களிலே காட்சி யானது பொழிலகத்தே நிகழ்ந்ததாகக் குறித்திருப்பினும் அது பிற இடங்களிலும் நிகழ்தல் கூடும் என்பது இதனால் விளங்கு கின்றது. கம்பராமாயணம் மிதிலைக்காட்சிப் படலத்தில், இராமர் தெருவழியாகச் செல்லுங்காலை ஒரு வீட்டின் மேலிடத்தில் சீதையை முதன்முதற் கண்டதாகக் குறிப்பிட்டிருக்கின்றது. சிவபெருமானது திருவருளினாலே நம் நாயனார் திருமணம் நிகழ்ந்ததாகலின், அக்கடவுளுடைய திருக்கோயில் வாயிலிலே யே நாயனார்க்கும் பரவையார்க்குங் காட்சி நிகழ்ந்தது பெரிதும் பொருத்தமாம் என்க. காட்சியின் பின் நிகழும் ஐயத்துறை யினைக் "கற்பகத்தின் பூங்கொம்போ" என்று தொடங்கும் பாட் டில் ஆசிரியர் விரித்துரைத்தார். பரவையார்க்கும் ஐயம் நிகழ்ந்ததாகத் தெரிகின்றது. ஐயத்தினைத் தெரித்தல் தலை வனுக்கே சிறக்குமாயினும், நினைவின்கண் ஐயப்பாடுறுதல் தலை விக்கும் இயல்வதொன்றே. அது, "இவன் யாரோ என நினைந் தார்" என்றது காண்க. நாயனார் கருத்தும் பரவையார் கருத் தும் மிகவும் ஒத்த இயல்புடையன என்பது அவர்களது ஐயப் பாட்டு முறையால் தெளியப்படும். "கற்பகத்தின் பூங்கொம் போ" என்பது இந்திரன் மகளோ என்னுங் குறிப்புப்பொருளை யுணர்த்தும். இதற்கேற்பப் பரவையார் சுந்தரமூர்த்தியை 'இந் திரன் மகளை மணந்த முருகனோ' என்று ஐயுற்றார். 'காமன்றன் பெருவாழ்வோ' என்றதால், காமன் மனைவிபோன்றதொரு மடக்கொடியோ என்று நாயனார் ஐயுற்றனர் என்பது புலனும். இதற்கொத்த முறையிலேயே பரவையாரும் "பெருகொளி யால் தன்னேரில் மாரனோ" என நினைந்தார். அழகிய திரு உரு உடைமையாலும், பெறலருந் திருவருள் பெற்றமையாலும் நிகரற்ற காமன் என்று நம் நாயனார் கருதப்பட்டார். பரவை யார் இறைவனைத் தொழும் பெரும்பேறு பெற்றவராதலின், "பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ" என்று கருதப் பட்டார். புண்ணியம் என்னுஞ் சொல் காவமைத்தல் குளந்

தொடுதல் முதலிய அறச்செயல்களை உணர்த்தும். இவற்றினுஞ் சிறந்தது இறைவனை வழிபடுதல். ஆதலால் இறைவழிபாடு "புண்ணியத்தின் புண்ணியம்" எனப்பட்டது. பயன் கருதாது முழுமுதற் கடவுளை வழிபடச் செல்லும் ஆர்வமிகுதியின் அழகு தோன்றப் 'பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ' என்றார்.

"உண்ணிறையுங் குணநான்கும் ஒருபுடை சாய்ந்த எனினுங்
கண்ணுதலைத் தொழும் அன்பே கைக்கொண்டு செல உய்ப்ப"

என்றது இதனை வலியுறுத்துதல் காண்க. நம் நாயனார் பெரும் பாவலராதலின் பரவையாரது வனப்பினை உவமையால் விரித்துணர்ந்தார். முகில்போன்ற கூந்தலையும், வில்லனைய புருவத்தையும், குவளைபோன்ற கண்ணையும், பவள இதழையும், மதியனைய திருமுகத்தையும், கொடியனைய ஒல்கிய தோற்றத்தையும், இயற்கை நன்மணமுடைய மேனியையும் உடையவர் பரவையாரென்பார், "புயல்சுமந்து விற்குவளைப் பவளமலர் மதி பூத்த விரைக்கொடியோ" என்றார். 'தன்னேரில் மாரனோ' என்ற அளவில் பரவையார் நாயனாரது அழகினைப்பெற வைத்தார். நாயனார் 'அற்புதமோ' என்று வியந்ததற்கொப்பப் பரவையார் "தார்மார்பின் விஞ்சையனோ" என்று கருதினார். விஞ்சையன் என்பது 'மந்திரம் வல்லான்' என்னும் பொருளையுடையது. மந்திரத்தால் நெஞ்சைக் கவர்வதுபோலத் தமது நெஞ்சு திரித்தவரை விஞ்சையன் என்றல் இயல்பு. நெஞ்சம் திரிபுற்று மாலையிடற் குரியானென்று எண்ணினமையால் "தார் மார்பன்" என்றார். நம் நாயனாரும் திருவெண்ணெய் நல்லூரில் இறைவனது திருவருள்பெற்ற பின்னர்ப் பரவையாரைக்காணும் வரை தூய தவநெறியிலேயே சென்ற திருவுள்ளமுடையராதலின், பரவையாரது காட்சியால் உள்ளம் திரிபுற்ற காலை அதனையோர் புதுமையாக உணர்ந்து இஃதோர் 'அற்புதமோ' என்றார். எவற்றையும் அருட்கண்ணாற் காணும் திருநாவலூரர் பரவையாரையும் சிவனாரது திருவருளோடு தொடர்பு படுத்துச் சிவனருளோ என்றனர். இதற்கேற்பப் பரவையாரும் "மின்னேர் செஞ்சடை யண்ணல் மெய்யருள் பெற்றுடையவனோ" என்கின்றார். திருவருட் பேற்றின் வலியை வெல்லும் வலிமை பிற எதற்கும் உண்டோ என்ற ஐயப்பாட்டினால் நம் நாயனார் "அறியேன்என்று அதிசயித்தார்" மெய்யருள் பெற்றுடையவன் என்றமையால் இவன் மக்களுட் சிறந்தோர் அண்ணல் என்னுந் தெளிவும் என் மனந் திரித்த இவன் என்றமையால் குறிப்புணர்தலும் ஆகிய துறைகள் பெறப்பட்டன. விரைக்

கொடியோ' என்றதனால் நானில மடந்தை என்னுந் தெளிவும், சிவனருள் என்ற சொற்றொடர் உணர்த்துவதால் குறிப்பறிதலும் நாயனார்க்கும் நிகழ்ந்தன என்பது பெறப்பட்டது. நெஞ்சுட் புகாது நெஞ்சம் திரித்த லின்மையின் ஒத்த காதல் பெறப்பட்டது.

இனி, அறிவு விளங்கச் செய்தலின், உடம்பானது விளக்கெனப்படும். 'மாயாதநு விளக்கு' என்றதும் அதுவே. கவின் மிகுந்த உடம்பினை மணிவிளக் கென்றார். எண்ணியவண்ணம் ஒன்றைத் தோற்றுவிக்கும் ஆற்றல் திருவருள்வலியினால் அயன் பெற்றுள்ளானாதலின், 'உள்ளத்தான் விதித்ததொரு மணிவிளக்' கென்றார். கையினால் எழுத முடியாமையால் அதனால் வந்த வருத்தத்தைத் தீர்த்தற் பொருட்டு நெஞ்சத்தால் எத்துணை அழகாக நினைக்க முடியுமோ அத்துணை நயம் பெற அமைந்தன வென்பார், தன் வருத்தம் உறவிதித்த தொரு மணிவிளக்கென்றார். மூவுலகிலும் இன்பத்தை விரும்பினார் தலை சிறந்ததாகக் கருதற்குரிய வனப்புடை நங்கை யென்பார் மூவுலகின் பயனாகி என்றார். மன்மதனார் இருவருக்கும் ஒத்த காதலை விளைத்தலின் 'நடுநின்றார் படைமதனார்' என்றார். காதலானது அகத்தால் உணரப்படுவதாதலின், பிறர்க்கு எழுதிற் புலனாகாதாதலின் 'அயலறியா மனம் விரும்ப' என்றார். உயிர்கள் செய்யும் ஒவ்வொரு தொழிலுக்கும் உரிய கடவுளரை 'அதிதேவதை' யாகக் கூறுதல் நமது நூல்வழக்காதலின் காம உணர்ச்சிக்கு உரிய காமக் கடவுளின் செயலைக் காதலுக்குங் கூறுவாராயினர். பரவையார் சுந்தரமூர்த்தியை மணப்பதற்கு முன் தூய நன்னெறியிலேயே நின்றமையால் 'உம்பர் தரத்தார்க்கும் சேர்வரியர்' என்றனர். பேர்பரவை என்று தொடங்கும் பாட்டிற்குப் பரவை என்னுஞ்சொல் ஆறு அல்லது ஏழு பொருள்களில் வழங்கப்பட்டுள்ளது. இங்ஙனம் சொல்லணி யமைத்தல் பேரியபுராணத்திற்குப் பிற்காலத்திலே தான் அந்தாதியில் பெரிதும் வழங்கலாயிற்று.

முன்வினைப் பயனைத் திருவருள்பெற்ற பேரறிஞரும் நுகர்வராதலின், "முன்றொடர்ந்து வருங்காதல் முறைமையினாற் றொடக்குண்டு" என்றனர்.

"இடுக்கண்பட் டிருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்"

என்றபடி பேரன்பர்கள் தம்முடைய குறைகளைப் பிறர் யாவருக்கும் எடுத்துரையாமல் இறைவனையே வேண்டி அவைகளை நிறைவுசெய்யப் பெறுவாராகலின் "எனை ஆட்கொண்டவர்

பால் நண்ணுவன்" என்று நம்நாயனார் திருக்கோயிலுட்சென்று வேண்டுவார் வேண்டுவதே ஈயுங் கடவுளிடம் மெல்லியலார் தமை வேண்டி அடிபணிந்தார். இரண்டுடற்கு உயிர் ஒன்றானாற்போலப் பரவையாரும், திருநாவலூரரும் காதலாற் பிணிப்புண்டமையின், நாயனார் பரவையாரை இன்னுயிராம் அன்னமெனக் கருதித் தேடுவாராயினர். பாசம் நீக்க முற்றுச் சிவன் கழற்கே மிகுந்த அன்புடையராய்த் திகழ்ந்த நாயனார் அவ்வன்பினும் மேற்பட்டதொரு பற்றினைப் பரவையாரைக் காணும் வரை அறியாதிருந்தனர். கண்ட பின்னர்த் தமது பேரன்பினையும் கீழ்ப்படுத்து மேற்செல்லுமோர் அவாவினைக் கண்டு வியப்புறும், அவ்வவாவினையும் திருவருண்மயமாகவே எண்ணும் இயல்புடையவராதலின், "ஈசனார் அருள் எந்நெறிச் சென்றதோ" என்றனர். இங்ஙனந் திருவருளுடன் தமது அறிவை ஒட்டிப் பொருள்களை அறியும் அறிவே பேரறிஞர்க்குச் சிறப்பாகும். புள்ளினங்கள் மாலைக் காலத்திற் றமது கூட்டிற்குச் சென்று தமது பெடையுடன் துயில்வதை நினைந்து பரிவுற்ற காதலர் வருந்துவாராதலின், "பையுண்மாலை தமியோர் பனிப்புற" வந்ததென்றார். வானம் இருண்டதற்கு மூன்று அழகான உவமைகளை ஆசிரியர் சேக்கிழார் ஒரு செய்யுளின்கண் அமைத்துள்ளார். பெண்பாலார் ஆடவரினும் அடக்கத்திற் சிறந்தாராதலின், தமது கருத்தினைத் தெளிவுபட எடுத்துரைக்கமாட்டார். பரவையாரது உள்ளத்தைத் திருநாவலூரர் எளிதின் அறிய முடியாதிருந்த நிலையில் வானபடர்ந்த இருள் 'மகளிர்மன' மெனத் தோன்றியதுபோலும்! பரவையாரும் தனது துயரத்தை "அலரும் நிலவு மலரு முடியார் அருள் பெற்றுடையார் அவரோ அறியார்" என்றார். அகனன்பினையுங் கீழ்ப்படுத்தி மேலெழுந்த அவாவிற் கேதுவாகிய தமது முன்னை வல்வினை வஞ்சமாக்கள்தம் வல்வினையெனத் தோன்றியதுபோலும். வஞ்சனையால் மறைத்து நின்று இறைவன்மீதும் மலர்மாரி சொரிந்த காமன் தம் மாட்டுச் செய்யுங் கொடுஞ் செயலானது வஞ்சமாக்கள்தம் வல்வினையெனத் தோன்றியதென்பாரும் உளர். பரவையாரும் "பலரும் புரியுந் துயர்தானிதுவோ படை மன்மதனார் புடையின் றகலார்" என்றது காண்க. மலவிருளை யோட்டுந் திருவைந்தெழுத்தினை உணராதாருள்ளம் அறியாமையால் கவரப்பட்டிருத்தலின் "அஞ்செழுத்தும் உணராநெஞ்சம்' போல வானம் இருண்டதென்றார். பரவைமாட்டுள்ள காதலினால் இறைவன்திருவருளில்லாதார் போலத் தாமே தமக்குத் தோன்றினமையால், அஞ்செழுத்துணரா நெஞ்சத்தை அது நினைப்பூட்டிற்று. பரவையாரும் "உமதன்பிலர் யானோ உறுவேன்" என்றனர்.

இவற்றால் இருவர் கருத்தொருமை காணப்படும். மூவகைப் பற்றுள்ளும் நடு நின்ற பெண் பற்று கடத்தற் கரியதொன்று. பெருந்தவ முனிவர்பால் தோன்றிய விடத்து அதன் வலிமை தெற்றென விளங்குமென்றும், ஆடவர் வீரங்குன்றிப் பெண்டிர் பாற் பற்றுவைத்தல் அவரது ஆண்மையைப் பெண்டிர் பழித்து நகையாடற் கேதுவாமென்றும் நகைச்சுவை தோன்றப் புனைந்துரைக்கும் ஆசிரியர்,

"மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்தினல்
இறும ருங்குலார்க்கு யார்பிழைப் பாரென்று
நறும லர்க்கைகுல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா"

என்றனர். குமுதத்தின் மலர்ச்சியைப் பயிர்ப்பு மிக்க குல மாதர் மகிழ்ச்சிக்கு உவமித்தது சிறந்ததொரு பாநயமாம். இங் ஙனங் குறிப்பாக நற்பெண்ணினது கடமையை வற்புறுத்துதல் சிறந்ததொரு முறையாம். பரவையார் குமுதம் போன்ற தொரு செவ்வியுடையார் என்று குறித்தவாறுமாம். பரவை யார் குமுதத்துக் கொப்பாயின், திருநாவலூரார் வெண் ணிலாவிற்கு ஒப்பாவார். அவரது திருநீற்றொளியினை நில ஒளிக்கு ஒப்புரைக்கு மாற்றால் திருவெண்ணீற்றுப் பெருமை யை ஆசிரியர் குறிப்பாக விளக்கிப் போந்தது காண்க. திரு வெண்ணீறனது பற்றற்ற தூய நிலையை உயிர்கட்கு அறிவுறுத் தும் சிவப்பேற்றை உணர்த்துதலால், புனிதத்தோடு இன்பத் தையும் அது வலியுறுத்தும். பிறவி வெம்மையை நீக்கும் திரு வருளாற்றலின் இயல்பினை விளக்குதலால், அது தண்மையையும் உணர்த்தும். திருநீற்றுப் பதிகத்தினைப் 'பரையின் வரலாறு' என்றதும் இக்கருத்துப் பற்றியே. அருள் வெளியின் ஒளிக்குத் திருவெண்ணீற்றின் ஒளியே அறிகுறியாமாதலானும், அருள் ஒளிக்குளே அகிலாண்டகோடி யெல்லாம் தங்கு மாதலானும்,

"ஆற்ற அண்டமெ லாம்பரந்து அண்ணல்வெண்
ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா"

என்றனர். நிலவுங் கடலுந் தென்றலுங் காதலை மிகுவிப்பன ஆதலின், காதலால் வருந்துவோர்கள் அவற்றைப் பழித்தல் இயல்பே. தண்மதி வெம்மையுடையதாகத் தோன்றுவது ஒட்டி நல்லியற்கை மாற்றத்தால் எழும் இரக்கச் சுவை நில வினைப் பழிக்குஞ் செய்யுட்கண்ணும் கொடுமை, செய்யும் பேராற்றலால் எழும் அச்சச் சுவை ஆண்டவனுக்கே நஞ்சினைக் கொடுத்த கடலைப் பழிக்கும் பாட்டின் கண்ணும், பொதியைச் சந்தனக் காவிற் றேன்றி நீர் நாட்டினில் தண்வயல்களிற்

பொருந்தி உலவும் இனிய காற்று எங்ஙனங் கொடிய தன்மை யுற்றது என்று வியக்கும் வியப்புச்சுவை தென்றலைப் பழிக்கும் பாட்டின் கண்ணும் நயமுற அமைக்கப்பட்டிருத்தல் காண்க. வியப்புச் சுவைக்குரிய பாட்டு வருமாறு :—

"பிறந்த தெங்கள் பிரான்மலை யத்திடைச்
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினிற்
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம் பயின்றதெங் கோதமிழ் மாருதம்''

தமிழ் என்ற விடத்துத் தமிழ் என்ற சொல் இனிமை யென்னும் பொருளுடையது. திருநாவலூரர் யாரொடும் பேசாது திருவருட் குறிப்பினை நோக்கியே இருந்ததுபோலப் பரவையாரும், வேறொருவருடன் பேசாதவராய் நிலாமுற்றத்திலிருந்தார். திருநாவலூரார் சைவமுதற் றிருத்தொண்டர், தம்பிரான் தோழனார் என்றறிந்த உடனே அளவற்ற காதலால் விழுங்கப் பெற்றார். இவரையும் பெருங்காதலாற் பிணித்தது யாதெனின், இறைவன் மாட்டுள்ள பேரன்பேயாம். ஒத்த உணர்ச்சி யென்பது இஃதே. வெப்பந் தீர்வதற்கு அக்காலத்தில் பன்னீர் சந்தனக் குழம்பு முதலியவைகளைப் பயன்படுத்துவதுடன் இளந் தளிரையும் வெப்புடையார் மேனிமேலிடுதல் ஒருவழக்காகத் தெரிகிறது. குளிரிக்கோடி என்பதனையும் தட்பத்திற்காக மேற்கொள்வர்போலும் ! உடல் வெப்பத்தைத் தணிக்கும் இவைகள் உள்நின் றெழுங் காதல்வெம்மையைப் பெருக்குவனவேயாதலால் அவை கடியப்பட்டன. நிலவினையுந் தென்றலினையும் பழித்ததும் இக்கருத்துப் பற்றியே, என்னேவுற்றார்க்கும் இரவு நீடித்ததாகத் தோன்றுதல் இயல்பு. காதல் நோவுற்றார்க்கு அது மிக நெடிதாக இருத்தல் பற்றிக் கூறுதல் வேண்டுமோ ? உள்ளமானது பகலிற்போலப் பல்செயல்களில் செல்லாது பிறிதொன்றனை நினைந்து வருந்துவதினாலேயே அழுந்தி நிற்பதால் இரவு அங்ஙனம் தோன்றுமென்க. திருவருள் பெற்ற பேரறிஞராதலின் திருநாவலூரர் தமது காதல் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு இறையருள் வழி நிற்பப் பரவையார் அவர் தன்னிலையை அறிந்திலரே, அருள் செய்திலரே எனப்புகன்று அயர்ச்சியுற்று இறைவனைக் குறை இரந்தனர். அவளுடைய வேண்டுகோட்கு இரங்கிய கடவுள் இருவர்க்கும் மணத்தினை அடியார் வாயிலாக நிகழ்வித்தனர். சிவனடியார்க்கு உரியவற்றைத் தாமே இறைவன் வெளிப்படையாக இயற்றுவிப்பர். அங்ஙனம் செய்வித்தல் சிவனடியார் பெருமையையும், தாம் அவர்கட்கு எளிவந்தருளும் இயற்கையையும் ஏனையோர்க்கு அறிவுறுத்தியவாறும். உலகத்திலே ஒத்த நெஞ்சமுடைய காத

லனுங் காதலியும் மணம் புரிய நேர்தலும் இறைவனது திருவருளே யாமாயினும், ஆண்டுத் திருவருள் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்றலின் அது நல்வினைப் பயனே யாமென்று யாவருங் கொள்வர். ஈண்டுப் பரவையாரது திருமணம் இறைவனே நேர் நின்று இயற்றுவித்ததாகலின் அஃது திருவருட் செயலென்றே தெளியப்படும். சிவனடிப் பேரன்பில் எழுந்த பெருங் காதலாற் பிணிக்கப்பட்டார்க்குக் குலங் கோத்திரம் முதலியன கருதுதன் மிகை. மணத்திற்கு அறிகுறியாகத் திருமங்கலநாண் பூட்டுதல் முதலியன நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. வதுவை தரு நீர்மையினுன் நிகழச் செய்தார். மணத்தினைக் குறிப்பதற்கு ஒரு நெறிச்செயல் நிகழ்ந்திருக்கவேண்டும். அது மாலை மாற்ருே, மங்கல நாண்பூட்டோ, ஆழி யணிதலோ, உடைகொடுத்தலோ, பொட்டணிதலோ இவற்றுள் யாதோ என்று ஆசிரியர் விளக்கவில்லை.

மலைத்தலை மீதிருந்து சிவயோகம் பயில்வார் சிவபெருமானை ஒன்றி நினைக்கும் பேரன்பர் போலத் தாம் பெற்ற சிற்றின்பத்தைப் பேரின்பமாக நுகரவல்ல மெய்யுணர்ச்சி சான்ற திருநாவலூரர் பரவையின் மார்பத்தையே தமக்குரிய குன்றமாகவும், அவள் புணர்ப்பையே பல நாளும் பயில்கின்ற யோகமாகவும் கொண்டாரென்பது. திருநாவுக்கரசர் முன்வினையால் தமக்கு நேர்ந்த துன்பத்தைப் பேரின்பமாக நுகர்ந்ததுபோலத், திருநாவலூரர் தமக்கு நேர்ந்த சிற்றின்பத்தைப் பேரின்பமாகத் துய்த்தன ரென்க. பரவையாருடன் கூடிவிளையாடும் வெளித்தோற்றத்தை உடையராயினும், தமது சென்னியிலும் சிந்தையிலும் சிவபிரானது திருவடித் தாமரை மலரின் வரும் பேரின்பத்தேனை நுகர்ந்து திருவருட்பதிகம் பாடினரென்பதால் அது வலியுறும்.

> "தன்னையா ளுடையபிரான் சரணர விந்தமலர்
> சென்னியிலும் சிந்தையிலு மலர்வித்துத் திருப்பதிகம்
> பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
> மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்ருர்"

பொருட் செல்வமும் திருவருட் செல்வமும் ஒருங்கு நுகரும் பெரும்பேறு உற்றமையால் ஆடை அணிகலன் முதலியவற்ருல் உளதாம் இன்பத் திருக்கோலத்தையும், திருநீறு கண்மணி முதலியவற்ருல் விளங்கும் சைவத் திருக்கோலத்தையும் நம் நாயனுர் ஒருங்கே உடையராயினர், விலங்கு புள் என்பவற்றுள் விளையாட்டிற்குரியவற்றை அவரது அடியார்க் குழாங்கள் (பரிசனங்கள்) கொண்டு சென்றதும், நான்மறைமுனிவர் சூழச்

சென்றதும் இக்கருத்துப்பற்றியே என்க. இருவகை அழகும் ஒருங்குடைமையினல் இவர்க்கு அழகர் என்ற பெயர் அமைந்ததுபோலும். கழிபெருஞ் செல்வச் செழும்பயன் துய்த்தும் அடியார்களுடன் இருக்கும் மகிழ்வினையே குறிக்கொண்டிருந்தமை தாமரை இலையில் நீர்போலப் பற்றற்ற நம் நாயனுர் நிலைமையை விளக்குவதாகும்.

---

# தமிழிற் பிறமொழி கலத்தலாகாது

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A.]

தமிழ்க் கட்டுரையைக் கூடியவரை வடமொழிச் சொற்கள் கலவாது செந்தமிழில் ஏன் எழுதல்வேண்டும் என்பது.

இனிய செந்தமிழ்ச் சொற்களினுல் தமிழ்க் கட்டுரையை எழுதல் வேண்டும் என்பதைப்பற்றி ஒரு கட்டுரை எழுதவேண்டியதிருத்தலே இக்காலத்தில் தமிழ் மொழியினது தாழ்ந்த நிலையைக் காட்டுகிறது. இந்தியாவில் இப்போது வழங்கப்படுகிற வேறுமொழிக் கட்டுரைகளுக்குத் தமிழ்மொழிக் கட்டுரைகளுக்கு உள்ள குறைபாடுகளில்லை. ஆங்கிலமொழிப் பேச்சுகளையாயினும் கட்டுரைகளையாயினும் ஆங்கிலேயராவது அம்மொழியைப் பயின்ற பிறராவது அம்மொழிச் சொற்களைத் தவிர வேறுமொழிச் சொற்களை வழங்குகிறதில்லை. ஓர் தமிழர் ஆங்கில மொழிப் பேச்சில் சில தமிழ்மொழி கலந்து ஒரு ஆங்கிலேயருடன் பேசுவாராஞல் அவர் ஆங்கிலமொழி படியாதவர் என்று எள்ளப்படுவார். ஆங்கிலமொழியில் பல லத்தின்மொழிச் சொற்களும் கிரீக்மொழிச் சொற்களும் நீண்டகாலமாக வந்து வழங்கப்பட்டாலும், அவைகளைக் கூடியவரை நீக்கி எழுதுதலே செவ்விய ஆங்கில நடை என்று ஆங்கிலமொழி வல்லுநராற் கருதப்படுகின்றது. வடமொழி பயின்று வல்லுநராயுள்ளார் தாங்கள் எழுதும் வடமொழிச் செய்யுளில் ஒரு தமிழ்ச் சொல்கூட வழங்கமாட்டார்கள். ஆனல் அவர்கள் தமிழில் உரைநடை எழுதினல் வடமொழிச் சொற்களைத் தட்டுதடையின்றி வடமொழி வடிவங்களிலேயே வழங்குகின்ருர்கள். அவ்வாறே பிறமொழியாளர்களும் தாங்கள் எழுதும் உரை நடையையும் செய்யுள் நடையையும் தங்கள் தங்கள் மொழிச் சொற்களை வழங்கியே எழுதுகின்ருர்கள்.

தமிழ்மொழியில் எழுதுகிறவர்கள்மட்டும் அதன் இலக்கண இலக்கியமுறை பிறழ்ந்து தங்கள் மனம்போன போக்கிலே

பெரும்பாலும் உரை நடையை எழுதுகிறதற்குக் காரணம் இருந்தது என்னே தெரியவில்லை. தமிழ்மொழியாளர்களிற் பலரும் பிறமொழியாளர்களும் தமிழ்மொழியின் பெருமையை அறியாது அதனைப் புறக்கணித்தலே அது தாழ்ந்தநிலை அடைதற்குக் காரணமாயிருக்கின்றது. ஆதலின் தமிழ்மொழிக் கட்டுரைகளை ஏன் செந்தமிழ் நடையில் எழுதவேண்டும் என்பதற்குரிய காரணங்களை ஒன்றின்பின் ஒன்ருய் இதன்கீழ் உரைப்பாம்.

முதலாவது, தமிழ் மொழியானது இனிய இசைமொழியாகும். தமிழ் என்ற சொல்லே இனிமை என்று பொருள்படும். மக்கள் ஒருவருக்கொருவர் தங்கள் உள்ளத்திலுள்ள கருத்துக்களை உரைத்தலே மொழியின் பயனாகும். அப்படி உரைப்பதும் கடுஞ் சொற்களன்றி இனிய சொற்களிலே இருத்தல்வேண்டும். செந்தமிழ் நடையில் எழுதப்படுகிற கட்டுரைகள் உரைப்பவர்களுக்கு நாவிற்கு இனியனவாகவும், கேட்கிறவர்களுக்குச் செவிக்கு இனியனவாகவும் இருக்கும். வடமொழிச் சொற்கள் கலந்து எழுதப்படுகிற கட்டுரைகள் படிப்பதற்கும் கேட்பதற்கும் செந்தமிழ்க் கட்டுரைகளைப்போல் இனிமையாயிரா.

இரண்டாவது, தமிழ்மொழிச் சொற்கள் பெரும்பாலும் ஓரசைமுதல் நான்கு அசைகள்வரை அடங்கிய சொற்கள். நான்கு அசைக்கு மேற்பட்ட சொற்கள் அருமை. உலகில் வழங்கும் பிறமொழிகளைப் பார்க்கிலும் தமிழ்மொழியானது உயிர்ப்புச்செட்டு (Economy of breath) உடையது. ஆதலின் ஒரு கருத்தை உரைப்பதற்குப் பிறமொழிகளைப்போல அன்றி மிக்க குறைந்தவலி (least energy) போதுமானதாயிருக்கிறது. கூடியவரை சிறு முயற்சியால் கூடியவரை பெரும்பயனை அடையும் வழக்கை (the obtaining of maximum benefit with the expenditure of minimum energy) இதில் நாம்காணலாம்.

மூன்ருவது, உலகிலுள்ள ஒவ்வொரு கூட்ட மக்களுக்கும் தங்களுக்குமட்டுமே உரிய சிறப்புப் பண்புகள் உள்ளன. அவர்கள் வழங்கும் மொழியிலும் அதற்கே உரிய சிறப்பு அமைப்புகளும் உள்ளன. தமிழ் மக்கள் பல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே மிக்க நாகரிகமடைந்தவர்கள் என்று இப்பொழுது கிடைக்கப் பெறுகிற சில தொன்மையான நூல்களினுலும் தொன்மையான கல்வெட்டு எழுத்துக்களினுலும் பிறசான்றுகளாலும் நமக்குத் தெரியவருகின்றன. கடலாற் கொள்ளப்படுவதற்குமுன் தமிழ்மக்கள் வாழ்ந்துவந்த லெமூரியா நாடானது உலகமக்களது நாகரிகம் பிறந்த இடமென்று வரலாற்று ஆராய்ச்சியாளர்களாற் கருதப்படுகின்றது. (Lemuria is the cradle

of human civilisation) அத்தகைய தமிழ் மக்களது பல உயர்ந்த நாகரீகக் கருத்துக்கள் அவர்கள் வழங்கிவந்த பல தமிழ்ச் சொற்களில் அடங்கியுள்ளன. அக்கருத்துக்களெல்லாம் இக்காலத்திலுள்ள தமிழ்மக்களைத் தங்கள் முன்னோர்கள் அடைந்த நிலையை அடையும்படி முயற்சிசெய்யத் தூண்டுகிற குறிகளாயுதவுவதுமன்றிப் பிறமக்களுக்கும் மிக்க நற்பயனை விளைவிக்கும். உயரிய கருத்துகள் அடங்கிய தொன்மையான சொற்கள் இப்பொழுது தமிழாளர்கள் எழுதுகிற கட்டுரைகளில் வழங்கப்பட்டால், அந்தக் கட்டுரைகளைப் படிக்கிறவர்கள் உள்ளத்தில் அக் கருத்துக்கள் பதிந்து நற்பயனை விளைவிக்கும். பலவேறு வகுப்பு மக்கள் ஒரு நாட்டில் ஒன்றுசேர்ந்து வாழ்கிறதினு லுண்டாகும் நற்பயனுவதெல்லாம் ஒவ்வொரு வகுப்பினரும் பிற வகுப்பு மக்களின் கருத்துக்களை அறிந்துகொள்ளுதலேயாகும். நமது நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்து அடைந்த நாகரீகக் கருத்துக்களை அவர்களுக்குப் பின் வந்துள்ள பலவேறு வகுப்பு மக்களும் அறிந்து பயன் அடைதல் வேண்டப்படுவ தொன்றுகும். எடுத்துக்காட்டாகக் கந்தழி, இயவுள், கடவுள், நடு, திரு என்னும் சொற்களில் எத்துணை உயரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன. இத்தகைய சொற்களை நாம் வழங்காது மறந்துவிடுவோமானுல் அக்கருத்துக்கள் நமக்குத் தெரியாமற் போதலுமன்றி, நமது முன்னோர்கள் தொடர்பும் விட்டுப்போகும். ஆதலின் தமிழ்மக்களும் பிறமக்களும் பயன் அடையவேண்டித் தமிழ்க் கட்டுரைகளில் தொன்மையான தமிழ்ச் சொற்கள் வழங்கித் தமிழாளர்கள் கட்டுரை எழுத வேண்டியது இன்றியமையாததாகும்.

நான்காவது, இக்காலத்து ஏறக்குறைய ஐம்பது அறுபது ஆண்டுகளாகத் தமிழ்மொழியிற் கட்டுரை எழுதினவர்கள் வடமொழிச் சொற்களை அவ்வடிவங்களிலேயே மிகக் கலந்து எழுதித் தமிழ்த் தாயின் வடிவ அழகையும் ஓசை இனிமையையும் சிதைவு செய்தனர். இப்பொழுது சில ஆண்டுகளாக ஆங்கிலம் நன்கு கற்ற பலரும், பிறரும் தமிழ்மொழியிற் பற்று வைத்துத் தமிழ் நூல்களை ஓதிவருகிறுர்கள். இவர்களும் மற்றும் தாழ்ந்த கல்வியுடையவர்களும் இனிய செந்தமிழ் நடையைப் படித்துப் பழகி வருவார்களானுல், அந்த நடையானது தமிழ்மொழிப் பேசுகிற மக்கள் எல்லாருக்கும் நாளடைவில் பேசுகிறவழக்கிலும் எழுதுகிற வழக்கிலும் எளிதில் வந்துவிடும். இனிய செந்தமிழ் நடை வழக்கு உண்டாக உண்டாக விழுமிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கிற தொன்மைத் தமிழ்நூல்களைப் படிக்க அவர்களுக்கு அவாவுண்டாய் அவைகளை ஓதுவார்கள்.

தொன்மைத் தமிழ்நூல்களை எத்துணை நமது நாட்டிலுள்ள மக்கள் ஓதுவார்களோ, அத்துணை அவைகளிற் கூறப்பெறுஞ் சீரிய கருத்துக்கள் அவர்களது உள்ளத்திற் சிறந்து விளங்கி வெளியில் உரைக்கவும் பெறும். தமிழ்மொழி பயின்ற மக்களுடன் கூட்டுறவு செய்யும் ஏனைய மக்களிடத்திலும் அக்கருத்துக்கள் விளங்கி நாட்டுக்குப் பொதுவாக நன்மை பயக்கும். தமிழ் முன்னோர்களுடைய உயரிய நாகரீகக் கருத்துக்கள் நமது இந்திய நாட்டில் விளங்கிப் பரந்து வழங்கப்படுதல் எத்துணை வேண்டப்படுவதென்பது நாம் சிறிது உற்று நோக்கினல் நமக்குத் தெரியவரும். இப்பொழுது முப்பது நாற்பது ஆண்டுகளாக மேற்கு நாட்டு மக்கள் ஒருவாறு அறிந்து வியந்து வருகின்ற நமது இந்தியநாட்டு நாகரீகமானது பெரும்பான்மையும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே அதில் வாழ்ந்துவந்த தமிழ் மக்களது தொன்மை நாகரீகமும், ஏறக்குறைய பதினயிரம் ஆண்டுகளுக்கு முன்னே அந்நாட்டுக்கு வந்து வாழ்ந்திருந்த ஆரியப் பார்ப்பனர்களது நாகரீகமும் சேர்ந்து கலந்த நாகரீகத் தொகுதியா லுண்டாயது. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது நாட்டுக்கு வந்த மகம்மதியர்களுடைய இளைய நாகரீகம் அதனுடன் மிகச் சிறிதே கலந்துள்ளது. இருநூறு ஆண்டுகளுக்குமுன்னே வந்த ஐரோப்பிய மக்களது நாகரீகமானது மேற்சொன்ன தொன்மை நாகரீகத் தொகுதியுடன்கலந்து வருகிறதனல் இருவகையிலும் மாறுதல்கள் நிகழ்ந்து வருகின்றன. பொதுவாக நோக்குமிடத்து உலக அறிவிற் சிறந்து விளங்கும் மேற்குநாட்டு மக்களது நாகரீகமும், கடவுளறிவிற் சிறந்து விளங்கும் இந்தியநாட்டு மக்களது நாகரீகமும் ஒன்றோடொன்று கலந்து நற்பயன் விளைத்தல் இருவேறு மக்களது முன்னேற்றத்துக்கும் உலக முன்னேற்றத்துக்கும் வேண்டப்படுவதாகும். இந்தியநாட்டு மக்கள் நாகரீகத்தின் ஒரு பகுதியாகிய ஆரியப் பார்ப்பன மக்களின் நாகரீகக் கருத்துகளை வடமொழித் தொன்னூல்களைச் சென்ற நூறு ஆண்டுகளாகப் பல ஐரோப்பிய புலவர்கள் கற்று அறிந்து வந்திருக்கிறார்கள். மற்றொரு பகுதியாகிய தமிழர்களது நாகரீகக் கருத்துக்களை நமது நாட்டுக்குப் பாதிரிகளாக வந்த பிசப்புக் கால்டுவேல் துரை, போப்புத்துரை, காடிதுரை முதலிய சில ஐரோப்பிய தமிழ்ப் புலவர்களே தொன்மைத் தமிழ் நூல்களைக் கற்று அறிந்து அவைகளை வியந்து பாராட்டிக் கூறியிருக்கின்றனர். தமிழ்நாட்டு மக்களுக்குள்ளும் இப்பொழுது சில ஆண்டுகளாகத்தான் சிலர் தமிழ் நூல்களைக் கற்றுச் சீரிய கருத்துக்களை அறிந்துவருகிறார்கள். இனி வருங்காலத்தில் தென்னிந்தியாத் தமிழ்நாட்டு மக்கள் பலரும் மேற்குநாட்டு மக்களும் பழைய தமிழ்நூல்களை

ஓதி அவைகளில் அடங்கியுள்ள சீரிய கருத்துக்களை உலகெலங்கும் விளங்கும்படி செய்தல் உலக முன்னேற்றத்துக்கு மிக்க உதவியாயிருக்கும். உண்ணும் ஊண், உடுக்கும் உடை, உறையும் உயர்மாளிகை முதலிய புறத்திலுள்ள நுகர்வுப்பொருளில் நாகரீகம் அடங்கியுள்ளது என்று மேற்குநாட்டு மக்கள் இக்காலத்திலும் கருதுகின்றார்கள். தமிழ் முதுமக்களோ நீண்ட காலத்துக்கு முன்னே உள்ளத்தமைந்த நல்லுறுதிப் பண்புகளுக்கெல்லாம் தாயாகிய அன்பினிடத்து நாகரீகம் அடங்கியுள்ளதென் றறிந்திருந்தனர். அதனாலன்றே உலக மக்களுக்கு உறுதி பயக்க வந்த தமிழ் மகனாகிய திருவள்ளுவதேவரும் இரண்டாயிரம், ஆண்டுகளுக்கு முன்னே தாம் அருளிச்செய்த 'திருக்குறளில் நாகரீகம் என்னும் சொல்லுக்கு அன்பினிகழும் செயலாக விளங்குகிற கண்ணோட்டம் என்று பொருள்கொண்டு கண்ணோட்டத்துள்ளது உலகியல் என்று கூறியருளினர். பலவேறு நாடுகளில் வாழும் பல வேறு மக்கட் டொகுதிகளை இணங்கி யொழுகச் செய்ய வல்ல இந்த உண்மைக் கருத்தை ஒருவாறு கண்டன்றே சென்ற ஐரோப்பிய கொடும் போருக்குப் பின் பலமக்கட்கழகம் (League of Nation) என்ற கழகம் நிறுவினர்?. விரிப்பிற் பெருகும். மேலே கூறியவாற்றால் உலகமக்கள் பொது நாகரீகத்துக்கு இந்தியநாட்டு நாகரீகம் வேண்டப்படும் என்பதும், இந்தியநாட்டு நாகரீகத்துக்கு அதுனது விழுமிய பகுதியாகிய தமிழ்மக்கள் நாகரீகம் விளங்கச்செய்தல் வேண்டும் என்பதும், அந்நாகரீகம் விளங்கச் செய்தலுக்குத் தொன்மைத் தமிழ்நூல்கள் பலரால் கற்கப்படல் வேண்டும் என்பதும், அப்படி கற்கப்படுதலுக்கு இணக்கமாயிருந்து அதனிடத்து மக்களுக்கு ஊக்கம் செய்யச் செந்தமிழ் உரை நடையில் கட்டுரை எழுதப்படல் வேண்டும் என்பதும் தெற்றென விளங்கும்.

ஐந்தாவது, தமிழ் மொழியானது இயற்கை மொழியாகும். அது இயற்கைமொழி என்பதற்கு அதனது இலக்கண இலக்கிய அமைதிகளே போதிய சான்றாகும். உலகில் விளங்கும் இயற்கையானது கடவுள் அருள் வெளிப்பாடாகும். உலக வாழ்வின் பயனாகிய கடவுளினது அருட்பேறுக்கு இம்மொழி ஏற்றமொழியாகும். அதனால் அது கடவுட் டன்மைமொழி (தெய்வீக மொழி) என்றும் கூறப்படும். தமிழ்மொழி ஒன்றினையே அறிஞர்கள் செந்தமிழ் என்று கூறுதற்குச் செம்மை என்னும் அடைமொழியின் உள்ளுறை கருத்தும் இதுவே. விளக்கப் புகின் உரை பெருகும். வடமொழி செயற்கை மொழியாகும். எழுத்துப் புணர்ச்சிமுறை, சொற் புணர்ச்சி முறை, பால் வகுப்பு

முறை, வினைச்சொல் வகுப்புமுறை, செய்யுட்பா வகுப்புமுறை முதலிய இலக்கண அமைப்புகள் எல்லாம் அது செயற்கைமொழி என்பதற்குச் சான்றாகும். ஆதலின் அதற்கு நன்றாய்ச் செய்யப்பட்டதென்னும் பொருள்படுகின்ற சங்கிருதம், சமஸ்கிருதம் என்னும் பெயர்களை ஆன்றோர் தந்தனர். இந்தக் காரணங்களினால் அம்மொழி பேச்சுவழக் கற்றுப்போயிற்று. வடமொழிச் சொற்களைத் தமிழ்க் கட்டுரைகளில் மிக்கு வழங்கி எழுதினால் தமிழின் இயற்கைத்தன்மை சிதையும். இன்னும் இப்பொழுது தமிழ்மொழி நன்கு பயிலாத வடமொழியாளர்கள் எழுதுகிறபடி வடமொழிச் சொற்களை வடமொழி வடிவத்திலேயே எழுதிக்கொண்டு வந்தால் நாளடைவில் உண்மையான தமிழ்மொழி பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் அற்றுப் போகும்.

ஆறாவது அறியாமையினாலோ எள்ளத்தக்க பிற காரணங்களினாலோ தமிழ்மொழியானது வடமொழியிலிருந்து வந்த மொழியன்றித் தனிமொழி அல்ல என்று கூறு மொருசார் மக்களது பொய்யுரை என்னும் பொருந்து மரமானது, நிலையில் நில்லாமல்வேருடன் அற்று விழும்படி விழ்த்தற்குத் தனித்தமிழ் மொழியில் உரைநடை எழுதுதல் ஒரு கூரிய கோடரியாக உதவும்.

வடமொழிச் சொற்களை வேண்டியபடி தமிழ் உரை நடையிலும் செய்யுணடையிலும் வழங்கலாம் என்று கூறுவாரும் உளர். நமது கருத்துக்களை ஒருவருக்கொருவர் விளக்கவேண்டிய தொன்றுதானே குறி, அவைகளை எந்தமொழிச் சொற்களினால் விளக்கினாலென்ன என்று கூறுகிறார்கள். அவர்கள் கூறுவது யாதாமொரு வினையைச் செய்து முடிப்பதுதானே குறி, அதனைச் செய்யும் நெறிமுறையிலன்றி எப்படிச் செய்தாலென்ன என்று சொல்வது போன்றுளது. வேறு சிலர் தமிழ் மக்கள் வடமொழியின் பேரிலுள்ள பகைமையினால் வடமொழிச் சொற்களைத் தமிழ் மொழியில் வழங்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள் என்று கூறுகிறார்கள். உயிரில் பொருளாகிய வடமொழியானது தமிழர்களுக்கு யாதொரு கேடும் செய்யவில்லை. பகைமைக்கே இடமில்லாத வழியில் பகைமையை ஏற்றிச் சொல்லுதல் பண்பன்று. முறையுமன்று. இவைகளும் இவைகள் போன்ற சில போலிக் காரணங்களும் மேலே கூறிய காரணங்களின் முன் வெய்யோனொளியில் விளங்காது மறைந்து போகின்ற விண் மீனொளிபோல் மறைந்து கெடும்.

ஏழாவது தென் இந்தியாத் தமிழ்நாட்டிலுள்ள மக்களெல்லாரும் இப்பொழுது மேல் நாட்டுமக்கள் ஆங்கிலக் கல்வியினால்

உலகநெறி முறையிற் பல புதிய கருத்துகள் அறிந்துவருகிறார்கள். அவைகளை நமது பின்னோர்கள் அறியும்படி பொதிந்து வைக்கும் கருவியாகத் தமிழ்மொழி யொன்றேயுளது. ஆதலின் அம்மொழியை முன்னிருந்த நிலைமையில் விளங்கும்படி செய்தல் இப்பொழுது வாழும் தமிழ் அறிஞர்கள் கடனாகும். சமய உண்மைகள் பற்றிய சொற்கள் இப்பொழுதும் பெரும்பான்மையும் வடமொழிச் சொற்களாகவே யிருக்கின்றன. அவைகளையும் கூடியவரை தமிழ்மொழிச் சொற்களில் எழுதுதல் நலமாயிருக்கும். அச்சொற்களுக்கு இயன்றவரையும் தமிழ்மொழிச் சொற்கள் அடுத்த வெளியீட்டில் வெளியிடப்படும்.

தமிழ் மாண்பறியுந் தகைமையாளர்களே, 'செந்தமிழ்ச் செல்வி'க்குக் கட்டுரை எழுதுகிறவர்கள் கூடியவரை தனிச் செந்தமிழ் நடையில் எழுதுக. வேறு தமிழ் வெளியீடுகளிலும் சுவடிகளிலும் உரை நடையிலும் செய்யுணடையிலும் எழுதுகிறவர்கள் அவ்வாறே எழுதுக. பேசும் பேச்சிலும் அவ்வாறே பேசுக. இவ்வாறு நீங்கள் செய்வீர்களானால் பலவாறு தன் மக்கள் செய்யும் கொடுமையால் உறுப்பு நலனழிந்து தன்னியற்சீர் சிதைந்து நிற்கும் தனித்தமிழ் மாது சிதைந்த உறுப்பு செப்பனிடப் பெற்றுச் சீருடன் திகழ்ந்து விளங்குவள். அப்பொழுது நமது தமிழுலகமும் ஏனைய உலகங்களும் நலம் அடையும். ஆகையால் நான் உங்களை அவ்வாறு செய்யும்படி நன்முறையிற் பன்முறை பணிந்து சொன்முறை சொல்லிக் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் அந்தச் சொன்முறை வழக்கை அறிமுறை அறிந்து உணர்முறை உணர்ந்து செய்முறை செய்தொழுகும்படி எவ்வுயிர்க்கும் இன்முறை செய்யும் இறைவன் அருள்முறை செய்வாராக.

தனிமுதற் கடவுளருளால் தனித்தமிழ் மாது தனி நலம் அடைக.

---

## தமிழாசிரியர் தழுவிய ஆரியமொழி வேதங்கள்

[மறைமலையடிகள்]

கொழும்பு 'விவேகாந'ந்த சபையாரால் வெளியிடப்படும் 'விவேகாநந்தன்'இதழில் (தொகுதி-உ, பகுதி-எ, அ, கூ), அதன் இதழாளர் தமிழ்ச் சான்றோர் தழுவிய ஆரிய வேதங்களென்பன இஞ்ஞான்று இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் பெயர்களால் வழங்கப்படுவனவே யாமென்று, பழைய தொல்காப்பியம் முதலாக எழுந்த பழைய தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி ஒரு கட்டுரை வரைந்திருக்கின்றார்.

உயர்ந்த பழந்தமிழ் நூல்களை எடுத்துக் காட்டிய அளவினுலேயே தாம் கூறும் உரைப்பொருளைப் பரந்த கல்வியறிவின் மதுகை உடையரல்லாதார் ஆராய்ந்து பாராமலே மயங்கிக்கொண்டு விடுவர் எனக் கருதி அக்கட்டுரை எழுதினுர் என்பது புலனுகின்றமையின், அங்ஙனம் அவர் மயங்காமைப் பொருட்டும் ஆராய்ச்சியுணர்வுடையார் எமதுரைப் பொருளைக் கண்டு களிகூருதற்பொருட்டும் அவர் கூறியவற்றை ஈண்டாராய்ந் துரைக்கப் புகுகின்ரும்.

ஆசிரியர் தொல்காப்பியனுரும் தெய்வப்புலமைத் திருவள்ளுவனுரும் போன்ற பண்டைத் தமிழ்ச்சான்ருேர் அருளிச்செய்த அருந்தமிழ் நூல்களை நன்காராய்ந்து காணுமிடத்து, எம் செந்தமிழ் முதுமக்கள் எல்லாவுலகிற்கும் எல்லா உயிர்க்கும் ஒரே தலைவனை ஒரு முழுமுதற் கடவுள் நிலையை நன்குணர்ந் திருந்தார்கள் என்பதும், அம் முழுமுதற் கடவுள் ஒன்றனையன்றி ஏனை எதனையும் கடவுள் நிலையில் வைத்து வணங்காதவர்களாய் இருந்தனர் என்பதும் இனிது விளங்கா நிற்கின்றன.

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்"

என்று ஆசிரியர் தொல்காப்பியனுரும்,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனுருங் கூறும் அருளுரைகளே இவ்வுண்மைக்குச் சான்ரும். எல்லாம் வல்ல முதல்வன் வினைத்தொடக்கு இல்லாதவன் என்பதும், அவன் எஞ்ஞான்றும் விளங்கிய பேரறிவினன் என்பதும், எல்லாப் பொருள்கட்கும் முன்னவன் என்பதும், அவன் உயிர்கண்மாட்டு அருளுடையவன் என்பதும், இவ்வுலகமெல்லாம் அவனையே முதலாகக்கொண்டு நடை பெறுவனவன்றி அவனையின்றி அவை இயங்கா என்பதும் அவ் வருளுரைகளால் நன்கு அறிவுறுத்தப்படுதல் காண்க.

கடவுள் நிலையில் இத்துணைச் சிறப்பை அறிந்த பண்டைத் தமிழ்ச் சான்ருேரைப்போலப், பழைய ஆரிய மக்களுள்ளும் ஒரு முழுமுதற் கடவுள் நிலையை அங்ஙனம் விளங்க அறிந்து ஆரிய வேதங்களை வகுத்தார் உளரோ என்று இஞ்ஞான்றுலவும் இருக்கு முதலான ஆரியமொழி வேதங்களை நன்காராய்ந்து காணுமிடத்து, அதற்குத் தினைத்தனைச் சான்றும் அந்நூல்களில் இருக்கக் காண்கிலேம். மேற்காட்டிய பழந்தமிழ் நூல்களில் 'கடவுள்' 'இறைவன்' 'முனைவன்' முதலான தமிழ்ச்சொற்

கள் எல்லாம் வல்ல முதல்வனுக்குப் பெயர்களாய் வழங்குமாறு போல, ஆரியவேதங்களெனப்படும் இருக்கு முதலியவற்றில் ஒரு கடவுளுக்குப் பெயரான ஒரு சொல்லையேனுங் காண்டல் கூடுமோ எனத் துருவித் துருவி ஆராய்ந்தும் அவற்றுள் ஒன்று தானும் அகப்பட்டிலது. அந்நூல்களிற் காணப்படுவன வெல்லாம் 'இந்திரன்' 'வருணன்' 'மித்திரன்' 'அசுவினி' முதலான சிறு தெய்வப் பெயர்களாகவே இருக்கின்றன. இச்சிறு தெய்வங்களெல்லாம் தாய் தந்தையர் மாட்டுப் பிறந்து பின்னர் இறந்து படும் இயல்பினவாய் மக்களிலக்கணம் வாய்ந்திருக்கக் காண்டுமேயன்றி, முழுமுதற் கடவுட்குரிய பிறந்திறவா இயல்பு வாய்ந்தனவாய் இருக்கக் காண்கின்றிலம். இச் சிறுதெய்வங்கண் மேல் பாடிய வழுத்துரைகளே இருக்கு முதலான ஆரிய வேதங்களில் நிரம்பியிருத்தலை அவற்றை உணர்வாரெவரும் எளிதிற் கண்டுகொள்வர்.

அற்றேல், அவ் ஆரிய நூல்களில் உருத்திரன்மேல் பாடப் பட்டிருக்கும் வழுத்துரைக்கண் முழுமுதற் கடவுட்குரிய இலக்கணம் காணப்படுகின்ற தென்னையெனின், அச்சிறு தெய்வங் கண்மேற் பாடப்பட்டிருக்கும் ஆயிரக்கணக்கான வழுத்துரை களையும், உருத்திரன்மேற் பாடப்பட்டிருக்கும் மிகச் சிலவாகிய ஆறேழு வழுத்துரைகளையும் ஒப்பிட்டு நடுநின்று காணவல்லா ரெவர்க்கும் ஆரியர் கொணர்ந்த ஆரியச் சிறுதெய்வப் பாட்டுக் களை அவரோடு ஒருங்களவளாவி அவரைச் சீர்திருத்தும் முறை யில் தமிழ்ச் சான்றோர் அவற்றைத் தொகுத்த ஞான்று தாம் வழிபடும் முழுமுதற் கடவுள் வழிபாடாகிய உருத்திர வணக் கத்தை அவற்றின் இடையிடையே சேர்த்து வைப்பாராயினர் என்னும் உண்மை புலனாகா நிற்கும். (தொடரும்)

---

# கற்பொழுக்கம்

[இளவழகனர்]

"அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்து எதிர் கோடலும் இழந்த என்னை நம்
பெருமகள் தன்னொடும் பெரும்பெயர்த் தலைத்தாள்
மன்பெரும் சிறப்பின் மாநிதிக் கிழவன்
முந்தை நில்லா முனிவுஇகந் தனனா
அற்பு உளம் சிறந்தாங்கு அருண்மொழி அளைஇ
என்பா ராட்ட யான்அகத்து ஒளித்த

நோயும் துன்பமும் நொடிவது பொலும் என்
வாய்அல் முறுவற்கு அவர் உள்அகம் வருந்தப்
பொற்றா ஒழுக்கம் புரிந்தீர் யாவதும்
ஆற்றா உள்ள வாழ்க்கையேன் ஆதலின்
ஏற்று எழுந்தனன் யான்.” (சிலப்பதிகாரம், ௧௬, ௭௨, ௮௫)



கண்ணகியின் கணவனான கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவியென்னும் காதற் பரத்தையோடு கூடி எட்டு ஆண்டுகள் கழித்த பின்பு, ஒரேதுவால் அம்மாதவியை ஒருநாட் சாயுங்காலம் பிரிந்து தன் மனைவியிடம் வந்து, என் கைப்பொருள்களெல்லாம் பரத்தையின்பால் ஒழிந்து போனமையின் எஞ்சியிருக்கும் உன் காற்சிலம்புகளையேனும் மதுரையிற் கொண்டு போய் விற்று அதனால் வரும் பணத்தை முதலாகக் கொண்டு அங்குப் பொருள் சேகரிக்க விரும்புகிறேன். ஆதலால் நீயும் என்னுடன் வரல் வேண்டும். இப்போக்கு எவர்க்குந் தெரியலாகாதாத

லால் இப்பொழுதே புறப்படு என்று கூறி, அதற்கு இசைந்த அவளோடு அன்றிரவிற் புறப்பட்டுப் பல நாட்களாக நாடு காடு மலை பள்ளம் ஆறு ஏரி முதலான அரிய வழிகளை எல்லாம் நடந்தே கடந்து மதுரையின் ஊர் கண்டு அதன் அருகிருந்த இடையர் சேரியின் ஒரு வீட்டிற் சேர்ந்து சமைத்துண்டு இளைப்பாறி இருக்கும்போது, தன் அரும்பெறன் மனைவி கண்ணகியை அருகழைத்து அணைத்து, "எட்டு ஆண்டுகள் பிரிந்திருந்தும் உள்ளம் மாறாது அன்பினாற் கசிந்து ஒழுகிய அவள் கற்பொழுக்கத்தை வியந்தெண்ணி அவளுடைய நிலை குலைந்த வடிவத்தைக் கண்டு நெஞ்சமிரங்கி அவளை நோக்கி, என் எரா ரிளங்கிளியே, நாமிருவரும் இங்ஙனம் நெடுந்தொலைவு வந்து விட்டமைக்கு இரங்கிப் பருக்கைக் கற்கள் நிரம்பிய இக்கொடிய வழியை உன் மெல்லிய திருவடிகள் நடந்து கடப்பதற்குத் தக்கனவோ என்று என் பெற்றோர்கள் எங்ஙனம் வருந்தினார்களோ! நாம் இங்ஙனம் நாடு கடந்து வந்தது கனவோ நனவோ! நனவானால் இஃது என் தீவினையின் பயன்தானோ! என் உள்ளங் கலங்குதலால் எனக்கொன்றும் தெரியவில்லை. வீணர்களோடும் பரத்தர்களோடும் கூடி நல்லவர்களால் நகையாடி இழிக்கப்பட்டு உண்மை மறந்து ஒழுக்கங் கெட்ட எனக்கும் இனி நல்லவழி பிறக்குமோ! அதுவுமல்லாமல் என் தாய்தந்தையர்க்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் விட்டொழிந்தேன். அறிவிலும் பண்பிலும் சிறந்த உனக்கும் சிறுமை செய்தேன். இவ்வாறெல்லாம் நடந்த நடக்கையைத் தீய ஒழுக்கம் என்றும் சிறிதும் நினைந்திலேன். யான் இங்ஙனம் தீயவனாய் இருப்பது அறிந்தும், ஊர் விட்டு ஊருக்கு உடனே புறப்படு என்று இரவிலே கூறியதும் அங்ஙனம் உரிய ஊரை விட்டுப் பெற்றோரையுங் கேளாது நெடுந்தொலைவிலுள்ள வேறோர் ஊருக்கு இரவிற் புறப்பட்டுத் தனித்துச் செல்லுதல் முறையல்லவே என்று மறுக்காது என்னோடு வருதற்கு ஒருப்பட்டு எழுந்தனையே, ஆ! உன் பேரன்பை என்னவென்று சொல்வேன். கண்ணகி, நீ என்ன வேலை செய்தாய்" என்று கேட்க அதற்கு, அப்பெண்ணினல்லாள் விடையாகக் கூறியது மேலே உள்ள பாட்டு.

குறிப்புரை:—அறவோர் - இல்வாழ்க்கையிலேயே நல்லொழுக்கத்தோடு இருப்பவர்கள். அந்தணர் என்பார் உயிர்களிடத்தில் அருள் கொண்டு அவற்றின் நன்மைக்காக நான்மறை ஓதிக்கடவுளை வழுத்துபவர். துறவோர் என்றது பற்றற்று வீட்டுநெறி ஒன்றிலேயே தேக்குற்று நிற்பவரை. நட்பு பகை என்னும் இரண்டும் இன்றிப் புதிது நேர்பவர் விருந்து. அவரை அவருடைய பசித்துன்பம் ஒன்றே நோக்கி எதிர்கொண்டு அழைத்து அமைதியுண்டாகுமாறு உண்பித்து மகிழ்தல் இல்வாழ்வாரின் தலையான கடனாகும். இதுவே பழைய தமிழ்ப் பெருமக்களால் இல்வாழ்க்கையின் முழு நோக்கமாகக் கொள்ளப்பட்டது. இது 'தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர்கோடல்'. என்றதனாலும் விளங்கும். இல்வாழ்வு என்பது விருந்தெதிர் கோடலேயாம் என்னும் இவ்வுண்மை,

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண் செய்தற் பொருட்டு" (விருந்தோம்பல், ௧)

என்னுந் திருக்குறளால் இனிது விளங்குதல் காண்க.

கண்ணகியுங் கோவலனும் திருமணம்பொருந்தி,

"விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கை"

என்னும் இல்வாழ்க்கையினை மேற்கொண்டார்கள் என்னும் இதன் இயல்பினைச் சிலப்பதிகாரத்து மனையறம்படுத்தகாதையில் (அசு)இளங் கோவடிகள் நன்கு அருளிச்செய்திருத்தல் காண்க.

இவ்வாறெல்லாம் இல்வாழ்வாரின் முதன்மையான கடனைக் கண வன் பிரிந்தமையால் இழந்தேன் என்றாள் கண்ணகி. பெருமகள், கண் ணகியின் மாமி. பெரும்பெயர்த் தலைத்தாள் - மிகுந்த புகழும், தக்க முயற்சியும். மாசிதிக்கிழவன்-கோவலன் தந்தை. அன்பு, அற்பு என்றா யிற்று. வாய் அல்முறுவல்-உண்மையல்லாத புன்னகை, ஆவது பொய்ந் நகை.

விடைச்சுருக்கம்.—'நீங்கள் பிரிந்தகாலத்தில் அறஞ்செய்தலை இழந்து யான் தங்கள் பிரிவின் துன்பத்தை மறைத்துநின்ற என்நிலையைக் கண்டு உங்கள் பெற்றோர்வருந்துமாறு பாராட்டத் தகாத ஒழுக்கத்தைப் பொருந்தினீராயினும், உங்கள் கருத்துக்கு மாறுபாடில்லாமல் இருக்க வேண்டுமென்னும் எண்ணமுடையவளாதலால் நீங்கள் புறப்படு என் றதும் யான் புறப்பட்டேன்' என்பதாகும்.

இதன்கண், பெற்றோர் வருந்துமாறு தீய ஒழுக்கங் கொண்டீர் என்றமையால், கோவலன் பிழையை எடுத்துக் காட்டியவாறாயிற்று. தான் வருந்துமாறு என்னாமற் 'பெற்றோர் வருந்துமாறு' என்றமையால், அங்ஙனம் தப்பெடுத்துக் காட்டுதலால் அவனுக்கு வருத்தமுண்டாகா தாயிற்று. துன்பத்தை மறைத்து நின்ற என் நிலையைக் கண்டு பெற்றோர் வருந்தினர் என்றமையால், கண்ணகி தன் துன்பத்தைப் பெருக்கிக் கூற வில்லை என்பதும், அதனால் துன்பத்தைக் கூறாமலும் விடவில்லை என் பதும் பெறப்பட்டன. பெற்றோர் வருந்த என்றதனால், தன் துன்பத்தை விடப் பெற்றோர் படுந் துன்பத்தையே பெரிதாகக்கொண்டனளென்பது தெளியப்படும். அறஞ்செய்தலை இழந்த யான் என்றமையால், தன் னைத் தன் கணவன் முன் தாழ்த்துக் கொண்டமை புலப்பட்டது. அவன் கூறியவாறு அறிவும் பண்பும் உடையவள் அல்லேன் என்று அவள் தன்னைத் தாழ்த்துவாளாயின், அது பொய்யாய் முடியுமாதலால் அதைப்பற்றி ஒன்றுமே கூறினளில்லை.

யான் என் துன்பத்தை மறைத்து நின்ற நிலையை என்றமையால், பிரிந்தகாலத்தில் தான் கணவன்மாட்டும் மாமன் மாமியார் மாட்டும் உள்ளம் நெகிழ்ந்து நின்ற முறைமையும், அந்நிலையைக்கண்டு உங்கள் பெற்றோர் வருந்த என்றமையால், அக்காலங்களில் கோவலனுக்குப்பெற் றோர் தம் மருமகள் மாட்டு அன்பு கொண்டிருந்த முறைமையும் கண் ணகி தன் காதலனுக்குத் தெரிவித்தாளாயிற்று. தீய வொழுக்கத்தைச் சேர்ந்தீர் என்றாவது கொண்டீர் என்றாவது அவன் செயலாற் கூறாமற் பொருந்தினீர் என்று வேறொன்றன் செயலாற் கூறினமையால், இவ் வளவும் நிகழ்தற்கு ஆன எது முன் செய்த வினையேயாம் என்றுஞ் சுட்டினளாயிற்று.

யான் உங்கள் கருத்தோடு மாறுபடல் ஆகாது என்னும் எண்ண முடையவள் என்றமையால், அவ்வெண்ணமே வழிநடந்து வந்தபோது

அவ்வழி நடக்கையால் ஆன துன்பம் தெரியாத வாறு செய்தது என்ப தோடு என் புறப்பட்டனே என்பதற்கு விடையும் பெறப்பட்டது.

இனி, இத்துணைக் கொடுந்துன்பம் செய்தபோதும் கோவலனி டத்திற் கண்ணகி அவன் இன்பத்திலேயே கருத்து வைத்து இவ்வளவு இனிமையாக ஒழுகினளென்றால், அவன் அவளைப் பிரியாதிருந்தபோது அவள் அவனோடு எவ்வளவு இனிமையாக நடந்திருப்பாள் என்று கூறு தலும் வேண்டுமோ? கணவ னின்பத்திற் கருத்தூன்றி ஒழுகும் இதுவே பழந்தமிழ்ப் பெண்மக்களின் கற்பொழுக்கமாம் என்பதற்கு ஆன்றோர் நூல்களில் அளவிலவாய்ச் சான்றுகள் நிரம்பிக்கிடக்கின்றன. தன் கண வனுக்காக மிகவருந்திச் சமைத்து அவன் இனிதென்று உண்டதைக் கண்டபின்னரே மனைவி மகிழ்ந்தனள் என்று பொருள்பட,

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"

(குறுந்தொகை, கசுஎ)

என்று வரும் பழந்தமிழ்ச் செய்யுளொன்றே இதற்குப் போதுமன்றோ!

இவ்வகையாகக் கணவன் கருத்தொடு மாறுபடாது அவன் இன் பத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து கற்பொழுக்கத்தைக் காத்த எம் பழந்தமிழ்ப் பெண்மைச்சான்றோரைவிடப் பெரியர் யாவர்?

---

## மதிப்புரை

சிவரகசியப் பதிப்பாசிரியர் சைவத்திருவாளர் கபப்பாக்கம் சதாசிவ செட்டியாரவர்கள், பி. ஏ. தொகுத்தளித்த திராவிடவே தத்திரட்டு என்னும் திருமுறைத்தொகுப்பு மூன்றாம் பதிப்பு நூலை யாம் பார்க்கப்பெற்றோம். அதன்கண் தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரண்டு சைவத் திருமுறை நூல்களினின்றும் ஏறக்குறைய மூவா யிரம் திருப்பாடல்கள் நல்ல முறையில் தொகுத்து அமைக்கப்பட்டி ருக்கின்றன. இவையெல்லாமலும், அதன் முன்னிரண்டு பதிப்புகளிலும் சேர்க்கப்படாத இன்றியமையாத திருப்புகழ்த்திரட்டும் அதன் ஈற்றிற் சேர்க்கப்பட்டிருக்கின்றது. அப்பதிப்புகளைவிட இது மிக்கதிருத்தத் தோடு விளங்குகின்றது. தேவாரப்பாடல் பெற்ற திருக்கோயில்களின் பெருமை, இறைவன் இறைவிப்பெயர்கள், அவற்றிற்குச் செல்லும் வழி வாயில்களின் விளக்கம் முதலியவைகளும் இந்நூலின் இடையிடையே அவ்வப்பதிகங்களின் அடியில் எழுதப்பட்டிருக்கின்றன. தேவாரப்பதி கங்களின் முதற்பாடலும், இரண்டாம் பாடலும், இறுதிப்பாடலும், இன் னும் சில இடங்களில் வரலாற்றுக்கருத்துக்கள் அடங்கிய இடைப்பா டல்களும் உ.எசா திருக்கோயில்கட்கும் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இதனைப் பதித்தவர் சென்னை, அல்லையன்ஸ் கம்பெனியார். அழகிய கலிக்காக்கட்டிட நூல். விலை ரூ. 3—8—0.

---

Published by V. Subbiah Pillai for The S. I.S. S.W.P. Society, Tinnevelly, Ltd, & Printed by SivakamiVilasam Press, Madras.